ராகுல சாங்கிருத்தியாயன்

# வால்கா விலிருந்து கங்கை வரை

தமிழ்ப் புத்தகாலயம்

ராகுல சாங்கிருத்தியாயனின்

# வால்காவிலிருந்து கங்கைவரை

தமிழில்:

**கண. முத்தையா**




தமிழ்ப் புத்தகாலயம்
58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி
சென்னை-600005

முதற் பதிப்பு—ஆகஸ்ட் 1949
இரண்டாம் பதிப்பு—பிப்ரவரி 1953
மூன்ரும் பதிப்பு—செப்டம்பர் 1956
நான்காம் பதிப்பு—ஜூன் 1960
ஐந்தாம் பதிப்பு—ஏப்ரல் 1963
ஆரும் பதிப்பு—பிப்ரவரி 1968
ஏழாம் பதிப்பு—ஆகஸ்ட் 1972
எட்டாம் பதிப்பு—ஜூன் 1974
ஒன்பதாம் பதிப்பு—ஜனவரி 1976
பத்தாம் பதிப்பு—நவம்பர் 1978
பதினேரும் பதிப்பு—டிசம்பர் 1980



விலை : ரூ. 15-00

TAMIL PUTHAKALAYAM
58, T. P. Koil Street
TRIPLICANE, MADRAS-600 005

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்,
இராயப்பேட்டை,
சென்னை—14.

# வாசகர்களுக்கு

பேராசிரியர் ராகுல சாங்கிருத்தியாயன் தமிழ் உலகத்திற்குப் புதியவரல்ல. அவருடைய ''பொது உடைமை தான்என்ன?'' என்ற நூலைப் படித்தவர்கள் ஒவ்வொருவரும், இந்த அறிவுக் கடலின் சிறு பகுதியையேனும் பார்த்திருப்பார்கள். பிள்ளைப் பருவத்திலேயே அறிவுத் தாகமெடுத்த ராகுல்ஜி, அறிவைச் சேகரிப்பதற்காக உலகத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் சுற்றியிருக்கிறார். ஐக்கிய மாகாணத்தின் ஆஜம்கட் ஜில்லாவைச் சேர்ந்த ஒரு சிறு கிராமத்திலே பிறந்த அவர், காசி நகரிலே தொடங்கிய தமது அறிவு சேகரிக்கும் முயற்சியை, லெனின் கிராடு சர்வகலாசாலைப் பேராசிரியர் பதவியைப் பெற்ற பிறகுங்கூடத் தொடர்ந்து செய்து வந்திருக்கிறார். ஆயுள் முழுவதும் உழைத்துச் சேகரித்த அறிவுப் பொக்கிஷத்தை அவருடைய நூல்களிலே அள்ளித் தந்திருக்கிறார்.

சமுதாயத்தின் தோற்றம், வளர்ச்சி, நாகரிகம் முதலியவைகளைப் பற்றித் தத்துவ ரீதியாக ''மனித சமுதாயம்'' என்ற ஒரு பெரிய நூலை எழுதியிருக்கிறார். அவரே கூறியிருப்பதுபோல், அந்த முக்கியப் பிரச்னைகளைச் சாதாரண ஜனங்களும் புரிந்து கொள்வதற்காக. இந்த ''வால்காவிலிருந்து கங்கை வரை''யை எழுதியிருக்கிறார். இது அவருடைய சிறந்த சிருஷ்டிகளுள் ஒன்று.

இதிலுள்ள 20 கதைகளுள், ஒவ்வொன்றும் மனித சமுதாய வளர்ச்சியின் ஒவ்வொரு படிகள். தனி மனிதனையோ தனிச் சம்பவத்தையோ மையமாகக் கொள்ளாமல் சமுதாயத்தின் முக்கியமான மாற்றம் அல்லது பெரிய வளர்ச்சிகளையே மையமாகக் கொண்டு, கதைகள் எழுதப்பட்டிருக்கின்றன. சில கதைகள் அந்த வளர்ச்சி—மாற்றத்தின் போக்கைப் பொறுத்து இரண்டு மூன்று தலைமுறைகளைத் தம்முள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. சில கதைகள் ஒரு தலைமுறையைக்கூட பூராவாகத் தம்முள் அடக்கவில்லை. ஒவ்வொரு கதையிலும், அந்தந்தக் காலத்துப் பழக்க வழக்கங்கள், சூழ்நிலைகள் அப்படியே எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

இவைகள் வெறும் கதைகளல்ல. சமுதாய வளர்ச்சியையும் சரித்திரத்தையும், காலங்களையும் நிர்ணயித்துக் கதை உருவத்திலே எழுதப்பட்டிருப்பதால், கதைப் போக்கிற்கு அவசியமில்லாத விஷயங்கள் ஒவ்வொரு கதையின் மத்தியிலும் இடம் பெற்றிருப்பதாகத் தோன்றலாம். சில இடங்களைப் படிக்கும்பொழுது, சரித்திர ஏடுகளைப் படிப்பதைப் போன்ற உணர்ச்சிகூட ஏற்படலாம். ஆனால், சரித்திரத்தையும் மனித சமுதாய வளர்ச்சியையும் தெரிந்து கொள்வதற்கு அவைகள் இன்றியமையாதவை. சரித்திரத்தைப் படிப்பதால் ஏற்படும் சலிப்பும், தத்துவத்தைக் கற்பதால் ஏற்படும் சிரமமும் தோன்றாதபடி, கதை உருவிலே இந்த அம்சங்களை அற்புதமாகப் பின்னித் தந்திருக்கிறார் ராகுல்ஜி. இது சர்பத் அல்ல; மருந்துதான். ஆனால், மருந்தின் கசப்போ கைப்போ தெரியாதபடி சர்பத்தாக ஆக்கப்பட்டிருக்கிறது.

இந்தச் சிறந்த நூலைத் தமிழிலே செய்ய வேண்டுமென்று நாள்தோறும் வளர்ந்து வந்த ஆசையே, துணிவாக இந்நூலை மொழி பெயர்க்கும் வேலையில் என்னை ஈடுபடும்படிச் செய்தது.

முடிந்தவரை சாதாரணத் தமிழ் மக்களும் புரிந்து கொள்ளும்படி எழுத முயற்சி செய்திருக்கிறேன். ஆனால் விஷயத்தின் கௌரவமும், ராகுல்ஜியின் அளவற்ற அறிவுச் செல்வத்தை ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்குக் கொண்டு வருவதில் உள்ள சிரமமும் சேர்ந்து, நடையை இன்னும் எளிதாக ஆக்க முடியாமற் செய்துவிட்டன.

இந்நூலை மொழி பெயர்த்து எழுதத் தொடங்கியது முதல், ஒப்பு நோக்கிப் பிழை திருத்தி அச்சிட்டுப் புத்தக உருவில் வெளிவரும் வரை, எனது நண்பர் திரு. ராம ஷண்முகம் அவர்கள் பூரணப்பொறுப்பெடுத்து ஒத்துழைத்தார். அவருக்கு என் உளம் நிறைந்த நன்றி.

1-8-1949
சென்னை.

கண. முத்தையா

# இந் நூலைப்பற்றி

“வால்காவிலிருந்து கங்கைவரை” என்ற புத்தகம் தயாரானதும், முதல் பிரதி எனக்குத்தான் கிடைத்த தென்று நினைக்கிறேன். இந்தப் புத்தகத்தை ஒருமுறை யல்ல; பலமுறை படித்தேன். படித்துச் சொன்னேன். வயதாலும், அறிவாலும், தன்மையாலும் மாறுபட்ட பல திறத்தவருக்கும், படித்துச் சொல்லியிருக்கிறேன். இக் கதைகளில் ‘கதை’ அம்சத்தைவிட, ‘சரித்திர’ அம்சமே, அதிகமாயிருக்கிறதென்பது என் கருத்து. ‘கதைகள்’ லேசாகவும், சுலபமானதாயும் இருக்க வேண்டும்; ஆனால் இதிலுள்ள அநேக கதைகள், அறிவின் பாரத்தால் அழுத்தப் பட்டிருக்கின்றன. இந்தக் கருத்தை நான் ராகுல்ஜியிடம் தெரிவித்தேன். அதற்கு, “இந்தக் கதைகள் நாளையும் செயலையும் குறிக்கும் சரித்திரமாகக் கருதப்பட்டாலும் எனக்குத் திருப்தியே” என்பதுதான் அவர் பதில்.

இந்நூலை நான் மனமாரப் புகழ்ந்திருக்கிறேன். பலர் புகழவும் கேட்டிருக்கிறேன். பல்கலைக் கழகத்தின் பேராசிரி யரான ஒரு மகாராஷ்டிர அறிஞர், “இந்த ஹிந்திப் புத்த கத்திற்கு ஈடான புத்தகம் இந்தியப் பாஷைகள் எதிலும் இதுவரை தோன்றவில்லை” என்று ஒரு பத்திரிகையில் இந் நூலைக் குறிப்பிட்டு எழுதியிருந்தபோது, தாய்மொழிப் பற்றுள்ள என் மனம் கர்வத்தால் நாட்டியமாடத் தொடங்கி விட்டது.

புகழ்ச்சி மட்டுமா? கடுமையான தாக்குதலையும், “வால் காவிலிருந்து கங்கைவரை” பெற்றிருக்கிறது. “விஸ்வ பந்து” என்ற பத்திரிகையின் டிசம்பர் இதழ் ஒன்றில் சுவாமிஜி என்ற புனைபெயரில் இந்நூலைத் தாக்கியுள்ள கனவான், “வேதத்தைத் தாக்கும் ‘மொட்டை’த் தத்து வார்த்தி ராகுல்” என்று கூறும் அளவுக்குக்கூடப் போயி ருக்கிறார். தாக்கத் துணிந்தவர்கள் புனைபெயர் வைத்துக் கொள்வதேனோ?

ஒரு புத்தகம் பிடித்திருப்பதும் பிடிக்காமலிருப்பதும் மனிதர்களின் ருசியைப் பொறுத்த விஷயம் மட்டுமல்ல,

அவர்களின் திறமையைப் பொறுத்ததுங்கூட. எந்த ஒரு புத்தகமும் எல்லோருக்கும் திருப்தியைக் கொடுப்பதில்லை. இந்த விதிக்கு விலக்காக, ''வால்காவிலிருந்து கங்கைவரை'' மட்டும் எப்படியிருக்க முடியும்?

ராகுல்ஜியின் இந்த மகத்தான சிருஷ்டியை நான் நன்குணர்ந்திருக்கிறேன். நம் தாய் நாட்டின் மகானாகிய ஒரு சிந்தனையாளர், தமது வாழ்நாள் முழுவதும் தேடித்திரட்டிய அறிவுப் பொக்கிஷம், இந்நூலிலே அள்ளித் தரப்பெற்றிருக்கிறது. அவருடைய முடிவுகள் யாருக்கேனும் தவறாகத் தோன்றினால் அவர்கள் தர்க்க ரீதியாக, காரண—காரிய முறையில் அவைகள் தவறு என்று நிருபிக்கட்டும்.

இந்நூலின் ஆரம்பக் கதைகளான நிஷா, திவா, அமிர் தாஸ்வன், புருகூதன் என்ற நான்கும் கி. மு. 6000—த்திலிருந்து 2500 வரை உள்ள சமுதாயத்தைச் சித்தரிக்கின்றன. அது சரித்திரத்திற்கு முந்திய காலம். மேலும் அவைகள் கதைகள். ஆகவே, இவற்றில் கற்பனையும் ஊகமும்தான் அதிகமாயிருக்க முடியும். என்றாலும், இவைகளை வெறும் கற்பனை என்று அலட்சியம் செய்துவிட முடியாது. ஹிந்து ஐரோப்பிய, ஹிந்து—ஈரானிய மொழிகளையும் அவற்றின் மூலங்களையும் ராகுல்ஜி ஆராய்ந்து கற்றதின் விளைவே இந்த நான்கு கதைகளும். இந்தக் கதைகளை மறுக்க விரும்புகிறவர்கள், முதலில் பெடரிக் எஞ்சல்ஸ் (Fredric Engels) எழுதிய ''குடும்பத்தின் தோற்றம்'' (Origin of Family) என்ற நூலை எதிர்த்துப் பொய்யாக்க வேண்டும்.

அடுத்து வரும் புருதானன், அங்கிரா, சுதாஸ், பிரவாஹன் என்ற நான்கு கதைகளுக்கும், இலக்கிய ஆதாரமிருக்கிறது. வேதம், மகாபாரதம், பிரசித்திபெற்ற பௌத்த கிரந்தமான அட்டகதா யாவும் இக்கதைகளுக்குப் பின்பலமாயிருக்கின்றன. சுதாஸ் என்ற கதைக்கு, ருக்வேதத்திலேயே முழுக்க முழுக்க ஆதாரமிருக்கிறது. பிரவாஹன் என்ற கதைக்கு சாந்தோக்ய உபநிஷதமும், பிருகதாரண்ய உபநிஷதமும் அஸ்திவாரமாய் அமைந்திருக்கின்றன. இக்கதைகள் கி. மு. 2000-த்திலிருந்து கி. மு. 400 வரை உள்ள காலத்தின் சமுதாய வளர்ச்சியை விளக்குகின்றன.

ஒன்பதாவது கதை பந்துலமல்லன் (கி. மு. 790) இந்தக் கதைக்கு வேண்டிய உபகரணங்கள் யாவும் பௌத்த நூல்

களிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் காலத்தைப் பற்றிப் பௌத்த நூல்களிலிருந்து கிடைக்கும் ஏராளமான செய்திகளை, இச்சிறு கதையிலே புகுத்த முடியாததால், அவற்றிற்கெனத் தனியே ''சிம்ஹ சேனுபதி'' என்ற ஒரு முழு நாவலையே எழுதியிருக்கிறார், ராகுல்ஜி.

பத்தாவது கதை நாகதத்தன். சாணக்கியனின் அர்த்த சாஸ்திரத்தைப் படியுங்கள். கிரேக்கர்களின் யாத்திரை வரலாற்றைப் படியுங்கள். இன்று காலேஜ்களிலே படிப்பிக்கப்படுகின்ற வின்ஸன்ட் ஸ்மித் எழுதிய சரித்திரத்தைப் படியுங்கள். இவைகளிலெல்லாம் நாகதத்தனின் மூலாதாரத்தைக் காண்பீர்கள்.

பதிஞேராவது கதையான பிரபா, கதை அம்சத்திலும் ஈடு இணையற்று விளங்குகிறது. அஸ்வகோஷ் எழுதிய புத்த சரித்திரமும், சௌந்தரியானந்தமும் இக்கதைக்கு ஆதாரங்கள். வின்டர் நிட்ஜ் எழுதிய ''இந்திய இலக்கியத்தின் சரித்திர''மும் அதற்குப் பின்பலமாயிருக்கிறது.

பன்னிரெண்டாவது கதையான சுபர்ணயௌதேயன் குப்தர் காலக் கதை. அழியாத புகழ்பெற்ற ரகுவம்ஸம், சாகுந்தலம், குமாரசம்பவம் என்ற காளிதாஸரின் நூல்கள் இக்கதைக்கே ஆதார பூர்வமாய்ச் சாட்சி சொல்லுகின்றன.

பதின்மூன்ருவது கதையான துர்முகன் உண்மையிலேயே வீரனின் வில்லிலிருந்து விடுபட்ட கணைபோல் நமது நெஞ்சிலே ஆழமாகத் தைக்கிறது. என்ன செய்யலாம்? ஹர்ஷ சரித்திரமும், காதம்பரியும், சீனயாத்ரீகனுன இத்சிங்கன் யாத்திரை வரலாறும், அக் கதையை உண்மையென்று நிரூபிக்கின்றனவே!

பதிஞன்காவது கதையின் காலம் கி. பி. 1200. அதன் அஸ்திவாரத்தை நைடதத்திலும், அக்காலத்துச் சிலாசாசனங்களிலும் தேடிக் காணலாம்.

பாபா நூர்தினிலிருந்து பின்னுல் உள்ள 6 கதைகளும் 12-ம் நூற்ருண்டிலிருந்து 20-ம் நூற்ருண்டு வரை உள்ள காலத்தைக் குறிக்கும். அவற்றிற்குத் தெளிவான சரித்திர ஆதாரங்கள் இருக்கின்றன. ஆகவே, அவற்றை எதிர்ப்பவர்களும் அரியர்.

இந்தக் கதைகளின் முடிவுகளைப் பற்றி, ஆதார பூர்வமாகத் தர்க்கம் செய்வது எனது சக்திக்கு அப்பாற்பட்ட காரியம். இவற்றின் கருத்தை ஏற்கவோ, மறுக்கவோ செய்வதற்கு, ராகுல்ஜியைப் போன்ற ஞானக் கடலாய் இல்லாவிட்டாலும், அவரை அடுத்துச் செல்வதற்குரிய ஞான மாணவனாகவாவது இருக்கவேண்டும். இந்தக் கதைகளை எழுதும்போது, ராகுல்ஜியின் பேனா கற்பனையின் பலத்தால் ஓடவில்லை. பல வருடங்கள் முயன்று பெற்ற அறிவின் பலத்தால் ஓடிற்று.

அநேக பண்டிதர்கள் இதை எதிர்த்துப் பிரச்சாரம் செய்ய முயலுகிறார்கள். ராகுல்ஜி வெறும் பண்டிதரல்ல; மகா மேதை. அவருடைய சிருஷ்டிக்குச் ''சத்தியமே தர்மம்'' என்ற மகத்தான உண்மையே அடிப்படையென்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள்.

பதந்தானந்த கௌசல்யாயன்

## முதற் பதிப்பின் முன்னுரை

மனிதர்கள் இன்று எங்கெங்கு பரவியிருக்கிறார்களோ, அங்கெல்லாம் ஆரம்பத்தில் தோன்றினார்கள் என்று கூற முடியாது. இவ்வளவு மிகுதியாக அவர்கள் பரவும் நிலையை அடைவதற்கு, மனித சமுதாயம், மகத்தான பேராட்டங்களைக் கடக்க வேண்டியிருந்தது. மனித சமுதாயத்தின் வளர்ச்சியை, சித்தாந்த ரூபமாக எனது "மனித சமுதாயம்" என்ற நூலிலே விவரித்திருக்கிறேன். அந்த விஷயங்களைச் சுலபமாக எல்லோரும் புரிந்துகொள்ளும்படி சரளமான நடையிலே—எளிய முறையில் கொடுக்கவேண்டுமென்று ஆசையால் தூண்டப்பட்டே, இந்தக் கதைகளை எழுதினேன்.

இந்திய வாசகர்களுக்குச் சௌகரியமாயிருக்கும் பொருட்டு, மனித சமுதாயத்தின் ஒரு பகுதியான ஹிந்து—ஐரோப்பிய ஜாதியின் வளர்ச்சியையே, இந்தக் கதைக்கு ஆதாரமாக எடுத்துக் கொண்டிருக்கிறேன், கிரேக்க—ஆப்ரிக்க—சுரியானி ஜாதிகளின் வளர்ச்சி ஹிந்து—ஐரோப்பிய ஜாதியின் வளர்ச்சியைவிடப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே ஏற்பட்டுவிட்டதென்றாலும், அவைகளை ஆதாரமாகக்கொண்டால், குறைந்த பட்சம் இந்திய வாசகர்களைப் பொறுத்தவரை எனது இந்த எளிய உருக்கொடுக்கும் முயற்சி தோல்வியை அடையும்.

நான், ஒவ்வொரு காலத்தின் சமுதாய வளர்ச்சியையும் மிகக் கவனமாகப் பரிசீலனை செய்தே விவரித்திருக்கிறேன். ஆயினும், இந்த முதல் முயற்சியில் குறை ஏற்படுவது இயற்கையே. அறிஞர்கள் குறைகளை எடுத்துக் காட்டினால், மீண்டும் ஆராய்ந்து திருத்திக்கொள்ள முயல்வேன்.

ராகுல சாங்கிருத்தியாயன்

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

ஆறு, ஏழு மாதங்களுக்குள் முதற் பதிப்பின் பூராப் பிரதிகளும் விற்றுப்போய் விடுவது ஓர் எழுத்தாளனுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய விஷயம்தான். அதைவிட மகிழ்ச்சி தரக்கூடிய விஷயம் வசவு உருவத்திலும், உளறல் உருவத்திலும் வெளிப்பட்ட பழமை விரும்பிகளின் மனப் படபடப்புத்தான். ஆனல், இப்பொழுது வசவுகள் குறைந்துவிட்டதென்று கருதுகிறேன். சில கனவான்கள், இது விஷயத்தில் தன்னடக்கத்தோடிருக்க முயற்சி செய்து தோல்வியடைந்திருக்கிறர்கள். பண்டித முறையிலே இந் நூலைப்பற்றி விமர்சனம் செய்ய முயற்சித்திருக்கிறர்கள். ஆசிரியன், தங்கள் தர்க்கங்களுக்கெல்லாம் பதில் எழுதுவானென்றும் எதிர் பார்த்திருக்கிறர்கள். ஆசிரியனின் பேனு அப்படி ஒன்றும் எழுதச் சோம்பியதில்லை. ஆனல், பதில் எழுத வேண்டிய — பதில் எழுதக் கூடிய தர்க்கமா யிருந்தால் தானே! இந்தக் கதைகள் ஒவ்வொன்றிற்கும் பின்னல் அந்தந்தக் காலத்தைப் பொறுத்த பலமான ஆதாரங்கள் இருக்கின்றன. உலகத்தில் எத்தனையோ பாஷைகளில் உள்ள தர்க்கரீதியான மொழியாராய்ச்சி, மண், கல், தாமிரம், பித்தளை, இரும்பு இவைகளிலே எழுதப்பட்டும் செதுக்கப்பட்டும் உள்ள சரித்திரம்—இலக்கியங்கள் எழுத்து வடிவம் பெருத பாடல்கள், கதைகள், பலநாட்டின் பழக்க வழக்கங்கள், புதை பொருள்கள் இவைகளிலிருந்தெல்லாம் ஆதாரங்கள் தேடப்பட்டிருக்கின்றன. இந்தப் புத்தகத்தை எழுதும்பொழுதே, இந்தக் கதைகளுக்கெல்லாம் ஆதாரமா யிருந்த நூல்கள் முதலியவற்றின் பெயர்களடங்கிய ஒரு பட்டியலை அநுபந்தமாகச் சேர்க்க வேண்டுமென்று நினைத்ததுண்டு. ஆனல், அது இந்தப் புத்தகத்தின் அநுபந்தமாக இராமல், இதைவிட ஒருபெரிய புத்தகமாக ஆகிவிடும் என்று தோன்றியதால், வேலையின் பளுவையும் காலத்தின் செலவையும் கருதி அந்த எண்ணத்தை விட்டுவிட்டேன்.

இந்த இரண்டாம் பதிப்பிலே, நான் அதிக மாற்றங்கள் எதுவும் செய்யவில்லை. அங்கங்கே சில சில்லரைத் திருத்தங்கள் மட்டுமே செய்திருக்கிறேன்.

**ராகுல சாங்கிருத்தியாயன்**

சமர்ப்பணம்

எனது சிந்தனைச் சுடரைத் தூண்டி விட்ட

அறிஞர்

**வெ. சாமிநாதசர்மா**

அவர்கட்கும்,

பொறுப்புணர்ச்சியையும் தன்னடக்கத்தையும்
கற்றுத் தந்த
பேராசிரியர்

**எஸ். வையாபுரிப் பிள்ளை**

அவர்கட்கும்

இந்த மொழி பெயர்ப்பைச்
சமர்ப்பிக்கின்றேன்—

கண. முத்தையா

# உள்ளே

# நிஷா

**தேசம்: வால்கா நதிக்கரைப் பிரதேசம்**

**ஜாதி: ஹிந்தோ-ஐரோப்பியர்**

**காலம்: கி: மு. 6000**

எத்தனையோ நாட்களுக்குப் பிறகு இன்றுதான் சூரியனைக் காண முடிந்திருக்கிறது. மத்தியான வேளை; ஆனால் இன்னும் உச்சிக்கு நேரே சூரியன் வரவில்லை. பொழுது புலர்ந்து நான்கு-ஐந்துமணி நேரமாகியும் சூரியனுடைய ஒளியில் அவ்வளவு உஷ்ணத்தைக் காணோம். அவனை—சூரியனை மேகங்கள் மறைக்கவில்லை; பனிப் படலங்கள் மூடவில்லை; பெரிய காற்றோ, புயலோ கிடையாது. இந்நிலையில் உடம்பைத் தொட்டுக் கொண்டிருக்கும் அவனுடைய கிரணங்கள் மனத்துக்கும் தேகத்துக்கும் எவ்வித ஆனந்தத்தைக் கொடுக்கின்றன! சரி, நாலா பக்கங்களிலுமுள்ள காட்சிகளைத்தான் நோக்குவோமே. மேலே நீல நிறமான ஆகாயம்; கீழே கற்பூரத்தைப் போன்ற பனிப்படலங்கள் கவ்விக் கொண்டிருக்கும் பூமி. கடந்த இருபத்து நான்கு மணி நேரமாகப் பனி விழாததால், பூமியின்மீது படிந்திருக்கும் பனித்திரள் கொஞ்சம் கெட்டியாகி விட்டது. பனி மூடிய இந்தப் பூமி எங்கும் வியாபித்திருப்பதாக நீங்கள் நினைத்துவிட வேண்டாம். அதோ இருமருங்கிலும் மலைகளின் மீதுள்ள மரக்கூட்டங்களின் நடுவே சில மைல்கள் தூரம் மேடும் பள்ளமுமாக, வடக்கிலிருந்து தெற்கு நோக்கி வெள்ளிப் பலகை மாதிரி கிடக்கிறது இந்தப் பூமி. வாருங்கள்; இனி அந்த மரக்கூட்டங்களைக் கொஞ்சம் நெருங்கிப் பார்ப்போம். இங்கே இரண்டு விதமான விருட்சங்கள்

அதிகமாயிருக்கின்றன. ஒரே வெண்மை நிறமாயும், ஆனால் இலைகளே இல்லாத கொம்புகள்-கிளைகள் உள்ளனவாயும் நிற்பன ஒரு வகை; ஓங்கி வளர்ந்து, ஆனால் அடர்ந்த கிளைகளையும் ஊசியைப் போன்ற முனையான இலைகளையும் உடைய தேவதாரு விருட்சங்கள் மற்ற வகை. அடர்ந்த கிளைகள் அந்த மரங்களை அப்படியே மூடிக் கொண்டிருப்பதும், அவைகளின் மீது வெண்மையான பனிக்கட்டிகள் தொங்கிக் கொண்டிருப்பதும், கண் கொள்ளாக் காட்சியா யிருக்கிற தல்லவா? தனிமையில் இருக்கும் நாம், கொஞ்சம் உற்றுக் காது கொடுத்துக் கேட்போமா? பட்சிகளின் சப்தமாவது கேட்கிறதா? மிருகங்களின் இரைச்சலாவது கேட்கிறதா? சிறிய வண்டுகளின் ரீங்காரமாவது கேட்கிறதா? இல்லை. பயங்கரம் நிறைந்த நிசப்தத்தின் ஆட்சி ஆரண்யமெங்கும் நிலவியிருக்கிறது.

சரி, வாருங்கள்; அதோ மலையின்மீது உயர்ந்து வளர்ந்திருக்கும் தேவதாரு மரத்தின்மீது ஏறி நாலா பக்கங்களின் காட்சிகளைப் பார்ப்போம். யார் கண்டார்கள்? பனிக்கட்டி தேவதாரு விருட்சங்கள் இவைகளையல்லாமல் வேறு ஏதாவது அந்தப் பக்கம் தென்படாதா? அப்படி ஒன்றையும் காணோம், எங்கு பார்த்தாலும் பெரிய பெரிய மரங்களும், பனியுந்தானா? புற்களோ, புதர்களோ இந்தக் காட்டில் முளைக்கவே செய்யாதா? ஆனால் இவைகளைப்பற்றியெல்லாம் அபிப்ராயம் கூறுவதற்காக நாம் இங்கு வரவில்லையே? பனிசூழ்ந்த இரண்டு பாகங்களைக் கடந்து கடைசிப் பாகத்துக்கு நாம் வந்திருக்கிறோம். இந்த வருஷம் பனியும் அதிகமென்று சொல்வதையும் நாம் கேட்டிருக்கிறோம் அல்லவா? இவ்வளவு பனியிலும், நின்று கொண்டிருக்கிற இந்த மரங்கள் எவ்வளவு பருமனாயிருக்கின்றன! அளந்து பார்ப்பதற்குக்கூட நம்மிடம் சாதனம் இல்லை. ஆனால் சுமாராக சுற்றளவு எட்டு முழம் இருக்குமல்லவா? அதற்கு மேலும் இருக்கும்.

இந்த உயரமான மரத்தில் ஏறி நிற்கும் நாம் என்ன பார்க்கிறோம்? அதே பனிப் படலம்; அதே மரங்களின் கூட்டம். மேடு பள்ளமான அதே மலைப்பிரதேசம்! அதோ புகை; ஆம், உண்மையிலேயே புகைதான். இந்தநிசப்தமான வனாந்திரத்தில் புகை எங்கிருந்து வந்தது, நமக்கு ஆச்சரியமாயும், ஆனால் சந்தோஷமாயும் இருக்கிறதல்லவா? வாருங்கள், போய்ப் பார்த்து விடுவோமே!

புகை கிளம்புவது உண்மைதான். ஆனால் ரொம்ப தூரம் ஆகாயம் நிர்மலமாயிருப்பதனாலும், நாம் உயரத்தில் நிற்பதனாலும் சமீபமாகத் தெரிகிறது. இருந்தாலுமென்ன? நெருங்கி வந்து விட்டோம். பிண நாற்றமும் மாமிச வாசனையும் நம்முடைய மூக்குக்கு முதல் விருந்தாகக்கிடைத்திருக்கிறது. அதோ சப்தம். ஆம், சிறு குழந்தைகளின் சப்தம். ஜாக்கிரதை; நாம் ரொம்ப மெதுவாக் நடக்க வேண்டும். காலடிச் சத்தங்கூடக் கேட்கக் கூடாது. மூச்சும் மெதுவாக விட்டால் நல்லதுதான். யார் கண்டார்கள்! நம்மை வரவேற்பதில், அவர்களைப் பார்க்கிலும் அவர்களுடைய நாய்கள் முந்திக்கொண்டால்?

இந்தக் குழந்தைகளைப் பார்த்தீர்களா? உண்மையிலேயே சின்னஞ் சிறிய குழந்தைகள். அதோ யாவற்றிலும் பெரிய குழந்தைக்கு எட்டு வயதிருக்கும். சின்னக் குழந்தைக்கு ஒரு வயது இருக்குமல்லவா? ஆம், ஒரே வீட்டில் ஆறு குழந்தைகள்! இது வீடில்லையே, மலையின் இயற்கைக் குகை. உட்பக்கம் ஒரே இருட்டாகவல்லவா இருக்கிறது! இது எவ்வளவு அகலமும் நீளமும் இருக்கும்? எவ்வளவும் இருக்கட்டுமே! நீளத்தையும் அகலத்தையும் பார்ப்பதற்காகவா நாம் வந்திருக்கிறோம்? இனி இங்கு வசிப்பவரைக் கவனிப்போம். ஒரு பழுத்த கிழவி. அழுக்குப் படிந்து வெண்மையாக, ஆனால் சடை மாதிரி கற்றை கற்றையாக விரிந்து, அவளுடைய முகத்தையே மூடிக்கொண்டிருக்கின்றன ரோமங்கள்! தன்னுடைய கைகளினால் அந்த ரோமக் கற்றைகளை விலக்குகிறாள். அவளுடைய புருவரோமங்களும்கூட ஒரே வெண்மை நிறம். அவளுடைய வெண்மையான முகத்தில் விழுந்துள்ள சுருக்கங்கள் அவளுடைய வாய்க்குள்ளிருந்து வெளிக் கிளம்புவன போன்று காட்சியளிக்கின்றன. புகையும் நெருப்பும் வெளித் தோன்றும் அந்தக் குகைக்குள்ளேதான் குழந்தைகளும் கிழவியும் வசிக்கிறார்கள். அவளுடைய உடம்பில் எந்த ஓர் ஆடையையும் காணோம்; ஆபரணமில்லை. வற்றிப்போன அவளுடைய இரண்டு கைகளும் கால்களுக்குப் பக்கத்தில் கிடக்கின்றன. குழி விழுந்த அவளுடைய கண்களின் நீலமணிகள் பொலிவிழந்திருந்தாலும், பார்க்கும் சக்தியைப் பூரணமாக இழந்துவிடவில்லை என்பதைத் தெரிவிக்கின்றன. குழந்தைகளின் சப்தத்தைக்கூட அவளால் கேட்க முடிகிறது. இந்த நேரத்தில், ஒரு குழந்தை கத்துகிறது. அவளுடைய கண்கள் அந்தப் பக்கம் திரும்பின. கிட்டத்தட்ட ஒன்று-ஒன்றரை

வயதுள்ள இரண்டு குழந்தைகள்; ஒன்று ஆண் குழந்தை. மற்றது பெண். மஞ்சள் படிந்த வெண்மையும் மிருதுவு மான ரோமமும் பெரிய நீல நிறமான விழிகளையுமுடைய அந்தப் பையன் அழுது கொண்டிருக்கிறான். வாயில் ஓர் எலும்பை வைத்துச் சுவைத்துக்கொண்டிருக்கும் சிறு பெண் பக்கத்தில் நிற்கிறாள்.

''அகின்! இங்கே வா. நான் இங்கே இருக்கிறேன்'' என்று தன்னுடைய நடுங்குங் குரலில் கிழவி பையனை அழைக்கிறாள். ஆனால் அகின் எழுந்திருக்கவில்லை. இந்தச் சமயத்தில் எட்டுவயதுப் பையன் அகினைத் தூக்கி கிழவிக்குச் சமீபத்தில் விட்டு, ''அம்மா! ரோசனா எலும்பைப் பறித்துக் கொண்டாள். அதனால் அகின் அழுகிறான்'' என்றான்.

கிழவி தன்னுடைய வற்றிப்போன கைகளால் அகினைத் தூக்கினாள். இன்னும் அவன் அழுதுகொண்டு தானிருக் கிறான். அகினுடைய கண்களிலிருந்து பொங்கி வழியும் கண்ணீர், அவனுடைய அழுக்குப் படிந்த கன்னத்திலே பெரிய ரேகைகளை உண்டாக்கிச் செல்லுகிறது. கிழவி அவனை முகத்தோடு அணைத்துக் கொண்டு, ''அகின்! அழாதே-ரோசனாவை அடித்து விடுவோம்'' என்று பனி சேர்ந்திருக்கும் பூமியைத் தன்னுடைய கையால் அறைந் தாள். ஆனால் அகினுடைய அழுகையோ கண்ணீரோ நின்றபாடில்லை. தன்னுடைய கையால் அவனுடைய கண் ணீரைத் துடைத்தாள். அந்தச் சிறிய அழகிய வதனத்தின் கண்ணீரைத் துடைத்ததால், அவளுடைய கையில் படிந் திருந்த அழுக்கு சில கறுப்புக் கோடுகளைத் தீட்டிட்டதே யொழிய, பையனுடைய அழுகை நிற்கவில்லை. மாமிசப் பசையேயில்லாது, பைமாதிரி நீண்டு தொங்கிக் கொண் டிருக்கும் அவளுடைய ஸ்தனத்தின் நுனியை அகினுடைய வாயில் வைத்தாள். பையனும் உடனே அழுகையை நிறுத்திக் கொண்டான்.

அது என்ன சப்தம்? ரொம்ப சமீபத்தில் கேட்கிறதே! மனிதக் குரல். ஆம், இனிமையான இளம் குரல் யாரையோ அழைப்பதுபோல் கேட்கிறதல்லவா?

''அகின்! அகின்!''

சப்தத்தைக் கேட்ட அகின், அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டே அழ ஆரம்பித்து விட்டான்.

தலையில் விறகுச் சுமையுடன் வேகமாக வந்த இரண்டு பெண்கள் தங்களுடைய சுமையைக் குகைக்குப் பக்கமாகப் போட்டுவிட்டு ஒருத்தி ரோசனுவையும், ஒருத்தி அகினையும் தூக்கி அணைத்துக்கொண்டார்கள். இரு பெண்களும், அந்த இரண்டு குழந்தைகளின் தாய்கள் மாத்திரமல்ல; இருவரும் உடன் பிறந்த சகோதரிகள் என்பதையும் அவர்களுடைய முகச்சாயல் நமக்குத் தெரிவிக்கிறதல்லவா? நீல நிற விழிகளுங்கூட ஒரே மாதிரிதான்; ஒன்று-ஒன்றரை வயது வித்தியாசந்தானிருக்கும். இது நமக்குப் பெரிய மாறுதலாகத் தென்படவில்லை. அவர்களுடையவதனங்களின் முழு அழகும் வெளிக்குத் தெரியக்கூடாதென்பதற்காகவே, நீண்ட சுருள் சுருளான மிருதுவாகிய தலைரோமங்கள் அந்த வதனங்களை மூடிக்கொண்டிருக்கின்றன போல் தோன்றுகிறது. இப்பொழுது அவர்களுடைய அழகிய கைகளால் அந்த ரோமக் கற்றைகளை விலக்கியபின் பாருங்கள். கிரகணம் நீங்கியபின் பொலிவோடு விளங்கும் பூரணச்சந்திரன் மாதிரி இருக்கின்றன அவர்களுடைய முகங்கள்.

அகினுடைய தாய், நெஞ்சில் வலது ஸ்தனத்தைச் சேர்த்துக் கட்டியிருக்கும் ரோமங்கள் அடர்ந்த தோலைக் கழற்றிக் கீழே போட்டு, அதன்மீது உட்கார்ந்துகொண்டு மடியில் வைத்து அணைத்துக்கொள்கிருள் தன் மகனை. அகினுக்குப் பரம சந்தோஷம். அந்தச் சிறிய வாயின் வெளியே தோன்றும் முத்துப் போன்ற பற்களைப் பாருங்கள். அவனுடைய உச்சிமீதும், கன்னங்களிலும் அவன் தாய் கொடுக்கும் ஒவ்வொருமுத்தத்துக்கும் அவன் சிரிப்பதைப் பாருங்களேன்! சில மாதங்களாக விடாது தொடர்ந்து பனி பெய்துகொண்டிருந்ததால், ஆகாரத்துக்குத் தட்டு ஏற்பட்டதில் அவளுடைய சரீரம் மெலிந்திருந்தாலும் அழகையிழந்துவிடவில்லை. முகத்திலும் அதே பொலிவுதான். அவள் தன்னுடையமிருதுவான, கரிய நுனியுள்ள ஸ்தனத்தை அகினுடைய வாயில் வைத்தாள். இப்போது அந்தச் சின்னக் குழந்தையின் கண்கள் பாதி மூடிக்கொண்டிருப்பதைப் பாருங்கள். அந்தச் சின்னஞ்சிறு கால்கள், மெதுவாக, ஆனால் எவ்வளவு ஒய்யாரமாக ஆடுகின்றன! தாயினுடையமடியிலே, அந்தக் குழந்தை அனுபவிக்கும் ஆனந்தத்தைப் பாருங்கள். அவனுடைய வலது கையின் சின்னஞ்சிறு விரல்கள் அவளுடைய இடது ஸ்தனத்தின் கரிய நுனியை வருடிக்கொண்டிருப்பதைப் பார்த்தீர்களா?

இந்த ஏகாந்தமான குகையிலே இவர்களை, அவர்களுடைய அலுவல்களைக் கவனிக்க விட்டுவிட்டு, நாம் அடுத்த காட்சியைப் பார்ப்போமா?

## 2

அதோ, அநேகம் பாதங்கள்வழி கூடிப்போவதைநாம் பார்க்கிறோம். சப்தம் கேட்காமலிருப்பதற்காகத்தானு அந்தப் பாதங்கள் தோலால் மூடப்பட்டிருக்கின்றன? அவைகள் எங்கு நோக்கிச் செல்லுகின்றன? நாமும் தொடர்ந்து போவோம். ஒரு பக்கமாகத் திரும்பி மலைக் காட்டுக்குள் புகுந்துவிட்டன. நாம் இவ்வளவு வேகமாக நடந்தும், அந்தப் பாதங்களைத் தொடர்வது கடினமாயிருக்கிறதல்லவா? அவைகளும் நின்றபாடாயில்லை. பனி படர்ந்த பூமி, காடடர்ந்த மலைவரிசை, அப்பால் பனிப்படலங்கள். இவ்விதமாகநாம் கடந்து இதுவரை வந்திருக்கிறோம். அதோ தெரிகிறதே அந்த மனிதக்கூட்டத்திற்குப்பின், நீல நிறமான இந்த ஆகாயம் நிர்மலமாயில்லாவிட்டால் அவர்களை நாம் பார்க்கவே முடியாது போலிருக்கிறதே! நாமும் வெகு வேகமாக நடந்து அவர்களைச் சமீபித்துவிட்டோம். அவர்களுடைய உடம்பின்மேல் மூடப்பட்டிருக்கிறதே, அந்த ரோமங்கள் அடர்ந்து தோலின் நிறத்திற்கும், இந்தப் பனி நிறத்திற்கும் ஏதேனும் வித்தியாசம் தெரிகிறதா? அவர்களுடைய கைகளிலிருக்கும் ஆயுதங்கள்கூட ஒரே வெண்மையாய்த்தான் தோற்றமளிக்கின்றன. வாருங்கள், கொஞ்சம் நெருங்கிப் போய்ப் பார்ப்போம்.

முன்னே வழி கூட்டிச் செல்லும் அந்தப் பெண்ணுக்கு வயது நாற்பதுக்குமேல் ஐம்பதுக்குள்ளிருக்கும். திறந்திருக்கும் அவளுடைய புஜத்தைப் பார்த்தாலேஅவள் நல்ல சரீரக்கட்டு உடையவள் என்பது தெரிகிறதல்லவா? இவளுடைய தலை ரோமம், முகச்சாயல், ஏன் ஒவ்வோர் அங்கமுங்கூட, அந்தக் குகையிலே பார்த்த இரண்டு யுவதிகளையும் ஒத்திருக்கிறதல்லவா? ஆனுல் இவள்கொஞ்சம் பருமன்; பருவத்திலும் மூப்பு. இடது கையில் நீண்ட கூர்மையான கம்பு; வலது கையில் தோலிலே நன்ருகத் தீட்டிக் கூர்மையாக்கப் பட்ட கல்—அம்பு. இவளுக்குப் பின்னே, நான்கு ஆடவர்களும், இரண்டு பெண்களும் செல்கின்றனர். ஆடவர்களில்

ஒருவன், பெரியவளுக்குக் கொஞ்சம் அதிகமான வயதுடை யவனு யிருக்கிறுன். ஏனையோர்களுக்கு, பதினுன்கிலிருந்து இருபத்தாறு வயதுவரையிருக்கும். பெரியவனுடைய முகச் சாயல், ரோமம், அங்கங்கள் எல்லாம் அந்தப் பெரியவளு டைய தோற்றத்தையே ஒத்திருக்கின்றன! சரீரக் கட்டிலும் அவளைப்போலவே பலவான்தான். அதேமாதிரி ஆயுதங்களே இவனுடைய கைகளிலும் இருக்கின்றன. பாக்கி மூன்று ஆடவர்களுடைய தோற்றம், புஜபலம் இவனை ஒத்திருந் தாலும், இவனைப் பார்க்கிலும் அதிக இளமையாயிருக்கி ருர்கள். வயதிலும் வித்தியாசம். அதே ஆயுதங்கள் தான் இவர்கள் கைகளிலுமிருக்கின்றன. பெண்கள் இருவரில் ஒருத்திக்கு இருபத்திரண்டு வயதிருக்கும். மற்ருெருத்திக்குப் பதினுறு வயதிருக்கும். முன்னமே நாம் குகையில் அந்தக் கிழவியைப் பார்த்திருக்கிருேமல்லவா? நம்முடைய மனக் கண் முன்னே, அவளுடைய முகச்சாயலோடு இவர்கள் எல் லோருடைய தோற்றத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இவர்கள் யாவரும் ஒரே குடும்பத்தவர்தான் என்று நிச்ச யிக்க முடிகிறதல்லவா?

ஆயுதம் ஏந்திய கைகள், வேகமான நடை, பெரியவள் முன்னே செல்ல, அவளைத் தொடர்ந்து ஏனையோர் செல்லும் முறை இவைகளைக் கவனிக்கும் நமக்கு இவர்கள் ஏதோ யுத்தத்தை நாடிப்போகிறவர்கள் மாதிரி தெரிகிறது. நாமும் தொடர்ந்தே செல்வோம், வாருங்கள்.

தலைமை தாங்கி முன்னே போகும் பெரியவள், (இனி அவளைத் தாய் என்றே அழைப்போம். தாய் என்பது அந்தக் காலத்தில் குடும்பத் தலைவியைக் குறிக்கும்) இப்போது பள் ளத்தாக்கில் இறங்கி இடதுபக்கம் திரும்பி நடக்கிருள். மற்ற யாவரும் அவளைத் தொடர்கின்றனர். அவர்களுடைய கால் கள் மெதுவாகத் தேய்த்துத் தேய்த்துச் செல்கின்றன. தோல் களைக் கட்டியிருப்பதால் காலடிச்சப்தம் கூடக் கேட்கவில்லை. இப்போது அவர்கள் தொடர்ந்திருக்கும் சிறியமலைக் கூட்டங் களின்மீது செல்கிருர்கள். அதே மெதுவான நடை. கைகளா லும் அந்த மலைகளைத் தொட்டுத் தொட்டுக்கொண்டு நடக் கிருர்கள். வெகு தூரம் வளைந்தும், சுற்றியும் வந்த அவர் களுடைய பயணம் முடித்துவிட்டதா என்ன? அவர்கள் ஏன் நிற்கிருர்கள்? குகை! இதைத் தேடியா இவர்கள் இவ்வளவு தூரம் வந்தார்கள்? இதுதான் இவர்களுடைய வசிப்பிடமா? இல்லை, இல்லை. குகையின் வாசலில் பனி படர்ந்திருக்கும்

பூமியைக் குனிந்து உற்று உற்று நோக்குகிறாள் அந்தத்தாய். எந்த ஒரு அடையாளமும் தென்படவில்லை. இப்போது அவள் மாத்திரம் குகையின் உள்ளே மெதுவாக அடியெடுத்து வைத்து நடக்கிறாள். கொஞ்ச தூரம் சென்றவுடன், குகை கொஞ்சம் வளைந்து செல்கிறது; வெளிச்சமும் குறைவு; நான்கு புறத்தையும், பூமியையும் உற்றுக்கூர்ந்து கவனித்துச் செல்லும் அவளுடைய கண்களுக்கு, வெளிச்சம் குறைந்து விட்டதும் சிரமத்தைக் கொடுக்குமல்லவா? கொஞ்சம் நின்று நிதானித்துக் கண்களைச்சரிப்படுத்திக்கொண்ட அவள் இப்போது மேலும் மெதுவாக, அடியெடுத்து வைத்துச்செல்கிறாள்; கொஞ்ச தூரம் சென்றவுடன் அவள் என்ன கண்டாள்? மூன்று கரடிகள்—ஆண், பெண், அவற்றின் குட்டி—ஆக உருப்படி மூன்றும் தலைகளைப் பூமியில் புதைத்துக் கொண்டு ஆழ்ந்த நித்திரையில் இருக்கின்றன, இறந்து கிடப்பவை போன்று. ஏனெனில், உயிரோடிருக்கின்றன என்பதற்கான எந்த அடையாளத்தையும் காணோம்.

மெது மெதுவாக அடியெடுத்து வைத்துத் திரும்பிவரும் அவளுடைய முகத் தோற்றத்தைப் பாருங்கள்! நெஞ்சிலே பொங்கி வரும் ஆனந்தத்தை வெளியே காண்பிக்கிறதல்லவா? அதிலும் ஒருவிதப் பீதி கலந்திருக்கிறது; ஆம், தூங்கிக் கொண்டிருக்கும் அந்தத் துஷ்ட மிருகங்கள் விழித்துக் கொண்டால்!

வரவையெதிர்பார்த்து வெளியே காத்து நின்ற இவளுடைய பரிவாரம், இவளின் முகத்தோற்றத்திலிருந்து, தங்களுடைய உழைப்புக்கு ஊதியம் கிட்டிவிட்டதாய்த் தெரிந்து கொண்டனர். வந்த அவளும் தன்னுடைய கையை நீட்டி அதில் மூன்று விரல்களைக் காட்டினாள்.

இவளோடு, பெரியவன், அவனுக்கு அடுத்தவன் இருவரும் தங்கள் தங்கள் ஆயுதங்களை எச்சரிக்கையாகத்தாங்கிக் கொண்டு தாய்க்குப் பின்னே திரும்பவும் குகைக்குள் அடிமேல் அடிவைத்து ஒருவர் பின் ஒருவராய்ச் செல்கின்றனர். கூர்மையான நீண்ட தடிகளை வலக் கரங்களில் பிடித்துக் கொண்டு, தாய் ஆண் கரடியையும் பெரியவன் பெண் கரடியையும், இளையவன் குட்டியையும் நெருங்கினர். மறுவினாடி அவர்களின் கூரிய ஆயுதங்கள் கரடிகளின் இருதயத்தில் பாய்ந்தன. ஆனால் பாவம்; அந்த மிருகங்கள் தங்கள் உடம்பைக்கூட அசைக்கவே இல்லை. அவைகளின் ஆறுமாதப் பனிக்கால நித்திரை கலைவதற்கு இன்னும் ஒரு மாதத்துக்குமேல்

பாக்கி இருக்கிறது! ஆயுதபாணிகளான இவர்கள் அதைக் கவனிக்க முடியுமா? முன்ஜாக்கிரதையாகத்தானே அவர்கள் காரியம் செய்ய வேண்டும். வேகமாகப் பாய்ச்சிய ஆயு தங்களை இப்படியும் அப்படியுமாக நாலைந்து தடவை அசைத் தார்கள். ஏன்? அந்தப் பிராணிகள் உயிருடன் விழித்துக் கொண்டால் ஆபத்தல்லவா? இப்போது பயம் தீர்ந்து விட்டது. அவர்கள் தங்கள் தங்கள் பிராணிகளின் முன்னங் கால்களையும், முகத்தையும் சேர்த்துப்பிடித்து இழுத்து வாச லுக்குக் கொண்டு வந்து சேர்க்கின்றனர். எல்லோருடைய முகத்தையும் பாருங்களேன். என்ன ஆனந்தம்! எவ்வளவு சந்தோஷம்! ஒரே ஆரவார சப்தம்!

தாய், தன் உடம்பில் கட்டப்பட்டிருக்கும் தோலுக் குள்ளிருந்து ஒரு கத்தியை எடுத்தாள். அது கூர்மையாகத் தீட்டப்பட்டிருக்கும் கல். அதைக்கொண்டு பெரிய கரடியின் வயிற்றுப் பாகத்தைக் கிழிக்கிருள். கிழிப்பதோ கரடியின் தோலை; ஆயுதமோ கல். அது எவ்வளவு கூர்மையாயிருந் தால்தான் என்ன? பழக்கமும், நல்ல பலமும் இருப்பதால் தானே முடிகிறது. வயிற்றைக் கீறிய அவள், ஈரலில் ஒரு துண்டை வெட்டித் தன் வாயில் போட்டுக்கொண்டாள்; மற்றொன்றைப் பதினன்கு வயதுடைய சிறிய பையனின் வாயில் வைத்தாள். மற்றவர்கள் அந்த மிருகங்களின் சமீபத் தில் உட்கார்ந்திருக்கிருர்கள். மெதுவான பாகங்களை வெட்டி வெட்டி, அந்தத் துண்டுகளை ஒவ்வொருவருக்கும் கொடுத்துக்கொண்டு வருகிருள். இந்தவிதமாக, ஒரு பிராணி யின் மெதுவான பாகம் தீர்ந்து, அடுத்த மிருகத்தின் உடலில் தன் ஆயுதத்தைப் பிரயோகிக்கிருள். இந்த நேரத்தில் பதினறு வயதுடைய இளையவள், கொஞ்சம் விலகிப்போய், சிறிது பனித்துண்டையெடுத்து வாயில் போட்டுக்கொள் கிருள். அதே சமயம் ஆடவர்களில் பெரியவனும், அவளுக்குச் சமீபம் சென்று, தன்னுடைய வாயிலும் சிறிய பனிக்கட்டி யைப் போட்டுக்கொண்டு அவள் கரங்களைப் பிடிக்கிருன். கொஞ்சம் நாணிய அவள் உடனே அமைதியாகிவிட்டாள். இறுகத் தழுவிக் கொண்ட அவனும் அவளும் இன்னும் கொஞ்சம் விலகிச் சென்று விட்டனர்.

சிறிது நேரத்தில், பனிக்கட்டிகளைக் கைகளில் ஏந்திக் கொண்டு அவர்களிருவரும் கூட்டத்துக்குத் திரும்பவந்தனர். இருவருடைய கன்னங்களும் கண்களும் இப்போது அதிக மாகச் சிவந்திருக்கின்றன.

அந்தப் பெரியவன், ''அம்மா, நான் அறுக்கிறேன்; நீ ரொம்பக் களைத்துப் போய்விட்டாய்'' என்றான்.

அவனிடம் கத்தியைக் கொடுத்த தாய் குனிந்து, பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்களில், இருபத்தி நான்கு வயதுடைய ஆடவனின் முகத்தில் முத்தமிட்டுவிட்டு, அவனுடைய கைகளைப் பற்றினாள். உடனே இருவரும் வெளியில் சென்று விட்டார்கள்.

மூன்று பிராணிகளின் ஈரல்களையும் மெதுவான மாமிசத் துண்டங்களையும் யாவரும் தின்றுவிட்டனர். நான்கு மாதங்களாக ஒரே நித்திரையில் ஆழ்ந்திருந்த அந்த மிருகங்களினிடம் ஈரல் எங்கே இருக்கப் போகிறது? ஆனாலும் அந்தச் சிறிய குட்டிக் கரடியினுடைய மாமிசம், மிருதுவாகவும் ருசியாகவும் இருந்திருக்குமல்லவா? கூடிய மட்டும் மாமிசத் துண்டுகளைத் தின்ற அவர்கள், இளைப்பாறுவதற்காக அந்த இடத்திலேயே சிறிது படுத்துப் புரண்டனர்.

இனி அவர்கள் தங்கள் வீட்டுக்கு—ஆம், குகைக்குச் செல்லவேண்டும். பெரிய கரடிகள் ஒவ்வொன்றினுடைய நான்கு கால்களையும் தோல் கயிற்றினால் சேர்த்துக் கட்டி, அவற்றினூடே கம்புகளைக் கொடுத்து ஒவ்வொன்றுக்கும் இரண்டுபேர் வீதம் நான்கு ஆடவரும் தங்கள் தோள்களில் தூக்கிக் கொண்டார்கள். குட்டியை ஒரு பெண் தூக்கிக் கொண்டாள். தாய் தன்னுடைய ஆயுதங்களைக் கையிலேந்தியவளாய் முன்னே செல்ல, மற்றவர்களும் அவளைத் தொடர்ந்தனர்.

அந்த மாக்கள் (காட்டு மனிதர்கள்) அப்பொழுது என்ன நேரம், எத்தனை மணி இருக்கும் என்பதை அறியமாட்டார்கள். ஆனால், ''இன்று நல்ல நிலவாயிருக்கும்'' என்பது மாத்திரம் அவர்களுக்குத் தெரியும். இப்பொழுது சூரியனுடைய ஒளி ரொம்பவும் குறைந்துவிட்டது. அப்பொழுதுதான் அஸ்தமித்துக் கொண்டிருந்ததால், இன்னும் லேசான வெளிச்சம் இருந்தது. அவர்களும் தங்கள் பாதையில் முன்னேறிய வண்ணம் சென்றனர். கொஞ்ச நேரத்தில் ஆகாயம், பூமி எங்கும் ஒரே வெண்மை நிறமாகக் காட்சியளிக்க ஆரம்பித்துவிட்டது. ஆகாயத்தில் நிலவின் ஒளி; கீழே பனிப்படலம் படிந்த பூமி.

வழி கூடிச் செல்லும் இந்தக் காட்டு மனிதக் கூட்டங்களுக்கு, அவர்களுடைய வீடு இன்னும் வெகுதூரத்தில்

இருப்பது தெரியும். வேகமாக நடக்கின்றனர். ஆயுதம் ஏந்திய கையினளாய், அந்தத் தாய் தலைமை தாங்கி யாவருக்கும் முன்னே நடக்கிறாள். இரவானதால், நாலா பக்கங்களிலும் தன்னுடைய கண்களின் பார்வையை விட்டெறிந்து கூர்மையாக நோக்கிய வண்ணம் நடந்துகொண்டிருக்கிறாள். ஓர் இடத்தில் திடீரென்று நின்ற அவள் காது கொடுத்துக் கேட்க ஆரம்பித்தாள். ஏனையோர் மௌனமாக நிற்கின்றனர். இந்த நேரத்தில், பதினாறு வயதுள்ள பெண் இருபத்தாறு வயதுள்ள வாலிபனிடம், ''உர். உர், ப்ருக் ப்ருக்'' என்று கத்தினாள். தாயும், தன்னுடைய தலையை ஆட்டிக்கொண்டு, ''உர், உர், ப்ருக், ப்ருக்'' என்று சத்தமிட்டு, 'அதிகம், அதிகம் யாவரும் ஜாக்கிரதை' என்று ஜாடை காட்டி ஆவேசத்தோடு அலறினாள்.

தூக்கி வந்த சவங்கள் தோள்களிலிருந்து இறக்கப் பட்டன. உடனே யாவரும் தங்கள் தங்கள் ஆயுதங்களை ஏந்தி, முதுகுக்கு முதுகு தொடும்படியாக வட்ட வடிவில் வியூகம் வகுத்து, திசைகள் தோறும் நோக்கியவர்களாய் நின்றனர். சிறுவன் வியூகத்துக்கு நடுவில் நிற்கிறான். கொஞ்ச நேரத்தில், ஏழெட்டு ஓநாய்கள், தங்களுடைய நீளமான நாக்குகளைத் தொங்கவிட்டுக்கொண்டும், ''உர் உர்'' என்று கத்திக்கொண்டும், இந்த மனித மிருகக் கூட்டத்தின் வியூகத்தைச் சுற்றிச் சுற்றிவர ஆரம்பித்தன. இவர்களுடைய கைகளிலுள்ள ஆயுதங்களைப் பார்த்த அந்த ஓநாய்கள் யுத்தம் ஆரம்பிப்பதற்குச் சந்தர்ப்பத்தை எதிர்பார்ப்பன போல் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கின்றன. இந்த நேரத்தில் வியூகத்தின் நடுவே நின்ற பதினான்கு வயதுச் சிறுவன், தன்னுடைய நீண்ட தடியோடு சேர்த்துக் கட்டியிருந்த கம்பை எடுத்து அதில் தோல் கயிற்றைக்கட்டி அதை ஒரு முறுக்கேற்றிய வில்லாக்கி, எங்கேதான் மறைத்து வைத்திருந்தானோ ஒரு கூர்மையான கல் அம்பு, அதையும் வில்லையும் வட்டத்தில் நிற்கும் இருபத்துநான்கு வயதுடைய ஆடவனின் கையில் கொடுத்து அவனை வியூகத்தின் நடுவே தள்ளிவிட்டு, அவனுடைய ஸ்தானத்தில் தான் நின்றுகொண்டான். இருபத்துநான்கு வயதுடைய ஆடவன், தன்னுடைய வில்லில் நாணேற்றி, கல் அம்பைப்பூட்டி வியூகத்தின் நடுவே நின்றவண்ணம் குறி வைத்து ஓர் ஓநாயின்மீது ஏவினான். அந்தப் பாணம், அதன் ஒருபுறத்து விலாப் பக்கத்தில் பாய்ந்துவிட்டது. உடனே கீழே விழுந்த அந்த ஓநாய், சமாளித்துக்கொண்டு வியூகத்தின்மீது பாய ஆரம்பித்ததோ

இல்லையோ, அவன் மற்றொரு பாணத்தையும் அதன்மீது ஏவி விட்டான். இந்த அம்பு சரீரத்தில் பெரிய காயத்தை மாத்திரமா உண்டுபண்ணியது? அதனுடைய உயிரையும் கொள்ளை கொண்டு விட்டது. பிணமாக விழுந்த அந்த ஓநாயின் சரீரத்திலிருந்து வழிந்தோடும் ரத்தத்தை மற்ற ஓநாய்கள் நக்கிக்கொண்டும் கடைசியில் அதைக் கிழித்துத் தின்னவும் ஆரம்பித்துவிட்டன.

இந்த நேரத்தைத் தங்களுக்குச் சாதகமாக நினைத்த இந்த மாக்கள் (மனிதமிருகங்கள்) தங்களுடைய வேட்டைப் பொருளைத் தோள்களில் தூக்கிக்கொண்டு ஓட்டமும் நடையுமாகத் தங்கள் பயணத்தை மேற்கொண்டனர். இப்பொழுது தாய், இடையிடையே கூர்ந்து கூர்ந்து பார்த்துக்கொண்டும் காது கொடுத்துக் கேட்டுக்கொண்டும், யாவருக்கும் பின்னேயும், மற்றவர்கள்முன்னுமாகநடக்கின்றனர். இன்று பனியில்லாததால், நிலவின் ஒளியிலே இவர்கள் பாதை தெரிந்து வேகமாக நடக்க முடிகிறது. இவர்களுடைய குகை இன்னும் அரை மைல் தூரங்கூட இராது; இவ்வளவில் அந்தத் துஷ்ட மிருகங்கள்—ஓநாய்கள் திரும்பவும் இவர்களை வளைத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டன. இவர்களும் தங்கள் சுமையை இறக்கிவைத்து ஆயுதங்களைத் தயார் செய்து பல அம்புகளைக் குறிவைத்து ஏவினார்கள். ஓயாமல் மிகவும் வேகமாக வளையம் வந்துகொண்டிருக்கும் ஓநாய்களில் ஒன்றைக்கூட இவர்களுடைய அம்புகள் தொடவில்லை. இரு கட்சிக்கும் பலமான போராட்டம் நடக்கிறது. ஆம் வாழ்க்கைப் போராட்டம் அல்லவா? இந்த நேரத்தில் எப்படியோ நான்கு ஓநாய்கள் ஒரு மொத்தமாகப் பதினாறு வயதுள்ள மங்கைமீது பாய்ந்துவிட்டன. பக்கத்தில் நின்ற தாய் தன்னுடைய ஈட்டியால் முனையுள்ள கம்பால் ஓர் ஓநாயைக் குத்தி விழுத்தாட்டினாள். ஆனால் பாக்கி மூன்றும் தாங்கள் பாய்ந்திருந்த மங்கையின் தொடையில் பெரிய காயத்தை உண்டாக்கிவிட்டன. அவள் பூமியில் சாய்ந்ததுதான் தாமதம்; அவளுடைய வயிற்றைக் கடித்து, குடலையும் வெளியே இழுத்துவிட்டன. எல்லோருடைய கவனமும் இவளைக் காப்பாற்றுவதில் முனைந்திருக்கும்போது மற்றும் மூன்று ஓநாய்கள் தருணம் பார்த்து, இருபத்துநான்கு வயதுள்ள ஆடவனின்மீதும் பாய்ந்து, பூமியின்மீது சாய்ந்து விட்ட அவனுடைய சரீரத்தில் பல காயங்களை உண்டு பண்ணிவிட்டன. அவனுடைய வயிற்றையும் கிழித்து

விட்டன. இப்போது எல்லோருடைய கவனமும் இந்தப் பக்கம் திரும்பியது. அந்தப் பக்கம், முன்னே கீழே தள்ளப் பட்டு குடல் சரிந்து கிடக்கும் பதினறு வயதுப் பெண்ணின் சரீரத்தை அந்த ஓநாய்கள் இன்னும் கொஞ்சதூரம் இழுத் துக்கொண்டு சென்று தின்ன ஆரம்பித்துவிட்டன. இந்தச் சமயத்தில், இவர்களில் யாரோ ஓர் ஆள் பெரியவளால் குத்தப்பட்டு விழுந்து கிடக்கும் ஓநாயின் வாயில் தடியைச் செலுத்த, இன்னெருவன் அதன் முன்னங்கால்களைப் பிடித் திழுக்க, மற்றவர்கள் அதன் சரீரத்திலிருந்து பெருகியோடும் ரத்தத்தைக் குடிக்க ஆரம்பித்தனர். தாய் அதனுடைய தொண்டையின் நரம்பை வெட்டி இவர்களுக்கு உதவிசெய் தாள். இந்தப் பேரரட்டமும், கொலையும், புசிப்பும் சில நிமிஷங்களில் நடந்திருக்கின்றன. ஓநாயின் ரத்தத்தைக் குடிப்பதில் முனைந்திருக்கும் இந்த மனிதக் கூட்டத்துக்கு பதினறு வயது மங்கையின் சரீரத்தைப் பூராவும் தின்ற பின்னே அந்த ஓநாய்கள் தங்களைத் தாக்க ஆரம்பிக்கும் என்று தெரியுமாதலால் ஆவியை விட்டுக் கொண்டிருக்கும் ஆடவனையும் அங்கே போட்டுவிட்டு தங்களுடைய வேட் டைப் பொருள்களான மூன்று கரடிகள், ஓர் ஓநாய், இந்த நான்கையும் தூக்கிக்கொண்டு, ஓட்டமும் நடையுமாக அவர்கள் தங்கள் குகைக்கு வந்து சேர்ந்தனர்.

இங்கு குகையில் நெருப்பு ஜோதி மயமாக எரிந்து கொண்டிருக்கிறது. அக்கினியின் வெளிச்சத்திலே இரண்டு பெண்களும் எல்லாக் குழந்தைகளும் நித்திரை செய்கிறார் கள். காலடிச் சப்தம் கேட்ட கிழவி, ''நிஷா...! வந்து விட்டீர்களா?'' என்று கேட்டாள்.

''ஆமா'' என்று சொல்லிக்கொண்டே தாய் தன்னு டைய ஆயுதங்களை ஒரு பக்கத்தில் வைத்துவிட்டு மார்பைச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் தோலையும் கழற்றினள். மற்றவர்களும், தூக்கி வந்த உடல்களைக் கீழே கிடத்தி விட்டுத் தங்கள் தங்கள் ஆயுதங்களையும், கட்டியிருந்த தோல்களையும் ஒரு பக்கத்தில் வைத்து, யாவரும் இப்போது நெருப்பின் உஷ்ணத்தில் தங்களது உடலைச் சூடேற்ற முனைந்தனர்.

நித்திரையில் ஆழ்ந்திருந்த குழந்தைகளும் பெண்களும் விழித்து விட்டனர். எவ்வளவு அயர்ந்த தூக்கத்திலிருந் தாலும் சிறு சப்தத்தையும் கூடக்கேட்டு எழுந்து விடுவது இவர்களின் இளமையிலிருந்து வரும் பழக்கம்.

வெகு பிரயாசையோடும், தாய் இதுவரை குடும்ப பாரத்தை ஏற்று நடத்தி வந்தாள். மான், முயல், மாடு, ஓநாய், ஆடு, குதிரை முதலிய மிருகங்கள் இங்கு பனி ஆரம்பமாவதற்கு முன்பே, தெற்கே உஷ்ணப் பிரதேசத்தை நாடிச் சென்று விடுவது வழக்கம். இவர்களும், அதேபோல் போயிருக்க வேண்டியவர்கள்தான். ஆனால் அந்தச் சமயத்தில் பதினாறு வயதுள்ள மங்கை நோய்வாய்ப்பட்டு இருந்தாள். அந்தக் காலத்து மனித தர்மப்படி, "ஒருவருக்காக மற்றவர்களையும் ஆபத்துக்கு உட்படுத்தக்கூடாது" என்பதுவே குடும்பத்தை நடத்தும் பெரியவளின்—தாயின் கடமையாயிருந்தது. ஆனால், அன்று அவளுடைய இதயபலவீனம், இன்று ஒன்றுக்கு இரண்டு மனித உருவங்களைப் பறிகொடுக்கும்படி செய்துவிட்டது. இந்த ஆரண்யத்தை நோக்கித் திரும்பவும் மிருகங்கள் வந்து சேர்வதற்கு, இன்னும் இரண்டு மாதங்கள் ஆகும். இந்த இரண்டு மாதங்களுக்குள், இன்னும் எத்தனை ஜீவன்களை இழக்க வேண்டியிருக்குமோ, யார் கண்டார்கள்! மூன்று கரடி ஓர் ஓநாய் இந்த நான்குமா இந்தப் பரிவாரம் பூராவுக்கும் இரண்டு மாதங்களுக்குக் காணும்?

குழந்தைகளுக்குப் பரம சந்தோஷம். ஏனென்றால் அவர்களுடைய வயிறு முதுகெலும்போடு ஒட்டிக்கிடந்தது. தாய், முதலில் ஓநாயினுடைய ஈரலை வெட்டி வெட்டிக் குழந்தைகளுக்குக் கொடுத்தாள். அவைகள், அவசர அவசரமாக அவற்றை மென்று விழுங்கிக் கொண்டிருக்கின்றன. பிறகு தோலுக்குச் சேதமில்லாமல் அதை உரித்தாள். ஏனெனில், தோல் அவர்களுக்கு ரொம்ப உபயோகமுள்ள வஸ்து. மாமிசத்தை அறுத்து அறுத்து நெருப்பில் வாட்டினாள். பசியோடு காத்திருந்த கூட்டம், சுட்டும் சுடாமலும் எடுத்துக் கவ்வுகின்றன. சிலர் கழுத்துப் பாகத்தின் மெல்லிய மாமிசத்தை அறுத்துக் கொடுக்கும்படி தாயைக் கெஞ்சிக் கேட்கின்றனர். அப்பொழுது தாய், "இன்று வயிறு நிறையச் சாப்பிட்டுக் கொள்ளுங்கள்; நாளையிலிருந்து இவ்வளவு கிடைக்காது" என்று சொல்லும்போது எவ்வளவு பொறுப்புடன் சொல்லுகிறாள்!

குகைக்கு உள்ளே சென்ற தாய் ஒரு தோல் பாத்திரத்தைக் கொண்டுவந்து பரிவாரத்தின் முன்னே வைத்து "இதில் மது இருக்கிறது, யாவரும் குடியுங்கள்; ஆடுங்கள்;

பாடுங்கள்; சந்தோஷம் கொண்டாடுங்கள்'' என்று உத்தர விட்டாள்.

சிறிய குழந்தைகளுக்கு உறிஞ்சி உறிஞ்சிக் குடிக்கத்தான் கிடைத்தது. பெரியவர்களுக்குக் கொஞ்சம் அதிகம் கிடைத்தது. சொல்லவா வேண்டும்? கொஞ்ச நேரத்தில் அவர்களுடைய கண்கள் சிவப்பேறிவிட்டன. போதை தலைக்கேறி விட்டது ஆனந்தத்தின் உச்சியை அளாவ ஆரம்பித்து விட்டனர்; பாடினர் சிலர்; கட்டையோடு கட்டையைத் தட்டித் தாளம் போட்டனர் சிலர்; ஆடினர் சிலர்; இந்த இரவு அவர்களுக்குச் சந்தோஷமா யிருப்பதில் அதிசய மில்லை.

இங்கு நடைபெறுவது ''தாயின் ராஜ்யம்''. ஆனால் அநியாயமோ, உயர்வு தாழ்வோ இல்லாத ராஜ்யம். கிழவியையும் ஆடவர்களில் பெரியவனையும் தவிர்த்து, மற்ற எல்லோரும் அந்தத் தாயின் குழந்தைகள். தாயும் அந்தப் பெரியவனும், கிழவியின் மகனும், மகளும். ஆகையால் அங்கே, ''என்னுடையது உன்னுடையது'' என்ற பேதமே கிடையாது. ஏனெனில், அந்தப் பேதம்—உன்னுடையது, என்னுடையது என்ற பேதம் பிறப்பதற்கு இன்னும் காலமிருக்கிறது. ஆனால் ஒரு விஷயம்: இங்கே—இந்த ராஜ்யத்தில், எல்லா ஆடவர்மீதும் தாய்க்குத்தான் முதலாவது அதிகாரம். அதுவும் ஒரே மாதிரியான—சமமான அதிகாரம்; வித்தியாசம் கிடையாது.

மகனும், புருஷனுமாயிருந்த இருபத்து நான்கு வயதுடைய ஆடவன் இறந்துவிட்டதால், அவளுக்கு—தாய்க்குத் துக்கம் இல்லாமல் இல்லை. இருந்தாலும், அந்தக் காலத்து மனித வாழ்க்கை, முக்கியமாக நிகழ் காலத்திலேயே கவனம் செலுத்துவதாய் இருந்தது. தாய்க்கு இரண்டு நாயகர்கள் இருந்தனர். மூன்றாவது புருஷன்—பதினான்கு வயதுப் பையன் தயாராகிக் கொண்டிருந்தான். இன்னும் அவளுடைய ராஜ்யத்தில் எத்தனை குழந்தைகள் அவளுடைய கணவன் ஸ்தானத்திற்கு வருவார்களோ யார் கண்டார்கள்? இருபத்து ஆறு வயதுடைய ஆடவனைத் தாய் நேசித்தாள். ஆகையால் பாக்கி மூன்று பெண்களின் கணவன் ஸ்தானத்துக்கு, ஐம்பது வயது கிழவன்தான் மிஞ்சியிருக்கிறான்.

பனிக் காலம் விடைபெற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டது. இக்காலத்தில், கிழவியின் உடலை விட்டு அவள்

ஆவியும் விடை பெற்றுக்கொண்டது. குழந்தைகளில் மூவரை ஓநாய் விழுங்கிவிட்டது. ஆடவர்களில் பெரியவன், பனி உருகி நதியில் போய்விட்டான். இந்தவிதமாக, தாயின் பரிவாரம் பதினுன்கிலிருந்து ஒன்பதுக்குச் சுருங்கிவிட்டது.

## 3

வசந்த காலம். கடந்த ஆறு மாதங்களாக மொட்டையாய் நின்ற மரக் கிளைகளில் சிறிய இலைகள் துளிர் விடுகின்றன. பனி உருகி, பசும்புல்லால் போர்த்தியது போன்ற காட்சியளித்துக் கொண்டிருக்கிறது பூமி. திசை முழுதும் புத்துயிரும், புதிய களையும் பெற்று விளங்கின. காற்றிலே நல்ல வாசனை எங்கும் பரவிக்கொண்டிருந்தது. அநேகவிதப் பட்சிகள் மரக்கிளைகளில் அமர்ந்து இனிய சப்தமிடுகின்றன. எங்கும் வண்டுகளின் ரீங்காரம்; பனி உருகி வரும் நீரோட்டக் கரைகளில் அமர்ந்திருக்கும் ஆயிரக்கணக்கான நீர்ப் பறவைகள், புழுக்களைத் தின்பதில் கவனத்தைச் செலுத்துகின்றன. ஆணும் பெண்ணுமான ஜோடி அன்னங்கள் காதலில் திளைத்திருக்கின்றன. ஆங்காங்கு மான் கூட்டங்கள் குதித்து விளையாடுகின்றன. ஆடுகள், மாடுகள் முதலிய மிருகங்கள் ஒருபுறம் கவலையற்று மேய்ந்து கொண்டிருக்கின்றன. அவைகளை விழுங்குவதற்காகச் சமயத்தை எதிர் பார்த்துப் புலிகளும், ஓநாய்களும் மற்றொரு புறத்திலே பதுங்கியிருக்கின்றன.

பனி காலத்தில் உறைந்திருந்து, இப்போது உருகிப் பெருக்கெடுத்தோடும் நதிகளைப் போல மனிதர்களின் பரிவாரங்களும், தங்கள் ஆயுதங்கள், குழந்தைகள், தோல் முதலிய தட்டுமுட்டுச் சாமான்கள், இவைகளைத் தூக்கிக் கொண்டும், நெருப்பைக் காப்பாற்றிக் கொண்டும், திறந்த வெளிகளில் வசிக்க ஆரம்பித்தனர். இவர்களுடைய நாய்கள் கடித்துக்கொண்டு வரும் ஆடு, ஓநாய் இவைகளைக் கொண்டோ அல்லது இவர்களே ஆயுதங்களின் உதவியால் பிராணிகளைக் கொன்றோ, தங்கள் ஆகாரத்தைத் தேடிக் கொள்கின்றனர். நதிகளிலும் மீன்கள் ஏராளம். வால்கா நதிப் பிரதேசத்தில் வசிப்பவர்கள் மீன் பிடிப்பதிலும் சமர்த்தர்கள்.

இப்பொழுதும் இரவில் குளிர் இருக்கிறது. ஆனால் பகல் உஷ்ணமாயிருக்கும். ஏனைய குடும்பங்களைப்போல் நிஷாவின் பரிவாரமும் வால்கா நதிப் பிரதேசத்தைத் தங்கள் வாசஸ் தலமாக்கிக் கொண்டார்கள். நிஷாவைப் போலவே மற்ற குடும்பங்களுக்கும் தாய்தான் தலைவி; தகப்பன் அல்ல. மேலும் அங்கு யாருக்கு யார் தகப்பன் என்று கூறுவது முடியாத காரியம். நிஷாவுக்கு எட்டுப் பெண் மக்களும் ஆறு ஆண் மக்களும் பிறந்தனர். அவர்களில் நான்கு பெண்களும் மூன்று ஆண்களும் இப்பொழுதும்—நிஷாவின் ஐம்பத்து ஐந்து வயதிலும் உயிருடன் இருக்கிறார்கள். இந்த ஏழு பேரும் நிஷாவின் புத்திர புத்திரிகள் என்பதற்கு, அவர்களைப் பிரசவித்த நிஷாவே சாட்சியாயிருக்கிறாள். ஆனால், இந்த ஏழுபேருக்கும் தகப்பன் யார் என்று சொல்வது முடியாது; ஏனெனில் நிஷாவின் தாய்—நாம் முன்னே சந்தித்த கிழவி—குடும்பத்தின் தாயாய்—தலைவியாய் இருந்து பரிவாரத்தை நடத்தி வரும்பொழுது, மங்கைப் பருவமாயிருந்த நிஷாவுக்கு அவளுடைய சகோதரர்களும் புத்திரர்களும் நாயகர்களாயிருந்தனர். பலதடவை, அவர்கள் இவளோடு சேர்ந்து ஆடியும், பாடியும் இவளுடைய காதலுக்கு உரியவர்களாவதில் வெற்றி பெற்றிருக்கிறார்கள். பின்பு நிஷா குடும்பத்தின் தலைவியாக ஆனதும் அவளுடைய சகோதரர்களோ அல்லது புத்திரர்களோ, அடிக்கடி மாறிவரும் அவளுடைய காதல் வேட்கையைத் தடுப்பதற்குச் சக்தியற்றவர்களாகி விட்டனர். ஆகையால் இப்பொழுது ஜீவந்தர்களாயிருக்கும் நிஷாவினுடைய மக்கள் ஏழுபேரில், யாருக்கு யார் தகப்பன் என்று எப்படிச் சொல்ல முடியும்? நிஷாவின் குடும்பத்தில், இப்பொழுது அவளேதான் குடும்பத்தின் தாய்—தலைவியாயிருக்கிறாள். ஆனால், இந்தத் தலைமை இன்னும் கொஞ்ச காலத்துக்குத்தான். ஒன்றிரண்டு வருடங்களில் இவளுடைய பெண் மக்களில் பராக்கிரமசாலியான லேக்கா பரிவாரத்தின் தலைவியாகி விடுவாள். அப்பொழுது சகோதரிகளுக்குள் அவசியம் சண்டை உண்டாகும். இதேபோல் லேக்காவின் சகோதரிகளும், ஒன்று அல்லது இரண்டு பரிவாரங்களை ஸ்தாபிப்பதில் வெற்றி பெறவும் முடியும்; ஒவ்வொரு வருஷமும் குடும்பத்தின் சில நபர்கள், துஷ்ட மிருகங்களால் தாக்கப்பட்டும், வால்கா நதியின் வெள்ளத்தில் இழுக்கப்பட்டும் குறையும்போது, அந்தக் குடும்பத்தின் எண்ணிக்கை குறையாமல் காக்க வேண்டியது தலைவியின் கடமை.

பல சுக்கிலங்கள் ஒரு சுரோணிதத்தில் கலக்க வசதியிருப்பதைப்போல், பல சுரோணிதங்கள் ஒரு சுக்கிலத்தில் கலக்க முடிந்தால்தான் குடும்ப அபிவிருத்தி தடைப்படும்.

குடும்பத் தலைவி நிஷா, பலமுறை வேட்கைகளில் தன் மகள் லேக்காவினுடைய சாதுர்யத்தையும், பலத்தையும் பார்த்திருக்கிருள். மலைகளின்மீது மான்களைப் போன்று அவளால் ஏறமுடியும்! ஒரு சமயம் தேன் குடிக்கும் கரடிகள் கூட ஏற முடியாத அவ்வளவு உயரமான ஒரு மலை உச்சியில் ஒரு பெரிய தேனீருட்டு (தேன்கூடு) தெ... பட்டது. இதைப் பார்த்த லேக்கா மரங்களோடு மரங்களைச் சேர்த்துக் கட்டி ஓர் இரவில் அவற்றின்மீது பல்லியைப் போன்று ஊர்ந்து ஊர்ந்து உச்சியை அடைந்து, நெருப்பினுல் அந்தத் தேனீக்களைத் துரத்திவிட்டுத் தேன்கூட்டில் பெரிய துவாரத்தையும் போட்டுவிட்டாள். கீழே சொட்டிய தேனை ஒரு தோல் பாத்திரத்தில் பிடிக்க, அது உத்தேசம் இருபது படிக்குக் குறைச்சல் இல்லை. லேக்காவினுடைய தைரியமான இச் செய்கையானது, நிஷா குடும்பம் மட்டுமல்லாமல், அடுத்த பரிவாரங்களும் அவளைப் புகழும்படிச் செய்துவிட்டது. ஆனுல் நிஷாவுக்கு இது சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. ஏனெனில், நிஷாவின் யௌவனப் புத்திரர்கள் லேக்காவினுடைய ஆணையைச் சிரமேற் கொள்ளத் துடித்துக்கொண்டிருப்பதையும், நிஷாவின் வேண்டுகோள்களைக்கூட உதாசீனம் செய்வதையும், நாளடைவில் நிஷா கவனித்து வந்தாள். தன்னை வெளிப்படையாக எதிர்ப்பதற்கு, தன் மகளுக்குத் தைரியம் ஏற்படாதிருப்பதையும் நிஷா தெரிந்திருக்கிருள். தன்னுடைய வழியில் பெரிய முட்டுக்கட்டையாய் இருக்கும் லேக்காவை ஒழித்து விடுவதற்கு நிஷா பல வழிகளைப்பற்றி யோசித்தாள். ''நித்திரையில் கழுத்தைப் பிடித்து நெரித்துக் கொன்றுவிட்டால் என்ன?'' என்றுகூட அவளுக்கு ஒரு சமயம் தோன்றிற்று. ஆனுல், தன்னைப் பார்க்கிலும் லேக்கா பலசாலியென்பதும் நிஷாவுக்கு நன்றாகத் தெரியும். இதற்கு வேறொருவருடைய உதவியைப் பெறுவதென்றாலோ யாரும் இவளுக்குச் சகாயம் செய்யமாட்டார்கள் என்பதும் நிஷாவுக்குத் தெரியும். நிஷாவினுடைய புத்திரர் யாவரும் லேக்காவினுடைய காதலுக்கும் தயவுக்கும் காத்திருப்பவர்கள்; பெண் மக்களோ லேக்காவுக்குப் பயப்படுகிறவர்கள். இதில் வெற்றி பெருவிட்டால், தன்னுடைய பிராணனை லேக்கா வதைத்து விடுவாள் என்பதும் அவளுக்குத் தெரியும்.

ஒரு சமயம் நிஷா தனிமையாக உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அவள் முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. லேக்காவை ஒழித்துவிடுவதற்கு அவள் ஒரு வழி கண்டுபிடித்துவிட்டாள்.

சூரியன் உதயமாகிக் கொஞ்ச நேரமேயானாலும், வெயில் அதனுடைய சக்தியைத் தெரிவிக்க ஆரம்பித்துவிட்டது. தங்களுடைய தோல் குடிசைக்குப் பின்னே, நிஷாவின் குடும்பத்தாரில் சிலர் நிர்வாணமாகப் படுத்திருக்கின்றனர். சிலர் வெயில் காய்ந்துகொண்டிருக்கின்றனர். ஆனால் நிஷா மாத்திரம் தனியாகக் குடிசைக்கு முன்னே உட்கார்ந்திருந்தாள். அவளுக்குச் சமீபம் லேக்காவினுடைய மூன்று வயதுப் பையன் விளையாடிக்கொண்டிருந்தான். நிஷாவினுடைய இரண்டு கைகளிலும் சிவந்த பழங்கள் நிறைய இருந்தன.

வால்கா நதி பிரவாகமா அவளுக்குச் சமீபத்திலேயே ஓடிக்கொண்டிருக்கிறது. நிஷாவினுடைய குடிசைவரை பூராவும் வால்கா நதியின் மணல் பிரதேசம்; விளையாடிக் கொண்டிருக்கும் பையனுக்கு முன்னே, நிஷா தன்னுடைய கைகளிலிருக்கும் பழங்களில் ஒன்றை எறிந்தாள். பையன் அதை ஓடி எடுத்துத் தின்றான். அடுத்த மற்றொன்றை கொஞ்சம் எட்டி எறிந்தாள்; அதையும் தின்றான். அடுத்து வேக வேகமாய்ப் பழங்களைப் போடத் தொடங்கினாள். பையனும் ஓடி ஓடி வேகமாக எடுப்பதும் புசிப்பதுமாயிருந்தவன், ஒரு சமயம் ஓடிய வேகத்தில் கால் தவறி வால்கா நதி வெள்ளத்தில் விழுந்துவிட்டான். அந்தத் திசையை நோக்கிய வண்ணம் நிஷா சப்தமிட்டாள். கொஞ்ச தூரத்தில் உட்கார்ந்திருந்த லேக்கா, தன்னுடைய குழந்தையைக் காணாததால் வேகமாகஓடிவந்தாள்; பையன் தண்ணீருக்குள் முழுவதும் மேலே வருவதுமாய் வெள்ளத்தில் போய்க் கொண்டிருக்கிறான். உடனே லேக்கா, நதியில் குதித்து வேகமாக நீந்திப் போய்த் தன் மகனை எடுத்தாள். தண்ணீரை நிறையக் குடித்துவிட்டதால் குழந்தை அசைவற்றிருந்தது. லேக்கா குழந்தையுடன் திரும்ப நீந்திக் கரையேறவேண்டும். பெருகிவரும் வெள்ளத்தை எதிர்த்து நீந்திக் கரையேறுவது கஷ்டம்தான். மற்றும் ஒரு கையிலே குழந்தை! ஒரு கையாலும் கால்களாலும் அவள் நீந்திக்கொண்டிருக்கிறாள். பனியுறைந்த அந்தத் தண்ணீர் வேறு அவளுடைய சரீரத்தில் முள்மாதிரிக் குத்துகிறது. இந்தச் சமயத்தில் பலமான

கைகள் தன்னுடைய கழுத்தைப் பிடித்து நெருக்குவது தெரிந்தது. இது யார் என்பதை லேக்கா உடனே தெரிந்து கொண்டாள். ஏனென்றால் சில நாட்களாக நிஷாவினுடைய மாறிவரும் மனோநிலையை லேக்கா அறிந்தே இருந்தாள். தன் வழியில் உள்ள இந்த முள்ளை—லேக்காவை ஒழிப்பதற்கு நிஷா தீர்மானித்துவிட்டாள். இப்பொழுதுங்கூட, லேக்கா தன் பராக்கிரமத்தை நிஷாவிடம் காட்டமுடியும். ஆனால் ஒரு கையில் குழந்தை இருக்கிறது. இருந்தாலும், கழுத்துப் பிடிப்பையும் பொருட்படுத்தாமல் நீந்துவதில் வேகத்தைச் செலுத்தும் லேக்காவினுடைய துணிவையும்தைரியத்தையும் நோக்கிய நிஷா தன்னுடைய மார்பகத்தை அவளுடைய சிரசின்மீது வைத்து அழுத்த ஆரம்பித்தாள். இதனால் ஒரு முறை லேக்கா தண்ணீருக்குள்ளும் அமிழ்ந்துவிட்டாள். இப்படியும், அப்படியுமாக லேக்கா அடித்துக்கொண்டதால், குழந்தை அவளுடைய கையிலிருந்து நழுவிவிட்டது. திரும்பவும் குழந்தையைப் பற்றுவதற்கு அவளால் இயலவில்லை. எப்படியோ அவளுடைய கைகள் நிஷாவினுடைய கழுத்தைச் சுற்றி வளைத்துக்கொண்டன. லேக்கா இப்போது மூர்ச்சையாகிவிட்டாள். அந்தச் சரீரம் நிஷாவுக்கு ஒரு சுமையாகிவிட்டது. இந்தச் சுமையோடு நீந்திக் கரையேறுவது நிஷாவினால் முடியாத காரியம். முயற்சித்தாள்; இருந்தும் பயனென்ன? முயற்சி வெற்றிபெறவில்லை. இருவரும் தங்களைக் கூட்டாக வால்கா நதிக்குச் சமர்ப்பித்துக்கொண்டார்கள்.

பரிவாரத்தின் அடுத்த வீரப் பெண் ரோசனா, நிஷா குடும்பத்தின் தலைவியாகிவிட்டாள்.

---

*இது இன்றைக்கு 361 தலைமுறைகளுக்கு முந்திய கதை. அந்தக் காலத்தில் ஹிந்து, ஈரான், ஐரோப்பாவினுடைய சகல ஜாதிகளும் ஒரே குடும்பமாயிருந்தன. மனித வாழ்க்கையின் ஆரம்ப காலம் அது.

# திவா

**தேசம்: வால்கா நதிக்கரை மத்திய பாகம்**

**ஜாதி: ஹிந்தோ—ஸ்லாவியா**

**காலம்: கி. மு. 3500**

"திவா! வெயில் ரொம்ப அதிகம். உன்னுடைய உடம்பைப் பாரேன். எவ்வளவு வியர்வை. வா, இங்கே வா, இந்தப்பாறை மீது உட்காருவோம்."

"நல்லது. சூரஷ்ரவா! இதோ வந்து விட்டேன்" என்று கூறிய திவா சூரஷ்ரவாவோடு ஒரு பெரிய தேவதாருவின் நிழலிலே அகலமான கல்லின்மீது உட்கார்ந்தாள்.

நல்ல வெயில்காலம்; அதுவும் மத்தியான வேளை; தலை வெடிக்கும் இந்த வெயிலில் மிருகங்களின் பின்னே ஓடிவந்த திவாவின் நெற்றியில்கூட வியர்வையைக் காணோமே! சிரமத்தின் அறிகுறியாக அவளுடைய முகத்தில் முத்துப் போன்ற வியர்வைத் துளிகள் தோன்றுமலில்லை. ஆனால் சிரமங்கள் தீர்வதற்கு இங்கு வெகு நேரம் செல்லாது. இது அப்படிப்பட்ட பிரதேசம். அடிவாரத்திலிருந்து உச்சிவரை மலைகள் பசுமையால் அலங்கரித்து நிற்கின்றன. வானளாவி நிற்கும் தேவதாரு மரங்கள் தனது அடர்ந்த கிளைகளாலும் கூர்மை பொருந்தி நெருக்கமாயுள்ள இலைகளாலும் சூரிய கிரணங்கள் பூமியில் படாதவாறு தடுத்து நிற்கின்றன. பூமியின் நடு நடுவே புதர்களும் பலவித செடி கொடிகளும், முளைத்தும் படர்ந்தும் கிடக்கின்றன. அங்கு உட்கார்ந்த சிறிது நேரத்திலே, அந்த மனித ஜோடி—நங்கையும் நம்பியும்—தங்கள் சிரமத்தையே மறந்துவிட்டார்கள். அவர்களைச் சுற்றிச் செடிகள் தோறும் மலர்ந்திருக்கும் வண்ண மலர்களும், அவற்றின் நறுமணமும், அவர்களுடைய மனத்தைக் கவர்ந்துவிட்டன. பார்வையைக் கொஞ்சம் தூரத்தே செலுத்திய யுவன், தன்னுடைய வில், அம்பு முதலிய ஆயுதங்களைக் கல்லின் மீது வைத்துவிட்டு, சல சலவெனச் சப்த

மிட்டு ஓடிக்கொண்டிருக்கும் நதிக்கரையிலே மண்டிக் கிடந்த பல நிற மலர்க் கூட்டங்களை நோக்கி நடந்தான். வித விதமாக வாசனை வீசும் அம்மலர்களை ஒவ்வொன்ருகப் பறிக்கத் தொடங்கினுன். யுவதியும் தனது ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டு, தன்னுடைய நீண்ட அழகிய கூந்தலைத் தடவினுள். அதன் ஈரம் இன்னும் உலரவில்லை. அப்பொழுது மரக்கிளைகளிலும், புதர்களிலுமிருந்து எழும் பறவைகளின் இனிய ஓசை. அவளது இதயத்தைக் கவர்ந்ததோடு மட்டு மில்லை, கிளறியும் விட்டது. அதோ மலர் கொய்துகொண்டு இருக்கும் யுவனின் மீது அவள் பார்வை விழுந்தது. அவனுக் கும் இவளைப் போலவே அழகிய மிருதுவான கூந்தல். ஆனுல் திவா தன்னுடைய கூந்தலோடு அதை ஒப்பிட்டுப் பார்க்க விரும்பவில்லை. ஏன்? அது அவளுக்கு மிக்க அழகாகத் தென் பட்டதுதான் காரணம். அவனுடைய முகத்திற்கு எடுப் பாய் அமைந்துள்ள மீசையின் அழகையும், அதற்கு மேலுள்ள எடுப்பான மூக்கையும், அகன்றநெற்றியின் காந்தி யையும் அவளுடைய கண்கள் அமைதியாகப் பருகிக் கொண்டிருக்கின்றன. அடுத்து அவ்விழிகள் அவனது புஜங் களைத் தொட்டதில் என்ன ஆச்சரியம்! அப்பொழுது அவ ளுக்கு, முந்திய சம்பவம் ஒன்று ஞாபகத்திற்கு வந்தது. முன் ஞெரு நாள், நீண்ட கோரத் தந்தங்களையுடைய முரட்டுப் பன்றியின் விலா எலும்பை, ஒரு கல்லால் செய்த கத்தியின் உதவியால் 'நர நர' வென்று ஒடித்த இந்த உருண்டு திரண்ட புஜங்கள், இன்று பூக்களைக் கொய்யும்போது எவ்வளவு மிருதுவாய்த் தெரிகின்றன! ஆயினும் ஓடி ஓடித் திரளும் சதைகளும், சதைகள் திரளும்போது நரம்புகள் நிமிர்வதும் அந்தப் புஜங்களின் பராக்கிரமத்தை இப்பொழுதும் வெளிக்குத் தெரிவிப்பனபோல் காட்சியளிக்கின்றன. ஓடோடியும் சென்று அந்தப் புஜங்களை முத்தமிடலாமா என்று நினைத்தது அவள் நெஞ்சம். அடுத்து அவனுடைய தொடைகள் திவாவின் கண்களுக்கு இலக்காயின. எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடிக்கும் அந்தச் சதைகள் திரண்டு திரண்டு ஆடுவதைப் பாருங்கள். அவைகள் திவாவிற்கு ஒரு அபூர்வப் பொருளாய்த் தோன்றுவதில் ஆச்சரியமில்லை யல்லவா? சூரஷ்ரவான் பல தடவை அவளுடைய காதலைப் பெறுவதற்கு முனைந்திருக்கிருன்; வாயினுலன்று; சைகை யால். நடனத்தில் தன்னுடைய சாதுர்யத்தையெல்லாம் காட்டி, அவளைச் சந்தோஷப் படுத்திவிடலாமென நினைத் தான். ஆனுல், அப்பொழுதெல்லாம் அவள், அவளுடைய சம்பூரண மேனி, பரிவாரத்தின் இதர வாலிபர்களுக்கே

உரிமைப் பொருளாயிருந்தது. திவாவின் சிவந்த உதடுகளை ஒட்டி முத்தமிடுவது, அந்த யுவர்களின் உதடுகள்தான். நடனமாடும்போது அவர்களுடைய நீண்ட அழகிய கைக ளோடு பின்னிக் கிடப்பது அவளுடைய கைகள்தான். அவ ளுடைய நீல விழிகளோடு படிந்து கிடப்பது அவர்களுடைய கண்களேதான். அவளுடைய மார்பையும் தோளையும் தழுவி ஆலிங்கனம் செய்வது, அந்த வாலிபர்களின் மார்பும் தோள் களுந்தான். அப்பொழுதெல்லாம், பாவம் சூரஷ்ரவனுக்கு, திவாவின் ஒரு முத்தம், ஓர் ஆலிங்கனம், ஏன், அவளுடைய காதல் பார்வையுங் கூடக் கிடைக்கவில்லை. ஆனால் இன்று திவாவின் இதயத்தில்—?

தன்னுடைய உள்ளங்கைகளில் புஷ்பங்களை நிரப்பிப் கொண்ட சூரன், திவாவை நோக்கி வந்தான். திவாவின் மிதக்கும் விழிகள், அவனுடைய திறந்து கிடக்கும் அவயவங் களையும், அவற்றின் பூரணப் பொலிவையும் அப்படியே பருகிக் கொண்டிருக்கிறன. அவனுடைய அகன்ற மார் பும், அதற்கு உள்ளடங்கிய வயிறும் அவளை ஆகர்ஷிப்பதில் ஆச்சரியமில்லையே. ஆனால் இவற்றைப் பார்த்த அவளுடைய இதயத்தில் கொஞ்சம் துக்கமும் உண்டாயிற்று. இதுவரை இந்தக் கட்டழகன்மீது கவனம் செலுத்தாதிருந்து விட் டோமே என்று நினைத்தது அவளுடைய நெஞ்சம். உண்மை யில் குற்றம் அவளுடையதல்ல. சூரனுடைய வாய்க்குப் பூட்டப்பட்டிருந்த அவனுடைய கூச்சமும் நாணமுமே குற்றவாளிகள். தட்டினால்தானே கதவு திறக்கும்.

அருகில் வந்த சூரனைப் பார்த்த திவா, புன்சிரிப்புடன் ''எவ்வளவு அழகும் மணமும் பொருந்தியிருக்கின்றன இந்தப் புஷ்பங்கள்'' என்றாள்.

''மின்னுகின்ற உன்னுடைய கூந்தலில் இவைகளைச் சூட்டினால் இன்னும் அதிக அழகாயிருக்கும்.''

''அப்படியானால், எனக்காகவா இந்தப் புஷ்பங்களை யெல்லாம் கொண்டு வந்திருக்கிறாய்?''

''ஆமாம் திவா! உனக்காகவேதான். உன்னையும் இந்தப் புஷ்பங்களையும் சேர்த்துப் பார்க்கும்போது அப்சர மங்கை களின் ஞாபகம் வந்தது.''

''அப்சர மங்கைகளா? அவர்கள் யார்?''

"அவர்கள் நீரில் வசிப்பவர்கள். சந்தோஷம் ஏற்படும் போது, இதயத்தில் பொங்கி வரும் ஆசையைத் தெரிந்து அவை யாவற்றையும் பூர்த்தி செய்விப்பார்கள். கோபம் வந்துவிட்டாலோ, உயிரையும்விட்டுவைக்கமாட்டார்கள்."

"அப்படியானால் நீ என்னையும் அந்த அப்சரஸ் என்று நினைக்கிறாயா?"

"ஆமாம்; ஆனால் கோபமடைபவளல்ல."

"ஆனால், இதுவரை உன் மீது ஆசை நான் காட்டவே இல்லையே."

இப்போது திவாவின் முகம் சடக்கென்று வேறு பட்டது. அவளுடைய இதயத்திலே பொங்கும் தாபக்கனல் பெருமூச்சாக வெளிப்பட்டது.

"இல்லை! திவா! நீ ஒருபொழுதும் என் மீது கோபம் கொண்டது கிடையாது. நமது குழந்தைப் பருவத்தை நினைத்துப் பார்."

"அப்பொழுது கூட என்ன! நீ நாணிக் கோணிக் கொண்டுதானே இருந்தாய்?"

"அன்றும் நீ என்னைக் கோபிக்கவில்லையே."

"அந்தக் காலத்தில் நானே உன்னை வலிய முத்த மிட்டேன்."

"ஆம்! அந்த முத்தங்கள் எவ்வளவு இனிமையா யிருந்தன."

"ஆனால், எனது இந்த உருண்ட ஸ்தனங்கள் பூரித்துத் திரண்டெழுந்து, பரிவாரத்தின் வாலிபர்களையெல்லாம் எனது நெஞ்சையும் முகத்தையும் நோக்கி ஏங்கச் செய்கின்ற இக்காலத்தில், நான் உன்னை மறந்தே போய்விட்டேன்." அதற்கு மேல் அவளுடைய உதடுகள் அசைய மறுத்து விட்டன. கொஞ்சம் மௌனமாய் நின்றாள்.

"திவா! அது உன்னுடைய குற்றமில்லையே."

"வேறு யாருடைய குற்றம்?"

"என்னுடைய குற்றம்; முழுக்க முழுக்க அது என் னுடைய குற்றம். அந்த வாலிபர்கள் உன்னிடம் வேண்டி நின்றார்கள். நீ அள்ளி அள்ளிக் கொடுத்தாய். அவர்கள்

முத்தம் கேட்டார்கள். நீ முத்தம் கொடுத்தாய். ஆலிங் கனத்துக்கு யாசித்தார்கள்; நீ ஆலிங்கனம் செய்தாய். நம்முடைய கூட்டத்தில், வேட்டையில் விதுரனும், நாட்டி யத்தில் சதுரனும், திடசரீரனும், அழகனுமான எந்தவாலிப னுடைய விருப்பத்தையும் நீ இதுவரை அசட்டை செய்த தில்லையே.''

''ஆனால், நீ எந்த வகையிலும் அவர்களுக்குக் குறைந்த வனல்லவே. உனது ஆசையை நான் எப்பொழுதாவது நிறை வேற்றியிருக்கிறேனா?''

''ஆனால் திவா! எனது ஆசையை நான் வெளிப்படுத்திய தில்லையே.''

''வார்த்தையினாலல்ல. இப்பொழுதென்ன? இளமை யிலே நாம் ஒன்றுகூடி விளையாடுவோமே. அப்பொழுதுங்கூட நீ வாய் திறக்கமாட்டாயே. ஆனால் உன்னை மறந்து விட்ட தாக—வஞ்சித்து விட்டதாக—இன்றுதான் உணர்ந்தேன். சூர்! கொஞ்சம் என்னைப்பார். இந்த திவா (பகல்) அந்த சூரை (சூரியனை) எப்பொழுதாவது மறக்கிறதுண்டோ? இல்லை சூர்! இனி உன்னை நான் மறக்கவே மாட்டேன்.''

''அப்படியானால் நீ பகலும் நான் பகலோனுமாக ஆகி விடுவோமா?''

''ஆம் சூர்! இதோ உன்னுடைய அந்த அழகிய அதரங் களுக்கு விருந்தளிக்கிறேன்.''

சின்னஞ்சிறு குழந்தைகளைப் போல் நிர்வாணமாய் நிற்கும் அந்த அழகிய யௌவன உருவங்களின் செவ்விதழ் கள் அப்படியே ஒன்றிக் கிடந்தன. சிவந்த கன்னங் களோடு கன்னங்கள்; நீல விழிகளோடு விழிகள்.

''நீ என்னுடைய தாயின் மகன். அப்படியிருந்தும் இதுவரை உன்னை மறந்தே விட்டேன்'' திவாவினுடைய நீல விழிகள் நீரைத் துளிர்த்தன. சூரனுடைய சிவந்த கன்னங்கள் அதைத் துடைத்தன.

''திவா! இல்லை; நீ என்னை மறக்கவே இல்லை. நீ பெரிய வளாக ஆக உன்னுடைய குரல், கண்கள், உன்னுடைய ஒவ் வொரு அங்கமும் எனக்கொரு புதிராய்த் தோன்றின. ஆகவே நான் உன்னிடமிருந்து விலகியே நின்றேன்.''

''என் மனத்திலிருந்தில்லை.''

''ஆனால் திவா!...''

''இல்லை, இப்பொழுது சொல்; இனிமேல் என்னிடம் வெட்கப்பட மாட்டாயே?''

''இல்லை, இனி நாணவே மாட்டேன்; இந்தப்புஷ்பங்களை உன் கூந்தலில் சூட்டட்டுமா?''

சிறிய குச்சியால் அவளுடைய கூந்தலை வகிர்ந்து அதில் சிவப்பு, வெள்ளை, நீலம், மஞ்சள் இந்நிறப் புஷ்பங்களை வரிசையாகச் சூட்டினான். எந்தப் புஷ்பத்துக்குப் பக்கத்தில் எதை வைத்தால் அழகு மிளிரும் என்பதைக்கூட அவன் தெரிந்திருந்தான். சூட்டியபின் அந்தக் கூந்தலை அவளுடைய முதுகுப் பக்கம் விரித்துவிட்டான். வெயில் காலத்தில் இந்த வால்கா நதிப் பிரதேச யுவர்களும் யுவதிகளும் அடிக்கடி தண்ணீரில் குதித்து நீந்தி விளையாடுவது வழக்கம். திவாவின் கூந்தல் இன்னும் ஈரமாகவே இருந்தது. அதில் சில ரோமங்களைக் கொண்டு உச்சியில் வட்டமாகக் கட்டி, அதன் மத்தியில் புஷ்பக் குஞ்சத்தைச் சொருகினான். அவளை அப்படியேயிருக்கச் செய்து கொஞ்சம் தள்ளிப் போய் நின்று அவள் முகத்தை நோக்கினான். அவனுக்கு அது பொலிவுற்று விளங்கியது. இன்னும் சிறிது எட்டிப்போய் நின்று பார்த்தான். முகப்பொலிவு மிகுந்தே தோன்றிற்று. ஆனால் புஷ்பங்களின் நறுமணம் அங்கு எட்டவில்லை. ஓடோடியும் வந்து அவள் பக்கத்தில் அமர்ந்தான், அவளுடைய கன்னங்களோடு தன் கன்னங்களை ஒற்றினான். திவா, தன்னுடைய நீல விழிகளை அவனுடைய விழிகளில் புதைத்தாள். அவளுடைய வலக்கரம் அவனுடைய தோளைப்பிணைத்தது. அவன் தன்னுடைய இடக்கரத்தால் அவளைத் தழுவிக் கொண்டான்.

''திவா! இந்தப் புஷ்பங்கள் இப்பொழுதுதான் அழகைப் பெற்றிருக்கின்றன.''

''மலரா அல்லது நானா?''

அவனால்பதில் சொல்ல முடியவில்லை. கொஞ்சம் தயங்கி, ''நான் சிறிது விலகிப்போய் பார்த்தேன். திவா! நீ எவ்வளவு அழகுடன் விளங்கினாய்! இன்னும் கொஞ்சதூரம் சென்று நோக்கினேன். அப்பொழுதும் உன்னுடைய சோபை, உன்னுடைய காந்தி மிகமிகப் பிரகாசமாகவே தோன்றியது.''

''அதோ அந்த வால்கா நதிக்கரையிலிருந்து நோக்கு வாயானல்?''

''முடியாது; அவ்வளவு தூரத்திலிருந்து முடியாது.'' சூரனுடைய முகம் சடக்கென்று மாறிவிட்டது. அவன் விழிகளில் நீர் ததும்பிற்று.

''திவா! நான் தூரப் போகப் போக இந்தப் புஷ்பங்களைத்தான் காணமுடிகிறது. அதன் அழகை அனுபவிக்க முடியவில்லை.''

''அப்படியானல் தூரத்திலிருந்து என்னைப் பார்க்க விரும்புகிருயா? அல்லது பக்கத்திலேயே இருக்க விரும்புகிருயா?''

''பக்கத்திலிருக்கத்தான் திவா! பகலோடு சேர்ந்தால் தானே சூரியன் பிரகாசிக்கிருன்.''

''நீ இன்று என்னோடு நாட்டியம் ஆடுவாயா?''

''நிச்சயமாக ஆடுவேன்.''

''இன்று நீ என்னேடு தங்குவாயா?''

''கட்டாயம் தங்குவேன்.''

''இரவு பூராவும்?''

''நிச்சியமாக.''

''அப்படியானல் நான் இன்று வேறு எந்த வாலிபர்களையும் அண்டவிடமாட்டேன்'' என்று சொல்லியவாறே அவனைத் தழுவிக் கொண்டாள்.

வேட்டையாடிக் களைத்த அநேக யுவ-யுவதிகள் அங்கு வந்தனர். அவர்கள் வரும் காலடிச் சத்தம் கேட்டும் கூட, இவர்களிவரும் அப்படியே, ஆலிங்கனம் செய்த வண்ணமே நின்றனர்.

''திவா! இன்று சூரனைத் தோழனுகத்தேர்ந்தெடுத்திருக்கிருயா?'' என்று கேட்டாள் அவர்களில் ஒரு யுவதி.

திவா:—''ஆம்; இதோ இந்தப் புஷ்பங்களைப் பார், சூரன்தான் இவற்றை எனக்குச் சூட்டினன்.''

யுவ:—''சூர! நீ புஷ்பங்களைக் கொண்டு நன்றாக அலங்கரிக்கிறாயே! என்னுடைய கூந்தலிலும் அலங்கரிக்க மாட்டாயா?''

திவா:—இன்றைக்கு முடியாது; இன்றைக்கு அவன் எனக்குச் சொந்தம்.''

யுவ:—''அப்படியானால் சூரன் நாளை என்னுடையவன்.''

திவா:—''நாளைக்கா? இல்லை; நாளைக்கும் என்னுடையவனே.''

யுவ:—''தினந்தோறும் அவன் உனக்கே சொந்தமா? அது சரியில்லை திவா.''

திவா தன்னுடைய தப்பிதத்தை உணர்ந்து கொண்டாள். 'தினந்தோறுமில்லை. இன்றைக்கும் நாளைக்கும் மட்டுந்தான்'' என்றாள்.

கொஞ்சங் கொஞ்சமாகப் பல யுவர்களும் யுவதிகளும் அங்கு வந்து கூடினர். ஒரு பெரிய கருப்பு நாய் சூரனுடைய கால்களை வந்து நக்கிற்று. அப்பொழுதுதான் அதனுடைய ஆடுகள் அவன் ஞாபகத்துக்கு வந்தன. உடனே திவாவிடம் ஏதோ சொல்லிவிட்டு ஓடிவிட்டான்.

## 2

ஒரு பெரிய விசாலமான குடிசை. அதன் சுவர்கள் மரங்களாலானவை; புல்லால் வேயப்பட்ட கூரை. கல்லால் செய்யப்பட்ட கத்திகள் எவ்வளவுதான் கூர்மையாயிருந்தாலும், இவ்வளவு மரங்களையும் அவற்றைக் கொண்டு வெட்டுவது முடியாத காரியம். ஆனால், மரங்களை வெட்டுவதற்கு அவர்களுக்கு நெருப்பும் உதவி செய்கிறது. அந்தக் கல் கத்திகள், அநேக காரியங்களுக்கு ஆயுதமாக உபயோகமாகிற தென்பதில் சந்தேகமேயில்லை. இருந்தாலும் இவ்வளவு பெரிய குடிசையைக் கட்டியிருக்கிறார்களே? ஆச்சரியம் தான். இந்தக் குடிசையில்தான் நிஷா-ஜனங்கள் (நிஷா என்ற பெயருடைய பழைய காலத்துப் பெண்ணின் பரம்பரை)பூராவும் வசிக்கின்றனர்; யாவரும்—ஒரே குடும்பமாக.

இந்தக் குடும்பத்திற்கு—சமூகத்திற்கு ஒரு பெண் தலைவி. இந்தச் சமூகத்தை ஒரு பஞ்சாயத்து நிர்வகிக்கிறது. அந்தப் பரிவாரத்தினுடைய வாழ்க்கையின் எந்த அம்சமும் இந்தச் சபையின் நிர்வாகத்திற்கு அடங்காததல்ல. வேட்டையாடுதல், நடனம் ஆடுதல், காதல் செய்தல், குடிசை கட்டுதல், தோலினால் பாத்திரங்கள்—கருவிகள் செய்தல், எல்லாக் காரியங்களையும் இந்தச் சபைதான் நடத்துகிறது. இந்தச் சபையில் தாய்க்குத்தான் முதல் ஸ்தானம். நிஷா-ஜனங்களின் இந்தக் குடிசையில், ஆண்களும் பெண்களுமாக 150 பேர் வசிக்கின்றனர். அப்படியானால் இத்தனை பேரும் ஒரே குடும்பமா? இல்லை; இதில்பல குடும்பங்கள் இருக்கின்றனவென்றே சொல்லவேண்டும். ஏனெனின், தாய் உயிருடனிருக்கும் போதே அவளுடைய மக்களில் பலர் ஒரு சிறிய குடும்பம் போலாகி விடுகின்றனர். ஒவ்வொரு குழந்தையும் அவர்கள் தாயின் பெயராலேயே அழைக்கப்படுவதால், பல குடும்பங்களாகவே தோன்றுகிறது. உதாரணமாக திவாவையே எடுத்துக் கொள்வோம். அவளுக்குத் தாயில்லை. அவள் அநேக குழந்தைகளுக்குத் தாயாகிவிட்டாள். அவளுடைய குழந்தைகள் யாவும் திவா புத்திரர்கள்-புத்திரிகள் என்றே அழைக்கப்படுகின்றனர். இப்படியிருந்த போதிலும், இவர்களுக்குச் சொந்தமான உடைமை (மாமிசம்-பழங்கள் முதலியன) எதுவும் கிடையாது. சமூகத்தின் ஒவ்வொருவரும் அவர்கள் ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி சேர்ந்தேதான் தேடவேண்டும். சேர்ந்தேதான் அனுபவிக்க வேண்டும். ஒன்றும் கிடைக்கவில்லையானால் சேர்ந்தேதான் பட்டினி கிடக்கவேண்டும்; சமூகத்திற்கல்லாமல் தனிப்பட்ட யாருக்கும் எந்த உரிமையும் கிடையாது. சமூகத்தின் ஆணையை, சமூகத்தின் பழக்க வழக்கங்களைக் காப்பாற்றுவது, அவர்கள் ஒவ்வொருவருடைய மனதுக்கும் பிடித்ததாகவும், சுலபமானதாகவுமே யிருந்தது.

இங்கு இவர்கள் கட்டியிருக்கிறார்களல்லவா குடிசை, இதுவும் நிரந்தரமானதல்ல. இந்தப் பிரதேசத்தில் மிருகங்கள், காய்கனிகள் கிடைக்கும் வரைதான் இங்கே தங்குவார்கள். அப்பால் வேறொரு பிரதேசத்திற்குப் போய்விடுவார்கள். அடுத்து எந்தப் பிரதேசத்திற்கு இந்த மிருகங்கள் போயிருக்கும் என்பது இவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஏனென்றால் இது இவர்களுக்கு தொன்றுதொட்டு வரும் பழக்கம். இங்கிருந்து இவர்கள் போய்விட்ட பின் இந்த வீட்டின் கூரை விழுந்துவிட்டாலும், மரங்களாலும் கற்களாலும்

கட்டப்பட்டிருக்கும் சுவர்கள் பலவருடங்களுக்கு அப்படியே இருக்கும். இவர்கள் அடுத்த பிரதேசத்திற்குப் போனவுடன், குடிசை கட்டுவதற்கு இவர்களுக்குத் தேவையானது புற்கள் தான். பழைய சுவர்களில் புற்களைப் போட்டு வேய்ந்து குடிசைகளைக் கட்டிக் கொள்கிறார்கள். இந்தக் குடிசையில் ஒரு பக்கம் சாமான்கள் வைத்துக் கொள்வதற்கும், மற்ற பக்கம் சமைத்துக்கொள்வதற்குமாக ஒதுக்கிக் கொள்ளுகிறார்கள். மண்ணைக்கொண்டு பாத்திரங்கள் செய்ய இவர்களுக்குத் தெரியும். மண்டை ஓடுகளையும் பாத்திரங்களாக உபயோகப் படுத்துவார்கள். மாமிசத்தைச் சில சமயம் பச்சையாகத் தின்பார்கள். பச்சை மாமிசத்தை வேகவைத்துத் தின்பார்கள் ஆனால், உலர்ந்த மாமிசத்தைச் சமைத்துச் சாப்பிட அவர்கள் விரும்புவதில்லை. வால்கா நதியின் இந்தப் பிரதேசத்தில் தேன் அதிகமாகக் கிடைக்கிறது. ஆகையால் தேன் குடிக்கும் கரடியும் இங்கு அதிகம். நிஷா-ஜனங்களுக்குத் தேனின் மீது மிகுந்த பிரியம். தேனை ருசிக்காக மட்டுமல்ல, போதைப் பொருளாகவும் கருதி அருந்துவார்கள்.

இவர்களுக்குப் பாடவும் தெரியும். ஆண்களும் பெண்களும் இனிமையாகப் பாடுவார்கள். எல்லா வேலைகளையும் இவர்கள் சேர்ந்து செய்வதோடு, திருத்தமாகவும் அழகாகவும் செய்கிறார்கள். சேர்ந்து கூட்டமாக வேலை செய்யும் பொழுதெல்லாம் சங்கீதம் முக்கிய ஸ்தானம் பெறும். சங்கீதம் வேலையின் சிரமத்தை மறைத்து விடுகிறதல்லவா! ஆனால், இவர்கள் இன்று பாடுவது, வேலை செய்யும்போது எல்லோரும் சேர்ந்து பாடுவார்களே அந்த மாதிரிப் பாட்டுகளாகத் தெரியவில்லை. இங்கே முறைவைத்த மாதிரி ஒரு தடவை பெண்கள் மிருதுவான குரலில் சேர்ந்து பாடுகிறார்கள். அதைத் தொடர்ந்து ஆண்கள் தங்கள் கம்பீரமான குரலில் சேர்ந்து பாடுகிறார்கள். நாமும் சென்று பார்ப்போமே.

குடிசையினுள் ஒரு புறத்தில் சமூகத்தின் ஆண், பெண், குழந்தைகள், விருத்தர்கள் யாவரும் ஒரேயிடத்தில் கூடி இருக்கின்றனர். நடுவே பூமி தோண்டப் பட்டிருக்கிறது. அதில் தேவதாருக்களின் விறகுகளைப் போட்டு நெருப்பு ஜோதி மயமாய் எரிந்துகொண்டிருக்கிறது. பெண்களும் ஆண்களும், மாறி மாறிப் பாடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்ன பாடுகிறார்கள்? எதைப்பற்றிப் பாடுகிறார்கள்? இதோ கேளுங்கள்.

''தீ...யே...வ...ரு...வா...யே!''

அக்கினியையா இவர்கள் பிரார்த்தனை செய்கிறார்கள்? ஆம்; அதோ பாருங்கள் சமூகத் தலைவியும், சபை அங்கத்தினர்களும் நெருப்பில் மாமிசம், காய்கனிகள், தேன் முதலியவற்றைச் சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பௌர்ணமி தினத்தில் இவர்கள் அக்கினி தேவனை நோக்கி ''எங்கள் சமூகத்திற்கு வேட்டையில் மிருகங்களும், காய்கனிகளும், தேனும் நிறையக் கிடைப்பதற்கு அருள் செய்ய வேண்டும். மிருகங்கள் முதலிய எதிரிகளால் எங்கள் சமூகத்திற்கு யாதொரு தீங்கும் நேரிடக் கூடாது'' என்று பிரார்த்தனை செய்கிறார்கள். அவனுக்கு நன்றி செலுத்துவதற்காக, இந்தப் பொருள்களைச் சமர்ப்பிக்கிறார்கள். அதோ பாருங்கள், சமூகத் தலைவி தேனை நெருப்பிலே வார்க்கிறாள். யாவரும் எழுந்து நிற்கின்றனர். பிறந்த கோலத்தோடு, யாவரும் திறந்த மேனியர்களாய், நிர்வாணமாய் நிற்கின்றனர். பனிக் காலமோ கடந்து விட்டது. இந்த வெயில் காலத்தில் மிருகங்களின் தோலைத் தங்கள் உடம்பின் தோலோடு இறுகக் கட்டிக் கொள்வதை வீண் தொந்தரவான காரியமாகக் கருதுகிறார்கள். ஆனால் திறந்து கிடக்கும் இவர்களது உடலின் ஒவ்வோர் அங்கமும் எவ்வளவு அழகாயிருக்கின்றன. இவர்களில் யாருக்காவது தொந்தி தள்ளிக் கொண்டிருக்கிறதா? எங்கேயாவது சதைகள் துருத்துக் கொண்டிருக்கின்றனவா? இல்லவே இல்லை. அழகு என்றால் இதைத்தான் சொல்லவேண்டும்; இதற்குத்தான் ஆரோக்கியம் என்று பெயர். எல்லாருடைய முகங்களும் ஒரே மாதிரி இருக்கிறதல்லவா? ஆம்; இவர்கள் எல்லோரும் நிஷாவின் சந்தானங்கள். தந்தை, சகோதரர், புத்திரர் இவர்களுக்கு ஜனித்த குழந்தைகள் யாவரும் ஆரோக்கியமாகவும் பராக்கிரமசாலிகளாயுமிருக்கின்றனர். இவர்களுடைய இந்த உலகத்தில் ஆரோக்கியமற்றவர்களுக்கும் பலவீனர்களுக்கும் இடம் கிடையாது; இயற்கையோடும் மிருகங்களோடும் போராடி, பலவீனர்கள் வாழ முடியாது.

சமூகத் தலைவி எழுந்து சாமான்கள் வைத்திருக்கும் பக்கம் செல்கிறாள். மற்றவர்கள் ஒவ்வொருவரும், மண்ணால் செய்த பாத்திரங்கள், மண்டை ஓடுகள், மாட்டுக்கொம்புகள் இவற்றை வைத்துக்கொண்டு, மண்ணால் மெழுகப்பட்ட பூமியின்மீது உட்கார்ந்திருக்கின்றனர். கள்ளும் தேனும் நிறைந்த பாத்திரங்களைத் தலைவி கொண்டு வருகிறாள்.

ஆண்கள், பெண்கள், யுவதிகள், யுவர்கள், விருத்தாப்பியர், சிறுர்கள் என்ற வித்தியாசமின்றி, யாவரும் ஒரே இடத்தில் கூட்டமாக உட்கார்ந்து, மதுவருந்தி ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறுர்கள் ஆனுல் இது இவர்களுக்கு ஒரு நியமம் என்பதில்லே. யௌவனப் பருவத்தில் இவற்றைப் பூரணமாக அனுபவித்துவிட்டதாகக் கருதும் எத்தனேயோ விருத்தாப்பியர்கள், இந்த விழாவிலிருந்து ஒதுங்கியிருப்பதைப் பார்க்கிறேம். ஆனுல் தங்களது வாழ்க்கையின் அந்திப் பருவத்திலிருக்கும் அந்த விருத்தர்கள் இந்த அமிருதத்தின் ருசியைச் சிறிதேனும் அனுபவிக்கட்டுமே என்று கருதி, யுவதிகள் சிலர் அவர்களுக்கு ஊட்டிக் கொண்டிருக்கின்றனர்.

திவாவைப் பார்த்தீர்களா? அவளுடைய கரங்கள் இன்று துருபனுடைய தோள்களேப் பின்னிக்கிடக்கின்றன. சூரன் மற்றெருரு யுவதியின் அருகே அமர்ந்திருக்கிறுன்.

போஜனம், குடி, பாட்டு, நடனம், ஒரே களியாட்டம். இது முடிந்ததும் அந்த விசாலமான பாகத்தில் காதலர்கள் நித்திரை செய்வர். அதிகாலேயில் எழுந்துவிடுவர். வேலேயில் ஆண், பெண் என்ற வித்தியாசமே இல்லே. சிலர் வீட்டுக் காரியங்களேப் பார்ப்பார்கள். சிலர் வேட்டையாடச் செல்வார்கள். சிலர் காய் கனிகள் பறிப்பார்கள். இவர்களுடைய குழந்தைகள், தாய்மார்களின் மடியிலே சில, விருட்சங்களின் நிழலிலே சில, நதிக்கரையின் மணல் மேட்டிலே சில இவ்விதமாகக் குதித்து விளேயாடி ஆனந்தித்துக் கொண்டிருக்கிறுர்கள்.

நிஷாவினுடைய ஆட்சிக் காலத்தைப் பார்க்கிலும் இப்பொழுது இங்கே விருத்தர் முதல் யாவரும் சுகமாகவும் சந்தோஷமாகவும் வாழ்கிறுர்கள். இந்தச் சமூகம் இதிலிருக்கும் ஒரு தாயினுடைய தலேமையின் கீழிருந்தாலும், அந்தத் தாயின் ராஜ்யம் இங்கில்லே. இங்கே பல தாய்மார்களின் குடும்பங்கள் சேர்ந்த ஒரு கூட்டுச் சமுகமிருக்கிறது. இங்கே ஒரு தாயின் சர்வாதிகாரமில்லே, ஒரு சபையின் ஆட்சியிருக்கிறது. ஆகவே எந்த நிஷாவுக்கும் தன் மகள் லேக்காவை வால்கா நதியில் மூழ்கடித்துக் கொல்லவேண்டிய அவசியம் இங்கில்லே.

# 3

இப்பொழுது திவா, நான்கு புத்திரர்களுக்கும் ஐந்து புத்திரிகளுக்கும் தாயாகிவிட்டாள். நாற்பத்தைந்து வயதுப் பிராயத்தில் அவள் நிஷா பரிவாரத்தின் தலைவியாக்கப்பட்டாள். கடந்த இருபத்தைந்து வருஷங்களில் நிஷா சமூகத்தின் எண்ணிக்கை மூன்று மடங்கு பெருகிவிட்டது. அதற்காக இவள் அடிக்கடி பகவானுக்கு நன்றி செலுத்துவது வழக்கம். சூரன் தன்னுடைய சந்தோஷத்தைத் தெரிவிப்பதற்கு அறிகுறியாய் இவளுடைய கன்னங்களில் முத்தமிடும் போது, இது அக்னிதேவனின் அன்பு; பகவானின் கருணை என்று இவள் கூறுவாள். அக்னிபகவானின் பக்தர்களுக்கு யாதொரு குறைவுமில்லை. அவர்கள் வாசஸ்தலத்தின் அருகே வால்கா நதி பெருக்கெடுத்தோடுவதைப்போல், தேனும் மதுவும் பெருக்கெடுத்தோடும். அவர்கள் வாழும் வனத்தே நானாவித மிருகங்கள் தானாகவே வந்து மேயும் என்பது இவர்களின் நம்பிக்கை.

நிஷா சமூகத்துக்கு இப்போது ரொம்பக் கஷ்டம். பருவ காலத்திற்குத் தக்கபடி இவர்கள் பிரதேசம் விட்டுப் பிரதேசம் செல்லும்போது அந்தக் காடுகள் இவர்கள் வேட்டையாடுவதற்குப் போதவில்லை; அதுமட்டுமல்ல, இப்போது இவர்கள் குடிசைகள்கூட அதிக எண்ணிக்கையில் கட்ட வேண்டியதிருக்கிறது.

ஜன வளர்ச்சிக்குத் தக்கபடி விசாலமான காடுகளும் வேண்டுமல்லவா? இப்பொழுது அவர்கள் புதிதாகக் குடிசை போட்டுள்ள காட்டிற்கு வடக்குப் பக்கத்தில் உஷா ஜனங்களின் காடு இருக்கிறது. இந்த இரண்டு வனங்களுக்குமிடையில் யாருக்கும் சொந்தமில்லாத பொது இடமிருக்கிறது. நிஷா சமூகத்தார் இந்தப் பொதுக்காட்டையும் கடந்து உஷா சமூகத்தாருடைய வனத்திலும் வேட்டையாடுவதற்குப் பலமுறை சென்றிருக்கிறார்கள். இவ்விதம் அத்துமீறிப் போவது நல்லதன்று; சண்டைக்கு அடிகோலுவதாகும் என்பதும் நிஷா சமூகத்தாருக்குத் தெரியாமலில்லை. ஆயினும், இவர்களுக்கு வேறுவழியில்லை. ஒருநாள் திவா, சமூகக் குழுவில், ''பகவானுடைய கிருபையால் நம்முடைய சமூகம்

ஜன எண்ணிக்கையில் பெருகிவிட்டது. இவர்களுடைய போஷிப்பிற்கு இந்த வனாந்தரங்களைத் தவிர்த்து வேறு மார்க்கமில்லை. நிஷா சமூகத்தாராகிய நமக்கு வால்கா நதியிலுள்ள மீன்கள் எப்படியோ அப்படியேதான் இந்த வனங்களிலுள்ள விலங்குகளும். ஆகையால், நாம் இந்த வனங்களிலுள்ள கரடிகள், மான்கள், பசுக்கள், குதிரைகள் முதலிய விலங்குகளை வேட்டையாடாமல் முடியாது'' என்று எடுத்துச் சொன்னாள்.

நிஷா-சமூகத்தார் செய்யும் இந்தக் காரியம் அநியாயம் என்று உஷா-சமூகத்தாருக்குப்பட்டது. இவர்கள் குழு நிஷா-சமூகக் குழுவிடம் பலமுறை இது விஷயமாய்ப் பேசியது: ''நாம் எத்தனையோ மழைக் காலத்தை இந்தக் காடுகளில் கழித்திருக்கிறோம். எந்தக் காலத்திலும் நம் இரு சமூகங்களுக்கிடையில் யுத்தம் நடந்ததே கிடையாது'' என்று விபரமாக உஷா-சமூகக்குழு, நிஷா-சமூகக்குழுவிடம் எடுத்துச் சொல்லியது. இது நியாயமான விஷயம்தான். ஆனால் பட்டினியால் சாகும்போது நிஷா-சமூகக்குழு நியாயத்தைக் கடைபிடிக்க முடியுமா? நியாயமும் சட்டமும் பலனற்றுப் போகும்போது, காட்டுமிராண்டிச் சட்டத்தைக் (மிருகத்தனத்தை) கடைப்பிடிப்பதைத் தவிர வேறு வழியில்லை. இரு சமூகமும் உள்ளுக்குள் இதற்குத் தயார் செய்ய ஆரம்பித்தன; இந்தச் சமூகத்தின் ரகசியம் அந்தச் சமூகத்திற்கோ, அந்தச் சமூகத்தின் ரகசியம் இந்தச் சமூகத்திற்கோ தெரிய வசதியில்லை. ஏனெனில், கொள்ளல்—கொடுத்தல், சாவு, வாழ்வு யாவும் ஒரு பரிவாரத்திற்கு வெளியே நடப்பதில்லை.

ஒருநாள் நிஷா-சமூகத்தின் ஆட்கள் சிலர், உஷா—சமூகத்தின் வனத்திற்கு வேட்டையாடச் சென்றனர். மறைந்திருந்த உஷா—சமூகத்தார் உடனே தாக்க ஆரம்பித்தார்கள்; இவர்களும் எதிர்த்தனர். ஆயினும் எண்ணிக்கையில் இவர்கள் குறைவு; எதிர்பார்க்கவும் இல்லை. ஆகையால் நிஷா—சமூக ஆட்கள் இறந்தவர்களை அங்கேயே போட்டுவிட்டு, காயம் பட்டவர்களை மாத்திரம் தூக்கிக்கொண்டு ஓட்டமெடுத்தனர். இது நிஷா-சமூகத்தின் தலைவிக்கு எட்டியது. குழு கூடியது. சர்ச்சை நடந்தது. அப்பால் சமூகம் பூராவும்—ஆண் பெண் அடங்கலும் சேர்ந்த சபை கூடியது. அதற்குமுன் எல்லா விஷயங்களும் தெரிவிக்கப்பட்டன. இறந்தவர்களின் பெயர்கள் சொல்லப்பட்டன. காயம்

பட்டவர்களைத் தூக்கிக்கொண்டு வந்து காண்பித்தார்கள். விருத்தர் முதல், யுவ—யுவதிகள் வரை, ''கொலைக்குக் கொலை; பழிக்குப் பழி''என்று சமூகத்தை தூண்ட ஆரம்பித் தனர்; மகாசபையும், கொலைக்குப் பதில் கொலை செய் வதற்கு பழிக்குப் பழி வாங்குவதற்கு...அனுமதி கொடுத்து விட்டது.

நடனத்துக்கு உபயோகமாகும் வாத்தியங்கள் யுத்த வாத்தியங்களாயின. குழந்தைகளையும் விருத்தர்களையும் பாதுகாப்பதற்காகச் சில நபர்களை மட்டும் வைத்துவிட்டு, மற்ற யாவரும் யுத்த களத்திற்குக் கிளம்பிவிட்டனர். அவர் களுடைய மார்புகளிலே கனத்த தோலால் செய்யப்பட்ட கவசங்கள்; கைகளிலே கல், மரம், தோல் இவைகளால் செய்யப்பட்ட வில், அம்பு, ஈட்டி முதலிய ஆயுதங்கள். முன்னே வாத்தியம் முழங்க பின்னே இந்தப் படை செல் கிறது. சமூகத் தாய் திவா தலைமை தாங்கி முன்னே நடக் கிருள். இவர்களுடைய வாத்தியங்களின் ஓசையும், இவர் கள் போடும் கோலாகல இரைச்சலும், அந்த வனத்தையே அதிரும்படி செய்கின்றன. அவ்வனத்தில் வாழும் பட்சிகளும் மிருகங்களும் பயத்தால் இங்குமங்கும் ஓட்டமெடுத்தன!

இப்போது இவர்கள் தங்கள் வனத்தைக் கடந்து பொது இடத்திற்குப் போய்விட்டார்கள். இவர்களுடைய வனம் அவர்களுடைய வனம்,பொது இடம் இவைகளின் எல்லையை வரையறுக்கும் எந்த அடையாளமும் இல்லையாளுலும்கூட வேட்டையாடித் திரியும் இந்த இரு சமூகத்தையுஞ் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்களின் எல்லை நன்ருகத் தெரி யும். பொய் சொல்லவும் மாட்டார்கள். ஏனெனில், அந்தக் கால மனித சமுதாயத்திற்கு பொய்யென்பது தெரியாத பொருள். அதைக் கற்றுக்கொள்ளும் திறமையையும் அந்தச் சமுதாயம் பெற்றிருக்கவில்லை. வேட்டையாடிக் கொண் டிருந்த உஷா சமூக ஆட்கள் தகவலை சமூகத்திற்குத்தெரிவித் தனர். உடனே எல்லோரும் ஆயுதமேந்தி யுத்தகளத்திற்கு வந்துவிட்டனர். உண்மையில் உஷா, சமூகத்தினர் தங்க ளுக்கு நியாயம் கிடைக்கவேண்டுமென்றுதான் விரும்பினர். கேவலம் தங்கள் இடத்தை மட்டும் காத்துக்கொள்ளவே விரும்பினர். ஆளுல் அவர்களின் எதிரிகள் இந்த நியாயத் திற்குத் தயாராயில்லை. உஷா—சமூகத்தாருடைய வனத்தில் இரு சமூகத்தாருக்கும் யுத்தம் மூண்டது. கல்லால் செய்யப் பட்ட கூர்மையான அம்புகளை மழை போன்று வருஷிக்கிருர் கள். கல்லாலும், மரத்தாலும், எலும்பாலும், கொம்புகளா

லும் செய்யப்பட்ட விதவிதமான ஆயுதங்களை உபயோகித்துப் பயங்கரமாகச் சண்டை போடுகிறார்கள். ஆயுதங்களை இழந்து விட்டவர்கள், தங்கட் கைகளையும் கால்களையும் பற்களையும் உபயோகித்துச் சண்டை செய்கிறார்கள்.

நிஷா-சமூகத்தாரின் எண்ணிக்கை உஷா-சமூகத்தாரின் எண்ணிக்கையைப்போல் இரண்டு மடங்கு இருந்தது. ஆகையால் அவர்களை உஷா-சமூகத்தார் வெற்றி காண்பதென்பது முடியாத காரியம். ஆயினும் யுத்தம் செய்துதானேயாக வேண்டும்? ஒரு சிறு குழந்தையாவது உயிரோடிருக்கும்வரை யுத்தம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. உஷா-சமூகத்தின் மூன்றில் இரண்டு பகுதியினர் யுத்தகளத்திலேயே மடிந்துவிட்டனர். பாக்கி ஒரு பகுதியினரும் வால்கா நதிக் கரையில் சண்டை செய்துகொண்டே உயிர் விட்டனர். குடிசையில் கிழவர்களையும் குழந்தைகளையும் காத்து நின்றவர்கள் அவர்களையும் கூட்டிக்கொண்டு குடிசையை விட்டு ஓட நினைத்தனர். ஆனால், காலம் கடந்துவிட்டது. யுத்த வெறிபிடித்த நிஷா சமூகத்தினர் அவர்களை விரட்டிப் பிடித்துக் கொன்று குவித்தனர். பால் மணம் மாறாப் பாலர்களைக் கல்லில் மோதிக் கொன்றார்கள். விருத்தர்களின் கழுத்தில் கல்லைக் கட்டி வால்கா நதிப் பிரவாகத்தில் அமிழ்த்திக் கொன்றார்கள். அவர்களின் குடிசைகளிலுள்ள சாமான்களை அப்புறப்படுத்திவிட்டுப் பாக்கியுள்ள குழந்தைகள், பெண்கள் யாவரையும் குடிசைக்குள் அடைத்து நெருப்பை வைத்தார்கள். ஜோதிமயமாய் எரியும் நெருப்பின் நடுவே முனகும் அவர்களின் தீனக்குரலைக் கேட்டு இவர்கள் ஆர்ப்பரித்தார்கள். பிறகு அக்னி பகவானுக்குத் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள். எதிரிகள் சேகரித்து வைத்திருந்த காய்கனிகள், மாமிசம், மது இவற்றால் அக்னி தேவனையும் தங்களையும் திருப்தி செய்து கொண்டனர். தலைவி திவா ரொம்ப மகிழ்ச்சியோடிருக்கிறாள். இன்றைய யுத்தத்திலே அவள், தாய்மாரின் மார்போடு அணைக்கப் பட்டிருந்த மூன்று குழந்தைகளைப் பறித்துக் கல்லிலே மோதிக்கொன்றாள். அந்த குழந்தைகளின் தலைகள் கல்லிலே அடிபட்டு நொறுங்கும் சப்தத்தைக் கேட்டு கெக்கலி கொட்டிச் சிரித்தாள். யுத்தம் முடிந்துவிட்டது. எதிரிகளின் சூறையாடிய பொருள்களைத் தின்று முடித்ததும் நாட்டியம் ஆரம்பமாயிற்று. அந்த நெருப்பின் ஒளியிலே நடனம் ஆடினர். திவா இன்று தனது இளைய புத்திரனோடு நடனம் ஆடுகிறாள். நிர்வாணமாய் ஆடும் அந்த இரண்டு உருவங்

களும் நடனமாடிக் கொண்டிருக்கும்போதே ஒருவரை யொருவர் முத்தமிட்டுக் கொள்கின்றனர்; ஆலிங்கனம்செய் கின்றனர். இன்று திவாவின் காதலுக்கு அவள் மகன் வசு இலக்காயிருக்கிருன் என்பதை எல்லோரும் உணர்ந்து கொண்டனர். வெற்றி வெறியில் திளைத்திருக்கும் தாயின் காதலை, மகனும் அலட்சியம் செய்ய விரும்பவில்லை.

நிஷா-சமூகத்திற்கு, இப்போது வேட்டையாடுவதற்குக் காடு நான்கு மடங்காகிவிட்டது. மழைக்காலத்தைப்பற்றி இனி அவர்களுக்குக் கவலை கிடையாது. ஆனல் ஒரு கவலை மாத்திரம் அவர்களை இப்போது தொத்திக்கொண்டது. இறந்துபோன உஷா ஜனங்களின் ஆவிகள் உயிரோடிருக்கும் போது செய்ய முடியாத காரியங்களையெல்லாம் இப்போது செய்ய முயல்கின்றன. எரிந்துபோன அவர்களது குடிசைகள் இப்போது பேய் வாழும் இடமாக மாறிவிட்டன. அந்த வழியாகத் தனிமையில் நடப்பது நிஷா-சமூகத்தாருக்கு முடியாத காரியம். வேட்டையாடும்போது எத்தனையோ முறை ஜோதிமயமாக எரியும் நெருப்பையும், அதன்முன்னே நிர்வாணமாக அநேகர் நடனமாடுவதையும் பார்த்ததாகப் புகார் சொல்லி யிருக்கிருர்கள். இந்த வனத்தைவிட்டு அடுத்தப் பிரதேசத்திற்குப் போகும்போது அந்த மயான பூமி வழியாகவேதான் செல்லவேண்டும். அப்போது கூட்ட மாகவும், பகலிலும் நடந்து கடக்கின்றனர். திவாவும் கூட பலமுறை, அநேக இரவுகளில், பால் மணம் மாருத குழந் தைகள் பூமியிலிருந்து எழும்பித் தன் கைகளைப்பின்னு வதாகக் கனவு கண்டு அலறி அலறி விழித்திருக்கிருள்.

## 4

திவா இப்பொழுது பெரிய கிழவியாகி விட்டாள். வயதும் எழுபதுக்கு மேல் ஆகிவிட்டது. நிஷா—சமூகத்துக்கு இப்போது அவள் தலைவி இல்லை. ஆயினும் எல்லோருடைய மதிப்புக்கும் பாத்திரமான கிழவியாகியிருக்கிருள். அவள் தலைமை வகித்திருந்த அந்த 20 வருஷங்களில், வளர்ந்து வரும் இந்தச்சமூகத்தின் க்ஷேமத்திற்காக வெகு பிரயாசைப் பட்டிருக்கிருள். பல யுத்தங்களை நடத்தி இருக்கிருள். இந்தச் சண்டைகளில் சிலரை இழந்தது வாஸ்தவம். ஆனல் ஒவ்வொரு யுத்தத்தின் முடிவிலும் வெற்றியையே கண்டிருக்

கிருள்—இப்பொழுது இந்தச் சமூகத்துக்குத் தேவைக்குப் போதுமான பெரிய வளமிருக்கிறது. இவைகள் யாவும் பகவானுடைய கிருபையால் கிடைத்ததாகவே நினைப்பாள். இருந்தாலும், கல்லிலே மோதிக் கொள்ளுளே, அந்தக் குழந்தைகள்—பால் மணமே மாருத பாலகர்கள்—அடிக்கடி அவளுடைய நித்திரையைப்பங்கப் படுத்தி விடுகின்றனர்.

பனிக்காலம்; மாதக் கணக்காகத் தொடர்ந்து பெய்யும் பனியினுல், வால்காநதி உறைந்து ஒரே பனித் தகடாய்க் காட்சியளிக்கிறது. அந்த வனந்திரத்திலுள்ள மரங்கள் இலைகளையும் கூட இழந்து நிற்கின்றன. புல் பூண்டுகள் புதர்கள் யாவும் பனி மயம். நிஷா-சமூகத்திலே ஜனத் தொகை முன்னைவிடப் பெருகிவிட்டது. ஆகவே அவர் களுக்கு ஆகாரப் பொருள்களும் அதிக அளவில் தேவை யல்லவா? ஆனுல் ஜனங்களின் பெருக்கத்துக்குத் தக்கபடி உழைக்கும் கைகளும் அதிகரிக்கின்றன. கிடைக்கும்பொழுது உணவை நிறையச் சேகரிப்பதில் சிரமம் எதுவும் இல்லை. குளிர் காலத்தில் வேட்டை நாய்களின் உதவியால், எப்படி யாவது வேட்டை மிருகங்கள் கிடைத்து விடுகின்றன. பனி ஆரம்பித்தவுடனே இந்த வனத்திலுள்ள விலங்குகள்-அடுத்த பிரதேசத்திற்கு—பனியில்லாத பிரதேசத்திற்குப் போய்விடுவது வழக்கம். ஆனுல், நிஷா—சமூகத்தாருக்கு இப்போது ஒரு புது முறை தென்பட்டது. இந்தவனத்தி லுள்ள புல் பூண்டுகளின் விதைகள் பூமியில் உதிர்ந்து மறுபடியும் முளைப்பதைப் பார்த்த இவர்கள், விதைகளைக் கூட்டிச் சேர்த்து அவற்றை ஈரமான நிலங்களிலே தூவி விட்டனர். அவை முளைத்துப் பசுமையாக வளர்ந்திருந்தது. பசுமையைக் கண்ட மிருகங்கள் இன்னும் கொஞ்ச நாள் அதிகமாக இந்த வனத்தில் தாமதித்தன.

ஒரு நாள் துருவனுடைய நாய் ஒரு முயலைப் பின் தொடர்ந்தது. துருவனும் தன்னுடைய நாய்க்குப் பின் வேகமாக ஓடினுன். வியர்வை வடிய ஆரம்பித்தது. தன் னுடைய தோல்கவசத்தை அவிழ்த்துத் தோளில் போட்டுக் கொண்டு ஓடினுன். எவ்வளவுதான் வேகமாக ஓடியும் அவனுல் அவனுடைய நாயைத் தொடர முடியவில்லை. பனி படர்ந்திருப்பதால் நாயினுடைய அடிச்சுவடு பூமியில் தெரி கிறது. ஆனுல் நாயைக் காணவில்லை. வியர்த்துக் களைத்து விழுந்து கிடந்த ஒரு மரத்தின் மீது சிறிதே உட்கார்ந்தான். வியர்வைகூடப் பூரணமாக அடங்கவில்லை. அதற்குள் அவ னுடைய நாய் குரைப்பது கேட்டது. வேகமாக அந்தச்

சப்தம் வந்த திசையை நோக்கி ஓடினுன். நாய் நின்ற இடத்தை அவன் நெருங்கியதும் ஓர் அழகிய யுவதி தேவ தாரு மரத்தில் சாய்ந்துகொண்டு நிற்பதைக் கண்டான். அவளுடைய மார்பகத்தை வெண்மையான தோல் கவசம் அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவளுடைய வெள்ளைத் தோல் தொப்பிக்குள்ளிருந்து பொன்னிறமான கேசங்கள் வெளிவந்து பிடரியில் புரண்டன. அவளுடைய காலடியிலே அந்த முயல் குட்டி இறந்து கிடந்தது. துருவனைப் பார்த்த அவனுடைய நாய், அவனுக்குச் சமீபத்தில் வந்து உரக்க உரக்கக் குரைக்க ஆரம்பித்தது. ஆனுல் துருவனுடைய கண்கள், அந்த அழகியின் சமூகத்தைவிட்டு அகலவில்லை. அவளும் புன்முறுவலோடு "நண்பா! இது உன்னுடைய நாயா?"

"ஆம்; இது என்னுடைய நாய்தான். ஆனுல் உன்னை நான் இதுவரை பார்த்ததே இல்லையே?"

"நான் குரு சமூகத்தைச் சேர்ந்தவள். இந்த வனமும் குரு—சமூகத்துடையதுதான்."

"குரு சமூகத்தாரின் வனமா?" அவனுடைய இதயத்தில் எண்ணங்கள் மோத ஆரம்பித்தன. குரு-ஜனங்கள் நிஷா-ஜனங்களுக்குப் பக்கத்து வனவாசிகள். பல வருடங்களாக இந்த இரு சமூகத்துக்குமிடையில் சுமுகமான உறவு கிடையாது; பலமுறை இரு சமூகத்திற்கும் யுத்தங்கூட நடந்திருக்கிறது. ஆனுல் குரு ஜனங்கள் நிஷா ஜனங்களைக் காட்டிலும் கொஞ்சம் புத்திசாலிகள். ஆகவே யுத்தத்தில் வெற்றியைக் காண முடியாதபோது, அவர்கள் அடிக்கடி தங்கள் பாதங்களைத்திறமையாக உபயோகித்திருக்கிருர்கள். கைகள் வெற்றியை அளிக்க முடியாதபோது கால்களின் உதவியால் உயிர்களைக் காப்பாற்றிக்கொள்வது புத்திசாலித் தனந்தானே? நிஷா-சமூகத்தார் குரு-சமூகத்தை அழித்து விடவேண்டுமென்று நிச்சயம் செய்து கொண்டிருந்தாலும் இதுவரை அவர்களுடைய எண்ணத்தைக் காரியத்தில் ஈடேற்ற முடியவில்லை. சிந்தனையில் மூழ்கி அவன் மௌனமாய் நிற்பதைப் பார்த்து யுவதி பேசத் தொடங்கினுள்:...

"இந்த முயலை உன்னுடைய நாய்தான் கொன்றது. ஆகையால் இதை நீ எடுத்துக்கொள்."

"இருந்தாலும் இதுகுரு-சமூகத்தாரின் வனத்திலல்லவா இறந்து கிடக்கிறது!"

"ஆம், அதனுலென்ன? நாயின் எஜமானனுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டேதான் நான் நின்றேன்."

"எதிர்பார்த்துக்கொண்டா?"

"ஆம். வந்தவுடன் இந்த முயலைக் கொடுத்துவிட வேண்டும் என்பதற்காகவே."

குரு என்ற பெயரைக் காதில் கேட்டவுடனேயே துருவனுடைய மனத்தில் துவேஷ உணர்ச்சிதான் எழுந்தது. ஆனுல் அழகியினுடைய அன்பு நிறைந்த பேச்சு துவேஷ உணர்ச்சியைத் துரத்திவிட்டது. அவன் நன்றியறிதலோடு,

"இந்த முயல் என்ன; என்னுடைய நாயையுமல்லவா நீ எனக்குத் திருப்பிக் கொடுத்திருக்கிருய். இது எனக்கு ரொம்பப் பிரியமுள்ள நாய்."

"ஆம் நல்ல அழகான நாய்."

"எத்தனை பேர் கூட்டத்திலிருந்தாலும் சரி, எனது குரலைக் கேட்டதும் எனக்குச் சமீபம் ஓடி வந்துவிடும்!"

"இதனுடைய பெயர்?"

"சாம்பு."

"உன் பெயர் நண்ப?"

"துருவராஸ்வ, ரோசனு—சூனு!"

"ரோசனு-சூனு! என்னுடைய தாயின் பெயரும் ரோசனுதான். அவசரமில்லையானுல், இங்கே கொஞ்சம் உட்காரேன்."

துருவன் உடனே தன்னுடைய கவசம், ஆயுதங்கள் இவைகளைப் பூமியில் வைத்துவிட்டு அவளுடைய பாதங்களின் அருகே உட்கார்ந்தான்.

"உன்னுடைய தாய் இருக்கிருளல்லவா?"

"இல்லை. நிஷா ஜனங்களுடன் நடைபெற்ற யுத்தத்தில் அவள் கொல்லப்பட்டு விட்டாள். அவள் என்மீது ரொம்பப் பிரியமாயிருந்தாள்." இந்த வார்த்தைகள் அழகியினுடைய வாயிலிருந்து வரும்பொழுதே, அவளுடைய கண்களும் நீரைத் தாரை தாரையாக உகுக்க ஆரம்பித்தன. துருவ

னுடைய இதயமும் உருகிவிட்டது. அந்தக் கண்ணீரைத் தன் கைகளால் துடைத்துக் கொண்டே, ''யுத்தம் ரொம்பக் கொடியது'' என்ருன்.

''ஆம்; ஒரு விதத்திலா? நமது அன்புக்கு உரியவர்கள் எத்தனை பேரை இழக்க வேண்டியதிருக்கிறது?''

''இந்த யுத்தத்திற்கு முடிவே இல்லையா, இனிமேலும் தொடர்ந்து கொண்டேதானிருக்குமா?''

''துருவ! அது எப்படி நிற்கும்? ஒரு சமூகம் இன்னொரு சமூகத்தை வேரோடு அழிக்காதவரை யுத்தம் நிற்குமா? நிஷா-சமூகத்தார் திரும்பவும் எங்கள்மீது யுத்தம் ஆரம் பிக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். துருவ! உன்னைப் போலொத்த வாலிபர்கள் தானே அங்குமிருப்பார்கள்?''

''உன்னைப் போலொத்த யுவதிகள் தானே குரு-சமூகத் திலுமிருக்கின்ருர்கள்?''

''இப்படியிருந்தும் நாம் ஒருவரையொருவர் வெட்டிக் கொள்ளத் துணிகிருேம். இந்த நினைவுதான் இவர்களுக்கு எப்படி உண்டாகிறது?''

இன்னும் மூன்று நாட்களில், குரு-குலத்தின்மீது தனது நிஷா சமூகத்தார் யுத்தம் தொடுக்க நிச்சயித்திருப்பது துருவனுக்கு நினைவு வந்தது. இது ஞாபகத்திற்கு வந்த வுடன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அந்த யுவதி கூறினள்:-

''ஆனல் இப்போது நாங்கள் யுத்தம் செய்யமாட் டோம்.''

''யுத்தம் செய்யமாட்டீர்களா? ஏன்? குரு சமூகத்தார் சண்டை செய்ய மாட்டார்களா?''

''எங்கள் சமூகத்தாரின் எண்ணிக்கை ரொம்பக் குறைந்துவிட்டது. வெற்றியடைவோமென்ற நம்பிக்கை எங்களுக்குக் கிடையாது.''

''அப்படியானல் என்ன செய்வீர்கள்?''

''இந்த வால்காநதிப் பிரதேசத்தை விட்டு விட்டுப் போய் விடுவோம். துருவ! இந்த நதி நமக்கு எவ்வளவு பிரியமானது! நான் இனிமேல் இதைப் பார்க்க முடியாது.

இதனாலேயே இன்று நான் ஆசை தீரப் பார்த்துக்கொண்டே யிருக்கிறேன்.''

''இனிமேல் இந்த நதியை நீ பார்க்கவே முடியாதா?''

''முடியாது. எப்படி முடியும்? இதில் நீந்தவும் முடியாது. இதில் நீந்துவது எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்!''

ஒரு பெருமூச்சு விட்டாள். துக்கத்தால் அவளுடைய தொண்டை தளுதளுத்தது. துருவனுடைய முகமும் துக்கத்தால் சுருங்கியது. கோபத்தால் அவனுடைய உதடுகள் துடிக்க ஆரம்பித்தன. ''கொடுமை; பெரிய அநீதி இந்த யுத்தம்'' என்றது அவன் வாய்.

''ஆனால் துருவ! இது சமூக தர்மம்.''

''சமூக தர்மமா? இல்லை; இது மிருக தர்மம்.''

---

*இன்றைக்கு இருநூற்று இருபத்தைந்து தலைமுறைகளுக்கு முந்திய கதை இது. அந்தக் காலத்தில் இந்தியா, ஈரான், வெள்ளை ருஷ்யா முதலிய பிரதேசங்களைச் சேர்ந்த ஒரு கலப்பு ஜாதியார் இருந்தனர். இவர்களை இந்தோ-ஸ்லாவியர் அல்லது ஷந்த் வம்சத்தினர் என்று சொல்வார்கள்.

# அமிர்தாஸ்வன்

**தேசம் : மத்திய ஆசியா (வடகுரு பூமி)**

**ஜாதி : ஹிந்தோ—ஈரானியர்**

**காலம் : கி. மு. 3000**

பசும்புற்கள் படர்ந்த மலைகளும், ஆங்காங்கு பளிங்கு போன்ற நீர் பெருகி ஓடும் சிற்றாறுகளும், எவ்வளவு அழகாயிருக்கின்றன! ஆனால் காஷ்மீர் பிரதேசத்தைப் பார்த்திருப்பவர்கள், இந்த இயற்கையின் அழகை மிகமிக அனுபவிக்க முடியும். மழைக் காலம் முடிந்து வசந்த காலம் வந்து விட்டது. இயற்கையிலேயே பொலிவுற்று விளங்குகிறது அந்த மலைப்பிரதேசம். இதோடு வசந்தகாலம் வந்து அதைப் பூமியின் ஒரு சுவர்க்கமாக்கி விட்டது. மழைக் காலத்தைக் குகைகளிலும், புதர்களிலும் கழித்துக் கொண்டிருந்த விலங்கினங்கள் இப்போது பசுமை படர்ந்திருக்கும் பூதலத்தில் மேயவும், இரை தேடவும் ஆரம்பித்துவிட்டன. குதிரைகளின் ரோமங்களால் வேயப்பட்டிருக்கும் கூடாரங்களிலிருந்து, புகை வெளிவந்து கொண்டிருக்கிறது. இந்த நேரத்தில் தன்னுடைய கூடாரத்திலிருந்து வெளிவந்த ஒரு யுவதி, தோளிலே தண்ணீர்ப் பையைத் தொங்கவிட்டுக் கொண்டு, கற்பாறைகளின்மீது மோதி முழங்கிச் செல்லும் ஆற்றை நோக்கி நடக்கிறாள். இன்னும் அவள் நதிக்கரையை நெருங்கவில்லை. இதற்குள் ஒரு வாலிபன் அவள் எதிரே வந்து நின்றான். யுவதியைப் போலவே அவனும் ஒரு மெல்லிய வெள்ளைக் கம்பளத்தைக் கழுத்தில் முடிந்து தொங்கவிட்டு இருந்தான். அது அவனுடைய வலது கையையும் முழங்கால்களுக்குக் கீழ்பாகத்யையும் தவிர்த்து, சரீரத்தின் எல்லாப் பகுதியையும் மூடி இருந்தது. அவனுடைய மீசையும், வெண்மையும் மஞ்சள் நிறமும் கலந்து பிரகாசிக்கும் தலைரோமங்களும், அவனுடைய அழகையும் சரீரக் கட்டையும் மேலும் எடுத்துக் காட்டுவனபோல் தோன்றின. வாலிபனைப் பார்த்த மங்கை, தன் நடையை நிறுத்திக்

கொண்டாள். புன்முறுவல் பூத்த அந்த வாலிபன் "சோமா! தண்ணீர் கொண்டுவரச் செல்கிறுயாக்கும்! இவ்வளவு அதிகாலையிலேயா?"

"ஆம்; திருஜ்ராஸ்வ! ஏது இந்தப் பக்கம்? மறதியாக வந்து விட்டாயோ?"

"இல்லை; நான் எப்படி மறக்க முடியும்? உன்னைத் தேடியே வந்தேன்."

"என்னைத் தேடியா? இத்தனை நாட்களுக்குப் பிறகா?"

"இன்றைக்கு உன்னுடைய ஞாபகம் உதித்தது; உடனே வந்துவிட்டேன்!"

"இத்தனை நாட்களுக்குப் பிறகாவது என் ஞாபகம் உனக்கு வந்ததே, அந்த வரை நல்லதுதான். அமிர்தாஸ்வன் போஜனத்துக்காக வீட்டில் காத்துக்கொண்டிருக்கிருன். இதோ நான் தண்ணீர் எடுத்துக் கொள்கிறேன். இருவரும் போவோம்!"

வார்த்தையாடிக் கொண்டே இருவரும் நதிக்கரை சென்றனர். சோமா பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு முன்னே செல்ல, திருஜ்ராஸ்வன் பின்னே நடக்கிருன்.

"சோமா! அமிர்தாஸ்வன் பெரியவனுகி விட்டானு?"

"ஆம்! நீதான் பல வருஷங்களாக இந்தப் பக்கம் எட்டிக் கூடப் பார்க்கவில்லையே?"

"பல வருஷங்களா? ஏது, நாலே நாலு வருஷங்கள்?"

"இப்பொழுது அவனுக்குப் பன்னிரண்டு வயதாகிறது. உண்மையைச் சொல்லுகிறேன்; அவனைப் பார்க்கும் பொழுது எல்லாம் உன் ஞாபகமே எனக்கு வரும். உன் மாதிரியே இருக்கிருன்."

"இருக்கலாம். அந்தக் காலத்தில், உன்னுடைய தயவுக்குக் காத்திருந்தவர்களில் நானும் ஒருவனல்லவா? இதுவரை அமிர்தாஸ்வன் எங்கே இருந்தான்?"

"வால்ஹீகாவிலே அவனுடைய தாத்தாவிடம்." இருவரும் வீட்டை அடைந்தனர். உள்ளே சென்று தண்ணீர்ப்

பாத்திரத்தை இறக்கி வைத்த சோமா, தன்னுடையநாயகன் கிரிச்ராஸ்வனிடம் திருஜ்ராஸ்வன் வந்திருக்கும் தகவலைத் தெரிவித்தாள். உடனே இருவரும் மகன் பின்தொடர, கூடாரத்துக்கு வெளியே வந்தார்கள். திருஜ்ராஸ்வன் கை கூப்பி வணங்கி, ''நண்ப கிரிச்ராஸ்வ! எல்லோரும் சௌக்கியந்தானே?'' என்றான்.

''அக்கினி பகவானுடைய கிருபையால் சௌக்யமாயிருக்கிறோம். வா, வா, இப்போதுதான் சோமக் கிழங்கை இடித்துப் புது மது தயாரித்திருக்கிறேன்.''

''சோமபானமா! இவ்வளவு அதிகாலையிலா?''

''நான் குதிரை மேய்க்கப் போகவேண்டும். இதோ குதிரைகள் தயாராய் நிற்பதை நீர் பார்க்கவில்லையா?''

''அப்படியானால் நீ இன்றைக்குச் சாயந்திரம் கூடத் திரும்பி வரமாட்டாயா?''

''இருக்கலாம்; அதனாலேயே குதிரை மாமிசமும், மதுவும், சோமா தயாரித்து வைத்திருக்கிறாள்.''

''குதிரை மாமிசமா?''

''ஆம்; அக்கினிபகவானுடைய கிருபையினாலே, எனக்குக் குதிரைகளுக்குக் குறைவில்லை. அவைகளைத்தான் நான் வளர்க்கிறேன்.''

''அப்படியானால் உன்னுடைய பெயர் மாற்றமாக வல்லவா இருக்கிறது?'' (கிரிச்ராஸ்வன்—கஷ்டப்படுபவன்.)

''என்னுடைய தாய் தகப்பனார் காலத்தில் எங்களுடைய வீட்டிலே குதிரைகள் மிகவும் குறைவு. அதனாலே இந்த மாதிரிப் பெயர் வைத்திருக்கிறார்கள்.''

''அப்படியானால் இப்பொழுது ருத்தாஸ்வன் (பாக்கியம் உள்ளவன்) என்றல்லவா வைக்க வேண்டும்.''

''நல்லது. உள்ளே வா.''

''பரவாயில்லை; இங்கேயே இருப்போமே. தேவதாருவின் நிழலும், இந்தப் பசும்புல் தரையும் மிகவும் நன்றாயிருக்கிறதே!''

''அப்படியானால் சரி சோமா! மதுவினாலும், மாமிசத்தினாலும், இங்கேயே நண்பனை உபசரிப்போம்.''

''கிரிச்ராஸ்வ? நீ குதிரை மேய்க்கப் போவதற்கு நேர மாகவில்லையா?''

''பரவாயில்லை. எத்தனையோ நாட்களுக்குப் பிறகு நீ இப்பொழுது வந்திருக்கிறாய். இன்றைக்கு இல்லையானால் நாளைக்குப் போனால் போகிறது.''

திருஜ்ராஸ்வனும், கிரிச்ராஸ்வனும் அந்தப் பசும் புல் தரையில் உட்கார்ந்தனர். அவர்களுக்கு நடுவே அமிர்தாஸ் வனும் உட்கார்ந்துகொண்டான். மதுவையும், மாமிசத்தை யும் கொண்டுவந்த தோல் பாத்திரங்களைத் தரையிலே வைத்த சோமா, ''கொஞ்சம் இருங்கள்; விரிப்பை எடுத்து வருகிறேன். அதன்மீது உட்கார்ந்துகொள்ளலாம்'' என்றாள்.

''சோமா! வேண்டாம், இந்தப் பசும்புல் தரையே போதும். ரொம்ப நன்றாயிருக்கிறது'' என்றான் திருஜ் ராஸ்வன்.

உடனே சோமா தன் நண்பனைப் பார்த்து, ''திருஜ் ராஸ்வ! உப்புப் போட்டுச் சமைத்த மாமிசம் உனக்குப் பிரியமா? அல்லது நெருப்பிலே சுட்டதா? இது எட்டு மாதக் குட்டியினுடைய மாமிசம். எவ்வளவு மிருதுவாயிருக்கிறது பார்த்தாயா?''

''சோமா! எனக்கு நெருப்பிலே சுட்ட மாமிசந்தான் பிரியம். நான் பூராக் குதிரையையும் அப்படியே நெருப்பிலே சுட்டுவிடுவேன்; ஆனால் நேரமாய்விட்டது. இந்த மாமிசமும் ரொம்ப நன்றாயிருக்கிறது. ஆனால் சோமா! எனக்கு அளிக்கும் மதுக் கிண்ணத்தை உன்னுடைய அழகிய உதடு களால் இனிப்பூட்ட வேண்டும்.''

''ஆம், சோமா! நம்முடைய நண்பன் வெகு நாட்கள் கழித்து வந்திருக்கிறான்'' என்றான் கிரிச்ராஸ்வனும்.

''இதோ வந்து விடுகிறேன், நெருப்பு நிறைய இருக் கிறது, கொஞ்சம் மாமிசத்தைச் சுட்டுக்கொண்டு வந்துவிடு கிறேன். ரொம்ப நேரமாகாது'' என்று கூறியபடி, சோமா அவசரமாக ஓடினாள்.

இதற்கிடையில், மது இருக்கும் பாத்திரங்களை ஒவ் வொன்றாகக் குடித்துக் காலியாக்கிக் கொண்டு வரும் பிரிச் ராஸ்வனைப் பார்த்த நண்பன், ''கொஞ்சம் பொறு; ஏன் இவ்வளவு அவசரப்படுகிறாய்?'' என்றான்.

''இதோ பார். இந்த மது எவ்வளவு ருசியாக இருக்கிறது! அதுவும் சோமாவினுடைய கைப்பட்ட இந்த மது அமிர்தமாகவல்லவா இருக்கிறது.''

''அமிர்தம்! இன்னும் கொஞ்ச நேரத்தில் உன்னுடைய தலைதான் சுற்றிவிடுமே! அதன் பிறகு அமிர்தத்தின் சுவையை எங்கே பார்க்கப் போகிறாய்?''

''திருஜ்ராஸ்வ! நான் சோமாவை எவ்வளவு காதலிக்கிறேனென்பது உனக்குத் தெரியுமல்லவா?''

இந்த நேரத்தில் நெருப்பில் சுடப்பட்ட மூன்று மாமிசத் துண்டுகளை ஒரு தோல்பட்டையில் எடுத்துக்கொண்டு வந்த சோமா, ''கிரிச்ராஸ்வ! நீ சோமாவைக் காதலிக்கவில்லை'' என்றாள் தன் கணவனைப் பார்த்து.

''காதலிக்கவில்லையா, நானா? இல்லை; உன்னையும் இந்த மதுவையும் ஒருங்கே காதலிக்கிறேன்'' என்று தடுமாறிய குரலில் கூறினான்.

போதை வெறியால் கிரிச்ராஸ்வனுடைய கண்கள் அதிகமாகச் சிவந்துவிட்டன. ''சோமா! இன்றைக்கு நான் உனக்கு ஒரு பொருட்டாகத் தோன்றாது'' என்றான்.

''ஆம்; இன்றைக்கு நான், நம்முடைய வீட்டுக்கு அதிதியாக வந்திருக்கும் திருஜ்ராஸ்வனுடையவள்'' என்று சோமா கூறினாள்.

''அதிதியா அல்லது பழைய காதலனா?'' சிரித்துக்கொண்டே சொல்ல முயற்சிக்கிறான் கிரிச்ராஸ்வன்.

திருஜ்ராஸ்வன், சோமாவின் கரங்களைப் பற்றித் தன் பக்கலில் உட்கார வைத்து, மது நிறைந்த பாத்திரத்தையெடுத்து, அவளுடைய செவ்விதழ்களிலே வைத்தான்; அவளும் இரண்டு மூன்று துளிகள் குடித்ததும் நண்பனை நோக்கி, ''போதும். இனி நீ குடிக்கவேண்டும். எத்தனையோ நாட்களுக்குப் பிறகு, இன்றுதானே வந்திருக்கிறாய்'' என்றாள்.

திருஜ்ராஸ்வன் மதுக்கிண்ணத்தை ஒரே மூச்சில் காலி செய்துவிட்டு வெறும் பாத்திரத்தை பூமியில் வைத்துக்கொண்டே, ''சோமா! உன்னுடைய வாயிதழ்பட்ட பாத்திரத்தில் இந்த மது எவ்வளவு இனிப்பாயிருக்கிறது தெரியுமா?'' என்றான்.

இப்பொழுது கிரிச்ராஸ்வனுக்கு மதுவெறி பூரணமாகத் தலைக்கேறிவிட்டது. தட்டுத் தடுமாறிக் கொண்டே தன் கிண்ணத்தில் திரும்பவும் மதுவை நிரப்பி, அதைச் சோமாவின் பக்கம் நீட்டியவனாய் சிதைந்த சொற்களால், ''சோ... மா...இ...தை...க் கொ...ஞ்...ச...ம் அ...மி...ர்...த...மா... ...க்...க...மா...ட்...டா...யா...'' என்றான்.

சோமா அந்தப் பாத்திரத்தையும் தன்னுடைய உதடுகளால் நனைத்துவிட்டுக் கொடுத்தாள். பெரியோர்களின் இந்தக் காதல் விளையாட்டுக்களைப் பார்த்துக் கொண்டிருக்க மனமில்லாத அமிர்தாஸ்வன், சட்டென்று எழுந்து தன் வயதையொத்த—பாலர் பாலிகைகளுடன் விளையாட ஓடி விட்டான்.

போதை வெறியால் கிரிச்ராஸ்வனுடைய கண்கள் கிறங்கிச் சுழல்கின்றன; தலையோ தள்ளாடிச் சாய்கிறது. இந்நிலையில் அவன், ''சோமா! நான் பாட்டுப் பாடட்டுமா'' என்றான்.

''நன்றாகப் பாடு, உன்னைப்போன்ற பாடகன் இந்தக் குரு ஜனங்களிலேயே கிடையாதே.''

''ந...ன்...றா...க...ச்...சொ...ன்...னா...ய்...எ...ன்...னை... ப்......போ...ன்...ற...பா...ட...க...ன் இ...ந்...த...ச்...ச... மூ...க...த்...தி...லே...யே...கி......டை...யா...து...ச...ரி...... கே...ள்'' பாடுகிறான்.

''மா...து...வே...அ...மி...ர்...த...மே'' இதைக்கேட்ட சோமா,

''போதும் போதும் நிறுத்திக்கொள்; இதோ பார்; உன் சங்கீதத்தைக் கேட்டதும் பட்சிகளும், மிருகங்களும் அலறி அடித்துக்கொண்டு ஓடுகின்றன'' என்றாள்.

''சரி, உத்தரவு.''

இம்மாதிரி குடித்துக் களியாட்டம் ஆடும் நேரம் இதுவல்ல; இதற்குகந்தது மாலைப் பொழுதுக்குப் பிறகுதான். ஆனால், திரிச்ராஸ்வனுக்கு ஏதாவது ''சாக்கு'' வேண்டியிருந்தது. போதை தலைக்கேறி அவன் தன்னுடைய சுய புத்தியை இழந்துவிட்டான். திருஜ்ராஸ்வனும், சோமாவும் குடிப்பதை நிறுத்திவிட்டு, நதியின் கரைக்குச் சென்று, அங்கு ஒரு பாறையின்மீது அமர்ந்தனர். மலைகளின் நடுவே ஓடி

வரும் நதியானது, இந்த இடத்தில் சமதளத்தில் ஓடுகிறது. ஆனால், அங்கே பரவிக்கிடக்கும் சிறியனவும் பெரியனவுமான கற்களிலே மோதிச் செல்வதால் பேரிரைச்சலை உண்டாக்குகிறது. ஆங்காங்கு மீன்கள் கற்களின் மறைவில் நீந்திக்கொண்டு, இங்குமங்குமாகத் திரிந்தன. நதிக்கரையின் அருகே விசாலமான தேவதாரு முதலிய பெரிய பெரிய விருட்சங்கள் நிற்கின்றன. பட்சிகளின் மதுர கானமும், காற்றினூடே வீசிவரும் புஷ்பங்களின் நறுமணமும் ஏனைய இயற்கை அழகும் யாருடைய இதயத்தையும் பரவசப்படுத்தாமல் இரா. வனப்புமிக்க இவ்விடத்தில் அமர்ந்திருக்கும் இவர்களிருவரும்—சோமாவும் திருஜ்ராஸ்வனும்—தங்களது பழைய காதலைப் புதுப்பித்துக் கொண்டிருக்கின்றனர். தனிமையில் அமர்ந்து, இந்த இயற்கையின் வனப்பைப் பருகிக்கொண்டிருக்கும் இந்த மனித ஜோடியின் இதயத்திலே, இவர்களுடைய பழைய கால நிகழ்ச்சிகள் ஞாபகத்துக்கு வருவது இயற்கையல்லவா?

அப்பொழுது சோமாவுக்குப் பதினாறு வயது. தன் தந்தையின் வீட்டிலே, வால்ஹீகாவில் இருந்தாள்; வசந்த உற்சவத்துக்காக, திருஜ்ராஸ்வனும் அவள் வீட்டுக்கு வந்திருந்தான். சோமா, திருஜ்ராஸ்வனுடைய மாமன் மகள். அந்தப் பருவத்துக்குத் தக்கபடி சோமாவின் காதலர்கள் கூட்டத்தில் திருஜ்ராஸ்வனும் ஒருவன். இவளுடைய மோகத்தில் மயங்கிய வாலிபர்களுக்கிடையில் போட்டி பலமாயிருந்தது. ஆனால், இந்தப் போட்டியில் கிரிச்ராஸ்வனுக்கே வெற்றி கிடைத்தது. ஏனைய வாலிபர்கள் அவனுடைய வெற்றியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. அந்த நாள் முதல் சோமா, கிரிச்ராஸ்வனுக்குச் சொந்தமானாள், மனைவியானாள். ஆயினும் அந்த யுகத்தில் ஒரு பெண், தன்னுடைய நாயகனின் இதர சங்கம சொத்துக்களைப்போல் தானும் அவனுக்குச் சொந்தமான ஒரு சொத்து என்பதை ஒப்புக்கொள்வது கிடையாது. இதனால், தற்காலிகமாகக் காதலர்களை வரித்துக்கொள்ளப் பெண்களுக்கு அதிகாரம் இருந்தது. வீட்டிற்கு வந்த அதிதிகள், நண்பர்கள், இவர்களை உபசரிக்கும் முறையில் தங்கள் மனைவியரையும், அவர்களிடம் தற்காலிகமாக ஒப்படைப்பது அந்தக் காலத்தில் ஓர் ஆசாரமாக நியாயமாகக் கௌரவிக்கப்பட்டு வந்தது. இந்த முறையில் சோமா, இன்று திருஜ்ராஸ்வனுக்குச் சொந்தமானதில் ஆச்சரியம் இல்லை.

அன்று மாலை நேரத்தில் இந்தச் சமூகத்தின் தலைவனுடைய வீட்டுமுன்னுளுள்ள முற்றத்தில், அந்தக் கிராமத்து

ஆண்களும் பெண்களும் கூடியிருந்தனர். மது, மாட்டு மாமிசம், குதிரை மாமிசம் முதலிய பொருள்கள் அங்கு வைக்கப்பட்டிருக்கின்றன. சமூகத் தலைவன், புத்திரோற் பத்திக்காக விழாக் கொண்டாடிக் கொண்டிருந்தான். இங்கே சோமாவினுடைய வீட்டில், கிரிச்ராஸ்வன் மதி யிழந்து விழுந்து கிடக்கிறான். ஆகையால் அவனுக்காகச் சோமாவும் திருஜ்ராஸ்வனும் அந்த விழாவுக்குச் சென்றனர். நடுநிசிவரை குடிப்பதும், புசிப்பதும், பாடுவதும், ஆடு வதுமாக ஒரே களியாட்டத்தில் யாவரும் மூழ்கியிருந்தனர். சோமாவின் கீதத்தையும், திருஜ்ராஸ்வனுடைய நடனத்தை யும், அங்கு கூடியிருந்தவர்கள் எப்பொழுதும்போல் சந்தோ ஷத்துடன் ரசித்தார்கள்.

## 2

"மதுரா! நீ மிகவும் களைப்படைந்து விட்டாயல்லவா!"

"இல்லை. எனக்குக் குதிரைச்சவாரி ரொம்பப் பிரியம்."

"ஆனால், அந்தத் திருடர்கள் உன்னைக் கட்டிப்போட்டு இம்ஸித்து விட்டார்கள்?"

"ஆம். அவர்கள் பக்த ஜனங்களுடைய மாடுகளையும், குதிரைகளையும் மாத்திரமா திருட வருகிறார்கள். எங்கள் குலப் பெண்களையும் திருடிக்கொண்டு போகவல்லவோ வருகின்றனர்."

"ஆம். மிருகங்களைத் திருடுவது வெகுகாலம் வரை விரோதத்தை நிலைநிறுத்தி விடுகிறது. ஆனால் பெண்களைத் திருடுவதில் உண்டாகும் விரோதமிருக்கிறதே, அது வேரூன்றி விடுவதில்லை. ஏனென்றால், தன் மகளைத் திருடிக் கொண்டு சென்றவனைத் திரும்பவும் மருமகனாக ஏற்றுக் கொள்ள வேண்டியதிருக்கிறதல்லவா?"

"உன்னுடைய பெயரை நான் தெரிந்து கொள்ள லாமா??"

"குரு—குலத்தைச் சேர்ந்த கிரிச்ராஸ்வனுடைய புத்தி ரன் அமிர்தாஸ்வன்."

''குருகுலமா? என்னுடைய மாமாவின் குலமும் அது தான்.''

''மதுரா! இப்போது உனக்கு எவ்வித ஆபத்தும் கிடையாது. நீ எங்கே போக விரும்புகிருய்?''

இந்த வார்த்தைகளைக் கேட்ட மதுராவினுடைய முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. ஆனல் அதை, அவள் மறைக்க முயன்ருள். இதை அறிந்துகொண்ட அமிர்தாஸ்வனும், தன்னுடைய பேச்சை வேறு பக்கம் திருப்பி,

''எங்களுடைய கிராமத்துக்கும், உங்களுடைய பக்த குலத்துப் பெண்கள் வந்திருக்கிருர்கள்'' என்ருன்.

''யாவரும் திருடப்பட்டா?''

''இல்லை. அவர்களில் மாமன் மகள் அதிகம்.''

''இருக்கலாம். ஆனல் பெண்களைத் திருடிக்கொண்டு போகும் இந்தச் செய்கை எனக்கு ரொம்ப வெறுப்பாயிருக்கிறது.''

''எனக்கும் அப்படித்தான் மதுரா! இதனல், நாயக—நாயகிகளாகும் அவர்களுக்கிடையில், ஒருவரையொருவர் காதலிக்கிருர்களா என்பதுங்கூட உணர முடியாமல் போகிறது.''

''இதைப் பார்க்கிலும், மாமன் மக்களுக்கிடையே விவாகம் நடைபெறுவது ரொம்பவும் நல்லது. ஏனென்ருல் ஏற்கனவே இருவருக்கிடையிலும் பரிச்சயம் உண்டாவதற்கு ஏதுவிருக்கிறதல்லவா?''

''மதுரா! உனக்கு யாராவது இப்படிப்பட்ட காதலர்கள் இருக்கிருர்களா?''

''இல்லை. எனக்கு மாமாவோ மாமியோ கிடையாது.''

''வேறு யாராவது காதலர்கள்?''

''அந்த எல்லையை அடைந்தவர் யாருமில்லை.''

''அப்படியானல், எனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்குமா?''

இப்பொழுது மதுராவினுடைய கண்கள் வெட்கத்தால் பூமியை நோக்கின. உடனே அமிர்தாஸ்வன், பேச்சை வேறு திசையில் திருப்பினுன்.

''மதுரா! பெண்கள் பிறருக்குச் சொந்தம் ஆகாமல் சுதந்திரமாக வாழும் சமூகம் இருப்பது உனக்குத் தெரியுமா?''

''எனக்கு விளங்கவில்லையே?''

''அந்தப் பெண்களை யாரும் திருடிக்கொண்டு போவதில்லை. ஒரு வாலிபன் ஒரு பெண்ணைத் தன்னுடைய சொந்த மனைவியாக வைத்துக்கொள்ள முடியாது. அங்கே பெண்களுக்கும் ஆண்களுக்கும் ஒரே மாதிரியான சுதந்திரம்.''

''அப்படியானுல், ஆண்களைப் போலவே பெண்களும் ஆயுதம் ஏந்துவார்களா?''

''ஆம். அங்கே பெண்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு.''

''அமிர்த இல்லை. இல்லை. அமிர்தாஸ்வ! இந்தமாதிரி சமூகம் எங்கே இருக்கிறது?''

''கூச்சப்படாதே. உன் வாயால் அமிர்தன் என்றே அழை. அதுதான் எனக்குப் பிரியமாக இருக்கிறது. அந்தச் சமூகம் இங்கிருந்து மேற்குத் திசையில் வெகு தூரத்தில் இருக்கிறது.''

''அமிர்த! நீ அங்கு போயிருக்கிருயா?''

''ஆம்; காடுகளிலே சுதந்திரமாகத் திரியும் விலங்குகளைப்போல, தங்கள் விருப்பம்போல் பறந்து திரியும் பறவைகளைப்போல, பெண்கள் தங்கள் வாழ்நாள் முழுதும் அங்கே சுதந்திரமாயிருக்கிருர்கள். யாருக்கும் யாரும் சொந்தமென்பதில்லை.''

''அப்படியானுல், ரொம்ப நல்ல சமூகமாகவல்லவா இருக்கிறது! அங்கே பெண்களை யாரும் திருடுவது இல்லையே?''

''தன் மனம் போனபடி, காட்டிலே திரியும் பெண் புலியை, உயிரோடு திருடுவதாவது யாராலே முடியும்?''

"ஆடவர்கள்?"

"அவர்களும் சுதந்திர புருஷர்களே."

"குழந்தைகள்?"

"மதுரா! அங்கே வசிப்பவர்களின் நடவடிக்கையே வேறு விதம். ஒரு கிராமம் என்ருல் வீடுகள்தோறும் தனித் தனிக் குடும்பங்கள் என்பது அங்கே கிடையாது. ஒரு கிராமம் பூராவும் ஒரே குடும்பந்தான்."

"அந்தக் குடும்பத்தில் தகப்பனுடைய கடமை?"

"தகப்பனு! மதுரா! யாரை யாருக்குத் தகப்பன் என்று சொல்வது! ஒரு பெண், ஒருவனுக்கே மனைவியென்பது அங்கு கிடையாது. அவளுடைய காதலுக்குக் கட்டுக் கிடையாது."

"அப்படியானுல் அங்கே யாருக்கும் அவர்களுடைய தகப்பன் இன்னுர் என்பதே தெரியாதா?"

"அந்த வீட்டிலுள்ள ஆடவர் எல்லோரும் தந்தையர்கள் தான்?"

"இது என்ன விநோதப் பழக்கம்?"

"அங்கே பெண்களுக்கும் பூரண சுதந்திரம் உண்டு! ஆண்களைப் போலவே பெண்களும் அங்கு யுத்தம் செய்வார்கள்; காட்டில் வேட்டையாடுவார்கள்."

"மாடு குதிரை இவைகளை வளர்ப்பது?"

"மாடுகளை, குதிரைகளை அங்கு வளர்ப்பதில்லை. இங்கே மான்கள் எப்படிக் காடுகளிலே எதேச்சையாகத் திரிகின்றனவோ, அப்படியேதான் அங்குமாடுகளும் குதிரைகளும்."

"ஆடுகளையுங் கூடவா?"

"அங்கே மிருகங்களை வீடுகளிலே வைத்து வளர்க்க அவர்களுக்குத் தெரியாது! வேட்டை ஆடியும், மீன் பிடித்தும், காய் கனி கிழங்குகளைக் கொண்டும் தங்கள் வாழ்க்கையை நடத்துகிருர்கள்."

"வேட்டையாடியா! அப்படியானுல் அவர்களுக்குப் பால் எங்கிருந்து கிடைக்கும்?"

''குழந்தைகள் இளமையில் தாய்மாரிடம் குடிக்கும் பாலைத் தவிர வேறு பால் ஏது?''

''குதிரை ஏற்றங்கூடத் தெரியாதா?''

''இல்லை. மிருகங்களின் தோல்களைத் தவிர வேறு ஆடைகளையும் அவர்கள் அறியமாட்டார்கள்.''

''இந்த வாழ்க்கை அவர்களுக்குத் துன்பமாயில்லையா?''

''ஆனால் அங்கே ஆண்கள் எப்படியோ அப்படியே பெண்களுக்கும் பூரண சுதந்திரம் உண்டு. பெண்களும், காய் கனிகளைச் சேகரிக்கிறார்கள். வேட்டையாடுகிறார்கள். யுத்தத்தில், ஆண்களைப் போலவே பெண்களும் ஆயுதங்கள் எடுத்துச் சண்டை செய்வார்கள்.''

''எனக்குங்கூட இது ரொம்பப் பிடித்திருக்கிறது. நானும் அம்பு தொடுக்கப் படித்திருக்கிறேன். ஆனால் ஆடவர்களைப் போலவே யுத்தகளத்திற்குப் போவதற்கு, எங்களுக்குச் சந்தர்ப்பம் எங்கே கிடைக்கிறது.''

''இங்கே ஆடவர்கள் இந்தத் தொழிலைத் தங்களுடையதாக மட்டும் ஆக்கிக் கொண்டிருக்கிறார்கள். மதுரா, இவர்கள் ஆடு மாடுகள், குதிரைகள் முதலிய மிருகங்களை வைத்துப் போஷித்து வருகிறார்கள்; தங்கள் வயிற்றுப் பசியைத் தீர்ப்பதற்காக. ஆனால் பெண்களை வீட்டிலே வைத்துப் போஷித்து வருகிறார்கள், தங்கள் உடற்பசியைத் தீர்ப்பதற்காக.''

''ஆமா; ஆமா யுவதிகளைச் சுலபமாகத்திருடிக்கொண்டு போவதற்கு லாயக்காகவும் ஆக்கி வைத்திருக்கிறார்கள். அந்தச் சமூகத்திலே, யுவதிகள் இந்த மாதிரிக் களவாடப் படுவதில்லையே?''

''அங்கு ஒரு சமூகத்திலே பிறக்கும் ஆண்களும், பெண்களும், அதே குடும்பத்திலேயே வாழ்கிறார்கள். பெண்களை வெளியே கொடுப்பதும், கொள்வதும் இல்லை.''

''இது என்ன வேடிக்கை?''

''ஆம்; மதுரா! அந்த நியமம் இங்கு ஒத்து வராது.''

''இங்கே பெண்களைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறார்களே, இது நடைபெற்றுக்கொண்டே இருக்கவேண்டியதுதானா?''

''சரி இவைகளிருக்கட்டும்; மதுரா! இப்பொழுது என்ன சொல்கிறுய்?''

''எதைப்பற்றி?''

''என்னுடைய காதலைப்பற்றி!''

''நான் உன்னுடைய பிடியில் தானே இருக்கிறேன்.''

''ஆனுல் நான் உன்னைக் கவர்ந்துகொண்டு போக விரும்பவில்லை.''

''நான் ஆயுதம் எடுத்து யுத்தம் செய்ய அனுமதிப் பாயா?''

''என்னுடைய அதிகாரத்திற்கு உட்பட்ட அளவில்.''

''வேட்டையாடுவதற்கு?''

''என்னுல் முடிந்தவரை.''

''முடிந்தவரை என்ருல்?''

''ஏனெனில், சமூகத் தலைவரின் உத்திரவிற்கு நான் கீழ்ப்படிய வேண்டும். இருந்தாலும் என்னைப் பொறுத்த வரை, உனக்குப் பூரண சுதந்திரம் உண்டு.''

''காதலிலும் கூடவா?''

''காதல்! மதுரா! காதல்தான் நம்மிருவரையும் பிணைப் பது. ஆயினும் அதிலும் உனக்குச் சுதந்திரம் உண்டு.''

''அமிர்த! உன்னுடைய காதலை நான் ஏற்றுக் கொள் கிறேன்.''

''இப்போது நீ எங்கே போக விரும்புகிறுய்? எங்கள் கிராமத்திற்கா அல்லது உங்கள் கிராமத்திற்கா?''

''உன்னுடைய விருப்பப்படி.''

உடனே அமிர்தாஸ்வன், தன்னுடைய குதிரையைத் திருப்பி பக்த ஜனங்களுடைய கிராமத்தை அடைந்தான். அந்தக் கிராமம் முழுவதும் ஒரே கலவரமாயும் கூக்குரலா யும் இருந்தது; பலர் மாண்டு கிடந்தனர்; சிலர் காயமுற்றுக் கிடந்தனர்; சிலருடைய பெண்கள் தூக்கிச் செல்லப்பட் டிருந்தனர்; மதுராவின் தாய் வாய்விட்டு அழுது கொண் டிருக்கிறுள்; தந்தை விசனமே உருவாய் உட்கார்ந்திருக்

கிறார். இந்த நேரத்தில் அமிர்தாஸ்வனுடைய குதிரை, அவர்களுடைய வீட்டுக்கு முன்னால் போய் நின்றது.

குதிரையைவிட்டு அமிர்தாஸ்வன் முதலில் கீழே இறங்கினான். அடுத்துக் கீழே குதித்த மதுரா, அவனை அங்கேயே நிறுத்திவிட்டு வீட்டிற்கு உள்ளே சென்றாள். திடீரென்று தங்கள் முன் வந்து நிற்கும் மகளைக்கண்ட தாய்-தந்தையருக்கு, முதலில் நம்பவே முடியவில்லை. மதுராவின் தாய் அவளைத் தன்னுடைய நெஞ்சோடு அணைத்துக்கொண்டு கண்ணீரால் மதுராவின் உடம்பு பூராவையும் நனைத்துவிட முயன்றாள். தந்தை, தன் மனைவியை சாந்தப்படுத்திவிட்டுப் புத்திரியிடம், நடந்தவற்றை விளக்கமாகக் கூறும்படி கேட்டார்; மதுராவும் சொல்ல ஆரம்பித்தாள்.

''வால்ஹீகா கிராமத்தார் நம் யுவதிகளைத் தூக்கிக் கொண்டு வேகமாக ஓடியபொழுது, என்னைத் தூக்கிச் சென்றவன் பின் தங்கிவிட்டான். சமயம் பார்த்து நான் குதிரையிலிருந்து கீழே குதித்துத் தப்ப முயன்றேன். திரும்ப என்னைக் குதிரைமீது ஏற்றுவதற்கு அவன் முயற்சித்தான். அவனை நான் எதிர்த்தேன். அந்த நேரத்தில் அங்கு வந்த குதிரை வீரன், அவனைத் தடுத்து நிறுத்தி என்னைக் காப்பாற்றினான். அந்தக் குருகுலத்து வாலிபனே என்னை இங்கேயும் கொண்டுவந்து சேர்ப்பதற்காக, கூடவே வந்திருக்கிறான்'' என்றாள்.

இந்த வரலாற்றைக் கேட்ட தந்தை வியப்படைந்தவனாய், ''இந்த வாலிபன் உன்னைத் தூக்கிக்கொண்டு போக விரும்பவில்லையா?''

''பலவந்தமாகத் தூக்கிக்கொண்டு போக விரும்பவில்லை.''

''அப்படியானால் நம்முடைய குல ஆசாரப்படி, நீ இந்த வாலிபனுக்கு உரியவளாகி விட்டாயல்லவா?''

''ஆம், நான் இந்த யுவனைக் காதலிக்கவும் செய்கிறேன்.''

மதுராவினுடைய தந்தை உடனே வெளியே வந்து அமிர்தாஸ்வனை வரவேற்று உபசரித்து, வீட்டிற்குள் அழைத்துச் சென்றான். கிராமம் பூராவும் இந்த விஷயம் உடனே பரவிவிட்டது. ஒவ்வொருவருக்கும் இந்தக்காரியம்

பெரிய அதிசயமாகத் தோன்றியது. கிராம மக்கள் எல்லோ டைய அன்புக்கும், மரியாதைக்கும் பாத்திரமாகிய அமிர் தாஸ்வன், அவர்களுடைய ஆதரவோடு மதுராவை அழைத் துக்கொண்டு, மாமியார் வீட்டை விட்டுக் கிளம்பினான்.

## 3

இப்பொழுது அமிர்தாஸ்வன் தன்னுடைய கிராமத் துக்கு—குருகுலம் பூராவுக்கும் தலைவனாகி விட்டான். அவ னிடம் ஐம்பதுக்கதிகமான குதிரைகளும், மாடுகளும் ஏராள மான ஆடுகளும் இருந்தன. அவனுடைய புத்திரர்கள் நால்வரும், மதுராவும் வீட்டுக் காரியங்களைக் கவனித்துக் கொள்கின்றனர். மற்றும் கிராமத்தின் எளிய வீட்டில் பிறந்த ஒரு சிலரும், அவனுடைய வீட்டில் வேலை செய்கிறார் கள். இந்த ஏழைகள் கூலியாட்கள் என்ற தோரணையில் அல்ல; அவனுடைய வீட்டின் அங்கத்தினர்கள் என்ற தோரணையிலேயே வேலை செய்தனர். குருகுலத்தவர், ஒருவரையொருவர் அடிமைகொள்ள முடியாது; சமமான அந்தஸ்திலேயே நடத்த வேண்டும். அமிர்தாஸ்வனுடைய இந்தக் கிராமத்தில், உத்தேசம் ஐம்பதுக்கு மேற்பட்ட குடும்பங்களிருந்தன. இவர்களுக்கிடையில்ஏற்படும் மனஸ்தா பங்கள், சண்டை சச்சரவுகள் இவைகளை இந்தக் கிராமத் தலைவனே விசாரித்துத் தீர்த்து வைக்க வேண்டும். இன்னும் தண்ணீர், ரோடுகள் இவை போன்ற கிராமப் பொதுவுக்குத் தேவையான காரியங்களையும் இந்தத் தலைவனே கவனிக்க வேண்டும். இவைதவிர இன்ன நேரமென்றில்லாமல் எந்த நேரமும் சம்பவிக்கக்கூடிய யுத்தத்தில் சேனைக்குத் தலைமை வகித்து நடத்த வேண்டிய பெரிய பொறுப்பும் அவனையே சேர்ந்தது; உண்மையில் யுத்தத்தில் காட்டும் திறமையைப் பொறுத்தே இந்தத் தலைமைப் பதவி கிடைக்கிறது.

அமிர்தாஸ்வன் ஒரு பெரிய வீரன்; பராக்கிரமசாலி. பக்தர்கள், வால்ஹீகர்கள், இன்னும் எத்தனையோ குலத் தோருடன் ஏற்பட்ட யுத்தத்தில் அமிர்தாஸ்வன் தன்னு டைய பராக்கிரமத்தைப் பலமுறை காண்பித்து வெற்றி கண்டிருக்கிறான். தான் மதுராவுக்குக் கொடுத்திருந்த வாக் குறுதிகளையும் இந்தச் சந்தர்ப்பங்களில் காப்பாற்றி இருக்

கிறான். மதுரா தன் நாயகனோடு வனங்களில், கரடி, ஓநாய் புலி, முதலிய மிருகங்களை வேட்டையாடுவது மட்டிலும் அல்லாமல், யுத்தங்களிலும் அவனுடன் நின்று சமர் புரிந்திருக்கிறாள். ஆனால் அமிர்தாஸ்வன் தன் மனைவிக்குக் கொடுக்கும் இந்தச் சுதந்திரம் அவனுடைய குலத்தவரில் சிலருக்குப் பிடிக்கவில்லை. பெண்களின் வேலை வீட்டுக்குள்ளேதான் என்பது அவர்களுடைய கருத்து.

அமிர்தாஸ்வனை அந்தக் குரு-குலத்துக்குத் தலைவனாகத் தேர்ந்தெடுத்த நன்னாளை, அக்கிராமத்தார் உற்சவமாகக் கொண்டாடினார்கள். அன்று யுவர்களும் யுவதிகளும் தற்காலிக மணவாழ்க்கை நடத்தச் சுதந்திரம் உண்டு. இரவெல்லாம் நாட்டியத்திலும், மதுவிலும் இன்ப லீலைகளிலும் மக்கள் மயங்கிக் கிடந்தனர். வெயிற் காலமானதால் இவர்கள் வளர்க்கும் மிருகங்கள் நதிக்கரையிலும் மலை அடிவாரங்களிலும் எதேச்சையாகமேய்ந்து திரிந்தன. களியாட்டத்தில் திளைத்துக் கிடக்கும் இவர்கள் தங்களுக்கும் எதிரிகள் உண்டு என்பதை மறந்தேவிட்டனர். ஆடு, மாடு, குதிரை முதலிய கால்நடைச் சொத்து பெருகுவதோடு கூடவே பகைமையும் போட்டியும் வளர்கிறது. இந்த குரு-குலத்தார், வால்கா நதிப் பிரதேசங்களில் வாழ்ந்து கொண்டிருந்த அந்தக்காலத்தில், இவர்கள் மிருகங்களை வளர்த்துவரவில்லை. அப்பொழுது இவர்கள் தங்களுடைய உணவுத் தேவைக்கு வேட்டையையும் காட்டுக்கனிகளையுமே நம்பியிருந்தார்கள். இவை ஒன்றும் கிடைக்கவில்லையானால், பட்டினியும் கிடந்தார்கள். ஆனால் இவர்கள் ஆடு, மாடு, குதிரைகளை வீட்டில் வளர்க்கத் தொடங்கிய பிறகு அவற்றிலிருந்து இவர்களுக்கு மாமிசம், பால், தோல் முதலிய பொருள்கள் கிடைத்ததோடு, ஆடைகளுக்கு வேண்டிய ரோமங்களும் கிடைத்தன. குரு-குலத்துப் பெண்கள் ரோமங்களைப் பக்குவப்படுத்தி நல்ல கம்பள ஆடைகள் நெய்வதில் திறமை பெற்றிருந்தார்கள். ஆனால் இவர்களுடைய இந்தத் திறமை சமூகத்தில் அவர்களுக்கு—அந்தப் பெண்களுக்கு முன்பு இருந்த சுதந்திரத்தை இழக்கச் செய்துவிட்டது. இப்பொழுது சமூகத்தில் பெண்களுடைய ராஜ்யம் இல்லை. ஆடவர்களுடைய ராஜ்யம். ஒரு பெண் அந்தச் சமூகத்திற்கும் சமூகக்குழுவிற்கும் தலைவியாயிருந்தது போய், இப்பொழுது ஒரு யுத்த வீரனுடைய, யுத்தத்தில் தலைமை தாங்கி வெற்றி கண்ட ஒரு ஆடவனுடைய ராஜ்யம் நடைபெறுகிறது. இவன் சமூகத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தாலும், பெரும்

பாலான காரியங்களைத் தன் விருப்பப்படியே செய்துவிடுகிறான்.

சொத்து! பெண்கள் தலைமை தாங்கிய ராஜ்யத்தில் சமூகம் முழுவதும் ஒரே குடும்பமாகவே இருந்தது; ஒன்றாகவே வேலை செய்தது. இப்பொழுது ஒவ்வொரு குடும்பத்திற்கும் சொந்தமாகக் கால்நடைச் சொத்துக்களிருக்கின்றன. அவற்றின் லாப-நஷ்டங்களும், அந்த அந்தக் குடும்பத்தையே சேர்ந்தது. ஆயினும்; எல்லோரையும் பாதிக்கக் கூடிய நெருக்கடியான காலத்தில் எல்லோரும் சேர்ந்து கூட்டுப் பொறுப்புடன் காரியம் செய்கின்றனர்.

அமிர்தாஸ்வனைத் தலைவனாக்கி, அதற்காகக் கொண்டாடப்படும் இன்றைய விழாவின் களியாட்டத்தில் திளைத்துக் கிடந்த அந்த ஜனங்களுக்கு, தங்களுடைய கால்நடைகளைப் பற்றிய நினைவே இல்லை. அவர்கள் என்ன செய்வார்கள். வாத்தியங்கள் ஒலிக்க, மதுவிலும், மங்கையர் மையலிலும் மூழ்கிக் கிடக்கும் வாலிபர்களுக்கு, இந்த எண்ணம் எங்கே இருக்கப் போகிறது! பகல் முடிந்தது. இரவு வந்து வெகு நேரமாகி விட்டது. ஆனால், களியாட்டமும், நடனமும் இன்னும் முடிந்தபாடில்லை. இந்தநேரத்தில், இவர்களுடைய நாய்கள் உரத்த குரலில் குரைத்துக்கொண்டு நதிக்கரையை நோக்கி ஓடின அமிர்தாஸ்வனும் இந்தக் களியாட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தான் என்பதைக் கூறத் தேவை இல்லை. ஆனால் அவன் தன் நினைவிழந்து தடுமாறும் அளவுக்குக் குடிக்கும் கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல. நாய்கள் குரைப்பதைக் கேட்ட அமிர்தாஸ்வன் கூட்டத்தை விட்டு மெதுவாக எழுந்தான். வயிரம் பாய்ந்த மரத்தால் செய்த தன்னுடைய பெரிய கதாயுதத்தைக் கையிலேந்தி நாய்களின் சத்தம் வந்த நதிக்கரையை நோக்கி நடந்தான். நல்ல நிலவு பிரகாசிக்கிறது. இந்த நிலவொளியிலே ஒரு பெண் எதிரே வருவதைப் பார்த்த அமிர்தாஸ்வன் சற்றே நின்றான். நதிக்கரைப் பக்கமிருந்து தனிமையாக, ஆனால் வேகமாக ஓடிவந்த மதுரா, கோபத்தில் துடிக்கும் குரலில்,

''புரு குலத்தோர் நம்முடைய மாடுகளையும், குதிரைகளையும் ஓட்டிக்கொண்டு செல்கின்றனர்'' என்றாள்.

''ஓட்டிக் கொண்டு செல்கிறார்களா? நம்முடைய வாலிபர்களெல்லோரும் மது வெறியில் மூழ்கிக் கிடக்கிறார்கள். மதுரா! நீ எதுவரை சென்றாய்?''

''அவர்கள் யார் என்று நான் தெரிந்து கொள்ளக்கூடிய அளவு சென்றேன்.''

''எல்லா மிருகங்களேயுமா ஓட்டிக் கொண்டு செல் கிருர்கள்?''

''ஆங்காங்கு மேய்ந்த மிருகங்களே ஒன்று சேர்ப்பதில் அவர்கள் நீண்ட நேரத்தைச் செலவு செய்திருப்பதாய்த் தெரிகிறது.''

''மதுரா! உன்னுடைய அபிப்பிராயம் என்ன?''

''தாமதம் செய்வது கூடாது.''

''நம்முடைய வாலிபர்கள் எல்லாம் குடி மயக்கத்தில் கிடக்கிருர்களே?''

''யாரால் நடக்க முடியுமோ அவர்களேக்கொண்டாவது நாம் எதிர்க்க வேண்டும்.''

''அவசியம் நாம் எதிர்க்க வேண்டும். ஆனல் மதுரா! உன்னிடம் நான் ஒரு விஷயம் சொல்லுகிறேன். நீ இப் பொழுது என்னேடு வரவேண்டாம். இந்த விஷயம் தெரிந்தவுடனேயே வாலிபர்களுடைய குடி மயக்கம் பாதி தெளிந்துவிடும். மற்றப் பாதி மயக்கம் தெளிவதற்கு, தயிரைக் கொடுக்கவேண்டும். உணர்ச்சி வரவர அவர்களே நீ அனுப்பிக் கொண்டே இரு.''

''பெண்கள்?''

''நம்முடைய குரு-குலப் பெண்களும் யுத்தத்தில் இறங்க வேண்டுமென, நான் தலேவன் என்ற முறையில் உத்தரவு போடுகிறேன். கைவிடப்பட்ட அவர்களுடைய புராதனப் பழக்கத்தை நாம் மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும்.''

''சரி. நான்எனக்கிட்ட வேலேயைச் செய்யத் தயார். நீ புறப்படு.''

உடனே வாத்தியங்கள் நிறுத்தப்பட்டன. ஆண்களும் பெண்களுமாக யாவரும் தலேவனின் முற்றத்தில் கூடிவிட் டனர். அவர்களுடைய மாடுகளேயும் குதிரைகளேயும் அபகரித்துச் செல்லும் தகவலேக் கேட்ட உடனேயே அநேகருக்குக் குடி மயக்கம் ஓடிவிட்டது. காம வேட்கை குடிகொண்டிருந்த அவர்களது முகங்கள் கோபத்தால்

சிவந்தன. தலைவன் அமிர்தாஸ்வன் கோடை காலத்து மேகம் குமுறுவதுபோல், அவர்களைப் பார்த்துக் கர்ஜிக்கத் துவங்கினான்:

''குரு குல வாலிபர்களே! யுவதிகளே! நம்முடைய சத்துருக்கள், புரு குலத்தோர் நமது சொத்துக்களை அபகரித்துச் செல்கிறார்கள். அவைகளை மீட்கவேண்டும். யுத்தம் நடக்கும். குடி மயக்கம் தெளிந்திருப்பவர்கள் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு என் பின்னால் வாருங்கள்; இன்னும் மயக்கம் தெளியாதிருப்பவர்கள், மதுராவிடம் தயிர் வாங்கி அருந்துங்கள். உணர்வு வந்தவுடன் ஓடோடியும் வாருங்கள். குரு-குலப் பெண்களே! புராதன காலத்து நம்முடைய குல மங்கையர், யுத்த களத்திலே, ஆயுதம் ஏந்தி ஆண்களுக்குச் சமமாகப் போர் புரிந்திருக்கிறார்கள். இதை நம் பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். உங்கள் தலைவன் அமிர்தாஸ்வன் இன்று உங்களை யுத்தகளத்திற்கு அழைக்கிறான்.''

நொடிப் பொழுதுக்குள் நாற்பது குதிரைகள் தயாராகி விட்டன. புரு-குலத்தோர் தாங்கள் திரட்டிய மந்தைகளை, சமவெளி கடந்து மலைகளின் மீது ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள். இரண்டு மணிநேர ஓட்டத்திற்குப் பின்னே குரு ஜனங்கள் அவர்களை மடக்கி விட்டார்கள். குதிரைகளையும், பசுக்களையும் ஒருமுகப்படுத்தி மலைமீது ஏற்றுவது என்பது சுலபமான காரியம் அல்ல. குதிரைமீது ஏறியிருக்கும் எதிரிகள், சவுக்காலும், கற்களாலும் அதட்டி, அந்த மந்தைகளை மலைமீது ஏற்றுகின்றனர். அமிர்தாஸ்வன் நெருங்கிப் பார்க்க, எதிரிகள் கிட்டத்தட்ட நூறுபேர் வரை இருக்குமெனத் தெரிந்தது. தன்னுடைய நாற்பது பேரைக் கொண்டு இவர்களுடன் பொருதுவதா, வேண்டாமா என்ற யோசனையில் நேரத்தைக் கடத்த விரும்பவில்லை. கொம்பினால் தயாரித்த நீண்ட ஈட்டியைக் கையிலேந்திய அமிர்தாஸ்வன், எதிரிகளின்மீது போர் தொடுப்பதற்குக் கட்டளையிட்டான்.

அமிர்தாஸ்வனின் ஆணை கேட்ட குருகுல ஆடவரும் மகளிரும்—ஆம், மங்கையர் பாதிப்பேர் வரை இருந்தனர்... பயமற்ற நெஞ்சினராய்த் தங்கள் தங்கள் குதிரைகளை மேலும் தூண்டினர். இவர்களைப் பார்த்த புரு குல எதிரிகள் தங்களில் சிலரை பசுக்களையும், குதிரைகளையும் காக்க நிறுத்திவிட்டு ஏனையோர் எதிர்த்துத் தாக்குவதற்கு வசதியான சமீபத்திலுள்ள சமவெளியை அடைந்தனர். அங்கே

கோரயுத்தம் மூண்டது. அமிர்தாஸ்வனுடைய வீரத் தோற்றமும், யுத்தத் திறமையும் பார்க்கத்தக்கதாயிருந்தது! அவனுடைய குதிரை அமிர்தமும், அவனும், ஒரே சரீரத்தின் அங்கம்போலத் தென்பட்டார்கள். மான் கொம்பிலே தயாரித்த அவனுடைய ஈட்டியானது யார்மீது பாய்கிறதோ, அவன் இரண்டாந் தாக்குதலை ஏற்பதற்கு குதிரைமீது இருப்பதில்லை. புரு குலத்தோர் தங்களுடைய வில்—அம்புகளிலும், கல்லால் செய்த ஏனைய ஆயுதங்களிலும், மிகுந்த நம்பிக்கை வைத்துத் தவறு செய்துவிட்டார்கள். அவர்களிடத்திலும், கொம்புகளால் செய்த ஈட்டிகள் இருந்திருக்குமாயின், குரு குலத்தோர் அன்றைய யுத்தத்தில் சமாளிப்பது கடினம். ஒரு மணிநேரம் பலமான யுத்தம் நடந்தது குரு குலத்தவர்களில் மூன்றிலொரு பங்கினர் யுத்தத்தில் பலியாகி விட்டபோதிலும், அவர்கள் உறுதியோடு நின்றே போரிட்டனர். நிலைமை சிறிது ஆபத்தானதுதான். இந்தச் சமயத்தில் மேலும் முப்பது குரு குலக் குதிரை வீரர்கள் அறைகூவிக்கொண்டு வந்து கூடினர்.

குரு குலத்தவரின் பலம் பெருகிவிட்டது. புரு குலத்தார் கேவலமாக மடியத் தொடங்கினர். மோசமான நிலைமையைப் பார்த்து மிருகங்களுக்கு காவலாய் நின்றவர்களும் துணைக்கு வந்தனர். ஆனால் இதே சமயத்தில் மேலும் நாற்பது குரு-குல யுவ யுவதிகளோடு, மதுரா யுத்தகளத்தை அடைந்தாள். கடும் போர் நடந்தது. புரு குலத்தோரில் அநேகர் ரணகளத்திற்குப் பலியாயினர். பாக்கியிருந்தோர் உயிர் தப்பி ஓடினர். காயம் பட்டுக்கிடந்த எதிரிகளையும் கொன்று குவித்த குருகுலத்தோர், புருகுலத்தோரின் கிராமத்தை நோக்கி விரைந்தனர். அந்தக் கிராமம் அங்கிருந்து கிட்டத்தட்ட ஆறு மைல் தூரத்தில் மலைமேல் இருந்தது. அங்கு சென்ற குருகுலத்தோர், கிராமமே காலியாயிருப்பதைக் கண்டனர். ஜனங்கள் எல்லோரும் கூடாரங்களை விட்டுவிட்டு ஓடிப்போயிருந்தனர். அவர்களுடைய வளர்ப்பு மிருகங்கள் ஆங்காங்கு மேய்ந்து கொண்டிருந்தன. ஆனால் குரு-குலத்தோருக்கு எதிரிகளை விரட்டித் தாக்குவதிலேயே கவனமெல்லாம் சென்றது. புரு குலத்தோர் நன்றாக வளைக்கப்பட்டிருந்தார்கள். ஏனெனில் தப்பி உயர ஓடுவதும் எளிதாயில்லை. உயரப் போகப் போக ஆபத்தாயும், மலை ஏற்றம் கடினமாயும் இருந்தது. இருந்தாலும் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, ஆண்களும் பெண்களும் குதிரை மீதேறி ஓடிக்கொண்டிருந்தனர். கடைசியில்

குதிரை செல்ல முடியாத இடங்களும் வந்துவிட்டன. ஆகவே குதிரையை விட்டு இறங்கிக் கால்நடையாக நடக்க ஆரம்பித்தனர். குருகுலத்தோரும் அவர்களை விரட்டிக் கொண்டே வந்தனர்; குழந்தைகள், விருத்தர்கள், பெண்கள் இவர்களால் மலைமீது ஏற முடியவில்லை. ஆகவே இவர்கள் தப்பித்துக் கொள்ளச் சந்தர்ப்பம் கொடுப்பதற்காக, சில புரு குல வீரர்கள் ஒரு குறுகிய வழியில் எதிரிகளைத் தடுத்து நின்றனர்; குரு குல வீரர்களும் தங்களுடைய முழுப் பலத்தையும் உபயோகித்துத் தாக்க இடவசதி இன்மையால் புருக்களை அங்கிருந்து ஒழிப்பதற்குச் சிறிது நேரமாயிற்று.

இப்போது இரு தரப்பாரும் குதிரையை உபயோகிக்க முடியவில்லை. ஆனல் புரு குலத்தில் மிஞ்சியிருந்த ஆடவர்கள் ஒரு டஜனிருக்கலாம். ஆகவே அவர்கள் தங்கள் சமூகத்தைச் சில நாட்கள் கூடக் காப்பாற்ற முடியவில்லை. அவர்கள் ஒரு நாள் சில தைரியமான பெண்களை அழைத்துக் கொண்டு, ஒரு கணவாய் வழியாக மலையைக் கடந்து தெற்குத் திசை நோக்கிச் சென்றுவிட்டனர். இங்குமங்கும் ஒளிந்திருந்து; உயிர்ப்பிச்சை கேட்ட குருகுலக் குழந்தைகள், விருத்தர், பெண்கள் இவர்களை குருகுல வீரர்கள் பிடித்தனர். அந்தக் காலத்து முறைப்படி, கைது செய்வது கூடாதாகையால், குழந்தைகள் முதல் விருத்தர்வரை எல்லா ஆண் உருவங்களையும் கொன்று விட்டனர். பெண்களைத் தங்களோடு அழைத்துக் கொண்டனர். இம்மங்கையரைப் போல, புரு குலத்தோருடைய ஆடுமாடுகள், குதிரைகள் முதலிய உடைமைகளும் இவர்களுக்குச் சொந்தமாகி விட்டன. இப்பொழுது இந்த நதிக்கரையிலிருந்து மலையின் உச்சிவரை குருகுலத்தோரின் பிரதேசமாகிவிட்டது. பிடித்து வரப்பட்ட புரு குலப் பெண்களின் பிரச்சனையைத் தீர்ப்பதற்காக, குருகுலத் தலைவன் ஒரு தலைமுறை வரை பலதார மணத்தை அனுமதித்து ஒரு சட்டம் செய்தான். அன்றுதான் முதன் முதலாக குரு குலத்தில் பலதார மணம் அமுலுக்கு வந்தது.

---

*இன்றைக்கு இருநூறு தலைமுறைகளுக்கு முந்திய, ஒரு ஆரிய குலத்துக் கதை இது. அந்தக் காலத்தில் ஈரான் வெள்ளை ஜாதி இனத்தவரும், இந்தியரும் சேர்ந்த ஒரு குலம் இருந்தது. இரண்டும் கலந்த இந்தக் குலத்திற்கு, ஆரியர், ஆரிய குலம் என்று பெயர். ஆடு மாடுகள், குதிரைகள் இவற்றைப் பரிபாலிப்பது இவர்களுடைய வாழ்க்கைக்கு முக்கியத் தொழிலாக இருந்தது.

# புருகூதன்

**தேசம்: வட்சு நதிக்கரை (தாஜிக்ஸ்தான்,)**

**ஜாதி: ஹிந்தோ ஈரனியர்**

**காலம்: கி.மு. 2500**

கலகலவெனப் பேரிரைச்சலிட்டுக் கொண்டு வட்சுநதி பெருக்கெடுத்து ஓடுகிறது. நதியின் வலது பக்கம் உயர்ந்த மலையே அதன் கரையாக அமைந்திருந்தது. ஆனால் இடது பக்கம் மணற் பரப்பு விசாலமாய் இருக்கிறது, தூரத்தே நின்று நோக்கினால், அடர்ந்து வளர்ந்திருக்கும் தேவதாருக்களின் இருண்ட காட்சியைத் தவிர வேறு ஒன்றும் நமக்குத் தென்படாது. ஆனால், சமீபத்தில் சென்று பார்க்கும்போது, அடிபெருத்து உயரத்தில் சிறுத்து நிற்கும் தேவதாருக்களின் கிளைகளும், அவற்றின் வேல் போன்ற இலைகளும் தனித் தனியாகக் காட்சியளிக்கும். வெயிற் காலத்தின் அந்திமம் ஆயினும் இன்னும் மழைக்காலம் ஆரம் பித்து விடவில்லை. வடஇந்தியாவில் வசிப்பவர்கள், இந்த மாதத்தில் சூரிய வெப்பம் தாங்க முடியாமல் மிகவும் சிரமப் படுவார்கள். ஆனால் ஏழாயிரம் அடி உயரத்திலிருக்கும் இந்த மலைப் பிரதேசத்தில், வெப்பத்தைப் பற்றிய சிந்த னையே கிடையாது!

வட்சுநதியின் இடது கரையில் ஒரு வாலிபன் நடந்து செல்கிறான். அவனுடைய மார்பை, ஒரு கம்பளத் துணி மூடியிருந்தது. இடையை நீண்ட கம்பளத் துணியால் பட்டிபோல் சுற்றிக் கட்டியிருந்தான். கீழே ஒரு கம்பள உடை, பாதத்தில் மிதியடி; இடுப்பில் தாமிரத்தினால் செய்யப்பட்ட நீண்ட வாள் ஒன்று தொங்கிக் கொண் டிருந்தது. தலைமீதிருந்த தொப்பியை எடுத்து இடது தோளில் தொங்கும் பிரம்புக் கூடையில் வைத்துக்கொண் டான். அந்த மெல்லிய பிரம்பால் செய்த கூடையில் அவ னுக்குத் தேவையான அநேக சாமான்கள் இருந்தன. அவ னுடைய மற்றொரு தோளிலே வில்லும், அம்பறாத் தூணியும்

தொங்கிக் கொண்டிருந்தன. கையிலே ஒரு நீண்ட மூங்கில் தடி, காற்றிலே அசைந்தாடும் அவனது மிருதுவான பொன்னிறக்கேசங்கள் முதுகிலே விழுந்து புரண்டன.

மலை ஏற்றம் கடுமையாக இருந்தது. அங்கங்கே சிறிது நின்று களைப்பாறிச் செல்கிறான். அவனுக்கு முன்னால் ஆறு கொழுத்த ஆடுகள் நடக்கின்றன. அவைகளின் மேல் குதிரை ரோமங்களரல் செய்யப்பட்ட மாவு நிரம்பிய பெரிய பெரிய பைகளை ஏற்றியிருந்தான். சிவப்பு நிற நாயொன்றும் இந்த வாலிபனுக்குப் பின்னே சென்று கொண்டிருந்தது. பலவிதப் பறவைகளின் சப்தம் அந்த ஆரண்யத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தது. இவனும் சீட்டியடித்துக்கொண்டு தன் வழியே நடக்கின்றான்.

மலைமீதிருந்து வரும் சிற்றருவியின் நீரை, மரத்தால் செய்யப்பட்ட தூம்பை வைத்து வேறு பக்கம் திருப்பி விட்டிருந்தனர். தாகத்தோடு சென்ற அந்த ஆடுகள் அந் நீரைப் பருகத் தொடங்கின. பாதை ஓரத்தில் தொங்கிக் கொண்டிருந்த திரட்சைக் குலைகளைப் பார்த்த வாலிபன் ஒரு கொத்தைப் பறித்தான். ஆனால் அவை பழுக்காத காய்கள்; அவைகள் பழுப்பதற்கு இன்னும் ஒரு மாதத்திற்கு மேலாகும். ஆயினும் களைத்திருந்த அந்த வாலிபனுக்கு அவை ரொம்ப ருசியாய் இருந்தன. கொத்திலிருந்து ஒவ்வொன்றாய் எடுத்துத் தன் வாயில் போட்டுக் கொண்டான்.

நீர் பருகிய ஆடுகள், பக்கத்தே வளர்ந்து பசுமையாயிருக்கும் புற்களை மேய்ந்து கொண்டிருந்தன. அந்தச் சிவப்பு நாய் தன் எஜமானனையோ ஆடுகளையோ பின்பற்றாமல் தண்ணீருக்குள் உட்கார்ந்துகொண்டது. அதனுடைய வயிறும் தொங்கிக்கொண்டிருக்கும் நாக்கும் ஆடும் வேகத்தைப் பார்த்தால் வெப்பம் அதிகம் என்பதை உணர்த்துவதுபோல் இருந்தது. தூம்பு வழியாக விழுந்து கொண்டிருக்கும் தண்ணீரைக் குடித்துத் தன் தாகத்தைத் தணித்துக்கொண்ட வாலிபன், கைகளினால் நீரை அள்ளித் தன் முகத்தையும் கழுவிக்கொண்டான். அவனுடைய ரோஜா நிறக் கன்னங்களையும், சிவந்த உதட்டையும் மறைப்பதற்குப் பொன்னிற ரோமங்கள் இப்போதுதான் அரும்பிக் கொண்டிருக்கின்றன. ஆடுகள் ஆவலாய் மேய்வதைப் பார்த்த வாலிபன் தன் மூங்கில் கூடைக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். இரண்டு காதுகளையும் உயர்த்தித் தன்னையே கூர்ந்து நோக்கிக்

கொண்டிருக்கும் அந்தச் சிவப்பு நாயின் பார்வையைப் புரிந்துகொண்ட வாலிபன், கூடையிலிருந்து சில உலர்ந்த மாமிசத் துண்டுகளையெடுத்து, இடையில் இருந்த கூர்மை யான கத்தியால் அதை நறுக்கி நறுக்கி நாய்க்குக் கொடுத்து கொண்டிருந்ததோடு, சில துண்டுகளை தன் வாயிலும் போட்டுக் கொண்டான். இந்த நேரத்தில் மரமணியின் ''கடக் கடக்'' என்ற சப்தம் இவன் செவிகளில் விழுந்தது. சப்தம் வரும் திசை நோக்கித் தன் பார்வையைச் செலுத் தினன். கொஞ்ச தூரத்தில் புதர்களின் இடையே ஒரு கழுதை வருவது தெரிந்தது. கூர்ந்து கவனித்தான். ஒன்றன் பின் ஒன்ருக இன்னும் சில கழுதைகளும் அவற்றின் பின்னே ஒரு யுவதியும் வருவதைப் பார்த்தான். இவனைப் போலவே அவளும் உடையணிந்திருந்தாள். அவளுடைய முதுகுப் பக்கமும் ஒரு கூடை தொங்கிக் கொண்டிருந்தது. இவற்றைப் பார்த்ததும் தாஞகவே அவனுடைய வாய் சீட்டி அடிக்கத் தொடங்கிவிட்டது. எதையாவது யோசிக்கத் தொடங்கி விட்டால், அவனுடைய வாய் தாஞகவே சீட்டி அடிக்கத் தொடங்கிவிடும். சீட்டி சப்தம் கேட்ட யுவதி அந்தத் திசையை நோக்கினுலும்கூட புதர்கள் மறைத்திருந்ததால் வாலிபனுடைய உருவத்தை அவள் பார்க்க முடியவில்லை. புதர்களின் ஊடே நாற்பது-ஐம்பது கஜதூரத்தில் அவள் வந்து கொண்டிருக்கும் பொழுதே அவளுடைய அழகிய தோற்றம் அவனுடைய இதயத்தில் பதிந்துவிட்டது. அவளுடைய அவயவங்களின் முழு அழகையும் நெருங்கிப் பார்க்கும் முன்னுலேயே, அவள் எங்கு போக வேண்டியவள் என்பதைத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டான். இந்த வட்சு நதிக்கு மேலே கிராமங்கள் கிடையாதென்பதும் அவனுக்குத் தெரியும். ஆகையால் அவள் தன் பாதை யிலேயே வருபவளாய்த்தானிருக்க வேண்டும் என்பதில் அவனுக்குச் சந்தேகமே இல்லை. யுவதியின் அழகிய, ஆனல் பரிச்சயமற்ற முகத்தைப் பார்த்து, அந்த நாய் குலைக்க ஆரம்பித்தது. ''ஜப்ரா! வாயை மூடு'' என்று தன் நாயை அதட்டினன் வாலிபன்.

தனது கழுதைகளைத் தண்ணீர் அருந்த விட்டுவிட்டுத் தன்னுடைய தோளிலிருந்த பிரம்புக் கூடையைக் கீழே இறக்கத் துவங்கினள் யுவதி. தன்னுடைய திரண்ட தோள் களால் அந்தச் சுமையைத் தாங்கிக் கீழே வைத்து அவளுக்கு உதவி செய்தான் வாலிபன். அவளுடைய நன்றியுணர்ச்சி ஒரு புன்னகையாக மலர்ந்தது.

''ரொம்ப வெப்பமாயிருக்கிறது.''

''வெப்பமில்லை, மலை ஏறிவந்தால் இப்படிச் சிரமமாய்த் தானிருக்கும். சிறிது இளைப்பாறினால், களைப்பும் வியர்வையும் அடங்கிவிடும்.''

''இப்பொழுது கால நிலை நன்றாக இருக்கிறது.''

''ஆம். இன்னும் பத்துப் பதினைந்து தினங்கள்வரை மழையைப் பற்றிய பயம் கிடையாது.''

''மழையை நினைக்கும்போதே எனக்குப் பயமாக இருக்கிறது. தண்ணீரும் சேறுமாய்ப் பாதைகள் நடப்பதற்கு லாயக்கில்லாமல் போகின்றன.''

''கழுதைகள் நடப்பதென்றால் இன்னும் சிரமம்.''

''வீட்டிலே ஆட்டுக் கடாக்கள் கிடையாது. இதனாலேயே இந்தக் கழுதைகளை ஓட்டிக்கொண்டு வந்தேன். சரி, நண்பா! நீ எங்கே போகிறாய்?''

'' 'தாண்டே'ப் பக்கம். எங்களுடைய ஆடு மாடுகள் குதிரைகள் எல்லாம் அங்கேதான் இருக்கின்றன.''

''நானும்கூட அங்கேதான் போகிறேன். மாவு, தான்யம், பழங்கள், உப்பு இவைகளைக் கொண்டு சேர்ப்பதற்காகச் செல்கிறேன்.''

''அங்கே உங்கள் கால்நடைகளை, யார் கவனித்துக் கொள்வது?''

''என்னுடைய முப்பாட்டனார். அவருக்கு உதவியாக என்னுடைய சகோதர—சகோதரிகளும் இருக்கிறார்கள்.''

''முப்பாட்டனாரா? அப்படியானால் அவர் மிகுந்த விருத்தராகவல்லவா இருப்பார்?''

''ஆம் பெரிய தொண்டுக்கிழவர். அவ்வளவு வயதானவரை நாம் பார்க்கக்கூட முடியாது.''

''அந்தத் தள்ளாத கிழவர் எப்படி மந்தையைக் கவனிக்க முடியும்?''

''அவரா? இன்னும் அவருடைய சரீரம் ரொம்பப் பலமாயிருக்கிறது. அவருடைய ரோமங்கள் யாவும் நரைத்துவிட்

டாலுங்கூட, அவருடைய பற்கள் எல்லாம் உறுதியாயிருக்கின்றன. அவரைப் பார்ப்பவர்கள் ஐம்பது அல்லது ஐம்பத்தைந்து வயதுதான் மதிப்பார்கள்.''

''அப்படியானால் அவரை வீட்டிலேயல்லவா வைத்திருக்க வேண்டும்.''

''நாங்கள் என்ன செய்வது? அவர் ஒத்துக்கொண்டால் தானே. நான் பிறப்பதற்கு முன்னுலிருந்தே அவர் கிராமத்திற்கு வருவதில்லையாம்.''

''கிராமத்திற்கு வருவதில்லையா?''

''ஆம், கிராமம் என்றாலே அவருக்கு வெறுப்புத்தான். 'மனிதன் ஒரே இடத்திலேயே இருப்பதற்காகப் படைக்கப் படவில்லை' என்று அடிக்கடி கூறுவார். எத்தனையோ புராதன விஷயங்களை எல்லாம் எங்களுக்குச் சொல்லுவார். சரி நண்பா! உன்னுடைய பெயரை நான் தெரிந்துகொள்ளலாமா?''

''புரு வம்சத்தைச் சேர்ந்த மாத்ரி புத்ரனான புருகூதன். சகோதரி! உன்னுடைய பெயர்?''

''ரோசனா மத்ர வம்சம்?''

''அப்படியானால் நீ என் மாமனார் குலத்துப் பெண் அல்லவா? மேல் மத்ர வம்சமா, அல்லது கீழ்மத்ர வம்சமா?''

''மேல் மத்ர வம்சம்.''

வட்சுநதியின் இடது பக்கத்துக் கரையில் புரு வம்சத்தாரின் கிராமம் இருக்கிறது. ஆனால், அந்தக் கரையின் அடிவாரம், அதாவது கரையிலிருந்து மைதானம்வரை உள்ள சரிவுப் பூமி மத்ர வம்சத்தாரின் ஆதிக்கத்தில் இருந்தது. இவர்களைக் கீழ் மத்ரர்கள் என்றும், நதியின் வலப் பக்கத்துக் கரையிலிருந்தவர்களை மேல் மத்ரர்கள் என்றும் அழைக்கிறார்கள். வலப் பக்கத்துக் கரையின் அடிவாரம் பாஷ்வ வம்சத்தாரின் ஆதிக்கத்தில் இருந்தது. ரோசனா மேல் மத்ர வம்சத்தைச் சேர்ந்தவள். புருகூதனுடைய மாமாவின் வீடும், மேல் மத்ரர்களுடைய கிராமத்தில் இருந்தது. ஒரு வம்சத்தார் வசிக்கும் கிராமம் அல்லது அவர்களுடைய ஆதிக்கத்திலுள்ள பூமி இவைகளையும் அவற்றில் வசிக்கும் மக்களையும், அந்த வம்சத்தின்—

குலத்தின் பெயரையும் சேர்த்துச் சொல்லியே அழைப்பது வழக்கம்.

''ரோசனு! இன்று நாம் அந்தப் பக்கத்தை அடைவது முடியாத காரியம். தனிமையாக வருவதற்கு உனக்கு எப்படித் தைரியம் ஏற்பட்டது?''

''இரவு நேரத்தில் புலிகளின் தாக்குதலிலிருந்து இந்தக் கழுதைகளைக் காப்பாற்றுவது சிரமம் என்பதை நான் அறிவேன். ஆனுல் என்ன செய்வது? என்னுடைய தந்தைக்குத் தேவையான உணவுப் பொருள்களைக் கொண்டு சேர்க்க வேண்டியது மிகவும் அவசரமாகிவிட்டது. புருகூத! என்மீது அவருக்கு ரொம்ப வாஞ்சை. இப்போது அந்தப் பக்கம் செல்பவர் அதிகமாகையால், வழியிலே யாராவது துணை கிடைக்கும் என்று நம்பியே வந்தேன். மற்றும், நெருப்பை ஏற்றிக்கொண்டால் துஷ்ட மிருகங்கள் நெருங்கி வராது என்று தைரியமுங் கூடத்தான்.''

''ரோசனு! வழியில் நடந்து செல்லும்போதேநெருப்பை உண்டாக்கி விடுவது சுலபமான காரியமல்ல. உன்னிடத்தில் நெருப்பை உண்டாக்கக்கூடிய அரணி (தீக்கடைகோல்) இருக்கிறதா?''

''ஆம், வைத்திருக்கிறேன்.''

''இருந்தாலும் அதைக்கொண்டு கடைந்து அக்கினியை உண்டாக்கி விடுவது சுலபமில்லை. என்னிடத்தில் ஒரு புனிதமான அரணி (தீக்கடைகோல்) இருக்கிறது. அது எங்களுடைய வீட்டில் பாட்டனுர் காலத்திலிருந்து கையாளப் பட்டு வருகிறது. இந்த அரணியைக் கொண்டு கடைந்த நெருப்பு அநேக யாகங்களுக்கும், தேவ பூஜைகளுக்கும் உதவி இருக்கிறது. அக்கினி பகவானுடைய மந்திரமும் எனக்குத் தெரியும். நெருப்பைப்பற்றி நமக்கு வழியில் கவலை இல்லை.''

''புருகூத! இப்போது நாம் இரண்டு பேரிருப்பதால் புலியுங்கூட நெருங்கிவரப் பயப்படுமல்லவா?''

''சந்தேகமில்லாமல்; இன்னும் நம்முடைய நாய் வேறு இருக்கிறது.''

இவ்விதம் கூறிய புருகூதன் தன் நாயின் பெயரைச் சொல்லி ''ஜப்ரா, ஜப்ரா'' என்று அழைத்தான். உடனே

அது வாலை ஆட்டிக்கொண்டு சமீபமாக வந்து அவன் கால்களை நக்கியது.

இதைப் பார்த்த ரோசனுவும், "ஜப்ரா, ஜப்ரா" என அழைத்தாள். உடனே அது அவளுடைய கால்களை மோந்து பார்க்க ஆரம்பித்தது. அவளும் அதனுடைய முதுகைத் தடவிக் கொடுத்தாள். வாலை ஆட்டிக்கொண்டே அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது.

"ரோசனு! ஜப்ரா நல்ல அறிவுள்ள நாய்!"

"புஷ்டியாயும் இருக்கிறது."

"ஆம். ஓநாய், புலி, கரடி முதலிய எந்த மிருகங்களைக் கண்டாலும் அது பயப்படுவதில்லை."

கழுதைகளும் ஆடுகளும்வயிறு நிறைய மேய்ந்திருந்தன. இவர்களும் களைப்பை ஆற்றிக்கொண்டார்கள். ஆனதால், பாதசாரிகளாகிய இந்த இருவரும்—யுவனும் யுவதியும் தங்கள் நடையை மேற்கொண்டார்கள். ஜப்ராவும் இவர்களுக்குப் பின்னே நடந்தது. ஊன்றி நடப்பதற்குக் கையிலே தடி இருந்தாலும்கூட மலை ஏற்றம் கடுமையாகஇருந்ததால், அடிமேல் அடியெடுத்து வைத்தே நடக்க முடிந்தது. வழி நெடுக, புருகூதன் திராட்சை, ஸ்ட்ராபரி முதலிய பழங்களைப் பறித்து ரோசனுவுக்கும் கொடுத்தான். ஆனல் அவைஇன்னும் பழுப்பதற்கு நாளாகும். அவைகள் நன்ருகப் பழுத்திருக்கும் காலத்தில் வரவில்லையே என்று அவனுக்கு வருத்தமாக இருந்தது.

பேசிக்கொண்டே இவர்கள்மாலைவரை நடந்தனர். சூரியன் அஸ்தமிக்கும் நேரம் கல-கலவெனச் சப்தமிட்டுக் கொண்டு வரும் சிற்றருவியையும் அதற்குப் பக்கத்தே கொஞ்சம் சம வெளியையும் பார்த்த இருவரும் அதுவே இராத்திரிப்பொழுதைக் கழிப்பதற்குத் தகுந்த இடம் எனத் தீர்மானித்தனர். உடனே புருகூதன், தன்னுடைய பையை இறக்கிக் கீழே வைத்துவிட்டு ரோசனுவினுடைய சுமையை இறக்கினன். அப்பால் இருவரும் கழுதைகள், ஆடுகளின் மீதிருந்த சுமைகளை இறக்கினர்கள். ஆடுகளைப் பலவந்தமாகப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து சுமையை அப்புறப்படுத்தத்தான், கொஞ்சம் தாமதமும் சிரமமும் ஏற்பட்டது. சுமையை இறக்கிய உடனே கழுதைகள் தரையில் இரண்டொரு முறை புரண்டதும் புல்லை நோக்கிப் போயின.

அந்த வெளியிடத்தின் ஒரு பாகத்தில், சில காய்ந்த கட்டைகளும் சாம்பலும் கிடப்பதைப் பார்த்த புருகூதன், அந்தச் சாம்பலைத் தள்ளினான். கீழே நெருப்பு இருந்தது. அதைப் பார்த்த இருவரும் அளவற்ற ஆனந்தம் அடைந்தனர். உடனே, ரோசனா, பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அருவியை நோக்கி நடந்தாள். புருகூதன், சில சிறிய குச்சிகளையும் காய்ந்த சருகுகளையும் அந்த நெருப்பின்மீது போட்டு, பெரு நெருப்பை உண்டாக்கி விட்டான். இதற்குள் யுவதியும் தண்ணீர் கொண்டு வந்துவிட்டாள். புருகூதன் ஒரு சிறிய தாமிரப் பாத்திரத்தை முன்னே வைத்துக் கொண்டு, பசுவினுடைய தொடைப் பாகத்தின் மாமிசத்தைக் கத்தியால் அறுத்துக்கொண்டே, யுவதியுடன் வார்த்தையாடத் தொடங்கினான்.

''ரோசனா! நாளைப் பிற்பகலுக்குள் நாம் மலை உச்சியை அடைந்து விடுவோம். அதிலிருந்து உங்களுடைய பசுத் தொழுவம் ரொம்பத் தூரம் இராதே?''

''அந்த இடத்திலிருந்து கிழக்குத் திசையில் நான்கு மைல் தூரத்தில் இருக்கிறது.''

''என்னுடையது அதே திசையில் எட்டு மைல் தூரத்திலிருக்கிறது ரோசனா! உங்களுடைய பசுக் கொட்டிலின் வழியாகத்தான் நான் போகவேண்டியிருக்கிறது.''

''அப்படியானால் என்னுடைய முப்பாட்டனாரை நீ பார்க்க முடியும். உனக்கும் அவருக்கும் சந்திப்பு ஏற்பட வேண்டுமே என்று நான் எண்ணிக் கொண்டிருந்தேன்.''

''ரோசனா! இன்னும் வழியிலே நாம் தாமதிக்க வேண்டியது ஒரே ஒரு நாள்தான். இப்பொழுது இந்த மாமிசம் நமக்குப் போதுமல்லவா?''

''போதும் ஏராளம். என்னிடத்திலும், கன்றினுடைய தொடை மாமிசம் இருக்கிறது. அதிக நேரம் வைத்திருந்தாலும் மாமிசம் கெட்டுப் போகும்.''

''பரவாயில்லை. இதில் உப்புப் போட்டுச் சமைத்தால் ருசியாயிருக்குமா?''

''மிக மிக நன்றாயிருக்கும். புருகூத! நான் கன்றின் கால்களும் வைத்திருக்கிறேன். மாமிசம், கால் இவற்றோடு

கொஞ்சம் மாவையும் சேர்த்து அருமையான சூப் செய்ய லாம். இப்போது ஆரம்பித்தால் நாம் நித்திரைக்குப் போவதற்குள் சூப்புத் தயாராகிவிடும்.''

''நான் தனிமையாய் இருந்தால் சூப்புப் போடுவது கிடையாது. அதற்கு ரொம்ப நேரம் ஆகிறது. ஆனல் இன்று நாம் இந்த ஆடுகளையும், கழுதைகளையும் பிடித்துக் கட்டிவிட்டுச் கொஞ்சம் பேசிக் கொண்டிருப்போம். அதற் குள் சூப்பும் தயாராகிவிடும்.''

''என்னுடைய முப்பாட்டனருக்கு நான் வைக்கும் சூப்பு ரொம்பப் பிடிக்கும். இது என்ன தாமிரப் பாத்திர மல்லவா?''

''ஆம் ரோசன? ரொம்பக் கிராக்கி. ஒரு குதிரையும் இந்தச் செம்புப் பாத்திரமும் சரிக்குச் சரி. இருந்தாலும் வழிப் பயணத்திற்குச் செளகர்யமாயிருக்கிறது.''

''அப்படியானல், உன்னிடம் கால்நடைகள் அதிகமா யிருக்கும்.''

''ஆம், ரோசன! தான்யமும் ஏராளமாயிருக்கிறது. ஆகையால்தான் ஒரு குதிரையை விலையாகக் கொடுத்து விட்டு இந்தச் செம்புப் பாத்திரத்தை வாங்கினேன். சரி, இருக்கட்டும். மாமிசத்தைத் துண்டு துண்டாக நறுக்கி விட் டேன். நீ தண்ணீரை விட்டு, உப்பும் போட்டு, நெருப்பிலே வை. நான் அந்தப் பக்கம் நெருப்புத் தயார் செய்கிறேன். அப்பால் கொஞ்சம் புல் அறுத்துக் கொண்டு வந்து போட்டு, ஆடுகளையும் கழுதைகளையும் மத்தியில் இந்த இடத்தில்கட்ட வேண்டும். நமக்குக் கன்றின் மாமிசம் எவ்வளவு பிரியமோ, அதேமாதிரி புலிக்குக் கழுதை மாமிசம் பிரியம் என்பது உனக்குத்தெரியுமே! ஜப்ரா, அதுவரை நீயும் இதை ருசி பார்த்துக் கொண்டிரு'' என்று சொல்லிக் கொண்டே, கொஞ்சம் மாமிசம் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு எலும்புத் துண்டை அதன் முன்னே போட்டான். உடனே அந்த நாய் வாலை ஆட்டிவிட்டு, எலும்பைத் தன் கால்களுக் கிடையே போட்டு அழுத்திக்கொண்டு, பற்களால் அதைக் கடிக்கத் தொடங்கியது.

புருகூதன், தன் மேல்அங்கியையும் இடுப்பிலே கட்டி யிருந்த நீண்ட இடைக் கச்சையையும் கழற்றினன். உடையி லிருந்து வெளிவந்த அவனுடைய சதை திரண்ட புஜங்

களும் முன்னே நிமிர்ந்து அகன்ற மார்பும், அந்த இருபது வயது வாலிபனின் எல்லையற்ற பலத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கின. அவன் வேலை செய்யும்போது ஏற்படும் ஒவ்வொரு அங்கங்களின் அசைவும் அவனுடைய திறமையை எடுத்துக் காட்டின. கூடையிலிருந்து சிறு அரிவாளை யெடுத்துக் கொஞ்ச நேரத்திற்குள் ஒரு சிறு குன்று மாதிரி புற்களை அறுத்துக் குவித்துவிட்டு, கழுதைகளைக் காதைப் பிடித்து இழுத்து வந்து புற்குவியலுக்கு முன்னால் கட்டினான். அப்படியே ஆடுகளையும் கொண்டு வந்து சேர்த்தான்.

வேலைகளெல்லாம் முடிந்ததும் புருகூதன் நெருப்புக்குச் சமீபமாகப் போய் உட்கார்ந்தான். ரோசனை ஒரு சிறிய தட்டினால், கொதிக்கும்போது மேலே வரும் மாமிசத்துண்டுகளை எடுத்து எடுத்து ஒரு தோலின்மீது வைத்துக் கொண்டே இருந்தாள். புருகூதன், தன்னுடைய கூடையிலிருந்த ஒரு தோலை எடுத்துப் பூமியின் மீது விரித்தான். தண்ணீர் வைத்துக் கொள்ளவும்; குடிக்கவும், மரத்தினால் செய்யப்பட்ட இரண்டு சிறிய பாத்திரங்களையும் எடுத்து வெளியில் வைத்தான். அவைகளோடு கூட அவனுடைய புல்லாங் குழலும் வெளியே வந்து விழுந்தது! பச்சிளங் குழந்தை தவறிவிழ பதறி எடுக்கும் தாயைப்போல, அந்தக் குழலை எடுத்துத் துடைத்து முத்தமிட்டுத் திரும்பவும் கூடையிலே வைத்தான். இதைப் பார்த்துக் கொண்டிருந்த ரோசனை வியப்புற்று.

"புருகூத! உனக்குக் குழல் ஊதத் தெரியுமா?"

"ரோசனை! இந்த வாத்தியம் எனக்கு மிகவும் பிரியமானது. இதோடு என்னுடைய ஜீவனும் ஒட்டியிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது."

"எனக்காகக் கொஞ்சம் அதை வாசிக்க மாட்டாயா?"

"இப்பொழுதா? சாப்பிட்ட பிறகா?"

"இப்பொழுது கொஞ்சம் நேரம்."

"நல்லது" என்று கூறிய புருகூதன், குழலை எடுத்துத் தன் உதடுகளிலே வைத்தான். அவனது விரல்கள் அந்தக் குழலின் சிறு துவாரங்களிலே நடனமாடின. அங்கு நின்ற விசாலமான விருட்சங்களின் நிழலிலிருந்து வெளி வந்து மெது மெதுவாக எங்கும் பரவிக்கொண்டு வரும் மாலை

இருளின் மௌனத்திலே, ஆகாயம் வரை எதிரொலிக்கும் அந்த இனிய இசையானது, திசைகள் தோறும் ஒரு மந்திரம் போன்று பரவியது. ரோசனு தன்னை மறந்தவ ளாய் அமர்ந்திருக்கிருள். அவளுடைய ஏனைய புலன்களெல் லாம் ஸ்தம்பித்துவிட ஒரே ஒரு புலன் மாத்திரம் இந்த மதுர கானத்தை அள்ளி, அள்ளி இவளுக்கு ஊட்டிக் கொண் டிருந்தது. இந்த நேரத்தில், புருகூதன், இதய ராணியின் பிரிவால் துடிக்கும் தலைவனின் வேதனை ஒலியை, தனது குழலின் மூலம் வெளியிட்டுக் கொண்டிருந்தான். இசை நின்றது. சொர்க்கத்திலே மிதந்து கொண்டிருந்த தன்னை, யாரோ திடீரென்று பூமியில் தூக்கி எறிந்து விட்டதாக உணர்ந்தாள் ரோசனு. அவளுடைய கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

''புருகூத! உன்னுடைய இசை இனிமையாயிருந்தது. மிக மிக இனிமையாயிருந்தது; அழகாயிருந்தது. இந்தமாதிரி இன்னிசையை நான் இதுவரை கேட்டதே இல்லை.''

''ரோசனு! மற்றவர்களும் இப்படியேதான் கூறுகிருர் கள். ஆனல் அந்த இனிமையை நான் அறியமாட்டேன். குழலை இதழ்களில் வைத்த மாத்திரத்தில், நான் எல்லாவற் றையும் மறந்து விடுகிறேன். எனக்கு இந்தக் குழல் ஒன்றே போதும், இதுதான் எனக்குச் சகலமும். உலகத்தின் மற்ற எந்தப் பொருளும் என்னைப் பொறுத்தவரை இதற்கு ஈடாகாது.''

''புருகூத! வா, சாப்பிடுவோம். மாமிசம் ஆறிப்போய் விடும்.''

''ரோசனு! நான் வரும்போது என்னுடைய தாயார் இந்தத் திராட்சை ரசத்தைக் கொடுத்தாள், கொஞ்சமிருக் கிறது. மாமிசம் புசிக்கும்போதே இதையும் அருந்தினல் நன்றுயிருக்கும்!''

''மது உனக்கு ரொம்பப் பிரியமா?''

''பிரியம் என்று சொல்ல முடியாது. பிரியம் எப் பொழுதும் திருப்தி அடைவதில்லை. ஆனல் என்னுடைய கண்கள் கொஞ்சம் சிவப்பேறியவுடன் ஒரு துளியும் அருந்த மாட்டேன்.''

''நானுங்கூட இதே மாதிரிதான். மதுவை மிதமிஞ்சிக் குடித்துவிட்டு மயங்கிக் கிடக்கிருர்களே, அவர்களைப் பார்த் தாலே எனக்கு வெறுப்புதான்.''

ரோசனு தன்னுடைய மரத்தினுல் செய்யப்பட்ட சிறிய பாத்திரத்தை எடுத்து முன்னே வைத்துக்கொண்டாள். மூன்றிலொரு பகுதி மாமிசத்தை நாய்க்குப் போட்டுவிட்டு, பாக்கியை அவர்கள் இருவரும்சாப்பிட்டு முடித்தனர். அவர் களைச் சுற்றி எங்கும் ஒரே மை இருட்டு, பெரிய பெரிய கட்டைகளில், பிடித்தெரியும் நெருப்பின் ஒளியால் சிறிது தூரம் பரவியுள்ள வெளிச்சத்தைத் தவிர வேறு ஒன்றுமே தென்படவில்லை. ஆனுல் துஷ்ட மிருகங்கள், வண்டுகள் இவைகளின் சப்தம் மாத்திரம் கேட்டுக்கொண்டிருந்தது. பேச்சிலும், இடை இடையே குழல் வாசிப்பதிலும், நேரத் தைக் கழித்தார்கள்; சூப்பும் தயாராகிவிடவே, இருவரும் சுடச்சுட சூப்பைக் குடித்தனர். இரவு வெகு நேரமாகி விட்டது. ரோசனு ஒரு பெரிய தோலைப் பூமியில் விரித்து, அதன்மீது படுத்துக்கொண்டாள். புருகூதன் பெரிய கட்டை களை மேலும் நெருப்பில் போட்டான். அது இரவு பூராவும் எரிந்துகொண்டிருக்க வேண்டுமல்லவா? ஆடு, கழுதைகள் இவற்றின் முன்னே புல்லை எடுத்துப் போட்டான். அப்பால் வனதேவதைகளை வணங்கிவிட்டுத் தன் ஆசனத்தில் படுத்துக் கொண்டான்.

மறுநாள் அதிகாலையில் எழுந்தபோது, கடந்த ஓர்இரவு, தங்கள் இருவரையும் உடன் பிறந்தோராக ஆக்கிவிட்டதை அவர்கள் உணர்ந்தனர். காலை உதயத்தில் ரோசனுவைப் பார்த்த புருகூதனுக்குத் தன்னை அடக்கிக்கொள்ள முடிய வில்லை.

''சகோதரி! உன்னுடைய கன்னங்களிலே முத்தமிட என் மனம் விழைகிறது.''

''புருகூத! என் மனமும்தான். இப்போது நாமிருவரும் உடன் பிறந்தோர் ஆகிவிட்டோம்.''

புருகூதன், விரிந்து கிடக்கும் அவளுடைய கூந்தலைக் கோதிக்கொண்டே அவளது இரு கன்னங்களிலும் முத்தமிட் டான். அவர்கள் இருவருடைய முகங்களும் மலர்ந்தன; நான்கு விழிகளிலும் நீர் மல்கி இருந்தது. முகம் கழுவிக் கொண்ட அவர்கள், கொஞ்சம் மாமிசம், மாவு இவற்றைப் புசித்ததும் தங்கள் பயணத்தை மேற்கொண்டனர். வழியில் இரண்டு மூன்று இடங்களில் சிறிது தாமதித்துத் தாமதித்து நடந்தாலும்கூட, பேசிக்கொண்டே சென்ற இவர்களுக்கு வழியின் தூரமே தோன்றவில்லை. அதுமட்டுமல்ல; மலையை

எப்பொழுது கடந்தோம்; எப்பொழுது அந்தப் பெரிய கிழவரைச் சந்தித்தோம் என்பதுங்கூடத் தோன்ருமலிருந்தது இவர்களுக்கு. ரோசனு தன்னுடைய முப்பாட்டனுரிடம் புருகூதனை அறிமுகப்படுத்தினுள். அந்தப் பழங் கிழவரும், புரு குலத்தோருடைய வீரத்தைச் சொல்லிப் புகழ்ந்து கொண்டே புருகூதனை வரவேற்று உபசரித்தார்.

## 2

மலையின் இந்தச் சரிவிலே, மத்ரர்களுடைய சிறிய கிராமம் இருந்தது. இதிலுள்ள வீடுகள் யாவும் தற்காலிகமானவை. புற்களாலும், மூங்கில்களாலும் வேயப்பட்டிருந்தன. இதன் அடிவாரத்தில் மணற்பாங்கிலும் கல்பாறையிலுங்கூட, அடர்ந்த காட்டையும், பெரிய தேவதாரு மரங்களையும் பார்த்து வந்திருக்கிருேம். ஆனுல் இந்த மலைச்சிகரத்திலோ மரங்கள் என்ற பேச்சே கிடையாது; சமதளத்தையும் காண முடியவில்லை.

பசும் புற்களும், சில பத்தைகளும்தான் பாறைகளை மறைத்திருக்கின்றன; ஆங்காங்கு ஆடு மாடுகள், குதிரைகள் முதலிய மிருகங்கள் புற்களை மேய்ந்துகொண்டு திரிகின்றன; அவைகளின் இளங் கன்றுகள் குதித்து விளையாடிக்கொண்டிருக்கின்றன. இந்த வனப்பு மிக்க பூமியைப் பார்ப்பதனுல் தான், அந்த மத்ர விருத்தர், ''மனிதன் ஒரே இடத்திலேயே இருப்பதற்காகப் படைக்கப்படவில்லை'' என்று அடிக்கடி கூறுகிருர். பெரிய கிழவருடைய குடிசை இந்த மாதம் இங்கே இருக்கும்; புற்கள் குறைந்தவுடனே வேறு இடத்திற்குப் போய்விடும். பால், தயிர், வெண்ணெய், மாமிசம் இவை இங்கு ஏராளம். குடிசைக்குள்ளே எங்கு பார்த்தாலும், இந்தப் பொருள்களே நிறைந்திருக்கின்றன. பதினைந்து அல்லது இருபது தினங்களுக்கு ஒரு முறை, கிராமத்திலிருந்து இங்கு வந்து, வெண்ணெய், மாமிசம் இவற்றைக் கொண்டுபோவார்கள். பனிக்காலத்தில், இங்கு அதிகமாகப் பனி பெய்யும் அந்தக் காலத்திலுங்கூட, இங்கேயே, தங்கி இருப்பதில்தான் கிழவருக்கு விருப்பம். ஆனுல் ஆடு, மாடுகளும், குதிரைகளும் பனிக்கட்டிகளைத் தின்று ஜீவிக்க முடியாதல்லவா? ஆனதால், கீழே சமவெளிப் பிரதேசத்திலுள்ள கிராமத்திற்கு இவைகள் கொண்டு போகப்படும்.

பெரியவர் மட்டும் அப்பொழுது வழியிலிருக்கும் காட்டுப் பிரதேசங்களில் இங்குமங்குமாகத் தங்கிவிடுவார். கிராமத்தின் பெயரைக் கேட்டாலே அவருக்கு ஒரே வெறுப்பு.

ரோசனுவும், புருகூதனும், பெரியவர் குடிசையை அடைந்தபோது, பகல்பொழுது இன்னும் பாக்கி இருந்தது.

சாமான்களை இறக்கிவிட்டு இவர்கள் அமர்ந்ததும், கிழவர் வேடிக்கை செய்துகொண்டே குதிரைப் பால் வைக்கப்பட்டிருந்த பாத்திரத்தை எடுத்து, இவர்கள் இருவருக்கும் முன்னே வைத்தார். பாலைக் கொஞ்சம் அருந்தியதுமே இவர்களுக்குப் பயணத்தால் ஏற்பட்டிருந்த களைப்பெல்லாம் பறந்துவிட்டது. அன்று மாலையில் சில கன்றுகளை ஓட்டிக்கொண்டு கிராமத்திலிருந்து ரோசனுவினுடைய சகோதர சகோதரிகளும் வேறு சில சிறுவர்களும் இங்கு வந்து சேர்ந்தனர். அன்று முழுவதும் ரோசனு பெரியவரிடம் புருகூதனுடைய குழல் வாசிப்பைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தாள். வாழ்க்கையை ரசித்து அனுபவத்திலேயே மூழ்கியிருக்கும் கிழவர், இனி புருகூதனைச் சும்மா விடுவாரா? அங்குள்ள எல்லா வாலிபர்களுக்குமே குழல் வாத்தியமென்றால் ரொம்பப் பிரியம். அன்று இரவு நடந்த நாட்டியத்திலும், புருகூதன் தன்னுடைய சாமர்த்தியத்தைப் புலப்படுத்தினன்.

மறுநாள் காலையில், புருகூதன் தன் பயணத்தைத் துவக்க விரும்பினன். அந்தப் பழங்கிழவர் அத்தனை சுலபமாக விட்டுவிடுவாரா? பகல் உணவிற்குப் பிறகு கிழவர் தமது பழங்கதையைத் துவக்கினர். அவர் கதையைத் துவங்குவதற்குக் காரணப் பொருளாய் அமைந்தது புருகூதன் கொண்டுவந்த செம்புப் பாத்திரம்.

''இந்தத் தாமிரத்தையும், நெல் வயல்களையும் பார்த்தாலே என் நெஞ்சம் எரிகிறது! வட்சு நதிக்கரைக்கு இந்தப் பொருள்கள் வந்ததிலிருந்துதான், பாவமும் அதர்மமும், பெருகிவிட்டன. தேவதைகளுக்குங்கூடக் கோபம்; எங்கு பார்த்தாலும் அம்மை வியாதி. இவைமட்டுமா? ஏராளமாகக் கொலையும், குத்து வெட்டும்.''

''அப்படியானல். தாத்தா, இந்தப் பொருள்கள் அந்தக் காலத்தில் இருக்கவில்லையா?''

''இல்லை. நான் சிறு பையனுயிருந்தபோது தான் இவைகள் தலைகாட்டின. என்னுடைய பாட்டனர் இவற்

றின் பெயர்களைக்கூடக் கேட்டதில்லை. அந்தக் காலத்திலே கல், எலும்பு, கொம்பு, மரம் இவைகளைக் கொண்டுதான், எல்லா ஆயுதங்களையும் செய்து கொள்வார்கள்.''

''மரங்களை எப்படி வெட்டுவார்கள்.''

''கல்லால் செய்த கோடரியால்.''

''ரொம்ப நேரமும் செல்லும்; நன்றாகவும் வெட்ட முடியாதே?''

''எதை எடுத்தாலும் அவசரம். இந்த அவசரப் புத்தி தானே நம்மைச் சீரழித்துவிட்டது. அறுத்துப் போட்டால் இரண்டு மாதங்களுக்குச் சாப்பிடலாம்; ஏறிச் சவாரி செய்வதாயிருந்தால் வாழ்க்கை பூராவுக்கும் போதும். அப்படிப்பட்ட ஒரு குதிரையைக் கொடுத்துவிட்டு ஒரு தாமிரக் கோடரி வாங்கி விடுகிறார்கள்: இதை வைத்துக் கொண்டு என்ன செய்வதாம்? காடுகளிலுள்ள மரங்களை வெட்டிச் சாய்க்கலாம்: கிராமம் கிராமமாக ஜனங்களை வதை செய்து குவிக்கலாம், காட்டிலுள்ள மரங்கள்தான் மௌனமாயிருக்கும். ஒரு கிராம ஜனங்களுமா மௌனமாய் இருப்பார்கள்? அவர்களும் இதே மாதிரிக் கோடரியைத் தூக்குவார்கள், இந்த ஆயுதங்கள் வந்துதான் யுத்தத்தை இன்னும் கொடுமையானதாய்ச் செய்துவிட்டன. இந்த ஆயு தங்கள் பட்ட காயங்களில் விஷம் உண்டாகிறது. அந்தக் காலத்தில் கல்லிலே செய்யப்பட்ட பாணங்களை உபயோகித் தார்கள், இவைகளைப்போல் அந்தப் பாணங்கள் கூர்மை யாய் இருக்கவில்லை என்பதை ஒத்துக் கொள்கிறேன். ஆனாலும், நல்ல பலவானுடைய கையிலிருந்து விடப்பட்ட கல் பாணங்கள் நல்ல வேலையையே செய்தன. இப்பொழுது இந்தத் தாமிர ஆயுதங்கள் தலைவிரித்தாடும் இந்தக் காலத் தில் பால் குடி மாறாத குழந்தைகூடப் புலி வேட்டையாட நினைக்கிறது! இக்காலத்தில் யார்தான் வில்வித்தையில் நிபுணனாகப் பிரியப்படுவான்?''

''தாத்தா! நான் தங்களுடைய ஒரு வாக்கியத்தை ரொம்ப ரசிக்கிறேன். 'மனிதன் ஒரே இடத்திலேயே இருப் பதற்காகப் படைக்கப்படவில்லை' என்ற இந்த வாக்கியம் உபதேசம் மாதிரி என் மனதைக் கவர்கிறது.''

''குழந்தாய்! முதல் நாள் கழித்த அதே இடத்தில் அடுத்த அடுத்த நாட்களிலும் மலஜலம் கழித்தால் அது

எவ்வளவு அசுத்தமாயிருக்கும்? இந்தச் சமயம் எங்களுடைய குடிசைகள் இங்கு இருக்கின்றன. இங்குள்ள புற்களை எங்கள் கால் நடைகள் மேய்கின்றன. புற்கள் தீர்ந்து எங்கள் குடிசைகளைச் சுற்றி மலஜலங்கள் காட்சியளிக்கத் தொடங்கிவிட்டால், இந்த வனத்தைவிட்டு நாங்கள் வேறு இடத்திற்குச் சென்றுவிடுவோம், அந்தப் புதிய வனத்தில் புற்களும் ஏராளமாயிருக்கும். பூமி, தண்ணீர், காற்று இவைகளும் எவ்வளவு பரிசுத்தமாயிருக்கும் தெரியுமா!''

''ஆம், தாத்தா! இப்படிப்பட்ட பூமியைத்தான் நானும் விரும்புகிறேன். அந்த நிர்மலமான வனத்திலேதான் என்னுடைய குழல் இனிமையான கானத்தை எழுப்பும்.''

''நீ சொன்னது சரியான பேச்சு, குழந்தாய்! அந்தக் காலத்திலே, இந்தமாதிரிக்குடிசைகள் அதிகமாயிருந்தஇடத்தைக் கிராமம் என்று கூறினார்கள். அந்த கிராமம் அதே இடத்தில் அதிகமாகப் போனால் மூன்றுநான்கு மாதங்களுக்கு மேல் இருப்பதில்லை. ஆனால் இன்றைய கிராமங்களோ, தலைமுறை தலைமுறையாக வசிப்பதற்கு அமைக்கப்படுகின்றன. கல், மரம், மண் முதலியவைகளைக்கொண்டு சுவர் எழுப்புகிறார்கள். இதற்குள் காற்றுக்கூடப் புகமுடியாது, கல்லையும் மரத்தையும் போட்டு மூடிவிட்டால் காற்று எப்படி உள்ளே போகும்? இன்று வாயினால் மட்டுமே அக்னியை, அக்னி தேவதை என்கின்றனர். வாயுவை வாயு பகவான் என்று கூறுகிறார்கள். ஆனால் இவர்களுடைய இதயத்திலே அதற்குரிய மரியாதையைக் காணோம்! இதனாலே எத்தனை புதிய புதிய வியாதிகள் வருகின்றன? இவர்கள் மீது அந்தத் தெய்வங்கள் கோபத்தைச் செலுத்துவதில் பிசகொன்றும் இல்லையே.''

''தாத்தா! இந்தத் தாமிரக் கோடரி, ஈட்டி, கத்தி முதலிய ஆயுதங்களை எப்படி நாம் ஒழிக்க முடியும்? இவைகளை நாம் ஒழித்துவிட்டால், நம்முடைய எதிரிகள் நம்மை ஒரே நாளில் ஒழித்து விடுவார்களே!''

''நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால், இரண்டு மாதங்களுக்கு உணவாகவோ அல்லது வாழ்நாள் பூராவும் வாகனமாகவோ உபயோகப்படக்கூடிய குதிரையை மகிழ்ச்சியோடு கொடுத்துவிட்டு இந்தத் தாமிர ஆயுதங்களை வாங்கும் முட்டாள் தனத்தை மட்டுமா செய்கிறார்கள்? இந்தக் கீழ் மத்ரர்களும், பர்ஷுக்களும், பூமி மாதாவினுடைய வயிற்

றையும் அல்லவா கிழிக்கிறார்கள்.* இந்த வட்சு நதி எதுவரை போகிறதென்பது எனக்குத் தெரியாது, யாருக்கும் தெரியாது. ஆனால் இதைப் பற்றிப் பொய்யர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? பூமியின் கடைசியில் எங்கேயோ ஏராளமான தண்ணீர் இருக்கிறதாம்; இந்நதி அதிலே சென்று கலக்கிறதாம்! எவ்வளவு பெரிய பொய்! கீழ் மத்ரர்கள்—பர்ஷுக்கள் இவர்களுடைய பூமிக்கு அந்தப் பக்கம் வட்சுநதி சமதளத்தில் ஓடுகிறது. அங்கே பொய்யர்களான தேவ சத்துருக்கள் வாழ்கிறார்கள். அவர்கள் சொல்லும் பொய்யைஇன்னும் கேள் அங்கே முரட்டுக்கால்களையுடைய குன்றுகள் மாதிரி பெரிய பெரிய பிராணிகள் இருக்கிறதாம். இன்னும் என்னென்னமோ சொன்னார்கள்; நான் மறந்து விட்டேன். எனக்கு ஞாபக சக்தியும் வரவரக் குறைந்து கொண்டே வருகிறது.''

''தெரியும் தாத்தா! ஒட்டகம். ஆனால் இது குன்று மாதிரி அவ்வளவு பெரியதாயில்லை. ஒரு நாள் கீழ் மத்ரர் ஒருவர், ஒட்டகக் குட்டி ஒன்று கொண்டு வந்திருந்தார். ஆறு மாதக் குட்டி என்றும் சொன்னார். அது நம்முடைய குதிரை அவ்வளவு இருந்தது.''

''பார்த்தாயா? வெளி தேசங்களில் சுற்றி வருகிறவர்கள், பொய் சொல்லவும் நிறையக் கற்றுக்கொண்டு வருகிறார்கள். அந்த...என்ன சொன்னாய்?''

''ஒட்டகம்.''

''ஆம் ஒட்டகம். இந்த ஒட்டகம் வட்சுநதியின் இந்தக் கரையிலே நின்று கொண்டு கழுத்தை நீட்டி அந்தக் கரையிலே இருக்கும் புல்லை மேயுமாம்! கழுத்து அவ்வளவு நீளமாம். இப்படியும் சொல்கிறார்களே; இதுவும் பொய் தானே?''

''ஆம், தாத்தா! நான் அந்தக்குட்டியைப் பார்த்தேன். நம்முடைய குதிரையைப் பார்க்கிலும் அதன் கழுத்து நீளமாய்த்தானிருந்தது. ஆனாலும் இக்கரையிலிருந்து அக்கரையிலிருக்கும் புல்லை மேய்வது என்பது சுத்தப் பொய்.''

''இந்தப் பொய்யர்களான கீழ் மத்ரர்களும், பர்ஷுக்களும்தான் தாமிர ஆயுதப் பயித்தியத்தைப் பரப்பினார்கள்.

---

*நிலத்தை உழுதலை கிழவர் குறிப்பிடுகிறார்.

என்னுடைய தகப்பனார் காலத்தில் இதே ஆயுதங்களைக் கொண்டுதான் பர்ஷுக்கள் எங்கள் மீது யுத்தம் தொடுத்தார்களாம். அதனால் நம்முடைய கிராமத்தார், இரண்டு குதிரைகளுக்கு ஒரு தாமிரக் கோடாரி வீதம் அப்பொழுது கீழ் மத்ரர்களிடமிருந்து வாங்க நேர்ந்தது.''

''தாத்தா! உலோக ஆயுதங்களுக்கு எதிராக, கல் ஆயுதங்களை வைத்துக்கொண்டு ஒன்றும் செய்ய முடியாதல்லவா?''

''ஆம், கல் ஆயுதங்கள் உபயோகப்படவில்லை. இதனாலேயே நாங்களும், உலோகத்தால் செய்த ஆயுதங்களை வாங்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. உங்கள் புரு குலத்தார் மீது, கீழ் மத்ரர்கள் யுத்தம் தொடுத்தபோது, உங்கள் குலத்தார் எங்கள் மேல்-மத்ர குலத்தாரிடமிருந்து உலோக ஆயுதங்களைப் பொருள் கொடுத்து வாங்கிக் கொண்டார்கள். மேல் மத்ரர்களுக்கும், புருக்களுக்கும் எப்பொழுதும் யுத்தமே ஏற்பட்டதில்லை. ஆனால் குழந்தாய்! அந்தப் பர்ஷு குலத்தோரும், கீழ் மத்ர குலத்தோரும் இருக்கிறார்களே அவர்கள் எப்பொழுதும் திருட்டுத் தொழிலே செய்து வருகிறார்கள். புராதனமானதும் புனிதமானதுமான காரியங்களை விட்டுவிட்டு. எப்பொழுதும் புதிய புதிய காரியங்களைச் செய்துகொண்டு வருகின்றனர். அவர்களாலேயே, அவர்களுடைய செய்கைகளாலேயே நாங்களும் எங்களுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக—நாங்கள் வாழ்வதற்காக, அவர்களைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. கீழ் மத்ரர்களும், பர்ஷுக்களும் உலோக ஆயுதங்களைக் கைவிடும்வரை நாமும் விட முடியாது. அவ்விதம் கைவிடுவதானது நமக்குத் தற்கொலைக்கு ஒப்பாகும். ஆனாலும் இந்த உலோக ஆயுதங்களைப் பற்றிச் செய்யப்படும் பிரச்சாரம் இருக்கிறதே. அது மிகைப்படுத்திச் செய்யப்படுகிறது; கெட்டவிதமாகச் செய்யப்படுகிறது. இந்தப் பாவப் பிரச்சாரத்தைச் செய்பவர்கள் அந்த இரண்டு குலத்தோருந்தான். அவர்களுக்கு ஒருபோதும் தேவதைகளின் ஆசீர்வாதம் கிடைக்காது. இருள் நிறைந்த பாதாளத்தில் தள்ளப்படுவார்கள். இவர்களைப்பார்த்துப் பார்த்து இவர்களால் ஏற்பட்ட பயத்தினால்தான், கல்லாலும் மண்ணாலுமான நம்முடைய கிராமங்கள் உற்பத்தியாயிற்று; நினைத்தபோது, நினைத்த இடத்திற்கு எடுத்துச் செல்லக்கூடிய இந்தக் கூடார வாழ்க்கை போய், அசைக்க

முடியாத கிராம வாழ்க்கை வந்துவிட்டது. கீழ் மத்ரர்களும் பர்ஷுக்களும் எங்கு போய்ப் பார்த்து வந்தார்களோ தெரியாது. உலோக ஆயுதங்களைக்கொண்டு பூமாதேவியின் நெஞ்சைக் கிழிக்கிறார்கள். இந்தமாதிரிப் பாவத்தை, இதுவரை யாரும் செய்தது கிடையாது. குழந்தாய்! பூமி நமக்குத் தாயல்லவா?''

''ஆம், தாத்தா! பூமியை மாதா என்றும், தேவி என்றும் கூறுகிறோம்; பூஜையும் செய்கிறோம்.''

''குழந்தாய்! பூமாதேவியின் நெஞ்சைப் பிளந்தவர்களும் இதே பாவிகள்தான். பிளந்து அதில் பெயரை மறந்துவிட்டேன், ஞாபகம் ரொம்பக் குறைந்துபோகிறது.''

''விவசாயம்.''

''ஆம், ஆம். விவசாயம் செய்கிறார்களாம். வயலாகத் தடுக்கிறார்களாம். கோதுமை, நெல் இவற்றை விதைக்கிறார்களாம். இதுவரை நாங்கள் காதுகளால் கூடக்கேட்டது கிடையாது. எங்களுடைய முன்னோர்கள் பூமி மாதாவை இந்த மாதிரி பிளந்தது கிடையாது; அவளை அவமானப்படுத்தியது கிடையாது. பூமாதேவி, நம்முடைய ஆடு மாடுகள் குதிரைகளுக்குப் புல் கொடுக்கிறாள். நமக்குக் காய், கனி, கிழங்குகள் கொடுக்கிறாள். காய்கனிகள் பறிக்கப் பறிக்கக் குறையாது. ஆனால் இந்தக் கீழ்மத்ரர்களும், பர்ஷுக்களும் செய்கிற பாபத்தினாலும், அவர்களைப் பார்த்து நாம்செய்கிற பாபத்தினாலும், முன்னே இடுப்புவரை உயரமாக வளர்ந்திருந்த புற்கள் இப்பொழுது அவ்வளவு உயரம் வளர்வதில்லை. முன்னாளைப்போன்று கொழுத்த கால் நடைகளை, இப்பொழுது காண முடிவதில்லை. எங்கள் மத்ரகுலம் முழுவதுக்கும் ஒருநாள் உணவுக்குக் காணக்கூடிய அத்தனை பெரிய மாடுகள் அன்று இருந்தது. காட்டிலே திரிகின்ற மான், கரடி முதலியவைகளுங்கூட முன்மாதிரி பெரியதாய் இல்லை. மனிதர்களைத்தான் பாரேன். முன்மாதிரி வெகு காலம் வரை உயிரோடிருக்கிறார்களா? இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா; பூமாதேவியின் கோபந்தான்.''

''தாத்தா! இதுவரை நீங்கள் எத்தனை பனிக்காலத்தைப் பார்த்திருக்கிறீர்கள்?''

''நூறுக்கு மேலும் இருக்கும். அந்தக்காலத்தில் எங்கள் கிராமத்திலே, பத்துக் குடிசைகள் இருந்தன. இப்பொழுது

மண்ணாலும், கற்களாலும் சுவர்கள் எழுப்பிய நூறு வீடுகள் இருக்கின்றன. வயல்கள் இல்லாதபோது எங்களுடைய கிராமமும் குடிசைகளும், இன்றைக்கு ஓரிடத்திலும் நாளைக்கு இன்னொரிடத்திலுமாக இருக்கும். வயல்கள் வந்தன. அவற்றில் விதைத்திருக்கிற கோதுமையை மான்களும் மற்ற மிருகங்களும் அழித்துவிடாமல் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. இந்த வயல் என்றால் என்ன? இந்த விவசாயம் என்றால் என்ன? மனிதனை ஒரே இடத்தில் கட்டி வைக்கிற முளை. அவைகளைப் போட்டுவிட்டு அவன் எங்கேயும் போக முடியாது. மனிதன் ஒரே இடத்தில் இருப்பதற்காகப் படைக்கப்படவில்லை. தேவதைகள் மனிதர்களுக்காகச் செய்யாத காரியங்களை, இந்தக் கீழ் மத்ரர்களும் பர்ஷுக்களும் செய்து காட்டி விட்டார்கள்.''

''தாத்தா! நாம் விரும்பினால், இந்த விவசாயத்தை விட்டு விட முடியுமா? இப்பொழுது நமக்குப் பாதி உணவு தான்யமாயிருக்கிறதே!''

''ஆம் குழந்தாய்! அதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் நம்முடைய முன்னோர்கள், இந்த தான்யத்தையா சாப்பிட்டார்கள்? இங்கிருந்து முப்பது—முப்பத்தைந்து மைல்களுக்குத் தெற்கே கோதுமைக் காடு இருக்கிறது. இதை யாராவது போட்டா உண்டாக்கினார்கள். தானே முளைத்துத் தானே வளர்ந்து, தானே முதிர்கிறது. அந்தக் கோதுமை நம்முடைய வயல்களிலே விளையும் கோதுமைக்குக் கொஞ்சம் சிறியதாய் இருந்தாலும், அதையும் மாடுகள் மேய்கின்றன; நன்றாகக் கொழுத்து வளர்கின்றன. வருஷா வருஷம் எங்களுடைய கால்நடைகள் அங்கே செல்கின்றன. பூமாதேவி மனிதர்களுக்காக தானியத்தை உற்பத்தி செய்யவில்லை: மிருகங்களுக்காகத்தான். உற்பத்தி செய்கிறாள். நாம் சாப்பிடுவதற்கு இந்த ஆடுகளும், மாடுகளும் குதிரைகளும் இருக்கின்றன. இவைகளையல்லாமல், காடுகளிலே மான், பன்றி, கரடி, இன்னும் எத்தனையோ மிருகங்கள் இருக்கின்றன. திராட்சை, கொய்யா முதலிய பழங்கள் இருக்கின்றன. பூமாதேவி இந்த ஆகாரங்களை நமக்கு வெகு சந்தோஷத்தோடு கொடுத்திருக்கிறாள். ஆனால் இந்தப் பாபி, கீழ்மத்ரர்களும் பர்ஷுக்களும் நம்முடைய புராதன முறையை உடைத்துப் புதுவழி காட்டி விட்டார்கள். இதனாலேதான் மனிதர்களின்மீது தேவதைகளுக்குக் கோபம் உண்டாயிருக்கிறது. இந்த வட்சுநதி வாசிகளுடைய தலையில் இன்னும் என்னென்ன எழுதியிருக்

கிறதோ யாருக்குத் தெரியும்! இருபத்தைந்து வருஷங்களாக நான் கிராமத்திற்குப் போகவில்லை. இந்தக் காட்டிலே இப்படிக் குடிசையிலேதான் இருக்கிறேன். பனிக்காலத்திலே கீழே ஒரு குடிசைக்குப் போய்விடுகிறேன். நம்முடைய முன்னோர்களின் ஆணை—கட்டுப்பாடுகளை இவர்கள் உடைக்க விரும்புகிறார்கள். அவர்கள் வசிக்கும் கிராமத்திற்குப் போக எனக்கு மனம் வரவில்லை. நம்முடைய முன்னோர்கள் சொல்லிப்போன நீதிகளை, இதுவரை நான் பின்பற்றி வந்திருக்கிறேன். என்னிடம் தெரிந்துகொள்ள விரும்பி வருபவர்களுக்கும் அவற்றைப் போதிக்கிறேன். ஆனால் முன்னோர்களின் வாக்கியங்களை அலட்சியம் செய்பவர்களின் தொகை அதிகரித்து வருகிறது. இப்பொழுது கீழ் மத்ரர்களும், பர்ஷுக்களும் இந்த விவசாயத்தோடு கூடத் திருப்தி அடையவில்லை. வட்சு நதிக்கரையின் செல்வத்தைச் சுமந்து சுமந்து சென்று எங்கோ கொடுத்து விட்டு, என்னென்னத்தையோ அள்ளிக்கொண்டு வருகிறார்கள். ஒரு குதிரையைக் கொடுத்து விட்டு, தாமிரப் பாத்திரத்தை வாங்கினால் உணவுக்குக் கஷ்டம் ஏற்படாமல் என்ன செய்யும்? இன்னும் கொஞ்ச காலத்தில், புரு குலத்தோருக்கு ஆகாரமும் உடையும் இராது. உணவும் உடையும் மலிந்து கிடந்த அவர்களுடைய வீடுகளில், அப்பொழுது இந்தத் தாமிரப் பாத்திரங்கள் தான் நிறைந்திருக்கும்.''

''இன்னொரு விஷயம் கேள்விப்பட்டேன் தாத்தா! இப்பொழுது கீழ் மத்ரர்கள், பர்ஷுக்கள் வீட்டுப் பெண்கள் காதுகளிலும், கழுத்திலும் ஏதோ மஞ்சள் நிறமாயும், வெள்ளை நிறமாயும், ஆபரணங்கள் போட்டுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்களாம். ஒரு காது ஆபரணத்திற்கு ஒரு குதிரைவிலை ஆகிறதாம். அது தாமிரமில்லை; மஞ்சள் நிறமாய் இருப்பதைத் தங்கமென்றும் வெண்மையாய் இருப்பதை வெள்ளியென்றும் சொல்லுகிறார்கள்.''

''இந்த அதர்மிகளை யாரும் கொலை செய்யவில்லையா? வட்சுநதி வாசிகள் எல்லோரையும் ஒழித்தே விடுவார்கள் இந்தப் பாவிகள். நம்மிடத்தில் உணவுக்கும் உடைக்கும் மிஞ்சி இருப்பவைகளைக்கூட இவர்கள் விட்டுவைக்க மாட்டார்கள்; அந்தப் பெண்களைப் பார்த்து நம்முடைய பெண்களும், ஒன்றுக்கு இரண்டு குதிரைகளைக் கொடுத்து நகை போட ஆரம்பித்து விடுவார்கள். அக்கினி பகவானே, என்னை இங்கு இனி வெகுநாள் வைக்கவேண்டாம்; என்னுடைய முன்னோர்கள் இடத்தில் சேர்த்துவிடு.''

''தாத்தா! இன்னும் ஒரு பாபத்தையும் அவர்கள் செய்கிறார்கள்; எங்கேயோ இருந்து சில மனிதர்களைப் பிடித்து வந்திருக்கிறார்கள். அவர்களைக் கொண்டு, தாமிரத்தில் வாள், கோடரி முதலிய ஆயுதங்களையும் பாத்திரங்களையும் செய்விக்கிறார்கள். அதுமட்டுமல்ல; விவசாய வேலை, கம்பளம் நெய்வது இன்னும் எத்தனையோ வேலைகளை இந்தப் பிடிபட்ட மனிதர்களைக் கொண்டே செய்விக்கிறார்கள். தாத்தா! அவர்கள் திறமையான தொழிலாளர்களாயிருக்கிறார்கள். அவர்களை இந்த மத்ரர்களும் பர்ஷுக்களும் மிருகங்களைப் போலவே வேண்டும்போது வைத்துக் கொள்ளவும் தேவையில்லாதபோது விற்றுவிடவும் செய்கிறார்கள். அவர்களை அடிமை என்று அழைக்கிறார்கள்.''

''மனிதர்களை வாங்குவதும் விற்பதுமா? நாம் நம்முடைய ஆகாரப் பொருளை விற்பதுங்கூட பாபம் என்று நினைக்கிறோம்; மத்ரர்களும் பர்ஷுக்களும் இப்படிப்பட்ட இழிவான நிலைமைக்குப் போய் விடுவார்கள் என்று நம்முடைய முன்னோர்கள் கனவுகூட கண்டிருக்க மாட்டார்கள். ஒருவிரல் அழுகிப்போனால் அதற்குமருந்து என்ன தெரியுமா? அந்த விரலை வெட்டிவிட வேண்டியதுதான். இல்லையானால் சரீரம் பூராவும் அழுகிப் போகும். கீழ்மத்ரர்களையும் பர்ஷுக்களையும் வட்சு நதிக்கரையில் வசிக்க அனுமதிப்பதே பாபம் இந்தப் பாப காரியங்களைப்பார்த்துக்கொண்டு நான் இனி வெகுநாட்களுக்கு இருக்கக் கூடாது.''

தாத்தா இதுவரை கூறி வந்த கதைகள் மனதுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியனவாகவே இருந்தன. ஆனால் இந்தப் புது ஆயுதங்கள் இல்லாமல் மனிதர்கள், விலங்கினங்கள் முதலிய எதிரிகளுக்கிடையே ஜீவிக்க முடியாது என்பதைத் தெரிந்து கொள்வதற்குப் போதிய அறிவு அவனுக்கு இருந்தது.

மூன்றாவது நாள் பெரியவரிடம் விடைபெற்றுக் கொண்டு புருகூதன் பயணமானான். தாத்தா அவனுடைய உச்சியிலும் நெற்றியிலும் முத்தமிட்டு ஆசீர்வதித்தார். ரோசனா அவனை வழியனுப்ப வெகுதூரம் கூடவே சென்றாள். புருகூதனும் ரோசனாவும் பிரியும் பொழுது ஒருவர் மற்றொருவருடைய கன்னங்களைக் கண்ணீரால் நனைத்துக் கொண்டனர்.

# 3

தாத்தா வாக்குச் சரியாகப் பலித்தது. இருபத்தைந்து வருஷங்கள் கழிந்ததென்றால்தான் என்ன? கீழ்மத்ரர்களும் பர்ஷுக்களும் மேல்மத்ரர்களையும் புருக்களையும் நசுக்கிக் கொண்டே வந்தனர். மேல் மத்ர—புரு குலத்தவர்கள் சுதந்திர ஸ்திரி புருஷர்கள். அவர்களுடைய உணவு, உடைச் செலவுகள் அதிகமாவதால். அவர்கள் நெய்யும் ஆடைகள் உயர்ந்த ரகமாயிருந்தாலுங்கூட, அவைகளின் விலை அதாவது அவற்றின் மதிப்பு அதிகமாகிறது. கீழ்மத்ரர் களும் பர்ஷுக்களும் கம்பள ஆடைகளை தங்களுடைய அடிமைகளைக் கொண்டே நெய்யச்செய்வதால் அவை மட்ட ரகமாயிருந்தாலுங்கூட, அவற்றின் விலை அதாவது மதிப்புக் குறைவாயிருக்கிறது. இதே போல இன்னும் எத்தனையோ சாமான்கள் அந்த அடிமைகளைக் கொண்டு செய்விக்கப்படு கின்றன. அங்கிருக்கும் வியாபாரிகள் மலிவான விலையுள்ள இந்தச் சாமான்களையும் ஆடைகளையும் ஒட்டகம் குதிரை முதலியவைகளின் மீது ஏற்றிக் கொண்டு அடுத்த பிரதேசங் களுக்குக் கொண்டு போகிறார்கள். சாமான்களின் விலை மலி வாயிருப்பதால், ஏராளமாக விற்பனையாகின்றன. மேல் மத் ரர்களுக்கும்,புருக்களுக்கும் இப்பொழுது தாமிரஆயுதங்கள், பாத்திரங்கள், இவற்றின் தேவையும் அதிகரித்து விட்டது. இதற்கு இரண்டு மூன்று காரணங்கள் உண்டு. ஒன்று இந்தத் தாமிரச் சாமான்களின் விலைகள் வருஷா வருஷம் குறைந்து கொண்டே வருகின்றன. இரண்டாவது, பூமியை வெட்டுவது முதலிய வேலைகளுக்கு தாமிர ஆயுதங்கள் நாள் பட உழைக்கின்றன. இருபது வருஷங்களுக்கு முன்னே எங்கோ சில வீடுகளிலேதான் தாமிரப் பாத்திரங்களை அபூர்வமாகப் பார்க்க முடியும்! ஆனால் இப்பொழுது அந்தப் பாத்திரங்கள் இல்லாத வீடே கிடையாது! இதோடு, தங்கம், வெள்ளி நகைகளை அணிகிற பழக்கமும் அதிகமாகிவிட்டது. தேவைப்படும் இந்தச் சாமான்களுக்குப் பதிலாக இவர்கள் தங்களிடமுள்ள தான்யம், கம்பளம், தோல், ஆடு, மாடு, குதிரை முதலியவைகளைக் கொடுக்க வேண்டியதிருக்கிறது. இதனால், மேல் மத்ரர்கள், புருக்களுடைய வாழ்க்கை நிலைமை நாளடைவில் மோசமாகிக் கொண்டே வந்தது. தங்களைக் கீழ்மத்ரர்களும், பர்ஷுக்களும் தந்திரமாகச் சுரண்டிக் கொண்டிருப்பதாய் இவர்களில் சிலர் சந்தேகப்

பட்டனர். ஆகையால் இவர்களும் வெளி உலகத்தோடு நேரே வியாபாரம் செய்ய முயற்சித்தனர். வட்சுநதிப் பிரதேசத்திலிருந்து கீழே உள்ள பிரதேசங்களுக்குப் போக வேண்டுமானல் கீழ் மத்ரர்—பர்ஷுக்களுடைய பூமியைக் கடந்துதான் போகவேண்டும். வேறுவழி கிடையாது; ஆனல் தங்கள் பிரதேசத்தைக் கடந்து புருக்களும் மேல்மத்ரர்களும் வியாபாரத்திற்குச் செல்வதைக் கீழ்ப் பிரதேசத்தார் அனுமதிக்க விரும்பவில்லே. இதன் காரணமாகப் பலமுறை இந்த இருதரப்பாருக்கும் சிறிய சண்டைகளும் நடைபெற்றன. வெளியுலகத்தோடு தொடர்பு வைத்துக்கொள்ள வேறு புதுப் பாதையைக் காணவும், மேல் பகுதியார் முயன்றனர். ஆயினும் அதிலும் வெற்றி கிடைக்கவில்லே. கீழ்ப் பகுதியாருக்கும் மேல் பகுதியாருக்கும் நடக்கும் இந்தப் போராட்டத்திலே, முக்கியமான விஷயம் என்னவென்ருல், கீழ்ப்பகுதியார் தங்களுக்குள் ஐக்கியமும், ஒருமைப்பாடும் அற்றவர்களாயிருந்தார்கள். ஆனல் மேல் பகுதியாரோ, தங்களுக்குள் போட்டியும் பொருமையும் அற்றவர்களாயிருந்ததால், ஐக்கியப்பட்டு எதிரிகளேத் தாக்க முடிந்தது.

இதுவரை நடைபெற்ற சண்டைகளில் புருகூதன், தான் காட்டிய வீரத்தாலும், திறமையினுலும், தனது சமுகத்தாரின் அன்பைப் பெற்றதோடு மட்டுமல்ல, முப்பது வயதே நிரம்பிய இளம்பிராயத்திலே சமூகத் தலேவனுகவும் தேர்ந்தெடுக்கப்பட்டான்.

கீழ் மத்ரர்கள், பர்ஷுக்கள் இவர்களுடைய அநீதியான வர்த்தக முறையைத் தடுக்காவிட்டால், மேல் மத்ரர்களும் புருக்களும் வாழமுடியாது என்பது புருகூதனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. தாமிரத்தின் உபயோகமும், அவசியமும் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்தது. புருகுலத்தோரின் வாழ்க்கைநிலே மோசமானதற்குக் காரணம், கீழ்ப் பிரதேசத்தாரின் அநீதியான வியாபார முறைதான் என்பதைப் புருகூதன் விளக்கினுன். தங்கள் பாதையில் தடையாயிருக்கும் அவர்களே ஒழிக்காவிட்டால் தாங்கள் எல்லோரும் அவர்கள் கைப்பாவையாய் விடுவோம் என்பதை யாவரும் ஒத்துக்கொண்டனர். நிலேமை இப்படியே போய்க்கொண்டிருந்தால் கீழ்ப் பிரதேசத்தாரிடமிருக்கும் அடிமைகளேப் போல் தாங்களும் அடிமைகளாகிவிடக் கூடும் என்று அஞ்சினர். மேல் மத்ரர்களும் புருக்களுடைய இந்தக்

கருத்தை ஏற்றுக்கொண்டு இரு சமூகத்தாரும் ஒன்று சேர்ந்து யுத்தம் நடத்தத் திட்டமிட்டனர். யுத்தத்திற்குச்சேனுதிபதியாகப் புருகூதன் நியமிக்கப்பட்டான். இரண்டு குலத் தலைவர்களுக்கும் மேலான இப்பதவிக்கு 'இந்திரன்' என்று பெயரிடப்பட்டது. இவ்விதமாக, புருகூதன் முதலாவது 'இந்திர' பதவியைப் பெற்முன்.

புருகூதன் வேகமாகச் சேனை திரட்டுவதில் முனைந்தான் இந்திர பதவியைப் பெற்றவுடனேயே புருகூதன், கீழ் மத்ரர்களின் அடிமைகள் இருவரைக் கொண்டுவந்து ஆயுதங்கள் உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்தான். மேல் பகுதி ஜனங்களும் அந்தச்சிற்பிகளோடு ஒத்துழைத்து, ஆயுதம் செய்யும் கலையை அவர்களிடமிருந்து கற்றுக்கொண்டனர். அந்த அடிமைகளின் காரணமாக இருதரப்பாருக்குமிடையே ஆயுதம் ஏந்தவேண்டிய நிலைமையும் ஏற்பட்டது. ஆனுல் கீழ் மத்ரர்கள் பர்ஷுக்கள் இவர்களிடையே வியாபாரமனப்பான்மை வளர்ந்துவிட்டதால், யுத்த மனப்பான்மைகுன்றி, யுத்த வீரர்களும் குறைய ஆரம்பித்துவிட்டனர். இந்தச் சண்டையில் வெற்றி காணமுடியாத இவர்கள், மேலேயுள்ளவர்களுக்குத் தாமிரம் விற்பதை நிறுத்திவிட்டார்கள். இதனுல், கொஞ்ச நாளில் தங்களுடைய வியாபாரம் குறைந்து போனதுதான் இவர்கள் கண்டபலன். ஏனென்முல் மேல் மத்ரர்கள், புருக்கள் இரு சமூகத்தாரும் இதுவரை வாங்கி வைத்திருக்கும் பாத்திரங்களிலுள்ள தாமிரத்தைக் கொண்டு இன்னும் நூறு வருஷங்களுக்கு ஆயுதங்களைச் செய்துகொண்டிருக்கலாம்.

கீழ் மத்ரர்களையும் பர்ஷுக்களையும் சீக்கிரம் அழித்துவிடவேண்டும் என்ற முடிவுக்கு மேல் பிரதேசத்தோர் வந்துவிட்டனர். புருகூதனும் ஆயுதம் செய்யும் தொழிலைக் கற்றுக்கொண்டிருந்தான். இயற்கையாக அவனுக்குள்ள திறமையால் ஆயுதங்களைச் செய்வதிலே புதிய முறையையும்ஆயுதங்களிலே அநேக சீர்திருத்தத்தையும் புகுத்தினுன். எதிரிகளின் பலமான வாள் வீச்சிலிருந்து தங்களைக்காத்துக்கொள்வதற்கு, தாமிரத்தினுல் மார்புக் கவசங்களையும் கண்டுபிடித்தான்.

இரண்டு சமூகத்தாரையும் ஒன்ருகச் சேர்த்துத் தாக்குவதைவிட, முதலில் ஒருவரை மட்டும் தாக்குவது நல்லதென்று இந்திரன் தீர்மானித்தான். ஆகையால், முதலில்

பர்ஷுக்களை மட்டும் தாக்க ஆரம்பித்தான். ஏனெனில் பனிக்காலத்தில் பர்ஷுக்களில் பெரும்பாலோர் வியாபார நிமித்தம் வெளியிடங்களுக்குச் சென்று விடுவது வழக்கம். யுத்தம் தொடுப்பதற்கு இந்தச் சமயத்தையே தகுந்த சந்தர்ப்பமாக இந்திரன் கருதினான். தன்னுடைய சேனை வீரர்களுக்கு யுத்த தந்திரங்களையும் கற்றுக் கொடுத்தான். மேலேஉள்ளவர்களுக்கும் கீழேஉள்ளவர்களுக்கும் விரோதப் பான்மை நீண்ட காலமாக இருந்து வந்தாலும் இப்படித் திடீரென்று தங்கள் மீது யுத்தம் தொடுக்கப்படுமென கீழ்ப் பிரதேசத்தார் எதிர்பார்க்கவே இல்லை. இந்நிலையில் ஒரு நாள் இந்திரன் பொறுக்கி எடுத்த சில யுத்த வீரர்களுடன் பர்ஷுக்களைத் தாக்கினான். தங்கள்மீது இவ்விதம் திடீரென்று யுத்தம் தொடுக்கப்பட்டிருப்பதின் உத்தேசத்தைத் தெரிந்து கொள்வதற்கு, பர்ஷுக்களுக்கு நேரமாகவில்லை. இந்த யுத்தத்தில் தோற்றால் தாங்கள் பூண்டோடு அழிக்கப் படுவோம் என்பதையும் அவர்கள் உணர்ந்தனர். ஆகையால் அவர்களும் தங்கள் உயிரைப் பணயமாக வைத்துச் சண்டை செய்தனர். ஆயினும், தங்களுடைய எல்லாக் கிராமங்களையும் ஒன்று சேர்ப்பதற்குச் சமயமோ சந்தர்ப் பமோ கிடைக்கவில்லை. இந்திரனுடைய சேனையானது பர்ஷுக்களினுடைய கிராமங்களை ஒவ்வொன்றாகத் தாக்கி ஆயிரக் கணக்கில் ஜனங்களைக் கொன்று குவித்தது. யாரையும் கைது செய்யவே இல்லை. கீழ் மத்ரர்கள், நிலைமையின் பயங்கரத்தை உணர்ந்தபோது காலம் கடந்து விட்டிருந்தது. போதிய ஏற்பாடு செய்யக்கூட அவர்களுக்குச் சாவகாசம் இல்லை. இந்நிலையில் அவர்களுடைய கிராமங்களும் தாக்கப்பட்டு ஜனங்கள் ஏராளமாகக் கொல்லப்பட்டனர். ஆனால் பெண்களை மட்டும் கொல்லவில்லை. அவர்களைத் தங்கள் பெண்களோடு சேர்த்துக்கொண்டனர். குழந்தைகள் முதல் விருத்தர் வரை அகப்பட்ட எல்லா ஆண்களும் கொல்லப்பட்டனர். இவர்களிடம் வேலை செய்த அடிமைகளில் யாரார் தங்கள் சொந்த நாட்டிற்குப் போக விரும்பினார்களோ,: அவர்களெல்லாம் திருப்பியனுப்பப்பட்டனர். கீழ் மத்ரர்களிலும் பர்ஷுக்களிலும், எதிரிகளிடம் அகப் படாமல் உயிர் தப்பிய சில ஆண்களும், பெண்களும் வட்சு நதிப் பிரதேசத்தைவிட்டு மேற்குத் திசையை நோக்கி ஓடினர். இவ்விதம் உயிர் பிழைத்து ஓடியவர்களுடைய சந்ததியார்தான், பின்னே ஈரானில் பர்ஷு—பெர்சியன் என்றும் மத்ரர்—மிடியன் என்றும் பிரபலமடைந்தவர்கள். தங்களுடைய முன்னோர்கள் மீது இந்திரனுடைய தலைமையில்

நடந்த கொடுமையை அவர்களுடைய பின் சந்ததியாராகிய இவர்கள் மறக்கவே இல்லை. இதனாலேயே, ஈரானியர்கள் இந்திரனைத் தங்களுடைய பெரிய சத்துருவாக மதித்தனர். இங்கே வட்சுநதிப் பிரதேசம் பூராவும், மேல் மத்ரர், புருக்கள், இந்த இரு சமூகத்தாருடைய ஆதீனத்துக்கு வந்து விட்டது, இரு சமூகத்தாரும், வட்சுநதியின்-வலது பக்கத்தை ஒருவரும், இடது பக்கத்தை ஒருவருமாகப் பிரித்துக் கொண்டனர்.

வட்சுநதிப் பிரதேச வாசிகளாகிய இவர்கள், நூதன முறைகளைத் தூக்கியெறிந்துவிட்டுப் புராதன முறைகளைத் திரும்பவும் நிலை நிறுத்துவதற்கு வேண்டிய பிரயாசை எடுத்தனர். ஆனால் தாமிர ஆயுதங்களை விட்டுவிட்டுக் கல் ஆயுதங்களின் யுகத்திற்குத் திரும்பிச் செல்ல அவர்களால் முடியவில்லை. தாமிரத்தைப் பெறுவதற்காக இந்த மலைப் பிரதேச வாசிகள், வெளிப் பிரதேசத்தோடு தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாய் இருந்தது.

அடிமைகளை வைத்து வேலை வாங்கும் பழக்கத்தை இவர்கள் அடியோடு ஒழித்து விட்டார்கள். வெளிப்பிரதேசத்தார் இங்கு வந்து நிரந்தரமாகக் குடியேறுவதையும் இவர்கள் அனுமதிக்கவில்லை.

பல தலைமுறைகள் கடந்துவிட்டன. தங்களுடைய முதல் இந்திரனான புருகூதன் தங்கள் தலைவன் என்பதையே ஜனங்கள் மறந்து, அவனைக் கடவுளாக ஆக்கிவிட்டனர். ஜனங்களின் எண்ணிக்கை பெருகிவிட்டது. இவ்வளவு ஜனங்களையும் போஷிப்பதற்கு வட்சுநதிப் பிரதேசம் போதுமானதாயில்லை. ஆகையால் அவர்களில் எத்தனையோ பேர் தெற்கு நோக்கி முன்னேற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இதற்கு முன்னே ஒவ்வொரு சமூகமும் சுதந்திரமாயிருந்தது. சமூகத் தலைவனுக்கு, அந்தச் சமூகத்தின் முக்கியத்துவம் இருந்தாலும், அவனுடைய தலைமை சமூகத்தின் விருப்பத்தைப் பொருத்ததாயிருந்தது. ஆனால் வட்சுநதிப் பிரதேசத்தில் நடந்த யுத்தம் பல சமூகத்திற்கு ஒரு சேனாதிபதி—இந்திரனைச் சிருஷ்டித்துவிட்டது.

*இன்றைக்கு நூற்றி எண்பது தலைமுறைகளுக்கு முந்திய ஆரிய சமூகத்தின் கதை இது. இவர்களுடைய சந்ததியாரில் சிலர், அப்பொழுது இந்தியாவைநோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள். விவசாயமும் தாமிர உபயோகமும் அவர்களிடை நன்கு பரவிவிட்டது. மெதுவாகப் புகுந்த அடிமை வழக்கத்தை முற்றிலும் ஒழித்துவிடவிரும்பினார்கள்.

# புருதானன்

தசம்: மேல் சுவாதம்

ஜாதி: இந்திய ஆரியர்

காலம்: கி. மு. 2000

பசுமை நிறைந்த மலைகள்; பெருகியோடும் சிற்றருவிகள், பசுந்தோகைகளோடு தலைநிமிர்ந்து நிற்கும் கோதுமைப் பயிர்கள்; இத்தனை இயற்கை அழகுகளையும் ஒருங்கே தன்னகத்தில் கொண்டிருக்கும் சுவாதநதியின் இடது கரைப் பிரதேசக் காட்சி, பார்ப்போர் மனதைப் பரவசப் படுத்துவதாயிருந்தது. ஆனால் அந்த இயற்கையின் அழகைவிடத் தாங்கள் செயற்கையாக உண்டாக்கிய—கற்சுவர்களையும், தேவதாரு மரத்தாலான கூரைகளையுமுடைய—தங்கள் வீடுகளைப் பற்றித்தான் ஆரியர்கள் ரொம்பவும் பெருமைப்பட்டார்கள். இதனாலேயே இந்தப் பிரதேசத்திற்கு 'சுவாஸ்து' (அழகிய வீடுகளையுடைய பிரதேசம்) என்று பெயரும் வைத்தார்கள்.

மங்கலபுரம் (மங்களூர்) எங்கு பார்த்தாலும் ஒரே அலங்கார ரூபமாய்க் காட்சியளிக்கிறது. மங்கலபுரவாசிகள் இன்று இந்திர விழாக் கொண்டாடுகிறார்கள். வட்சுநதிப் பிரதேசத்திலிருந்து கிளம்பிய ஆரியர்கள், பாமீர், ஹிந்துகுஷ் முதலிய மலைப்பிரதேசங்களின் கடினமான வழிகளையும், குனார், பஞ்சகோரா முதலிய நதிகளையும் கடந்து, இந்த சமவெளிப் பிரதேசத்தை அடைவதற்குத் தாங்கள் பட்ட கஷ்டங்களை இன்னும் மறந்துவிடவில்லை. அந்தக் கடினமான மலைப் பாதைகளிலும், அபாயகரமான பிரயாணங்களிலும், தங்களுக்கு எவ்வித சேதமுமின்றி, சுகத்தோடு கொண்டு வந்து சேர்த்த தங்கள் தலைவன் இந்திரனுக்கு நன்றி செலுத்தும் முறையில், இவர்கள் இந்த இந்திர விழாவைக் கொண்டாடி வருகிறார்கள்.

மங்கலபுர வாசிகளான புருகுலத்தோரின் வீடுகள் யாவும் தேவதாருக்களின் பசுந்தோகைகளாலும், பல நிறக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. புருதானன்

தன்னுடைய வீட்டைப் புதுமாதிரியான சிவப்பு நிறக்கொடி களால் அலங்கரித்துக் கொண்டிருந்தான். அங்கு வந்த அவனுடைய நண்பன் சுமேதன், அந்தக் கொடிகளிலொன் றைக் கையில் எடுத்துக்கொண்டு, ''நண்பா! உன்னுடைய இந்தக் கொடிகள் மிருதுவாயும் வழுவழுப்பாயும் இருக் கின்றனவே. இந்த மாதிரித் துணிகள் நமது பிரதேசத்தில் நெய்யப்பட்டதை நான் பார்த்ததேயில்லை. இவ்வித ரோமங் களைக் கொடுக்கும் ஆடுகள் புதுமாதிரியானவையாய்த்தானி ருக்க வேண்டும்'' என்று அதிசயத்தோடு கேட்டான்.

''இல்லை நண்ப! இது ஆட்டு ரோமத்தால் நெய்யப் பட்டதல்ல.''

''அப்படியானால்?''

''இது ஒரு விநோதமான ரோமம். மரத்தில் விளை கிறது.''

''நம்முடைய பிரதேசத்தில் எப்படி ஆட்டின் உடம்பி லிருந்து ரோமம் கிடைக்கிறதோ, அதேமாதிரி இவைகாட்டு மரங்களிலிருந்து கிடைக்கிறதா?''

''அப்படித்தான் சொல்லிக்கொள்கிறார்கள். ஆனால் நான் நேரில் பார்த்ததில்லை.''

சுமேதன் தன் கையில் பிடித்திருந்த தக்ளியைத் தொடையில் வைத்து அழுத்திச் சுற்றிவிட்டு விட்டு, இடது கையிலிருக்கும் ரோமத்தை வலதுகை விரல்களால் நிரடி விட்டுக்கொண்டே,

''காடுகளிலுள்ள மரங்களில் ரோமம் முளைப்பதாயிருந் தால், அந்தப் பிரதேசத்தில் வசிப்பவர்கள் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள். ஏன் நம்முடைய பிரதேசத்தில் அந்த மரங்களை உண்டாக்க முடியாதா?'' என்று கேட்டான்.

''இந்தப் பக்கத்துப் பனி, வெயில் இவைகளை அது தாங் குமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், நண்ப! மாமிசத்தை மரத்திலிருந்து உண்டாக்க முடியாதே.''

''யார் கண்டார்கள்; மரத்திலிருந்து ரோமம் உண்டா கும் தேசத்தில், மாமிசமும் வேறெதிலிருந்தாவது உண் டாகக் கூடும். இதன் விலை என்ன?''

''கம்பளத்தைப் பார்க்கிலும் ரொம்பக் குறைவுதான். ஆனால், அதைப்போல இது உறுதியாயில்லை.''

''எங்கிருந்து வாங்கினாய்?''

''அசுரர்களிடமிருந்து. இங்கிருந்து ஐம்பது கோச* தூரத்தில் அவர்களுடைய தேசமிருக்கிறது. அவர்கள் இந்த ஆடையை அணிகிறார்கள்.

''இவ்வளவு மலிவா யிருக்கும்போது நாமும் இந்த ஆடையையே ஏன் அணியக்கூடாது?''

''இந்த ஆடை நம்முடைய பிரதேசத்துக் குளிரைத் தாங்காது.''

''அப்படியானால், அவர்கள் எப்படி உடுத்துகிறார்கள்?''

''அவர்களுடைய தேசத்தில் பனி ரொம்பக் குறைவு. பனிக்கட்டியைப் பார்க்கவே முடியாது.''

''நீ வியாபாரத்திற்காகக் கிழக்கு, மேற்கு, வடக்கு இந்த மூன்று திசைகளையும் விட்டு விட்டுத் தெற்குத் திசையையே நோக்கிச் செல்லுகிறாயே ஏன்?''

''அங்கு லாபம் அதிகமாகக் கிடைக்கிறது. பொருள்களும் விதம் விதமாகக் கிடைக்கின்றன. ஆனால், ஒரு பெரிய கஷ்டம், அந்த நாட்டு உஷ்ணத்தைத் தாங்கமுடியாது. எந்த நேரமும் குளிர்ந்த தண்ணீருக்காக மனம் துடித்துக் கொண்டிருக்கும்.''

''அந்த ஜனங்கள் எப்படி இருப்பார்கள், புருதானா?''

''கட்டை குட்டையாக, நல்ல கறுப்பு நிறம். அழகற்ற உடல்; மூக்கைக் காணவே முடியாது; முகத்தோடு அமுங்கியிருக்கும். இதோடு ஒரு கெட்ட பழக்கமும் அவர்களிடத்திலிருக்கிறது. மனிதர்களை வாங்கவும் விற்கவும் செய்கிறார்கள்.''

''என்ன? மனிதர்களை விற்பனை செய்வதா?''

''ஆம். அவர்களை 'அடிமைகள்' என்று அழைக்கிறார்கள்.''

---

*ஒரு கோசம் என்பது சற்றேறக் குறைய இரண்டு மைல் தூரம்.

''அடிமைகளுக்கும், எஜமானர்களுக்கும் தோற்றத்தில் வேற்றுமை உண்டா?''

''இல்லை. ஆனால் அடிமைகள் ஏழைகளாயும், உரிமையற்றவர்களாயு மிருக்கிறார்கள். அவர்களுடைய உடல், ஏன் உயிருங்கூட எஜமானர்களுக்குச் சொந்தமாயிருக்கிறது.''

''அப்படிப்பட்ட ஜனங்களின் முகாலோபனம் ஏற்படாதபடி இந்திரன் காப்பாற்றுவானாக!''

''நல்லது, நண்ப! நீ இன்னும் தக்களியைச் சுழற்றிக் கொண்டே இருக்கிறாயே, வேள்விக்குப் போகவேண்டாமா?''

''ஏன் போகவேண்டாம்! இந்திரனுடைய கிருபையினால் நல்ல உணவும் கால் நடைகளும் ஏராளமாகக் கிடைக்கின்றன. அந்த இந்திரனுடைய விழாவில் எந்தத் துர்ப்பாக்கியசாலி கலந்து கொள்ளாமலிருப்பான்?''

''உன் வீட்டுக்காரி எப்படியிருக்கிறாள்? இப்பொழுது அவள் வெளியே தென்படுவதே இல்லை.''

''நீயும் நிமிண்ட ஆரம்பித்து விட்டாயா?''

''நான் நிமிண்டவாவது, நீ தானே தெரிந்திருந்தும் இந்தக் கிழவயதில் போய் ஓர் இளம் பெண்ணை மணம் செய்துகொண்டாய்.''

''ஐம்பது வயதில் கிழப்பருவம் வந்து விடுகிறதா?''

''ஆனால், ஐம்பதுக்கும் இருபதுக்கும் இடையில் எவ்வளவு வித்தியாசம்?''

''ஏன். அவள் அன்றே மறுத்திருக்கலாமே?''

''அன்றுதினம் நீ உன்னுடைய தாடியையும் மீசையையும் மழுங்கச் சிரைத்துவிட்டு, பதினெட்டு வயது வாலிபன் மாதிரிக் காட்சியளித்தாய். மேலும் உஷாவினுடைய தாய் தந்தையரின் கவனம் உன்னுடைய ஐம்பது வயதுப் பருவத்திலா சென்றது? உன்னுடைய கால் நடைகள் மீதல்லவா சென்றது.''

''சரி, அந்தப் பேச்சை விடு. உன்னைப்போன்ற வாலி பர்களுக்கு எப்பொழுதும்...''

''சரி; விட்டு விடுவோம். வாத்தியங்கள் முழங்கத் தொடங்கி விட்டன. நாம் இனி யாகசாலைக்குப் போவோமா?''

''சுணங்க வைப்பது நீ. வசவு கிடைப்பது எனக்கு.''

''சரி கிளம்பு. உஷாவையும் அழைத்துக் கொண்டு செல்வோம்.''

''ஹூம். அவள் இன்னும் வீட்டில் தான் உட்கார்ந்து கொண்டிருக்கப் போகிறாள்.''

''சரி உன் தக்களியைக் கொடு. இங்கே வைத்துச் செல்வோம்.''

''இதனால் யாகசாலையில் ஒன்றும் இடைஞ்சல் ஏற் படாது.''

''இந்த மாதிரி நீ செய்வதால்தான் உஷாவுக்கு உன்னைப் பிடிக்கவில்லை.''

''அவளுக்குப் பிடிக்கும். ஆனால் இந்த மங்கலபுர வாலிபர்கள் இருக்கிறீர்களே! நீங்கள் விட்டால்தானே!''

வார்த்தையாடிக் கொண்டே இரண்டு நண்பர்களும் நகருக்கு வெளியில் அமைந்திருக்கும் யாகசாலையை நோக்கி நடந்தனர். இவர்களை வழியிலே சந்தித்த யுவர்களும் யுவதி களும், கேலிப் புன்சிரிப்போடு புருதானனை நோக்கினர். புருதானனும், தன் நண்பன் அறியாவண்ணம் அவர்களை நோக்கிக் கண்ஜாடை செய்தான். இப்படி ஒரு வாலிபன் ஜாடை காட்டிக் கேலி செய்வதைப் பார்த்துவிட்ட சுமேதன் ஆத்திரத்தோடு,

''மங்கலபுரத்துக்கே இவன் ஒரு களங்கம்'' என்றான்.

''நண்ப! என்ன விஷயம்?''

''நண்பனாவது, கிண்பனாவது. என்னைப் பார்த்து இவன் கேலி செய்கிறான்.''

''இவன்தான் போக்கிரி என்பது உனக்குத் தெரியுமே, இவனைப் போய்ப் பொருட்டுப்படுத்திப் பேசுகிறாயே.''

''இந்த மங்கலபுரத்தில் நல்ல மனிதர்கள் யாருமே எனக்குத் தென்படவில்லை.''

இவ்விதம் பேசிக்கொண்டே இருவரும் யாகசாலையை அடைந்தனர். யாகசாலைக்குப் பக்கத்தில் விசாலமான மைதானம். தேவதாருக்களின் இலைகளால் ஆங்காங்கு தோரணங்கள் கட்டி அழகுபடுத்தியிருந்தார்கள். கிராம ஜனங்கள் வந்து கூடிக்கொண்டேயிருந்தனர். மங்கலபுரத்தின் புருஜனங்கள் கொண்டாடும் இவ் விழாவிலே, சுவாத நதியின் எதிர்க் கரையில் வசிக்கும் மத்ரர்களும் மாலையில் வந்து கலந்து கொள்ளும்போது, கூட்டம் ஜன சமுத்திரமாகக் காட்சியளிக்கும். நண்பர்கள் இருவரும் வருவதைப் பார்த்த உஷா சுமேதனுக்கருகில் வந்து, அவனுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு, இளங் காதலர்களைப் போல் கொஞ்சத் தொடங்கினுள்.

''பிரிய சுமேத்! காலையிலிருந்து உன்னைத் தேடித் தேடி அலுத்துவிட்டேன். காணவே முடியவில்லை.''

''நான் என்ன இறந்தா போய்விட்டேன்?''

''இந்த மாதிரி வார்த்தைகள் உன் வாயிலிருந்து ஏன் வருகின்றன? நீ உயிரோடிருக்கும்போதே என்னை விதவையாக்கிவிடாதே.''

''புரு குலத்தில் விதவையர்களை மணந்து கொள்ளும் புருஷர்களுக்கா பஞ்சம்?''

''ஏன்? சுமங்கலிகளுக்கும் மைத்துனர்கள் கசப்பதில்லையே?'' என்று இடைமறித்தான் புருதானன்.

''சரியாகச் சொன்னுய் புருதானு! இப்பொழுது வந்துவிட்டாள், என்னை ஒட்டி மேய்க்க. வீட்டை விட்டுக் கிளம்பியவள் இந்நேரம் எங்கெங்கு சுற்றிவிட்டு வந்தாளோ, இனி மாலையில் பார்க்க வேண்டுமே! ஒருவன் என்னோடு நடனமாடென்பான்; மற்றொருவன் என்னுடனென்பான். அவர்களுக்குள் சண்டையும் கலகமும் ஏற்படும். கெட்ட பெயர் என் தலையில் வந்து விடியும்'' என்று வெறுப்போடு கூறினுன் சுமேதன்.

உடனே அவனுடைய கைகளை உதறிவிட்டு, கோபம் கக்கும் விழிகளால் அவனை நோக்கி, ''நீ என்னை மூட்டையாகக் கட்டி முதுகிலே வைத்துக்கொள்ள நினைக்கிருயா? அப்படியானுல் உன்னுடைய வழியை நீ பார். என்னுடைய வழியிலே நான் செல்கிறேன்'' என்று கூறிவிட்டுக் கூட்டத்திலே சென்று மறைந்தாள்.

வட்சு நதிக்கரையின் இந்திரன் ஆட்சி காலத்தைப் போல், கொழுத்த குதிரையின் மாமிசத்தைச் சாப்பிடும் சந்தர்ப்பம், சுவாத நதிப் பிரதேச வாசிகளுக்கு இந்திர விழாவாகிய இன்று மட்டுந்தான் கிடைக்கும். இந்த விழா விற்கென்று நல்ல குதிரையை மக்கள் எல்லோரும் கூடித் தேர்ந்தெடுக்கிறார்கள். சாதாரணமாக, சுவாத நதிப் பிர தேசத்தில் குதிரை மாமிசம் சாப்பிடுவது தடுக்கப்பட்டிருக் கிறது; ஆயினும் வருடத்தில், ஒரு நாளான இந்த இந்திர விழா அன்று, வேள்வியின் அவிர்ப்பாகமாக எல்லோரும் அதை ஏற்றுக் கொள்வார்கள். ஜனுதிபதி தனது ஜனசபை யோடு, இந்திரனுக்குப் பிரியமான அந்தப் பலியைக் கொடுப் பதற்கு யாகசாலையின்முன்னே அமர்ந்திருக்கிறார். யாகத்தை நடத்துவதற்குரிய முறைகளும், பலி கொடுக்கும்போது சொல்ல வேண்டிய மந்திரமும் ஜனுதிபதிக்கு நன்றாகத் தெரியும். வாத்தியங்கள் முழங்க மந்திரம் ஓதி, அஸ்வத்தைப் பலியிடும் சகல சடங்குகளும் முடிந்தன. அப்பால் குதிரை யின் தோலை அப்புறப்படுத்திவிட்டு, அதனுடைய சரீரத்தின் அவயவங்களைத் துண்டு துண்டாக்கிச் சிலவற்றைமுறைப்படி சமைத்தும், சிலவற்றை சமைக்காமலும் அக்னியில் ஆகுதி செய்தார்கள். வேள்வியின் அவிர்ப்பாகத்தை எல்லோருக்கும் வழங்கி முடிப்பதற்குள் அந்தி நேரமாகி விட்டது.

மைதானம் முழுவதும் ஆண்களும் பெண்களும் நிறைந் திருந்தனர். ஒவ்வொரு ஆணும்பெண்ணும், தங்களிடமுள்ள வற்றுள் உயர்ந்த ஆடைகளையும் சிறந்த ஆபரணங்களையு மணிந்து, அலங்காரமாகக் காட்சியளித்தனர். பெண்களில் அநேகர் காதுகளில் தங்க ஆபரணங்களை அணிந்திருந்தனர். வசந்த காலத்தின் கடைசி நாட்கள் அன்றைய விழாவிற் காகவே மலர்ந்தன போன்ற விதவிதமான மலர்கள் எங்கும் நிறைந்திருந்தன. யுவர்களும், யுவதிகளும் தங்கள் நீண்ட கூந்தல்களை வாரி முடித்து, அந்தப் புஷ்பங்களைக் கொண்டு அலங்கரித்திருப்பது பார்ப்போர் எவரையும் பரவசப்படுத் தவே செய்யும். இந்திர விழாவாகிய இந்நன்னாளிலே அவர்களுக்குக் காதல் சுதந்திரம் பூரணமாக உண்டு. மாலை யில் இங்குமங்குமாகச் சுற்றி விட்டுக் கடைசியில் உஷா புருதானனைக் கைப்பிடித்தாள். இதைப் பார்த்த சுமேத னுடைய முகம் சுண்டிற்று. ஆனால் பாவம் என்னசெய்வான்? இந்திர விழாவன்று யாரையும் கோபித்துக் கொள்ள

முடியாது. கடந்த வருட இந்திர விழாவிலே இதுபற்றி ஜனபதி அவனைக் கண்டித்ததும் நினைவிற்கு வந்தது.

எங்கும் மதுவின் நதி பெருக்கெடுத்தது. மாமிசமும் மதுவும் வயிற்றை நிரப்பியதும், யுவ—யுவதிகளின் காதல் வெறி தலைவிரித்தாடிற்று. எங்கு பார்த்தாலும் ஜோடிகளின் நாட்டியம். ஆம். இந்த இந்திர விழா இளங்காதலர்களின் திருவிழாத்தானே! இன்று பகலும் இரவும் அவர்களுக்கு எல்லாவிதத் கட்டுப்பாடுகளிலிருந்தும் பூரண விடுதலை உண்டு.

## 2

இந்த சுவாதநதிப் பிரதேசத்தில் ஆடு மாடுகள், குதிரைகள், தான்யம் இவைகளுக்கு எவ்விதக் குறைவு மில்லை. செழிப்பு மிகுந்த பிரதேசம். ஆகையால் இங்கு வசிப்பவர்களும்சுவஜீவிகளாயிருந்தனர். இவ்வளவுவைபவங் களுடன் வாழ்ந்தாலும், இவர்களிடத்திலும் சில பொருள் கள் குறைவாயிருந்தன. அவற்றில் முக்கியமானவை தாமி ரம், தங்கம், வெள்ளி, ரத்ன வகைகள். மேலும் இந்தப் பொருள்களின் தேவை நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே வந்தது. சுவாதம், காபுல் இருநதிகளும் சங்கமமாகும் இடத் தில் இருக்கும் அசுர நகரத்திலிருந்து இந்தப் பொருள்கள் இவர்களுக்கு வரவேண்டும். பின்னல் ஆரியர்கள் இந்நக ருக்குப் 'புஷ்கலாவதி' என்று பெயரிட்டிருக்கிறுர்கள். ஆகையால் நாமும் இந்நகரைப் புஷ்கலாவதி என்றே அழைப்போம். சுவாதம், பஞ்சகோரா முதலிய நதிக்கரைப் பிரதேசத்தில் வசிக்கும் புரு, குரு, காந்தாரர், மத்ரர், மல்லர் ஷிவி, உஷினர் முதலிய மலைஜாதி மக்கள் ஒவ்வொரு வருடமும் பனிக்கால மத்தியில், தங்களுடைய குதிரை, கம்பளம் முதலிய விற்கக்கூடிய பொருள்களை எடுத்துக் கொண்டு, புஷ்கலாவதி நகரத்திற்கு வெளியே உள்ளமைதா னத்தில் வந்து கூடுவார்கள். அசுரகுல வியாபாரிகள் இவர் களுடைய பொருள்களை வாங்கிக்கொண்டு பதிலுக்குத் தேவையான பொருள்களைக் கொடுப்பார்கள். இவ்விதம் இவர்கள் பரிமாறிக் கொள்ளும்முறை எத்தனையோ வருஷங் களாக நன்கு நடைபெற்று வந்திருக்கிறது. ஆயினும் சமீப காலத்தில், தம்மை அசுர வியாபாரிகள் ஏமாற்றுகிறுர்கள் என்ற எண்ணம் இந்த மலைவாசிகளிடத்தில் பரவியிருந்தது.

இவ்வருடம் புருதானனுடைய தலைமையில் இவர்களுடைய கோஷ்டி புஷ்கலாவதிக்கு, வியாபாரத்திற்காகச் சென்றது. அசுர நகர வியாபாரிகள், இந்த மலைவாசிகளைவிடத் திறமை சாலிகளென்பதில் சந்தேகமில்லை. மேலும், அசுர வியா பாரிகள் இந்த மலைவாசிகளை முட்டாள்தனமான காட்டு மிராண்டிகள் என்று கருதினர். இதில் ஓரளவு உண்மையு மிருந்தது. ஆனால், செம்பட்டை மயிரும் நீலநிறக் கண்களையு முடைய இந்த ஆரியக் குதிரைக்காரர்கள், தாங்கள் 'அசுர நகரவாசிகளுக்குத் தாழ்ந்தவர்கள்' என்று ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. புருதானனைப் போன்ற சிலர், அசுர பாஷை யைத் தெரிந்து, அவர்களோடு நெருங்கி தொடர்பு ஏற் படுத்திக்கொண்டிருந்ததில், அசுரர்கள் யாவரும், ஆரியர் களை 'மனிதர்களாய்ப் பிறந்த மிருகங்கள்' என்று கருதுவது வியக்தமாகத் தெரிய வந்தது. இதுவே அசுர—ஆரியர் இரு ஜாதியாரிடையிலும் விரோத மனப்பான்மை வளர்வதற்கு ஆரம்பமாயிருந்தது.

அசுரர்களுடைய அந்த நகரம் மிக்க அழகு வாய்ந்தது. சுட்ட செங்கல்லினால் கட்டப்பட்டிருக்கும் வீடுகள், வீதி அமைப்பு, சாக்கடை வசதி, சிறிய—பெரிய குளங்கள், தடா கங்கள் முதலிய எல்லா வசதிகளும் அந்நகரிலே அழகாகச் செய்யப்பட்டிருந்தன. அந்நகரத்தின் அழகையும் சிறப்பை யும் ஆரியர்களும் மறுக்கவில்லை. தட்டையான மூக்கு, கூந்த லின் கரிய நிறம், வளர்த்தியின்மை இவைகள் ஆரியர்களுக் குப் பிடிக்காவிட்டாலுங்கூட அசுர யுவதிகளில் சிலர் நல்ல அழகிகள் என்பதையும் ஆரியர்கள் ஒப்புக்கொள்ளவே செய் தார்கள். ஆயினும் பெரிய பெரிய மரத்துண்டுகளால் கட்டப்பட்டுத் தேவதாருக்களின் தழைகளால் வேயப்பட்ட அழகிய சிறிய சிறிய வீடுகள் வரிசை வரிசையாக நிற்கும் தங்கள் மங்கலபுரி, ''புஷ்கலாவதிப் பெரு நகரத்தை விடத் தாழ்ந்தது'' என்று ஒப்புக்கொள்ள அவர்கள் தயாராயில்லை. புஷ்கலாவதி நகரத்தில் ஒருமாத காலம் தங்குவதுகூட அவர் களுக்குக் கஷ்டமாயிருக்கும். அதற்குள் பலமுறை தங்கள் ஜன்ம பூமியின் நினைவு வந்துவிடும். அதே சுவாதநதி தான் புஷ்கலாவதிக்குப் பக்கத்திலும் ஓடுகிறது. ஆயினும் தங்கள் பிரதேசத்திலுள்ள ருசி இங்கே அந்தத் தண்ணீருக்கில்லை யென்பது ஆரியர்களின் கருத்து. அசுரர்களின் கை பட்ட உடனேயே அந்த நீரின் புனிதத்தன்மை கெட்டுப்போய்விடு வதாக அவர்கள் சொல்வார்கள். எது எப்படியிருப்பினும், அசுரர்களைத் தங்களுக்குச் சமமாகக் கருத ஆரியர்கள்

தயாராயில்லை. மேலும் அசுரர்களிடையே உள்ள அடிமை வியாபாரப் பழக்கத்தையும், அசுர நகரத்தின் ஒரு பகுதியில் தங்கள் உடலை விற்கத்தயாராய் நிற்கும் வேசியர்களையும் பார்த்த ஆரியர்கள், அசுரர்கள் தங்களைவிடத் தாழ்ந்த வர்கள் தான் என்று கருதினார்கள்.

ஆனால், தனிப்பட்ட முறையில் இரு சமூகத்தையும் சேர்ந்த பலரிடையே நட்புரிமை தோன்றி வளர்ந்தது. அசுரர்களுடைய அரசன் புஷ்கலாவதியிலிருந்து தூரத்தேயுள்ள சிந்துநதிக் கரையிலிருக்கும் ஒரு நகரத்தில் வசித்து வந்தான். ஆகையால் புருதானன் அவனைப் பார்த்ததில்லை. ஆனால் ராஜாவின் பிரதிநிதியாக புஷ்கலாவதியிலிருக்கும் அதிகாரியை இவன் பார்த்திருக்கிறான். குட்டையான, பருத்த சரீரத்தையுடைய அந்த அரசப் பிரதிநிதி ஒரு பெரிய சோம்பேறி. அவனுடைய உடல் பெருமதிப்புள்ள தங்க ஆபரணங்களைச் சுமந்து கொண்டிருந்தது. குடிமயக்கத்தால் அவனுடைய கண்கள் சொருகிச் சொருகி விழித்துக்கொண்டிருந்தன. அவனுடைய காதுகள் தொளையிட்டு வளர்க்கப்பட்டுத் தோளிலே தொங்கிக் கொண்டிருந்தன. அவன் அழகின்மைக்கும் அறிவின்மைக்கும் ஓர் உதாரணம் என்று கருதினான் புருதானன். இந்த அதிகாரி அரசனுடைய மைத்துனன் என்றும், அந்த ஒரே ஒரு தகுதிக்காகத்தான் இவனுக்கு இந்தப் பதவி கொடுக்கப்பட்டிருப்பதாகவும் புருதானன் கேள்விப்பட்டிருந்தான். இவ்வித நிர்வாக அதிகாரியைக் கொண்ட ராஜ்யத்தைப்பற்றி, புருதானனைப் போன்ற மனிதனின் மனத்திலே மரியாதை உணர்ச்சி எப்படி ஏற்பட முடியும்?

பல வருஷங்களாக அடிக்கடி அசுரர்களோடு தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததால், புருதானன் அசுர சமூகத்தில் உள்ள சில பலவீனங்களையும் தெரிந்துகொண்டான். அதாவது, அசுர குலத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் எவ்வளவுதான் சாமர்த்தியசாலிகளா யிருந்தாலும்கூட, அவர்களில் கோழைகள் அதிகம். தங்களிடமுள்ள படைகள், அடிமைகள் இவர்களுடைய பலத்தில் நம்பிக்கை வைத்தே எதிரிகளுடன் போராட விரும்புகிறார்கள். சத்துரு பலவீனனாயிருந்தால் இந்தக் கூலிப்படை வெற்றி பெற்றுவிடலாம். ஆனால் எதிரி பலவானாயிருந்தால் இந்தக் கூலிப்படைகள் தாக்குப் பிடிப்பது கடினம். அசுரர்களது ராஜா அல்லது ராஜப்பிரதிநிதி, படைத்தலைவர்கள், இவர்களது வாழ்க்கை

யின் ஒரே லட்சியம் சகல போகங்களையும் அனுபவிப்பது. படைத்தலைவன் ஒவ்வொருவனுக்கும் நூற்றுக்கணக்கான மனைவியரும் அடிமைகளும் இருந்தனர். மனைவியரையும் அடிமைகள் மாதிரியே வைத்திருந்தனர். அசுர அரசன் சமீபத்தில் சில ஆரிய நங்கையரையும் பலவந்தமாகச் சிறைப் பிடித்து, தனது அந்தப்புரத்திலேயே சேர்த்துக் கொண்டானென்றும் பலர் சொல்லினர். இதனால் ஆரியர்களிடையே மிகுந்த மனக்கசப்பு ஏற்பட்டிருந்தது. அசுரர்களுடைய தலைநகரம் எல்லைப்புறத்திலிருந்து மிகுந்த தூரத்தில் இருந்தது. அதை ஆரியர்கள் இன்னும் பார்த்ததுகூடக் கிடையாது. ஆகவே ஆரிய ஸ்திரிகள் தூக்கிச் செல்லப்பட்ட கதை ஆதாரமற்றது என்றும் பலர் கருதினார்கள்

புஷ்கலாவதி நகரிலிருந்து பலவிதமான ஆபரணங்கள், பஞ்சாடைகள், ஆயுதங்கள் முதலிய எத்தனையோ பொருள்கள் சுவாதநதிப் பிரதேசத்தில் மட்டுமென்ன, அதற்கு மேலும் மலைப் பிரதேசங்களிலுள்ள குடிசைகளுக்குங்கூடச் சென்று பரவின. சுவாதநதிப் பிரதேசத்தின் பொன்னிறக் கூந்தலையுடைய ஆரிய அழகிகள் அசுர சிற்பிகள் செய்யும் ஆபரணங்களிடையே மயங்கிக் கிடந்தனர். இந்த மயக்கம் வருடந்தோறும் அதிகமான எண்ணிக்கையில் ஆரிய அழகிகளைப் புஷ்கலாவதி நகரத்திற்கு இழுத்துச் சென்றது.

பாவம், சுமேதன் உண்மையிலேயே உஷாவை விதவையாக்கிவிட்டுச் சென்றுவிட்டான். இப்பொழுது அவள் தனது ஒன்றுவிட்ட மைத்துனன் புருதானனின் மனைவி, இவ்வருஷம் உஷாவும் புஷ்கலாவதி நகருக்கு வந்திருந்தாள். நகருக்கு வெளியே இருந்த வியாபாரிகளின் கூடாரங்களிலே பல அழகிய யுவதிகளைப் பார்த்த புஷ்கலாவதியின் நகராதிபனுடைய ஆட்கள் இச்செய்தியைத் தங்கள் எஜமானனுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவன் உடனே இவ்வியாபாரக் கூட்டம் திரும்பிப் போகும்போது மலைக்கணவாயில் அவர்களைத் தாக்கி அந்த யுவதிகளைப் பிடித்துக்கொண்டு வர வேண்டுமென்று திட்டமிட்டான். இது ஒரு முட்டாள்தனமான திட்டமென்பதில் சந்தேகமில்லை. ஏனெனில், அந்த மலைவாசிகளின் அஞ்சாமையும், போர் செய்யும் திறமையும் நகராதிபனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால், நகராதிபனுக்கும் அறிவுக்கும்தான் சம்பந்தமே கிடையாதே. நகரத்தின் பெரிய பெரிய வியாபாரிகள் எல்லாம் இவனை வெறுத்தனர். புருதானனுக்குச் சிநேகிதனான ஒரு வியாபாரியின் கன்னி

கையை நகராதிபன் பலவந்தமாகத் தூக்கிக்கொண்டுபோய் விட்டான். ஆகையால், அந்த வியாபாரி நகராதிபனுக்குப் பரம வைரியாக மாறியிருந்தான். இவ்வியாபாரியின் வீட்டுக்கு உஷாவும் பலமுறை சென்றிருக்கிறுள். வியாபாரி வீட்டுப் பெண்கள் பேசும் பாஷை உஷாவுக்குப் புரியாதாயினும், அவர்களுக்குள் சம்பாஷணை தடையின்றி நடப்பதற்கு இரண்டு பாஷைகளும் தெரிந்த புருதானன் உதவிபுரிந்தான். உஷாவுக்கும் அந்த வியாபாரி வீட்டுப் பெண்களுக்கும் நெருங்கிய உறவு உண்டாகிவிட்டது. புருதானன் தன் கிராமத்திற்குத் திருபுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன், அவ்வியாபாரி, புருதானனுக்கு ஒரு விருந்து நடத்தினுன். அந்த விருந்திலே வியாபாரி, புருதானனிடம் ரகசியமாக நகராதிபனுடைய கெட்ட எண்ணத்தையும் திட்டத்தையும் சொல்லிவிட்டான். அதே இரவு புருதானன் ஆரியர்கள் யாவரையும் கூட்டி அவர்களிடம் இதுபற்றி யோசித்தான். ஆயுதங்கள் குறைவாயுள்ளவர் புது ஆயுதங்களை வாங்கினர். இவர்கள் கொண்டு வந்திருந்த கம்பளம் முதலிய பெரிய மூட்டைகளும், குதிரைகளும் விற்பனையாகிவிட்டன. இவர்கள் வாங்கியிருப்பதோ ஆபரணம் முதலிய கனமில்லாத சாமான்கள். இந்தச் சாமான்களும், இவர்களுடைய சவாரிக் குதிரைகளுமே இவர்களிடமிருப்பன. ஆகவே, இவர்களுக்குச் சாமான்களின் கனத்தைப் பற்றிய சிந்தனையே இல்லை. ஆரியப் பெண்களிடம் நாளடைவில் ஆபரண அலங்காரத்தில் மோகம் குடிகொண்டு விட்டாலும், அவர்கள் இளமையில் சங்கீதம், நாட்டியத்தோடுகூட, ஆயுதப் பயிற்சியும் பெற்றிருந்தார்களாகையால் ஆபத்துக் காலத்தில் அவர்கள் வாளேந்தவும் தயாராயிருந்தார்கள்.

அசுரப் படைகள், மலைக்கணவாயின் எல்லையில் இவர்களைத் தடுத்து நிறுத்தவும், அதே நேரத்தில் பின்னேயிருந்து ஒரு பெரும்படை இவர்களை வளைத்துக்கொள்ளவும் திட்டமிட்டிருக்கிறுர்களென்பது புருதானனுக்குத் தெரிய வந்தது. ஆகவே அதைச் சமாளிப்பதகேற்ப ஆரியர்களும் தங்களுடைய திட்டங்களை வகுத்துக் கொண்டனர். எதிரிகளுக்குத் தங்கள் திட்டம் தெரிந்து விடாமலிருக்கும் பொருட்டு ஒவ்வொரு கூட்டமும் ஒரு நாள் முன்பின்னுகக் கிளம்பிற்று. ஆனுல் மலைக் கணவாயை நெருங்கும்போது எல்லோரும் ஒன்று சேர்ந்துவிட வேண்டுமென்று அவர்கள் திட்டம். திட்டப்படி மலைக்கணவாய்க்கு ஒரு கோச தூரத்திற்கு முன்னுல் எல்லோரும் ஒன்று கூடினர். முதலில் இருபத்தைந்து

குதிரை வீரர்களைக் கணவாய்க்குள் போகும்படி செய்தனர். அவர்கள் கணவாய்க்குள் நுழைந்ததும் அங்கு மறைந்திருந்த அசுரர்களின் அம்பு அவர்களைத் தாக்கிற்று. இதனால், எதிரி களின் திட்டம் உண்மை என்பதைத் தெரிந்துகொண்ட ஆரியர்கள், திரும்பி வந்து தங்கள் தலைவன் புருதானனிடம் தகவலைத் தெரிவித்தனர். புருதானன், முன்னேறுவதை விடத் தங்களுக்குப் பின்னால் உள்ள படையைத் தாக்கி அழிப்பது நல்லது என்று நினைத்தான். இதில் அவர்களுக்கு ஒரு சௌகர்யமும் இருந்தது. ஏனெனில், ஆரியர்களிட மிருந்து வருஷந்தோறும் ஆயிரக்கணக்கான குதிரைகளை அசுரர்கள் வாங்கி இருந்தாலுங்கூட, குதிரையை யுத்தகளத் தில் உபயோகிக்க அவர்கள் இன்னும் கற்றுக்கொள்ளவில்லை.

தற்காப்பிற்கு வேண்டிய சில ஆட்களை மட்டும் அந்த இடத்தில் நிறுத்திவிட்டு, மற்றவர்களோடு புருதானன் பின்னே திரும்பினான். திடீரென்று தாங்கள் இவ்விதம் தாக்கப்படுவோமென பின்னால் நின்ற அசுரசேனை எதிர் பார்க்கவில்லை. ஆகையால், செம்பட்டைத் தலையர்களின் நீண்ட ஈட்டிக்கும் கனத்த வாளுக்கும் முன்பு அவர்களால் நிலைத்து நிற்கமுடியவில்லை. ஆனால் ஆரியர்கள், அவர்களை முறியடித்து விரட்டி விடுவதோடு திருப்தியடையவில்லை. ஆரியர்கள்மீது கண் வைப்பது எவ்வளவு ஆபத்தானது என்பதை, அந்தக் கறுப்பு அசுரர்கள் உணரும்படி செய்ய விரும்பினார்கள். முறிபட்டு ஓடும் அசுரப் படைகளைத் துரத்திக்கொண்டே, புருதானன் புஷ்கலாவதி நகரத்தை அடைந்தான். அசுரப்படைகளைப்போலவே, நகராதிபனும் ஆரியர்களுடைய இந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. ஆகவே, தங்களுடைய முழுச்சக்தியையும் உபயோகிப்பதற்கு அசுரர்களுக்குச் சந்தர்ப்பம் இல்லாமற் போய்விட்டது. புஷ்கலாவதிக் கோட்டை சுலபமாக ஆரியர்கள் கைவசப் பட்டதோடு நகராதிபதியும் பிடிபட்டான். அசுரர்கள்மீது இவர்களுக்குப் பகைமை எண்ணம் வேரூன்றி யிருந்ததால், கண்ட கண்ட அசுரர்களை எல்லாம் இரக்கமின்றிவெட்டிக் குவித்தார்கள். நகராதிபனை நகரச் சந்தியில் நிறுத்தி, நகரப் பிரஜைகளுக்கு முன்னால் அங்கம் அங்கமாக வதை செய்தார் கள். ஆனால் குழந்தைகள், பெண்கள், வியாபாரிகள் முதலிய வர்களைக் கொலை செய்யாது விடுத்தனர். அக்காலத்தில் அடிமைப்படுத்தும் வழக்கம் இருந்திருந்தால், அசுரர்களை இவ்வளவு அதிக அளவில் கொன்று குவித்திருக்கமாட்டார் கள். புஷ்கலாவதி நகரத்தின் பெரும்பாகத்தைத் தீக்கு

இரையாக்கினர், இதுவே அசுரர்களினுடைய கோட்டையின் முதலாவது அழிவு.

புருதானன் தன் ஆட்களுடன் திரும்பி, பாதுகாப்பிற்கு நிறுத்தப்பட்டிருந்தவர்களையும் உடன் அழைத்துக்கொண்டு தங்கள் தேசத்தை நோக்கிச் சென்றான்.

அன்றுதான், ஆரியர்களுக்கும் அசுரர்களுக்கும் (தேவர்-அசுரர்) இடையில் யுத்த விதையும் ஊன்றப்பட்டது.

பல வருஷங்கள் வரை புஷ்கலாவதி நகரின் வியாபாரம் சீரழிந்து போயிற்று. ஆரியர்கள் அசுரர்களோடு வியாபாரம் செய்ய மறுத்தனர். ஆனால், தாமிரத்தையும் பித்தளையையும் இவர்கள் எவ்வளவு காலத்திற்குப் பகிஷ்கரிக்க முடியும்?

---

*இன்றைக்கு நூற்று அறுபது தலைமுறைகளுக்கு முன்னே ஆரியர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம்—தேவாசுர யுத்தம் மூண்டதின் கதை இது. மலைவாசிகளான ஆரியர்களிடம் இன்னும் அடிமை வழக்கம் புகவில்லை. தாமிரம் செம்பு ஆயுதங்களின் உபயோகம் மிக அதிகரித்து விட்டது.

# அங்கிரா

இடம் : காந்தாரம் [தட்ச சீலம்]

ஜாதி : இந்திய ஆரியர்

காலம் : கி.மு. 1800

"இந்தப் பஞ்சாடையால் ஒரு பிரயோசனமுமில்லை. குளிரைத் தடுக்கவுமில்லை, மழையைத் தாங்கவுமில்லை" என்று தன்னுடைய நனைந்திருந்த மேல் அங்கியைக் களைந்து விட்டு, கம்பளப் போர்வையை உடம்பின் மீது போர்த்துக் கொண்டே ஒரு யுவன் கூறினான்.

"ஆனால், வெயிற் காலத்திற்கு இந்த ஆடை ரொம்பச் சௌகரியமாயிருக்கிறதே?" தன்னுடைய மேல் அங்கியைக் கழற்றிக் கதவின் மேல் உலரப் போட்டுக் கொண்டே மற்றொரு வாலிபன் கூறினான்.

இருட்டுவதற்கு இன்னும் அதிக நேரம் இருந்தது. ஆயினும் இந்த வழிப் போக்கர்கள் தங்கும் அகதிச் சாலையில் நெருப்பைச் சுற்றி, கூட்டம் கூடிவிட்டது. காற்றை விரும்பிய அந்த இரு வாலிபர்களும் குளிர் காயும் நெருப்பைவிட்டு ஒதுங்கி, கம்பளிப் போர்வைகளைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

முதல் வாலிபன்:—"நாம் இன்னும்பத்து மைல்தூரம் இன்று போயிருக்க முடியும். நாளைக் காலையிலேயே காந்தாரத்தை அடைந்து விடலாம். ஆனால் இந்த மழைக்கும் காற்றிற்கும் என்ன செய்வது?"

இரண்டாவது வாலிபன்:— "இந்த மழையும் காற்றும் நமக்குச் சிரமத்தைத்தான் கொடுக்கின்றன. ஆனால் மழை வருஷிக்காவிட்டாலோ, நம்முடைய விவசாயிகள் இந்திரனை நோக்கிப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்து விடுவார்கள்; மந்தைகளும் முகம் வாடிக் கத்த ஆரம்பித்து விடுகின்றன."

மு—வா:— "அது உண்மைதான். ஆனால் மழையை வெறுப்பவர்கள்வழிப்போக்கர்களாகிய நாம்தான். ஆயினும் யாரும் நிரந்தரமாக வழிப் போக்கர்களாய் இருப்ப தில்லையே?" என்று கூறிய அவன் மற்றவனுடைய கழுத் திற்குப் பின்புறம் இருந்த பெரிய காயத்தின் வடுவைப் பார்த்து, "நண்ப! உன்னுடைய பெயர் என்ன?" என்றான்.

"பால மத்ரன். உன்னுடைய பெயர்?"

"வருணசௌவீரன். அப்படியானால், நீ கிழக்கிலிருந்தா வருகிறாய்?"

"ஆம், மத்ரப் பிரதேசத்திலிருந்து வருகிறேன். நீ தெற்கிலிருந்தா வருகிறாய்? நண்ப தெற்கே ஆரியர்களோடு அசுரர்கள் இன்னும் யுத்தம் செய்கிறார்களென்று கேள்விப் பட்டேன். உண்மைதானா?"

"சமுத்திரக் கரையில் உள்ள அவர்களது ஒரே ஒரு நகரந்தான் மிஞ்சியிருக்கிறது. மற்றவையெல்லாம் விழுந்து விட்டன. நண்ப! நம்முடைய பாரத இந்திரன் எவ்வளவு பராக்கிரமசாலி! அசுரர்களுடைய நூற்றுக்கணக்கான நகரக் கோட்டைகளை நொறுக்கி விட்டான்!"

"அசுர நகரக் கோட்டைகள் செம்பினால் கட்டப் பட்டவை என்று சொல்லுகிறார்களே, உண்மையா?"

"அசுரர்களிடத்தில், செம்பு முதலிய உலோகங்கள் அதிகமாகவே இருக்கின்றன. ஆனால் கோட்டை கட்டு வதற்கு வேண்டிய அவ்வளவு செம்பு அவர்களிடம் இருக்க முடியாது. இந்த மாதிரிக் கதைகள் எவ்விதம் பரவுகின்றன என்பது எனக்குப் புரியவில்லை. அவர்களுடைய வீடு கட்டும் செங்கல்கள் மண்ணால் செய்து, நெருப்பிலே வேக வைக்கப் பட்டவை. அவற்றின் அகல-உயரம் சமமாகவும், நீளம் அதிகமாகவும் இருக்கும். அதே செங்கற்களைக் கொண்டே, அவர்கள் நகரத்தைச் சுற்றிலும் கனத்த சுவர் எழுப்பிக் கோட்டை கட்டியிருக்கிறார்கள். அந்தச் செங்கற்களும் சிவப்பு நிறத்தவைதான். ஆயினும், தாமிரத்திற்கும் அதற் கும் நிறத்தில் அதிக வித்தியாசம் இருக்கிறது.

"நண்ப வருண! அசுரர்களின் செம்புக் கோட்டைகளைப் பற்றி நாங்கள் நீண்ட நாட்களாகக் கேள்விப்பட்டு வருகிறோம்."

"இருக்கலாம். அந்த நகரங்களேயும், கோட்டைகளேயும் இடிப்பதற்கு நம்முடைய இந்திரன் எவ்வளவு சக்தியைச் செலவிட வேண்டியிருந்தது. அதைக் கருதியே, இந்த மாதிரிக் கதைகள் பரவியிருக்கலாம்."

"ஸம்பரனுடைய பராக்கிரமத்தைப் பற்றியும் பல கதைகள் சொல்கிருர்களே! சமுத்திரத்தில் அவனுக்குக் கோட்டையிருந்ததாம். அவனுடைய ரதம் ஆகாயத்திலுங் கூடப் பறக்குமாம். இவையெல்லாம் உண்மையா?"

"ரதம் ஆகாயத்தில் பறந்ததென்பது முழுப்பொய். யுத்தக் கலேயில் அசுரர்கள் ஒரேஒர் அம்சத்தில் மட்டுமே பல வீனர்களாயிருந்தார்கள். அதுதான் குதிரையேற்றம். இப்பொழுதுங்கூட உற்சவ காலங்களில் குதிரை ரதத்திற்குப் பதிலாக ரிஷப ரதத்தையே அவர்கள் உபயோகிப்பார்கள். நமக்குக் குதிரையேற்றம் தெரிந்திருப்பதாலேயே அவர்களே வெற்றி கொள்ள முடிந்தது. இல்லேயேல், பலம் பெருந்திய கோட்டை கொத்தளங்களுடன் கூடிய அசுர நகரங்களே நாம் ஜெயித்திருக்கவே முடியாது. ஸம்பரன் இறந்து இப்பொழுது இருநூறு வருஷங்கள் ஆகிவிட்டன. அவனிடத்தில் குதிரை பூட்டிய ரதங்கள்கூட இருந்திருக்க முடியாதென்றே நான் நினேக்கிறேன். ஆகாயத்தில் பறக்கும் ரதத்திற்கு அவன் எங்கே போவான்?"

"ஸம்பரன் இவ்வளவு சாதாரண எதிரியாயிருந்தால் அவனே ஜெயித்ததற்காக நம்முடைய இந்திரனுக்கு இவ்வளவு பெருமை எப்படி வந்தது?"

"இல்லே, ஸம்பரனும் ஒரு மாரதன், அவனுல் உபயோகிக்கப்பட்ட தங்கம் பூசிய தாமிரக் கவசம் ஒன்றை நான் சௌவீர புரத்தில் பார்த்திருக்கிறேன். உறுதியான அந்தக் கவசத்தின் அகலத்தைக் கொண்டே அவனுடைய பரந்த மார்பை அனுமானித்துக் கொள்ளலாம். பொதுவாக அசுரர்கள் குட்டையானவர்கள். ஆனுல் ஸம்பரன் வளர்ந்த ஆஜானுபாகுவானவன்; திட சரீரி. நம்முடைய இந்திரன் ஒல்லியான சரீரம் படைத்தவன் ;ஆனுல் பராக்கிரமசாலி. இப்பொழுதுங்கூட சிந்து நதிக்கரையில், அசுரர்களுடைய சிதைந்துபோன கோட்டைகள் காணப்படுகின்றன. அதற்குள் இருந்துகொண்டு கேவலம் நூறு வில்லாளிகள் ஆயிரக் கணக்கான எதிரிகளேச் சமீபத்தில் நெருங்கவொட்டாமல் தடுக்க முடியும். உண்மையில், இந்த அசுர நகரங்கள் அயோத்யா (அயோத்தியா, அதாவது ஜெயிப்பதற்கு முடி

யாதது) வாகவே இருந்தன. இப்படிப்பட்ட வலிமை பொருந்திய அசுர நகரங்களை வெற்றி கண்ட நம்முடைய இந்திரன், இல்லை இல்லை, நம்முடைய சேனாதிபதி மகா பராக்கிரமசாலி என்பதற்கு சந்தேகமே இல்லை.''

''நண்ப வருண! தெற்கே இப்பொழுதுங்கூட அசுரர்கள் பலம் பொருந்தியவர்களாகவே இருக்கிறார்களா?''

''இல்லை. சமுத்திரக் கரையிலிருந்த அவர்களுடைய கடைசி நகரமும் சமீபத்தில் ஜெயிக்கப்பட்டுவிட்டது. அந்த யுத்தத்தில் நானும் கலந்து கொண்டிருந்தேன்'' என்று சொல்லும்பொழுது அவனுடைய பொன்னிறமான நீண்ட கூந்தலைப் பின்புறமாக ஒதுக்கிக்கொண்டே அவன் ''அசுரர்களுடைய கடைசி நகரமும் விழுந்துவிட்டது'' என்றான்.

''உன்னுடைய இந்திரன் யார்?''

''இந்திர பதவியை நாங்கள் எடுத்துவிட்டோம்.''

''எடுத்து விட்டீர்களா?''

''ஆம்; தென் பிரதேச ஆரியர்களாகிய எங்களுக்கு இந்தப் பதவி, பயத்தைக் கொடுக்க ஆரம்பித்தது.''

''பயப்படுவானேன்?''

''சேனைக்கு நாயகனையே நாம் இந்திரன் என்று அழைக்கிறோமல்லவா?''

''ஆம்.''

''ஆம்; சேனாதிபதியைத் தங்களுடைய சகல காரியங்களுக்கும் நாயகனாக ஆரியர்கள் மதிப்பதில்லை. யுத்த காலத்தில் அவனுடைய உத்திரவை நாம் அப்படியே ஏற்று நடக்கிறோமென்பது உண்மையே. ஆனால் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை மனம் விட்டுச் சொல்வதற்கு அதிகாரமுள்ள சமூகச் சபையைத் தான் ஆரியர்களாகிய நாம் சகலத்துக்கும் மேலானதாகக் கருதுவோம்.''

''ஆம், ஆம்.''

'ஆனால், இதற்கு நேர்மாறான கொள்கை அசுரர்களுடையது. அசுரர்களின் இந்திரன் அல்லது ராஜாவே சகல அதிகாரங்களும் உடையவன். அவனுக்கு மேலாக எந்த

ஒரு சமூகச் சபையையும் அவன் அங்கீகரிப்பது கிடையாது. அசுர ராஜாவின் வாயிலிருந்து வெளிவரும் வார்த்தைகளெல்லாம் சட்டம். அதை ஒவ்வோர் அசுரனும் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டும். இதை மீறுபவர்களுக்குத் தண்டனை மரணந்தான்.''

''இப்படிப்பட்ட இந்திரனை ஒருபொழுதும் நாம் ஏற்றுக் கொள்ள முடியாது.''

''ஆனால் அசுரர்கள், இப்படிப்பட்ட, இந்திரனையே விரும்புகிறார்கள். அவர்கள் தங்களுடைய அரசனை மனிதனாக அல்ல, கடவுளாகவே மதிக்கிறார்கள். அவனைப் பூஜிப்பதற்காக அவர்கள் செய்யும் காரியங்களைச் சொன்னால் நம்பவே கஷ்டமாயிருக்கும்.''

''ஆம். நானும் பார்த்திருக்கிறேன்; அவர்களுடைய புரோகிதர்கள், அசுரர்களைக் கழுதையாக ஆக்கி வைத்திருக்கிறார்கள்.''

ஆம்; கழுதைகளுக்கும் இழிவாக, அசுரர்கள் லிங்க பூஜை செய்கிறார்கள். ஆண்குறி பெண்குறியில் சேர்ந்திருப்பது போன்றது அந்த லிங்க வடிவம். ஆண், பெண் உறவின் இன்பத்திற்கு அவைகள் சாதனமென்பதையும், அந்த உறவின் மூலம் நமது எதிர்கால சந்ததி வளர்கிறது என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், மண்ணிலோ அல்லது கல்லிலோ அந்த வடிவத்தைச் செய்து வைத்துக்கொண்டு வணங்குவது பெரிய முட்டாள்தனமாக இருக்கிறது அல்லவா?''

''இதிலென்ன சந்தேகம்!''

''அந்த அசுர அரசன் இந்த லிங்க தெய்வத்தின் பெரிய பக்தன். ஆனால் இதுவும் ஒரு வேஷம் என்றே நான் நினைக்கிறேன். அந்த அசுர அரசனும் அவனுடைய புரோகிதர்களும் முட்டாள்களல்ல. ஆரியர்களாகிய நம்மைப் பார்க்கிலும் அவர்கள் கெட்டிக்காரர்கள். அவர்களுடைய நகரங்களைப் போல் நகரங்கள் அமைப்பதற்கு நாம் கற்றுக்கொள்ள நீண்ட நாட்கள் பிடிக்கும். அவர்களுடைய கடைவீதி, தாமரை மலர்கள் நிறைந்திருக்கும் தாடகங்கள், அதன் உயர்ந்த படிக்கட்டுகள், அகன்ற ராஜ வீதிகள் போன்ற அமைப்புக்களை நம் ஆரிய பூமியில் காணவே முடியாது. நான் அசுரர்களுடைய புராதன நகரங்களையும் பார்த்திருக்

கிறேன். அசுரர்கள் விட்டுச் சென்ற அழிந்துபோன பழைய நகரங்களை ஆரியர்கள் பழுது பார்த்துத் திரும்ப அமைத்திருக்கிறார்கள். ஆயினும் அவற்றிலே பழைய அமைப்பைக் காணமுடியவில்லை. ஆனால் இந்தப் புதிய நகரத்தை, அரசன் ஸம்பரன் நேரே இருந்து கட்டினானாம். தேவலோகம் போல் இருக்கிறது.''

''தேவலோகமா?''

''ஆம், தேவலோகம்தான். ஏனெனில், இந்த உலகத்தில் அந்த நகரத்துக்கு உதாரணமாகச் சொல்ல வேறு கிடையாது. அந்தப் புதிய நகரத்திலுள்ள ஒரு வீட்டை எடுத்துக் கொள்வோம்; இதில் வெளியாரை வரவேற்பதற்கு அலங்கரிக்கப்பட்ட ஒன்று அல்லது இரண்டு அறைகள்; புகைபோக்கியோடு கூடிய தனித்து நிற்கும் சமையல் அறை; காற்றோட்டமான படுக்கையறை; அதை அடுத்து சாமான்கள் வைக்கும் அறை; முற்றத்தின் மத்தியிலே செங்கற்களால் கட்டப்பட்ட கிணறு; குளிக்குமிடம் முதலிய வசதிகளோடு அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த வீடு சாதாரண வியாபாரியின் வீடே. இரண்டு அல்லது மூன்று மாடிகள் வைத்துக் கட்டப்பட்டிருக்கின்றது. அந்த அசுர நகரத்தின் அழகை நான் எப்படி வருணிக்க முடியும்? அதற்கு உவமை இல்லாத போது தேவலோகம் என்றுதானே சொல்ல முடியும்?''

''கிழக்கேயும் அசுரர்களுடைய நகரங்கள் இருக்கின்றனவாம். ஆனால் எங்களுடைய மத்ரப் பிரதேசத்துக்கும் அதற்கும் வெகு தூரம்.''

''நான் நேரே பார்த்திருக்கிறேன் நண்ப! இப்படிப்பட்ட நகரங்களை அமைத்திருக்கிறார்களே, அவர்கள் ஆரியர்களாகிய நம்மைப் பார்க்கிலும் பெரிய நிபுணர்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். சமுத்திரத்தைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''சமுத்திரம் என்ற பெயரைக் கேட்டிருக்கிறேன்.''

''பெயரையோ அல்லது வர்ணனைகளையோ கேட்பதினால் அதைச் சரியாக உணர்ந்துகொள்ள முடியாது. சமுத்திரத்தின் கரையிலே நின்றுகொண்டு பார்த்தால், ஏதோ ஓரளவு புரிந்துகொள்ள முடியும். எதிரிலே நீலநிறத் தண்ணீரும் நீல நிற ஆகாயமும் ஒன்றாகக் கலந்திருப்பதைக் காண்போம்.''

''நண்ப! தண்ணீர் ஆகாயத்தோடு கலந்திருக்குமா?''

''ஆம், கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே தண்ணீர் மயம். முடிவிலே அது ஆகாயத்தைத் தொட்டுக்கொண்டிருக்கிறது. இரண்டின் நிறமும் ஒன்றாகக் காட்சியளிக்கிறது. இந்த எல்லையற்ற சமுத்திரத்திலே, அசுரர்கள் தங்கள் பெரிய படகுகளை நிர்ப்பயமாகச் செலுத்துகிறார்கள். மாதக் கணக்கிலும் வருடக்கணக்கிலும் பிரயாணம் செய்து கடலிலிருந்து விதவிதமான ரத்தினங்களைக் கொண்டு வருகிறார்கள். அவர்களுடைய தைரியத்திற்கும், திறமைக்கும் இது ஓர் எடுத்துக்காட்டு; இன்னொரு அற்புதம் நீ கேள்விப்பட்டிருக்கவே மாட்டாய். அசுரர்கள் வாய் திறந்து பேசாமலே சம்பாஷிக்கிறார்கள்?''

''வாய் திறந்த பேசாமல் சம்பாஷிக்கிறார்களா?''

''ஆம். வாய்திறந்து பேசாமலே அவர்களால் சம்பாஷிக்க முடிகிறது! மண், கல் அல்லது தோல் முதலிய ஏதாவது ஒன்றில் ஓர் அசுரன் சில அடையாளங்களைக் கிழித்து மற்றவனிடம் கொடுப்பான்; அடுத்தவன் எல்லா விஷயங்களையும் தெரிந்துகொள்வான். நாம் இரண்டு மணி நேரம் பேசியும் விளங்க வைக்க முடியாத ஒரு விஷயத்தை, அவன் இரண்டு மூன்று கோடுகளை இழுத்து விளங்கவைத்து விடுகிறான். இந்த விஷயத்தை ஆரியர்களாகிய நாம் இதுவரை அறியவே மாட்டோம். இப்பொழுதுதான் நம்முடைய ஆரியர்கள் இந்தக் கோடுகளைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் வருஷக்கணக்காக முயன்றும் அவர்கள் இன்னும் பூர்ணமாகக் கற்றுக்கொள்ள முடியவில்லை.''

''அப்படியானால், நம்மைப் பார்க்கிலும் அசுரர்கள் கெட்டிக்காரர்கள் தான்.''

''அவர்களில் கொல்லர், தச்சர், தட்டார், கருமார், தந்த வேலை செய்வோர், நெய்வோர், சிற்பிகள் முதலிய ஒவ்வொரு தொழிலாளியினுடைய திறமையையும் பார்த்து நாம் அப்படியே அயர்ந்து விடுகிறோம். அப்படிப்பட்ட திறமைசாலிகளை, நம்மைப் பார்க்கிலும் கெட்டிக்காரர்கள் என்று ஒப்புக்கொள்வதில் ஆட்சேபணை என்ன?''

''அசுரர்கள் வீரர்களும்கூட என்று நீ சொன்னாயே?''

''ஆம். ஆனால் அவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஆரியர்களைப்போல், அவர்களுடைய ஒவ்வொரு

குழந்தையும், பால்குடி மறந்ததுமே கத்தி எடுத்து விளையாடுவதில்லை. அவர்களில் யுத்த வீரர்கள் ஒரு தனி ஜாதியராக இருக்கிறார்கள். மற்றவர்களும் அப்படியே. யுத்த ஜாதியாரைத் தவிர மற்றவர்கள் போர்க்கலையைக் கற்பதில்லை. அந்த யுத்த வீரர்கள் மற்றவர்களையெல்லாம் தாழ்வாக நினைக்கிறார்கள். மேலும் அடிமைகளின் நிலைமையோ மிருகங்களைவிடக் கேவலமானது. அவர்களை எஜமானர்கள் விற்பது மட்டுமல்ல, அவர்களுடைய உடம்பையும் உயிரையும்கூடத் தங்கள் விருப்பம்போல் உபயோகிக்கிறார்கள்.''

''ஓஹோ! அதனால்தான் அவர்கள் ஆரியர்களிடம் தோல்வியடைகிறார்கள்.''

''ஆம், அசுரர்களுடைய தோல்விக்கு இது ஒரு முக்கிய காரணம். இன்னுமொரு பெரிய காரணம், அசுரர்கள் தங்கள் அரசனை ஜனங்களைவிட உயர்ந்த கடவுளாக மதிப்பது.''

''ஆரியர்களாகிய நாம் இந்தக் கொள்கையை ஒருபோதும் ஏற்றுக்கொள்ள முடியாது.''

''ஆம், இதனாலேயே, இந்திர பதவியை எடுத்துவிட நேர்ந்தது. எங்களுடைய இந்திரன் பகவானுக்குப் பின்னே வந்த இந்திரர்களில் ஒருவன், அசுர அரசனைப்போல் ஆவதற்கு விரும்பி விட்டான்.''

''அசுர அரசனைப்போல் ஆவதற்கா? ஆரிய சமூகத்தின் மீது ஆதிக்கம் செலுத்துவதாவது?''

''ஆம், அவன் ஒருவன் மாத்திரமன்று; அவனுக்குப் பின்னே வந்த இந்திரனும் இவ்விதமே ஆவதற்கு விரும்பினான். நம்மில் சில ஆரியர்களும் இந்த இந்திரனுக்கு உதவியாயிருப்பதும் தெரிய வந்தது!''

''இவர்களும் உதவியா யிருந்தார்களா?''

''ஆம், சிலபேர்; அதுவும் உறவு முறையில். இதனாலேயே சௌவீர் குலத்து ஆரிய சமூகம், 'இனிமேல் யாருமே இந்திரனைத் தேர்ந்தெடுக்கப் படக்கூடாது' என்று முடிவுசெய்தது. இன்னொரு விஷயம்; அதாவது மேகங்களின் தலைவனுக்கும் இந்திரன் என்ற பெயர்தான். ஆகையால் நம்முடைய இந்திரனும் மேகங்களின் தெய்வமான இந்திரனும் ஒன்றுதானோ என்ற பிரமை, ஜனங்களுக்கு ஏற்பட்டு விடக்கூடும்

என்ற பயமும் இதை எடுத்து விடுவதற்கு ஒரு பெரிய காரணம்.''

''நல்ல காரியம் செய்தீர்கள்.''

''ஆனல், நம்மிலும் எத்தனையோ பேர் ஆரிய சமூகத்திற்குக் களங்கம் ஏற்படுத்த முனைத்துவிட்டார்கள். இவர்கள் அசுரர்களுடைய ஒவ்வொரு காரியத்தையும் புகழ்வதில் ஒய்வடைவதில்லை. அசுரர்களிடத்தில் நான் கூறிவந்ததைப் போன்ற எத்தனையோபுகழத்தக்க விஷயங்கள் இருக்கின்றன. ஆரியர்களாகிய நாம் அவற்றைக் கட்டாயம் கைக்கொள்ள வேண்டும். அவர்களுடைய ஆயுதங்களைப் பார்த்த நாம் அவைகளைப்போல் செய்ய ஆரம்பித்தோம். அவர்களுடைய ரிஷப ரதங்களைப் பார்த்த நம்முடைய இந்திரன், அவற்றைப் போல் குதிரை ரதங்களைச் செய்வித்தான். ரிஷப ரதங்களைப் பார்க்கிலும் குதிரை பூட்டிய ரதங்கள் வில் யுத்தத்தில் மிகவும் உதவியாயிருக்கின்றன. எதிரிகளினுடைய பாணங்களிலிருந்து தப்புவதற்கு அந்த ரதங்கள்மீது மூடியும் போட்டுக் கொள்ளலாம். அவர்களுடைய கவசம், கதாயுதம் பாணங்கள் இவைகளைப் பார்த்து நாம் அதிகமாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம். அவர்களுடைய நகர அமைப்பு, வீடுகள் கட்டும் முறை இந்தக் கலைகளிலிருந்து நாம் அனேக விஷயங்களை கிரகித்துக் கொண்டிருக்கிறோம். அவர்களுடைய சமுத்திர யாத்திரையையும் நாம் பழகித் தெரிந்து கொள்ள வேண்டியது மிக மிக அவசியம். தாமிரம் முதலிய உலோகப் பொருள்களும், ரத்தின வகைகளும், சமுத்திரத்திற்கு அப்பாலிருந்தே கொண்டுவரப்படுகின்றன. இப்பொழுதுங்கூட இந்த வியாபாரங்களெல்லாம் அசுர வியாபாரிகளுடைய ஆதிக்கத்திலேயே தானிருக்கின்றன; ஆனல், அசுரர்களுடைய லிங்க பூஜை, மனிதர்களை வாங்கி விற்கும் அடிமை வியாபாரம், இவை போன்ற பழக்க வழக்கங்கள் வெறுக்கத் தக்கவை என்று ஒதுக்கித் தள்ள வேண்டும்.''

''லிங்க பூஜையை ஆரியரில் எவனும் விரும்பமாட்டான்''

''நண்ப! அவ்விதம் நினையாதே. நம்மிலும் அநேகர் அசுரர்களைப்போல், நம்மிடையிலும் ஒரு புரோகிதக் கூட்டத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆரியர்களில், போர்வீரர், புரோகிதர், வியாபாரி, விவசாயி,

சிற்பி என்ற பிரிவுகள் கிடையாது. ஆரியர்கள் எல்லோரும் எல்லா வேலையையும் தங்கள் விருப்பப்படியே செய்கிறார்கள். ஆனால், அசுரர்களுடைய ஒவ்வொரு தொழிலுக்கும் தனித் தனி ஜாதியார் இருக்கிறார்கள். இன்று ஆரியர்களாகிய நாம், நமக்குள்ளும் புரோகிதர்களைச் சிருஷ்டித்துவிட்டால், சில வருஷங்களிலேயே நாமும் லிங்கத்தைப் பூஜிக்க ஆரம் பித்து விடுவோம். அசுர புரோகிதர்கள் கொலைகாரர்களா யிருக்கிறார்கள்; லாபத்தில் நோக்கமுடையவர்களாயிருக் கிறார்கள். நம்முடைய புரோகிதர்களும் அவர்களைப் போலவே ஆகிவிடுவார்கள் என்பதில் சந்தேகம் உண்டா?''

''இது பெரிய கெடுதியாகவன்றோ முடியும்?''

''கடந்த இருநூறு வருஷங்களாக ஏற்பட்டுவரும் ஆரிய—அசுரக் கூட்டுறவால் அசுரர்களுடைய எத்தனையோ கெட்ட பழக்கங்கள் ஆரியர்களிடத்திலும் புகுந்து விட்ட தைப் பார்த்து நம் பெரியோர்களிற் பலருக்கு அவநம்பிக்கை உண்டாகிவிட்டது எனக்குத் தெரியும். ஆனால் எனக்கும் அம் மாதிரி அவநம்பிக்கை ஏற்பட்டுவிடவில்லை. ஆரியர் களிடையே அவர்களது சுத்த ஆர்யத்துவத்தை ஞாபகப் படுத்திச் சரியான முறையில் வேலை செய்தால், அவர்களை நன்னெறிக்குத் திருப்பிவிட முடியும் என்ற நம்பிக்கை எனக் கிருக்கிறது. காந்தார நகரத்தில் (தட்சசீலத்தில்) அங்கிரா என்ற பெயருள்ள ஆரிய ரிஷி ஒருவர் இருக்கிறார். அவர் ஆரியர்களின் புராதனக் கலைப்பண்பு நிரம்பப் பெற்ற வர். அவர் ஆரியர்களுக்கு அவர்களுடைய புராதனக்கலைப் பண்புகளையும் நன்னெறிகளையும் போதித்துக் கொண்டிருக் கிறார். ஆரியர்களுடைய வெற்றிக்காக நான் ஆயுதம் ஏந்தி யுத்தம் செய்திருக்கிறேன். இப்பொழுது ஆரியத்துவத்தைக் காப்பாற்றுவதற்காக ஏதேனும் காரியம் செய்ய வேண்டு மென்று விரும்புகிறேன்.''

''தற்செயலாக இருவரும் ஒன்று சேர்ந்திருக்கிறோம்; நானும் யுத்தக்கலை பயில்வதற்காக ஞானி அங்கிராவிடந் தான் போகிறேன்.''

''மிகுந்த சந்தோஷம் நண்ப பாலமத்ர! கிழக்கிலிருக் கும் ஆரியர்களைப்பற்றி நீ ஒரு வார்த்தையும் கூற வில்லையே!''

''கிழக்கே ஆரியர்கள் நெருப்பைப்போல் பெருகிக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் காந்தாரப் பிரதேசத்திற்கு அப்பால், மத்ரர்களாகிய எங்களுடைய பிரதேசம். அதற்கு

அப்பால் உள்ளதை மல்லர்கள் சொந்தமாக்கிக்கொண்டார்கள். இதே மாதிரி குரு, பாஞ்சாலர் முதலிய நம்முடைய ஆரிய சமூகத்தார் ஆங்காங்கு பெரிய பெரியபிரதேசங்களைத் தொடர்ந்து கைப்பற்றி வாழ்ந்து வருகிறார்கள்.''

''அப்படியானால் அங்கும் ஆரியர்கள் ஏராளமாயிருப்பார்கள்.''

''ரொம்ப அதிகம் என்று சொல்ல முடியாது. முன்னேறிச் செல்லச் செல்ல அசுரர்களையும் மற்றவர்களையும் அதிக அளவில் சந்திக்க முடிகிறது.''

''அசுரர்களைத் தவிர மற்றவர்கள் யார்?''

''அசுரர்கள், கொஞ்சம் சென்னிறங் கலந்த கறுப்பு நிறமாயிருக்கிறார்கள். கிழக்கே இருக்கும் மற்றொரு ஜாதியார் அடுப்புக்கரி போன்ற நிறத்தவர். அவர்களைக் கோல் ஜாதியார் என்று சொல்கிறார்கள். இந்தக் கோல் ஜாதியார் கிராமங்களிலும் வசிக்கிறார்கள். ஆனால் பெரும்பாலோர் வனங்களில் மிருகங்களைப்போல வசிக்கிறார்கள். அவர்கள் உபயோகிக்கும் ஆயுதங்களில் பெரும் பகுதி கற்களால் செய்தவைகள்.''

''அப்படியானால், ஆரியர்கள் ஆரியர்களல்லாதவரோடு மிகுதும் போராட வேண்டியதேற்படுமே?''

''நேரடியான போராட்டம் இப்பொழுது மிகவும் குறைவு. நம்முடைய குதிரைகளைப் பார்த்தவுடனேயே அவர்கள் ஓட்டமெடுக்கின்றனர். ஆனால் இரவு நேரங்களில் அவர்கள் நம்முடைய கிராமங்களைத் தாக்க ஆரம்பித்துவிடுகின்றனர். இதனாலேயே அவர்கள்மீது நாம் மிகவும் குரூரமான முறையில் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இப்பொழுது அவர்கள் கிராமம் கிராமமாகக் காலி செய்து இன்னும் கிழக்குத் திசை நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றனர்.''

''அந்தப் பகுதியில் அசுரர்களுடைய பழக்க வழக்கங்கள் நம்மிடையில் புகுந்துவிடக்கூடிய அம்சம் இல்லையே?''

''மத்ரர்களிடத்தில் இதுவரையில் அவ்விதம் இல்லை. மல்லர்களிடத்தும் குடிகொள்ளவில்லை; எதிர்காலத்தைப் பற்றி நிர்ணயமாகச் சொல்ல முடியாது. எங்கள் பகுதியில் ஆரியரல்லாதார் பெரும்பாலும் வனங்களிலேயே வசிக்கிறார்கள்.''

இருவரும் இவ்விதமாக இருள் சூழ்ந்த பின்பும் வெகு நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். அந்தக் கட்டிடத்து நிர்வாகி இவர்களிடம் போஜனத்தைப்பற்றி ஞாபகப் படுத்தவில்லையானல், இவர்களுடைய சம்பாஷணை இப்பொழுது முடிவடைந்திராது. இந்தக் கட்டிடம், யாத்ரீகர் தங்குவதற்காகக் கிராமத்தார்களால் கட்டப்பட்டது. யாத்ரீகர் என்றால் ஆரியர்கள் மட்டும்தான் என்பதை நாம் குறிப்பிடவேண்டியதில்லை. இரவு தங்குவதற்கு வேண்டிய வசதிகள் செய்யப் பட்டிருக்கின்றன. யாத்ரீகர்களில் யாரிடம் உணவுப் பொருள்கள் இல்லையோ, அவர்களுக்கு அகதிச் சாலையிலிருந்து மாவும், பசு மாமிசச் சூப்பும் கொடுக்கப்படுகிறது. உணவுப் பொருள்கள், அல்லது பதிலுக்குச் சாமான் கொடுத்தால் யாத்ரா விடுதியின் நிர்வாகி சமைத்துக் கொடுப்பார். மதுவகைக்கு இந்த யாத்ரா விடுதி மிகவும் பிரசித்தமானது. நண்பர்கள் இருவரும் நெருப்பிலே சுடப்பட்ட பசு மாமிசம், மது இவற்றைப் புசித்தும்—அருந்தியும் தங்களது நட்பைப் பலப்படுத்திக் கொண்டனர்.

## 2

ஞானி அங்கிரா, சிந்து நதிக்குக் கிழக்குப் பிரதேசவாசிகளான காந்தார சமூகத்தில், சமூகத் தலைமைப் பதவிவரை வகித்தவர். புஷ்கலாவதி நகரம் ஆரியர்களால் வெற்றி கொள்ளப்பட்ட பிறகு, அசுரர்கள் அங்கிருந்து பின்வாங்கத் தொடங்கினர்கள் என்றாலும், அடுத்த தலைமுறையில் குனர் பிரதேசத்திலிருந்து வந்த ஆரியர்கள் மேற்குக் காந்தாரத்தை ஜெயித்த பிறகுதான், உயிர் தப்பிய அசுரர்கள் எல்லோரும் காந்தாரப் பிரதேசத்தை முற்றிலும் காலி செய்துவிட்டு வெளியேறினர்கள். அவர்கள் வெளியேறிய முப்பது வருடங்களுக்குப் பிறகு குனர் ஆரியர்களுக்கும், மத்ரர்களுக்கும் இடையே சிந்து நதிக்குக் கிழக்கிலுள்ள காந்தாரப் பிரதேசத்தில், ஒரு பெரும் போர் நடந்தது. முடிவில் சிந்து நதியிலிருந்து ஜீலம் நதிவரை உள்ள பிரதேசம் குனர் காந்தாரர்களுக்கு, ஜீலம் நதியிலிருந்து ராவி நதிவரையுள்ள பிரதேசம் மத்ரர்களுக்குமாகப் பிரித்துக்

கொண்டார்கள், பின்னுல் கிழக்குக் காந்தார மத்ர சமூகம் என்ற பெயரால், இவர்கள் பிரபலமடைந்தார்கள்.

அசுரர்களுக்கும் ஆரியர்களுக்கும் மூண்ட ஆரம்ப யுத்தத்தில், இருதரப்பாரும் மனிதத் தன்மையற்ற முறையில் குரூரமாக நடந்து கொண்டனர். இதன் விளைவாக, காந்தாரப் பிரதேசத்தில் அசுரர்களுடைய பூண்டே அற்றுப் போய்விட்டது. ஆனுல் மத்ரப் பிரதேசத்தில், ஒரு சில அசுரர்கள் தப்பிப் பிழைத்திருந்தார்கள். நாட்கள் செல்லச் செல்ல, இருதரப்பிலும் பழிவாங்கும் மனப்பான்மையும் குறைந்து கொண்டே வந்துவிட்டது. ஆரியர்களும் தங்கள் குரூரமான செயல்களைக் குறைத்துக் கொண்டனர். இது மட்டுமல்ல, நாளடைவில் அசுரர்களின் அநேக பழக்க வழக்கங்கள் ஆரியர்களிடையே பரவத் தொடங்கியது. வட்சுநதிப் பிரதேசத்திலிருந்து முன்னேறி வரும் ஆரிய பரம்பரையின் ஞானத்தின் சிகரம் மகரிஷி அங்கிரா. ஆரியர்கள், தங்களுடைய எல்லா நடவடிக்கைகளிலும் புனிதமான சுத்த ஆரியத்துவத்தின் பிரதிநிதிகளாக இருக்க வேண்டுமென்பது ஞானி அங்கிராவின் விருப்பம். இதனுலேயே அநேக காரணங்களால் தடுக்கப்பட்டிருந்த குதிரை மாமிச உணவை, மறுபடியும் ஆரியர்களிடையே புகுத்தி அதற்காகவே குதிரைகளை வளர்க்கும் பழக்கத்தையும் தூண்டினுர். அவருடைய ஆரிய அபிமானம், அறிவுத் திறமை, யுத்தக் கலையின் நிபுணத்துவம், இவற்றின் புகழ் வெகு தூரம்வரை பரவி இருந்தது. தூர தூரத்திலிருந்து ஆரிய குமாரர்கள் இவரிடம் கலைகள் பயில்வதற்காகக் காந்தாரத்திற்கு வரத் தொடங்கினர். காந்தாரப் பிரதேசத்தில் ஞானி அங்கிரா அப்பொழுது போட்ட அந்த அறிவுச் சிறு விதை, 'தட்ச சீலம்' என்ற உருவத்தில் பெரிய மரமாக வளர்ந்து, அதன் நிழலையும் இனியகனிகளையும் அனுபவிப்பதற்காக, உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் அறிவுத் தாகம் கொண்ட மாணவர்களை இழுத்து வருமென்று அப்பொழுது யார் நினைத்திருக்க முடியும்?

ஞானி அங்கிராவிற்கு வயது அறுபத்தைந்து, அவருடைய வெண்மையான கேசமும் தொப்புள்வரை தொங்கி ஆடிக் கொண்டிருக்கும் வெண்மை நிறத் தாடியும், அவருடைய கம்பீரமான முகத் தோற்றமும், யாரையும் ஆகர்ஷிக்கும் சக்தி வாய்ந்ததாயிருந்தன. பேனு, மை அல்லது ஓலை, எழுத்தாணி, முதலியவைகள் உபயோகத்தில் வருவதற்கு இன்னும் எத்தனையோ நூற்றுண்டுகள் பாக்கி

இருக்கின்றன! வாய்மொழியாகவே, அவர் மாணவர்களுக்குப் போதித்து வந்தார். அவற்றில் பழைய பாடல்களையும், கவிதைகளையும் மாணவர்கள் திரும்பத் திரும்பப் பாடி ஞாபகம் செய்துகொள்வார்கள். வெகுதூரத்திலிருந்து வந்திருக்கும் மாணவர்களின் உணவு—உடை இவைகளுக்கும் ஏற்பாடு செய்யவேண்டி இருந்தது. ஞானி அங்கிரா, தன்னுடைய பிதுரார்ஜித நிலங்களோடுகூட, மாணவர்களைக் கொண்டு காடுகளை வெட்டி நிலமாக்கி அவற்றிலிருந்து வருஷம் பூராவுக்கும் போதுமான கோதுமை முதலிய தான்யம் விளைவிக்க ஏற்பாடு செய்தார். பழத்தோட்டங்கள் வைத்து உற்பத்தி செய்யும் பழக்கம் அப்பொழுது கிடையாது. ஆனால் பழங்கள் பழுக்கும் காலத்தில் தன்னுடைய மாணவர்களுடன் வனத்தில் சென்று பழங்களைச் சேகரித்துக் கொள்வார். நிலங்களில் வெள்ளாண்மை செய்யும் காலங்களிலும் பழங்கள் சேகரிக்கக் காடுகளுக்குச் செல்லும் போதும் மகரிஷியும் அவரது மாணவர்களும் வட்சுநதிக் கரையிலும், சுவாதநதிக் கரையிலும் ஆரியர்களால் செய்யப்பட்ட கீதங்களை மிகப் பிரியத்தோடு பாடுவார்கள். இந்தக் காந்தாரப் பிரதேசங்கள் முழுவதிலும், மகரிஷி அங்கிராவின் குதிரை லாயம்தான் மிகப்பெரியதும் பிரசித்தமானதும் ஆகும். அவர் தொலை தூரத்திலிருந்து தன்னுடைய மாணவர்கள் மூலமாயும், தெரிந்தவர்கள் மூலமாயும் நல்ல ஜாதிக் குதிரைகளைத்தேடிக்கொண்டு வரச் செய்து வளர்ப்பதோடு, அதன் வம்சங்களையும் அதிகமாக விருத்திசெய்தார். பிற்காலத்தில் 'சிந்து நதிப் பிரதேசக் குதிரைகள்' என்று எங்கும் புகழப்பட்ட புரவிகளின் ஆதி சிருஷ்டி ஞானி அங்கிராவினுடைய குதிரை போஷிப்புச் சாலையிலிருந்துதான் உருவெடுத்தது. இது தவிர, அவரிடம் ஆயிரக் கணக்கான பசுக்களும் ஆடுகளும் இருந்தன. அவருடைய சிஷ்யர்கள் கல்வி பயில்வதோடு இந்த வேலைகளையும் பார்த்து வந்தனர். ஞானி அங்கிராவும் சமயா சமயங்களில் மாணவர்களோடு வேலையில் கலந்து கொள்வார். மாணவர்களுடைய உணவு, உடை இவைகளுக்குக் குறைவின்றியிருப்பதற்காக இந்த ஏற்பாடு அவசியமாயும் இருந்தது.

தட்சசீலத்தின் கிழக்குப் பகுதியில் இருக்கும் மலைகளெல்லாம், பசுமையும் செழுமையும் கொண்டு காட்சியளித்தன. ஒரு நாள் ஞானி அங்கிராவோடு வருண சௌவீரன், பால மத்ரன் முதலிய மாணவர்கள் பசுச் சாலையைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தனர். அந்தச்

சாலைக்கு வெளியே இளங்கன்றுகள் துள்ளித் துள்ளி ஓடி விளையாடிக் கொண்டிருந்தன. மகரிஷியும் மாணவர்களும் பசும்புற்றரையில் வந்து அமர்ந்தனர். அவருடைய இடது கையில் மெல்லிய ஆட்டு ரோமங்களின் பக்குவப்படுத்தப் பட்ட பட்டை இருந்தது. வலது கை பெரிய தக்ளியைச் சுழற்றிக் கொண்டிருந்தது. சிஷ்யர்களில் சிலர் தக்ளி சுழற்றிக் கொண்டும், சிலர் ரோமங்களைப் பக்குவப்படுத்திக் கொண்டும் சிலர் பக்குவம் செய்யப்பட்ட ரோமங்களைப் பட்டை போட்டுக்கொண்டும் இருந்தனர். கைகள் இயற்கை யாக இந்த வேலைகளைச் செய்து கொண்டிருக்க, தன்னுடைய சிஷ்யர்களுக்கு ஞானி அங்கிரா, ஆரியர்—ஆரியரல்லாதவ ருடைய புராதன—நவீன பழக்க வழக்கங்கள், சிற்பம் முதலிய தொழில்கள் இவற்றில் எதை நாம் கைக்கொள்ள வேண்டும், எவற்றைத் தள்ளிவிடவேண்டும் என்பதைத் தெளிவு படுத்திக் கொண்டிருந்தார்.

"அன்புள்ள குழந்தைகளே! பழமை எல்லாம் ஏற்றுக் கொள்ளக் கூடியவை என்றும், புதியனவெல்லாம் தள்ளி விடக்கூடியவை என்றும் கூறுவது முற்றிலும் தவறு. மேலும் அப்படிச் செய்வதும் முடியாத காரியம். கற்களால் செய்யப் பட்ட ஆயுதங்களை உபயோகித்துக் கொண்டிருந்த வட்சு நதிப் பிரதேச ஆரியர்கள், புதிதாக வந்த உலோக ஆயுதங் களைத் தாங்களும் உபயோகிக்க ஆரம்பித்தபோது எத் தனையோ பேர் இதை எதிர்த்தனர்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, ரிஷியினுடைய அன்புள்ள சிஷ்யர்களில் ஒருவனான வருணன்:

"கற்களினால் செய்யப்பட்ட ஆயுதங்களால் எப்படிக் காரியம் நடக்கும்?" என்று கேட்டான்.

"குழந்தாய்! இன்று தாமிர ஆயுதங்களினால் எல்லா வேலைகளையும் செய்கிறோம். நாளை இவைகளைவிடச் சக்தி வாய்ந்த ஆயுதங்கள் தோன்றக்கூடும். அப்பொழுது ஜனங் கள், இந்தத் தாமிர ஆயுதத்தைக்கொண்டு எப்படிக் காரியம் நடந்தது என்று கேட்பார்கள், எந்தக் காலத்தில் எந்த ஆயுதங்கள் உபயோகத்துக்கு வருகின்றனவோ, அவை களைக்கொண்டு மனிதர்கள் காரியங்களைச் செய்து கொள் கிறார்கள். கல்லினால் செய்யப்பட்ட கோடரியைக்கொண்டு யுத்தம் செய்யும்போது, இரு தரப்பாரிடமும் அதே கோடரி தான் இருந்தது. உலோகங்களினால் செய்யப்பட்ட கோடரி யைப் பிடித்துக்கொண்டு ஒரு தரப்பார் யுத்தத்திற்கு வரும்

போது, மற்ற தரப்பாரும் கல் கோடரியைத் தூக்கி எறிந்து விட்டுத் தாமிரக் கோடரி தூக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவ்விதமில்லாமல், ஒரு தரப்பார் நவீனத்தை ஏற்றுக்கொள்ள முடியாது என்று மறுப்பார்களானல், அவர்கள் இந்த உலகத்தில் வாழவே முடியாது. ஆகையால் புதியது-நவீனம் என்பதற்காக எல்லாவற்றையும் தள்ளி விடச் சொல்வது குற்றம். நான் புதுமையை எதிர்ப்பவனுய் இருந்தால், இத்தனை அழகிய குதிரைகளையும் சிறந்த பசுக்களையும் உண்டாக்கியிருக்கமுடியாது. ஆணும் பெட்டையும் நல்ல ஜாதிக் குதிரைகளாக இருந்தால் அவற்றிற்கு நல்ல ஜாதிக் குட்டிகள் பிறப்பதை நான் பார்த்திருக்கிறேன். ஆகையால் நல்ல ஜாதிக் குதிரைகளாகத் தெரிந்தெடுத்து ஜோடி சேர்த்தேன். அதன் பலனுய் முப்பத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு அங்கிராவின் இந்த சிறந்த ஜாதிக் குதிரைகளை நீங்கள் பார்க்க முடிகிறது. அசுரர்கள் நிலங்களின் செழுமைக்கு நல்ல ஏற்பாடு செய்திருக்கிருர்கள்; அவர்கள் மலை நதிகளிலிருந்து கால்வாய்கள் வெட்டி, நிலங்களில் நீர் பாய்வதற்கு ஏற்பாடு செய்திருக்கிருர்கள். நாம், காந்தாரத்தில் இவ்வழியைக் கடைப்பிடித்தோம். அவர்களுடைய நகர் நிர்மாணம், வைத்தியம் முதலியவைகள் மிகவும் உயர்ந்த முறையில் இருந்தன. அவைகளையும் நாம் அப்படியே மேற்கொண்டோம். உணவு, உடை இன்னும் வாழ்க்கைத் தேவைக்கு உபயோகமான எத்தனை பொருள்கள், அல்லது விஷயங்கள் கிடைக்கின்றனவோ அவற்றை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அவை பழமையானதா, புதுமையானதா, ஆரியர்களுடையதா அல்லது ஆரியரல்லாதவருடைய என்றெல்லாம் சிந்தித்துக்கொண்டிருக்கக் கூடாது. சுவாதநதிக் கரை ஆரியர்களும் அவர்களுடைய முன்னேர்களும் பஞ்சாடையின் பெயரைக் கூடக் கேட்டிருக்க மாட்டார்கள். ஆனல் நாம் இப்பொழுது அந்த ஆடைகளை அணிந்து கொண்டிருக்கிறேம். வெயிற் காலத்தில் அது மிகவும் உபயோகப்படுகிறது.

"ஆனல், எத்தனையோ பொருள்கள் முற்றிலும் நிராகரித்துவிட வேண்டியவைகளாக இருக்கின்றன. அசுரர்களுடைய லிங்க பூஜை நம்மைப் பொறுத்தவரை வெறுக்கத் தக்கது. அவர்களுடைய ஜாதிப் பிரிவினை நாம் ஒதுக்கித் தள்ளவேண்டியது. ஏனெனில், அந்தப் பிரிவினையால் சமூகத்தில் பிறந்த அத்தனைபேரும், தாங்கள் பிறந்த சமூகத்

தைக் காப்பாற்றுவதற்கு ஆயுதம் ஏந்த முடியாமற் போகும். மேலும் தங்களுக்குள் உயர்வு தாழ்வு மனப்பான்மை வளரும். அசுரர்களோடு ரத்தக் கலப்பு நிச்சயமாகக் கூடாது. ஏனெனில் அது நம்மையும் அசுரர்களாக்கிவிடும். அதாவது ஆரியர்களும், தொழிற்பாகுபாடுள்ள பல ஜாதிகளாகப் பிரிந்து போவார்கள்.''

பாலமத்ரன்:—''ரத்தக் கலப்பை ஆரியர்கள் யாவரும் வெறுக்கிறார்கள்.''

ரிஷி :—''ஆம். ஆனால், அது விஷயத்தில் அவர்கள் அவ்வளவு ஜாக்கிரதையாய் இல்லை. அசுர அல்லது கோல் ஜாதிப் பெண்களோடு ஆரியர்கள் தொடர்பு வைத்துக் கொள்ளவில்லையா!''

வருணன்:—''எல்லைப் புறத்தில் இருக்கும் அசுர நகரங்களின் சேவையர்களிடம், ஆரியப் போர் வீரர்கள் அடிக்கடி செல்வதாகக் கேள்விப்படுகிறேன்.''

ரிஷி :—''இதனுடைய விளைவு என்ன ஆகும்? அசுரர்களிடையே செம்பட்டை மயிரும் நீண்ட மூக்கும் உள்ள குழந்தைகள் பிறக்கும்; நாம் பிரமை அடைந்தோ, ஏமாற்றப்பட்டோ, அவைகளையும் ஆரியக் குழந்தைகள் என்று ஏற்றுக் கொண்டு விடக்கூடும். பிறகு ஆரிய ரத்தத்தின் பரிசுத்தத் தன்மை எங்கே நிலைக்கும்? ஆகையால் ஆரிய ரத்தத்தின் தனித் தன்மையைக் காப்பாற்றுவதற்காக, நமது பெண்களும், ஆண்களும் அசுரர்களிடமிருந்து ஒதுங்கி ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். அதுமட்டுமல்ல; ஆரிய சமூகம் மனிதரை விலைக்கு வாங்கி விற்கும் கொடிய அடிமைப் பழக்கத்தை அங்கீகரிக்கக்கூடாது. ஏனெனில், ரத்தத்தின் தனித் தன்மையை அழிப்பதற்கு இந்தப் பழக்கம் ஒன்று போதுமானது. ஆகையால், ஆரிய சமூகத்தில் ஆரியரல்லாதார் வசிப்பதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்பதே நான் சொல்லும் யோசனை.

''எல்லாவற்றையும்விடப் பெரிய ஆபத்தும், தீங்குகளுக்கெல்லாம் வேராயிருப்பதும், அசுரர்களின் அரச பதவியும்—அதற்குத் துணையாயிருக்கும் பதவியுமே ஆகும். அசுரசமூகத்தில் ஜனங்களுக்கு எந்த அதிகாரமும் கிடையாது. அவர்களுடைய அரசன் சொல்வதை அப்படியே ஏற்று, அதன்படி நடக்கவேண்டுவதே தன்னுடைய கடமையென்று ஒவ்வொரு அசுரனும் கருதுகிறான். இவர்கள் செய்யும் காரியங்க

ளின் பொறுப்பை, மேலே தேவதைகளும், கீழே அரசனும் ஏற்றுக் கொள்வதாகவும், ஆகவே இவர்கள் தங்களுடைய சொந்தப் பொறுப்பில் எந்த விஷயத்தையும் வாயினல் சொல்லவோ அல்லது செய்யவோ அதிகாரம் கிடையாதென்றும், அவர்களுக்கு அவர்களுடைய புரோகிதர்கள் போதிக்கிருர்கள். அரசன் அசுரர்களுக்குப் பூமியின் மீதுள்ள கடவுளாய் இருக்கிறுன். சௌவீர் சமூகத்தார் இந்திரப் பதவியை எடுத்து விட்டதாக நான் கேள்விப்பட்ட பொழுது, பெரிதும் மகிழ்ச்சி யடைந்தேன். அசுர குலத்து அரசனுக்குள்ள ஸ்தானம், ஆரிய குலத்து இந்திரனுக்குக் கிடைத்ததில்லை. ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சேனுதிபதி ஜனங்களின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு எவ்வித அதிகாரமும் கிடையாது என்றுலும் இந்தப் பதவியிலும் ஆபத்திருந்தது. ஆரியர்களிலேயே சிலர், ஆரியர்களிடத்தும் அரச பதவி வழக்கத்தைப் புகுத்துவதற்கு, இந்தப் பதவியின் மறைவிலே வேலை செய்தார்கள். ஆரியர்கள் தங்கள் ஆரியத் தன்மையைக் காப்பாற்ற விரும்பினுல், எந்த ஒரு மனிதனுக்கும் அவர்கள் மறந்துங்கூட அரச அதிகாரத்தைக் கொடுக்கக் கூடாது. அசுரர்களுடைய பழக்க வழக்கங்களிலும் அவர்களது சமூக நடவடிக்கைகளிலும், ஆரியர்களுக்கு மிகுந்த வெறுப்பு இருக்கிறது என்பதை நான் அறிவேன். இருந்தாலும் ஆரியர்கள் ஓர் அரசனை அங்கீகரித்து ஆரிய சமூகத்தின் மீது அவன் ஆதிக்கம் செலுத்துவதற்கும் உட்படுவார்களானுல், அவனைத் தொடர்ந்தே புரோகிதர்களும் உண்டாகி விடுவார்கள். அதோடு ஆரியத்தன்மை அழிந்து போய்விடும். ஜன சமூகத்தின் உழைப்பைக்கொண்டு அரசன் சகல போகங்களையும் அனுபவிப்பான்; தெய்வங்கள் பெயரையும் கடவுள் பெயரையும் சொல்லி ஜனங்கள் மௌனமாகக் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்வதற்காகப் புரோகிதனுக்கு அரசன் லஞ்சம் கொடுத்து அவனைத் தனக்குப் பக்கபலமாக வைத்துக்கொள்வான். இவ்விதம் அரசனும் புரோகிதனும் சேர்ந்து ஜனங்களைத் தங்களுடைய நிரந்தர அடிமைகளாக்கி விடுவார்கள்.

''நாம் ஆரியர்களுடைய புராதனப் பழக்க வழக்கங்களை மிகவும் திடமாக மேற்கொண்டு நடக்கும்படி செய்ய வேண்டும். இதற்கு மாருக நடக்கும் ஆரியனை ஆரிய சமூகத்திலிருந்தே விலக்கிவிட வேண்டும்.''

# 3

சௌவீர புரத்திலிருந்து (கராச்சிக்கு அக்கம் பக்கத்திலுள்ள பிரதேசம்) கவலை தரக்கூடிய எத்தனையோ விஷயங்கள் இங்கு வருணனுக்குக்கிடைத்துக்கொண்டிருந்தன. அங்கிருந்த அசுரர்களுடைய கடைசி நகரம் விழுந்தபின், அங்கு ஆரியர்களுக்குள்ளே ஒரு கலகம் தோன்றப் போகிறது என்பதையே இந்தச் செய்திகள் குறிப்பிடுவனவாயிருந்தன. சௌவீர புரத்துப் பிரச்னையின் பல அம்சங்கள் பற்றித் தன்னுடைய குரு, மகிரிஷி அங்கிராவோடு வருணன் பலமுறை விவாதித்திருக்கிறான். இந்தக்கலகம் முதலில் சௌவீரபுரப் பிரதேசத்தில் தோன்றினாலும் நாளடைவில் பாரதத்தின் ஆரியர்கள் எல்லோரையும் இது பாதிக்கவே செய்யும் என்று ஞானி அங்கிரா கருதினார்; எப்பொழுதும் ஆரியர்கள், தனி மனிதர்களைவிட சமூகத்திற்கே ஆட்சி உரிமை உண்டு என்று ஒப்புக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் அங்கு, அசுர அரசனின் கட்டுப்பாடற்ற ஆதிக்கத்தைப் பார்த்த எத்தனையோ ஆரியத் தலைவர்களுக்கு அதிகாரத்திலும் ஆடம்பர வாழ்க்கையிலும் ஆசை உண்டாகியிருக்கலாம். இந்த இரண்டுவித மனோபாவங்களும் ஒன்றை ஒன்று முட்டி மோதிக்கொண்டுதான் இருக்கும். எந்தப் பிரதேசத்தில் அசுரர்கள் அதிகமாக இருக்கிறார்களோ, அங்கு இந்தப் போராட்டம் அதிகரிக்க வசதி உண்டு. ஏனெனில் தோல்வியுற்ற அசுரர்கள் ஆரியர்களிடையே பிளவை உண்டாக்க விரும்புகிறார்கள்.

வருணனும், பாலமத்ரனும் தட்சசீலத்துக்கு வந்துஎட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. தெற்கே சௌவீரபுர (இப்பொழுது ரோடி)த்திலிருந்து மேலும் மேலும் கிடைத்துக்கொண்டிருக்கும் வியாகூலமிக்க செய்திகள் வருணனை காந்தாரபுரத்தை விட்டுக் கிளம்பும்படி செய்தன. அகதிச்சாலையில் முதலாவது சந்தித்த நண்பனான பாலமத்ரன் அவனோடு கூடவே கிளம்பினான்.

நண்பர்கள் இருவரும் காந்தாரப் பிரதேசத்தின் எல்லையைக் கடந்து உப்பு மலைத்தொடர் உள்ள சிந்துப் பிரதேசத்திற்குள் பிரவேசித்தனர். அங்கு உப்புச் சுரங்கங்களில் அசுர வியாபாரிகளும் தொழிலாளிகளுமே அதிகமாயிருந்தனர்.

அதனால் ஆரியர்களின் நல்ல தன்மைகள் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருந்தன. ஆரியர்களில் பெரும்பாலோர் சோம்பேறிகளாகிவிட்டனர். குதிரையேற்றமும். வாள்வீச்சும்தான் தங்களுடைய வேலை என்ற எண்ணங்கூட அவர்களுக்கு உண்டாகிவிட்டது. ஆரியரல்லாதாரிடம் அசுரர்களைப் போன்ற அதிகாரம் செலுத்த விரும்பும் ஆரியர்கள் அரச பதவியை ஏற்படுத்தும் சூழ்நிலையையும் உண்டாக்கி வந்தார்கள். இந்த உப்பு மலைப்பிரதேசத்தைக் கடந்து சௌவீர புரத்தின் பிரதம ஸ்தானத்தை (மூல—ஸ்தான், மூல்டான்) அடைந்தபோது, வருணனுக்கும் பாலமத்ரனுக்கும் நிலைமைகள் திருப்தியைக் கொடுத்தன. அங்கு வசிப்பவர்கள் யாவரும் ஆரியர்கள். அந்தப் பிரதேசத்தில் உஷ்ணம் அதிகமாயிருந்துங்கூட அதைச் சகித்துக்கொண்டு, ஆரியர்கள் அங்கொரு சமுதாயத்தை அமைத்திருப்பது பெருமைப் படக் கூடியதாய் இருந்தது. பாலமத்ரனும் வருணனும் இதுவரை படகில் பிரயாணம் செய்து வந்தார்களானதால், இந்தப் பிரதேசத்தின் வெயில் கொடுமையை இவர்கள் பூரணமாக உணரவில்லை.

சௌவீர புரத்தில் வெயிலின் கொடுமை சகிக்க முடியாததாய் இருந்தது. நமது நண்பர்களை இந்த வெப்பம் அதிகமாகப் பாதித்தது; ஆரியர்களிடையே இன்னும் எழுத்துக் குறி (லிபி) தோன்றவில்லை யாகையால், வருணன் தன் நண்பர்களுக்கு அவ்வப்போது வியாபாரிகள் மூலம் சொல்லியனுப்பிய செய்திகள் சரியாகப் போய்ச் சேரவில்லை அப்படிச் சங்கடமான சமயங்களிலெல்லாம் அசுரர்களுடைய எழுத்துக்களைப் பற்றி வருணன் யோசிப்பான். சௌவீரபுரத்தை அடைந்ததும், அங்குள்ள நிலைமைகள் வெகுதூரம் முற்றி இருப்பது வருணனுக்குத் தெரிய வந்தது. சௌவீரபுரத்தில் சேனாதிபதி சுமத்திரனை ஆதரிப்பவர்கள் மிகவும் குறைவு. ஆனால் தென் சௌவீரபுரப் பகுதியிலோ அந்தக் கடைசி அசுர நகரத்தைக் கைப்பற்றிய சேனைத் தலைவன் சுமத்திரனை ஆதரிக்கும் ஆரியர்கள் நிறைய இருந்தனர். அசுரர்களின் கடைசி நகரத்தை வெற்றி கொண்ட போது, சேனாதிபதி சுமத்திரன் அசுரர்கள்மீது அவசியத்துக்கும் அதிகமான கருணை செலுத்தினான். அந்தக் காலத்தில் இவனுடைய கருணை செலுத்தும் மனப்பான்மையைப் பார்த்த வருணன், சுமத்திரனைப் போற்றிப் புகழ்ந்ததுண்டு. ஆனால், இப்பொழுது சுமத்திரனுடைய அந்தச் செய்கை, ஒரு கபட நாடகம் என்பது தெரிய வந்தது. இந்த வெற்றிக்

குப் பிறகு, அசுரர்கள் இனித் தலையெடுத்து ஆரியர்களை எதிர்க்க முடியாது என்று கருதிய சுமத்திரன், இப்பொழுது தயவு காட்டினால் நன்றியறிதலுள்ள அசுரர்களின் சொத்தையும் பலத்தையும் தனது சுயநலத்திற்கு உபயோகித்துக் கொள்ளலாம் என்று நினைத்தான்.

இப்பொழுதுங்கூட சுமத்திரன், தன் சேனைகளோடு சமுத்திரக் கரையிலுள்ள அசுர நகரத்தில் தங்கி இருந்தான். போலி யுத்தத்தின் பொய்க் காரணத்தைச் சொல்லிக் கொண்டு அங்கிருந்து திரும்பாமலேயே நாள் கடத்திக் கொண்டிருந்தான். வருணன் சில சாதாரணத் தலைவர்களிடமிருந்து சுமத்திரனுடைய நடவடிக்கைகளைப் பற்றிக் கேள்விப்பட்டபொழுது, அவைகளை முற்றிலும் நம்பமுடியவில்லை. சுமத்திரன் மீதுள்ள தனிப்பட்ட விரோதத்தால், அவர்கள் இவ்விதம் சொல்லுகிறார்களோ, என்றும் நினைத்தான். ஆனால், அவன் முக்கியமான தலைவர்களையும் ஜனாதிபதியையும் சந்தித்துப் பேசியபொழுது, விஷயம் உண்மை என்று தெரியவந்தது.சுமத்திரனுடைய கெட்ட நோக்கம் முக்கியத் தலைவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்திருந்தும், சாதாரண ஜனங்கள் அதைச் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. அவர்கள் வேறு விதமாகவே அர்த்தம் செய்துகொண்டிருந்தார்கள்.

இந்த அசுர நகரத்தை வெற்றி கொண்டபோது சேனாதிபதி சுமத்திரனுடைய உபதலைவனாக வருணன் இருந்தான். இப்போது யுத்தம் முடிந்து ஒன்பது வருடங்களாகிவிட்டாலுங்கூட, அந்த யுத்தத்தின்போது அவன் நிகழ்த்திய பராக்கிரமச் செயல்களை அங்கு வசிக்கும் ஆரியர்கள் மறந்துவிடவில்லை. சுமத்திரனுடைய கெட்ட எண்ணங்களை, ஜனங்களுக்கு உணர்த்த முயற்சிப்பதற்கு முன்னால், உண்மையான நிலைமையைத் தான் நேரில் சென்று பார்த்துவர வேண்டுமென வருணன் விரும்பினான்.

இதே கருத்தோடு ஒரு நாள் வருணனும், பாலமத்ரனும் தென் சௌவீரபுரத்திற்குப் படகிலே புறப்பட்டனர். காந்தார வியாபாரிகளைப்போல் உடை தரித்திருந்த அவர்கள் அந்த அசுர நகரத்தை அடைந்தபோது, அது ஆரியர்கள் வசிக்கும் பிரதேசமாகத் தோன்றவில்லை. முற்றிலும் அசுரர்களுடைய நகரமாகவே காட்சியளித்தது. நகரத்தின் கடை வீதிகளில் எங்கு நோக்கினும் பெரிய பெரிய அசுர வியாபாரி

களுடைய மாளிகைகளையும், எல்லா வியாபாரமும் அவர்களுடைய ஆதீனத்திலேயே இருப்பதையும் கண்டனர். எத்தனையோ அசுர சேனாதிபதிகள் முன்போலவே தங்கள் தங்கள் மாளிகைகளில் ஆடம்பரமாக வாழ்ந்தனர்; அவர்களுக்குப் பக்கத்தில் அடிமைகள் முன்போலவே கை கட்டி வாய் பொத்தி நின்றனர். இந்தக் காட்சிகளைப் பார்த்த நண்பர்களுக்கு வெற்றி கொண்ட ஆரியர்களது வாசனையைக்கூட இந்நகரத்தில் காணோமே என்ற சந்தேகம் உண்டானதில் ஆச்சரியம் இல்லையல்லவா? சுமத்திரன், அசுர அரசனுடைய மாளிகையில் வசித்துக்கொண்டிருந்தான். ஒரு நாள் காந்தார நகரத்து வியாபாரி என்ற தோரணையில் சுமத்திரனைப் பேட்டி காண வருணன் தன் நண்பன் பாலமத்ரனை அனுப்பினான். திரும்பி வந்த பாலமத்ரன் "செம்பட்டை மயிரையும் சிவந்த மேனியையும் தவிர, அசுர அரசனுக்கும் சுமத்திரனுக்கும் வேறு வேற்றுமை இல்லை! அவனுடைய மாளிகை ஓர் ஆரிய சேனாதிபதி வசிக்கும் சாதாரண வீடல்ல; தங்கமும் வெள்ளியும் ஜொலிக்கும் அசுர தர்பாராகவே இருக்கிறது. அவனை அண்டியிருக்கும் ஆரிய வீரர்களுடைய பழக்க வழக்கங்களும் இது மாதிரியே" என்று சொன்னான்.

நண்பர்கள் இருவரும் அங்கு ஒரு வாரம் தங்கினர். சுமத்திரனைப் பற்றியும் அவனுடைய படை வீரர்களைப்பற்றியும் மேன்மேலும் தகவல்களைத் தெரிந்துகொண்டனர். இந்நகரை வெற்றிகொண்ட ஆரியர்களை அசுர நகரங்களில் நடன சாலைகளிலும், மதுபான ஸ்தலங்களிலுமே பார்க்க முடிந்தது. எத்தனையோ ஆரிய நங்கையர் தங்கள் நாயகர்களிடம் வந்து சேரவிரும்பியும், அவர்களை ஏதாவது சாக்குக் கூறி இங்கு வரவிடாமல் தடுத்துவிட்டனர். சுமத்திரனுடைய மனைவிகூடப் பலமுறை தூதனுப்பியும், ஏதோ பொய்க் காரணங்கள் கூறித் தடுத்துவிட்டான். சுமத்திரன் ஓர் அசுர புரோகிதனுடைய கன்னிகையின் மோகத்தில் சிக்கி இருந்தான். அது மட்டுமா? எத்தனையோ அசுர அழகிகள், ஆசை நாயகிகளாக அவனுடைய அந்தப்புரத்தில் நிறைந்திருந்தனர். தன்னுடைய படை வீரர்களுக்கும் இந்த உரிமையை அளித்திருந்தான். வெளியே இருந்து ஆரியர்கள் யாரேனும் பிரவேசித்தால், அடிமைகளைக் கொண்டு தொல்லை விளைவிக்கச் செய்து, அவர்கள் இங்கு வராமலே தடுத்துவிட்டான். இந்த விபரங்களை எல்லாம் சாங்கோபாங்கமாகத் தெரிந்துகொண்ட வரு

ணன், தன் நண்பனுடன் திரும்பவும் சௌவீரபுரத்திற்கு வந்து சேர்ந்தான்.

அவன் ஜனத் தலைவர்களைச் சந்தித்து, சுமத்திரன் தனது பலத்தை மிகவும் உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறு னென்பதையும், அவனை எதிர்ப்பதாயிருந்தால் அவனுடைய ஆரியப் போர் வீரர்களை மட்டுமல்ல, அசுரர்களின் பலத்தை யும் சேர்த்து எதிர்க்க வேண்டியது நேரும் என்பதையும் விளக்கிச் சொன்னுன். அதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடு களையும் நாம் செய்துகொண்டு, மக்களுக்கும் நிலைமையைத் தெளிவுபடுத்த வேண்டும் என்று கூறினுன்.

வருணன் நாட்டியசாலையின் செல்லக் குழந்தை வருடக் கணக்காகத் தங்கள் கணவர்களின் முக தரிசனங் கூடக் கிடைக்காதிருக்கும் ஆரிய மங்கையர், இந்த அழகிய நாட்டியக்காரனின் வாயிலிருந்து வரும் தங்கள் கணவன் மார்களுடைய கீழ்ச்செயல்களின் செய்தியைக் கேட்ட பிறகு, அவைகள் உண்மைதான் என்று நம்பத் தொடங் கினர். ஒருவர் மாற்றி ஒருவராக இச் செய்தியை ஊரெங் கும் பரவச் செய்தனர். வருணன் ஒரு கவிஞனுங்கூட. அவன் கணவனைப்பிரிந்து விரகதாபத்தால் வாடும் ஆரியப் பெண்கள் அசுரப்பெண்களைச் சபிப்பதாகவும், சுமத்திர னுடைய ஆடம்பரமான சுயநல வாழ்க்கையை விவரித்துப் பாடிய அழகிய பாடல்கள், சௌவீரபுரப் பிரதேசத்தின்வீடு கள்தோறும் பாடப்பட்டன. கடைகியில் வருணன்கணவனைப் பிரிந்திருக்கும் ஆரிய மங்கையரை சிறு சிறு கோஷ்டியாக அவர்களின் கணவர்களிடம் அனுப்பினுன். அவர்கள் தங்கள் நாயகர்களால் நிராகரிக்கப்பட்டுத் திரும்பி வந்தபோது, இங்குள்ள ஆரியர்களுடைய உணர்ச்சி பொங்க ஆரம் பித்தது. அவர்கள் சுமத்திரனைத் திரும்பிவந்து சேரும்படி சொல்லியனுப்பியும் அவன் மறுத்துவிடவே, அவனைச் சேனுபதி பதவியிலிருந்து தள்ளிவிட்டு, அவனுக்குப் பதிலாக வருணனைத் தங்கள் சேனுதிபதியாகத் தேர்ந் தெடுத்தனர்.

வருணன் பெரிய சேனையோடு சுமத்திரனை எதிர்க்கத் தெற்கு நோக்கிப் பயணமானுன். இவன் பெரும்படை திரட்டி வரும் விஷயம் எட்டியதும், சுமத்திரனது சேனையில் பிளவு ஏற்பட்டது. அவர்களில் அநேகர் தங்கள் ஆரியத் தன்மையற்ற செயல்களுக்காகஉண்மையிலேயே வருந்தினர். தன்னைப் பின்பற்றும் ஒரு சிலரை வைத்துக்கொண்டு வரு

ணனை எதிர்த்தால் நிச்சயமாக வெற்றி கிடைக்காது என்பதைத் தெரிந்துகொண்ட சுமத்திரன், நகரத்தை வருணனிடம் ஒப்படைத்துவிட்டுச் சௌவீரபுரத்துக்குத் திரும்பச் சம்மதித்தான்.

இந்த விதமான ஆரியர்கள்ஓர் அபாயகரமான பரீட்சையில் தேறிவிட்டனர். வருணன் அசுரர்களை ஒன்றும் தொந்தரவு செய்யவில்லை. ஏனெனில், அவர்கள் இப்பொழுது ஆயுதம் ஏந்திப் போர் செய்துகொண்டிருக்கவில்லை. ஆனால் அசுரர்களுடைய செல்வாக்கிலிருந்து ஆரியர்களைப் பிரித்து வைப்பதற்காக, நகரத்தில் ஒரு தனி ஆரியப்பகுதியை உண்டாக்கினான். மகரிஷி அங்கிரா காட்டிய வழியிலே காரியங்களைச் செய்யத் தொடங்கினான்.

---

*இன்றைக்கு 152 தலைமுறைகளுக்கு முந்திய ஆரியர்களின் கதை இது.

# சுதாஸ்

**தேசம் : குரு—பாஞ்சாலம்(ஐக்கிய மாகணத்தின் மேற்குப் பாகம்)**

**ஜாதி : வேதகால ஆரியர்**

**காலம் : கி. மு. 1500**

வசந்த காலத்தின் அந்தம் சனுப் (சந்திர பாகா) நதியின் மருங்கிலுள்ள விசாலமான பூபாகத்தில், கண்ணுக் கெட்டியவரை தங்க நிறத்தையொத்த கோதுமைக் கதிர்கள் காற்றில் அசைந்து ஆடிக்கொண்டிருந்தன. ஆங்காங்கே கூட்டம் கூட்டமாக ஆண்களும் பெண்களும் அந்தக் கோதுமைக் கதிர்களை அறுத்துக் கொண்டிருந்தனர். கதிர் அறுக்கப்பட்ட வயல்களிலே உள்ள புற்களை, அநேகம் குதிரைகளும் அவற்றின் குட்டிகளும் மேய்ந்துகொண்டிருந்தன. வெய்யிலின் வெப்பம் வரவரக் கடுமையாகிக் கொண்டிருந்தது. சற்று தூரத்தில் ஒரு வழிப் போக்கன் அந்த வயல்களினூடே மெதுவாக நடந்து போய்க்கொண்டிருந்தான். கிழிந்த துணியைச் சுற்றிக் கட்டியிருந்த தலைப்பாகை, பிடரியில் தொங்கி ஆடிக்கொண்டிருக்கும் செம்பட்டை நிறமான தலை ரோமங்கள், உடம்பிலே ஒரு பழமையான போர்வை. முழங்கால் அளவே தொங்கவிட்டுக் கட்டியிருக்கும் வேட்டி, கையிலே நீண்ட தடி, இந்தக் கோலத்தோடு மெதுவாகத்தள்ளாடி நடந்துசென்றுகொண்டிருந்தான். தாகத்தால் அவனுடைய தொண்டை வரட்சியடைந்து விட்டது. இருந்தாலும் அடுத்துத் தெரியும் கிராமத்திற்காவது போய்விட வேண்டுமென்று உறுதியோடு நடந்தான். ஆனுல் வந்த வழியின் அருகே தென்பட்ட ஒரு மண் கிணற்றையும் வன்னி மரத்தின் தேய்ந்த நிழலையும் பார்த்ததும், அவனுடைய தைரியம் பறந்துவிட்டது. அதற்கப்பால் ஓர் அடியும் எடுத்து வைக்க அவனுல் முடியவில்லை. கிணற்றைக் குனிந்து பார்த்தான். தண்ணீரோ சமீபத்தில் இல்லை. தன் தலைப்பாகையைக் கழற்றி அந்த ஆடையின்

ஒரு முந்தியைக் கையில் பிடித்துக்கொண்டு, மற்ற முந்தியைக் கிணற்றுக்குள் விட்டான்; எட்டவில்லை. உடுத்தியிருந்த ஆடையைக் கழற்றி அதையும் சேர்த்து முடிந்து தொங்கவிட்டான். பாவம், அதுவும் தண்ணீரைத் தொடவில்லை. நம்பிக்கை இழந்து, வன்னிமரத்தின் நிழலிலே போய் உட்கார்ந்துகொண்டான். அங்கிருந்து நகரக்கூட முடியாதென்று அவனுக்குத் தோன்றிற்று. அந்தச் சமயத்தில், ஒரு தோளிலே தண்ணீர்ப் பையையும் மற்ருெரு தோளிலே கயிற்றையும் தொங்க விட்டுக்கொண்டு, வாளியுடன் ஒரு யுவதி கிணற்றை நோக்கி வருவது தெரிந்தது. உடைந்து சிதறிப் போயிருந்த அவனுடைய நம்பிக்கை கொஞ்சம் துளிர்விட ஆரம்பித்தது கிணற்றை அடைந்த யுவதி, மேடைமீது தனது தண்ணீர்ப் பையை வைத்துவிட்டு தோல் வாளியால் தண்ணீரை இரைக்கத் திரும்பியபோது, அவளுடைய பார்வை அந்த வழிப்போக்கன் மீது விழுந்தது. அவனுடைய முகம் வாடியிருந்தது. உதடுகள் உலர்ந்திருந்தன. தொண்டை வரட்சி யடைந்திருந்தது. கண்கள் பஞ்சடைந்திருந்தன. அவனுடைய பாதங்களின்மீது புழுதி படிந்திருந்தது. ஆனுல், இந்த நிலைமையிலும் அவனுடைய இளமை மட்டும்வாடாமல் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

தன்னுடைய முகத்தில் அரும்பித் துளிர்க்கும் வியர்வையை மெதுவாகத் துடைத்துக் கொண்டே வாலிபனும் பஞ்சடைந்த கண்களால் அந்த யுவதியைப் பார்த்தான்.

தன்னுடைய பொன்னிறமான கூந்தலை சாதாரணமாக முடிந்துகொண்டு, உடம்பைச் சுற்றி ஒரு போர்வையும், இடையிலே ஒரு சாதாரண லுங்கியும் அணிந்து கொண்டிருந்த அந்த யுவதியின் விநோதமான வேஷத்தை ஆச்சரியத்தோடு பார்த்தான். முன்பின் அறியாத அந்த வழிப்போக்கனைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டே நின்ற அந்தக் குமரி, மத்ர குலத்தாருக்கு இயற்கையான இனிய புன்முறுவலுடன்,

''சகோதரா! நீ ரொம்பத் தாகம் அடைந்திருக்கிருய் என்று கருதுகிறேன்'' என்ருள்.

வழிப்போக்கன் இயற்கையாகப் பலவீனமடைந்துகொண்டிருக்கும் தன் இதயத்தைக் கட்டுப்படுத்த முடியாமல், ''ஆம். அதிகமாயிருக்கிறது!'' என்ருன்.

''இதோ தண்ணீர் கொண்டு வருகிறேன்'' அவசர அவசரமாக வாளியிலே தண்ணீரை மொண்டு மேலே இழுத்தாள். அதற்குள் அவன் பக்கலிற் சென்று உட்கார்ந்தான். அவனுடைய ஆஜானுபாகுவான உடலும், உறுதியான எலும்புகளும் அவனுள்ளே அடங்கிக் கிடக்கும் எல்லையற்ற ஆண்மையை வெளிப்படுத்திக்கொண்டிருந்தன. தண்ணீர்ப் பையோடு சேர்த்துக் கட்டியிருந்த தோல் போகணியை எடுத்து, அதிலே தண்ணீரை நிரப்பி வழிப்போக்கனிடம் கொடுத்தாள் யுவதி. இரண்டு மூன்று துளிகளை குடித்த அவன், சிறிது மௌனமாகப் பூமியை நோக்கிய வண்ணம் உட்கார்ந்திருந்தான். அப்பால், ஒரே மூச்சில் அந்தப் பாத்திரத்திலிருந்த தண்ணீர் பூராவையும் பருகினான். பாவம், அவ்வளவு தாகம் அவனுக்கு! அந்தச் சிறு பாத்திரத்தை அவனுடைய கை நழுவ விட்டது. தன்னைச் சமாளித்துக்கொள்ள முயன்று முடியாமல், அப்படியே கீழே சாய்ந்தான். கண்கள் மூடிக்கொண்டன. மூர்ச்சையாகிவிட்டான். இதைப் பார்த்து அசைவற்று நின்ற யுவதி, வேகமாகத் தன்னுடைய தலையில் சுற்றியிருந்த துணியைத் தண்ணீரில் நனைத்து அவனுடைய நெற்றியையும், முகத்தையும் அந்த ஈரத் துணியால் துடைத்தாள். சிறிது நேரத்தில் அவனுடைய கண்கள் திறந்தன. அவன் வெட்கமடைந்து மெலிந்த குரலில், ''மிகவும் வருந்துகிறேன்; உனக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுத்துவிட்டேன்'' என்றான்.

''எனக்கு ஒன்றும் கஷ்டம் இல்லை. இம்மாதிரி உனக்கு நேர்ந்ததைப் பார்த்ததும் பயந்து போய்விட்டேன். ஏன் இப்படியாயிற்று?''

''வேறு ஒன்றுமில்லை. வெறும் வயிற்றிலே அதிகத் தண்ணீரைக் குடித்துவிட்டதுதான் காரணம். ஆனால் இப்பொழுது சரியாகிவிட்டது.''

''வெறும் வயிறு'' என்று சொல்லிக்கொண்டே அவனுடைய பதிலை எதிர்பாராதவளாய் ஓடோடியும் தன் வீட்டிற்குச் சென்று, ஒரு சிறிய பாத்திரத்தில் தயிர், மா, மது முதலியவைகளுடன் திரும்பிவந்து, அவற்றை அவன் முன் வைத்தாள். வாலிபன் முகத்திலே கூச்சமும் வெட்கமும் கலந்து தோன்றின. அதைப் பார்த்த யுவதி, ''கூச்சப் படாதே. என்னுடைய சகோதரனும் இந்த மாதிரியே வீட்டைவிட்டுப் போய்ச் சில வருஷங்கள் ஆகின்றன.

உனக்கு நான் இவற்றைக் கொண்டு வரும்போது, என்னுடைய சகோதரன் ஞாபகமே எனக்கு ஏற்பட்டது."

யுவதி வாளியில் கொஞ்சம் தண்ணீரும் கொடுத்தாள். தயிர் முதலியனவற்றை வாலிபன் அருந்தினான். அவனுடைய களைப்புற்றிருந்த முகம் மலர ஆரம்பித்தது. அந்த யுவதியின் எதிர்பாராத உதவிக்காக நன்றி செலுத்தும் பொருட்டு. தன்னுடைய வாயைத் திறந்தான். அவனுடைய முகக் குறிப்பைத் தெரிந்துகொண்ட யுவதி, "கூச்சப்படுவதற்கு அவசியமே இல்லை. உன்னைப் பார்த்தால் நீ வெகு தூரத்திலிருந்து வருவதுபோல் தெரிகிறது" என்றாள்.

"ஆம்; ரொம்பத் தூரத்திலிருந்து—பாஞ்சாலத்திலிருந்து."

"இங்கு எங்கே போகவேண்டும்?"

"இன்ன இடத்திற்கு என்பதில்லை. எங்கோ போகிறேன்?"

"அப்படியானால்?"

"எந்த இடமாயிருந்தால் என்ன? என்னுடைய உடைக்கும், உணவிற்கும் பிறரை எதிர்பார்க்கக்கூடாது. ஏதாவது வேலை வேண்டும், அவ்வளவே."

"வயல்களிலே வேலை செய்ய முடியுமா?"

"ஏன் முடியாது? உழுக, 'விதைக்க, கதிர் அறுக்க எல்லாம் தெரியும். பசுக்கள், குதிரைகள் இவற்றை மேய்க்க முடியும். என்னுடைய சரீரத்திலே போதிய சக்தி இருக்கிறது. ஆனால் இப்போது இந்தச் சக்தி வாடியிருக்கிறது. இருந்தாலும் அது தேறிவிடும். இன்னும் சில நாளிலேயே எவ்வளவு வேலையையும் செய்ய முடியும். குமாரி! நான் இதுவரை எந்த எஜமானனுக்கும் கோபம் வரும்படி நடந்துகொண்டதே இல்லை."

"என்னுடைய தகப்பனார் உன்னை வேலைக்கு வைத்துக் கொள்வார் என்று நினைக்கிறேன். தண்ணீர் நிரப்பிக் கொண்டு செல்வோம், நீயும் என்னுடன் வா."

வாலிபன் தண்ணீர்த் பையைத் தூக்கிச் செல்ல எவ்வளவோ முயன்றான். யுவதி அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. வயல்களுக்கு மத்தியிலே ஒரு சிவப்பு டேரா அடிக்கப்பட்

டிருந்தது. அதற்கு வெளியிலே சுமார் நாற்பது ஐம்பது ஆண் பெண்கள் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் யுவதியின் தந்தை யார் என்பதை யுவனுல் கண்டுபிடிக்க முடியவில்லே. எல்லோரும் ஒரே மாதிரியான சாதாரண உடை, செம்பட்டை மயிர், சிவந்த மேனி உடையவர்களாய் இருந் தனர். யுவதி தண்ணீர்ப் பையையும், வாளியையும் விரிக்கப் பட்டிருந்த ஒருதோலின்மேல் வைத்துவிட்டு, அறுபதுவயது நிரம்பிய ஆனல் ஆரோக்கியமும் திடசரீரமும் உள்ள ஒரு பெரியவரிடம் போய், ''அப்பா! இந்த அந்நிய தேசத்து வாலிபன் இங்கு வேலே செய்ய விரும்புகிருர்'' என்ருள்.

''குழந்தாய்! வயலிலே நம்முடன் வேலே செய்வாரா?''

''ஆம் எந்த வேலேயானுலும்!''

''அப்படியானல் செய்யட்டும். மற்றவர்களுக்கு என்ன கூலி கிடைக்கிறதோ, அது அவருக்கும் கிடைக்கும்.''

வாலிபன் இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தான். விருத்தன் வாலிபனிடமும் இதே விஷயங்களேத் திரும்பவும் கூறினன். யுவனும் அதற்குச் சம்மதித்தான். மேலும் அந்த விருத்தன் அவனேப் பார்த்து,

''நாங்கள் யாவரும் மத்தியான போஜனம் சாப்பிடப் போகிருேம். நீயும் கலந்து கொள்ளலாம் வா'' என்று அழைத்தான்.

''இல்லே; ஆரிய விருத்தரே, இப்போதுதான் தங்கள் புத்திரி எனக்கு மாவும் தயிரும் கொடுத்தாள்.''

''ஆரியனுமல்ல வீரியனுமல்ல, என் பெயர் ஜேதா, திருபு புத்திரன். உன்னுல் முடிந்த அளவு சாப்பிடலாம்; அபாலா! இவருக்கு சிறிது அஸ்வினி மது கொண்டு வந்து கொடு. வாலிப! வெயிலுக்கு இது ரொம்ப நல்லது. உன் னுடைய மற்ற விஷயங்களே சாயங்காலம் பேசிக்கொள் வோம். ஆனல் இப்போது உன் பெயரைமாத்திரம் தெரிந்து கொள்ளலாமா?''

''சுதாஸ்—பாஞ்சாலன்.''

''சுதாஸ் என்று கூருமல் சுதா என்று கூறு (சுதாஅழகிய தானம் கொடுப்பவன்) உனக்குக் கிழக்குப் பிரதேசப்பாஷை யும் கூடச் சரியாகப் பேசவராதென்றே நினேக்கிறேன். சரி,

பாஞ்சாலத்திலிருந்தா வருகிறாய்? ரொம்பச் சந்தோஷம் அபாலா! மிகவும் கூச்சமுள்ள ஆசாமியாய்த் தெரிகிறது. நன்றாக இவருக்குச் சாப்பாடு போட்டுக் கவனித்துக் கொள்ளவேண்டும்.''

சுதாஸ், அபாலா கொடுத்த மதுவையும் அருந்திச் சில ரொட்டிகளையும் புசித்தான். இரண்டு தினங்களாக ஆகாரத்தையே பாராதிருந்ததால், அவனுடைய பசி மந்தித்துப் போய்விட்டது. சூரியனுடைய வெப்பம் குறையக் குறைய அவனுடைய சரீரத்தில் புது ஊக்கமும், ஆர்வமும் உண்டாகி விட்டது. மாலையில் யாவரும் வேலையை விடுவதற்கு முன்னே கோதுமைக் கதிர் அறுப்பதில் யாருக்கும் அவன் இளைத்தவனல்ல என்பதையும் நிரூபித்தான்.

இரவில் யாவரும், கோதுமைக் கதிர்கள் அடுக்கப்படும் களத்திலுள்ள வீட்டிற்குச் சென்றனர். அங்கு கூடியிருந்த இருநூற்றுக்கு அதிகமான நபர்களிலிருந்து ஜேதாவின் நிலம் மிகப் பெரியதென்பது தெரிய வந்தது. அங்கு சமையல் வேலை செய்வோர் ஏற்கனவே தங்கள் வேலைகளைத் தொடங்கி விட்டிருந்தனர். ஒரு பெரிய எருதைக்கொன்று அதனுடைய மாமிசம், எலும்பு முதலியவைகளைத் துண்டு துண்டாகப் பிரித்து, பொழுது அஸ்தமிப்பதற்கு முன்னமேயே பெரிய பெரிய பாத்திரங்களில் போட்டு, அடுப்பேற்றியிருந்தனர், பாக்கி மாமிசத் துண்டங்களை உப்பைத்தடவி நெருப்பிலே சுட்டுக் கொண்டிருந்தனர். அந்த வீட்டுக்குப் பக்கத்திலே சுத்தம் செய்யப்பட்ட மைதானமும், அதற்குச் சமீபமாக ஒரு சிறிய குளமும் இருந்தன. வேலையிலிருந்து திரும்பிய ஆண்களும் பெண்களும் அந்தக் குளத்திற்குச் சென்று தங்கள் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டனர். குளிக்க விரும்பியவர்கள் குளித்தார்கள். இருட்டடைந்ததும் யாவரும் வரிசை வரிசையாக உட்கார்ந்தனர். அவர்களுக்கு மாமிசம், ரொட்டி, மது முதலியவைகள் பரிமாறப்பட்டன. சுதாஸினுடைய கூச்சத்தைத் தெரிந்த அபாலா, அவனைத் தன் அருகே உட்காரும்படி கேட்டுக்கொண்டாள். அவனுடைய கூச்சத்தைப்பற்றிய கவலையைவிட வெளியேறிச் சென்றுவிட்ட தன் சகோதரனைப் பற்றிய ஞாபகமே அவனைப் பக்கத்திலே உட்கார வைத்ததற்கு முக்கிய காரணம். உணவு முடிந்ததும் நாட்டியம் ஆரம்பமாயிற்று. அந்த நடனத்தில் சுதாஸ் அன்று கலந்து கொள்ள முடியவில்லை. ஆயினும், பிற்காலத்தில் அவன் எல்லோருக்கும்

பிரியமான பாடகனுகவும், சிறந்த நாட்டியக்காரனுகவும் ஆகிவிட்டான்.

வயலில் கதிர் அறுப்பு, அடிப்பு, தான்யத்தைப் பிரித்தல் முதலிய வேலைகள் ஒன்றரை மாதம்வரை நடைபெற்றன. ஆனுல் இங்கு வந்த இரண்டே வாரங்களில் சுதாஸ் அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி செழுமையடைந்து விட்டான். அவனுடைய பெரிய நீலக்கண்கள் பிரகாசமடைந்திருந்தன. கன்னங்கள் சிவந்திருந்தன. நரம்புகளும் எலும்புகளும் சதைக் கோளங்களுக்குள் மறைந்துவிட்டன. வந்த ஒரு வாரத்தில் ஜேதா அவனுக்குப் புதிய ஆடைகளும் கொடுத்திருந்தான்.

ஜேதா, அபாலா, சுதாஸ், இன்னும்இரண்டொரு வேலையாட்கள் தவிர, ஏனையோர் யாவரும் தங்கள் தங்கள் கூலிக்காகத் தானியத்தைப் பெற்றுக்கொண்டு அவரவர் வீட்டுக்குப் போய்விட்டனர். இவர்களுக்கு நிலங்கள் குறைவு. ஆகையால் தங்கள் சொந்தக் கதிர் அறுப்பு, அடிப்பு வேலைகளைக் காலா காலத்தில் முடித்துவிட்டு, இங்கு ஜேதாவின் நிலங்களில் வேலை செய்ய வந்தார்கள். ஜேதா, அபாலா இவர்களின் அன்பிலும் நடவடிக்கைகளிலும் ஈடுபட்ட சுதாஸ், மெது மெதுவாக அவர்களுடன் நெருங்கிப் பழகிவிட்டான். ஏன்? அவர்களுடைய குடும்ப அங்கத்தினர்களில் இவனும் ஒருவனுகவே ஆகிவிட்டான் என்று சொல்லவேண்டும். ஒருநாள் மாலை வேளையில் யாவரும் உட்கார்ந்து மது அருந்திக் கொண்டிருந்தபொழுது, கிழக்குப் பகுதியைப் பற்றிய பேச்சை ஜேதா ஆரம்பித்தான்; அபாலாவும் பக்கத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

''சுதா, நான் கிழக்கே வெகு தூரம் சென்றது கிடையாது. ஆனுல் பாஞ்சாலபுரத்தை (அகிச்சத்திரம்) நான் பார்த்திருக்கிறேன். குளிர் காலத்தில், என்னுடைய குதிரைகளை விற்பதற்காக அங்கு சென்றிருந்தேன்.''

''பாஞ்சாலம் (ரஹில்கண்டு) உங்களுக்கு எப்படி இருந்தது?''

''தேசத்தில் ஒன்றும் குற்றமில்லை. மத்ரர்களைப்போல அந்த ஜனங்களும் ஆரோக்கியமுள்ளவர்களாகவும், நல்லவர்களாகவும் இருக்கிருர்கள். மேலும் அவர்களுடைய நிலங்கள், இந்த நிலங்களைப் பார்க்கிலும் செழிப்புள்ளவை. ஆனுல்...''

"ஆனால் என்ன?"

"சுதா! நான் கூறுவதற்காக மன்னிக்க வேண்டும். அங்கு மனிதர்கள் வசிக்கவில்லை!"

"மனிதர்கள் வசிக்கவில்லையா? அப்படியானால் அங்கு வசிப்பவர்கள் தேவர்களா அல்லது ராக்ஷஸர்களா?"

"நான் இவ்வளவேதான் கூற முடியும். அங்கு மனிதர்கள் வசிக்கவில்லை."

"நான் கோபம் கொள்ளமாட்டேன். தாங்கள் மனந்திறந்து கூறலாம். இவ்விதம் தாங்கள் எண்ணியதற்குக் காரணம்?"

"சுதா, நம்முடைய நஞ்சைகளிலே ஆண்களும் பெண்களுமாக இருநூறு பேர்வரை வேலை செய்ததை நீ பார்த்திருக்கிறாயல்லவா?

"ஆம்."

"அவர்கள் எனது நஞ்சையிலே வேலை செய்த பொழுதோ அல்லது என்னிடம் கூலி பெறும்பொழுதோ எனக்கு வணக்கம் செலுத்தியதை நீ பார்த்ததுண்டா?"

"இல்லை. அவர்கள் உங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போலவே தோன்றினார்கள்."

"ஆம்; இவர்களைத்தான் மனிதர்கள் என்று சொல்வது, அவர்கள் என் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். மத்ரர்கள் எல்லோரும் ஒரே குலத்தவர். கிழக்குப் பிரதேசத்தில் இந்த மனிதத் தன்மையைக் காண மனம் துடிக்கிறது. அங்கு அடிமைகள் இருக்கிறார்கள்; எஜமானர்கள் இருக்கிறார்கள். ஆனால் மனிதர்களில்லை. உறவினர்களில்லை."

"தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. சத்லஜ் நதியைக் கடந்து முக்கியமாக இந்த மத்ர பிரதேசத்திற்கு வந்த பிறகுதான் நான் மனிதர்களைப் பார்த்தேன்—மனிதத் தன்மையைக் கண்டேன். மனிதர்களுடன் வாழ்வதில் ஆனந்தமும் கர்வமும் அடைகிறேன், இது எனது பாக்கியம்."

"குழந்தாய் சுதா! எனக்குப் பரம சந்தோஷம். என்னுடைய வார்த்தையை நீ பிழையாகக் கொள்ளவில்லை.

ஒவ்வொருவருக்கும் அவரவர் சமுதாயத்தின்மீது—அவரவர் தேசத்தின்மீது அன்பிருப்பது இயற்கையல்லவா?''

''ஆம்! உண்மைதான். ஆனால் அந்த அன்பு, குறைகளை மறைக்கும் போர்வையாக இருக்கக்கூடாதல்லவா?''

''நான் பாஞ்சாலத்தில் யாத்திரை செய்யும்போது இது பற்றி யோசித்தேன். இங்கு வந்ததும் பெரிய பெரிய பண்டிதர்களிடம் விவாதித்திருக்கிறேன். இந்தக் குறைகள் அங்கு தோன்றுவதற்குக் காரணமும் எனக்குத் தெரியவந்தது. தெரிந்துமென்ன? நிவர்த்தியில்லை.''

''தங்களுக்குத் தோன்றிய காரணம் என்ன?''

''அங்கு வசிக்கும் ஜன சமூகத்தைப் பாஞ்சாலர்கள் என்று அழைத்தாலும் உண்மையில் பாதிப் பேர்கள்கூட பாஞ்சாலர்கள் இல்லை.''

''ஆம்; அங்கு வந்தேறும் குடிகள் அதிகம்.''

''குழந்தாய்! அவர்கள் வந்து குடியேறியவர்களல்ல; பூர்வீகக் குடிகள், அங்குள்ள வியாபாரிகள், தொழிலாளிகள், அடிமைகள் முதலியவர்கள் ஆரியர்கள். பிரவேசிப்பதற்கு முன்பே, அங்கு வசித்து வரும் பூர்வீகக் குடிகள். அவர்களுடைய முகங்களையும் நிறத்தையும் நீ பார்க்கவில்லையா?''

''ஆம்; பார்த்திருக்கிறேன். அவர்களுடைய உடம்பு பாஞ்சாலர்களைப் போலில்லாமல், கறுப்பாகவோ அல்லது தாமிர வண்ணமாகவோ இருக்கிறது.''

''சரி, பாஞ்சாலர்கள் எங்கள் மத்ரர்களைப்போல் இவ்வளவு சிவப்பாயிருக்கிறார்களா?''

''இவ்வளவில்லை! ஆனால் பெரும் பகுதி.''

''ஆம்; எங்களை அடுத்துத்தான். ஏனெனில் மற்றொரு நிறத்தவரோடு கலப்பதால், நிறத்தில் மாற்றம் ஏற்படவே செய்கிறது. மத்ரர்களைப்போல செம்பட்டை மயிருடைய ஆரியர்களே அங்கு வசித்தால், அங்கும்மனிதத் தன்மையைப் பார்க்க முடியும். ஆரியர்களுக்கும் ஆரியரல்லாதாருக்கும் உயர்வு தாழ்வு மனப்பான்மை ஏற்படுவதற்கு இந்த நிறக் கலப்பே காரணம் என்று நான் நினைக்கிறேன்.''

''நம் முன்னோர்களால் 'அசுரர்கள்' என்று அழைக்கப்பட்ட இந்த ஆரியரல்லாதாரிடையே, அடிமை-எஜமானன்

என்ற பழக்கம் இருந்துவந்தது என்பது உங்களுக்குத் தெரியு மல்லவா?''

''ஆம்; ஆனுல் பாஞ்சால சமுதாயம் ஆரிய ஜாதியைச் சேர்ந்தது; ஒரே ரத்தத்தில் தோன்றியது. ஆயினும் அவர் களிடையிலும் உயர்வு—தாழ்வு மனப்பான்மை இப்போது காணப்படுகிறதல்லவா? பாஞ்சால தேசத்து அரசர் திவோ தாஸ் என்னிடம் சிலகுதிரைகளை வாங்கினுர். இதற்காக ஒரு நாள் அவர் முன்னிலேயில் சென்றேன். அவருடைய இளமை யான திடகாத்திர சரீரம் மிக அழகாயிருந்தது. ஆனுல் அவருடைய தலேயின்மீது மஞ்சளும் சிவப்பு நிறமும் கலந்த பெரிய கனத்த கூடை (மகுடம்) யைக் கவிழ்த்திருந்தார். அவருடைய காதுகளிலே துளேயிடப்பட்டு இரண்டு உருண்டைகளேத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தார். இன்னும் கரங்களிலும் கழுத்திலும் என்னென்னவோ வேடிக்கைகள். இவைகளே எல்லாம் பார்த்த எனக்கு அவர்மீது இரக்கம் உண்டாயிற்று. பாவம், பூரணச் சந்திரனை ராகு விழுங்கிய தைப்போல் எனக்குத் தோன்றியது. அவருடன் அவரது மனைவியும் அமர்ந்திருந்தாள். எங்கள் மத்ர குலத்து எந்த அழகிக்கும் குறைந்தவளல்ல அவள். பாவம், அவளும் அந்தச் சிவப்பு மஞ்சள் சுமையைத் தாங்க முடியாமல் வளேந்து போயிருந்தாள்.''

இந்த வார்த்தைகளேக் கேட்ட சுதாஸினுடைய இதயம் படபடவென அடிக்க ஆரம்பித்தது. தன்னுடைய இதய உணர்ச்சி முகத்தில் தோன்ருமலிருக்க வெகு பிரயாசைப்பட் டான். ஆனுல் அதிலே வெற்றிபெற முடியாமல், பேச்சை வேறு பக்கம் திருப்பக் கருதி,

''பாஞ்சால அரசர் தங்களிடம் குதிரைகள் வாங்கி ஞரா?''

''ஆம் வாங்கினுர். வாங்கிய குதிரைகளுக்கு நல்ல விலே யும் கொடுத்தார். எவ்வளவு கொடுத்தார் என்பது ஞாபகம் இல்லே. ஆனுல் அவருக்கு முன்னுல் பாஞ்சால சமூகத்தைச் சேர்ந்த ஆரியர்களும் மண்டியிட்டு வணங்கியதையும், நடுநடுங்கிக் கைகட்டி நின்றதையும் பார்த்த என் உடம்பு பற்றி எரிந்தது. உயிர் போவதானுலும் சரி, ஒரு மத்ரன் அவ்விதம் செய்யவேமாட்டான்.''

''நீங்கள் அவ்விதம் செய்ய வேண்டியது ஏற்பட வில்லேயே?''

''அவ்விதம் வணங்கும்படி கூறியிருந்தால் நான் கலகமே செய்திருப்பேன். கிழக்குப் பிரதேச அரசர் எங்களை அவ்விதம் சொல்வதில்லை. இது பழங்காலத்திலிருந்து அனுஷ்டிக்கப் பட்டு வரும் முறைமை.''

''ஏன்?''

''ஏன் என்று கேட்கிறாய்? இதனுடைய கதை மிகவும் பெரியது. மேற்கிலிருந்து விஸ்தரித்துக் கொண்டே வந்த பாஞ்சால சமுதாயம் யமுனா, கங்கை இமயமலையின் மத்திய பிரதேசம் முதலிய இடங்களில் வசிக்க ஆரம்பித்தபோது அவர்களும் மத்ரர்களைப் போலவே ஒரே சமுதாயமாக வாழ்க்கையைத் தொடங்கினார்கள். ஆனால் நாளடைவில் அசுரர்களுடைய கூட்டுறவால் பாஞ்சால ஆரியர்களிடையே யும் சிலருக்குச் சேனாதிபதிகளாகவும் அரசர்களாகவும், புரோகிதர்களாகவும் ஆகவேண்டுமென்ற ஆசை தோன் றிற்று.''

''அவர்களுக்கு இவ்வித இச்சை ஏன் உண்டாயிற்று?''

''பேராசையால்; தான் உழைக்காமல் பிறருடைய உழைப்பிலே சாப்பிட வேண்டுமென்ற எண்ணத்தால் இந்த அரசர்களும் புரோகிதர்களுமே, பாஞ்சாலத்தில் உயர்வு—தாழ்வுப் பாகுபாட்டை ஏற்படுத்தினார்கள். அங்கிருந்து மனிதத் தன்மையையும் விரட்டி விட்டார்கள்.''

## 2

மத்ரபுரியில் (சியால்கோட்) ஜேதாவினுடைய குடும் பத்திற்கு சுதாஸ் வந்து நான்குவருஷங்கள் முடிந்துவிட்டன. ஜேதாவினுடைய மனைவி இறந்து போய் விட்டாள். ஜேதாவினுடைய விவாகமான சகோதரிகளில் அல்லது பெண் மக்களில் ஒருவர் இருவர் இவன் குடும்பத்தில் இருந்து வருவது வழக்கம். ஆனால், நிரந்தரமாய் அந்தக் குடும்பத்தில் வசிப்பவர்கள், ஜேதா, அபாலா, சுதாஸ் இம்மூவருந்தான். அபாலாவுக்கு இப்பொழுது இருபது வயது. அபாலா, சுதாஸ் இவர்கள் இவருடைய நடவடிக்கைகளைப் பார்க்கும்போது, இவர்கள் ஒருவரையொருவர் காதலிக்கிறார்களென்பதைத் தெரிந்து கொள்ளலாம். அபாலா, மத்ரபுரியின் சிறந்த அழகிகளிலே ஒருவளாக எண்ணப்படுபவள். அவளுக்கு

ஏற்ற அழகிய யுவர்களுக்கும் அங்கு பஞ்சமில்லை. அதே போல், சுதாஸைப் போன்ற சுந்தர வாலிபர்களுக்குத் தகுந்த அழகிய யுவதிகளுக்கும் பஞ்சமில்லை. ஆயினும் அபாலாவும் சுதாஸும் சேர்ந்தே எப்பொழுதும் நடனமாடி வந்தார்கள். இவர்கள் இருவரும் நெருங்கி உறவாடுவது ஜேதாவுக்குத் தெரியும். சுதாஸ் மத்ரபுரியிலே தங்கிவிடச் சம்மதித்ததால் ஜேதாவும் அவர்கள் உறவை விரும்பவே செய்தான். ஆனால், சுதாஸ் அடிக்கடியில்லாவிட்டாலுங்கூட தன்னுடைய தாய் தந்தையரை நினைத்து உருகிப்போவான். சுதாஸ் அவனுடைய மாதா—பிதாவுக்கு ஒரே புத்திரன் என்று ஜேதாவுக்கும் தெரியும்.

ஒருநாள் அபாலாவும் சுதாவும், காதலர்களை வரவேற்கும் சந்திரபாகா நதிக்குக் குளிக்கச் சென்றனர். அபாலாவின் இளமையெழில் பொங்கும் சரீரத்தை எத்தனையோ முறை குளிக்கும்போது நிர்வாணமாக சுதாஸ் பார்த்திருக்கிறான்; ஆனால் இன்று நிர்வாணமாக நீந்திக் கொண்டிருந்த அநேக அழகிகளுக்கு மத்தியிலே அபாலாவைப் பார்த்த பொழுதுதான், அவளுடைய ஒப்பற்ற சௌந்தர்யத்தின் பூரணத்துவம் அவனுக்குத் தெரிந்தது. நீந்தி முடிந்து இருவரும் வீட்டை நோக்கி நடந்தனர். சுதாஸ் மௌனமாக வருவதைப் பார்த்த அபாலா அவனுடன் வார்த்தையாட ஆரம்பித்தாள்.

"சுதாஸ்! நீ வாய் திறக்கவே இல்லையே. களைத்துப் போய்விட்டாயா? சந்திரபாகாவின் வெள்ளத்தை இரண்டு முறை நீந்திக் கடப்பதென்றால் அது என்ன சுலபமான உழைப்பா?"

"நீயும் என்னுடன்கூட நீந்தவில்லையா என்ன? நேரம் இருந்தால் இருமுறையல்ல, இருபது தடவைகூட நீந்திக் கடக்க முடியும்."

"கரையேறியதும் நான் உன்னைப் பார்த்தேன். உன்னுடைய மார்பு எவ்வளவு விரிந்திருந்தது! உன்னுடைய தோளிலும், தொடைகளிலும் சதைகள் விம்மியிருந்தன."

"நீந்துவது பெரிய தேகப்பயிற்சி. அது உடலை உறுதிப்படுத்துவதோடு மட்டுமல்ல, அழகு பெறவும் செய்கிறது. ஆனால் உன்னுடைய அழகு இதற்குமேல் எங்கே வளர முடியும்? அபாலா! நீ மூன்று லோகத்திலும் ஈடு இணையற்ற அழகின் வடிவம்."

''உன்னுடைய கண்களுக்குத்தானே சுதாஸ்?''

''ஆனால் அவைகள் மோகத்தில் மூழ்கியிருக்கவில்லை என்பது உனக்குத் தெரியும்.''

''ஆம்; மத்ரகுலயுவதிகள் தாராளமாக வழங்குவார்கள் என்பது உனக்குத் தெரிந்திருந்தும், நீ என்னிடம் ஒரு முத்தம் கூடக் கேட்டதில்லை.''

''நான் கேட்காமலேயே, நீ ஏராளமாக வழங்கியிருக்கிறாயே!''

''ஆனால், அப்பொழுதெல்லாம் உன்னிடத்தில் என் சகோதரன் சுவேதாஸ்வனையே நான் பார்த்தேன்.''

''இப்பொழுது கொடுக்கமாட்டாயா?''

''கேட்டுமா முத்தம் கிடைக்காது?''

''ஆனால் கேட்டால் நீ என்னுடைய...''

''அதற்குமேல் சொல்லாதே சுதாஸ்! மறுப்பதற்கு எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கும்.''

''ஆனால் அந்தத் துக்கம் உண்டாகாமல் தடுப்பது உன் கையிலிருக்கிறது.''

''என்னிடமில்லை. உன் கையில்தான் இருக்கிறது.''

''எப்படி?''

''நீ நிரந்தரமாக என் தந்தையார் வீட்டில் தங்கிவிடச் சம்மதிப்பாயா?''

அந்த அழகிய உதடுகளிலிருந்து இந்தக் கடினமான வார்த்தைகள் வெளிவந்து விடக்கூடும் என்ற பயம் சுதாஸுக்கு எத்தனையோ தடவை ஏற்பட்டதுண்டு. இன்று திடீரெனப் பேரிடிபோல் அச்சொற்கள், அவன் காதுகளைத் துளைத்துக்கொண்டு இதயத்தைப் போய்த் தாக்கின. அவனுடைய இதயம் கொஞ்ச நேரத்தில் பொசுங்கிவிடும் போல் தோன்றிற்று. தனது மனவேதனையை அபாலா தெரிந்துகொள்வதை அவன் விரும்பவில்லை. தன்னைச் சமாளித்துக் கொண்டு,

''அபாலா! நான் உன்னை எவ்வளவு காதலிக்கிறேன்...''

''எனக்கு அது தெரியும். என்னுடைய நிலைமையும் உனக்கு நன்றாகத் தெரியும். நான் நிரந்தரமாக உன்னுடையவளாகவே ஆகிவிட விரும்புகிறேன். என்னுடைய தந்தையும் இதில் சந்தோஷப்படுவார். ஆனால் சுதாஸ்! நீ பாஞ்சாலத்தை மறந்துவிட வேண்டும்.''

''பாஞ்சாலத்தை மறந்துவிடுவது பெரிய விஷயமல்ல. ஆனால், என்னுடைய கிழத் தாய்தந்தையர் அங்கு இருக்கின்றனர். என்னைத்தவிர, என் தாய்க்கு வேறு பிள்ளைகளில்லை. அவள் இறப்பதற்கு முன் அவளை ஒருமுறை நிச்சயம் சந்திப்பதாக உறுதிமொழி கொடுத்திருக்கிறேன்.''

''உன்னுடைய தாய்க்குக் கொடுத்த உறுதியை நான் உடைக்கவிரும்பவில்லை சுதாஸ்! நான் உன்னைக் காதலிக்கிறேன்; காதலிப்பேன். நீ இங்கிருந்து சென்ற பின்பும் உன்னைக் காதலிப்பேன். மரணம் வரை உன் வழி பார்த்து உனக்காகக் கண்ணீர் விடுவேன். ஆனால் நாம் இருவரும் நமது வாக்குறுதிகளை மீறக்கூடாது; நீ உன் தாயாரிடமும், நான் என் மனத்திடமும்.''

''அபாலா! உன் மனத்திற்கே என்ன வாக்குறுதி கொடுத்திருக்கிறாய்?''

''மக்கள் வாழும் பிரதேசத்திலிருந்து மாக்கள் வாழும் பிரதேசத்திற்குப் போகமாட்டேன் என்று.''

''பாஞ்சாலப் பிரதேசம் மாக்கள் வாழும் இடமா?''

''ஆம்; மனிதத்தன்மைக்கு மதிப்பில்லாத இடம்; பெண்களுக்கு உரிமையில்லாத இடம்.''

''நான் உன் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்கிறேன் அபாலா!''

அபாலா மகிழ்ச்சியோடு அவனைத் தழுவி முத்தமிட்டாள். கண்ணீர் வழிந்தோடிய கன்னங்கள் ஒன்றோடொன்று உரசின.

''சுதாஸ்! நீ போய்வா. ஒருமுறை உன்னுடைய மாதாவைப் போய் தரிசித்து வா. இந்த மத்ரபுரியில் உனக்காக வழி பார்த்துக் காத்திருப்பேன்.''

அபாலாவின் இந்தக் களங்கமற்ற வார்த்தைகளைக் கேட்ட சுதாவின் இதயம், அவளையே வெறுக்கத் தொடங்

கிற்று. தன்மீது—தன் மனத்திலேயே தோன்றிய அந்த வெறுப்பு உணர்ச்சியை அவனால் கடைசிவரை போக்கவே முடியவில்லை. தாய் தந்தையரைப் பார்த்துவிட்டுத் திரும்பி விடுவதாக ஜேதாவிடமும் அபாலாவிடமும் விடைபெற்றுக் கொண்டான். விரைவில் திரும்பிவிட வேண்டும் என்ற உறுதியைப் பெற்றுக்கொண்டே அவர்களும் அனுமதியளித் தனர்.

அவன் புறப்படுவதற்கு முதல்நாள் முழுநேரத்தையும் அபாலா அவனுடனேயே கழித்தாள். காதலர் இருவரு டைய கண்களும், கண்ணீரை உகுத்துக்கொண்டே இருந் தன. அதை அவர்கள் மறைக்கவும் முயலவில்லை. இரு வரும் மணிக்கணக்கிலே தழுவியபடியோ, முத்தமிட்ட படியோ தங்களை மறந்து இருந்தனர். அவன் புறப்பட்ட சமயத்தில் அவனை மார்போடு தழுவிக்கொண்டு, ''சுதாஸ், நான் உனக்காக இந்த மத்ரபுரியிலே வழிபார்த்துக் காத் திருப்பேன்'' என்றாள் அவள்.

அவளுடைய அந்த வார்த்தை, சுதாஸின் ஆயுட்காலம் முழுவதும் அவனுடைய இதயத்திலே ஆழமாகத் தோண்டப் பட்டிருந்தது.

## 3

சுதாஸுக்குத் தன்னுடைய தாயிடத்தில் அளவு கடந்த அன்புண்டு. அவனுடைய தந்தை திவோதாஸ் ஒரு புகழ்பெற்ற அரசன். வசிட்டன், விஸ்வாமித்திரன், பரத்து வாஜன் போன்ற மகரிஷிகள் அவனுடைய புகழைத் தங்கள் வேத மந்திரங்களிலே இணைத்துப் பாடியிருக்கிறார்கள். *ருக் வேதத்திலே புகுத்தி விடுவதால், அந்த மந்திரங்களிலே நிறைந்துள்ள முகஸ்துதித்தன்மை மறைந்துவிடமாட்டாது. சுதாஸ் தன்னுடைய தாயின்மீதே, அதிக வாஞ்சையுடை யவன். தன்னுடைய தாயைப்போன்ற அநேக மனைவியர் களும் பல அடிமைப் பெண்களும் அரசன் திவோதாஸுக்கு உண்டு என்பது சுதாஸுக்குத் தெரியும். அரசனது மூத்த மனைவி-பாஞ்சால சிம்மாசனத்தின் வாரிசைப் பெற்றவள்

---

*ருக்வேதம் 6-26-211.25

என்பதற்காக, அரசன் அவளிடம் சிறிது மரியாதை வைத்திருக்கிறுன் என்ருலும் அழகிய யுவதிகள் நிறைந்த அந்தப் புரத்திலே வசிக்கும் அரசன் இந்தப் பல்லுப்போன கிழவியிடம் எப்படி அன்பு செலுத்துவான்? சுதாஸ் அவனுடைய தாயாருக்கு ஒரே மகனுனுலும், தந்தைக்கு ஒரே மகனல்ல. அவன் இல்லாவிட்டால், திவோதாஸின் வாரிசாவதற்கு பிரதர்தன் தயாராயிருக்கிறுன்.

வருடங்கள் பல கழிந்துவிட்டதால், மகன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கையை இழந்துவிட்டாள் சுதாஸின் தாய். அழுது அழுது அவளுடைய கண்களின் ஒளியும் மங்கி விட்டது. ஒருநாள் திடீரென்று யாருக்கும் சொல்லாமல் தன் தந்தையைக்கூடப் பார்க்காமல், நேராகத் தன் தாயின் முன்னே வந்து நின்ருன் சுதாஸ். அவளும் இவனை நிமிர்ந்து பார்த்தாள். ஆனுல் ஒளியிழந்திருந்த அவளுடைய கண்கள் உணர்த்தும் சக்தியற்றிருந்தன. இதையறிந்த அவன்,

''அம்மா! இதோ உன்னுடைய சுதாஸ் வந்திருக்கிறேன்.''

அப்பொழுதும் நம்பிக்கை அடையாத அந்தத் தாய் தன் இருப்பிடத்திலிருந்து அசையாமலேயே,

''உண்மையிலே நீ என் மகன் சுதாஸாயிருந்தால் ஏன் தூரத்திலே விலகி நிற்கிருய். என்னுடைய கழுத்தை ஏன் தழுவிக்கொள்ளவில்லை? என்னுடைய மடியிலே ஏன் படுத்துக்கொள்ளவில்லை?''

சுதாஸ் தன் தாயின் மடிமீது தலைவைத்துவணங்கினுன். தன்னுடைய கரங்களால் அவனது தலையைத் தடவிய தாய், என்றும்போல் காற்றிலே மறைந்துவிடும் கனவு உருவமல்ல; உண்மையில் தன்மகனே என்று உணர்ந்தாள். அவனுடைய முகத்திலும், கன்னங்களிலும், நெற்றியிலும், தலைஉச்சியிலும் மாறி மாறி முத்தமிட்டுத் தன் கண்ணீரால் அவனை நனைத்தாள். கண்ணீர் தடைபடாததைக் கண்ட மகன் ''அம்மா! நான்தான் உன்னிடம் வந்துவிட்டேனே, இன்னும் ஏன் அழுகிருய்?'' என்ருன்.

''இன்று ஒரு நாளைக்கு மாத்திரம் என் கண்ணின் மணியே! இப்பொழுதைக்கு மட்டும், இதுதான் என் கடைசிக் கண்ணீர்.''

அந்தப்புரத்திலிருந்து தகவல் தெரிந்துகொண்ட அரசன் திவோதாஸ், ஓடோடியும் வந்து தன் மகனைத் தழுவி, ஆனந்தக் கண்ணீரால் அவனை நனைத்துவிட்டான்.

நாட்கள் மாதங்களாய், மாதங்கள் வருடமாய், எப்படியோ இரண்டு வருடங்கள் கடந்து விட்டன. சுதாஸ், தாய் தந்தையருக்கு முன்னே, தான் சந்தோஷமாக இருப்ப தாகவே காட்டிக்கொள்ள முயற்சித்து வந்தான். ஆனால் தனிமையாயிருக்கும்போது, அவனுடைய காதுகளிலே அந்த நெஞ்சைப் பிளக்கும் ஒலி கேட்டுக்கொண்டே இருந்தது. ''உனக்காக நான் மத்ரபுரியிலே வழி பார்த்துக் காத்துக்கொண்டே இருப்பேன்'' என்று அந்த அழகிய சிவந்த உதடுகள் சொல்வது, கண்ணீர் அவன் கண்களை மறைக்கும் வரை காட்சியளித்துக்கொண்டே இருந்தது. மறக்க முடியாத இரண்டு அன்புள்ளங்களின் இடையில் அகப் பட்டுக் கொண்டிருந்தான் சுதாஸ். ஒன்று அபாலாவின் களங்கமற்ற காதல் மற்றொன்று கிழத்தாயின் எல்லையற்ற வாஞ்சை. வேறு பற்றுக்கோலில்லாத தாயின் இதயத்தைத் தவிக்கவிட்டுச் செல்வது கேவலமான சுயநலம், நீசத்தனம் என்று அவன் கருதினான். ஆகையால் தாயார் உயிரோடு இருக்கும் வரை பாஞ்சாலத்தை விட்டுச் செல்வதில்லை யென்று முடிவு செய்தான். ஆனால், ஒரு அரச குமாரனுக் குரிய சுகபோக வாழ்க்கை, ஆடம்பரங்களை ஏற்றுக்கொள் வது தன் சக்திக்கு அப்பாற்பட்டகாரியம் என்று அவனுக்குத் தோன்றிற்று. அவன் தந்தையிடம் எப்பொழுதும் அதிக மரியாதை காட்டி வந்தான். அவருடைய உத்தரவுகளை நிறைவேற்றுவதற்கும் அவன் என்றும் தயங்கியதில்லை.

ஒரு நாள் கிழவன் திவோதாஸ் தன் மகனை அழைத்து,

''குழந்தாய்! நான் வாழ்க்கையின் கடைசிப்படியை நெருங்கிவிட்டேன். இனி என்னால் பாஞ்சால தேசத்தின் பாரத்தைச் சுமக்க முடியாது'' என்றான்.

''ஆரியா! அப்படியானால் அந்தப் பொறுப்பைப் பாஞ் சாலர்களிடமே ஒப்புவித்து விடலாமே?''

''பாஞ்சாலர்களிடமா? மகனே உன்னுடைய கருத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.''

"ஆரிய! இந்த ராஜ்யம் பாஞ்சாலர்களுடையதுதானே. நம்முடைய முன்னோர்கள் இந்தப் பாஞ்சால மக்களில் ஒருவ ராகவே இருந்தார்கள். அந்தக் காலத்திலே பாஞ்சாலர் களுக்கு ராஜா என்று யாரும் இருந்ததில்லை. பாஞ்சால சமுதாயமே எல்லா ஆட்சிகளையும் செலுத்திற்று. இப்போ முதுங்கூட மல்லவம், மத்ரம், காந்தாரம் முதலிய பிரதேசங் களில், ஜனசமூகமே, அரசாட்சிசெலுத்துகிறது. நம்முடைய பாட்டனார் வத்யரஷ்வனுடைய முன்னோர்களுள் ஒருவருக்கு, பேராசை, சுகபோக வாழ்க்கையில் விருப்பம், பிறருடைய உழைப்பைத் திருட வேண்டுமென்ற ஆசை முதலியவைகள் எப்படியோ உண்டாகியிருக்கிறது. அவர் பாஞ்சாலத்தின் ஜனாதிபதியாகவோ அல்லது சேனாதிபதியாவோ இருந்திருக் கக்கூடும். ஏதாவது ஒரு பெரிய யுத்தத்தில் வெற்றி பெற்ற தின் மூலம் ஜனங்களின் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் பாத் திரராகி இருக்கக்கூடும். அவைகளையே உபயோகித்து அந்த ஜனங்களுக்கே துரோகம் செய்து, அவர் ஜன சமூகத்தின் அதிகாரத்தை தூக்கி யெறிந்துவிட்டு, அசுரர்களைப்போல் ஓர் அரசனுடைய ஆட்சியை ஏற்படுத்தியிருக்கிறார். வசிட் டர், விசுவாமித்திரர் முதலியோர்களுடைய முன்னோர் களுக்கு, புரோகிதப் பதவி என்ற லஞ்சத்தைக் கொடுத்து, அவர்களைக் கொண்டு ஜனங்களின் கண்ணிலே மண்ணைத் தூவச் செய்திருக்கிறார். புரோகிதக் கூட்டமும், 'இந்திரன், அக்னி, சோமன், வருணன், துஷ்வதேவன் முதலியதெய்வங் கள், உங்களை ஆள்வதற்காகவே இந்த அரசனை அனுப்பி யிருக்கிறார்கள்; இவனுடைய ஆணையைச் சிரமேற் கொள் ளுங்கள். இவனுக்குக் காணிக்கையும் வரியும்செலுத்துங்கள்' என்று பிரசாரம் செய்தார்கள். இது முற்றிலும் அயோக்யத் தனம்; இது கொள்ளை. யாரிடமிருந்து அதிகாரம் கிடைத் ததோ அவர்களை மறந்துவிடுவது—அவர்களுக்கு வாயினால் கூட நன்றி செலுத்தாமலிருப்பது எவ்வளவு நீசத்தன மானது?"

"இல்லை மகனே! அரச பதவியை அளிப்பவர்கள் மக்கள் தான் என்பதை நாம் அங்கீகரிக்கிறோம். மகுடாபிஷேக காலத்தில் அரச சின்னங்களையும், செங்கோலையும் மக்கள் தான் அரசனுக்கு அளிக்கின்றனர்."

"மகுடாபிஷேகவிழாவும், அரசனுடையபிரதிக்ஞையும் வெறும் கேலிக்கூத்துக்கள்தான். உண்மையில் அரசன் ஜன

சமுதாயத்தின் வேலைக்காரனா? இல்லை. தனது நாட்டு மக்களிடையே அரசன் சமமாக உட்காரவும், சமபந்தியில் சாப்பிடவும், தாராளமாகப் பழகவும் முடியாதபடி ஒதுங்கி நிற்பதே, அவன் அவர்களுடையவன் அல்ல, அவர்களைவிட உயர்ந்தவன் என்பதை எடுத்துக் காட்டுகிறதல்லா? மத்ரத்திலோ, காந்தாரத்திலோ ஜனாதிபதி இப்படிச் செய்ய முடியுமா?''

''இங்கு அம்மாதிரி நடவடிக்கையை நாம் கையாள்வோமானால், எதிரிகள் நம்மைக் கொன்று விடுவார்கள்; அல்லது விஷத்தைக் கொடுத்து விடுவார்கள்.''

''திருடர்களுக்கும், கொள்ளைக்காரர்களுக்கும் தான் இந்த மாதிரிப் பயம் ஏற்படும். ஜனாதிபதி திருடராகவோ கொள்ளைக்காரராகவோ இருப்பதில்லை. அவர் உண்மையிலேயே ஜன சமூகத்தின் புதல்வர்—ஜனங்களின் தலைவர். அந்த முறையில் அவர் நடந்துகொள்ளவும் செய்கிறார். ஆகையால் அவருக்கு எந்தப் பயமும் கிடையாது, ஆனால், தந்தையே, அரசன்—திருடன், ஜன சமூகத்தின் அதிகாரத்தைப் பறித்துக் கொண்டவன். ஆகையால் அவன் எப்பொழுதும் பயந்துகொண்டே வாழ வேண்டியிருக்கிறது. அரசர்களுடைய அந்தப்புரம், அவனுடையதங்கம், வெள்ளி, ரத்தினங்கள், அவனுடைய எண்ணற்ற அடிமைகள், அவன் அனுபவிக்கும் சகல சுகபோகங்கள் யாவும் அவனுடைய உழைப்பிலிருந்து கிடைத்ததல்ல. பிறருடைய உழைப்பைச் சுரண்டிப் பெற்றவை.''

''மகனே, இவைகளுக்கெல்லாம் நானேதான் பொறுப்பாளியா?''

''இல்லை, முற்றிலும் இல்லை. தங்களுடைய ஸ்தானத்திற்கு வந்த பின் நானும் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்தக் குற்றங்களைச் செய்ய வேண்டித்தான் ஏற்படும். இதற்காக என் தந்தையை நான் குற்றவாளியாக்க மாட்டேன்.''

''நீ ஆட்சியைத் திரும்ப ஜனங்களிடமே ஒப்புவித்து விடுவது பற்றிப் பேசுகிறாய். அது நடக்கக்கூடிய காரியமா? ஜனங்களுடைய உழைப்பின் பலனை அபகரிப்பது, பாஞ்சாலத்து அரசன் திவோதாஸ் மாத்திரம் அன்று என்பதை நீ

நன்ருகப் புரிந்துகொள்ள வேண்டும். சுரண்டுகிற தலைவர்களின் கூட்டத்திலே அவனும் ஒருவன். அவன் பெரியவனுயிருக்கலாம்; ஆனுல் அவர்களுடைய கூட்டுச் சக்திக்கு முன்னே, அவன் ஒரு விட்டில் பூச்சி. பல பிரதேசங்களின் தலைவர்கள் அரச வம்சத்தைச் சேர்ந்த பெரிய சேனுதிபதிகள், இவர்களையெல்லாம்விட மிகப் பெரிய சுரண்டும் கூட்டம் புரோகிதக் கூட்டம்.''

''புரோகிதர்களுடைய சக்தியை நான் அறியேன். அரசனுடைய மூத்த மகனுக்கன்றி மற்றவர்களுக்கு ராஜ பதவி கிடைப்பதில்லை. ஆகையால் அவர்கள் புரோகிதப் பதவியைக் கைப்பற்றிக் கொள்கின்றனர். என் தம்பி பிரதர்தனும் அவ்விதமே செய்யக்கூடும். இன்று அரசர்களுக்கும் புரோகிதர்களுக்குமிடையே சிம்மாசன பீடம், வேள்விப் பீடம் என்ற அளவில்தான் வேற்றுமை இருக்கிறது. ஆனுல் யார் கண்டார்கள்! எதிர்காலத்தில் க்ஷத்திரியர்கள், பிராமணர்கள் என்ற தனித்தனி ஜாதிகளும், இரு பெரும் சக்திகளும் தோன்றிவிடக்கூடும். மத்ரம், காந்தாரம் முதலிய ஜன சமூகத்திலே, தர்ப்பையை ஏந்தியிருக்கும் கை, வாளையும் ஏந்தும். ஆனுல், இந்தப் பாஞ்சாலத்திலே, தர்ப்பையை ஏந்துவது விஸ்வாமித்திரருடைய கரங்கள்; வாளை ஏந்துவது வத்யரஷ்வ புத்திரன் திவோதாஸினுடைய கரங்கள்; இங்கே ஜனங்கள் இப்போது மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். தலைமைப் பதவியிலும், பிறருடைய உழைப்பைச் சுரண்டுவதிலும், கொள்வினை கொடுப்பினையிலும், பிறப்பினுலும்கூட அரசர்களும் புரோகிதர்களும் ஒரே இனத்தவர்கள்தாம். ஆயினும் அவர்கள் 'க்ஷத்திரியர்கள், பிராமணர்கள், என்று தனித் தனியே அழைக்கப்படுகிருர்கள். இரண்டு கூட்டத்தாருடைய நலன்களுங்கூட ஒன்ருேடொன்று மோதிக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆகையால் பிராமண க்ஷத்திரிய நட்பைப் பலப்படுத்தும் முயற்சி நடந்து வருகிறது. இந்த ஒரே குலத்தைச் சேர்ந்த இரண்டு கூட்டத்தாருக்கும் வெளியே, ஜன சமூகத்தின் பெரும் பகுதி ஒரு தனிக்கூட்டமாகவே இருக்கிறது. இன்று அவர்கள் மனிதர்கள் என்பதற்குப் பதிலாக பிரஜைகள் என்று அழைக்கப்படுகிருர்கள். என்ன வேடிக்கை! தந்தை ஸ்தானத்தில் இருந்த ஜன சமுதாயம் இன்று 'பிரஜை'—புத்திரஸ்தானத்திற்கு வந்துவிட்டது. ஆரிய! இது முற்றிலும் வஞ்சனையல்லவா?''

''மகனே! இன்னுமொரு பெரிய கூட்டத்தை நீ கணக்கிடவில்லையே?''

''ஆம்; ஆரியர்களல்லாத பிரஜைகள் அதாவது தொழிலாளி, வியாபாரி, அடிமைகள். ஜன சமூகத்தை ஏமாற்றி, தலைமைப் பதவியிலிருந்தவர்கள் அதிகாரத்தைக்கைப்பற்றிக் கொள்வதற்கு, இந்த வெளி ஜனங்களே துணையாயிருந்தார்கள். தங்களை ஆளும் ஜனங்கள், தங்களைப்போலவே மற்றொருவருக்கு அடிமையாய் இருப்பதைப் பார்த்து, ஆரியர் அல்லாத பிரிவார்களுக்குச் சந்தோஷம் உண்டாயிற்று. இதைத்தான் அரசன், எல்லோருக்கும் ஒரே நீதி என்று சொல்கிறான்.''

''குழந்தாய், நீ சொல்வது யாவும் சரியாயிருக்கலாம். ஆனால், இந்த ஆட்சியை யாரிடம் திரும்ப ஒப்புவிப்பது? திருடர்களும் கொள்ளைக் கூட்டத்தார்களுமான தலைமைப் பதவியிலிருப்பவர்களையும், வியாபாரிகளையும் ஒதுக்கிவிட்டால், மீதமிருக்கும் ஜன சமூகத்தின் பெரும் பகுதியான ஆரியர்களும், அனாரியர்களும் நிறைந்த அந்தக் கூட்டம் ஆட்சிப் பொறுப்பைச் சமாளித்து விடுமா? மேலும் மதத் தலைவர்களும், சேனைத் தலைவர்களும் நாம் சிம்மாசனத்தை விட்டவுடனேயே பிரஜைகளை நசுக்கி உறிஞ்சத் தயாராய் இருக்கிறார்கள். குரு பாஞ்சாலத்திலே ஜன சமுதாயத்தின் கையிலிருந்த ஆட்சி பிடுங்கப்பட்டு, ஏழு தலைமுறைகள்தான் ஆகின்றன. ஆகவே, ஜன ஆட்சியை நாம் இன்னும் முற்றிலும் மறந்துவிடவில்லை! அந்தக் காலத்தில் இந்தப் பிரதேசம், அரசன் திவோதாஸின் ராஜ்யம் என்று அழைக்கப்பட்டதில்லை. பாஞ்சால சமூகத்தின் ஆட்சி என்று அழைக்கப்பட்டது. ஆனால் இன்று அந்த ஜனசமூக ஆட்சிக்குத் திரும்பிப் போக எனக்கு வழி தெரியவில்லை மகனே!''

''ஆம் அந்தப் பாதையில் வசிட்டர், விசுவாமித்திரர் போன்ற மலைப்பாம்புகள் வாயைப் பிளந்து கொண்டு உட்கார்ந்திருக்கின்றன.''

''நம்முடைய இந்தப் பராதீனமான நிலைமையை உணர்வதால் நாம் காலத்தை மாற்ற முடியாது. இன்னும் நாளை எங்கு போய்ச் சேரப் போகிறோம் என்பதும் நமக்குத் தெரியாது. சுதாஸனைப் போன்ற ஒரு மகனைப் பெற்றெடுத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன். நானும் ஒரு காலத்தில் வாலிபனாக இருந்தவன்தான். அந்தக் காலத்தில் வசிட்டர்,

விசுவாமித்திரருடைய கவிதைகளும், பிரஜைகளின் புத்தியை மயக்கும் அவர்களுடைய மதச்சடங்கு மாயாஜாலங்களும், இவ்வளவு தூரம் பரவியிருக்கவில்லை. அரசன் தனது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்வதைக் குறைக்க வேண்டுமென்று அக்காலத்திலே நாம் விரும்பி முயன்றதுண்டு. ஆனால் எங்கு பார்த்தாலும் எனக்குக் கிடைத்தது தோல்விதான். எனது இளமையிலே உன் தாய்தான் எனக்குச் சகலமுமாயிருந்தாள். ஆனால் பின்னே என்னுடைய உயர்ந்த கருத்துக்களை நிறைவேற்ற முடியாமல் நம்பிக்கை இழந்து போய் நின்ற காலத்தில், இந்தப் புரோகிதர்கள் தங்கள் கவிதைகளால் மட்டுமல்ல, கன்னிகைகளைக் கொண்டும் என்னைக் கட்டுப்படுத்த முயன்றார்கள். இந்திராணியையும், அவளுடைய தாசி (வேலைக்காரி)களையும் உண்மையாக வைத்துக் கவிதை பாடியது மட்டுமல்ல, நூற்றுக்கணக்கான தாசிகளைப் புகுத்தி, என்னை இந்திரனாகவே ஆக்கிவிட்டார்கள். திவோதாஸின் வீழ்ச்சியிலிருந்து நீ பாடம் கற்றுக் கொள்ள வேண்டும் மகனே! முயற்சி செய். உனக்காவது இந்தக் கொடுமைகளை அகற்ற ஏதாவது வழி பிறக்கட்டும். ஆனால் ஜாக்கிரதை. சுதாஸன் போன்ற நல்லெண்ணம் படைத்த தலைவனை ஒதுக்கிவிட்டு, பிரதர்தன் போன்ற இதயமற்ற வஞ்சகனைப் பாஞ்சால தேசத்து அரசனுக்கும் முயற்சிக்கு இடம் கொடுத்துவிடாதே. நான் பிதுர் லோகத்திலிருந்துகொண்டு, உன்னுடைய முயற்சி வெற்றிபெற வேண்டும் என்று ஆசீர்வதிக்கிறேன்.''

## 4

திவோதாஸ் மாண்டுவிட்டான். சுதாஸ் இப்பொழுது பாஞ்சாலத்தின் அரசன். மகரிஷிக் கும்பல் இப்பொழுது அவனுடைய புகழை ஓதிக் கொண்டிருக்கின்றன. இந்திரன், வருணன், அக்கினி, சோமன் முதலிய தெய்வங்களின் பெயரால் இந்த வெள்ளைத் தாடிகள் ஜனங்களை எவ்வளவு இருட்டிலே அமுத்தி வைத்திருக்கிறார்களென்பது இப்பொழுதுதான் சுதாஸுக்குப் பூரணமாகத் தெரிந்தது. அவர்களுடைய இறுக்கிய பிடியிலேதான் முற்றிலும் அகப்பட்டுக் கொண்டிருப்பதை அவன் உணர்ந்திருந்தான். எந்த ஜன சமூகத்துக்காக அவன் ஏதாவது செய்ய வேண்டுமென்று

ஆசைப்பட்டானே, அந்த ஆரிய சமூகம் அவனுடைய கருத்துக்களைத் தவருகப் புரிந்துகொண்டு, அவனை மதத் துரோகி என்று விளம்பரப்படுத்தத் தயாராயிருந்தது. வெறுங்காலுடனும், கிழிந்த துணியுடனும், முன்பின் தெரியாத அன்னிய தேசங்களிலே சுற்றிக்கொண்டிருந்த அந்த நாள் அவன் நினைவிற்கு வந்தது. அக் காலத்தில் அவன் இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் அதிக சுதந்திரமுள்ளவனுக இருந்தான். சுதாஸினுடைய ஆத்ம வேதனையை உணர்ந்தவர்களோ, அவனிடத்து அனுதாபம் செலுத்துகிறவர்களோ இங்கே ஒருவர்கூட இல்லை. புரோகிதர்களும் மகரிஷிகளும் அவனிடம் தங்களின் வாலிபப் பேத்திமார்களையும், அழகிய யுவதிகளையும் அனுப்பிக்கொண்டே இருந்தனர். சேனைத் தலைவர்களோ தங்களின் இளங்குமரிகளால் அரண்மனையின் அந்தப்புரத்தை நிரப்பினர். ஆனுல் சுதாஸ் நெருப்பின் மத்தியிலே வாழ்வதாக உணர்ந்தான். சந்திரபாகா நதிக்கரையிலிருந்து அவனது வருகையை எதிர்பார்த்திருக்கும் அந்த நீலக் கண்களை அவனுல் மறக்க முடியவில்லை.

சுதாஸ் எல்லா ஜனங்களுக்கும்—ஆரியர், ஆரியரல்லாதார் எல்லோருக்கும்—சேவை புரிய வேண்டுமென்ற திட சங்கல்பம் கொண்டிருந்தான். அதற்காக தெய்வ நம்பிக்கையெனும் ஆழமான சேற்றுக் குழியில் அழுந்திக் கிடக்கும் அந்த ஜனங்களுக்கு முதலில் தங்கள் அரசன் சுதாஸின்மீது தேவதைகளின் பரிபூரண கிருபை இருப்பதாக மெய்ப்பிக்க வேண்டியிருந்தது. அவ்விதம் ருசுப்பிப்பதற்கு வழி மகரிஷிகள் இவனைப் புகழ்ந்து பாடுவதைத் தவிர வேறில்லை. முடிவில் மகரிஷிகளின் புகழ் மாலையைப் பெறுவதற்காக அவர்களுக்குத் தங்கம், வெள்ளி, தான்யம், பசுக்கள், தாசிகள் முதலிய பொருள்களை ஏராளமாகக் கொடுக்க வேண்டி நேர்ந்தது. இளம் பசுங்கன்றுகளின் மாமிசத்தாலும், இனிமையான மதுவாலும், தங்கள் தொந்திகளைப் பெருக்க வைத்த சுதாஸ் உண்மையிலேயே அந்த மகரிஷிகளுக்கு சுதாஸ் (அளவற்ற தானம் கொடுப்பவன்) ஆக ஆகிவிட்டான். அந்த முகஸ்துதிக்கார மகரிஷிகள், சுதாஸினுடைய கொடையைப் புகழ்ந்து இயற்றியிருக்கும் எத்தனையோ ஸ்லோகங்கள் இன்றும் ருக் வேதத்தில் காணப்படுகின்றன. ஆனுல், இந்தப் புகழ் துதிகளின் நாயகனுன சுதாஸ் அவைகளைக் கேட்டபொழுது, அவற்றை

இயற்றியவர்கள்மீது எவ்வளவு வெறுப்புக் கொண்டிருந்தான் என்பது யாருக்குத் தெரியும்.

சுதாஸைப் பற்றிய புகழ்ச்சிப் பாடல்கள் வட பாஞ்சாலத்தில் (ரஹில் கண்டு) மட்டுமில்லை, அதற்கப்பால் வெகு தூரம்வரை பரவியிருந்தது. எந்த ஆடம்பரமும் இன்றி வாழ்க்கையை நடத்திவந்த சுதாஸ், தன்னுல் முடிந்த அளவு உலக மக்களுக்கு நன்மை செய்து வந்தான்.

தந்தை இறந்து பல வருடங்களுக்குப் பிறகே அவனுடைய தாயார் இறந்தாள். மெதுவாக ஓடிக்கொண்டிருப்பதால் பழக்கப்பட்டுப் போய்விட்ட ரத்த ஓட்டம், திடீரென்று அதிகப்படுவதால் நரம்பு வெடிக்கும் நிலைமை ஏற்படுவதுபோல், அவனுடைய மனத்தின் ஆழத்திலே அடங்கியிருந்த அந்த எண்ணம் வெடித்து வெளிப்படும் நிலையை அடைந்தது. எந்த நேரமும் அபாலா அவன் முன்னுல் நின்றுகொண்டு, கண்ணீர் நிறைந்த கண்களுடன் துடிக்கும் உதட்டிலே, ''நான் உனக்காக மத்ராபுரியிலே வழி பார்த்துக் காத்திருப்பேன்'' என்று கூறுவதுபோல அவனுக்குத் தோன்றிற்று. அந்தப் பிரிவின் வெப்பத்தை, அவனுடைய கண்ணீர் குளிர்விக்க முடியவில்லை. இமயமலையில் வேட்டையாடச் செல்வதாகக் கூறிவிட்டு, சுதாஸ் ஒரு நாள் பாஞ்சாலத்திற்குக் கிளம்பினுன்.

மத்ராபுரியிலே (சியால் கோட்) அபாலாவின் காதலை அவனுக்களித்த அந்த வீடு அப்படியே இருந்தது. ஆனுல் அவன் காதலியோ, அவளுடைய தந்தையோ அங்கில்லை. இருவரும் இறந்துவிட்டனர். அபாலா சென்ற வருடம் தான் இறந்தாள். அபாலாவின் காணுமல் போயிருந்த சகோதரனும் அவன் குடும்பமும் இப்பொழுது அந்த வீட்டிலே வசித்தனர். அவர்களோடு தன் நட்பைப் புதுப்பித்துக்கொள்ள சுதாஸுக்குத் தைரியம் உண்டாகவில்லை. அபாலாவின் தோழி வீட்டிற்குச் சென்று விசாரித்தான். அவள் ஒரு புதிய வர்ணச் சேலையையும் மேல் அங்கியையும் கொண்டுவந்து அவன் முன்னே வைத்து கண்களிலே நீர் அருவி பெருக, ''என்னுடைய தோழி இந்த ஆடையைத் தான் அந்தக் கடைசி நேரத்தில் உடுத்தியிருந்தாள். 'மத்ராபுரியில் உன் வரவுக்காகக் காத்திருப்பேன் என்று சுதாஸுக்கு உறுதி கூறியிருக்கிறேன்.' இந்த வாக்கியங்களே அந்திய காலத்தில் அவளுடைய வாயிலிருந்து வந்தவை'' என்று கூறினுள்.

அந்த ஆடையை வாரி எடுத்த சுதாஸ், கண்ணீர் ததும்பி வழியும் தன்னுடைய கண்களிலே ஒத்திக்கொண் டான்; மார்போடு அணைத்துக் கொண்டான். அபாலாவி னுடைய சரீரத்தின் நறுமணத்தை அந்த ஆடைகளிலே கண்டான்.

---

இன்றைக்கு 144 தலைமுறைகளுக்கு முந்திய ஆரிய சமூ கத்தின் கதை இது. அந்தக் காலத்தில்தான் வசிட்டர், விஸ்வாமித்திரர், பரத்துவாஜர் முதலிய மகரிஷிகள் ருக்வேத மந்திரங்களை இயற்றினர். அதே காலத்தில்தான் ஆரியப் புரோகிதர்களுடைய உதவியைக் கொண்டு குரு பாஞ்சால ஆரிய சேனைத் தலைவர்கள், ஜன சமூகத்தின் உரிமைகளைப் பலமாகத் தாக்கி இறுதியாக அழித்து முடித் தார்கள்.

# பிரவாஹன்

**இடம் : பாஞ்சாலம் (ஐக்கிய மாகாணம்)**

**காலம் : கி. மு. 700**

"ஒரு புறம் பசுமை நிறைந்த வனம். அங்கே கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருக்கும் சுவை மிகுந்த கனிகள்; அவைகளைத் தின்று சுதந்திரமாகப் பறந்து திரியும் பட்சிகள், இனிய ஒலிகள்; மறு புறத்திலே தெள்ளிய நீர் பெருக்கெடுத்தோடும் புனித கங்கை. அதன் கரையிலே சுக மாக மேய்ந்து கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான நமது பசுக்கள்; அவற்றின் மத்தியிலே கம்பீரமான குரல் எழுப்பிக் களித்துத் திரியும் கொழுத்த காளைகள்; இந்த அழகிய காட்சி நமது கண்களுக்குப் பெருவிருந்து. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத இந்த இயற்கை அழகிலே மனம் லயிக்க வேண்டும். பிரவாஹன்! நீயோ இதன் மத்தியிலும் சாம வேதகீதங்களை இசைத்துக்கொண்டும், வசிட்டன், விசுவா மித்திரன் முதலிய மகரிஷிகளின் மந்திரங்களை உருப் போட்டுக் கொண்டும் இருப்பதிலேயே உன் காலத்தைச் செலவிடுகிறுய்."

"உன்னுடைய கண்கள் அந்தக் காட்சிகளிலே லயித் திருக்கின்றன. நானே உன் கண்களைப் பார்ப்பதிலேயே திருப்தியடைகிறேன் லோபா!"

"உம், உனக்கு அழகாகவும் பேசத் தெரிந்திருக்கிறதே! உன்னுடைய சகமாணவர்களோடு நீ உட்கார்ந்துகொண்டு, நாய் குலைப்பது போல பழைய வேத மந்திரங்களை உருப் போட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போதெல்லாம், பாவம் நீ ஆயுள் முழுவதும் பால் குடிக்கும் குழந்தையைப் போலவே இருந்துவிடுவாய் என்று எனக்குத் தோன்றும்."

"லோபா! பிரவாஹனைப்பற்றி உண்மையிலே உன் னுடைய அபிப்பிராயம் இதுதானு?"

''அபிப்பிராயம் எதுவாகவும் இருக்கட்டும். ஆனால் பிரவாஹன் எப்பொழுதும் எனக்கே சொந்தம் என்பது உறுதி.''

''இந்த ஆசையும் நம்பிக்கையும்தான், கஷ்டப்பட்டுக் கல்வியைச் சேகரிப்பதற்கு எனக்குச் சக்தியை அளித்து வந்திருக்கிறது. எனக்கு மனத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி பூரணமாக இருக்கிறது. இல்லாவிடில் இந்தப் பழங்கதைகளையும், பழைய மந்திரங்களையும், ராக ஆலாபனையையும் திரும்பத் திரும்ப உருப்போடுவதை விடுத்து, நான் ஓடிப்போய் எவ்வளவோ காலமாயிருக்கும். உழைத்து உழைத்துக் களைத்துப் போகும்போது, இந்தக் கூச்சலிலிருந்து விடுதலையடையவேண்டும் என்ற ஆசை ஏற்படும் பொழுதும் எனது களைப்பைத் தீர்க்கும் மருந்து என்னுடைய லோபாவோடு சிறிது நேரம் கழிப்பதைத் தவிர வேறு இல்லை.''

''நான் உனக்காக எப்பொழுதும் தயாராய் இருக்கிறேனே.''

லோபாவின் பெரிய கண்கள் எங்கோ தூரத்தில் நோக்கிக் கொண்டிருந்தன. அவளுடைய பொன்னிறக் கூந்தல் காலை இளம் காற்றிலே பறந்து கொண்டிருந்தது. லோபா தன்னை மறந்து எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். பிரவாஹன் அவளுடைய கூந்தலைத் தனது விரல்களால் தடவிக் கொண்டே,

''லோபா! நான் உன் முன்னிலையில் ஒரு அழகற்றவன் என்றே எனக்குத் தோன்றுகிறது.''

''அழகற்றவனா?'' அவன் முகத்தைத் தன் முகத்தோடு அணைத்துக்கொண்ட லோபா, ''இல்லை பிரவாஹன், உன்னைப் பற்றி நான் எவ்வளவு கர்வப்படுகிறேன் தெரியுமா? என் அத்தையோடு வந்த எட்டுவருடப் பாலகனை என் குழந்தைக் கண்களால்-பார்த்த அந்தநாள் இன்னும் எனக்கு நினைவிருக்கிறது. அப்பொழுது நான் நான்கு வயதுச் சிறுமி; ஆயினும் என்னுடைய ஞாபசக்தி அந்தக் காட்சியைப் பதியச்செய்வதிலே தவறு செய்துவிடவில்லை. அந்தப் பொன்னிறமான கூந்தல், நீண்டு வளைந்த மூக்கு, மெல்லிய சிவந்த உதடுகள், பிரகாசம் பொருந்திய பெரிய பெரிய நீலக்கண்கள், தங்க நிற மேனி இவை யாவும் எனக்கு நினைவிருக்கின்றன. என் தாயார், 'லோபா இதோ பார்! இவன் உன் அத்தைமகன்' என்று உன்னை அறிமுகப்படுத்தியதும் நினைவிலிருக்கிறது.

நான் வெட்கப்பட்டுக் கொண்டு நின்றேன். ஆனால் தாயார் உன்னை முத்தமிட்டு, 'பிரவாஹன்! உன் மாமன் மகள் வெட்கப்படுகிறாள். அவள் வெட்கத்தைப் போக்குவது உன் வேலை' என்று கூறினாள்.''

''ஆம், நான் உன்னிடம் வந்தேன். ஆனால் நீ மாமியின் வாசனை யூட்டிய கூந்தலுக்குப்பின் ஒளிந்து கொண்டாய்.''

''நான் ஒளிந்துகொண்ட பொழுதும், என் கண்களுக் குப் பாதையைத் திறந்தே வைத்திருந்தேன். நீ என்ன செய் கிறாய் என்று பார்த்துக்கொண்டே இருந்தேன். தாயாரின் மடியையும், வேலைக்காரிகளின் குழந்தைகளையும் தவிர, அப் போது வேறு ஒன்றும் எனக்குத் தெரியாது. தந்தையாரின் குருகுலமும் அப்போது ஆரம்பிக்கப்பட்டிருக்கவில்லை. ஆகவே இந்த வீட்டில் எனக்குத் தனிமை உணர்ச்சி அதிக மாக இருந்தது. அந்தச் சமயத்தில் உன்னுடைய வருகை எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுத்தது தெரியுமா?''

''அப்பொழுதும் நீ என்னிடமிருந்து ஒளிந்துகொண்டு தானே இருந்தாய். உன்னுடைய சிவந்த சரீரம், உருண்டை முகமும் எனது இளம் கண்களுக்குப் பெரு விருந்தாய் இருந் தன. நான் உன் பக்கத்தில் வந்து உனது தோளிலே கையை வைத்தேன். அதைப் பார்த்து அம்மாவும் மாமியும் என்ன சொன்னார்கள் என்பது எனக்கு ஞாபகம் இருக்கிறது. இரு வரும் புன்முறுவலோடு, நமது ஆவலைப் பிரம்மா நிறை வேற்ற வேண்டும் என்றார்கள். அப்பொழுது அந்த 'ஆவல்' என்பதின் அர்த்தம் என்ன என்பது எனக்குத் தெரியாது.''

''இதெல்லாம் எனக்கு நினைவில்லை பிரவாஹன்! ஆனால் உன்னுடைய கைகளின் ஸ்பரிசத்தை என்னுடைய தோள் கள் அனுபவித்தன என்பதே எனக்குப் போதும்!''

''ஆனால் நீ வெட்கப்பட்டு வளைந்து நெளிந்தாய்.''

''மேலும் நீ எனது கைகளை உனது கரங்களால் பற்றிக் கொண்டாய். ஆனால் உன்னுடைய உதடுகள் அசைவற்றி ருந்தன. அதைப் பார்த்து என் தாயார் என்ன சொன்னாள் தெரியுமா!''

''மாமியின் ஒவ்வொரு வார்த்தையும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. மாமியை மறக்க முடியுமா? என் தாயார் என்னைக் கார்க்கிய* மாமாவிடம் ஒப்படைத்து விட்டு

*கர்க்க கோத்திரத்தை தோற்றுவித்தவன்—தலைவன்

வீட்டுக்குத் திரும்பிவிட்டாள். அன்று முதல் மாமியின் அன்புதான் எனது தாயை மறக்கும்படி செய்தது. அந்த மாமியை நான் எப்படி மறப்பேன்.'' பிரவாஹனுடைய கண்களிலே கண்ணீர் பெருக்கெடுத்தது. லோபாவின் உதடுகளிலே முத்தமிட்டு,

''மாமியின் முகமண்டலமும் இப்படித்தான் இருந்தது லோபா. நாம் இருவரும் அடுத்தடுத்துப் படுத்திருப்போம் நீ நன்ருகத் தூங்கிவிடுவாய். எத்தனையோ நாட்கள் நான் அதிகாலையில் விழித்திருக்கிறேன். ஆனல் மாமி வருவதைப் பார்த்து நான்வேண்டுமென்றே கண்களை மூடிக்கொள்வேன். மறுவிநாடி சப்தமின்றி மூச்சுக் காற்றுக்கூட படாதபடி மாமியின் உதடுகள் என் கன்னங்களை ஸ்பரிசிக்கும். நான் கண்ணைத் திறப்பேன். 'எழுந்திரு மகனே!' என்று என்னை எழுப்பிவிட்டு உன் கன்னங்களிலே முத்தமிடுவாள். நீ உணர்ச்சியற்றுத் தூங்கிக் கொண்டிருப்பாய்.''

லோபாவின் கண்களிலும் கண்ணீர் நிறைந்தது. ''நான் என் தாயாரைக்கூடச் சரியாகப் பார்த்துத் தெரிந்து கொள்ளக் கொடுத்து வைக்கவில்லை'' என்ருள்.

''லோபா! உனக்குப் பயமென்பதே தெரியாது. மேலும் எனது சகலமும் நீயே. மாமாவுக்குப் பயந்து எனது பாடங்களை உருப்போட்டு கொண்டிருக்கும் நான், அதில் களைப்படையும் போதெல்லாம் உன்னை நாடித்தான் வருவேன்.''

''உனக்காகத்தானே அந்தக் கும்பலில் சேர்ந்து உனக்குப் பக்கத்தில் நானும் உட்காருகிறேன்.''

''அது எனக்குத் தெரியும் லோபா! நான் எடுத்துக் கொள்ளும் சிரமத்தில் நீ பாதியாவது எடுத்துக்கொண்டால், மாமாவின் மாணவர்களில் முதன்மை ஸ்தானம் உனக்குத்தான்.''

''உன்னைவிட அல்ல'' என்ற லோபா பிரவாஹனின் கண்களுக்குக்குள்ளே கூர்ந்து நோக்கிக்கொண்டே,

''உன்னைவிட முன்னேற விரும்பவில்லை பிரவாஹன்!''

''ஆனல், உனது முன்னேற்றம் எனக்கு மகிழ்ச்சியை அளிக்கும்.''

"இல்லே, நம்மிருவருக்குள்ளும் தனித்துவம் எதுவும் கிடையாது. நாம் ஒருவரை விட்டு ஒருவர் முன்னேற முடியாது."

"லோபா! நீ என் மனதிற்கு உற்சாக மட்டுமல்ல, உடலுக்குப் பலத்தையும் கொடுக்கிருய். நான் இரவிலே மிகக் குறைவாகத்தான் தூங்குகிறேன். பகலில் பாடங்களே நான் உருப்போடுவதோடு, மற்றவர்களேயும் உருப்போடச் செய்வதில் அன்ன ஆகாரங்களே மறந்துவிடுகிறேன், நீதான் என்னே அந்தப் பாடசாலேயின் இருட்டறையிலிருந்து வெளியே இழுத்துவந்து, இந்த வனத்திற்கும். சோலேக்கும் கங்கையின் பெருக்கத்திற்கும் அழைத்துச் செல்கிருய். இவைகள் எனக்கு மிகவும் பிடித்திருக்கின்றன. ஆனுல், மூன்று வேதங்களேயும், பிராமணர்களின் மற்றக் கலேகள் யாவற்றையும் மிக விரைவிலே கற்று முடித்துவிடவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்."

"நீதான் இப்பொழுது கலேகளின் எல்லேயை அடைந்து விட்டாயே! பிரவாஹன் கல்வியறிவில் தனக்குச் சமதையானவன் என்று தந்தையார் கூடச் சொல்கிருரே."

"அது எனக்கும் தெரியும். பிராமணர்களின் கல்வியில் நான் படிக்கவேண்டுவது இன்னும் அதிகமில்லே. ஆனுல் கற்கவேண்டுவது பிராமணர்களின் கலேகளோடு முடிந்துவிடுவதில்லே."

"ஆம்: இதைத்தான் நானும் உன்னிடம் சொல்லவேண்டுமென்று நினேத்தேன். ஆனுல், இன்னும் உன்னுடைய பாலஷ தண்டத்தை (மாணவர்கள் உபயோகிக்கும் ஒரு வகைத் தடி) யும் இந்தப் பரட்டைத் தலேயையும் விடப் போவதில்லேயா?"

"அதைப்பற்றிக் கவலேப்படாதே லோபா! இந்தப் பாலஷ தண்டத்தை விட்டுவிடப் போகிறேன். பதினுறு வருடங்களாக எண்ணெயே காணுத இந்தப் பரட்டைத் தலேயில் நறுமணமுள்ள தைலங்களேத் தடவிக் கோதும் சுதந்திரம் உனக்குப் பூரணமாக உண்டு."

"பிரவாஹன்! இந்த மாணவக் கும்பல் தலேயைப் பரட்டையாக வைத்துக் கொள்ளவேண்டும் என்ற பலமான கட்டுப்பாடு ஏன் என்று எனக்குப் புரியவில்லே. ஆனுல் நீ எனது இந்த அழகிய உதடுகளிலே முத்தமிடுவதை ஒருநாள் கூட நிறுத்தியதில்லேயே?"

"ஏனெனில் அது குழந்தைப் பருவத்திலிருந்து வந்த பழக்கம்."

"மற்ற குரு குலங்களில் வசிக்கும் மாணவர்கள் இந்தக் கடுமையான விரதங்களை அனுஷ்டித்து வருகிறார்களா?"

"நிர்ப்பந்தத்தின் பேரில்; மரியாதையின் உயர்வைப் பெறுவதற்காக இவைகளையெல்லாம் அனுஷ்டிக்க வேண்டியிருக்கிறது. இல்லையெனில் யார் விரும்புகிறார்கள். ஆனால் ஜனங்களோ, இதைப் பிராமணர்களின் கடினமான தவம் என்று கருதுகிறார்கள்."

"குருகுல அரசனே, தந்தையாருக்குத் தங்கமும் வெள்ளியும், அடிமைகளும் குதிரைகளும், ரதங்களும் கிராமங்களும் கூடக் கொடுக்கிறார். என்னுடைய வீட்டிலே ஏற்கனவே போதுமான அளவு வேலைக்காரிகள் இருக்கிறார்கள். இப்பொழுது குருகுல அரசன் அனுப்பியுள்ள மூன்று அடிமைப் பெண்களுக்கும் என்ன வேலை கொடுப்பதென்று எனக்குப் புரியவில்லை."

"விற்றுவிடு லோபா! அவர்கள் யுவதிகள். ஒவ்வொருத்தியையும் குறைந்தது முப்பது தங்க நாணயங்களுக்கு விற்கலாம்."

"வருந்தத் தக்க விஷயம்! நாம் பிராமணர்கள்; மற்றவர்களைவிட அதிகமாகப் படித்திருக்கிறோம். அறிவாளிகளாயிருக்கிறோம். அறிவையும் கல்வியையும் பெறுவதற்கு நமக்குப் போதுமான வசதிகள் இருக்கின்றன. ஆனால் இந்த அடிமைகளின் வாழ்க்கைகளைப் பார்க்கும்போது பிரம்மா, இந்திரன், வருணன் முதலிய தேவதைகளின் மீதும் வசிட்டன், பரத்துவாஜன், பிருகு, அங்கிரா முதலிய மகரிஷிகளின் மீதும், என் தந்தையாரைப் போன்று அறிவின் சிகரமாய் விளங்கும் பணக்காரப் பிராமண அறிஞர்கள் மீதும் எனக்கு வெறுப்புத்தான் ஏற்படுகிறது. இந்தப் படித்த பிராமணர்களிடையே வியாபார மனப்பான்மைதான் காணப்படுகிறது. எப்பொழுதும் ஆசை, லாபம், பேரம் இவற்றிலேதான் மூழ்கிக் கிடக்கிறார்கள். அன்று வேலைக்காரி கருப்பியின் புருஷனை கோசல வியாபாரியிடம் தகப்பனார் ஐம்பது தங்க நாணயங்களுக்கு விற்றுவிட்டார். கருப்பி என் பக்கத்

திலே அழுது நடுங்கிக் கொண்டிருந்தாள். நான் தகப்பனு ருக்கு எவ்வளவோ சொன்னேன். எல்லா அடிமைகளையும் வீட்டிலே வைத்துக் கொள்வதென்றால் வீட்டிலே இடம்கூட இருக்காது. மேலும் விற்றுப் பணமாக்க முடியாத அந்த அடிமைகள் இருந்தும் பயனென்ன என்று கூறிவிட்டார். பாவம், அவர்களைப் பிரித்த அந்தக் காட்சி! கருப்பியின் இரண்டு வயதுப் பெண் அன்று பூராவும் அழுது அழுது ஓய்ந்தது. அந்தச் சின்னக்குழந்தையைப் பார்த்தவர்களெல் லோரும் அது என் தகப்பனாரைப்போலவே இருப்பதாகச் சொல்கிறார்கள்; நாம் மிருகங்களைப்போலவே அவளை விற்று விட்டோம். அந்த அடிமைகளையும் அவர்களது குழந்தை களையும், பிரம்மா இதற்காகவேதான் படைக்கிறாரா? இதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. பிரவாஹன்! உன்னைப்போல் நான் மூன்று வேதங்களையும் உருப்போட் டிருக்கவில்லை. ஆயினும் அவற்றின் கருத்தைச்சொல்லக் கேட்டிருக்கிறேன். அவைகள் கண்ணுக்குத் தெரியாத பொருள்களையும், சக்திகளையும் பற்றிப் பிரமாதமாகப்பேசி, மக்களுக்குப் பயமூட்டுவதைத் தவிர வேறொன்றும் செய்ய வில்லை.'

லோபாவினுடைய சிவந்த கன்னங்களைத் தனது கன்னங் களிலே ஒத்திக்கொண்ட பிரவாஹன், "லோபா! நமது காதல் அபிப்பிராயபேதத்தை வளர்ப்பதற்காகவேதோன்றி யிருக்கிறது."

"நம்முடைய கருத்து வேற்றுமை, காதலை வளப்படுத் துமே தவிரக் குறையச் செய்ய மாட்டாது."

"சரியாகச் சொன்னாய் லோபா! நீ கூறிய அந்த வார்த்தையை வேறு யாராவது கூறியிருந்தால், நான் சீற்றம் கொண்ட நாகமாக மாறியிருப்பேன். ஆனால் உன் னுடைய இந்த அழகிய உதடுகள், நமது தெய்வங்களையும் மகரிஷிகளையும் ஆச்சாரியர்களையும் கடுமையாகத் தாக்கிய பொழுது, அந்தச் சிவந்த உதடுகளை முத்தமிட வேண்டு மென்ற ஆசைதான் எனக்குத் தோன்றிற்று ஏன்?"

"ஏனெனில், நமக்குள்ளேயும் இரண்டு மாறுபட்ட கருத்துக்களின் போராட்டம் எப்பொழுதும் இருந்து கொண்டேயிருக்கிறது; நாமும் அவற்றைச் சகித்துக் கொள் கிறோம். ஏனென்றால், அவை நம் மனத்திலிருந்து பிரித் தெடுக்கப்பட முடியாதவை."

"ஆம், நீயும் என்னிலிருந்து பிரித்தெடுக்க முடியாத ஓர் அங்கம் லோபா!"

# 2

"ஷீவியிலிருந்து வந்துள்ள மென்மையான சால்வைகள், காசி வாசனைச் சந்தனம், கடலின் வெண்முத்தால் செய்த ஆபரணங்கள், இவைகளை நீ விரும்பி உபயோகிப்பதை நான் பார்க்கவே முடியவில்லையே? அன்பே! இவைகளின் மீது உனக்கு வெறுப்பா என்ன?

"ஏன்? அவைகளை உபயோகிப்பதால் என் அழகு அதிகரித்துவிடுமா?"

"எனக்கு நீ எப்பொழுதும் அழகுத் தெய்வம்தான்."

"அப்படியானுல் இந்தச் சுமைகளை எல்லாம் அள்ளிப் போட்டுச் சரீரத்தைத் துன்புறுத்துவதிலே என்ன லாபம்? உண்மையைச் சொல்லுகிறேன். அன்ப! நீ உன் தலைமீது மகுடம் என்ற பெயரால் இந்தப் பெரிய சுமையை வைத்துக் கொள்வதைப் பார்க்கும்போதெல்லாம், எனக்கு எரிச்சலாகத்தான் வருகிறது."

"ஆனுல் மற்ற பெண்கள் ஆடைகளுக்காகவும், ஆபரணங்களுக்காகவும் உயிரையே விடுகிருர்களே."

"நான் அப்படிப்பட்ட பெண் அல்ல."

"ஆம்; நீ பாஞ்சால அரசனின் இருதயத்திலே ஆட்சி செய்யும் பெண்."

"இல்லை. நான் பாஞ்சாலத்தின் அரசி அல்ல. பிரவாஹனின் மனைவி."

"ஆம் என் அன்பே! நாம் இதைப்பற்றிக் கற்பனைகூடச் செய்ததில்லை. நான் பாஞ்சாலத்தின் ராஜகுமாரன் என்பதை மாமா முற்றிலும் மறைத்து வைத்திருந்தார்."

"அந்தச் சந்தர்ப்பத்தில் தந்தையார் வேறு என்ன செய்ய முடியும்? பாஞ்சால அரசனின் நூற்றுக்கணக்கான மனைவியருள் என் அத்தையும் ஒருத்தி. பாஞ்சால அரசருக்கு உன்னைவிட மூத்தவர்களான பத்துப் புதல்வர்கள்

இருந்தார்கள். இந்த நிலைமையில் நீ ஒரு நாள் பாஞ்சால சிம்மாசனத்தின் உரிமையாளனாக வந்து சேருவாய் என்று யாராவது கனவு காண முடியுமா?''

''நல்லது. ஆனால் உனக்கு இந்த அரசமாளிகைகளைக் கண்டால் ஏன் இவ்வளவு வெறுப்பு ஏற்படுகிறது?''

''ஏனா? என் தகப்பனாரின் அந்தப் பெரிய மாளிகையே என்னை உதாசீனம் அடையும்படி செய்துவிட்டது அது நமக்கெல்லாம் மாளிகை. ஆனால் அங்கிருந்த அடிமைகளுக்கு? இந்த அரசமாளிகையோ அதைவிட ஆயிரம் மடங்கு பெரியது. இங்கு என்னையும் உன்னையும் தவிர மற்ற எல்லோரும் அடிமைகள்—வேலைக்காரிகள். இரண்டு சுதந்திர மனிதர்களுக்காக ஆயிரக்கணக்கான அடிமைகள் வசிக்கும் மாளிகையை, சுதந்தர மனிதர்கள் வாழும் மாளிகையாகச் சொல்ல முடியாது. ஆனால் பிரவாஹன்! உன்னுடைய இதயம் இவ்வளவு கல்லாகப் போய்விட்டதைப் பார்க்க நான் ஆச்சரியப்படுகிறேன்.''

''அதனால்தான் இவ்வளவு கடுமையாக சொல்லம்புகளைத் தாங்க முடிகிறது.''

''இல்லை, மனிதன் இப்படி ஆகிவிடக்கூடாது.''

''அன்பே! நான் மனிதனாவதற்கல்ல; திறமைசாலியாவதற்காகவே முயன்றேன். ஆனால் அந்த நாட்களிலே திறமைசாலி என்ற தகுதி என்னை வந்து அடையும்பொழுது நான் இந்த ராஜமாளிகையிலே வாழ்ந்து கொண்டிருப்பேன் என்று எண்ணியதே இல்லை.''

''நீ என்னைக் காதலித்ததற்காக வருந்தவில்லையா பிரவாஹன்?''

''குழந்தைக்குத் தாய்ப் பாலைப்போல, உன்னுடைய காதலை நான் எவ்வித சிரமமுன்றிப் பெற்றேன். அது என்னுள் ஒரு பகுதியாகவே கலந்துபோய்விட்டது. நான் இந்த உலக வாழ்க்கைக்கு முக்கியத்துவம் கொடுப்பவன் லோபா! ஆயினும் உன் காதலின் மதிப்பை நன்கு உணர்ந்திருக்கிறேன். மனத்தின் போக்கு எப்பொழுதும் ஒரே மாதிரி இருப்பதில்லை. எப்பொழுதாவது மனதிலே பலவீனம் ஏற்படும்பொழுது எனக்கு வாழ்க்கையே சிரமமானதாக மாறிவிடுகிறது. அந்தச் சமயங்களிலெல்லாம், உனது காதலும்.

உன்னுடைய நற்குணமே எனக்குக் கைக்கொடுத்துக் காப்பாற்றுகின்றன.''

''ஆனால் நான் எவ்வளவு தூரம் உனக்குக் கைகொடுத்து உதவ விரும்புகிறேனே, அவ்வளவு தூரம் என்னால் செய்ய முடியவில்லையே என்பதற்காக மிகவும் வருந்துகிறேன் பிரவாஹன்!''

''ஏனென்றால், நான் அரசாட்சி செய்வதற்காகவே தோன்றியவன்.''

''ஆனால், ஒரு காலத்தில் நீ பிராமண மகானாக ஆக வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தாயே?''

''அந்தக் காலத்தில் நான் பாஞ்சாலபுர (கனோஜ்) ராஜ மாளிகையின் சொந்தக்காரன் என்பது எனக்குத் தெரியாது.''

''அப்படியானால், அரச காரியங்களுக்கு அப்பாலும் நீ தலையிட்டுக்கொண்டிருக்கிறாயே அதற்கு என்ன அவசியம்?''

''ஓஹோ! பிரம்மாவைத் தாண்டிப் பிர்மம்வரைபறப்பதைப் பற்றிச் சொல்கிறாயா? லோபா! அது அரச காரியங்களுக்கு அப்பாற்பட்ட வேலையல்ல. அரச ஆட்சிக்குத் துணை பலமாக நிற்பதற்காகவே நமது முன்னோர்கள் வசிட்டர், விசுவாமித்திரர் முதலிய மகரிஷிகளுக்கு, மிகுந்த மரியாதையும், தானங்களும் கொடுத்தார்கள். அந்த மகரிஷிகள் இந்திரன், அக்னி, வருணன் முதலிய தெய்வங்களின் பெயரால், மக்களை அரசன் உத்திரவுக்குக் கீழ்ப்படியும்படி தூண்டினார்கள்! அக்காலத்து அரசர்கள் மக்களின் நம்பிக்கையைப் பெறுவதற்காக ஏராளமான செலவு செய்து இந்தத் தெய்வங்களின் பெயரால் வேள்விகளை நடத்தினார்கள். இன்றும் நாம் வேள்விகளை நடத்துகிறோம். பிராமணர்களுக்குத் தானம், தட்சிணை எல்லாம் கொடுக்கிறோம். தெய்வங்களின் மகத்தான சக்திகளின்மீது மக்களுக்கு நம்பிக்கை உண்டாவதற்காகவும், அந்தத் தெய்வங்களின் கிருபையினாலேயே நாம் இந்தச் சுகபோகத்தை—இளங்கன்றின் மிருதுவானமாமிசம், மது, மெல்லிய ஆடைகள், முத்து ரத்தின ஆபரணங்கள் இவைகளையெல்லாம் உபயோகிக்கும் பாக்கியத்தைப்பெற்றிருக்கிறோம் என்ற நம்பிக்கை உண்டாவதற்காகவுமே இவைகளைச் செய்கிறோம்.''

''அதற்கு இந்தப் பழைய தெய்வங்கள் போதாதா? இப்பொழுது ஒரு புதிய பிர்மத்தை சிருஷ்டிக்கவேண்டிய அவசியம் என்ன வந்தது?''

''பல தலைமுறைகளிலே யாரும், இந்திரன், வருணன், பிரம்மா முதலிய தெய்வங்களைப் பார்த்ததில்லை. இப்பொழுது பலருடைய மனத்திலே இது பற்றிச் சந்தேகமும் ஏற்படத் தொடங்கியிருக்கிறது.''

''அப்படியானால், உன்னுடைய பிர்மத்தைப் பற்றிச் சந்தேகம் உண்டாகாதா?''

''பிர்மத்தைப் பார்க்கவேண்டும் என்று யாரும் கேட்க முடியாதபடி அதை நான் சிருஷ்டிக்கிறேன். ஆகாய வெளியைப்போல எங்கும் நிறைந்திருப்பது, புலன்களால் உணர முடியாதது பிர்மம் என்று நாம் கூறியிருக்கும்போது அதைப் பார்க்கவேண்டும் என்ற கேள்வி எங்கிருந்து வரும்? அந்தக் கேள்வி, உருவங்கள் கற்பிக்கப்பட்டிருக்கும் தெய்வங்களைப் பற்றித்தான் எழ முடியும்.''

''ஆனால், நீ ஆகாயத்தைப் பற்றியும், அகண்ட வெளியைப் பற்றியும் சாதாரண மக்களுக்கு மட்டுமல்லாமல் உத்தாலக், ஆருனி போன்ற மகா மேதாவிகளுக்கும் உபதேசம் செய்துகொண்டிருக்கிறாயே, அவையெல்லாம் உன் பிரஜைகளை ஏமாற்றுவதற்குச் செய்யும் சூழ்ச்சிதானா?''

''லோபா! நீ என்னை நன்றாயறிவாய். உன்னிடத்திலிருந்து நான் எதையும் மறைக்க முடியாது. சந்தேகத்தைக் கிளப்புகிறவர்களின் மனத்தைக் கலக்கி, அவர்களின் புத்தியை மழுங்கிப் போகும்படி செய்வது நமது அரச வாழ்வை நிலை நிறுத்துவதற்கு மிக அவசியமாயிருக்கிறது. தேவதைகளைப் பற்றியும் அவர்களுக்குச் செய்யப்படும் வேள்வி—பூஜைகளைப் பற்றியும் அவநம்பிக்கை உண்டாக்குகிறவர்கள் தான் நமக்குப் பெரிய பயங்கர விரோதிகள்.''

''ஆனால், பிர்மத்தின் நிலை பற்றியும் அதைத் தரிசிப்பது பற்றியும்தான் நீ உபதேசிக்கிறாயே?''

''ஆம்; ஒரு நிலை—தன்மையைப் பற்றிக் கூறும்போது, அதன் தரிசனத்தைப் பற்றியும் கூறவேண்டியதேற்படுகிறது, புலன்களால் உணர முடியுமென்று கூறினால், சந்தேகவாதிகள் உடனே அதை நிரூபித்துக் காட்டும்படி கேட்கத்

தொடங்கி விடுவார்கள். ஆகவேதான் பிர்மத்தைத் தரிசிப்பதற்கு, இந்தப் புலன்களுக்கு அப்பாற்பட்ட ஒரு நுண்ணிய புலன் மூலம்தான் முடியுமென்று நான் கூறினேன். அந்த நுண்ணிய புலனை அடைவதற்கு நான் காட்டியுள்ள வழியோ யாராலும் எட்டிப்பிடிக்க முடியாதது. ஐம்பது தலைமுறைகளுக்கு அரும்பாடுபட்டாலும் வெற்றி கிட்டாததும், அந்த நிலைமையிலும் அவநம்பிக்கை ஏற்படாததுமான வழிகளை நான் வகுத்திருக்கிறேன். முன்னோர்களான மகரிஷிகள் வகுத்த அந்த ஸ்தூல வடிவுள்ள ஆயுதங்கள், உபயோக மற்றுப் போய்விட்டன என்று கருதியே நான் இந்த சூட்சும வடிவுள்ள ஆயுதத்தைக் கண்டு பிடித்தேன். சபரர்களிடமிருந்த கல்லாலும், தாமிரத்தாலும் செய்யப்பட்ட ஆயுதங்களை நீ பார்த்திருக்கிறாயல்லவா?''

''ஆம்; உன்னோடு தெற்குப் பகுதிக் காடுகளில் சுற்றிய போது பார்த்திருக்கிறேன்.''

''யமுனை நதிக்குப் பக்கத்திலே வசிக்கும் சபரர்கள் கல்லாயுதங்களையும் தாமிர ஆயுதங்களையுமே உபயோகிக்கிறார்கள். அவைகள் நமது இரும்பு ஆயுதங்களுக்கு ஈடாக முடியுமா?''

''முடியாது.''

''அதேபோலத்தான் வசிட்டரும், விஸ்வாமித்திரரும் தோற்றுவித்த தேவதைகளும் வேள்வியும். அவைகள் மந்த புத்தியுள்ளவர்களைத்தான் திருப்திப்படுத்த முடியும். அறிவாளிகளையும், புத்திக் கூர்மையுள்ள சந்தேக வாதிகளையும் அவற்றால் ஒன்றும் செய்ய முடியாது.''

''அறிஞர்களுக்கு முன்னே உன்னுடைய 'பிர்ம'மும் உபயோகமற்றதுதான். நீ பிராமண அறிவாளிகளையும்கூட சிஷ்யர்களாக்கி, அவர்களுக்குப் பிர்ம ஞானத்தைப் பற்றி உபதேசம் செய்கிறாய். ஆனால் உன்னுடைய வீட்டிலேயே உன்னோடு வசிக்கின்ற நான் உன்னுடைய செயல்கள் யாவும் முற்றிலும் பொய்யும் பித்தலாட்டமுமே என்று கருதுகிறேன்.''

''ஏனெனில், *உபநிஷத்தின் உண்மை ரகசியம் உனக்குத் தெரியும்.''

---

*உபநிஷதம்—பிர்ம ஞானத்தைப் பற்றியும், ஆத்மா—பரமாத்மா முதலியவைகளைப் பற்றியும் விளக்குவதோடு, வேதத்தின் ரகசியத்தையும் தெளிவாக்கும் தத்துவ நூல்.

''பிராமணர்கள் புத்திசாலிகளாயிருந்தால், உனது ரகசியத்தை அவர்களால் கண்டுபிடிக்க முடியாதா?''

''அதையும் நீ பார்த்துக்கொண்டு தானே இருக்கிறாய். பிராமணர்களில் அறிவாளிகளான சிலர், இதன் ரகசியத்தைக் கண்டுபிடிக்க முடியும். ஆனால் அவர்கள், எனது இந்த உபநிஷத ஆயுதம் தங்களுக்கும் மிக உபயோககரமானது என்று கருதுகிறார்கள். அவர்களுடைய குருபீடத்திலும் புரோகிதத் தொழிலிலுங்கூட ஜனங்களுக்கு அவநம்பிக்கை ஏற்படத் தொடங்கிவிட்டது. இதன் விளைவு என்ன ஆகும்? சவாரி செய்வதற்குக் குதிரைகள் பூட்டிய ரதமும், வசிப்பதற்குப் பெரிய மாளிகைகளும், நல்ல உணவும், அழகிய அடிமைப் பெண்களையும் பெற்றுச் சுகபோக வாழ்வு நடத்துவதற்கு ஆதாரமாயிருக்கும் தட்சிணையில் மண் விழுந்துவிடும்.''

''இது கேவலம், வியாபாரந்தானே?''

''ஆம். வியாபாரந்தான். நஷ்டத்தைப்பற்றிய பயமே இல்லாத வியாபாரம். ஆகையால்தான், உத்தாலக் போன்ற பிராமண அறிஞர்கள், கையில் சமிதை ஏந்தி என்னிடம் சிஷ்யர்களாவதற்கு வருகிறார்கள். நான் உபநயனம் செய்துகொண்டு முறைப்படி குருஸ்தானத்தை அடையாமலேயே பிராமணனாகாமலேயே, அவர்களுக்குப் பிர்மஞானத்தைப் போதிக்கிறேன்.''

''இது ரொம்ப நீசத்தனமான செயல், பிரவாஹன்!''

''நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் நமது விருப்பம் நிறைவேறுவதற்கு இது ஒரு சிறந்த சாதனம். வசிட்டனும் விஸ்வாமித்திரனும் கட்டிய படகு, ஆயிர வருட காலம்கூட வேலை செய்யவில்லை. ஆனால் இந்தப் பிரவாஹன் தயார் செய்யும் படகோ, இரண்டாயிரம் வருடங்களுக்கப்பாலும் அரசர்களையும், சேனாதிபதிகளையும், சுகபோகிகளையும் காப்பாற்றிக் கொண்டிருக்கும். தேவதைகள் வேள்வி உருவிலே தயாரிக்கப்பட்ட அந்தப் படகு உறுதியற்றது என்று நான் உணர்ந்தேன். ஆகவே இந்த உறுதியான படகைத் தயாரித்தேன் லோபா! இந்த அகண்டவெளி—பிர்மம், இதையும் விட மகத்தான மற்றொரு சிருஷ்டியையும் நான் செய்திருக்கிறேன்.''

''அது என்ன?''

''இறந்தவர்கள் மறுபடியும் இந்த உலகத்திற்கே வருவது; புனர்ஜன்மம்.''

''ஓ! இது பெரிய மோசடி.''

''ஆனல் ரொம்பக் காரியசாத்தியமானது. எந்த விகிதத்தில் அரசர்களிடமும் பிராமணர்களிடமும் வியாபாரிகளிடமும் பொருள்கள் பெருகிக் கொண்டு போகின்றனவோ, அதே விகிதத்தில் சாதாரண ஜனங்கள் ஏழைகளாகிக் கொண்டு வருகின்றனர். இந்தத் தொழிலாளர், விவசாயி, அடிமைகள் முதலியவர்களைத் தூண்டி விடுகிறவர்களும் தோன்றிவிட்டார்கள். 'நீங்கள் வீணுக உங்கள் சம்பாதியத்தைப் பிறருக்குக் கொடுத்துவிட்டுக் கஷ்டப்படுகிறீர்கள். இந்தத் துன்பம், தியாகம், தானம் யாவும் நீங்கள் இறந்தபிறகு உங்களுக்கு மோட்சத்தைக் கொடுக்குமென்று பொய் சொல்லி உங்களை ஏமாற்றுகிருர்கள்' என்று ஜனங்களுக்கு அவர்கள் கூறத் தொடங்கிவிட்டார்கள். இதற்குப் பதிலாகத்தான், இந்த உலகில் காணப்படும் ஏழை—பணக்காரன், உயர்வு—தாழ்வு முதலிய வேற்றுமைகள் யாவற்றிற்கும், முன் ஜன்மத்தின் கர்மபலன் தான் காரணம் என்று நான் கூறுகிறேன். முன் ஜன்மத்தின் நல்வினை தீவினைகளின் பலனை இந்த ஜன்மத்தில் நாம் பிரத்தியட்சமாகக் காண்கிருேம் என்று உபதேசிக்கிறேன்.''

''அப்படியானல், திருடனும்கூடத் திருட்டுச் சொத்தை முன் ஜன்ம வினையின் பலனென்று கூறமுடியுமல்லவா?''

''ஆனல், நாம் நீண்ட நாட்களாகத் தேவதைகள், மகரிஷிகள், ஜனங்களின் நம்பிக்கை முதலிய உதவிகளைப் பெற்று அனுபவித்து வந்திருக்கிருேமாகையால், இப்போது திடீரெனத் திருடப்படும் சொத்து முன் ஜன்ம வினையின் பலன் என்று ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. நாம் உழைக்காமல் பெற்ற பொருள்களை, தேவதைகளின் கிருபையினல் பெற்றதாக இதுவரை சொல்லி வந்தோம்; இப்போது தேவதைகளின் மீதும் அவற்றின் கிருபையிலும், ஜனங்களுக்கும் அவநம்பிக்கை ஏற்படத் தொடங்கிவிட்டது. ஆகவே, நாம் ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்தாக வேண்டும். பிராமணர்களிடமோ, சிந்தனு சக்தியே அற்றுப் போய்விட்டது. மகரிஷிகளின் பழைய மந்திரங்களையும், வாசகங்களையும் உருப்போடுவதிலேயே அவர்கள் நாற்பது, நாற்பத்து ஐந்து வயதைத் தாண்டிவிடுகிருர்கள். அதற்கப்

பால் பெரிய விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கும் சக்தி எங்கே இருக்கப் போகிறது?''

''நீயும்கூட அவைகளை உருப்போடுவதிலேயே அதிக காலத்தைச் செலவிட்டாயே, பிரவாஹன்?''

''கேவலம் பதினாறு வருடங்கள். இருபத்தினாலாவது வயதில் நான் பிராமணர்களின் கலைகள் யாவற்றையும் கற்றுத் தேர்ந்து வெளியே வந்துவிட்டேன். வெளியுலகிலே கற்றுக்கொள்வதற்கு இன்னும் அநேக விஷயங்கள் கிடைத்தன. அரச நிர்வாக காரியங்களுள் நுழைந்த பிறகு, பிராமணர்கள் செய்த அந்தப் பழைய படகு உறுதியற்று இருக்கிறதென்பதைக் கண்டேன்.''

''அதற்காக ஒரு புதிய உறுதியான படகைச் செய்தாயாக்கும்?''

''சத்தியம், அசத்தியத்தைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. காரிய சாத்தியத்தைப்பற்றிதான் எனக்குக் கவலை, லோபா! இந்த உலகத்தில் திரும்பப் பிறப்பது என்ற விஷயம் இன்று புதிதாக இருக்கிறது. மேலும் அதற்குள் மறைந்திருக்கும் சுயநலமும் உனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் எனது பிராமண சிஷ்யர்கள், இப்பொழுது அதை நாலா பக்கமும் பரப்பத் தொடங்கிவிட்டார்கள். பிதுர்லோக பாதையையும், தேவலோக பாதையையும் பற்றிப் புரிந்து கொள்வதற்கு, இப்பொழுதிருந்தே ஜனங்கள் பத்துப் பனிரெண்டு வருடங்களைச் செலவிடத் தயாராகிவிட்டார்கள். லோபா! அப்பொழுது நீயும், நானும் இருக்கமாட்டோம். ஆனால் ஏழைப் பிரஜைகள் தங்களுடைய மறுஜென்ம நம்பிக்கையிலே, எல்லாவிதக் கஷ்டங்களையும் துன்பத்தையும், அநியாயத்தையும் கூடச் சகித்துக் கொள்ளக்கூடிய காலம் வரும். சொர்க்கத்தையும், நரகத்தையும் பற்றி உணர்த்துவதற்கு, நான் கண்டுபிடித்துள்ள வழி எவ்வளவு சுலபமானது பார்த்தாயா?''

''ஆனால் தன்னுடைய வயிற்றை நிரப்புவதற்காக, நூற்றுக்கணக்கான தலைமுறைகளுக்கு ஜனங்களை வெள்ளத்தில் மூழ்கடிப்பதா?''

'மகரிஷி வசிட்டனும், விசுவாமித்திரனும்கூடத் தங்கள் வயிற்றுக்காகத்தானே வேதத்தை இயற்றினார்கள். வடக்குப் பாஞ்சால (ரஹில்கண்டு) அரசின் திவோதாஸ் சபரர்களின்

கோட்டையை ஜெயித்ததைப் புகழ்ந்து கவிதைக்குமேல் கவிதையாகச் செய்து குவித்தார்கள்?''* வயிற்றுக்காக ஏற்பாடு செய்வது குற்றமல்ல. ஆனால், நாம் நம்முடைய வயிற்றுக்கு மட்டுமல்ல, நம்முடைய குழந்தைகள், பேரர்கள், தலைமுறை தலைமுறைக்கும், ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு வயிற்றுப் பிரச்னையைத் தீர்த்துவைத்திருக்கிறோம். இதற்காக நமக்கு நிரந்தரமான புகழ் கிடைக்க வேண்டும். முற்கால மகரிஷிகளும், அவர்களின் வழியைப் பின்பற்றித் தர்மச் சோறு தின்று கொண்டிருக்கும் பிராமணர்களும் செய்து முடிக்க முடியாத மகத்தான காரியத்தை, இந்தப் பிரவாஹன் செய்து முடித்திருக்கிறான்.''

''பிரவாஹன்! நீ மகா கொடியவன்.''

''ஆனால், நான் எனது வேலையை ஒப்பற்ற திறமையோடு பூர்த்தி செய்திருக்கிறேன்.''

## 3

பிரவாஹன் இறந்து போய்விட்டான். ஆனால் அவனுடைய பிரமமும், புனர்ஜென்மம் அல்லது பிதுர்லோக யாத்திரையும், சிந்து நதியிலிருந்து சதானீரா (கண்டக்) நதி வரை வெற்றிமுரசு கொட்டிக் கொண்டிருந்தது. வேள்வியும் இப்பொழுது குறைந்துவிடவில்லை! ஏனெனில் பிர்ம ஞானிகளும் அவற்றை உற்சாகத்தோடு ஆதரிக்கிறார்கள். க்ஷத்திரிய பிரவாஹன் கண்டுபிடித்த பிர்மவாதக் கதையைப் பிராமணர்கள் கற்றுத்தேர்ந்து நிபுணர்களாகிவிட்டார்கள். குருகுலத்தைச் சேர்ந்த யக்ஞவல்க்கியன் இந்த வித்தையிலே பெரும்புகழ் படைத்துவிட்டான். வசிட்டன், விசுவாமித்திரன், பரத்துவாஜன் போன்ற வேதமந்திர கர்த்தாக்களைத் தோற்றுவித்த குருபாஞ்சாலம் இன்று யக்ஞவல்க்கியனையும், அவனைப் பின்பற்றும் பிர்மவாதிகளையும் பெற்றுப் பெருமையடைந்திருக்கிறது. பிர்மவாதிகளின் சபைகளை நடத்தி வைப்பது வேள்விகள் செய்வதைவிடச் சிறந்ததாக கருதப்பெற்றது. ஆகவே, அரசர்கள் ராஜசூயம் முதலிய வேள்விகளுடன் கூடவோ அல்லது தனியாகவோ இந்தச் சபைகளை நடத்தி வைத்தார்கள். இந்த விவாத சபையிலே

*ருக்வேதம் 6-26-25.

வெற்றி பெற்றவர்களுக்கு ஆயிரக்கணக்கான பசுக்களையும் குதிரைகளையும், அடிமைப் பெண்களையும் பரிசாகக் கொடுத்தார்கள். ஒவ்வொரு பரிசிலும் நிச்சயமாக அடிமைப்பெண்கள் இருப்பார்கள். ஏனெனில், அரசமாளிகையிலே வளர்ந்த இந்த அடிமைப் பெண்களை, பிர்மவாதிகள் அதிகமாக விரும்பினார்கள்.

பல சபைகளிலே யக்ஞவல்க்கியன் வெற்றி பெற்றிருக்கிறான். ஆனால், இப்பொழுது விதேக (திருஹூத்) அரசன் ஜனகனால் கூட்டப்பட்ட பெரிய சபையிலே மகத்தான வெற்றியைப் பெற்றான். அவனுடைய மாணக்கன் சோமஷ்ரவன் ஆயிரம் பசுக்களை ஓட்டி வரவேண்டிய நிலைமை ஏற்பட்டது. விதேகத்திலிருந்து குருபாஞ்சாலம் வரை ஆயிரம் பசுக்களை ஓட்டி வரவேண்டிய சிரமத்தை அவர்கள் ஏன் எடுத்துக் கொள்ளவேண்டும்? யக்ஞவல்க்கியன் அந்தப் பசுக்களை எல்லாம் அங்குள்ள பிராமணர்களுக்குத் தானமாகப் பகிர்ந்து கொடுத்துவிட்டான். இதனால் அவன் புகழ் இன்னும் அதிகரித்தது. தங்கம், பொற்காசுகள், அடிமைப் பெண்கள் முதலியவற்றை மட்டும் குரு பாஞ்சாலத்திற்குக் கொண்டு வந்து சேர்த்தான்.

பிரவாஹன் இறந்து அறுபது வருடங்கள் ஆகியிருந்தன. அவன் இறக்கும்பொழுது, அவனது பிரமவாதத்தின் புகழைப் பரப்பும் யக்ஞவல்க்கியன் தோன்றவில்லை, ஆனால் நூறு வயதைக் கடந்துவிட்ட லோபா, பாஞ்சாலத்தின் ராஜ உத்யான வனத்திலே வசித்துக்கொண்டிருக்கிறாள். உத்யான வனத்திலே மா, வாழை, நாவல் முதலிய மரங்களின் நிழலிலே வசிப்பதைத்தான் அவள் விரும்பினாள். உயிரோடிருந்த காலத்தில், பிரவாஹனின் ஒவ்வொரு காரியத்திலும் அவள் சண்டையே போட்டு வந்திருக்கிறாள். ஆனால் இந்த அறுபது வருட காலத்தில், அவனுடைய குற்றங்களையெல்லாம் மறந்து விட்டாள். அவளுடைய நினைவிலே நிறைந்திருப்பது, பிரவாஹனின் எல்லையற்ற காதல்தான். இன்னும் அவளுடைய கண்களிலே ஒளி இருக்கிறது. அவளுடைய புத்தி மந்தப்பட்டு விடவில்லை. பிரமவாதிகளை அவள் இன்னும் பலமாகத் திட்டிக்கொண்டுதான் இருக்கிறாள்.

ஒருநாள் பிரமவாதினி கார்க்கி, பாஞ்சாலபுரத்திற்கு வந்தாள். ராஜ உத்யானவனத்திற்குப் பக்கத்திலுள்ள ஒரு தோட்டத்தில், அவள் மிக மரியாதையாக வரவேற்கப்பட்டாள். ஜனகன் கூட்டிய அந்த மகா சபையிலே, யக்ஞ

வல்க்கீயன் தன்னை ஏமாற்றித் தோற்கடித்ததை கார்க்கி யால் மறக்க முடியவில்லை. ''இதற்குமேல் கேள்வி கேட் டால் உன் தலை அறுந்து விழுந்துவிடும் கார்க்கி'' என்று அவன் கூறினானே, இதுவும், ஒரு விவாதத்தின் தோரணையா? ஒரு கொலைகாரன்தான் இப்படிப் பேச முடியும் என்று நினைத்தாள் கார்க்கி.

கார்க்கி, லோபாவின் அண்ணன் பேத்தி. லோபாவுக்கு அவளை நன்றாகத் தெரியும். ஆயினும், அவளுடைய பிரம வாதக் கொள்கையிலே லோபா முற்றிலும் வேறுபட்ட கருத்துடையவள். இப்போது யக்ஞவல்க்கியன் வெற்றி பெறுவதற்காக உபயோகித்த தவறான ஆயுதத்தைக் கண்டு, கார்க்கி வெறுப்படைந்திருந்தாள். ஆகவே, தனது அத்தைப் பாட்டியைப் பார்க்கப் போகும்பொழுது அவளுடைய கருத்து ரொம்ப தூரம் மாற்ற மடைந்திருந்தது. தன்னைப் பார்க்க வந்த கார்க்கியைத் தழுவி, நெற்றியிலே முத்த மிட்டு, அவளுடைய சுக க்ஷேமங்களை விசாரித்தாள் லோபா.

''நான் விதேகத்திலிருந்து வருகிறேன் பாட்டி.''

''அங்கே குஸ்தி போடப் போயிருந்தாயா மகளே?''

''ஆம். குஸ்திதான் நடந்தது பாட்டி. இந்தப் பிரம வாதிகளின் சபை குஸ்தியைவிட மேலானதல்ல. குஸ்திக் காரர்களைப் போலவே, இவர்களும் எதிரிகளைத் தந்திரத் தாலும் சரீர பலத்தாலும் தோற்கடிக்கவே விரும்பு கிறார்கள்.''

''குரு பாஞ்சாலத்தின் பிரமவாதிகள் எல்லோருமே கோதாவில் குதித்திருப்பார்களே.''

''ஆம்; குரு பாஞ்சாலம் பிரமவாதிகளின் கோட்டை யாகிவிட்டது.''

''என் கண் முன்னாலேயே பிரமவாதத்தின் ஒரு சிறு கங்கு—அதுவும் நல்ல நோக்கத்தோடல்ல—பிரவாஹனின் மூளையிலிருந்து தெறித்தது. அது இப்பொழுது காட்டு நெருப்பாக மாறி, பாஞ்சாலம் பூராவையும் எரித்துவிட்ட தோடு விதேகத்தையும் எட்டிவிட்டது.''

''பாட்டி! உனது வார்த்தைகளின் உண்மை இப் பொழுதுதான் எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புலப்படு

கிறது.'' உண்மையிலேயே இது பொருள் சேர்க்கும் ஒரு பெரிய வழிதான். விதேகத்தில் யக்ஞவல்க்கியனுக்கு லட்சக் கணக்கான சொத்துக் கிடைத்தது. மற்ற பிராமணர்களுக்கும் போதுமான பொருள்கள் கிடைத்தன.

''வேள்வியைவிட இது மிக லாபகரமான வியாபாரம் மகளே! பிராமணர்களுக்கும் அரசர்களுக்கும் சுக வாழ்வை உறுதியோடு காப்பாற்றும் சக்தி வாய்ந்த படகு என்று, என் கணவன் இதை வருணிப்பான். ஜனகனுடைய சபையிலே யக்ஞவல்க்கியன் வெற்றி பெற்ருனுக்கும்! அங்கே நீ ஒன்றும் பேசவில்லையா?''

''பேச வேண்டியதில்லை என்ருல், கங்கையிலே இவ்வளவு தூரம் படகேறிச் செல்வானேன்?''

''படகுப் பிரயாணத்திலே திருடர்களோ, கொள்ளைக் காரர்களோ வழி மறிக்கவில்லையா?''

''இல்லை பாட்டி! நல்ல பாதுகாப்போடு சென்ற வியாபாரக் கூட்டங்களோடு சேர்ந்து போனேம். தனிமையில் போய் தங்கள் உயிரை ஆபத்தில் மாட்டிக்கொள்ளக் கூடிய அவ்வளவு முட்டாள்களல்ல பிரமவாதிகள்.''

''யக்ஞவல்க்கியன் எல்லோரையும் தோற்கடித்து விட்டானு?''

''அதைத் தோற்கடித்து விடுதல் என்று சொல்ல முடியாது பாட்டி!''

''அப்படியானுல் என்ன?''

''ஏனெனில் கேள்வி கேட்கிறவன் யக்ஞவல்க்கியனுடைய பதிலைக் கேட்டதும், வாய் மூடி மௌனியாகி விடுகிருன்,''

''நீ கூடவா?''

''ஆம்; நானுந்தான். என்னை விவாதத்தினுல் அல்ல, முட்டாள் தனத்தினுல் மௌனியாக்கி விட்டான்...''

''முட்டாள் தனத்தினுலா!''

''ஆம்; பிரமத்தைப் பற்றிக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தேன். யக்ஞவல்க்கியன் தப்ப முடியாதபடி என் கேள்விகளால் வளைத்துக் கொள்ளப்பட்டு விட்டான்.

அந்தச் சமயத்தில் அவனுடைய வாயிலிருந்து வந்த அந்த வார்த்தைகள்! அவனைப் போன்ற அறிவாளிகளிடமிருந்து அவ்வித வார்த்தைகள் வருமென்பதை நான் கற்பனை கூடச் செய்ததில்லை.''

''அது என்ன மகளே?''

''இதற்குமேல் கேள்விகள் கேட்டால் 'கார்க்கி உன் தலை அறுந்து விழுந்துவிடும்' என்று சொல்லி, அவன் எனது கேள்விகளைத் தடுத்து விட்டான்.''

''நீ எதிர் பார்த்திருக்கமாட்டாய் மகளே! ஆனால் இவைகள் எல்லாம் நான் எதிர்பார்த்ததுதான். யக்ஞவல்க்கியன், பிரவாஹனின் சரியான சிஷ்யன் என்பதை நிருபித்து விட்டான். பிரவாஹனுடைய இந்தப் பொய்த் தத்துவத்தைப் பூரணத்துவம் அடையச் செய்துவிட்டான். நீ மேலே கேள்வி கேட்காதது நல்லதாய்ப் போய்விட்டது மகளே!''

''ஏன்? நான் மேலே கேள்வி கேட்கவில்லை என்பது உனக்கெப்படித் தெரிந்தது?''

''எப்படியா? உன் கழுத்தின்மீது தலையிருப்பதை நான் பார்க்கிறேன் அல்லவா?''

''என்ன? நான் மேலே கேள்வி கேட்டிருந்தால் என் தலை அறுந்து விழுந்து விடுமென்று, நீயும் நம்புகிறாயா பாட்டி?''

''நிச்சயமாக. ஆனால், யக்ஞவல்க்கியனுடைய பிர்ம பலத்தினால் அல்ல; சாதாரணமாக மனிதர்களின் தலை அறுந்து விழுவதுபோல.''

''இருக்காது பாட்டி!''

''கார்க்கி! நீ இன்னும் குழந்தை. பிர்மவாதம் மனத்தின் கற்பனையென்றும், அறிவுப்போட்டி என்றும் நீ நினைக்கிறாய். இல்லை மகளே? அந்தப் பிர்மவாதத்திற்குப் பின்னே பெரிய பெரிய அரசர்களுடையவும், பிராமணர்களுடையவும் சுயநலம் மறைந்து கொண்டிருக்கிறது. இந்தப் பிர்மவாதம் பிறந்தபொழுது அதைத் தோற்றுவித்தவன் எனக்குப் பக்கத்திலே படுத்துக்கொண்டிருந்தான். அரச பதவியையும், புரோகித பதவியையும் காப்பாற்றுவதற்கு, இது ஒரு சக்தி வாய்ந்த ஆயுதம், இரும்பால் செய்யப்பட்ட

வாளாயுதத்தைப்போல் உறுதியுடையது என்று இதை வருணிப்பான் பிரவாஹன்.''

''பாட்டி! நான் அப்படிக் கருதவில்லையே?''

''நீ மட்டுமா? எல்லோருந்தான் அதைச் சரியாக உணரவில்லை. ஜனகனைப் போன்ற மகா ஞானிகள்கூட, இந்த உபநிஷதத்தின் ரகசியத்தைப் புரிந்து கொள்ளவில்லையே? ஆனால், யக்ஞவல்க்கியன் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறான். என் கணவன் பிரவாஹனைப்போல் சரியாகப் புரிந்துகொண்டவன் அவன் ஒருவன்தான். தேவதைகள், தேவலோகம், பிதுர்லோகம், வேள்வி, பிர்மவாதம் எதிலும் என் கணவனுக்கு நம்பிக்கை கிடையாது. அவனுடைய நம்பிக்கையெல்லாம், போக வாழ்க்கையில்தான். அவன் வாழ்நாளின் ஒவ்வொரு விநாடியையும், போக வாழ்விற்காகவே செலவழித்தான். அவன் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு, விசுவாமித்திர குலத்தைச் சேர்ந்த புரோகிதரின் இளங்குமரி அந்தப்புரத்திற்கு வந்தாள். தான் பிழைக்க முடியாது என்று தெரிந்திருந்தும், அந்த அழகிய யுவதியைத் தழுவிக்கொள்ள ஆசைப்பட்டான்.''

''விதேக அரசன் கொடுத்த பசுக்களை எல்லாம், யக்ஞவல்க்கியன் தானம் கொடுத்துவிட்டு, அழகிய அடிமைப் பெண்களை மட்டும் தன்னோடு கூட்டி வந்துவிட்டான் பாட்டி!''

''நான்தான் சொன்னேனே, அவன் பிரவாஹனின் பக்கா சிஷ்யனென்று. பார்த்தாயா அவனுடைய பிர்மவாதத்தை? நீ தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறாய். கிட்ட நெருங்கிப் பார்த்தால், அப்பொழுது உனக்கு உண்மை தெரியும்.''

''நான் மேலே கேள்வி கேட்டிருந்தால் என் தலை அறுந்து விழுந்துவிடுமென்று நீ உண்மையிலேயே நம்புகிறாயா?''

''ஆம்; நிச்சயமாக யக்ஞவல்க்கியனுடைய பிர்ம சக்தியினாலல்ல: உலகத்தில் எத்தனையோ பேருடைய தலை சப்தமின்றி வெட்டி விழுத்தாட்டப் படுவதைப்போல.''

''என் தலை சுழல்கிறது பாட்டி!''

''உனக்கு இன்று தலை சுற்றுகிறது. எனக்கோ அறிவு தெரிந்த நாள் முதல், தலை சுற்றிக்கொண்டிருக்கிறது. எல்

லாம் வேஷம்; யாவும் வஞ்சனே. மக்களின் உழைப்பின் பயனைச் சுரண்டிச் சாப்பிடுவதற்குச் செய்த வழிகள், இந்த அரசபதவி, பிராமணபதவி, வேள்வி, பிர்மவாதம்எல்லாம். மக்கள் தானே உணராதவரை, யாரும் அவர்களுக்கு உணர்த்தமுடியாது. அவர்கள் தானே உணரும்படி, இந்தச் சுயநலக்காரர்கள் விடமாட்டார்கள்.''

''இந்தச் சூழ்ச்சிகளிலே வெறுப்பு ஏற்படும்படி மனித இதயம் தூண்டாதா பாட்டி?''

''தூண்டும். அந்த ஒரே ஒரு நம்பிக்கை தான் எனக்கிருக்கிறது மகளே!''

---

இன்றைக்கு 108 தலைமுறைகளுக்கு முந்திய கதைஇது அப்பொழுதுதான், வேதத்தின் உபபாகமான உபநிஷதங்கள், பிர்மஞானம், இவைகள் உற்பத்தியாயின. அந்தக் காலத்தில் இரும்பு ஆயுதங்களின் உபயோகமும், நந்தவனங்கள், தோட்டங்கள் அமைப்பதும் பாரத நாட்டிலே பரவத்தொடங்கின.

# பந்துல மல்லன்

**காலம் : கி. மு. 490**

**வ**சந்தத்தின் ஆரம்ப காலம். விருட்சங்கள் யாவும் புதிய இலைகளால் அலங்கரித்துக் கொண்டிருந்தன. கடம்ப மரத்தின் புஷ்பங்கள் அவ்வனத்தில் நறுமணத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. சூரியனுடைய பிரகாசம் பொருந்திய கிரணங்கள் இங்கு நுழைவதற்கு இன்னும் வெகுநேரம் ஆகும். காய்ந்துபோன இலைகளின் சருகுகள் தரையை மூடிக் கிடந்தன. அடர்ந்த இக் கானகத்தினூடே, அச்சருகுகளின் மீது நடந்துசெல்லும் மக்களது அடிச்சுவடுகளின் சப்தம் நமக்குக் கேட்டுக் கொண்டேயிருக்கும். ஒரு பெரிய புற்றுக் குச் சமீபம் நின்ற இரு யௌவன உருவங்கள், ஆம் யுவனும் யுவதியும் அதைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தனர். யுவதியின் சிவந்த வதனத்தில் இளமை நர்த்தனம் புரிந்தது. அந்த முகார விந்தத்தின்மீது இங்குமங்கும் பரவி விரிந்து கிடந்த நெடிய கருங்கூந்தல். அவளது செம்மேனியின் சௌந்தர்யத்தை எடுத்துக் காண்பிப்பது போலிருந்தது. வாலிபன் தன்னுடைய திரண்ட கரத்தை அவளது தோளின் மீது வைத்துக் கொண்டு,

''மல்லிகா! இந்தப் புற்றைப் பார்ப்பதிலேயே ஏன் இவ்வளவு லயித்துப் போயிருக்கிறாய்?''

''இது எவ்வளவு பெரிதாயிருக்கிறது பார்த்தாயா?''

''ஆம்; மல்லிகா! சாதாரணப் புற்றுக்களைப்பார்க்கிலும் இது பெரியதுதான். ஆனால், இதைப் பார்க்கிலும் பெரிய பெரிய புற்றுக்களும் இருக்கின்றன. மழை வருஷித்ததும் இதிலிருந்து புகையும் நெருப்பும் உண்டாகும் என்று நீ நினைக்கவும் கூடும்.''

''இல்லை. அது ஒரு பொய்க்கதை என்பது எனக்குத் தெரியும் பந்துல்! எறும்புகளைப் போன்ற சின்னஞ் சிறிய இந்த ஜந்துக்களைப் பாரேன்! ரத்தம்போல் சிவந்த முகம்; வெண்மையான நிறம். சிறிய உருவமுள்ள இவைகள் இவ்வளவு பெரிய புற்றைக் கட்டியிருக்கின்றன.''

''மனிதன் கட்டும் வீட்டையும் அவனது சரீரத்தைக் கொண்டு அளந்தால் அவனைப் பார்க்கிலும் எத்தனையோ மடங்கு பெரியதாயிருக்குமல்லவா? மல்லிகா! ஒரு கரையானுடைய வேலையில்லை இது; எத்தனையோ கரையான்கள் ஒன்று சேர்ந்து செய்த வேலையின் பரிணாமமே இந்தப் புற்று. இதைப் போலவே மனிதர்களும் கூட்டாகச் சேர்ந்து தங்கள் காரியங்களைச் சாதிக்கிறார்கள்.''

''இந்தச் சிறியஜந்துக்கள் தங்களுக்குள் எவ்வளவு ஒற்றுமையா யிருக்கின்றன். அவைகளின் ஒற்றுமையே. என்னை மிகவும் ஆவலோடு பார்க்கும்படி செய்கிறது அற்பமான ஜந்துக்கள் என்று இவற்றைக் கருதுகிறார்கள். ஆனால் இவைகளுக்குள் இருக்கும் ஒற்றுமையைப் பார்த்தாயா? ஆயிரக் கணக்கில் ஒன்றுகூடி, எவ்வளவு பெரிய மாளிகையைக் கட்டுகின்றன. பந்துல்! நம்முடைய மல்ல குலத்தார், இந்தக் கரையான்களிடமிருந்தாவது பாடம் கற்றுக் கொள்ளவில்லையே என நினைக்கும் போது, என்மனம்மிகுந்த வேதனை அடைகிறது.''

''சேர்ந்து வாழ்வதில் மனிதர்களும் எந்தப் பிராணிக்கும் குறைந்தவர்களல்ல. அவர்கள் இன்று அடைந்துள்ள இந்த உயர்வான நிலைமைக்குக் காரணம் சேர்ந்து வாழும் தன்மையே பெரிய பெரிய நகரங்களையும் கிராமங்களையும் அமைப்பதில் மனிதன் வெற்றியடைந்ததற்குக் காரணம் இந்த ஒற்றுமைதான். ஆழங்காணாத சமுத்திரத்திலே கப்பலோட்டி, தீவு—தீவாந்தரங்களிலிருந்து பெருத்த நிதிக் குவியல்களைத் திரட்டிக்கொண்டு வந்து சேர்ப்பதற்குக் காரணமாயிருப்பதும் இந்த ஒற்றுமைதான். புலி, சிங்கம், காண்டாமிருகம் போன்ற துஷ்ட விலங்குகள் அவனுக்கு முன்னே தலைவணங்கி நிற்பதற்குக் காரணம் இந்த ஒற்றுமைதான்.''

''ஆனால் அவர்களுடைய பொறாமை! இந்தப்பொறாமை மாத்திரம் இல்லாவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்?''

''ஓ! உனக்கு மல்லர்களுடைய பொறாமை ஞாபகம் வருகிறதோ?''

''ஆம்; பந்துல்! நம்முடைய மல்லர்கள் ஏன் உன்மீது இவ்வளவு பொறாமைப்படுகிறார்கள்? இதுவரை நீ யாரையும் நிந்தித்ததாகவோ, தீங்கு செய்ததாகவோ நான் கேட்டது

மில்லை—பார்த்ததுமில்லை. உன்னுடைய அன்பான நடத்தையால் அடிமைகள், வேலைக்காரர்கள்கூட மகிழ்ச்சியடைகிறார்களே. அப்படியிருந்தும், அறிவாளிகளான மல்லர்கள் வெறுக்கக் காரணம் என்ன?''

''ஏனென்றால், நான் எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரனாயிருக்கிறேன். நமது சமூகத்தில் எல்லோருக்கும் நல்லவனாய் இருக்கும் ஒருவன்மீது பொறாமைப்படுபவர்கள் அதிகமாயிருக்கிறார்கள். ஏன் தெரியுமா? எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமானவன், சுலபமாக சமூகத்தின் தலைமைப் பதவியை அடைந்து விடுகிறான்.''

''உன்னுடைய நற்குணங்களைப் பார்த்து அவர்கள் சந்தோஷம் அடைய வேண்டும். தட்ச சீலத்திலே இதுவரை எந்த மல்லனுக்கும் இவ்வளவு மரியாதை கிடைத்ததாக யாரும் கேள்விப்பட்டதே கிடையாது. இன்றைக்குங்கூட அரசன் பிரசேனஜித்தன், அவனுடைய கோசல தேசத்திற்கு வந்துவிடும்படி உனக்கு ஆள்மேல் ஆள் அனுப்பிக்கொண்டிருப்பது இவர்களுக்குத் தெரியாதா?''

''தட்ச சீலத்திலே நாங்கள் இருவரும் பத்து வருஷங்கள் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தோம். என்னுடைய குணங்கள் அவனுக்கு நன்றாகத் தெரியும்.''

''குசீனாரா மல்லர்கள் உன்னுடைய குணங்களை அறியவில்லையாக்கும்! இதை நான் நம்ப முடியாது, லிச்சவி*குலத் தலைவர் இங்கு வந்து உன்னோடு தங்கியிருந்தபோது, அவர் வாயார உன்னுடைய குணாதிசயங்களைப் புகழ்ந்ததை இவர்களும் கேட்டுக்கொண்டுதானே இருந்தார்கள்?''

''மல்லிகா! என்னுடைய திறமையைத்தெரிந்து கொண்டிருப்பதினால்தான், இந்த மல்லர்கள் என்மீது பொறாமைப்பட ஆரம்பித்திருக்கிறார்கள். திறமைசாலியாகவும் எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமானவனாகவும் இருப்பதுதான். பொறாமையைத் தூண்டி விடுவதற்கு முக்கிய காரணம் என்னைப்பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால், நான் தட்ச சீலத்திலே கற்ற வித்தைகள் யாவற்றையும் இந்த மல்லர்களின் சேவையிலே உபயோகிக்க முடியாமற் போகிறதே

---

*லிச்சவி: வைசாகப் பிரதேசத்தில் வாழ்ந்த ஒரு ஆரிய வம்சம். பின்னால் கோசலம், மகதம், நேபாளம், இங்கு இவர்களுடைய ராஜ்யம் இருந்திருக்கிறது.

என்றுதான் கவலைப்படுகிறேன். கோசல அரசனும், மகத மன்னனும், வைசாலி லிச்சவியர்களைத் தங்களுக்குச் சம மாகக் கருதுகின்றனர். ஆனால்: கோசல தேசத்து அரசனை நம்முடைய குசீனாரா மல்லர்கள் தங்களுக்கு மேலானவனாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். பாவா, அனூபியா, குசீ னாரா முதலிய ஒன்பது மல்ல கணங்களையும் (சமூகம்) ஒன்றாக இணைத்து, லிச்சவியர்களைப் போன்று ஒரு பெரிய பலமுள்ள மல்ல சமூகத்தைத் தோற்றுவிக்கவேண்டும் என நான் திட்டமிட்டேன். என்னுடைய திட்டம் நிறைவேறி னால், மன்னன் பிரசேனஜித்தன் மல்லர்களை நிமிர்ந்து பார்க்கக்கூட யோசிப்பான். அது நிறைவேற முடியாமல் போகிறதே என்ற கவலைதான் எனக்கு.''

பந்துலனுடைய அழகிய முகத்திலே கவலையின் ரேகை கள் படர்வதைப் பார்த்த மல்லிகா, அவனுடைய கவ னத்தை வேறு பக்கம் திருப்ப விரும்பி,

''பந்துல்! உன்னுடைய நண்பர்கள் வேட்டைக்குப் போவதற்கு உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களே? நானும்கூட வர விரும்புகிறேன்? நடந்து போவதா, அல்லது குதிரையிலா?''

''குதிரைமீது ஏறிக்கொண்டு மரை வேட்டையாட முடியாது மல்லிகா! பாதம்வரை தொங்கும் உன்னுடைய ஆடை, மூன்று நான்கு முழதூரம் பறக்கக்கூடியமேலாடை, நிலையற்றுக் கருநாகம்போல இங்குமங்கும் ஆடிக்கொண் டிருக்கும் கூந்தல் இவைகளைக் காற்றிலே பறக்கவிட்டுக் கொண்டு, புதர்கள் நிறைந்த வனத்திலே வேட்டையாடு வதற்குக் கிளம்பிவிட்டாயா?''

''ஏன் இவைகள் உனக்குப் பிடிக்கவில்லையா?''

''எனக்கா பிடிக்காது? மல்லிகா! உன்னோடும் உன் பெயரோடும் ஒட்டியிருக்கும் எந்தப் பொருளும் எனக்கு இனியவையே. ஆனால் வேட்டையாடுவதற்குப் புதர்கள் அடர்ந்த வனத்திலே ஓட வேண்டியிருக்கும்?''

''இதோ, உனக்கு முன்னாலேயே இவைகளை வரிந்து கட்டிக் கொள்கிறேன்'' என்று சொல்லி, மல்லிகா தன் னுடைய இடுப்பு ஆடையை வரிந்து கட்டிக்கொண்டு கூந் தலைச் சுருட்டி உச்சிமீது கொண்டையாகக் கட்டிக்கொண் டாள்.

"சரி பந்துல்! என்னுடைய மேலாடையைத் தலைப் பாகையாகச் சுற்றிக் கட்டுவிடு."

அவளுடைய மேலாடையைத் தலைமீது பாகையாகக் கட்டிவிட்ட பந்துல், மார்புக்கச்சையைக் கிழித்துக் கொண்டு வெளிவர முயலும் அவளுடைய திரண்ட நிமிர்ந் திருக்கும் ஸ்தனங்களைக் காட்டி,

"மல்லிகா! உன்னுடைய இந்த ஸ்தனங்கள்...?"

"எல்லா மல்ல குமாரிகளுக்கும் இவைகள் இருக்கவே செய்கின்றன."

"ஆயினும், இவை எவ்வளவு சுந்தரமானவை!"

"அதற்கென்ன? யாரும் பறித்துக்கொண்டு போய்விடு வார்களா?"

"இல்லை, வாலிபர்களுடைய திருஷ்டி பட்டுவிடும்!"

"அவர்களுக்குத் தெரியும், இது பந்துல மல்லனுக்குச் சொந்தம் என்று."

"உனக்கு ஆட்சேபணையில்லையானால் என்னுடைய மேல் துண்டினால் உட்புறத்தில் இறுக்கிக் கட்டி விடுகிறேன்."

"ஓ! துணிகளுக்கு மேலே பார்த்ததில் உனக்குத் திருப்தி ஏற்படவில்லையா?"

புன்முறுவல் பூத்த மல்லிகா பந்துலனுடைய கன்னங் களிலே முத்தமிட்டாள். மார்புச் சட்டையைக் கழற்றிய பந்துலன், நுனிகள் லேசாகக் கருத்துக் திரண்டு நிமிர்ந் திருந்த அந்த ஸ்தனங்களை மார்போடு சேர்த்துக் கட்டிவிட் டான். மல்லிகா தன்னுடைய மார்புச் சட்டையை அணிந்து கொண்டாள்.

"இனிமேல் உனக்குப் பயமில்லையே?"

"மல்லிகா! என்னுடைய பொருளுக்கு எப்பொழுதும் ஆபத்தில்லையென்று எனக்குத் தெரியும். ஆனால், ஓடும் போது இனி அதிகமாக ஆடாதல்லவா?"

இவர்கள் இருவருடைய வருகைக்காகக் காத்திருந்த மற்ற யுவ—யுவதிகள் யாவரும் இப்பொழுது ஒன்றுகூடி விட்டனர். வில், அம்பு, பாலா முதலிய தங்கள் தங்கள்

ஆயுதங்களை ஏந்திக் கொண்டு தயாராயினர். மத்தியான நேரத்தில் மரைகள் இளைப்பாறும் இடத்தைத் தெரிந்தவன் வழிகாட்ட, அவனுக்குப் பின்னே யாவரும் நடந்தனர். நல்ல உச்சி வேளை. பெரிய விருட்சங்களின் நிழலிலேயே சில மான்கள் கூட்டமாகப் படுத்துத் தலைகளையும் காதுகளையும் ஆட்டிக் கொண்டிருந்தன. அக்கூட்டத்துக்குத் தலைமை தாங்கும் மரை மாத்திரம் நின்று கொண்டு, நாலா பக்கங் களிலும் பார்த்துக் கொண்டும், தன் காதுகளை நிமிர்த்தி சப்தத்தைக் கிரகித்துக் கொண்டும் இருந்தது. அந்தக் கூட் டத்தைப் பார்த்த இவர்கள், இரண்டு பிரிவாகப் பிரிந்தனர். ஒரு பிரிவோர் தங்களின் ஆயுதங்களைத் தயாராய் வைத்துக் கொண்டு மரங்களின் மறைவிலே உட்கார்ந்தனர். மற்றொரு பகுதியார், அந்த மரைக் கூட்டங்களைப் பின்புறமிருந்து வளைத்துக் கொள்வதற்காக இரு பிரிவாகப் பிரிந்து மெது மெதுவாகச் சென்றனர். பின்னாலிருந்து வளைத்துக்கொள்ளச் செல்லும் கோஷ்டிக்கு, எதிர்காற்று அடித்துக் கொண்டிருந் தது. ஆகவே மரைகள் மனிதர்கள் வருவதை மோப்பம் பிடிக்க முடியாமல், மான் வால் போன்ற தங்களுடைய சிறிய வாலை ஆட்டிக் கொண்டு அலட்சியமாயிருந்தன. ஆனால் இரண்டு பிரிவும் நெருங்கி வருவதற்குள், நின்று கொண்டிருந்த பெரிய மரை தன் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு, நிலையற்ற முறையில் இங்குமங்கும் வெறித்து வெறித்துப் பார்ப்பதைக் கண்ட மற்ற மரைகளும் எழுந்து விட்டன. சிறிது நேரத்தில் தங்களுக்கு ஆபத்து நெருங்கி விட்டதாகக் கருதிய அவைகள் பெரிய மரையின் பின்னே ஓடத் தொடங்கிவிட்டன. ஆபத்தை அவைகள் கண்களால் பார்க்கவில்லை. ஆதலால், இடைஇடையே தாமதித்துப் பின்னே திரும்பியும் பார்த்துக் கொண்டன. மறைந் திருந்த வேடர்களுக்குப் பக்கத்தே வந்துவிட்ட அந்த மரைகள் பின்னே திரும்பிப் பார்த்தபொழுது, பல விற்களிலிருந்து பானங்கள் தொடுத்த சப்தம் கேட்டது. பெரிய மரையைக் குறிவைத்து பந்துலன் தன் குறி தவறாத அம்பை ஏவினான். அதையே மல்லிகா முதலிய சிலரும் குறி வைத்தனர். ஆனால் பந்துலனுடைய அம்பு மாத்திரம் குறி தவறியிருந்தால் அந்தப் பெரியமரை இவர்களுக்குக் கிடைத் திருக்கவே முடியாது என்பது நிச்சயம். பெரிய மரை அதே இடத்தில் விழுந்துவிட்டது. தலைவனை இழந்த மற்றவை அங்குமிங்கும் சிதறி ஓடிவிட்டன. பந்துலன் நெருங்கிப் பார்க்கும்போது அப்பெரிய மரை தன் ஜீவனை விட்டுக்

கொண்டிருந்தது. ஆனால் அதே இடத்தில் இரண்டு மரைகளுடைய ரத்தத் துளிகளைப் பார்த்த வேடர்கள், அந்த ரத்தத் துளிகளின் தடத்தைப் பின்பற்றிச் சென்றார்கள். சிறிது தூரத்தில் மற்றொரு மரையும் விழுந்து கிடந்ததைக் கண்ட இவர்களுடைய சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. பெரிய வெற்றிக் கொண்டாட்டம். இன்றைய வனபோஜனம், இவர்களுக்கு மிகுந்த ஆனந்தத்தைக் கொடுப்பதாய் இருக்கும்.

சிலர் பெரிய விறகுக் கட்டைகளைப் போட்டு நெருப்புத் தயார் செய்தனர். பெண்கள் சமைப்பதற்குப் பாத்திரங்களை யெடுத்தனர். வாலிபர்களில் சிலர் மரைகளின் தோலை உரித்து, மாமிசத்தைத் துண்டம் துண்டமாக நறுக்க ஆரம்பித்தனர். முதலிலே நெருப்பிலே சுட்ட ஈரல் துண்டங்களையும், மதுவையும் யாவரும் ருசி பார்க்கத் தொடங்கினர். பந்துலனுடைய இரண்டு கைகளும் மாமிசத்தை நறுக்குவதில் ஈடுபட்டிருந்ததைப் பார்த்த மல்லிகா, சுடப்பட்ட ஈரல் துண்டையும் மதுவையும் தன் கையால் அவனுக்கு ஊட்டினாள்.

சமையல் இன்னும் பூரணமாக முடியவில்லை. அதற்குள் சூரியன் அஸ்தமித்து விட்டான். ஆனால் ஜோதி மயமாய் எரியும் நெருப்பின் ஒளியிலே யுவ—யுவதிகளின் ஆடல் பாடல்கள் ஆரம்பமாயின. குசீனாரா யுவதிகளின் தலைசிறந்த அழகியான மல்லிகா, வேடவேஷத்திலும் தன்னுடைய நாட்டியக்கலையின் நிபுணத்துவத்தைக் காண்பிப்பதிலே வெற்றி பெற்றாள். அகண்ட ஜம்புத்தீவின் விலைமதிக்க முடியாத இந்த ரத்தினத்தை—அழகின் வடிவத்தை அடையும் பாக்கியத்தைப் பெற்றுள்ள பந்துலனை, அவனுடைய நண்பர்கள் வாயாரப் புகழ்ந்து போற்றினர்.

## 2

குசீனாராவினுடைய சபா மண்டபத்திலே இன்று பெரிய கூட்டமாய் இருந்தது. ஜன சபையின் அங்கத்தினர்கள் எல்லோரும் கட்டிடத்திற்குள்ளே அமர்ந்திருந்தனர். பார்வையாளர்களான ஆண்களும் பெண்களும், ஏராளமாகக் கட்டிடத்திற்கு வெளியே மைதானத்தில் நின்று

கொண்டிருந்தனர். மண்டபத்தின் ஒரு கோடியில், குறிப்பிட்ட ஆசனத்தின்மீது சமூகத்தலைவன் அமர்ந்திருந்தான். அவன் எழுந்து நின்று, அங்கத்தினர்களைப் பார்த்துப் பேச ஆரம்பித்தான்.

''பூஜ்ய சபையோரே! இன்று இச்சபை கூட்டப்பட்டிருப்பதின் காரணத்தை முதலில் அங்கத்தினர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். நம்முடைய மதிப்பிற்குரிய சிரஞ்சீவி பந்துலன், தட்சசீலத்திலே யுத்தக்கலையில் தேர்ச்சி பெற்று மல்லர்களுடைய கௌரவத்தை உயர்த்தி வந்திருக்கிறான். அவனுடைய அஸ்திர வித்தையின் நிபுணத்துவத்தை குசீனராவுக்கு வெளியிலுள்ளவர்களும் போற்றிப் புகழ்கிறார்கள் என்பது சபையோருக்கும் தெரிந்ததுதான். அவன் இங்கு வந்து நான்கு வருஷங்கள் ஆகிவிட்டன. சமூகத்தின் சிறிய—பெரிய வேலைகளை, நான் என் சொந்தப் பொறுப்பில் அவனிடம் ஒப்படைத்ததுண்டு. அந்த வேலைகளை அவன் மிகுந்த ஊக்கத்தோடும் சிரத்தையோடும் பூர்த்தி செய்தான். இப்பொழுது அவனுக்குச் சமூகத்தின் ஒரு நிரந்தரமான பதவியைக் கொடுத்துக் கௌரவிக்க வேண்டும். அதற்காக, இந்தப் பிரேரணையை உங்கள் முன் கொண்டு வருகிறேன். இனி, பிரேரணையைக் கேளுங்கள்.

''பூஜ்ய சபையோரே! சிரஞ்சீவி பந்துலனுக்கு உபசேனாதிபதி பதவி அளிக்கப்படுகிறது. மரியாதை மிக்க அங்கத்தினர்களில் இதை அங்கீகரிப்போர் மௌனமாயிருக்கட்டும். அங்கீகரிக்க விருப்பமில்லாதவர் தெரிவிக்கட்டும்.''

''இரண்டாவது முறை பூஜ்ய சபையோரே! சிரஞ்சீவி பந்தலனுக்கு, உபசேனாதிபதி பதவி அளிக்கப்படுகிறது. மரியாதைமிக்க அங்கத்தினர்களில் இதை அங்கீகரிப்போர் மௌனமாயிருக்கட்டும்; அங்கீரிக்க விருப்பமில்லாதவர் தெரிவிக்கட்டும்.''

''மூன்றாவது முறை பூஜ்ய சபையோரே! சிரஞ்சீவி பந்துலனுக்கு, உபசேனாதிபதி பதவி அளிக்கப்படுகிறது. மரியாதைமிக்க அங்கத்தினரால் இதை அங்கீகரிப்போர் மௌனமாயிருக்கட்டும். அங்கீகரிக்க விருப்பமில்லாதவர் தெரிவிக்கட்டும்.''

இந்த நேரத்தில், ரோஜ்மல்லன் என்ற ஓர் அங்கத்தினன் தன்னுடைய மேல் உத்தரீயத்தை இடது தோள் பக்கம் போட்டுக் கொண்டு, மரியாதை நிறைந்த பாவத்தோடு எழுந்து நின்றான்.

தலைவர்—''மரியாதை மிக்க அங்கத்தினர் ஏதேனும் சொல்ல விரும்பினால் சொல்லலாம்.''

ரோஜ்மல்லன்—''பூஜ்ய சபையோரே! சிரஞ்சீவி பந்துலனுடைய தகுதியைப்பற்றி எனக்குச் சந்தேகம் கிடையாது. ஆனால், அவன் உபசேனாதிபதி ஆக்கப்படும் முறையையே நான் ஆட்சேபிக்க விரும்புகிறேன். யாராயிருந்தாலும், பெரிய பதவி கொடுக்கப்படும்போது, முதலில் அவர் பரீட்சிக்கப்படுவது நம்முடைய சபையின் நியமமாக இருந்து வருகிறது. சிரஞ்சீவி பந்துலனும், சபையின் இந்த நியமத்திற்கு உட்படுத்தப்பட வேண்டுமென்பது என் விருப்பம்.''

ரோஜ்மல்லன் உட்கார்ந்தவுடனே மற்றும் இரண்டு மூன்று அங்கத்தினர்கள் இதே அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். சில அங்கத்தினர்கள் பரீட்சிக்க வேண்டிய அவசியமில்லையென்றும் வாதித்தனர். கடைசியாகச் சமூகத்தலைவர் தீர்ப்புக் கூறினார்.

''பூஜ்ய சபையோரே! சிரஞ்சீவி பந்துலனை உபசேனாதிபதி ஆக்குவதற்குக் கொஞ்சம் அபிப்பிராய பேதம் இருப்பது தெரிகிறது. ஆகையால் வாக்கு (ஓட்டு) எடுக்க வேண்டியது முக்கியமாகிவிட்டது. ஓட்டுக் குச்சிகளை விநியோகிப்பவர் உங்களிடம் வந்து கொண்டிருக்கிறார். அவருடைய ஒரு கையில் சிவப்பு நிறக்குச்சிகள் உள்ள பையும், மற்றொரு கையில் கறுப்பு நிறக்குச்சிகள் உள்ள பையும் இருக்கின்றன. சம்மதம் தெரிவிப்பதற்கு அடையாளமாக உள்ளது செந்நிறக்குச்சி; இல்லை என்பதற்குக் கரிய நிறக்குச்சி. சிரஞ்சீவி ரோஜ்மல்லனுடைய அபிப்பிராயத்தை ஆதரிப்பவர்கள் கரிய நிறக்குச்சியை எடுத்துக்கொள்ள வேண்டும். என்னுடைய அசல் பிரேரணையை ஆதரிப்பவர்கள், செந்நிறக்குச்சியை எடுத்துக்கொள்ள வேண்டும்.''

வாக்கெடுப்பதற்குரிய குச்சிகளைக் கொடுப்பவன், குச்சிகளுடன் ஒவ்வோர் அங்கத்தினரிடமும் சென்றான். அங்கத்தினர் ஒவ்வொருவரும், அவரவர் விரும்பும் நிறக்குச்சி ஒன்றையெடுத்துக் கொண்டனர். அவன் திரும்பி வந்த பின் சமூகத்தலைவன் மீதமுள்ள குச்சிகளை எண்ணிப்பார்க்க சிவப்புக்குச்சிகள் அதிகமாகவும், கறுப்புக்குச்சிகள் குறைவாகவும் இருந்தன. ஆகவே கரிய நிறக்குச்சிகள் அதிகமாக எடுக்கப்பட்டிருக்கின்றன என்பது தெரிய வந்தது. சமூகத்தலைவன் தீர்ப்புக் கூறினான்.

''பூஜ்ய சபையோர்களே! கரிய நிறக்குச்சிகள் அதிகமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், சிரஞ்சீவி ரோஜ்மல்லனுடைய அபிப்பிராயத்தை ஆதரிப்பவர்களே அதிகமாயிருப்பது நிர்ணயமாகிறது. மரியாதை மிக்க அங்கத்தினர்கள் இப்பொழுது சிரஞ்சீவி பந்துலனை எவ்வித பரீட்சைக்கு உட்படுத்த வேண்டுமென்பதை முடிவு செய்யவேண்டும்.''

அதிக நேரம் வாத—விவாதங்கள் நடைபெற்றன. கடைசியாக, மரங்களில் செய்யப்பட்ட உயரமான ஏழு முளைகளை வரிசையாக நட்டு, அவைகளை வாளினால் ஒரே மூச்சில் பந்துலன் வெட்ட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இதற்காக அடுத்த ஏழாம் நாளையும் நிச்சயித்து விட்டுச் சபை கலைந்தது.

குறிப்பிட்ட தினத்தில் குசீனராவின் ஆண்களும் பெண்களும் மைதானத்தில் கூடியிருந்தனர். மல்லிகாவும் அங்கு வந்திருந்தாள். சிறிது சிறிது தூரத்தில், கடினமான ஏழு மர முளைகள் நிறுத்தப்பட்டிருந்தன. சமூகத் தலைவனின் உத்திரவைப் பெற்ற பந்துலன் தன்னுடைய வாளாயுதத்தைக் கரத்தில் ஏந்தினான். கூடியிருந்த ஜனத்திரள் இவனையே கூர்ந்து நோக்கின. பந்துலனுடைய திரண்ட கையிலிருக்கும் பலம் பொருந்திய நீண்ட வாளைப் பார்த்த ஜனங்கள், இவனுடைய வெற்றியைப் பற்றிச் சிறிதுகூடச் சந்தேகப்படவில்லை. வெண்மையாகப் பிரகாசிக்கும் அந்த வாள் ஓங்கப்படுவதையும், ஒவ்வொரு முளையும் வெட்டப்பட்டு, விழுவதையும், ஜனங்கள் கண்டார்கள். ஒன்று, இரண்டு, மூன்று இவ்விதமாக ஆறு முளைகளும் வெட்டப்பட்டு, வீழ்ந்தன ஆனால், ஆறுவது முளையை வெட்டும்போது 'கணார்' என்ற சப்தம் ஏற்பட்டதைப் பந்துலனுடைய காதுகள் கேட்டு விட்டன. அவனுடைய நெற்றி நரம்பு புடைத்து விட்டது. உற்சாகம் குன்றிவிட்டது. ஏழாவது முளையை வெட்டுவதற்கு ஓங்கிய வாளை அப்படியே நிறுத்திக்கொண்டான்! ஒரே விநாடியில், பந்துலன் வெட்டப்பட்டுக் கிடக்கும் துண்டங்களின் நுனிகளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டான். அவனுடைய உடல் துடித்தது. கோபத்தால் கண்கள் சிவந்தன. ஆனால், அவனுடைய வாய் மாத்திரம் மௌனத்தை மேற்கொண்டது.

ஏழாவது முளை துண்டிக்கப் படாமற்போனதை, சமூகத் தலைவன் ஜனத்திரளுக்குத் தெரிவித்தான். ஜனங்களின் அனுதாபம் பந்துலன் பக்கம் இருந்தது.

வீட்டுக்கு வந்த மல்லிகா, பந்துலனுடைய முகத்தில் கோபமும், துக்கமும் ஒருங்கே நடனமாடுவதைப் பார்த்தாள். உடனே தன்னுடைய விசனத்தை மறந்தவளாய், அவனை ஆஸ்வாசப் படுத்த முயன்றாள்.

"பெரிய ஏமாற்றம்! மல்லிகா! என்னை ஏமாற்றிவிட்டார்கள். பெரிய சூழ்ச்சி நடந்திருக்கிறது. நான் இதை எதிர்பார்க்கவே இல்லை."

"சூழ்ச்சியா! என்ன நடந்தது?"

"ஒவ்வொரு முளையின் நடுப்பாகத்திலும், இரும்புக்கம்பிகளை வைத்துப் பொருத்தியிருக்கிறார்கள். ஐந்தாவது முளை வெட்டப்படும் வரை நான் கவனிக்கவில்லை. ஆறாவது முளை வெட்டப்பட்டு வீழ்ந்தபோது, கணார் என்ற சப்தம் கேட்டது. சூழ்ச்சியை அறிந்தேன். இந்தச் சப்தத்தைக் கேளாதிருந்தால் ஏழாவதையும் வெட்டியிருப்பேன். ஆனால் கேட்டவுடன் என் கை எழவில்லை. மனம் என்னோடு போராட ஆரம்பித்துவிட்டது."

"இத்தனை சூழ்ச்சியா! இவ்விதம் செய்தவன் மிகப் பெரிய நீசத்தனம் படைத்தவனாய் இருக்கவேண்டும்."

"யார் இவ்விதம் செய்தார்கள் என்பது எனக்குத் தெரியாது. ரோஜமல்லன் மீது எனக்குக் கோபமில்லை, அவன் சமூகத்தின் ஒழுங்கையே தெரிவித்தான். அதிகமான பேரும் அவனை ஆதரித்தனர். ஆனால் மல்லிகா! குசீனாராவில் என்னை நேசிப்பவர்கள் அதிகமாயில்லை என்பதை நினைக்கும் போதுதான் எனக்கு மிகுந்த துக்கமாயிருக்கிறது."

"பந்துலமல்லன் குசீனாராமீது கோபம் அடைந்துவிட்டானா?"

"இல்லை மல்லிகா! குசீனாரா என் தாய். அவளுடைய மடியிலேதான் இந்தச் சரீரம் வளர்ந்தது. அவளுடைய போஷிப்பிலேதான் நான் மனிதன் ஆனேன். ஆனால், இனிமேல் நான் ஒரு கணமும் இங்கு வசிப்பதில்லை."

"குசீனாராவை விட்டு விட்டுப் போக நினைக்கிறாயா?"

"ஆம்; குசீனாராவிற்கு பந்துலமல்லன் தேவை இல்லை."

"அப்படியானால் எங்கே போக உத்தேசம்?"

''மல்லிகா! நீ என்னுடன் வருவாயா?'' பந்துலனுடைய முகத்திலே ஆவல் நிறைந்திருந்தது.

''நிழலைப்போல் உன்னைத் தொடர்வேன் பந்துல்!'' மல்லிகா பந்துலனுடைய சிவந்த கண்களை முத்தமிட்டாள். உடனே அவனது தயக்கம் விடைபெற்றுக் கொண்டது.

மல்லிகாவினுடைய கரங்களை, தன் இரு கரங்களாலும் பற்றிக்கொண்ட பந்துலன்,

''இந்தக் கரங்கள்தான் என் சக்தியின் ஊற்று. இந்தக் கரங்கள்தான் என்னுடைய பலத்தின் பிறப்பிடம். மெல்லிய இந்தக் கரங்களைப் பெற்ற பந்துலன், எந்த இடமாயிருந்தாலும் சரி, நிர்ப்பயமாகச் சஞ்சரிப்பான்!''

''பந்துல்! எங்கே போவதற்கு நிச்சயித்திருக்கிறாய்? எப்பொழுது புறப்படவேண்டும்?''

"இனிமேல் ஒரு கணமும் தாமதிக்கக் கூடாது. ஏனென்றால், முளைகளில் இரும்புக் கம்பிகள் வைத்துப் பொருத்தப்பட்டிருக்கும் விஷயம். சிறிது நேரத்தில் சமூகத் தலைவருக்கும் எட்டிவிடும். அப்பால் பரீட்சைக்கு மற்றுமொரு தினம் குறிப்பிட விரும்புவார்கள். ஜனங்களுடைய விருப்பத்தையும் மீறமுடியாது. ஆகையால் உடனே இங்கிருந்து கிளம்பி விடுவதுதான் நல்லது.''

''நடந்திருக்கும் அநியாயம்—சூழ்ச்சி அம்பலத்திற்கு வருவதை, நீ ஏன் தடுக்க வேண்டும்?''

''குசீனரா என்னைப்பற்றித் தன்னுடைய சம்மதத்தைத் தெரிவித்து விட்டது மல்லிகா! எனக்கு இனிமேல் இங்கு வேலையில்லை. குறைந்த பட்சம் இந்தச் சமயத்தில் நான் தேவை இல்லை; குசீனராவுக்குப் பந்துலனின் சேவை தேவை இருக்கும்பொழுது, அவன் எங்கிருந்தாலும் சரியே, உடனே இங்கு வந்துவிடுவான்.''

அதே நாள் இரவு, அவசியமாகத் தேவையுள்ள சாமான்களுடன் பந்துலனும் மல்லிகாவும், தாங்கள் பிறந்துவளர்ந்த பூமியைவிட்டுப் பயணமாயினர். மறுநாள் அசிரவதி (தப்தி) நதிக்கரையில் உள்ள பிராமணர்கள் வசிக்கும் மல்லக் கிராமத்தை (கோரக்பூர் பிரதேசம்) அடைந்தனர். இந்தக் கிராமத்தில் வசிக்கும் சாங்க்ருத்யப் பிராமணர்கள் தங்கள் யுத்த வித்தையின் நிபுணத்துவத்தால், மல்ல சமூகத்திலே மிகுந்த

பேர் பெற்றிருந்தார்கள். அவர்களிலே பந்துலனுக்கு நண்பர்களும் இருந்தார்களாயினும், நண்பர்களைத் தேடியா அவன் வந்திருக்கிறான்? இங்கிருந்து ஸிராவஸ்தி செல்வது அவன் உத்தேசம். மல்லக் கிராமத்திலே வைசிய (சிரேஷ்ட)சுதத்தனின் ஆட்களிருக்கிறார்கள். அவர்கள் மூலம் படகுக்கு ஏற்பாடு செய்வது சுலபமாக இருந்தது. சாங்க்ருத்யப் பிராமணர்கள் தங்கள் குல ஆசாரப்படி, ஒரு பெரிய பன்றியின் குட்டியைத் தங்கள் வீட்டின் முன்னால் கொன்று, அந்த மாமிசத்தைச் சமைத்து பந்துலனுக்கும் மல்லிகாவுக்கும் விருந்திட்டனர்.

## 3

கோசல நாட்டின் தலை நகரான ஸிராவஸ்தியில்* ராஜா பிரசேனஜித்தன் தன்னுடைய நண்பன் பந்துலமல்லனை வெகுஆடம்பரமாக வரவேற்றான். தட்சசீலத்தில் படித்துக் கொண்டிருந்த காலத்திலேயே, தான் சிம்மாசனம் ஏறியதும் பந்துலன் சேனாதிபதியாக வந்துவிட வேண்டுமென்று, பிரசேனஜித்தன் அடிக்கடி கூறுவான். அதேபோல்தான் அரசன் ஆனதும், பந்துலனுக்கு அடிக்கடி ஓலையும் அனுப்பினான். ஆனால் அந்தக் காலத்தில் மிகப் பிரபலமடைந்திருந்த கோசலம் போன்ற ராஜ்யத்தின் சேனாதிபதியாவதைப் பார்க்கிலும், மிகச் சிறிய ஜன ஆட்சியான தனது குசீனாராவின் உபசேனாதிப்பதியாவதையே பந்துலன் மிகுதியும் விரும்பினான். ஆனால் குசீனாரா அவனை அலட்சியப்படுத்தி விட்டது. ஆகையால் பிரசேனஜித்தனின் வேண்டுகோளைப் பந்துலன் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. இருந்தாலும் சில நிபந்தனைகளைப் போட விரும்பினான்.

''நண்ப! உன்னுடைய விருப்பத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் சில நிபந்தனைகள் உண்டு.''

''நண்ப பந்துல்! என்ன நிபந்தனை? சந்தோஷமாகச் சொல்.''

''நான் ஒரு மல்ல புத்திரன்.''

---

*ஸிராவஸ்தி—வடகோசலத்தில், கங்கைக் கரையின் மீதிருந்த ஒரு புராதன நகரம். இப்பொழுது இது ஸகேத—மஹேதம் என்று அழைக்கப்படுகிறது.

''எனக்கு அது தெரியும். மல்லர்களுக்கு விரோதமாகப் போகும்படி ஒருபொழுதும் உனக்கு நான் கட்டளையிட மாட்டேன்.''

''இவ்வளவு போதும்.''

''நண்ப பந்துல்! நமக்கும் மல்லர்களுக்கும் இடையே இப்போதிருக்கும் சிநேகப் பான்மையையே நிலைநிறுத்த விரும்புகிறேன். மேலும், ராஜ்யத்தை விஸ்தரிக்க வேண்டுமென்ற ஆசை எனக்குக் கிடையாதென்பது உனக்கும் தெரியும். ஒருகால் மல்லர்களுக்கு விரோதமாகப் போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமாயின், அந்தச் சமயம் நீ விரும்பும் தரப்பில் சேர்ந்துகொள்வதற்கு உனக்கு முழு உரிமையும் உண்டு. போதுமல்லவா? என்னுடைய பிரிய நண்பனுக்கு வேறு ஏதேனும் தேவையிருந்தால் தெரிவிக்கலாமா?''

''இல்லை அரசே! இவ்வளவு போதும்!''

## 4

பந்துலமல்லன் கோசல தேசத்தின் சேனுதிபதியாகி விட்டான். உற்சாகம் குன்றிய அரசன் பிரசேனஜித்தனுக்கு ஒரு பொறுப்புள்ள—திறமையான சேனுதிபதி பந்துலன் கிடைத்தது பாக்கியம் என்றே கூறவேண்டும். பிரசேன்ஜித்தனுக்கு, பந்துலன் கிடைக்காதிருந்தால், மகதர்களும் வத்ஸர்களும் இவனுடைய ராஜ்யத்தின் பெரும்பாகத்தை விழுங்கி விட்டிருப்பார்கள்.

ஸிராவஸ்தியை அடைந்த சில மாதங்களுக்குப் பிறகு, மல்லிகா கருத்தரித்திருப்பதின் அறிகுறிகள் தோன்றின. கர்ப்பவதியாய் இருக்கும் மனைவியின் ஆசையைத் தெரிந்து பூர்த்திசெய்ய வேண்டியது புருஷனின் கடமை என்று கருதிய பந்துலன் ஒருநாள்,

''மல்லிகா! உனக்கு ஏதாவது நிறைவேற வேண்டிய ஆசை இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''ஆம்; ஒரு விருப்பம் உண்டு. ஆனல் பந்துல்! அது நிறைவேறுவது கடினம்.''

''மல்லிகா! பந்துலனுக்கு அசாத்தியமானது எதுவுமில்லை. உன் விருப்பமென்ன சொல்லு.''

''அபிஷேக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்யவேண்டும்.''

''மல்லர்களுடைய புஷ்கரிணியிலா?''

''இல்லை; வைசாலியில் உள்ள லிச்சவியர்களுடைய புஷ்கரிணியில்.''

''நீ கூறியது உண்மை. உன் விருப்பம் அசாத்திய மானதுதான். ஆயினும், உன் விருப்பத்தைப் பூர்த்திசெய்ய பந்துலனால் முடியும் மல்லிகா! நாளைக் காலையில் நாம் இருவரும் ரதத்தில் கிளம்புவோம்.''

மறுநாள், வழியில் ஆகாரத்திற்கு வேண்டிய பொருள்களுடன், வில்—அம்பு, வாள் முதலிய ஆயுதங்கள் சகிதம் பந்துல மல்லனும் மல்லிகாவும் ரதத்திலே புறப்பட்டனர்.

அநேக வாரங்கள் தொடர்ந்து பிரயாணம் செய்தபின் முடிவில் ஒருநாள் பந்துலனின் ரதம் வைசாலியின் வாயிலை அடைந்தது. சில லிச்சவியர்களின் பொறாமையில் கண்களை இழந்தவனும், பந்துலனின் தோழனுமான மஹாலி என்பவன்தான். அந்த வாயிலுக்குக் காவல் தலைவனாக இருந்தான். மஹாலியைச் சந்திக்க வேண்டுமென்ற விருப்பம் பந்துலனுக்கு ஏற்பட்டதானாலும் தான் வந்திருக்கும் காரியத்திற்கு அதனால் பங்கம் ஏற்படக்கூடுமென்று கருதி, அந்த விருப்பத்தைக் கைவிட்டான்.

அபிஷேக புஷ்கரிணிப் படித்துறைகளிலே பலமான காவல் உண்டு. 999 அங்கத்தினர்களைக் கொண்ட லிச்சவியர்களின் ஜன ஆட்சி சபையில், காலியான ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினனுக்கு மட்டுமே, அதுவும் அவனது வாழ்க்கையில் அந்த ஒரே ஒரு முறை புஷ்கரிணியில் அபிஷேகம் (ஸ்நானம்) செய்வதற்குரிய பாக்கியம் கிடைக்கும். காவலாளர்கள் தடுத்தனர். பந்துலன் சவுக்கால் அடித்து அவர்களை விரட்டினான். மல்லிகா ஸ்நானத்தை முடித்துக்கொண்டாள். உடனே ரதமேறி இருவரும் வைசாலியைவிட்டுப் பயணமாயினர். காவலர்கள் மூலம் விஷயம் தெரிந்ததும், ஐந்நூறு லிச்சவியர்கள் ரதாரூடராய் பந்துலனின் ரதத்தைப் பின்பற்றினர். இதைக் கேட்ட மஹாலி தடுத்ததைக் கர்விகளான லிச்சவியர்கள் கேட்கவில்லை. பின்னே ரதச் சக்கரங்களின் தொனிகேட்ட மல்லிகா திரும்பிப் பார்த்தாள்.

''பந்துல்! அதோ நமக்குப் பின்னே அநேக ரதங்கள் வருகின்றன.''

''வந்தால் வரட்டும் மல்லிகா! அந்த ரதங்கள் யாவும் ஒரே தடத்துக்கு வந்தவுடன் எனக்குச் சொல்.''

பந்துலனுடைய ரதம் வேகமாகப் போய்க்கொண்டிருந்தது. தொடர்ந்து வந்த ரதங்கள் யாவும் ஒரே தடத்திற்கு வந்ததும் மல்லிகா தெரிவித்தாள். உடனே பந்துலன் தன்னுடைய வில்லில் நாண் ஏற்றி ஓர் அம்பு தொடுத்ததாகவும், அது ஐந்நூறு லிச்சவியர்களுடைய இடைக்கச்சைகளுக்குள்ளும் நுழைந்து மறுபுறம் போய்விட்டதாகவும், புராதன சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். அந்த லிச்சவியர்கள் நெருங்கி வந்து, பந்துலனை யுத்தத்திற்கு வரும்படி அறைகூவி அழைத்தனர்!

''உங்களைப்போல் பிணங்களோடு நான் யுத்தம் செய்வதில்லை.''

''நாங்கள் பிணமா இல்லையா என்பதை யுத்தத்தில் காட்டுவோம்.''

''நான் உங்களுக்காக இன்னும் ஓர் அம்பைச் செலவு செய்ய விரும்பவில்லை. திரும்பிப் போய் முதலில் உங்களுடைய பந்துமித்திரர்களைத் தரிசித்துக் கொண்டு, அப்பால் உங்களது இடைக் கச்சைகளைக் கழற்றுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே பந்துலன், மல்லிகாவின் கையிலிருந்த குதிரைகளின் கயிற்றை வாங்கித் தான் பற்றிக்கொண்டு, குதிரைகளை வேகமாகச் செலுத்தி லிச்சவியர்களுடைய பார்வையிலிருந்து மறைந்துவிட்டான்.

உண்மையிலேயே வீடு சென்று இடைக் கச்சைகளைக் கழற்றியவுடன், லிச்சவியர்கள் ஐந்நூறு பேரும் பிணமாயினர்.

## 5

அந்தக் காலத்தில், ஸிராவஸ்தி பாரதத்தின் மிகப் பெரிய நகரமாயிருந்தது. அரசன் பிரசேனஜித்தனுடைய ராஜ்யத்தில், ஸிராவஸ்தியைத் தவிர சாகேதம் (அயோத்தியா) வாரணசி (பனரஸ்—காசி) என்ற இரண்டு பெரிய

நகரங்களும் இருந்தன. ஸிராவஸ்தியின் சுதத்தன், மிருகாரன், சகேதத்தின் அர்ச்சுனன் போன்ற பெரிய தனவந்தர்கள், பிரசேனஜித்தனுடைய காசி-கோசல ஐக்கிய ராஜ்யத்தில் வசித்து வந்தார்கள். இந்தத் தனவந்தர்களுடைய வியாபாரக் கூட்டங்கள், பாரத தேச முழுவது மட்டுமல்ல, தாம்ரலிப்தத்தின் வழியாக வங்காள குடாக்கடலேயும், பருகச்சம் (படௌஞ்ச்) சுப்பாராக் (சோபாரா) வழியாக அரபிக் கடலேயும் தாண்டி, தூர தூர தேசங்களுக்கும் போய் வந்தன. பிராமணப் பண்டிதர்கள், க்ஷத்திரிய சேனைத் தலைவர்கள், இவர்களுக்கிருக்கும் அந்தஸ்து அந்தத் தனவந்தர்களுக்கு இல்லையானாலுங்கூட, சமூகத்தில் இவர்களும் உயர்ந்த ஸ்தானத்தையே வகித்து வந்தார்கள். ஆனால் செல்வம் சம்பந்தப்பட்ட மட்டில், இந்தத் தனவான்களுக்கு முன்னே பிராமணப் பண்டிதர்களும் சேனைத் தலைவர்களும் மிகவும் அற்பம் என்றே சொல்லவேண்டும். சுதத்தன் இளவரசன் ஜேதுவினுடைய 'ஜேதுவனம்' என்று அழைக்கப்பட்ட உத்தியானவனத்தை ஏராளமான திரவியம் கொடுத்து விலைக்கு வாங்கி, அதில் புத்தருக்காக 'ஜேதவன மடம்' என்ற மடம் ஒன்றைக் கட்டுவித்தான். மிருகாரனின் புத்திரன் பண்ட்ரவரதனுடைய விவாகத்துக்காக, தன்னுடைய பரிவாரங்களோடு சாகேதம் சென்ற அரசன் பிரசேனஜித்தன், பெண்ணின் தகப்பன் அர்ச்சுனனுடைய விருந்தினனாய்த் தங்கியிருந்தான். அர்ச்சுனனுடைய புத்திரியும், மிருகாரனின் மருமகளுமான விஸாகா தன்னுடைய முத்து மாலை விற்ற திரவியத்தைக் கொண்டு, ஆயிரக்கணக்கான அறைகளைக் கொண்டதும் ஏழு மாடிகளையுடையதுமான, ஒரு பெரிய மடத்தைக் கட்டுவித்தாள். இந்த மடம் 'பூர்வாராம் மிருகார்மாதா மடம்' என்று பிரசித்தமாக அழைக்கப்பட்டது. தேச தேசாந்திரங்களிலிருந்தும் திரவியங்கள் பெருக்கெடுத்து வந்து, இந்தத் தனவந்தர்களிடம் குவிந்து கொண்டிருக்கும்போது இவர்களுடைய செல்வச் செழிப்பைப் பற்றி வருணிக்கவா வேண்டும்!

ஜயவலி, உத்தாலக், யக்ஞவல்க்கியன் முதலியவர்கள், வேள்வி முதலிய தேவதை வணக்கத்துக்கு இரண்டாவது ஸ்தானத்தைக் கொடுத்து, உண்மையில் முக்தியடைவிக்கும் சாதனம் பிர்மவாதமே என்று நிலைநிறுத்தி விட்டார்கள். ஜனகனைப் போன்ற பெரிய அரசர்கள், மிகுந்த சன்மானங்களைக் கொடுத்து பிர்மவாதத்தைப் பற்றிச் சர்ச்சை செய்யும் பெரிய பெரிய சபைகளைக் கூட்டுவித்தார்கள்.

இதனால் வேதத்துக்கு அப்பாலும் கற்பனை செய்வதற்கு—சிந்திப்பதற்கு வழி திறக்கப்பட்டது. மேலும் தேசத்திலே சுதந்திரமான கட்டுப்பாடற்ற சிந்தனைகள், எண்ணங்கள், ஆற்று வெள்ளம்போல் பெருக்கெடுக்க ஆரம்பித்த காலம் அது. சுய சிந்தனையாளர்கள், தங்களுடைய எண்ணங்கள். சாதாரணச் சபைகளில் பொது ஜனங்களுக்கு முன்னே, வைத்தார்கள். பொது ஜனங்கள் கூடும் இந்தச் சபைகளில், பிரசங்கம் செய்யும் முறையிலோ அல்லது தர்க்கம் செய்து பேசும் முறையிலோ தங்கள் கருத்துக்களை வெளியிட்டார்கள். பல முறைகளுக்கு மக்களை மயக்கத்தில் ஆழ்த்துவதற்காகப் பிர்மவாதத்தைச் சிருஷ்டித்த பிரவாஹன், ஜீவாத்மா பரமாத்மாவின் நிலையை அடையும் பிர்ம சாட்சாத்காரத்திற்கு சந்யாசம், தியானம், தவம் முதலிய பல உபாயங்களையும் கூறியிருந்தான்.

இப்பொழுது, உபநிஷதம் கற்பித்த பிர்மவாதத்தை ஏற்றுக்கொள்ளாத பெரிய சிந்தனையாளர்களும், தங்கள் புதிய கருத்துக்களோடு சந்யாசம்,பிரமச்சரியம் முதலியவைகளையும் வற்புறுத்த ஆரம்பித்தனர். அஜித் கேசகம்பலன், உண்மையிலேயே ஒரு நாஸ்திகன். அதாவது பௌதிகவாதி. பிரத்தியட்சப் பொருள்களைத் தவிர்த்து, ஆத்மா, கடவுள் பக்தி, நித்தியத்துவம், சுவர்க்க—நரகம், புனர்ஜென்மம்முதலியவைகளில் எதையும் அவன் ஒப்புக்கொள்வதில்லை. ஆயினும், அவன் ஒரு துறவி. கடுமையான பிர்மச்சர்யத்தை அனுஷ்டித்தான். அப்பொழுது அதிகார பதவியிலிருந்த அரசர்கள் சேனைத் தலைவர்களின் அனுதாபத்தைப் பெறுவது ஒரு பக்கம் இருக்கட்டும்; அவர்களுடைய கோபத்திற்கு ஆளாகாமல் இருப்பதற்காகவாவது, அவன் தன்னுடைய பௌதிகவாதத்திற்கு 'தர்மம்', 'மதம்' என்ற புனிதப்போர்வையை மூட வேண்டியிருந்தது. மற்றும் பௌதீக வாதிகளான பிராமண லௌஹித்தியரும், ராஜவம்சத்துப் பாயாசியும், தங்களுடைய சுய சிந்தனையால் ஜனங்களிடையே நல்ல செல்வாக்கும், உயர்ந்த அந்தஸ்தும் பெற்றிருந்தார்கள். ஆனல் அவர்களுடைய பௌதிகவாதம் சமூகத்திற்கு அவ்வளவு ஆபத்தாய் இருக்கவில்லை.

பௌதிக வாதத்தின் பிரசாரம் இருந்தாலுங்கூட, அரசர்கள், சேனைத் தலைவர்கள், பெரிய தனம் படைத்த வியாபாரிகள், முதலியவர்களை, கௌதம புத்தருடைய அனாத்மவாதமே மிகவும் ஆகர்ஷித்தது. அதுவும் முக்கிய

மாக, கோசல தேசத்தில் மிகவும் பிரபலம். கௌதம புத்தர், கோசல தேசத்துக்குட்பட்ட சாக்கிய சமூகத்திலே பிறந்தவர் என்பதும் ஒரு காரணமாகும். பௌதிகவாதிகளைப்போலவே கௌதம புத்தரும், ஆத்மா, கடவுள் முதலிய எந்த ஒரு நித்திய வஸ்துவும், அதாவது அழியாத பொருள்கள் உலகத்தில் இல்லையென்றும், உலகத்தில் தோன்றும் பொருள்கள் யாவும் மறையவே செய்யும் என்றும் கூறினர். உலகம் பொருள்களின் சேர்க்கையல்ல; சம்பவங்களின் பிரவாகமே (நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியே) என்பது அவர் உபதேசம்.* ஆனால், இந்த மாதிரிக் கூறும் அநித்திய வாதத்தால், உலக சம்பிரதாயம், ஏழை-தனவான், அடிமை-எஜமான் என்ற பேதங்கள் ஆச்சல் எடுத்துவிடக் கூடும். இதனாலேயே, அஜித்தனுடைய பௌதிக வாதத்திற்கு, அரசர்கள், சேனைத் தலைவர்கள், வியாபாரிகள் முதலியவர்களுடைய ஆதரவு கிடைக்கவில்லை. ஆனால் கௌதம புத்தர், தன்னுடைய அநாத்ம வாதத்தோடு, அதாவது பௌதிக வாதத்தோடு இன்னும் சில விஷயங்களையும் சேர்த்துப் பௌதிக வாதத்தினுடைய கசப்பைப் போக்கிவிட்டார். அதாவது, அழிவற்ற ஆத்மா என்பதாக எதுவும் இல்லையானாலுங்கூட, எண்ணம்—சைதன்யப் பிரவாகமானது. சுவர்க்கம்—நரகம் முதலிய உலகங்களுக்குள்ளும், ஒரு சரீரத்திலிருந்து மற்றொரு சரீரத்துக்கும் மாறிக்கொண்டே இருக்கிறது என்றும் கௌதமபுத்தர் கூறினர். அவருடைய இந்தக் கொள்கையால், அரசன் பிரவாஹனுடைய பழைய பிர்ம வாத ஆயுதம் மறுபடியும் தோன்றுவதற்கு அஸ்திவாரம் ஏற்பட்டுவிடுகிறது. கௌதமபுத்தர் கலப்பில்லாத பௌதிக வாதத்தை மாத்திரம் பிரச்சாரம் செய்திருப்பாரானால், ஸிராவஸ்தி, சாகேதம் முதலிய நகரங்களிலிருக்கும் தனவந்த வியாபாரிகளின் பணப்பைகள் அவருக்காகத் திறந்திருக்க மாட்டாது; பிராமணப் பண்டிதர்களும், க்ஷத்திரியச்சேனைத் தலைவர்களும், அரசர்களும் கௌதம புத்தருடைய பாத கமலங்களிலே தங்களுடைய சிரத்தைத் தாழ்த்தியிருக்க மாட்டார்கள்.

கௌதம புத்தருடைய இந்தக் கொள்கைகள் ஸிராவஸ்தத்தின் உயர்ந்த குலப் பெண்களின் இதயத்தை மிகவும்

---

* அறிவாளிகளுக்கு இக்கருத்துக்கள் மிகவும் சரியென்றும், அறிவுக்கும் யுக்தி வாதத்திற்கும் பொருந்தக்கூடியதாயும் படுகிறது.

ஆகர்ஷித்து விட்டது; அரசன் பிரசேனஜித்தனின் பட்டத்து அரசி மல்லிகா தேவி, புத்த தர்மத்திலே மிகவும் ஈடுபட்டு விட்டாள். அந்த நகரத்துத் தனிகனுடைய மருமகளும் ராணிக்குச் சினேகிதையுமான விஸாகா, தன்னுடைய பக்தியின் சின்னமாக, பூர்வாராம் மிருகார்மாதா மடம் என்ற பெயரையுடைய ஒரு விசாலமான மடத்தைக் கட்டுவித்து, அதைப் புத்தருக்குத் தானமாகக் கொடுத்தாள். சேனாதிபதி பந்துலமல்லனுடைய மனைவி மல்லிகா பட்டத்து அரசியின் நெருங்கிய சிநேகிதி. ஆகவே, அரசியின் போதனையால், மல்லிகாவும் புத்தருடைய உபதேசங்களைக் கேட்பதற்குப் போய் வருவாள். கடைசியில், மல்லிகாவும் புத்தருடைய கொள்கைகளைப் பின்பற்றுபவளாக ஆகிவிட்டாள்.

மல்லிகாவினுடைய வீடு இப்போது எல்லா வைபவங்களும் பொருந்தியதாயிருந்தது. கோசலம் போன்ற பெரிய ராஜ்யத்தின் சேனாதிபதியினுடைய வீடு, எல்லா வைபவங்களும் பொருந்தியதாய் இருக்கத்தானே வேண்டும்? மல்லிகாவுக்குப் பத்துப் புத்திரர்கள். அவர்கள் யாவரும், அரசனுடைய சேனையில் பெரியபதவிகளை வகித்தனர். பந்துலமல்லனுக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. இதற்கிடையே அவனுக்குப் பல விரோதிகளும் பெருகிவிட்டனர். மற்றொரு சமூகத்தைச் சேர்ந்த ஒருவன், இவ்வளவு உயர்ந்த பதவி வகிப்பதை இங்கிருப்பவர்கள் சகித்துக்கொண்டிருப்பார்களா? பொறாமை யடைந்த இவர்கள், அரசனின் காதுகளோடு, தொடர்பேற்படுத்திக் கொண்டனர்! அரசனோ கொஞ்சம் மந்த புத்தி உள்ளவன். ''பந்துலன் தங்களைப் புத்தியில்லாதவன் என்று கூறுகிறான்'' என்று சொல்லி அவனுடைய மனத்திலே குரோதத்தை வளர்த்து விட்டனர். விஷயம் வளர்ந்துகொண்டே போயிற்று; கடைசியாக பந்துலன் ராஜ்யத்தையே அபகரித்துக் கொள்ள நினைக்கிறான் என்றும் அரசனுக்குத் தெரிவிக்கப்பட்டது. அவனும் இதை நம்பி விட்டான். பாவம், அரசன் எதிரிகளினுடைய கைகளில் விளையாட்டுப் பொம்மையாகி விட்டான்! இவைகளைப் பார்த்த பந்துலனுடைய இதயம் மிகுந்த வேதனையடைந்தது. ஒருநாள் அவன் முகவாட்ட மடைந்திருப்பதைப் பார்த்த மல்லிகா.

''பந்துல்! அதிகச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கக் காரணம் என்ன?''

''மல்லிகா! அரசன் என்மீது சந்தேகம் கொள்ள ஆரம்பித்து விட்டான்.''

"சந்தேகம் கொள்ளவா? அப்படியானால் இந்த சேனாதிபதி பதவியை விட்டுவிட்டு, நாம் நம்முடையகுசீனாராவுக்குப் போய் விடுவோம். அங்கே நமது வாழ்க்கைக்குப் போதுமான நிலபுலங்கள் இருக்கின்றன."

"அதாவது, எதிரிகளுடைய கரங்களிலே அரசனை ஒப்படைத்து விட்டுச் செல்ல வேண்டுமா? மல்லிகா! எல்லா விஷயங்களும் உனக்குத் தெரியும், மகத தேச அரசன் அஜாத சத்ரு, பல தடவைகள் காசிமா நகரத்தின்மீதுபடையெடுத்தான். ஒரு முறை அவனைக் கைது செய்து கொண்டு வந்தேன், ஆனால் நம்முடைய அரசன் பிரசேனஜித்தன், அவனைப் பெருந்தன்மையோடு விடுதலை செய்து தன் மகள் வஜ்ராவையும் அவனுக்கு விவாகம் செய்து கொடுத்து அனுப்பி வைத்தான். ஆனால் அஜாத சத்ரு, பாரததேசம் முழுமைக்கும் ஏகச் சக்கரவர்த்தியாக விரும்புகிறான். ஆகவே இந்த விவாக சம்பந்தத்தை எண்ணி அஜாதசத்ரு, மௌனமாக இருக்கக்கூடியவன் அல்ல, மல்லிகா! அவனுடைய ஒற்றர்கள் இந்த ராஜதானியில் நடமாடிக் கொண்டிருக்கின்றனர். மேலும் அவந்தி ராஜனின் மருமகன் வத்ச நாட்டரசன் உதயனுடைய நடவடிக்கைகளும் சரியில்லை. அவனும் நம்முடைய எல்லைப்புரத்தில் மிகுந்த ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதாய் அறிகிறேன். இந்த நிலைமையில் மல்லிகா! நான் ஸிராவஸ்தியை விட்டுவிட்டுச் செல்வது பெரிய கோழைத்தனம் ஆகாது?"

"ஆம், கோழைத்தனம் மட்டுமல்ல. பந்துல்! அது மித்திரத்துரோகமும் ஆகும்."

"எனக்கு என்னைப்பற்றிக் கவலை கிடையாது மல்லிகா! யுத்தத்தில் எத்தனையோ முறை சாவின் வாயிலிருந்து மீண்டிருக்கிறேன். என்னை மரணம் எந்த நேரமும் ஆலிங்கனம் செய்து கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை."

பட்டத்தரசி மல்லிகாதேவி—ஆம், ஒரு சாதாரண ஏழையின் வயிற்றில் பிறந்து, தன்னுடைய அருங்குணத்தால் பட்டத்தரசி ஆகிய மல்லிகாதேவி, இறந்துபோய் விட்டாள். அவள் இருந்திருந்தால், அரசன் பிரசேனஜித்தன் எடுப்பார் கைப்பிள்ளையாவதற்கு விட்டிருக்க மாட்டாள். எல்லைப் புறத்தில் கலகம் நடப்பதாகக் கூறி, அதைச் சமாளிப்பதற்காக, அரசன் பந்துலனுடைய மக்களை ஒரு பக்கத்திற்கு

அனுப்பி வைத்தான். அங்கு அவர்கள் வெற்றி பெற்றுத் திரும்பி வந்து கொண்டிருக்கையிலே, அவர்களை எதிர்க்கும் படி சூழ்ச்சி செய்து அரசன் பந்துலனையும் அனுப்பினான். தந்தைக்கும் மக்களுக்கும் யுத்தம்; இந்த விதமாகத் தகப்பனும் பத்து மக்களும் ஒரே காலத்தில் மடியும்படி செய்தான் அரசன். இந்தத் துக்ககரமான செய்தியைத் தாங்கிய ஓலை கைக்குக் கிடைத்தபோது, மல்லிகா கௌதம புத்தருக்கும் அவருடைய சிஷ்ய பிட்சுக்களுக்கும் போஜனம் செய்விக்கத் தயாராயிருந்தாள். அவளுடைய மருமக்கள் பத்துப்பேரும் மிகுந்த அன்போடு, பலவித ருசியுள்ள உணவைத் தயார் செய்திருந்தனர். ஓலையைப் படித்த மல்லிகாவின் இதயத்திலே நெருப்புப் பற்றியது. ஆயினும் தன்னைச் சமாளித்துக் கொண்டாள். கண்களில் கண்ணீரோ, முகத்திலே வருத்தக் குறியோ கூடத் தென்படாமல் அடக்கிக் கொண்டாள். ஓலையைத் தனது முந்தானையிலே முடிந்துகொண்டு, புத்த பகவானுக்கும் அவரது சீடர்களுக்கும் உபசாரத்தோடு அமுது படைத்தாள்.

அவர்களுடைய போஜனம் முடிந்ததும், புத்தருடைய உபதேசங்களைச் சிரத்தையோடு கேட்டாள். முடிவில் அந்த ஓலையை எடுத்து வாசித்தாள். பந்துல மல்லனுடைய குடும்பத்தாரின் மீது இடியே விழுந்துவிட்டது. மல்லிகா தைரியம் உடையவள். ஆனால் அந்த இளம் விதவையருக்குத் தைரியம் ஊட்ட புத்தர் பிரானாலும் முடியவில்லை.

நாட்கள் செல்லச் செல்ல, அரசன் பிரசேனஜித்தனுக்கு உண்மை புலனாயிற்று. மிகுந்த பச்சாதாபப்பட்டான். ஆயினும் என்ன? அரசன் தன்னுடைய மனத்திற்கு ஆறுதல் அளிக்கும் பொருட்டு பந்துலனுடைய மருமகன் தீர்க்க காராயணனைத் தன்னுடைய சேனாதிபதியாக ஆக்கினான்.

## 6

பனிக்காலம். கபிலவஸ்து* நகரத்திற்குப் பக்கத்தில் உள்ள வயல்களில் கோதுமைப் பயிர்கள், மஞ்சள் நிறக் கதிர்களை ஆட்டிக்கொண்டிருந்தன. நகரம் இன்று மிகவும் நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கங்கே தோர

*கபிலவஸ்து—கௌதம புத்தர் பிறந்த நகரம்.

ணங்கள் கட்டியிருந்தார்கள். அந்நகரத்தின் ஜன சபை மாளிகை வெகு ஆடம்பரமாக—கண்ணைக் கவரும் முறையில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மூன்று நாள் இரவு பகலாக இவ் வேலைகளிலே ஈடுபட்டிருந்த அடிமைகளுக்கு இன்றுதான் கொஞ்சம் ஓய்வு கிடைத்தது. அவர்களிற் சிலர், ஒரு வீட்டின் கோடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

''அடிமைகளாகிய நம் பிழைப்பும் ஒரு பிழைப்பா? மனிதனுகப் பிறக்காமல் ஒரு மாடாய்ப் பிறந்திருந்தாலும் நல்லது; மனிதன் என்ற உணர்ச்சியாவது இல்லாமல் இருக்கும்.''

''ஆம்; காகா! நீ சொல்வது உண்மையான பேச்சு. என்னுடைய எஜமான் தண்டபாணி நேற்று இரும்பைப் பழுக்கக் காய வைத்துக்கொண்டு என் மனைவிக்குச் சூடு போட்டு விட்டார்.''

''ஏன்?''

''ஏன் என்று அவரிடத்தில் யார் கேட்பது? அவர்கள் அடிமைகளாகிய நம்மிடையே புருஷன்—மனைவி என்ற உரிமையைக்கூட ஒப்புக் கொள்வதில்லையே. இந்த லட்சணத்தில் அவர் தன்னை ஒரு ஜைனர் என்று சொல்லிக்கொள்கிறார். கீழே கிடக்கும் ஒரு புழுவையுங்கூட மிதித்துவிடாமல் ஒதுக்குவதற்காக, நீளமான மயில் இறகுகளைத் தூக்கிக் கொண்டு அலைகிறார். என் மனைவி செய்த குற்றத்தைக் கேளேன். பல நாளாக எங்களுடைய இரண்டு வயதுப் பெண் குழந்தைக்குச் சீக்காயிருந்தது. திடீரென்று மூர்ச்சை போட்டுவிட்டதாம். பாவம், இந்தத் தகவலை எனக்குச் சொல்வதற்கு வந்திருந்தாள். இதுதான் குற்றம். அந்தக் குழந்தையுங்கூட மண்டையைப் போட்டுவிட்டது. செத்ததும் ஒரு வகைக்கு நல்லதாகத்தான் போச்சு. இருந்தால், இந்த உலகத்திலே நம்மைப் போலத்தான் அதுவும் மானம் கெட்ட வாழ்வு வாழவேண்டியிருக்கும். உண்மையிலேயே அடிமைகளுடைய வாழ்க்கை ஒரு வாழ்க்கையேயில்லை. இது மட்டுமா? அந்தக் கொலைகாரப் பாவி, இந்த கொண்டாட்டம் முடிந்ததுமே என் மனைவியையும் விற்றுவிடப் போகிறுராம்.''

''காய்ந்த இரும்பினுல் சூடு போட்டது கூட, அந்தப் பாவிக்குத் திருப்தியைக் கொடுக்கவில்லையா?''

"இல்லை, காகா! என்னுடைய குழந்தை சாகாமல் இருந்திருந்தால் இன்னும் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு அவருக்கு ஐம்பது பொற்காசுகள் கிடைத்திருக்குமாம். நாங்கள்தான் வேண்டுமென்றே அவருக்கு வரும் வரும்படியில் மண்ணை அள்ளிப் போட்டுவிட்டோமாம்."

"நாமோ அடிமைகள், நமக்குத் தாய்—தகப்பன் என்ற வாஞ்சையும் இருக்கும் என்பதையே அவர்கள் நினைப்பதில்லையே!" இதற்கிடையில் ஒரு கிழ அடிமை குறுக்கிட்டுப் பேசினான்.

"இவ்வளவு தடபுடல் செய்கிறார்களே வரவேற்பதற்காக; அவரும் நம்மைப்போல ஒரு தாசியின் மகன்தானே!"

"தாத்தா! யார் அது?"

"அவர்தான் இங்கே வரப்போகிறவர்; கோசல தேசத்து இளவரசர் விதூடபன்."

"ஆம்; சாக்கிய குலத்து மஹாநாமருடைய அந்தக் கிழத்தாசியை நீங்கள் பார்த்ததில்லையா? நம்மைப்போலக் கருப்பாயிருக்கவில்லை அவள். யார் கண்டது, யாராவது சாக்கியருடைய வீரியத்திற்குப் பிறந்திருக்கலாம்."

"அடேயப்பா, நம்முடைய பெண்கள் என்றால்தான் அவர்களுக்குக் கேள்வி கேட்பாடே இல்லையே."

"அந்தத் தாசி வயிற்றிலே மஹாநாமருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது, நல்ல சிவப்பு நிறம். ரொம்ப அழகு. பார்த்தால் சாக்கியக் குலத்துப் பெண்களைப் போலவே இருக்கும்."

"ஏன் இராது? தாசிக்குப் பிறந்திருந்தாலுங்கூட, பெண் குழந்தைகளை, அதுவும் அழகாயிருந்து விட்டால், நம்ம எஜமான்கள் ரொம்பப் பிரியமாக வளர்ப்பார்களே."

"கோசல தேசத்து அரசர் பிரசேனஜித்தர், சாக்கிய குலத்திலே ஒரு பெண்ணை விவாகம் செய்துகொள்ள விரும்பினார். ஆனால் சாக்கியர்களிலே யாரும், தங்கள் பெண்ணைக்

கொடுக்க விரும்பவில்லை. சாக்கியர்கள், தங்களை மூன்று லோகத்தார்களுக்கும் உயர்ந்தவர்களாகக் கருதுகிறவர்கள் அல்லவா? ஆனால் பெண் கொடுக்க முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லவும் இவர்களால் முடியவில்லை. அரச கோபத்திற்கு ஆளாக வேண்டி வரும். இதனால் மஹாநாமர் தன்னுடைய தாசிக்குப் பிறந்த இந்தப் பெண்ணை, சாக்கிய குலத்துப் பெண் என்று சொல்லி ஏமாற்றி, ராஜா பிரசேன ஜித்தனுக்கு விவாகம் செய்து கொடுத்தார். அந்தப் பெண்ணின் மகன்தான் இன்றைக்கு இங்கே வரப்போகிற இளவரசர் விதூடபன்.''

''சாக்கியர்களைப் போலவே, அவரும் இப்பொழுது நம்மை நசுக்குவார்!''

மேள தாளங்கள் முழங்கின. தாசி புத்திரன் என்று உள்ளுக்குள் வெறுப்பிருந்தால்கூட, சாக்கியர்கள் கோசல தேசத்து இளவரசனை வெகு விமரிசையுடன் வரவேற்றனர்.

இளவரசன் விதூடபன், தன் தாய் குலத்தோர் தனக்களித்த வரவேற்பை அகமகிழ்ந்து ஏற்றுக்கொண்டதோடு, மஹாநாமருடைய ஆசீர்வாதங்களையும் பெற்றுக்கொண்டு சந்தோஷமாக அவர்களிடம் விடைபெற்று கபிலவஸ்துவிலிருந்து பயணமானான்.

ஒரு தாசிமகனுடைய பாதங்கள் பட்டுவிட்டதால், ஜன சபை மண்டபத்தின் புனிதத்தன்மை கெட்டுவிட்டது. ஆகவே சுத்தம் செய்ய வேண்டியது முக்கியமல்லவா? அநேக அடிமைகள் ஆசனங்களை விளக்கிக் கழுவிச் சுத்தம் செய்வதில் ஈடுபட்டிருந்தனர். இந்த வேலை செய்து கொண்டிருந்தவர்களில் ஒரு கிழவி, விளக்கும்போதே விதூடபனைக் கண்டபடி திட்டிக் கொண்டிருந்தாள். விதூடபனுடைய சேனை வீரன் ஒருவன், தன்னுடைய ஈட்டியை மண்டபத்திலே மறந்து வைத்துவிட்டான். அதையெடுப்பதற்காகத் திரும்பி வந்த அவன், இந்தக் கிழவி அரசகுமாரனைத் திட்டுவதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டான். மெதுவாக, இங்கு நடந்த எல்லா விஷயங்களும் இளவரசன் விதூடபனுக்கு எட்டியது. அவனுக்குச் சாக்கியர்கள் மீது அடங்காத கோபம் உண்டாயிற்று. கபிலவஸ்துச் சாக்கியர்களை அழித்து விடுவது என்று சங்கல்பம் செய்துகொண்டான். பிற்காலத்தில் இதைச் செய்தும் முடித்தான். இளவரசனுடைய

கோபத்திற்கு மற்றொரு இலக்கு அரசன் பிரசேனஜித்தன்; தாசியினுடைய வயிற்றிலே தான் பிறக்கும்படி செய்தவன் அந்த அரசன்தானே?

தீர்க்க காராயணன் தன்னுடைய மாமனும், மைத்துனர்களும் அரசனால் ஏமாற்றிப் படுகொலை செய்யப்பட்டதை மறக்கவே இல்லை. அவனால் மறக்கவும் முடியாது. விருத்தாப்பிய தசையிலே தான் செய்த குற்றங்களுக்காகப் பச்சாத்தாபப்பட்ட பிரசேனஜித்தன், எல்லோரிடமும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு அதிக நம்பிக்கையும் அன்பும் காட்ட ஆரம்பித்தான். ஒரு நாள் மத்தியான வேளை.போஜனத்தை முடித்துக் கொண்ட அரசனுக்குக் கௌதம புத்தருடைய ஞாபகம் வந்தது. கொஞ்ச தூரத்தில் சாக்கியர்களுடைய ஒரு கிராமத்தில் அவர் இருப்பதாகத் தெரிந்த அரசன் பிரசேனஜித்தன், உடனே சேனைத்தலைவன் தீர்க்க காராயணன் இன்னும் சிலசேனை வீரர்கள், ராணிகள் சகிதம் அந்தக் கிராமத்திற்குப் பயணமானான். புத்தர் தங்கியிருந்த மாளிகைக்குள் நுழையும்பொழுது, தன்னுடைய ராஜ மகுடம், வாள் முதலிய ராஜ சின்னங்களை தீர்க்க காராயணனிடம் கொடுத்து வெளியில் நிறுத்திவிட்டு உள்ளே சென்று புத்தருடைய உபதேசத்திலே ஈடுபட்டு விட்டான். ஆனால் தீர்க்க காராயணனோ ஏற்கனவே இளவரசன் விதூடபனோடு உறவு வைத்திருந்தானுகையால், உடனே ராணியை மட்டும் அந்த இடத்திலே நிறுத்திவிட்டு அரச சின்னங்களோடு ஸிராவஸ்தி நகரை அடைந்து விதூடபனைக் கோசல தேசத்திற்கு அரசன் என்று விளம்பரப்படுத்தினான்.

கௌதம புத்தருடைய உபதேசத்தில் வெகு நேரம் திளைத்திருந்த அரசன் பிரசேனஜித்தன் வெளியே வந்தான். அவனைக் கண்டவுடன் ராணி விம்மிவிம்மி அழுதுகொண்டே விஷயத்தைக் கூறினாள். தன் மருமகன் மகத தேசாதிபதி அஜாத சத்ருவின் உதவியை நாடி ராஜகிருகத்தை நோக்கி நடந்தான். இவ்வளவு விருத்தாப்பியதசையில் பலவாரங்கள் நடந்ததால் அவனுடைய சரீரம் பலம் இழந்துவிட்டது. நகர எல்லையை அவன் அடைந்தபோது சூரியன் அஸ்தமித்து விட்டான். நகர வாசலும் சாத்தப்பட்டிருந்தது. வாசலுக்கு வெளியே உள்ள ஒரு குடிசையில் தங்கிய பிரசேனஜித்தன், அந்த இரவே இறந்து போய்விட்டான். மறுநாள் காலையில் ராணியினுடைய அழுகைச் சப்தம் கேட்டு, அஜாதசத்ருவும் வஜ்ராவும் ஓடி வந்தனர். பாவம், உயிர் நீத்துக்கிடக்கும்

அந்தக் கட்டையை ஆடம்பரமாகத் தகனம் செய்வதைத் தவிர இனி வேறு என்ன செய்ய முடியும்?

ஆம்; இது பந்துலனின் கொலைக்குப் பழி; அடிமைத் தனத்தை அங்கீகரித்த தீயசெயலின் விளைவு.

---

இது இன்றைக்கு 100 தலைமுறைகளுக்கு முந்திய சரித்திரக் கதை. அந்தக் காலத்திலே பலவித வேற்றுமைகளும் விரோதங்களும் மலிந்துவிட்டன. தனம்படைத்த வியாபாரி வர்க்கம், சமூகத்தில் பிரபலமான ஸ்தானத்தைப் பெற்றுவிட்டது. மோட்சத்திற்கு மார்க்கத்தைக் கூறுபவர்களும், நகரத்திலிருந்து மீட்பவர்களுமாகப் பல வழி காட்டிகள் தோன்றியிருந்தனர். ஆனால் கிராமங்கள் தோறும் அடிமை வாழ்வு என்ற நரகாக்னி சுடர் விட்டெரிவதைப் பார்த்தும் அதைப் பொறுத்தவரை எல்லோரும் கண்ணை மூடிக் கொண்டேயிருந்தனர்.

# நாகதத்தன்

காலம் : கி.மு. 335

"எது சரி என்பதைப்பற்றி நாம் யோசிக்க வேண்டும் விஷ்ணுகுப்த! மனிதர்களாகப் பிறந்திருக்கும் நமக்குச் சில கடமைகளும் இருக்கின்றன. ஆகையால் நாம் எது சரி என்பதைத் தீர்மானிக்க வேண்டும்."

"ஆம்; கடமைதானே நமது தர்மம்."

"தர்மம்! அது ஓர் ஏமாற்று என்றே நான் நினைக்கிறேன். பிறருடைய உழைப்பின் பலனை அபகரிப்பவர்கள் அமைதியோடு அந்தப் பொருள்களை அனுபவிப்பதற்குச் சந்தர்ப்பம் கொடுப்பதற்காகவே இந்தத் தர்மம் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. தரித்திரர்களைப் பற்றியோ, பலவீனர்களைப்பற்றியோ இந்தத் தர்மம் எப்பொழுதாவது சிந்தித்திருக்கிறதா? விரிந்த இந்த உலகத்திலே தர்மத்தை அங்கீகரிக்காத மனித ஜாதியே கிடையாதென்று சொல்லலாம். ஆனால் அவர்கள் அடிமைகளும் மனிதர்கள்தான் என்று எப்பொழுதாவது நினைத்ததுண்டா? சரி, அடிமைகள் இருக்கட்டும்; குலப்பெண்கள் விஷயத்தை எடுத்துக் கொள்வோம். அவர்களைப்பற்றி இந்தத் தர்மம் நியாயம் வழங்கியிருக்கிறதா? தனம் மட்டும் இருந்தால் போதும்; ஒன்று இரண்டல்ல, நூறு பெண்களைக்கூட ஒரு மனிதன் விவாகம் செய்து கொள்ளலாம்! இந்தப் பெண்களுடைய வாழ்க்கை, அடிமைகளைப் பார்க்கிலும் உயர்ந்ததாகவா இருக்கிறது? ஆனால் தர்மம் இதை அங்கீகரிக்கிறது. சரி என்ற சொல்லுக்கு மதம் சொல்லும் பொருளை நான் கொள்ளவில்லை. களங்கமற்ற மனிதமனம் கொள்ளும் பொருளையே நான் ஏற்கிறேன்."

"ஆனால் எது தேவையோ, அதையே சரி என்று நான் கூறுகிறேன்."

"அப்படியானால் விஷ்ணுகுப்த? சரி, தவறு என்ற பேதமே இருக்க முடியாதே?"

"பேதம் இருக்கவே செய்யும் நாகதத்த! தேவையென்று நான் சொல்லும்பொழுது, தனிப்பட்ட ஒருவனுடைய தேவையை நான் குறிப்பிடவில்லை.''

''கொஞ்சம் விளக்கமாகச் சொல் விஷ்ணுகுப்த!''

"நம்முடைய இந்த தட்சசீலம் — காந்தாரத்தையே எடுத்துக் கொள்வோம்; நமக்குநமது சுதந்திரம் மிகப்பிரிய மானது; அந்த விருப்பம் சரியானதுங்கூட, ஆனால் நம் முடைய தேசம் மிகச்சிறியது. ஒரு பெரிய எதிரியை எதிர்த்து நிற்க முடியாது. நமது எல்லைப்புறத்தில், மத்ரம், மேற்குக் காந்தாரம், போன்ற சிறிய சிறிய ஜன ஆட்சி நாடுகள் இருந்தவரை, நாம் நிம்மதியாக இருந்தோம். அவர்களோடு எப்போதாவது சண்டைகள் ஏற்படுவதும் உண்டு. ஆனால், அதன் விளைவு சிலருடைய மரணம்தான். நம்முடைய சுதந்திரத்தைப் பறித்துவிடவில்லை. தட்சசீல மென்ற முள் நிறைந்த உணவை ஜீரணிப்பது யாருக்கும் சுலபமல்ல, ஆனால் ஈரானியப் பாரசீகர்கள் நமது மேற்கு எல்லையை அடைந்துவிட்ட பொழுது நம்முடைய சுதந்திரம் அவர்களுடைய தயவைப் பொறுத்ததாய் விட்டது. இப் பொழுது நமது சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்குத் தேவை எது? பாரசீகர்களைவிடப் பலசாலிகளாவதுதான்.''

''பலசாலிகளாவதற்கு நாம் என்ன செய்யவேண்டும்?''

''இனிமேல் இந்தச் சிறிய சிறிய ஜன ஆட்சி உபயோகப் படாது! இந்தச் சிறிய சிறிய ஜன ஆட்சிகளை ஒன்றுசேர்த்து ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டும்.''

''இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தில் சேரும் சிறிய சிறிய ஜன ஆட்சிகளின் ஸ்தானம் என்ன?''

''அவைகள் தங்கள் தனித்துவத்தை மறந்துவிடாது.''

''இது தகிடுதத்தமான சொல் விஷ்ணுகுப்த! எஜமான னுக்கும் அடிமைக்கும் உள்ள தொடர்பில் தனித்துவம் இருக்க முடியுமா?''

''நாகதத்த! ஸ்தானம் கிடைப்பது ஆசையையோ அல்லது அபிப்ராயத்தையோ, பொறுத்ததல்ல; தகுதியைப் பொறுத்தது. தம்முடைய தட்சசீல—காந்தாரத்திற்குத் தகுதியிருக்குமானால், அந்தச் சாம்ராஜ்யத்தில் அது ஓர் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கும். இல்லையானால், அதற்குக் கிடைப்பது சாதாரண இடந்தான்.''

''ஆம்; அடிமை ஸ்தானம்.''

''தாராயோஷினுடைய ஆட்சியில் அடங்கி விட்ட மேற்குக் காந்தாரத்தின் நிலையைவிட, அந்த அடிமை ஸ்தானம் உயர்ந்ததாயிருக்கும், நாகதத்த! என்னுடைய யோசனை இருக்கட்டும்; இனிமேல் நாம் இவ்விதம் சிறிய சிறிய சமூகங்களாகப் பிரிந்திருந்து நம்முடைய சுதந்திரத்தைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது என்பது நிச்சயமாகத் தெரிகிறதல்லவா? அப்படியானால் நம்முடைய சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்கு என்ன செய்யவேண்டும் நீயே சொல்?''

''நாம் நமது ஜன ஆட்சியின் சுதந்திரத்தைக் காப்பாற்ற வேண்டும். எந்த ஒரு அரசனுடைய ஆதீனத்தையும். ஏற்றுக் கொள்ளக் கூடாது. சிறிய சிறிய உருவத்திலிருந்துகொண்டு இனிமேல் நாம் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். இதற்காக, நாம் பஞ்சாபைச் சேர்ந்த எல்லாச் சிறிய ஜன ஆட்சிகளையும் ஒன்று சேர்த்து, ஓர் ஐக்கிய சங்கத்தை ஸ்தாபிக்க வேண்டும்.''

''அந்த ஐக்கியத்தில் சேர்க்கப்படும் ஒவ்வொரு ஜன ஆட்சியும், சுதந்திரமுள்ளதாய் இருக்குமா அல்லது சங்கத்தின் அதிகாரந்தான் எல்லாவற்றையும்விட உயர்ந்ததாய் இருக்குமா?''

''நம்முடைய ஜனசபை, தனி மனிதர்களுக்கெல்லாம் மேலாக இருப்பதைப்போல, காந்தாரம், மத்ரம், மல்லவம், ஸிவி முதலிய தனித்தனி ஜன ஆட்சிகளுக்கும் மேலானது அந்தச் சங்கம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.''

''எப்படி ஒப்புக்கொள்ளச் செய்வது? மற்றும் வெளிச் சத்துருக்களிடமிருந்து இந்த ஜன ஆட்சிகளைக் காப்பாற்றுவதற்கு, அந்தச் சங்கம் இராணுவம் வைத்துக்கொள்ள வேண்டுமல்லவா? இந்த இராணுவச் செலவிற்காக வரி வசூலிக்கவும் வேண்டுமே?''

''இப்பொழுது எப்படி ஜனசபை மக்களிடமிருந்து அவைகளைப் பெறுகிறதோ, அதேபோல, அந்தச் சங்கம் அதிலுள்ள அரசுகளிடமிருந்து அவற்றைப் பெறவேண்டும்.''

''இந்த ஜன ஆட்சி, வெகுகாலமாகத் தொடர்ந்து இருந்து வருகிறது. அதிலுள்ள ஒவ்வொருவரும் ஒரே குலத்

தைச் சேர்ந்தவர்கள். சமூகத்திலுள்ள ஒவ்வொரு நபரும் புராதன காலத்திலிருந்து ஜன ஆட்சியின் விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடந்து வருகிறார்கள். ஆனால், இப்போது நீ கூறும் சங்கம் புதியது. அதில் ஒரே ரத்தக்கலப்புடையவர்கள் இருக்கமாட்டார்கள். நீண்ட காலமாகத் தங்களுக்குள் சண்டையிட்டு வந்திருக்கும் பல குலத்தவர்களும் இருப்பார்கள். அவர்கள் எல்லோரையும் சங்கத்தின் விதிகளுக்குக் கட்டுப்படச் செய்வதெப்படி? நண்ப! நீ காரிய சாத்திய மான வழியிலே யோசித்தால், இந்த மாதிரி திட்டத்தைப் புகுத்தமாட்டாய். எல்லா ஜன ஆட்சிகளையும் நிர்ப்பந்தப் படுத்தினாலொழிய சங்கத்தின் விதிகளை ஏற்றுக் கொள்ளும்படி செய்ய முடியாது. அப்படி நிர்ப்பந்தப்படுத்தும் சக்தி எங்கிருந்து வரும்?''

''அவைகளிடமிருந்தே அந்தச் சக்தியை நாம் உற்பத்தி செய்ய வேண்டும்.''

''அவைகளிடமிருந்தே அந்தச் சக்தி தோன்றினால் நல்லதுதான். ஆனால், பாரசீகர்களின் தாக்குதலைப் பல முறை சகித்துக்கொண்ட நாம், அந்தச் சக்தி நம்முள்ளிருந்தே தோன்றாது என்பதைப் பார்த்தோம். ஆகவே, அது எங்கிருந்து உற்பத்தியாக முடியுமோ, அங்கிருந்துதான் உற்பத்தி செய்யவேண்டும்.''

''அதற்காக ஒரு அரசனுடைய ஆட்சியை ஒப்புக் கொண்டாவதா?''

''தட்சசீலத்திற்காக மட்டுமல்ல; நம்மைப்போல் பல ஜன ஆட்சிகளுக்கும் சேர்ந்து ஒரு அரசனை—சக்கரவர்த்தியைக் கூட ஒப்புக்கொள்வது குற்றமாகாது.''

''அப்படியானால், பாரசீக தாரயோஷையே நாம் ஏன் ராஜாவாக ஒப்புக் கொள்ளக்கூடாது?''

''தாரயோஷ் நம்முடையவனல்ல, நாம் பாரத தேச வாசிகள் என்பது உனக்குத் தெரியும்.''

''அப்படியானால் நந்தனை?''

''வடக்கிலுள்ள தனித்தனி ஜன ஆட்சிகளைச் சேர்த்துஒரு சங்கமாக ஆக்க முடியாதென்றால் நந்தனை அரசனாக ஏற்றுக் கொள்வதில் தவறொன்றுமில்லை. மேற்குக் காந்தாரத்தைப் போல் நாமும், தாரயோஷுக்கு அடிமையாவது நல்லதா

அல்லது நம்முடைய பாரதநாட்டின் சக்கரவர்த்தி ஒருவனுக்கு அடிமையாயிருப்பது நல்லதா?''

''விஷ்ணுகுப்த! நீ அரசனுடைய ஆட்சியைப் பார்த்ததில்லை. பார்த்திருந்தால், அங்கு பொதுஜனங்கள் அடிமைகளை விட உயர்ந்த நிலையில் வாழவில்லை என்பது உனக்குத் தெரியவரும்.''

''ஆம்; நான் மேற்குக் காந்தாரத்தைத் தவிர, வேறு எந்த அரசனுடைய நாட்டையும் மிதித்ததில்லை. ஆனால், தேசங்களைச் சுற்றிப் பார்க்கவேண்டுமென்ற ஆசை நிறைய இருக்கவே செய்கிறது. ஆயினும், உன்னைப்போல் இடை இடையே ஊர் சுற்றிக் கொண்டிராமல், கல்வியைத் தொடர்ந்து கற்று முடித்துவிட ஆசைப்பட்டேன். இதனால் அந்நிய நாட்டார்களுக்கு அடிமையாகும் வெறுக்கத்தக்க நிலையிலிருந்து தப்ப வேண்டுமானால், சிறிய சிறிய எல்லைகளை உடைத்து ஒரு பெரிய அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்ற—எனது கருத்திலே மாற்றம் எதுவும் ஏற்பட்டுவிட முடியாது. கோரேஷ், தாரயோஷ் இருவருடைய வெற்றிக்கும் இதுதான் முக்கிய காரணம்.''

''அவர்கள் எவ்வளவு தூரம் வெற்றியடைந்திருக்கிறார்களென்பதை நான் நெருங்கிப் பார்க்க விரும்புகிறேன்.''

''நெருங்கிப் பார்க்கவா?''

''ஆம்; கிழக்கே நான் மகதம் வரை போய்ப் பார்த்திருக்கிறேன். நந்தனுடைய ராஜ்யத்தை நமது தட்சசீலத்தோடு ஒப்பிட்டோமானால், அதை ஒரு நரகமென்றேதான் சொல்ல வேண்டும். நந்தனுடைய ராஜ்யம், பலமுள்ளதாய் இருப்பதென்னவோ உண்மைதான். ஆனால் அந்தப் பலம் ஏழைகளை நசுக்குவதற்காக, உழைப்பாளிகள், விவசாயிகள் தொழிலாளிகள், அடிமைகள் இவர்களின் தரித்திர வாழ்க்கையை வருணிக்கவே முடியாது.''

''நந்தனுடைய ராஜ்யத்தில் தட்சசீலத்தைப் போல தன்னம்பிக்கை உள்ளதும, சுதந்திர ஆர்வம் உள்ளதுமான ஒரு ஜன ஆட்சி இணைந்திருக்காமையால்தான், இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது.''

''இணைந்திருக்கிறது விஷ்ணுகுப்த! லிச்சவியர்களுடைய ஜன ஆட்சி நமது தட்சசீலத்தைவிடப் பலம் பொருந்தியதாய் இருந்தது. ஆனால், இன்று அந்த வைசாலி

மகதத்தின் பாதங்களில் அடிமையாகிக் கிடக்கிறது. மகத வேடர்களின் பலம் பொருந்திய நாய்கள்தான் லிச்சவியர்கள். அந்த வைசாலி நகரத்தைப் போய்ப் பார். இன்று அது பாழ்பட்டுக் கிடக்கிறது. கடந்த நூற்றைம்பது வருடங்களிலே, அதனுடைய ஜனத்தொகை மூன்றில் ஒரு பங்காகக் குறைந்துவிட்டது! நூற்றுக் கணக்கான வருடங்களாகத் தேடிச் சேர்த்த அவர்களுடைய தன்னம்பிக்கை உணர்ச்சியும், சுதந்திர ஆர்வமும் இப்பொழுது மகத ராஜ்யத்தின் படை வீரர்கள் ஆவதற்கே உபயோகமாகிறது. ஒரு பெரிய ராஜ்யத்தினிடம் ஒருமுறை தன்னை ஒப்புவித்து விட்டால் பிறகு அதனுடைய பிடியிலிருந்து விடுபடுவது சுலபமல்ல.''

''நண்ப! நானும் உன்னைப் போலவே ஒரு காலத்தில் எண்ணியிருந்தேன். ஆனால் சிறிய சிறிய ஜன ஆட்சிகளினுடைய யுகம் முடிந்துவிட்டது. பெரிய ஜன ஆட்சிகளையோ, சங்கங்களையோ அமைப்பது வெறும் கனவு. ஆகையால், காலத்தின் தேவைக் கேற்பச் சரியானதைச் செய்ய வேண்டுமென்று நான் கருதுகிறேன். நல்லது, நீ இப்பொழுது மேற்கே கிளம்பப் போகிறாயா?''

''ஆம்; முதலில் பாரசீகர்களுடைய தேசத்திற்கு, பிறகு முடிந்தால் கிரேக்க நாட்டையும் பார்க்கவேண்டும் என்று விரும்புகிறேன். நம்மைப் போலவே கிரேக்க நாட்டிலும், ஜன ஆட்சிகள் இருக்கின்றவாம். அந்த ஆட்சிகள் இந்தச் சக்தி சாலியான தாரையோஷையும், அவனதுமுன்னோர்களையும் அவர்கள் விரும்பியவாறு வெற்றியடைய முடியாதபடி எப்படித் தடுத்தன என்பதனையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அங்குள்ள நிலைமையை நேரில் பார்க்க விரும்புகிறேன்.''

''நல்லது நண்ப! நானும் கிளம்புகிறேன். கிழக்கே சென்று, அகில பாரதத்தையும் ஒன்றுசேர்க்கும் சக்தி மகதத்திற்கு இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். புறப்படு. நாம்—கல்வி கற்றுத்தேர்ந்த நாம், பணம், சம்பாதிப்பதிலும் குடும்பத்தைக் காப்பாற்றுவதிலும் காலத்தைச் செலவிடாமல், இந்தக் காரியத்தைச் செய்து முடிப்போம். நண்ப! நீ வைத்திய சாஸ்திரத்தையும் கற்றுக் கொண்டிருக்கிறாய். நானும் அதைக் கற்றுக் கொள்ளவில்லையே என்று வருத்தப்படுகிறேன். பிரயாணம் செய்பவர்களுக்கு அது மிகவும் உபயோகமான கலை.''

''ஆனால், நீ தான் சோதிட சாஸ்திரத்தையும், குடில நீதியையும் கற்றுக் கொண்டிருக்கிறாயே?''

''உனக்குத் தெரியும். அவைகள் பொய்க் கலைகள்.''

''விஷ்ணுகுப்த சாணக்கியனுக்கு, பொய்யையும் மெய்யையும் பற்றிக் கவலை கிடையாது என்பது எனக்குத் தெரியும். அவனுக்கு எது தேவையோ, அதுதான் சரி.''

ஒன்றாகப் படித்து, ஒன்றாக விளையாடிய நாகதத்த காப்பியனுக்கும், விஷ்ணுகுப்த சாணக்கியனுக்கும், மாணவ வாழ்க்கையின் கடைசிச் சந்திப்பு அது. பலமுறை பாரசீகர்களின் தாக்குதலுக்கு உள்ளான தட்சசீலத்தின் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காக, இருவரும் தங்கள் தங்கள் கருத்துகளுக்கு ஏற்ற முறையிலே வழி கண்டு பிடிக்க முயன்றார்கள்.

## 2

நாலா பக்கமும் மரங்களோ செடி கொடிகளோ காண முடியாத வரண்ட குன்றுகள், பசுமையைத் தேடிக் கண்கள் அலையும் பாலைவனம். புல் பூண்டே இல்லாத அந்தப் பாலை வெளியின் ஓரத்தில் இருந்த பாதையிலே, எப்பொழுதும் ஜன நடமாட்டம் இருந்துகொண்டே இருந்தது. பிரயாணிகளும் அவர்களுடைய மிருகங்களும் தங்குவதற்காக அங்கங்கே பிரயாண விடுதிகள் கட்டப்பட்டிருந்தன. அக்கம் பக்கத்திலுள்ள பூப் பிரதேசத்தைப் பார்க்கும்போது, இந்தப் பிரயாண விடுதிகளிலே வசிப்பதற்குத் தேவையான வசதிகள் கிடைக்கும் என்று நம்பவே முடியாது. இந்தப் பாலைவனத்திலே, இவ்வளவு பொருள்களும் எங்கிருந்து வந்தன என்று நமக்கு ஆச்சரியமாகவே இருக்கும். பிரயாண விடுதிகள் யாவும் ஒரே மாதிரியானவை அல்ல. சில அரசாங்க அதிகாரிகளும் சேனை வீரர்களும் தங்குவதற்காக உள்ளவை. சில, வியாபாரிகள் தங்குவதற்காக. ஒவ்வொரு இடத்திலும், அரசனும் அவனது பரிவாரமும் தங்கும்மாளிகை குறைந்தது ஒன்றாவது இருக்கும். இன்று அந்தத் தங்கும் இடத்தின் அரச மாளிகையில் யாரோ தங்கி இருக்கிறார்கள். குதிரை லாயத்தில் குதிரைகள் கட்டப்பட்டிருக்கின்றன. அடிமைகளும் வேலைக்காரர்களும், இங்கும் அங்கும் ஓடியாடித் திரிந்தார்

கள். ஆனால், அவர்களுடைய முகங்களிலே கவலைக்குறி காணப்பட்டது. இவ்வளவு மனிதர்களின் புழக்கமிருந்தும், அந்த அரச மாளிகையில் ஆச்சரியப்படக்கூடிய மௌனம் குடிகொண்டிருந்தது. அரச மாளிகைக்குள்ளிருந்து பரபரப்போடு வெளியே வந்த மூன்று அரசாங்க உத்தியோகஸ்தர்கள் சாதாரண வியாபாரிகள் தங்கும் விடுதிக்குள் நுழைந்தனர். அவர்களுடைய விலை உயர்ந்த ஆடைகளையும் கம்பீரத்தையும் பார்த்ததும் அங்கிருந்தவர்கள் பயத்தோடும் மரியாதையோடும் எழுந்து நின்றனர். அவர்களிடம் அங்கு யாராவது வைத்தியர்கள் இருக்கிறார்களா என்று அந்த உத்தியோகஸ்தர்கள் விசாரித்தார்கள். முடிவில் மற்றொரு பிரயாண விடுதியில் ஒரு ஹிந்து வைத்தியர் தங்கி இருப்பதாகத் தெரியவந்தது. அந்தப் பிரதேசத்தில், மழை பெய்வது மிகவும் அபூர்வம். மேலும், மழை காலமும் எப்பொழுதோ முடிந்துவிட்டது. ஆப்பிள், திராட்சை, தர்பூஜா முதலிய விலை குறைந்த பழங்கள், அந்த விடுதிகளிலே விற்பனையாகிக் கொண்டிருந்தன. அரச ஊழியர்கள் மூவரும் ஹிந்து வைத்தியர் இருக்கும் இடத்திற்குச் சென்றபொழுது, அவர் ஒரு பெரிய தர்பூஜா பழத்தை நறுக்கித் தின்று கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில், அவரைப் போலவே பிச்சைக்காரர்கள் மாதிரி உடை உடுத்திக்கொண்டிருந்த ஈரானியர்கள் பலர் உட்கார்ந்திருந்தனர். அவர்களுக்கு முன்னாலும் தர்பூஜாப் பழங்கள் இருந்தன.

அரச ஊழியர்களைப் பார்த்ததும், அந்தப் பிச்சைக்காரர்கள் பயந்து நாலாபக்கமும் ஓடிவிட்டனர். அங்கேயே நின்றுகொண்டிருந்த ஒருவரைச் சுட்டிக்காட்டி, "சுவாமி! இவர்தான் ஹிந்து வைத்தியர்" என்று அவர்கள் கூட வந்தவன் சொன்னான்.

வைத்தியனுடைய கிழிந்த துணியைப் பார்த்த அவர்களுக்கு முதலில் அருவருப்புத் தோன்றியது. ஆனால் அவனுடைய முகத்தைப் பார்த்தபொழுது அந்த முகத்திற்கும் கந்தல் துணிகளுக்கும் சம்பந்தமில்லை என்பது தெரிந்தது. அந்த முகத்திலே, பயத்தின் சின்னமோ, ஏழ்மையின் ரேகையோ காணப்படவில்லை. அந்த நீலநிறக் கண்களின் ஒளி, உத்தியோகஸ்தர்களின் மனத்திலே ஒரு மரியாதையை உண்டாக்கிற்று. அவர்களுடைய நெற்றிச் சுருக்கங்கள் மறைந்துவிட்டன. மரியாதை தொனிக்கும் குரலில்,

"நீங்கள் தான் வைத்தியரா?" என்று கேட்டார்கள்.

''ஆம்.''

''எங்கிருந்து வருகிறீர்கள்?''

''தட்சசீலம்.''

தட்சசீலம் என்ற பெயரைக் கேட்ட உடனேயே அந்த அரச ஊழியர்கள் இன்னும் அதிகமான மரியாதை செலுத்த ஆரம்பித்தனர்.

''எங்கள் மகாராணி—சக்கரவர்த்தியின் சகோதரி நோயுற்றிருக்கிறார். அவருக்குத் தாங்கள் வைத்தியம் செய்ய முடியுமா?''

''ஏன் முடியாது? நான் ஒரு வைத்தியன்.''

''ஆனால் உங்களுடைய இந்த உடைகள்...''

''வைத்தியம் செய்ய வேண்டியவன் நான்தான். இந்த உடைகள் அல்ல.''

''ஆனாலும் இவைகள் மிகவும் அழுக்காயிருக்கின்றன.''

''இன்றைக்கு இதை நான் மாற்றியிருக்க வேண்டியவன், கொஞ்சம் நில்லுங்கள், இதோ வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி வைத்தியர் முந்தியதைப்போல் அவ்வளவு அழுக்கில்லாத ஒரு கம்பளி உடையை உடுத்திக் கொண்டு, மருந்துப் பொட்டலங்கள் நிரம்பிய ஒரு தோல் பையைக் கையில் எடுத்துக்கொண்டு, அவர்களோடு புறப்பட்டார்.

இதுவும் யாத்திரா விடுதி என்று சொல்லப்பட்டாலும் இதன் முன்னால் கழுதைகளின் லத்தியோ, பிச்சைக்காரர்களின் கூட்டமோ காணப்படவில்லை. இங்கு எல்லாம் சுத்தமாகவும் ஒழுங்காகவும் இருந்தன. மாளிகையின் வாயிற்படியில் அழகிய கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. இதே மாதிரி மாளிகைக்குள்ளும் வேலைப்பாடமைந்த கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. வாசலில் மெல்லிய படுதா தொங்கவிடப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தே பளிங்குக் கற்களில் செய்யப்பட்ட உருவங்களைப்போல், அழகிய பெண்கள் நின்றுகொண்டிருந்தனர். வாசலை அடைந்ததும், வைத்தியனை அவ்விடத்தே நிறுத்திவிட்டு, ஒருவன் ஒரு அழகியின் காதருகே ஏதோ சொன்னான்; அவள் மெதுவாகக் கதவைத் திறந்தாள். மத்தியில் படுதா தொங்கவிடப்பட்டிருந்ததால், உள்ளே நடப்பது என்ன என்று தெரியவில்லை.

சிறிது நேரத்தில் திரும்பி வந்த அழகி, வைத்தியனைத் தன்னுடன் வரும்படி அழைத்தாள்.

உள்ளே நுழைந்ததும் அறை பூராவும் நிறைந்திருந்த நறுமணம் அவனை வரவேற்றது. அவன் நாலா பக்கங்களிலும் தன் பார்வையைச் செலுத்தினான். அந்த அறை அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கு விரித்திருந்த கம்பளம், படுதாக்கள், மெத்தைகள், சிலைவிளக்குகள், படங்கள், உருவச்சிலைகள், யாவும் இன்றுவரை வைத்தியன் பார்க்காத அழகுடையதாய் இருந்தன. எதிரே சுவரோரமாக ஒரு பெரிய மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. அதிலே கிடந்த இரண்டு மூன்று திண்டுகளில் ஒன்றின்மீது சாய்ந்து கொண்டு நடுத்தர வயதுள்ள ஓர் ஆடவன் உட்கார்ந்திருந்தான். அவனுடைய காதுவரை நீண்டு அடர்த்தியாயிருந்த மீசையிலே ஆங்காங்கே நரை மயிர்கள் தென்பட்டன. அவனுடைய சாம்பல் நிறமான பெரிய விழிகளில் துக்கக் குறி படிந்திருந்தது. அவனுக்குப் பக்கத்திலே, ஓர் இணையற்ற அழகிய யுவதி அமர்ந்திருந்தாள். அவளுடைய சரீரம் நிறத்தினால் மட்டுமல்ல, மிருதுத் தன்மையினாலும் வெண்ணெயை வென்றுவிட்டது. அந்த வெள்ளிய கன்னங்களிலே சிறிது செந்நிறமும் காணப்பட்டது. மெல்லிய உதடுகளின் பிரகாசமான சிவப்புக்கு கிளிமூக்கின் செந்நிறமும் இணையாக மாட்டாது. வில்லைப் போன்ற வளைந்த அவளது புருவங்களிலே, மிருதுவான ரோம ரேகை காணப்பட்டது. அவளது காதளவோடிய கடலினும் பெரிய கண்கள் கலங்கியிருந்தன. தங்கத்தின் நுண்ணிழையைக் கொண்டு தலைமீது அலங்கரித்திருப்பதைப் போன்று காட்சியளித்தது அவளது கூந்தல். தோளையும் சேர்த்து மூடியிருந்த பச்சைநிற மார்புச் சட்டையும், மெல்லிய செந்நிற லுங்கியும் அணிந்திருந்தாள். அந்த மென்மையான அழகு உருவத்திற்கு, முத்துக்களும் ரத்தினங்களும் இழைத்த ஆபரணங்கள், வெறும் சுமையாகவே தோன்றின. இவ்விருவரையும் தவிர அவர் அறையிலே இன்னும் சில அழகிகள் இருந்தனர். அந்தகளுடைய முகத் தோற்றத்தையும், பணிவான நடத்தையையும் பார்த்த வைத்தியர் அவர்கள் அரசனுடைய அந்தப்புர வேலைக்காரிகள் என்பதைத் தெரிந்து கொள்ள நேரமாகவில்லை.

ஆசனத்தில் அமர்ந்திருந்த அந்த அரசன், தனக்கு முன்னே நின்ற வைத்தியனை உச்சிமுதல் உள்ளங்கால்வரை

கூர்ந்து நோக்கினுன். அவனுடைய நீலநிறவிழிகள், வைத்தியனுடைய கம்பீரமான தோற்றத்திலே லயித்துவிட்டன. தன்னுடையதைப் போன்ற சிறந்த ஆடைகளை அணிவித்தால், பெர்ஸபோலி நகரத்தின் அழகிய வாலிபர்களில் சிறந்தவனுக அவன் காட்சியளிப்பான் என்று, அரசனுடைய மனம் எண்ணிற்று. மிகுந்த விநயபாவத்தோடு அரசன்,

"தாங்கள் தட்சசீலத்தின் வைத்தியரா?"

"ஆம் அரசே!"

"என்னுடைய மனைவி மிகுந்த நோயுற்றிருக்கிருள். நேற்றிலிருந்து அவளது நிலைமை ரொம்பவும் மோசமாகி விட்டது. எங்கள் வைத்தியர்கள் இருவருடைய மருந்துகளும் பலனளிக்கவில்லை."

"மகாராணியைப் பரீட்சித்த பின்பு, தங்கள் வைத்தியர்களோடு பேச விரும்புகிறேன்."

"நல்லது. அவர்கள் இங்கே தயாராய் இருப்பார்கள். நீங்கள் உள்ளே போய்ப் பார்க்கலாம்."

வெண்மை நிறச் சுவரோடு சுவராகக் காட்சியளித்த வெள்ளைப் படுதா விலக்கப்பட்டவுடன் உள்ளே செல்வதற்கு வழி தெரிந்தது, அரசனும் அவனது இளங்குமரியும் முன்னே செல்ல, அவர்கள் பின்னே வைத்தியன் நடந்தான். உள்ளே. யானைத் தந்தங்களைக் கால்களாக உடைய ஒரு கட்டிலில் விரிக்கப்பட்டிருந்த வெண்மையான மெத்தையின் மீது நோயாளி படுத்திருந்தாள். அவளுடைய மேனி, வெண்மை நிறத் தோலால் மூடப்பட்டிருந்தது. முகம் பட்டும் திறந்திருந்தது. அரசன் வந்ததைப் பார்த்ததும் வேலைக்காரிகள் ஒதுங்கி நின்றனர். வைத்தியன், அரசியை அருகில் சென்று பார்த்தான். அவளுடைய முகத் தோற்றமும் சமீபத்தில் நிற்கும் யுவதியின் முகத்தோற்றமும் ஒரேமாதிரியாய் இருந்தது ஆனல், யுவதியின் முகத்தில் இளமை ததும்பியது. அரசியின் வதனத்தில் நடுத்தர வயதின் கம்பீரத் தோற்றம் பரவியிருந்தது. மற்றும், நீண்டநாள் வியாதியால் அந்த முகம் கொஞ்சம் விகாரமடைந்திருந்தது. அவளது சிவந்த உதடுகள், இப்போது வெளிறிப்போயிருந்தன, செழித்த கன்னங்களின் தசை வற்றிச் சுருங்கி இருந்தது, கண்கள் குழிவிழுந்து மூடிக்கிடந்தன. ஆனலும், வில்லையொத்த புருவங்கள் மாத்திரம் அப்படியே இருந்தன, நெற்றி

சுருங்கல் விழுந்து பிரகாசத்தை இழந்திருந்தது. அரசன் அவள் முகத்தருகே குனிந்து,

''அப்ஷா!'' என்றான்.

நோயாளியின் கண்கள் சிறிது திறந்து, மறுபடியும் மூடிக்கொண்டன.

''மயக்கம்; லேசான மயக்கம்'' என்று கூறிய வைத்தியன், அரசியின் கைகளை யெடுத்து நாடியைப் பரிசோதித்தான். மிகமிக மெதுவாக, நாடி அடித்துக் கொண்டிருந்தது. சரீரம் ஏறக்குறையக் குளிர்ந்துவிட்டது. அரசன் வைத்தியனுடைய முகமாற்றத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். வைத்தியன் சிறிது நேரம் யோசித்து விட்டு,

''கொஞ்சம் திராட்சை ரசம் வேண்டும்; அதுவும் ரொம்பப் புளித்ததாயிருந்தால் நல்லது,''

இந்தப் பிரயாண காலத்திலுங்கூட, அரசனிடம் இந்தப் பொருளுக்குக் குறைவில்லை. ரத்தத்தைப்போன்ற திராட்சை ரசம் நிறைந்த ஒரு தங்கக் கிண்ணம், வைத்தியனுக்கு முன்னே வைக்கப்பட்டது. ஒரு பொட்டலத்தைத் திறந்து, அதிலுள்ள மருந்தை தன்னுடைய நகத்தால் சிறிதளவே எடுத்துக் கொண்ட வைத்தியன், அரசியின் வாயைத் திறக்கும்படி அரசனிடம் கூறினான். அரசியின் வாயைத் திறப்பதற்கு அரசனுக்குச் சிரமமே இருக்கவில்லை. உடனே அந்த மருந்தை வாயில் போட்டுக் கொஞ்சம் திராட்சை ரசத்தையும் ஊற்றினான். நோயாளியின் தொண்டையிலே மருந்தும் திராட்சை ரசமும் இறங்குவதைப் பார்த்த வைத்தியன் சந்தோஷம் அடைந்தான். அவன் அரசனிடம்,

''அரசே! இனி நான் தங்கள் வைத்தியர்களுடன் பேச விரும்புகிறேன். இன்னும் சிறிது நேரத்தில், மகாராணி கண் விழித்துக் கொள்வார். அப்பொழுது திரும்பவும் இங்கு வரவேண்டி யிருக்கும்'' என்று சொல்லிவிட்டு, அடுத்த அறையில் இருந்த பாரசீக வைத்தியர்களோடு கலந்து பேசினான். நகரிலிருந்து புறப்படும்போது ஆரம்பித்திருந்த சாதாரணக் காய்ச்சலிலிருந்து இன்றைய நிலைமை வரை எல்லா விஷயங்களையும் அவர்கள் இவனுக்குச் சொன்னார்கள். இந்தச் சமயத்தில், மகாராணி அரசனை அழைப்பதாக வேலைக்காரி வந்து கூறியவுடன், அரசனுடைய சந்தோஷத்திற்கு அளவே இல்லை. வைத்தியனும் அரசரும், அரசிக்

குச் சமீபமாகச் சென்றனர். ராணியின் கண்கள் பூரண மாகத் திறந்திருந்தன. முகத்திலும் ஜீவகளை அரும்பித் தெரிந்தது. அரசி மெதுவாக, ஒடுங்கிய குரலில் அரசனிடம் பேச ஆரம்பித்தாள்.

''நீங்கள் கவலைப்படுவது எனக்குத் தெரிகிறது. நான் இனிமேல் பிழைத்துக் கொள்வேன். எனது சரீரத்திலே சக்தி பெருகுவதாக உணருகிறேன்.''

''அப்ஷா! இதே விஷயத்தைத்தான் இந்த ஹிந்து வைத்தியரும் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.''

ஆவலோடு முகத்தைத் தூக்கிய மகாராணி,

''எனக்கு என்ன நோய் என்பது ஹிந்துவைத்தியருக்குத் தெரியும். என்னுடைய நோய் குணமாகிவிட்டது. அப்படித் தானே வைத்தியரே?''

''ஆம்; உங்கள் நோய் தீர்ந்துவிட்டது. ஆயினும் மகாராணி கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும். பெர்ஸபோலிக்குப் பயணமாவதற்கு உங்களை எவ்வளவு சீக்கிரம் தகுதியாக்க முடியும் என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். என்னிடத்தில் அற்புதமான மருந்து கள் இருக்கின்றன. அவைகள் பாரத நாட்டு மருந்து கள். கொஞ்சம் திராட்சை ரசமும் மாதுளை ரசமும் தாங்கள் சாப்பிட்டு வரவேண்டும்.''

''வைத்தியரே! நீங்கள் நோயைச் சரியாகக் கண்டுபிடிக் கிறீர்கள். மற்றவர்கள் இருக்கிறார்களே கழுதைகள். நீங்கள் சொல்கிறபடியே நான் நடந்துகொள்வேன். ரோஸனா!''

உடனே அந்த யுவதி பக்கத்திலே வந்து, ''அம்மா!'' என்றாள்.

''உன் கண்கள் ஏன் கலங்கியிருக்கின்றன? கண்ணே! அந்த வைத்தியர்கள் இதுவரை என்னைக் கொன்றே இருப் பார்கள். ஆனால், இனிப் பயப்பட வேண்டியதில்லை. இந்த ஹிந்து வைத்தியரை நம்முடைய கடவுள் அஹுரா—மஜ் தாவே அனுப்பியிருக்கிறார். அவருக்கு எந்தக் குறைவும் இல்லாமல் கவனித்துக் கொள்ளவேண்டும். வைத்தியர் கூறுகிறபடி, என்னுடைய பத்தியங்களை நீயே தயாரித்துக் கொடு.''

வைத்தியன், ரோஸனுவிடம் அரசிக்குக் கொடுக்க வேண்டிய பத்தியத்தைப் பற்றித் தெரிவித்துவிட்டு வெளி யில் வந்தான். அரசனுடைய முகம் சந்தோஷத்தால் மலர்ந் திருந்தது. மருந்துகள் வைத்து மடிக்கப்பட்டிருந்த சில பொட்டலங்களை அரசனிடம் கொடுத்த வைத்தியன், தன்னுடைய வாசஸ்தலத்திற்குப் போவதற்கு ஆயத்தமா ஞன். அதைப் பார்த்த அரசன்,

''தாங்கள் எங்களோடு இங்கேயே தங்கியிருக்க வேண்டும்.''

''ஆனல் அரச சபையின் சம்பிரதாயங்கள் எனக்குத் தெரியாது அரசே!''

''ஆயினும் மனிதனுக வாழ்வதற்குரிய வழிகளைத் தாங் கள் நன்ருக அறிந்திருக்கிறீர்கள். சம்பிரதாயங்கள் தேசத் திற்குத் தேசம் மாறுபட்டிருக்கும்.''

''என்னுடைய நடவடிக்கையால், தங்களது வேலையாட் களுக்குச் சிரமமாயிருக்கலாம்.''

''வைத்தியரே! எனக்குப் பக்கத்திலேயே உங்களுக்கு ஒரு தனி அறை தரச் செய்கிறேன். நீங்கள் எங்களோடு தங்கினல் எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியாயிருக்கும்.''

''உங்கள் வைத்தியர்கள் நோயைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நான் இரண்டு மணிநேரம் தாமதித்து வந் திருந்தால், நிலைமை கைகடந்து போயிருக்கும். இப் பொழுது வியாதி முற்றிலும் தீர்ந்து விட்டதென்றே நீங்கள் நம்பலாம்.''

அரசனுடைய வேண்டுகோளுக்கிணங்க வைத்தியனும் அங்கேயே ஒரு தனி அறையில் தங்கினன்.

நான்காவது தினத்திலிருந்து அரசி எழுந்து நடமாடத் தொடங்கினுள். ஒவ்வொரு நாளும் அவளுடைய முகத்தில் ஜீவகளை அதிகரித்துக்கொண்டு வந்தது. எல்லோரையும் விட, அதிக மகிழ்ச்சியடைந்தவள் ரோஸனுதான். மறு நாளே அரசனல் கொடுக்கப்பட்ட மிக விலையுயர்ந்த மெல் லிய ஆடைகளை எடுத்து வந்து அவற்றைத் தன் கையாலேயே வைத்தியனுக்குக் கொடுத்தாள். அந்த ஜரிகைக் கரையிட்ட ஆடைகளிலே காட்சியளித்த வைத்தியன், பிச்சைக்காரர் களுக்கு மத்தியிலே உட்கார்ந்து தர்பூஜாப் பழத்தைத் தின்று கொண்டிருந்த மனிதனுகவே இல்லை.

அரசி இப்பொழுது சிறிது சிறிதாக ஆகாரமும் உட்கொள்ள ஆரம்பித்தாள்; ஆறும்நாள், அரசி வைத்தியனை அழைத்து வரச் செய்தாள். அவனைப் பார்த்த அவளுக்கு அடையாளமே தெரியவில்லை. முதலில் தன் மருமகன் வருவதாகவே கருதினாள்! சமீபத்தில் வந்ததும் வைத்தியரை உட்காரச் சொல்லி,

''வைத்தியரே! நான் தங்களுக்கு மிகுதும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த ஜன சஞ்சாரமற்ற பாலைவனத்திலே என்னைக் காப்பாற்றுவதற்கு, கடவுள்தான் தங்களை அனுப்பியிருக்கிறார். தங்களுடைய தேசம் எது?''

''தட்சசீல நகரம்.''

''தட்சசீலாமா? அந்தப் புகழ்பெற்ற நகரம் கலைகளின் பிறப்பிடம்; நீங்கள் அதன் ரத்தினம்.''

''இல்லை, மகாராணி! அந்தப் புகழ் வாய்ந்த நகரத்தில், நான் ஒரு சர்வ சாதாரணப் புதிய வைத்தியன்.''

''வைத்தியரே! தாங்கள் ஓர் இளைஞர். ஆயினும், இளமைக்கும் திறமைக்கும் விரோதம் கிடையாது. தங்களுடைய பெயர்?''

''நாகதத்த காப்பியன்.''

''பூராப் பெயரையும் சொல்வதற்கு எனக்குக் கஷ்டமாயிருக்கும். ஆகவே, 'நாக' என்று கூறினால் போதுமா?''

''போதும் மகாராணி!''

''தாங்கள் இனிமேல் எங்கே செல்ல உத்தேசம்?''

''முதலில் பெர்ஸபோலி.''

''அப்பால்!''

''பிரயாணம் செய்வதற்கும், தேசங்களைச் சுற்றிப் பார்ப்பதற்கும் ஆசைப்பட்டே நான் வீட்டை விட்டுக் கிளம்பினேன்.''

''நாங்களும் பெர்ஸபோலிக்குத்தான் போகிறோம். தாங்களும் எங்களுடனே வரலாம். உங்கள் தேவைகளை எல்லாம் நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். ரோஸனா, நீதான் வைத்தியருடைய சௌகர்யத்தைக் கவனித்துக் கொள்ள

வேண்டும். வேலைக்காரர்கள் ஒருவேளை பராமுகமாக இருந்து விடலாம்.''

''அம்மா! நானே பார்த்துக் கொள்கிறேன். சோபியாவை அவருக்குப் பணிவிடை செய்வதற்கு நியமித்திருக்கிறேன்.''

''கிரேக்க சோபியாவா? அண்ணன் எனக்காக அனுப்பியிருந்தானே அவளா?''

''ஆம்; அம்மா! அவள் உனக்குச் செய்யவேண்டிய வேலை ஒன்றுமில்லையல்லவா? மேலும், அவள் கெட்டிக்காரியாகவும் சுறுசுறுப்புள்ளவளாகவும் இருக்கிறாள். ஆகையினால், அவளையே அவருடைய பணிவிடைக்கு நியமித்திருக்கிறேன்.''

''வைத்தியரே! தாங்கள் எங்கள் கூடவே பெர்ஸபோலிக்கு வருவீர்களல்லவா? தங்களுடைய மனத்திற்கு விரோதமாக நடந்துகொள்ள மாட்டேன். ஆனால், நீங்கள் எங்கள் குடும்ப வைத்தியராய் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.''

நாகதத்தன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, தன் அறைக்குப் போய்விட்டான்.

## 3

உலகத்திலே புகழ்பெற்ற ஒரு ராஜ்யத்தின் தலைநகரம் பசுமையும் செழுமையுமில்லாத மொட்டைக் குன்றுகளின் மத்தியிலே, இயற்கைத்தாயின் தரித்திரவடிவமாய் விளங்குமென்று நாகதத்தன் கற்பனைகூடச் செய்யவில்லை. பெர்ஸபோலி மிகப் பெரிய நகரம். ராஜமாளிகையின் பிரகாசம் பொருந்திய பெரிய பெரிய தூண்களையும், ஆகாயத்தோடு அளாவிய அதன் சிகரங்களையும் பார்த்த உடனேயே, சக்கரவர்த்தியின் செல்வத்தையும் செல்வாக்கையும் புரிந்துகொள்ளலாம். நகரின் அமைப்பும் அதேபோல் சிறந்து விளங்கின. ஆனால், இவைகள் யாவும் மனிதக் கைகளால் செய்யப்பட்டவை. இயற்கைத்தேவி வேண்டுமென்றே அந்தப் பிரதேசத்தைத் தரித்திரமாக ஆக்கி இருக்கிறாள்.

பெர்ஸபோலி நகரையும் சக்கரவர்த்தியின் வைபவத்தையும் பார்ப்பதற்கு, சக்கரவர்த்தியின் சகோதரி அப்ஷாவின் துணையைவிடச் சிறந்த சாதனம் வேறு எங்கே கிடைக்கப் போகிறது? பெர்ஸபோலிக்கு வந்தபின், நாகதத்தனுக்கு வேண்டிய வசதிகள்பற்றி அரசி மிகுந்த கவனம் செலுத்தினாள். வைத்திய தட்சிணையைப்பற்றி அரசி மிக மிக வற்புறுத்தியதின் பேரில், சோபியாவைத் தட்சிணையாகக் கேட்டுப் பெற்றுக் கொண்டான் நாகதத்தன்.

சோபியாவின் அரைகுறைப் பாரசீகப் பாஷையைப் புரிந்துகொள்வது, நாகதத்தனுக்குச் சிரமமாகவே இருந்தது. ஆயினும், அவளுடைய பிரகாசம் பொருந்திய கண்களுக்குள்ளே, கூர்மையான அறிவு புதைந்து கிடக்கிறது என்பதைச் சுலபமாகப் புரிந்து கொண்டான். சோபியா இப்பொழுது அவனுக்குச் சொந்தமாகி விட்டாள். ஆம்; ஓர் அடிமையாகத்தான். ஆயினும் நாகதத்தன் அவளை என்றும் அடிமையாகக் கருதியதில்லை. நாளடைவில், அவள் பேசும் பாஷையையும் இவனால் புரிந்து கொள்ள முடிந்தது. கிரேக்க எழுத்துக்களையும் நாகதத்தன் கற்றுக் கொண்டான். சோபியா வெகு பிரயாசையோடு அவனுக்கு ஏதென்ஸ் பாஷையையும் கற்பித்து வந்தாள். ஒரு வருடம் முடிவதற்குள், நாகதத்தன் அந்தப் பாஷையிலும் நிபுணன் ஆகிவிட்டான். ஒருநாள் சோபியா அந்த இளம் வைத்தியனிடம் மனப்பூர்வமாய் தன்னுடைய நன்றியைத் தெரிவித்து,

''பாக்கியம் அல்லது விதி என்று சொல்கிறோமே அதுவும் ஒரு விநோதமான பொருள்தான். உங்களைப் போன்ற உயர்ந்த குணம் படைத்த எஜமானனிடம் அடிமையாகும் சந்தர்ப்பம் கிடைக்குமென்று, நான் எப்பொழுதுமே எதிர்பார்த்ததில்லை.''

''இல்லை சோபியா! அரசியிடத்தில் நீ இருந்திருந்தால் உனக்கு இன்னும் அதிகமான சௌகர்யங்கள் கிடைத்திருக்கலாம். ஆனால், சோபியா என்னை நீ எஜமான் என்று சொல்லாதே. இந்த அடிமைப் பழக்கத்தைப்பற்றி நினைத்தாலே என் உடம்பு பற்றி எரிகிறது.''

''ஆயினும், நான் உங்கள் அடிமை.''

''இல்லை; நீ அடிமை இல்லை. அடிமைத்தனத்திலிருந்து உன்னை விடுதலை செய்துவிட்டதாக நான் அரச தம்பதிகளிடம் சொல்லிவிட்டேன்.''

"அப்படியானுல் இப்பொழுது நான் அடிமை இல்லையா?"

"இல்லை; நீ என்னைப் போலவே சுதந்திரம் உடையவள். நீ எங்கு செல்ல விரும்புகிருயோ அங்கு கொண்டு போய்ச் சேர்க்க முயற்சிப்பேன்."

"நான் உங்களுடனேயே இருப்பதற்கு விரும்பினுலும் வெளியே அனுப்பி விடுவீர்களா?"

"அது முற்றிலும் உன்னுடைய விருப்பத்தைப் பொறுத்தது."

"அடிமைத்தனம் மனிதத்தன்மையை எந்த மாதிரி நசுக்கி விடுகிறது! என் தந்தையின் வீட்டிலும் நான் அடிமைகளைப் பார்த்திருக்கிறேன். அவர்களும் சிரித்தார்கள்; பேசினுர்கள்; ஆனந்தம் கொண்டாடினுர்கள். ஆனுல், அந்தச் சிரிப்பிற்கும் ஆனந்தத்திற்கும் பின்னே துன்பமும் துயரமும் மறைந்து கிடக்கின்றன என்று நான் உணரவில்லை. நானே அடிமையாக ஆனபொழுதுதான், அடிமைத்தனம் எப்படிப்பட்ட நரகம் என்பதை அனுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்ள முடிந்தது."

"நீ எப்படி அடிமையானுய்? சோபி! உனக்கு ஆட்சேபணை இல்லையானுல் அந்த விஷயத்தைச் சொல்லு."

"என்னுடைய தகப்பனுர் ஏதென்ஸ் நகரத்தில் ஒரு பெரிய மனிதராக இருந்தார். மெக்டோனிய அரசன் பிலிப், எங்களுடைய ஏதென்ஸ் நகரத்தை வெற்றிகொண்ட போது, என் தந்தை குடும்பத்தோடு கப்பல் மூலமாக ஆசியாவுக்குத் தப்பி ஓடினுர். அந்த நகரத்திலே எங்களுக்கு அடைக்கலம் கிடைக்குமென நம்பினேம். ஆனுல் சில மாதங்களிலேயே பாரசீகர்ள்க அந்த நகரத்தின்மீது படையெடுத்து விட்டனர். நகரம் அழிந்தது. யுத்தத்தின்போது ஒருவரையொருவர் பிரிந்து, அங்கும் இங்குமாக உயிர் பிழைத்து ஓடினர். அநேக ஜனங்களைப் பாரசீகர்கள் கைது செய்தனர். அவ்விதம் கைது செய்யப்பட்டவர்களில் நானும் ஒருத்தி. ஆனுல் என்னுடைய அழகையும் இளமையையும் பார்த்து அவர்கள், என்னைச் சேனுதிபதியிடம் அனுப்பி வைத்தார்கள். சேனுதிபதியிடமிருந்து சக்கரவர்த்தியிடம் அனுப்பப்பட்டேன். சக்கரவர்த்தி, தன் தங்கை அதாவது இந்த அரசியிடம் என்னை அனுப்பி வைத்தார்.

நான் ஓர் அடிமையாய் இருந்தாலும்கூட, என்னுடைய அழகின் காரணமாக நல்ல முறையிலேயே நடத்தப்பட்டேன். ஆகையால், மற்ற சாதாரண அடிமைகளுடைய அனுபவம் எனக்கு ஏற்படவில்லை, இருந்தாலும், அடிமைத் தனத்திலுள்ள வேதனையை நன்ருக உணருகிறேன். நான் அடிமையாய் இருக்கும்பொழுது ஒரு மனிதப் பிறவி என்ற ஞாபகமே வருவதில்லை.''

''சோபி! உன்னுடைய பிதாவை நீ மறுபடியும் சந்திக்க முடியவில்லையா?''

''அவர் உயிரோடிருப்பார் என்ற நம்பிக்கை எனக்கில்லை. சூருவளியில் அகப்பட்ட சருகைப்போல் நாங்கள் ஆகிவிட்டோம். எங்கள் அன்புக்குரிய ஏதென்ஸ் நகரம் அழிந்துபோய்விட்டது. அவர் உயிரோடிருந்தாலும், மறுபடியும் பார்க்க முடியும் என்ற நம்பிக்கை இல்லை.''

''ஏதென்ஸ் மிகப்பெரிய நகரமா சோபியா?''

''ஆம்; ஒரு காலத்தில் இருந்தது எஜமான்.''

''எஜமான் இல்லை, நாகா என்றே சொல்?''

''நல்லது நாகா! இப்பொழுது அந்த நகரம் பாழடைந்துவிட்டது. சக்தி வாய்ந்த தாரயோஷினுடைய பல்லைத் தட்டிய எங்கள் ஜன ஆட்சியை, அயோக்கிய பிலிப் சின்னுபின்னமாக்கி விட்டான்.''

''ஏன் அப்படி ஆகிவிட்டது சோபியா?''

''பாரசீகர்களின் எத்தனையோ தாக்குதல்களை நாங்கள் முறியடித்தோம். ஆயினும், ஏதென்ஸ் நகரத்தின் புத்திமான்களில் சிலர், இப்படியே பாரசீகர்களை நாம் எவ்வளவு காலத்திற்குத் தடுத்துக் கொண்டிருக்க முடியும். நாமும் ஒரு பெரிய ராஜ்யத்தை ஸ்தாபித்தால்தான் நமது சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என நினைக்கத் தொடங்கினர். ஏதென்ஸ் நகரத்திலிருந்தே உதவி கிடைக்காதிருக்காவிட்டால், பிலிப் ஒருநாளும் ஜெயித்திருக்க முடியாது.''

''ஓ! தட்சசீலா நீயும் ஒரு விஷ்ணுகுப்தனைப் பெற்றெடுத்திருக்கிருயே!''

''தட்சசிலம், விஷ்ணுகுப்தன் இவையெல்லாம் என்ன நாகா!''

''ஆம்; தலைநிமிர்ந்து நிற்கும் என் தட்சசீலம்!—நான் பிறந்த பூமி; கீழ்நாட்டின் ஏதென்ஸ்! சக்தி சாலியான தாரயோஷையும், அவனுடைய பிரதிநிதிகளையும் எங்கள் ஜன ஆட்சி எத்தனையோ முறை முறியடித்தது, ஆயினும் என்னுடைய தோழன் விஷ்ணுகுப்தன், ஏதென்ஸ் நகரத்தி லிருந்து பிலிப் அரசனுக்கு உதவி கிடைக்கும்படி அந்நகர வாசிகளில் சிலர் எந்தக் கொள்கையை வலியுறுத்தினர் களோ, அதே கொள்கையை உடையவனாய் இருக்கிறான்.''

''தட்சசீலமும் எங்கள் ஏதென்ஸைப்போல் ஜன ஆட்சி நாடா?''

''ஆம். ஜன ஆட்சி நாடுதான். அதுமட்டுமா? எங்கள் தட்சசீலத்திலே, அடிமை வழக்கம் கிடையாது. அந்தப் பூமியில் கால் வைத்த உடனேயே, அடிமைகளும் சுதந்திர ராகி விடுகிறார்கள்.''

''ஓ! கருணை நிறைந்த தட்சசீலமே! அதனால்தான், முதல் நாள் நான் உன்னைச் சந்தித்தபோது அடிமைகளோடு நடந்துகொள்ளும் முறைகூட உனக்குத் தெரியாமல் இருந்த தைப் பார்த்தேன்.''

''அதை நான் எப்பொழுதும் தெரிந்து கொள்ளமாட் டேன். 'நீ மகதர்களை அழைத்து வந்தால் அவர்களோடு கூடவே இந்தத் தட்சசீலப் புண்ணிய பூமிக்கு அடிமைப் பழக்கத்தையும் கொண்டு வந்துவிடுவாய்' என்று நான் விஷ்ணுகுப்தனுக்கு எச்சரித்திருக்கிறேன்.''

''மகதர்கள் யார் நாகா?''

''பாரதத்தின் பிலிப், தட்சசீலத்திற்குக் கிழக்கே இருக்கும் ஒரு பெரிய ஹிந்து ராஜ்யம். பாரசீகர்களுடைய தாக்குதல்களினால், நாங்கள் களைத்துப்போய் விட்டோம். வெற்றி பெற்றுங்கூட, எங்கள் பலம் மிகக்குறைந்து விட்டது. உண்மையில் தட்சசீலம் தனியாக நின்று பாரசீகச் சக்கரவர்த்தியை இனி எதிர்ப்பது முடியாத காரியம். ஆகவே, சிறிய சிறிய ஜன ஆட்சிகளையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு சங்கத்தை அமைப்பதுதான் சரியான வழி என்று நான் கருதுகிறேன்.''

"ஆனால் நாகா! எங்கள் நாட்டிலே இந்த முயற்சியைச் செய்து பார்த்தாய்விட்டது. எங்கள் ஹெல்லா ஜாதியாரின் சிறிய சிறிய ஜன ஆட்சிகள் ஒன்று சேர்ந்து, ஒரு பெரிய சங்கமாக அமைத்துப் பாரசீகர்களை எதிர்த்தோம். ஆனால், அந்தச் சங்கம் நிரந்தரமாக இருக்க முடியவில்லை. ஜன ஆட்சி தங்கள் தங்கள் தனித்துவத்திற்கு அதிக முக்கியத் துவம் கொடுப்பதால், சங்கத்தின் சக்தி பலபடுத்துவதற்குரிய ஸ்தானத்தை அந்தச் சங்கம் பெறவில்லை."

"அப்படியானால் என்னுடைய கொள்கை தப்பா? விஷ்ணுகுப்தன் சொல்வது தான் சரியா?"

"விஷ்ணுகுப்தனுக்குச் சங்கத்தின் வெற்றியிலேயே நம் பிக்கை ஏற்படவில்லையா?"

"ஆம்; சோபியா! பலம் பொருந்திய தம்முடைய எதிரிகளை எதிர்ப்பதற்கு ஜன ஆட்சிகளின் ஐக்கிய சங்கத் தால் முடியாது. ஜன ஆட்சிகளின் எல்லையை உடைத்து விட்டு ஒரு பெரிய குடியரசை அமைக்க முடியுமானால். ஒரு கால் நம்முடைய எதிரியை எதிர்க்கும் பலத்தை அது பெறக் கூடும். ஆனால் ஜன ஆட்சிகள்தான் தங்களுடைய எல்லையை உடைக்க, ஒப்புக் கொள்ளாதே என்பது விஷ்ணுகுப்த னுடைய கட்சி?"

"ஒருவேளை உன்னுடைய நண்பன் சொல்வது சரியாக இருக்கலாம் நாகா! ஆனால் எங்கள் ஏதென்ஸ் நகரத்தின் சுதந்திரத்தை விருப்பத்தோடு ஒப்புவிக்கும் எண்ணம் கடைசிநிமிஷம்வரை எங்கள் மனத்தில் தோன்றவேஇல்லை."

"சோபியா! ஜன ஆட்சி இருந்தும்கூட, ஏதென்ஸ் ஏன் இந்த அடிமை வழக்கத்தை ஏற்றுக்கொண்டது?"

"தன்னுடைய அழிவைச் சீக்கிரமே அணைத்துக் கொள்வதற்காக நாகா! பணக்காரர்களுடைய பேராசை, இந்த அடிமை வழக்கத்தைப் புகுத்தியது. ஆனால், நாளடைவில் எஜமானர்களைப் பார்க்கிலும் அடிமைகள் எண் ணிக்கையில் பெருகிவிட்டார்கள்."

"சோபியா! இங்கே பாரசீகர்களுடைய பழக்கவழக்கங் களில், உனக்கு அதிக வெறுப்பைக் கொடுப்பது எது?"

"முதலாவது அடிமைவழக்கம். அது எங்கள் நாட்டிலும் கூட இருந்தது. அடுத்தபடியாக, சக்கரவர்த்தியுடையவும் பணக்காரர்களுடையவும் அந்தப்புர வாழ்க்கை."

''ஏன் அது உங்கள் நாட்டில் கிடையாதா?''

''எங்கள் நாட்டில், மெக்டோனியா அரசன் பிலிப்கூட பல பெண்களை மணந்துகொள்ள முடியாது. ஆனால், இங்கோ, சாதாரண அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கூட பல மனைவிகளை உடையவர்களாய் இருக்கிறார்கள்.''

''சோபியா! எங்களுடைய நாட்டிலும் பலதார மணம் எப்பொழுதாவது நடப்பது உண்டு. ஆனால், அவற்றின் எண்ணிக்கை மிகக் குறைவு. இந்தப் பலதார மணம் பெண்களின் அடிமைத்தனத்திற்கு ஒர் அறிகுறி என்பதுதான் என்னுடைய எண்ணம். ஏதென்ஸ் அடிமை வழக்கத்தை அனுமதித்திருக்கிறதென்றால், தட்சசீலம் பலதார மணத்தை அனுமதிப்பதின் மூலம், அடிமை வழக்கத்திற்கு வழி திறந்து விட்டது.''

''மேலும் சமூகத்தில் சிலரிடத்திலேமட்டும் ஏராளமான செல்வம் குவிவதைப் பற்றி?''

''விஷ்ணுகுப்தனிடம் இதைப் பற்றியும் நான் பேசியிருக்கிறேன். ஜன ஆட்சி நாட்டில், யாரிடம் எவ்வளவு செல்வம் பெருகினாலும், அவர்கள் அரசர்களைப்போல் செல்வத்தைத் தண்ணீராக ஓடவிட மாட்டார்கள். நீ இங்கு பார்த்துக் கொண்டுதானே இருக்கிறாய் சோபியா! மெல்லிய மான்தோல்கள், உயர்ந்த ஆடைகள், ரத்தினங்கள், மணிகள், முத்து முதலிய பொருள்கள் இங்கு எப்படி உபயோகிக்கப்படுகின்றன! இந்த ரோஜா கன்னங்களும் செவ்விதழ்களும், தங்களுக்காக இந்தப் பொருள்களைத் தயாரிக்கும் கோடிக் கணக்கான மக்கள், பட்டினி கிடந்து வாடுகிறார்கள் என்பதைப் பற்றி நினைப்பதே இல்லை.''

''நாகா! நம்முடைய வீடுகளிலே விழுகின்ற தண்ணீரையெல்லாம் இழுத்துக்கொண்டுதான், சமுத்திரம் பெருத்த நீர்ப்பெருக்காய்க் காட்சியளிக்கிறது.''

''மண்ணைக் குடைந்து தங்கம் எடுப்பவர்கள் பட்டினியால் மடிகிறார்கள். ஆனால், தங்கத்தை மண்ணுக்குபவர்கள் ஆடம்பரமாக வாழ்கிறார்கள். நான் மூன்று முறை சக்கரவர்த்தியின் முன்னால் போயிருக்கிறேன். ஒவ்வொரு தடவையும் தலைவேதனையோடுதான் திரும்ப வந்திருக்கிறேன். குளிரிலே நடுங்கி, வெயிலிலே காய்ந்து மடிகின்ற கோடிக்கணக்

கான தொழிலாளிகளின் பெருமூச்சை சக்கரவர்த்தியின் ஆடம்பரப் பொருள்களிலே கேட்டேன். அவர் குடிக்கும் சிவப்பு மது, ஒதுக்கப்பட்ட பிரஜைகளின் ரத்தம் போல் எனக்குத் தோன்றிற்று. இந்தப் பெர்ஸபோலி நகர வாழ்க்கை எனக்குக் கசந்துவிட்டது. சீக்கிரமே இங்கிருந்து ஓடிவிட விரும்புகிறேன்.''

''எங்கே போக விரும்புகிருய் நாகா?''

''முதலில் உன்னுடைய விஷயத்தைப்பற்றித் தெரிந்து கொள்ள ஆவல்.''

''நான் எந்த இடத்தைச் சொல்ல முடியும்?''

''கிரேக்க தேசத்திற்குப் போக விரும்புகிருயா?''

''அங்கு போக விருப்பமே.''

''அப்படியானுல் அங்கேயே போவோம்.''

''ஆனுல் வழியில் என்னை மறுபடியும் யாராவது பிடித்துக் கொள்வார்கள். அப்பொழுது நாகதத்தனைப் போல கருணை நிறைந்த ரட்சகனைப் பெற முடியாது.''

இதைச் சொல்லும்பொழுது, சோபியாவினுடைய குரலிலே அளவு கடந்த மென்மை காணப்பட்டது. அவளது அழகிய பெரிய விழிகள், ஆவலோடு அவனைப் பார்த்தன. நாகதத்தன் நீண்டு தொங்கும் தங்க நிறமான அவளுடைய கூந்தலைக் கோதிக்கொண்டே,

''நான் அதற்கு ஒருவழி கண்டு பிடித்திருக்கிறேன். ஆனுல், அதற்கு உன்னுடைய சம்மதம் வேண்டும்.''

''அது என்ன?''

''சக்கரவர்த்தியிடமும் அவருடைய சகோதரியிடமும் நான் அவர்களின் மரியாதைக்குரிய ஹிந்துவைத்தியன்என்று எழுதி வாங்கிக் கொள்வேன்.''

''அப்படியானுல், உன்னை யாரும் தொடமாட்டார்கள்.''

''நீ சம்மதித்தால் உலகத்திற்குக் காட்டுவதற்கு மாத்திரம் அந்தக் கடிதத்தில் வைத்தியனுடைய மனைவி என்று உன்னுடைய பெயரையும் எழுதி வாங்கிக் கொள்வேன்.''

இதைக் கேட்டதும் சோபியாவினுடைய கண்கள் பொங்கி வழிந்தன. அவள் நாகதத்தனுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு.

''நாகா! நீ எவ்வளவு தயாளம் நிறைந்தவன். உன்னுடைய பெருந்தன்மையைக்கூட, நீ உணர்ந்துகொள்ள விரும்பவில்லை. நீ எத்தனை அழகன்? ஆனால், உன்னையே பார்த்துக் கொண்டிருக்கும், அந்த நீலக் கண்களை, நீ ஒரு போதும் திரும்பிப் பார்த்ததில்லையே! ராஜகுமாரி ரோஸனா, உன் மீதுள்ள காதலை வாய்விட்டுக்கூட என்னிடம் சொல்லியிருக்கிறாள். நோயாளி போன்றிருக்கும் அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு அவளை மணம் முடிக்க அவளது பெற்றோர்கள் முடிவு கட்டியிருக்கிறார்கள். ஆனால் அவளோ உன்னையே விரும்புகிறாள்.''

''அதைத் தெரிந்து கொள்ளாதது நல்லதாய்ப் போய் விட்டது சோபியா! இல்லாவிடில் அதை மறுக்கவேண்டிய கஷ்டம் ஏற்பட்டிருக்கும். அரச மாளிகையில் வளர்ந்தவளுக்கு உரியவனல்ல நான். ஒருகால் நான் யாருக்குமே உரியவனல்லாமல் இருக்கலாம். ஏனெனில் என்னைக் காதலிப்பவள் ஒருநாளும் சுகமாய் வாழ முடியாது. நல்லது; நீ விரும்பினால் சக்கரவர்த்தியின் கடிதத்தில் பெயரளவிற்கு உன்னை என்னுடைய மனைவி என்று எழுதி வாங்கிக்கொள்கிறேன். கிரேக்க நாட்டை அடைந்ததும், உன்னுடைய அன்புக்குரியவர்கள் யாராவது கிடைத்துவிடக்கூடும். அவர்களுடன் நீ தாராளமாகச் செல்லலாம்.''

## 4

**வை**த்தியன் நாகதத்தனுக்கு ஒவ்வொரு இடத்திலும் மரியாதையான வரவேற்புக் கிடைத்தது. அவன் ஒரு ஹிந்து வைத்தியன் என்பது மட்டுமல்ல; தாரயோஷின் குடும்ப வைத்தியனும்கூட. மேலும், வைத்திய சாஸ்திரத்தில் அவன் அற்புதமான திறமை படைத்தவன். பெர்ஸபோலியில் இருக்கும்போதே அவன் கிரேக்க பாஷையைக் கற்றிருந்தான். சோபியா அவனுக்குத் துணையாகவும் அமைந்திருக்கிறாள். அவன் மெட்டோனியாவைப் பார்த்தான்; பிலிப் அரசனின் புத்திரன் அலெக்ஸாண்டருடைய குரு

அரிஸ்டாடலேயும் பார்த்தான். நாகதத்தனும் ஒரு சிறந்த தத்துவஞானி—ஆனால் இந்திய முறையிலே. ஆகையால், சக்கரவர்த்தி பீடத்தை ஆதரிக்கும் அரிஸ்டாட்டலுடைய கொள்கைபற்றி நாகதத்தனுக்கு அபிப்பிராய பேதம் உண்டு. இருந்தாலும், அவரிடத்திலே இவனுக்கு மிகுந்த மரியாதை ஏற்பட்டது. ''சத்தியத்தின் உரை கல் மூளை அல்ல; உலகப் பொருள்கள்— இயற்கைதான்'' என்ற அரிஸ்டாட்டலின் சித்தாந்தம் இவனுடைய இதயத்தை மிகவும் கவர்ந்தது. அரிஸ்டாட்டல் அனுபவ உண்மைக்கே மிகவும் உயர்ந்த ஸ்தானம் கொடுத்தான். பாரதீயத்தத்துவ ஞானிகள், சத்தியத்தை இதயத்தில் உற்பத்தி செய்ய விரும்புவதைப் பார்த்த நாகதத்தனுக்கு வருத்தம் ஏற்பட்டது. தன்னுடைய பாரக்கிரமசாலியான சிஷ்யனைப் பற்றி, அரிஸ்டாட்டல் அவருடைய வாயால் புகழ்ந்ததை நாகதத்தன் கேட்டிருக்கிறான். இவனும் அந்த சிஷ்யனைப் பலமுறை சந்தித்துப்பேசி இருக்கிறான். அந்த வாலிபன் நிகரற்ற வீரனாயும், எல்லையற்ற திறமைசாலியாயும் இருந்ததைப் பார்த்தான்.

ஏதென்ஸ் நகரத்தைப் பார்த்துவிட்டு வருவதற்கு, அரிஸ்டாட்டலிடம் விடைபெற்றுக்கொண்டு கிளம்பினான் நாகதத்தன். ஆனால், அந்த கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானியை அவன் சந்திப்பது அதுதான் கடைசி முறை என்று யாருக்குத் தெரியும்?

மாரத வீரர்களைப் பெற்றெடுத்து, ஜனநாயக ஆட்சியால் வெற்றிப்புகழ் பரப்பி வாழ்ந்த ஏதென்ஸ் நகரத்திலே நாகதத்தன் தன்னுடைய இதயத்திலே தட்சசீலத்திற்கு எவ்வித உயர்ந்த ஸ்தானம் கொடுத்திருக்கிறானோ, அதே மரியாதையோடும் அன்போடும் பிரவேசித்தான். நகரம் திரும்பவும் வாழத் தொடங்கியிருந்தது. ஆனால், பழைய ஏதென்ஸ் நகரம் அல்லஇது என்று சோபியா தெரிவித்தாள். வீனஸ், ஜூபிடர் முதலிய தெய்வங்களின் ஆலயங்கள், இறவாப் புகழ் படைத்த கலைஞர்களின் சிருஷ்டிகளால் அலங்கரிக்கப்பட்டு, இன்றும் இருந்தன. ஆனால், ஏதென்ஸ் நகர வாசிகளிடத்தில் முந்திய உற்சாகமும் ஜீவகளையும் இப்பொழுது இல்லை என்று, அவனுக்குச் சோபியா கூறினாள்.

சோபியாவினுடைய தகப்பனின் வீடு—இல்லை அது இருந்த பூமியில், இப்பொது மெக்டோனிய வியாபாரி ஒருவன் கட்டியிருந்த வீட்டைப் பார்த்தார்கள். அந்த

வீட்டைப் பார்த்ததும், சோபியாவால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அன்று முழுவதும் அவள் தன்னை மறந்த நிலையிலேயே காரியங்களைச் செய்துகொண்டிருந் தாள். அவளுடைய இயற்கைக்கு விரோதமாக, மௌனமும் துக்கமும் குடிகொண்டு காட்சியளித்தாள். சில சமயங் களிலே, அவளுடைய கண்கள் நீரால் நிறைந்துவிடும். சில சந்தர்ப்பத்தில் அவள் பளிங்குச் சிலையாய் மாறி விடுவாள். தனது இளமையைக் கழித்த அந்த இடம், அவளுடைய மனதிலே எழுப்பியுள்ள வேதனையை நாகதத்தன் புரிந்து கொண்டான். ஆனால், அவளுக்குத் தேறுதல் கூறுவதற்கும் அவனால் முடியவில்லை. மேலும் சோபியாவின் இதயத்தை ஆட்டிவிட்ட இந்தத் துக்கத்தின் சாயல், நாகதத்தனையும் பற்றிக்கொண்டது.

அவள் தன்னுணர்வு பெற்றபொழுது, அவளுடைய நிலை மையே முற்றும் மாறிவிட்டது. இதற்கு முன்னெல்லாம், சோபியா தன்னுடைய சரீரத்தை அலங்கரித்துக்கொள்வ தில் கவனம்செலுத்துவது கிடையாது. ஆனால் இப்பொழுது, ஜனநாயக ஏதென்ஸ் நகரத்தின் யுவதிகளைப் போல் தன்னையும் அலங்கரித்துக்கொள்ள ஆரம்பித்தாள். தன் னுடைய தங்க நிறமான கூந்தலில், அழகிய மலர்களைச் சூட்டிக்கொள்வாள். பாதம்வரை தொங்கும் வேலைப் பாடமைந்த மெல்லிய சட்டையையும், அழகிய மேலங்கி யையும், கால்களிலே மிருதுவான மிதியடிகளையும் அணிந்து கொள்வாள். அவளுடைய வெண்மையான நெற்றியிலும், ரோஜாப் புஷ்பத்தைப் போன்ற கன்னங்களிலும், பவளத் தைப் போன்ற செவ்விதழ்களிலும், இளமையின் அழகும், ஆரோக்கியத்தின் வனப்பும் கலந்து பிரகாசித்தன. மகிழ்ச் சியும் புன்முறுவலும், அவளுடைய முகத்தில் எப்பொழு தும் தாண்டவமாடிக் கொண்டிருந்தன.

சோபியாவினுடைய இந்த மாறுதலைப் பார்த்த நாகதத் தனுக்கு ஆச்சரியம் மட்டுமல்ல, அதிக ஆனந்தமும் ஏற் பட்டது. அதைப்பற்றி அவன் கேட்டதற்கு சோபியா,

''நாகா! வாழ்க்கையை இதுவரை துக்கப்படுவதற்குரிய ஒரு பொருளாக மட்டுமே நான் எண்ணியிருந்தேன். ஆனால் என்னுடைய எண்ணம் தப்பு என்று இப்போது எனக்குத் தெரிந்தது. இவ்விதம் ஒரே நோக்கோடு வாழ்க்கையைப் பார்ப்பதால் அதனுடைய பெருமை குறைந்துவிடுகிறது.

மேலும், நமது உழைக்கும் சக்தியும் பாழாகிவிடுகிறது. தட்சசீலத்தின் எதிர்கால வாழ்வைப்பற்றி, நீயும் குறை வாகக் கவலைப்படவில்லை. இருந்தாலும் மனதை நிதானப் படுத்தி, அதற்கு வழிகளை யோசிப்பதிலேயே சக்தி அனைத்தையும் செலுத்துகிறாய்.''

''சோபியா! நீயும்இவ்வளவு ஆனந்தமாய் இருப்பதைப் பார்க்கும் போது என் இதயம் பூரிப்படைகிறது.''

''ஏதென்ஸுக்குத் திரும்ப வந்தவுடன் என்னுடைய காதலனையும் அடைந்துவிட்ட எனக்குச் சந்தோஷம் ஏற் படாதா?''

நாகதத்தன் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்து,

''சோபியா! இது மேலும் சந்தோஷகரமான விஷயம். இவ்வளவு நாட்களுக்குப் பிறகாவது, நீ உன்னுடைய காத லனை அடைந்து விட்டாயல்லவா!''

''நாகா! நீ மனிதன் அல்ல, தேவதை—இல்லை, இல்லை, தேவதைகளுக்கும் மேம்பட்டவன். பொறாமைப் பேய் உன் னைத் தீண்டக் கூட முடியவில்லை.''

''பொறாமையா! பொறாமைக்கு என்னிடத்தில் வேலை ஏது? சோபியா! உன்னை இங்கு கொண்டு வந்து சேர்த்து விடுவதாய்ப் பொறுப்பேற்றுக் கொண்டேன் அல்லவா? நீ இங்கு வந்தவுடன் உனக்கு இசைந்த காதலனைத் தேடிக் கொள்ளலாம் என்று நான் பெர்ஸபோலியிலேயே சொல்ல வில்லையா?''

''ஆம்; நீ சொன்னாய்.''

''உன்னுடைய எல்லையற்ற இந்த ஆனந்தத்தைப் பார்த்த நான், உனக்கு ஒரு கிடைத்தற்கரிய பொருள் கிடைத்திருக்கிறது என்று அனுமானித்தேன்.''

''உன்னுடைய அனுமானினம் சரிதான் நாகா!''

''நல்லது, உன்னுடைய காதலனை நான் இங்கு வரவேற் பதற்கோ அல்லது அவர் இருக்குமிடம் சென்று பார்ப்ப தற்கோ எனக்கு அனுமதி தருவாயா?''

''நீ ஏன் இவ்வளவு அவசரப்படுகிறாய்?''

''அவசரந்தான் படுகிறேன். சோபியா! நீ சொல்வது பொய் இல்லை.'' நாகதத்தன் தன்னை அடக்கிக்கொள்ள

முயன்றான். இனிமேலும், தன்னுடைய கண்ணீரைத் தடுக்க முடியாதே என்ற பயம் சோபியாவுக்கு ஏற்பட்டது. உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டு,

''நீ என் காதலனைப் பார்க்கலாம். ஆனால், ஏதென்ஸ் நகரத்து வாலிபர்களைப்போல் நீயும் ஆடை அணிந்து கொள்ள வேண்டும்.''

''நீ நேற்று எனக்காக வாங்கி வந்திருக்கும் கால்சட்டையையும், மிதியடியையும் போட்டுக் கொண்டால் சரியாய்ப் போய் விடுகிறது.''

''நல்லது; நீ போய் உடுத்திக்கொள். அதற்குள் நான் என் காதலனுக்காக ஒரு மாலை வாங்கி வருகிறேன்.''

''நல்லது'' என்று சொல்லி விட்டு நாகதத்தன் அடுத்த அறைக்குப் போய்விட்டான். சோபியா அங்கிருந்த ஒரு பெரிய கண்ணாடிக்கு முன்னே நின்று தன்னுடைய உடைகளையும் ஆபரணங்களையும் சரிப்படுத்திக் கொண்டாள். பிறகு ஒரு மாலையைக் கண்ணாடிக்குப் பின்புறத்தில் மறைத்து வைத்து விட்டு, மெதுவாக அடுத்த அறையின் வாசலில் போய் நின்று,

''நாகா! மிகவும் நேரமாகி விட்டது. என் காதலன் எங்காவது வெளியே போய் விட்டால் பார்க்க முடியாமல் போய் விடும்.''

''சீக்கிரம் வருகிறேன். ஆனால், நீ வாங்கிக்கொண்டு வந்திருக்கிறாயே அந்தக் கால் சட்டை, அது சரியாகவே போட வர மாட்டேன் என்கிறது.''

''நான் உதவி செய்யவா?''

''ரொம்ப வந்தனம்.''

இப்பொழுது அலங்காரம் செய்வது அவனுக்கு எளிதாக முடிந்தது. ஆனால், மகிழ்ச்சி பொங்கும் அவனுடைய முகத்தைப் பார்ப்பதற்கு சோபியாவுக்குத் தைரியம் உண்டாகவில்லை. அவள் அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு,

''முதலில் கண்ணாடியிடம் வந்து உன்னுடைய புதிய வேஷத்தைப் பார்த்துக்கொள்.''

''நீ பார்த்துவிட்டாயல்லவா? அதுவே எனக்குப் போதும். பார்ப்பதற்குக் கண்ணியமாக இருக்கவேண்டும். அவ்வளவுதானே?''

''எனக்குப் பார்க்க ரொம்ப நன்ருகவே இருக்கிறது. இருந்தாலும், நீயும் ஒருமுறை பார்த்துக் கொள்வதில் கெடுதி ஒன்றும் இல்லையே?''

சோபியா, நாகதத்தனைக் கண்ணுடிக்கு முன்னே நிறுத்தினுள். அவனும் தன்னுடைய ஆடைகளையும் அலங்காரத்தையும் பார்த்துக் கொண்டிருந்தான். இந்த நேரத்தில் சோபியா மாலையைக் கையில் எடுத்துக்கொண்டு,

''என்னுடைய காதலனுக்காக இந்த மாலையைத் தொடுக்கச் செய்தேன்.''

''ரொம்ப நல்ல மாலை, சோபியா!''

''ஆனுல் அவருக்கு எப்படி இருக்குமோ யார் கண்டது?''

''ஏன் ரொம்பத் திருப்தியாய்த் தானிருக்கும்.''

''அவருடைய கூந்தல் பொன்னிறம். ஆனுல் இதுவோ சிவந்த ரோஜாப்பூ மாலை.''

''மிகமிக அழகாயிருக்கும்.''

''கொஞ்சம் உன்னுடைய தலையிலே சூட்டிப் பார்த்துக் கொள்ளலாமா?''

''அது உன்னுடைய விருப்பம். என்னுடைய கூந்தலுங் கூட பொன்னிறந்தான்.''

''அதனுலேயே எப்படி இருக்கும் என்று பார்த்துக் கொள்ள விரும்புகிறேன்.''

மாலையை நாகதத்தன் தலையிலே சூட்டி ஒருமுறை பார்த்தாள். பிறகு அவனைக் கண்ணுடியிலிருந்து மறுபுறம் திரும்பச் சொல்லி,

''நீ இன்று என்னுடைய காதலனைப் பார்க்கப் போகிருய் நாகா! இப்பொழுதே இங்கே பார்!''

நாகதத்தன் மறுபுறம் திரும்பினுன். சோபியாவினுடைய கைவிரல், கண்ணுடியில் அவனுடைய பிரதிபிம்பத்

தைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டிருந்தது. அவளுடைய கண்கள் ஆனந்தக் கண்ணீரை உகுத்தன.

"இதோ, இவன்தான் எனது காதலன்" என்று கூறி நாகதத்தனைத் தன்னுடைய மார்போடு தழுவிக்கொண்டாள். அவளுடைய உதடுகள் அவனுடைய உதடுகளோடு பொருந்தின. நாகதத்தன் நீண்ட நேரம் மௌனமாயிருந்தான். அப்பால் சோபியா தன்னுடைய கன்னங்களை அவனுடைய கன்னங்களோடு ஒட்டிக்கொண்டு,

"என்னுடைய காதலன் எவ்வளவு நல்லவன் நாகா!",

"சோபியா! நான் உனக்குத் தகுதியானவன் என்று கருதவில்லை."

"நான் தகுதி என்றே நினைக்கிறேன். எனது நாகா! இனிமேல் மரணமும் நம்மைப் பிரிக்க முடியாது."

நாகதத்தனுடைய கண்கள் தடுப்பை உடைத்துக் கொண்டு நீரைக் கொட்டின.

"ஆம்; மரணமும்கூட" என்றான்.

## 5

கிரேக்கக் கடற்படை, பாரசீகர்களுக்குப் பலமான தோல்வியை அளித்த சாலாமிய வளைகுடாவைப் பார்க்க வேண்டுமென்று, நாகதத்தன் ஆசைப்பட்டான். அந்த இடத்தைப் பார்ப்பதற்காக இருவரும் தரைமார்க்கமாகப் புறப்பட்டனர். நாகதத்தன் மிகுந்த உற்சாகம் அடைந்தவனாகக் காணப்பட்டான். ஆனால் வழி நடக்கையிலே, அவனுடைய எண்ணம் தட்சசீலத்திற்குச் சென்று சென்று வந்தது. வழியில் இளைப்பாறுவதற்காக இருவரும் ஒருமரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

"கேள்விப்பட்டாயா நாகா! அரசன் பிலிப் இறந்து போய்விட்டான். அலெக்ஸாண்டர் மெக்டோனிய அரசனாகிவிட்டான். பெரிய சக்தி வாய்ந்த சேனையைத் திரட்டிக் கொண்டிருக்கிறானாம்."

"ஆம்; கிரேக்க சமுத்திர (மத்திய தரைக்கடல்)க் கரை மீது அவன் ஆதிக்கம் செலுத்த விரும்புகிறான்; ஆனால் அதன்

கிழக்குக் கரையும் தெற்குக் கரையும் (எகிப்து) பாரசீகர்களிடம் இருக்கிறது.''

''அப்படியானல், அவன் பாரசீகர்களோடு யுத்தம் தொடுக்க வேண்டி நேரும்.''

''பாரசீகர்களோடு யுத்தம் தொடுப்பதாகக் காரணம் காட்டி, தன்னுடைய ராஜ்ய விஸ்தரிப்பிற்குக் கிரேக்க ஜன ஆட்சிகளுடைய உதவியையும் பெறுவதற்கு முயலுகிருன். ஒரே கல்லில் இரண்டு பறவைகளை அடிக்கும் தந்திரம் இது. கிரேக்கக் கடற்கரையிலிருந்து பாரசீகச் சக்கரவர்த்தியின் ஆதிக்கத்தை ஒழித்து, அதற்கு மேலும் முன்னேறுவது; அப்படி முன்னேற முடியாவிட்டால், குறைந்த பட்சம் தன்னம்பிக்கையுள்ள கிரேக்கர்களிடையே ராஜ பக்தியை வளர்ப்பது அவனுடைய திட்டம்.''

''அவன் அரிஸ்டாட்டலின் சிஷ்யன்; அவனுடைய தைரியத்தை வளர்த்தவர் அவர்தான்.''

''தத்துவஞானி அரிஸ்டாட்டலா?''

''ஆம்; அவருடைய குரு பிளேட்டோ, ஒரு லட்சியக் குடியரசைப்பற்றிக் கற்பனை செய்தார். ஆனல், அவருங்கூட அந்தக் குடியரசிலே பொது ஜனங்களுக்கு அதிகப்படியான உரிமை கொடுக்க விரும்பவில்லை. அவருடைய சிஷ்யனை அரிஸ்டாட்டல் லட்சியக் குடியரசிற்குப் பதிலாக ஒரு லட்சிய சாம்ராஜ்யத்தைக் கற்பனை செய்துவிட்டான். இந்தக் கிரேக்க சக்கரவர்த்தி (அலெக்ஸாண்டர்), பாரசீகச் சக்கரவர்த்தியையும் தோற்கடித்து, அதற்கப்பாலும் எது வரைக்கும் போவான் என்பது யாருக்குத் தெரியும்?''

''ஒரு முறை அகலக்கால் வைத்தவன், திரும்பவும் ஒடுக்கிக் கொள்வது என்பது அவனுலும் முடியாத காரியம். உன்னுடைய நண்பன் விஷ்ணுகுப்த சாணக்கியன் அங்கும் ஒரு சக்கரவர்த்தியைத் தேடிக் கொண்டிருக்கிருன்.''

''ஹிந்துச் சக்கரவர்த்தியும் கிரேக்கச் சக்கரவர்த்தியும் சிந்து நதிக்கரையிலே சந்திக்கும் நிலைமை ஏற்பட்டால்...?''

''இந்தத் தலைமுறையில் இல்லாவிட்டாலும், அடுத்த தலைமுறையில் நடக்கத்தான் போகிறது. நாள்தோறும் உலகம் சுருங்கிக் கொண்டே வருகிறது.''

சோபியாவும், நாகதத்தனும் சமுத்திரக் கரையிலிருந்து படகிலே பிரயாணமானுர்கள். கடல் அமைதியாகவே இருந்தது. இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்னே பாரசீகக் கடற்படைக்கும் ஜலசமாதியளித்த அந்தக் கடல் அலைகளை, நன்றியோடும் அன்போடும் பார்த்தார்கள்.

கொஞ்ச தூரம் சென்றதும், திடீரென்று ஒரு பெரும் புயல் தோன்றிற்று. நூறு வருடங்களுக்கு முன்னுல் பாரசீகர்கள் அனுபவித்த புயலின் கொடுமையை அவர்கள் உணர்ந்தார்கள். படகோட்டிகளுடைய பயம் நிறைந்த முகம் அவர்களுடைய பார்வையிலே பட்டது. படகின் துடுப்புகள் ஒடிந்தன. படகும் கவிழ்வதற்குத் தயாராகி விட்டது. நிலைமை தெளிவாகி விட்டது; சோபியா நாகதத்தனைத் தனது கரங்களால் பிணைத்து, நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். அவளுடைய முகத்திலே புன்முறுவல் பூத்தது. "மரணமும் நம்மைப் பிரிக்க முடியாது" என்றுள்.

"ஆம்; மரணமுங்கூட" என்ற நாகதத்தன், அவளுடைய இதழோடு இதழ் சேர்த்தான்.

படகும் கவிழ்ந்தது. அவ்விருவரையும் மரணத்தாலும் பிரிக்க முடியவில்லை.

# பிரபா

**காலம்: கி. பி. 50**

சாகேதம் (அயோத்யா) நகரம் எப்பொழுதும் ஒரு தலை நகரமாக இருந்ததே இல்லை. கௌதம புத்தருடைய சம காலத்தவனான கோசல நாட்டு அரசன் பிரசேனஜித்தன், அங்கு ஒரு மாளிகை கட்டியிருந்தான் என்றாலும், அவனுடைய ராஜதானி அங்கிருந்து 60—70 மைல் தூரத்தில் உள்ள ஸிராவஸ்தி நகரம்தான். பிரசேனஜித்தனுடைய மாப்பிள்ளை அஜாதசத்ரு கோசலத்தின் சுதந்திரத்தை விழுங்கிவிட்ட பிறகு, அந்த ஸிராவஸ்தியின் பெருமையும் மங்கிவிட்டது. ஆனால், சரயூ நதிக்கரையில் அமைந்துள்ள இந்த சாகேத நகரம் படகு வியாபாரத்தினால் மட்டுமல்ல; கிழக்கிலிருந்து பாஞ்சாலம் செல்லும் தரை மார்க்கத்தின் மத்தியில் அமைந்திருப்பதால், தரை வியாபாரத்திற்கும் ஒரு கேந்திர ஸ்தானமாக விளங்கியது. இந்த வியாபார முக்கியத்துவத்தை அது நெடுங்காலம் வகித்து வந்தது. சாணக்கியனுடைய சிஷ்யன் சந்திரகுப்த மௌரியன் மகத ராஜ்யத்தை முதலிலே தட்சசீலம் வரைக்கும் விஸ்தரித்தான். அப்பால் கிரேக்க அரசன் ஸெல்யூகஸைத் தோற்கடித்து தன்னுடைய ராஜ்யத்தை ஹிந்துகுஷ் (ஆப்கானிஸ்தானம்) மலைத் தொடர்களுக்கு அப்பால் மேற்கே ஆமு கால்வாய் வரையும் விஸ்தரித்தான். சந்திரகுப்தனுடைய காலத்திலும் அவனுக்குப் பிந்திய மௌரிய அரசர்களுடைய காலத்திலும் இந்த சாகேதம் ஒரு முக்கிய வியாபார நகரமாகவே இருந்தது. அதைவிட, உயர்ந்த ஸ்தானத்தை அது பெறவில்லை. மௌரிய வம்சத்தை அழித்த சேனாதிபதி புஷ்யமித்திரன் தான், சாகேதத்தை முதன் முதலில் தலைநகரமாக ஆக்கினான். ஆயினும் பாடலிபுரத்தின் (பாட்னா) முக்கியத்துவத்தைஅவன் குறைத்துவிடவில்லை. புஷ்யமித்திரன் அல்லது, அவனை அடுத்து வந்த சுங்க வம்ச அரசர்கள் காலத்தில் ராமாயணத்தை இயற்றிய வால்மீகி, சாகேத நகரத்திற்கு அயோத்யா என்ற பெயரைக் கொடுத்து விளம்பரப்படுத்தினான். இந்த ராமாயண காவியத்தை மகாகவி அஸ்வகோஷ் மிகவும் ரசித்துப் புகழ்ந்திருக்கிறான் என்பதில்

சந்தேகமில்லை. மகாகவி காளிதாசன், அரசன் சந்திர குப்த விக்கிரமாதித்யனுடைய ராஜாங்க வித்துவானு யிருந்ததுபோல் வால்மீகி முனிவரும், சுங்க வம்சத்து அரசர் களின் ஆஸ்தான வித்துவானுக இருந்திருந்தால் ஆச்சரியப் படுவதற்கில்லை. காளிதாஸன், தான் இயற்றிய 'ரகுவம்சத் தில்' ரகுவாக அரசன் சந்திரகுப்த விக்கிரமாதித்தியனையும், 'குமாரசம்பவத்தில்' குமரனுக குமாரகுப்தனையும் வருணித் திருப்பதுபோல், வால்மீகிமுனிவரும் சுங்கவம்சத்தாருடைய தலைநகரின் பெருமையை அதிகப்படுத்திப் புகழ்வதற்காக, வாரணசி (காசி)யைத் தலைநகராகக் கொண்டிருந்த ஜாதக வம்சத்து அரசன் தசரதனுடையராஜதானியை அயோத்யா வாகப் பெயர் கொடுத்து, சுங்க வம்ச சக்கரவர்த்தி புஷ்ய மித்திரனையோ அல்லது அக்கினிமித்திரனையோ, தன்னுடைய ராமாயண காவியத்தில் ஸ்ரீராமனுக வருணித்திருக்கிறுர்.

சேனுதிபதி புஷ்யமித்திரன், தன்னுடைய அரசனைக் கொன்றுவிட்டாலும் மௌரிய சாம்ராஜ்யம் முழுவதையும் தன் ஆதிக்கத்தில் கொண்டுவர முடியவில்லை. பாஞ்சாலம் வரை உள்ள பிரதேசத்தை, கிரேக்க அரசர் மினுந்தர் எடுத் துக் கொண்டுவிட்டான். அதோடு மட்டுமல்ல; ஒருமுறை சாகேதம் வரையிலும் அவன் வந்தானென்று புஷ்யமித்திர னுடைய பிராமணப் புரோகிதன் பதஞ்சலி எழுதிவைத் திருக்கிறுன். இதிலிருந்து புஷ்யமித்திரனுடைய ராஜ்ய கால ஆரம்ப நாட்களிலுங்கூட அவன் பெயர் சாகேதம் என்றுதான் இருந்ததென்பதும், பதஞ்சலி—புஷ்யமித்திரன் காலத்திலும் அந்நகருக்கு அயோத்தியா என்று பெயர் ஏற் படவில்லை யென்பதும், நிச்சயமாகத் தெரிகிறது.

புஷ்யமித்திரன், பதஞ்சலி, மினுந்தர் இவர்களுடைய காலத்திற்கு இருநூறு ஆண்டுகளுக்கும் பிந்திய காலத்தைப் பற்றி நாம் இப்போது பேசுகிறோம். இந்தக் காலத்திலும் சாகேத நகரத்தில் பெரிய பெரிய 'சிரேஷ்டர்கள்' (சேட்) வசித்து வந்தனர். லட்சுமி வசிக்கும் இடத்தில், சரஸ்வதிக் கும் ஓரளவு மரியாதை செலுத்த வேண்டுவது அவசியமல் லவா! ஆகவே, மதமும், பிராமணர்களும், வெல்லத்தை மொய்க்கும் எறும்புகளைப்போல் அங்கு கூடியிருந்ததில் ஆச்சரியமில்லை. இந்த பிராமண குலத்தில், கலைச் செல்வ மும் பொருட் செல்வமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த ஒரு பிராமணக் குடும்பம் இருந்தது. அந்தக் குடும்பத் தலை வனின் பெயரை, காலவெள்ளம் அடித்துக்கொண்டு போய்

விட்டது. ஆனுல் குடும்பத் தலைவியின் பெயரை அவளது புதல்வன் சிரஞ்சீவியாக்கிவிட்டான். அந்த அம்மையின் கண்கள் தங்கத்தைப்போல் மஞ்சள் நிறமாய் இருந்ததால், அவளுக்கு சுவர்ணுட்சி என்ற பெயர் ஏற்பட்டதாம். அந்தக் காலத்தில், பிராமண—க்ஷத்திரியர்களிடையே நீல நிறக்கண் களும், மஞ்சள் நிறக் கண்களும் காணப்பட்டன. அந்தப் பிராமணப்பெண் சுவர்ணுட்சிக்கு ஒரு புத்திரன் இருந்தான். அவளைப் போலவே, அவனுடைய கண்களும் மஞ்சள் நிறம்: பொன்னிறமான தலை மயிர். வெண்மை நிற மேனி.

## 2

வசந்த காலம். மாம்பூக்கள் நாலாபுறமும் நறுமணத் தைப் பரப்பிக் கொண்டிருந்தன. மரங்கள் யாவும் சருகு களை உதிர்த்துவிட்டு, புதிய இலை ஆடை போர்த்திருந்தன. அன்று சித்திரை மாதத்து சுக்கிலபட்ச நவமி. சாகேத நகரத்தின் ஆண்களும் பெண்களும் சரயூ நதிக்கரையிலே வந்து கூடினர். நீச்சுப் போட்டி நடைபெறப் போகிறது. சாகேத வாசிகள் வசந்தோற்சவத்தை நீச்சுப் போட்டி மூலமே கொண்டாடுவது வழக்கம். அந்த நீச்சுப் போட்டி யிலே, யுவர்களும் யுவதிகளும் கலந்து கொள்வார்கள்; ஒரே துறையிலே நிர்வாணமாகக் குதித்து நீந்தத் தொடங்கு வார்கள். தங்கள் நாட்டுக் கலைஞர்கள் செய்த இணையற்ற சிலைகளைத் தோற்கடிக்கும் உருவமும், அந்தப் பளிங்குச் சிலை களைப் போலவே கற்பூர வெண்ணிறமும், உச்சியிலே செம் பட்டைத் தலைமயிரும் படைத்த கிரேக்க யுவதிகளும், நீல நிறக் கூந்தலையும் பொன்னிறக் கண்களையும் பெற்றிருந் தாலும், அந்தக் கிரேக்கயுவதிகளைவிடச் சிறிதும் குறையாத கோதுமை நிறமும், நிலையற்று அலையும் மருண்ட விழிகளால் யாரையும் கவரும் சக்தியும் படைத்த வைசியப் பெண்களும், நீச்சுப் போட்டியில் கலந்து கொள்ளத் தயாராய் நின் றனர். யுவதிகளைப் போலவே பல குலத்தையும் சேர்ந்த யுவர்களும் தங்களுடைய உடைகளைக் களைந்துவிட்டு நதி யிலே குதிக்கத் தயாராய் நின்றனர்; தேகப் பயிற்சியால் உருண்டு திரண்ட அழகிய சரீரம், கம்பீரமான தோற்ற மும் உடைய அந்த வாலிபக் கூட்டத்திலே, நிறமும், தலை

மயிரும், மூக்கும், முகமும் அவர்களின் குலங்களைப் பிரித்துத் காட்டின; சாகேத நகரத்தின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் இளமையின் எழில் ராசி திரட்டிக்கொண்டு வந்து நதிக்கரையிலே குவிக்கப்பட்டிருந்தது. யுவ—யுவதிகளின் அழகை எடை போட்டு நிர்ணயிப்பதற்கு, இந்த நீச்சு விழாவைவிடச் சிறந்த சந்தர்ப்பம் கிடைக்க மாட்டாது. வருடந்தோறும் இந்த விழாவிலே, அநேக ஜோடிகள் தங்கள் காதலைப் பரிமாறிக்கொள்வதுண்டு. தாய் தந்தையர்களும் இதற்கு விருப்பத்தோடு தூண்டுவார்கள். அந்தக் காலத்திலே, இது நல்லொழுக்கமாகவே கருதப்பட்டது.

படகின் மூலம் சரயூவின் எதிர்க்கரையை அடைந்து, யுவர்களும் யுவதிகளும் தண்ணீரில் குதித்தார்கள். சரயூவின் நீலநிறத் தண்ணீரிலே தங்களுடைய பொன்னிற நீல நிற, கருநிறக் கூந்தல்கள் அலைய, பலம் மிகுந்த தோள்களால் தண்ணீரை ஒதுக்கிக்கொண்டு வேகமாக நீந்தினார்கள். அவர்களுக்கு இருபுறமும், உதவிப் படகுகளில் இருந்த ஆண்களும் பெண்களும் அவர்களை உற்சாகப் படுத்திக்கொண்டும், வழியிலே களைத்து விட்டவர்களைப் படகிலே தூக்கிப் போட்டுக்கொண்டும், ஜாக்கிரதையாக கவனித்துக்கொண்டும் வந்தார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் போட்டி போடும் போது, ஒரு சிலர் தோல்வியை ஒப்புக்கொள்ளும் நிலை ஏற்படுவது இயற்கையே. நீந்துகிறஒவ்வொருவரும் தாங்கள் ஜெயித்துவிட வேண்டுமென்று முயற்சி செய்தார்கள். கரை இன்னும் மூன்றிலொரு பங்கு தூரத்தில் இருக்கும் பொழுது அநேகர் களைத்து விட்டனர். சிறிது நேரத்தில் இரண்டு உருவங்கள் மட்டும் கரையை நோக்கி வேகமாக நீந்திச் செல்வது தெரிந்தது. ஒன்றின் கூந்தல் பொன்னிறம்; மற்றது சாம்பல் நிறம். கரையை நெருங்க நெருங்க, இருவரின் வேகமும் அதிகரித்தது. ஆயினும், ஒருவரையொருவர் முந்த முடியவில்லை. எல்லோருடைய கவனமும் அந்த இரு உருவங்களிடமும் சென்று லயித்தது. கரையை நெருங்குவதற்குள் அவர்களில் யாராவது ஒருவர் முந்தி ஜெயித்து விடுவார்கள் என்று எல்லோரும் நினைத்தனர். பலரும் கூச்சலிட்டு அவர்களை உற்சாகப்படுத்தினர். ஆயினும் இருவரும் ஒன்றாகவே கரையேற முடிந்தது. அவர்களிலே ஒருவர் ஆண்; மற்றவர் பெண். ஜனங்கள் ஆனந்தக் கூச்சலிட்டு அவர்களை வரவேற்றனர். இருவரும் துணிகளை உடுத்திக்கொண்டு தயாரானதும், திறந்த பல்லக்குகளிலே அவர்களின் ஊர்வலம் தொடங்கிற்று. பார்த்தவர்கள்

எல்லாம் அவர்கள்மீது மலர் தூவி வாழ்த்தினார்கள். பக்கத்தே அமர்ந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்த அந்த வாலிபனையும் - யுவதியையும், மக்கள் அவர்களின் நீச்சுத் திறமையைப் பாராட்டியதோடு மட்டுமல்ல அவர்களின் ஒப்பற்ற அழகையும் புகழ்ந்தார்கள். கூட்டத்திலே ஒருவர் கேட்டார்:

''அந்த யுவதியை எனக்குத் தெரியும். ஆனால் அந்த வாலிபன் யார்?''

''சுவர்ணாட்சி புத்திரன் அஸ்வகோஷைப் பற்றி நீ கேள்விப்பட்டதில்லையா?''

''இல்லை. எங்கள் புரோகிதரின் குடும்பத்தைத் தவிர வேறு யாரையும் எனக்குத் தெரியாது. இவர்களை எல்லாம் தெரிந்துகொள்ள வியாபாரிகளாகிய நமக்கு நேரமெங்கே இருக்கிறது?''

''அடே! அஸ்வகோஷினுடைய கல்வியறிவின் புகழ் சாகேதத்திற்கு வெளியே தூர தூரங்களிலும் பரவியிருக்கிறது. அவன் வேதங்களையும், கலைகளையும் கரைகண்டவன். இது உனக்குத் தெரியாதா?''

''ஆனால் அவனுக்கு வயது இருபத்தி நான்கிற்குமேல் இருக்காது போலிருக்கிறதே!''

''ஆம்! இந்த இளமையிலேதான், அவன் கல்வியிலே கரைகண்டிருக்கிறான். ஜனங்கள் அவனுடைய கவிதைகளைத் தெருவெல்லாம் முழக்குகிறார்கள்.''

''ஓ! கவி அஸ்வகோஷா? நம்முடைய யுவ—யுவதிகளின் நாவிலே நடனமாடும் காதல் கீதங்களை இயற்றியவன் இவன் தானா?''

''ஆம்; அதே அஸ்வகோஷ்தான். ஆனால் அந்தயுவதியின் பெயரென்ன?''

''கிரேக்ககுலப் பிரமுகரும், கோசல நாட்டின் மிகப் பெரிய வியாபாரியுமான தத்தமித்திரரின் புதல்வி பிரபா.''

''அதனால்தான் அவள் ஈடு இணையற்ற அழகியாய் இருக்கிறாள். பார்க்கும்பொழுது, அவளுடைய உடல் மலரினும் மிருதுவாகத் தோன்றுகிறது. ஆனால் நீந்தும்பொழுது எவ்வளவு உறுதியாயிருக்கிறது!''

"அவளது பெற்ருேர்கள் ஆரோக்கியமும், திடகாத்ர மும் உடையவர்கள்."

ஊர்வலம் நகர உத்தியானவனத்தை அடைந்ததும் நீச்சல் போட்டியிலே வெற்றி பெற்ற அஸ்வகோஷ ும்பிரபா வும், மிக்க மரியாதையோடும் புகழுரைகளுடனும், பொது ஜனங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்கள். ஆர வாரப் புகழுரைகளைக் கேட்ட அவ்விருவரும், ஒருவரை யொருவர் நோக்கியபொழுது, அவர்கள் பார்வையிலேகூச்ச மும் நாணம் கலந்திருந்தன.

# 3

சாகேதத்தின் உத்தியானவனம், சேனுதிபதி புஷ்ய மித்திரன் ஆட்சிக்காலத்து ஞாபகச்சின்னம். புஷ்யமித்திரன் இதை நிர்மாணிப்பதற்கு மிகுந்த உழைப்பும் ஏராளமான பணமும் செலவு செய்திருக்கிருன். இப்பொழுது அவனு டைய வம்சத்தாரின் ஆட்சியுமில்லை; சாகேதம் எந்த அரச வம்சத்தின் தலைநகராயுமில்லை. ஆயினும் இந்த உத்தியான வனம் சாகேதத்தின் கௌரவம் என்று கருதி நகரசபை அதை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வருகிறது. 200 வரு டங்களுக்கு முன்ஞல் புஷ்யமித்திரனின் ஆட்சிக்காலத்தைப் போலவே, இன்றும் அதன் அழகும் உபயோகமும் இருக் கிறது. அந்தத் தோட்டத்தின் மத்தியிலே ஓர் அழகிய குளம் இருக்கிறது. அதனுடைய களங்கமற்ற நீல நிறத் தண்ணீரிலே, வெள்ளை சிவப்புத் தாமரைகள் மலர்ந்திருந் தன. ஜோடி அன்னங்கள் அவற்றிடையே நீந்தித் திரிந் தன. நான்கு புறமும் வெள்ளைக் கற்களாலான அழகிய படிக்கட்டுகள் அமைந்திருந்தன. அதன் கரைகள் பசிய புற்களால் மூடப்பட்டிருந்தன. பூந்தோட்ட மெங்கும் ரோஜா, முல்லை, சம்பங்கி முதலிய மலர்கள் நிறைந்திருந் தன. அசோக மரங்களும், தேவதாரு மரங்களும் வரிசை வரிசையாக நின்றன. அங்கங்கே கொடிகளாலும், மலர்களா லும் ஆக்கப்பட்ட கொடி வீடுகள் காணப்பட்டன. யுவதி களுக்கும் யுவர்களுக்கும் அந்தக் கொடி வீடுகள்தானே கந் தர்வ உலகம். வெள்ளைக்கல்லால் நிர்மாணிக்கப்பட்டு பசும் புல் போர்வை போர்த்திய செயற்கை மலை ஒன்றும் அங்கே இருந்தது. அழகாகத் தண்ணீரை வாரி இறைக்கும் செயற்கை நீர் ஊற்றுக்களும் அங்கங்கே அமைக்கப்பட்டிருந்தன.

தினந்தோறும் பிற்பகலில், அங்குள்ள ஒரு கொடி வீட்டைச் சுற்றிச் சாகேதத்தின் யுவ—யுவதிகளின் கூட்டம் நிறைந்திருக்கும். உள்ளே இடம் கிடைக்காதவர்களே அந்தக் கொடி வீட்டின் வெளியில் நிறைந்திருந்தார்கள். எல்லோரும் மௌனமாகவும், அமைதியாகவும் உட்கார்ந்து கொண்டு, கொடி வீட்டிலிருந்து வரும் ஓசையைக் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தனர். உள்ளே ஒரு கல் மேடைமீது, ஒரு மாதத்திற்கு முன்னால் நீச்சுப்போட்டியிலே கிடைக்கவிருந்த வெற்றியைப் புறக்கணித்துவிட்ட அந்த வாலிபன் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன், அணிந்திருந்த ஆடை மிக மெல்லியதாய் இருந்தது. தனது பொன்னிறக் கேசத்தைக் கொண்டையாக உச்சியிலே அள்ளி முடிந்திருந்தான், அவன் கையிலே ஒரு மகரயாழ் இருந்தது. அவனுடைய நீண்ட விரல்கள் அந்த யாழின்மீது அலட்சியமாய்ச் சஞ்சரித்து, அவன் விரும்பியவாறு ஒலி எழுப்பிக் கொண்டிருந்தன. அந்த வாலிபன் பாதிமூடிய கண்களோடு பாடிக்கொண்டிருந்தான். அந்தப் பாடல் பிறர் செய்ததல்ல. அவனே இயற்றியது. வசந்த கோகிலம் என்ற அந்த சமஸ்கிருதப்பாட்டு முடிந்ததும், அடுத்து ஒரு பிராகிருதப்* பாட்டைப் பாடவிரும்பினான்; ஏனெனில், அவன் பாடலைக் கேட்பதற்காக அங்கு கூடியிருந்தவர்களில் பெரும்பாலோர், பிராகிருதப் பிரியர்கள். அவன் சமீபத்திலே இயற்றிய 'ஊர்வசி வியோகம்' என்ற பிராகிருதப் பாடலைப் பாடத் தொடங்கினான்;—திடீரென்று ஊர்வசி மறைந்துவிட்டாள், புருரவன் 'ஏ! அப்சரா!—(அப்சரா—தண்ணீரில் நீந்துகிறவள்) எனக் கூவி, மலை, நதி, குளம், காடு, சோலை எங்கெல்லாமோ தேடுகிறான். அந்த அப்சரஸின் தரிசனம் அவனுக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் அவளுடைய குரலொலி காற்றிலே மிதந்து வருகிறது. புரூவரன் கண்ணீர் விட்டு அழுகிறான்—இந்தக் கட்டத்தைப் பாடும்பொழுது பாடுகிறவனின் கண்களிலிருந்து கண்ணீர் சிந்துகிறது. கேட்கிற கூட்டமும் அவனோடு சேர்ந்து கண்ணீர் சிந்துகிறது.

சங்கீதம் முடிந்ததும் கூடியிருந்தவர்கள் ஒவ்வொருவராக எழுந்து செல்லத்தொடங்கினர். அஸ்வகோஷ்

---

*பிராகிருதம்—சமஸ்கிருதத்திற்குமுந்திய ஆரிய பாஷை. அதிலிருந்துதான் சமஸ்கிருதம் முதலிய எல்லா ஆரியபாஷைகளும்தோன்றின. பிராகிருதம் என்றால் பழைய மூலபாஷை என்றும், சமஸ்கிருதம் என்றால் திருந்திய நாகரிக பாஷை என்றும் பொருள்.

வெளியே வந்ததும், அவனுக்குப் பரிச்சயமான சில யுவர்களும்—யுவதிகளும் அவனைச் சூழ்ந்து நின்றனர். அவர்களில் பிரபாவும் ஒருத்தி எனச் சொல்லவும் வேண்டுமா? ஒரு வாலிபன் முன் வந்து,

''மகாகவி!''

''மகாகவியா? நான் சாதாரணக் கவிகூட இல்லையே?''

''என் மனத்திலே இருக்கிற உணர்ச்சியை வெளியிட அனுமதியுங்கள் கவிஞரே! சாகேதத்தில் இருக்கும் கிரேக்கர்களாகிய நாங்கள், ஒரு சிறிய நாடகசாலையை அமைத்திருக்கிறோம்.''

''நாட்டியம் ஆடுவதற்காகவா? எனக்கும் நாட்டியத்திலே விருப்பம் உண்டு.''

''நாட்டியத்திற்காக மட்டுமல்ல, நடிப்பதற்குங்கூட.''

''நடிப்பதா?''

''ஆம்; கிரேக்கமுறையிலே உள்ள எங்களது நடிப்பு ஒரு விசேட அம்சமுடையது கவிஞரே! அதில் வெவ்வேறு காலம் வெவ்வேறு இடத்தைப்பற்றிய பிரதிபலிப்புள்ள சித்திரக்கலைகளை உபயோகிக்கிறோம். எல்லா சம்பவங்களையும் நேரில் நடப்பதுபோல் காட்ட முயற்சி செய்கிறோம்.''

''நான் சாகேதத்தில் பிறந்திருந்தும், இவ்வளவு சிறந்த நடிப்புக் கலையைப் பார்க்காமலிருந்தது வருந்துதற்குரிய விஷயம்.''

''எங்கள் நடிப்பைப் பார்ப்பவர்கள், இங்குள்ள சில கிரேக்கக் குடும்பத்தாரும்,எங்களுடைய நண்பர்களும்தான். ஆகவே, பெரும்பாலான சாகேதவாசிகளுக்கு எங்கள் நடிப்பைப்பற்றி ஒன்றும் தெரியாது.''

''நாடகம் என்று சொல்லுங்கள்.''

''ஆம்; நாடகந்தான். இன்று நாங்கள் ஒரு நாடகம் போடப் போகிறோம், நீங்களும் வந்திருந்து அதைப் பார்க்க வேண்டுமென்பது எங்கள் ஆசை.''

''ஆனந்தமாக வருகிறேன். நீங்கள் என்னிடம் எல்லையற்ற அன்பு காட்டுகிறீர்கள்.''

அவர்களோடு கூடவே அஸ்வகோஷும் சென்றான். மேடைக்குப் பக்கத்திலே அவனை உட்கார்த்தி வைத்தனர். அன்று ஒரு கிரேக்க சோக நாடகம் பிராகிருத பாஷையிலே நடிக்கப்பட்டது. கிரேக்ககுல யுவர்களும்-யுவதிகளும் அதில் பங்கெடுத்துக் கொண்டிருந்தனர். நடிகர்களும் நடிகைகளும் கிரேக்க நாட்டினரைப் போலவே உடை உடுத்து நடித்தனர். ஒவ்வொரு காட்சிக்கும் உபயோகிக்கப்பட்ட சித்திரத் திரை கிரேக்க முறையிலே இருந்தது. கதாநாயகியாக நடித்தவள் நாம் நன்கறிந்த பிரபா. அவளுடைய நடிப்புத் திறமையிலே, அஸ்வகோஷ் அப்படியே முழுகிப் போய்விட்டான். நாடகத்தின் மத்தியில் ஒரு பொருத்தமான கட்டத்திலே, ஊர்வசி வியோகத்தைப் பாடும்படி அவனைக் கிரேக்க வாலிபர்கள் கேட்டுக் கொண்டார்கள். அவன் மறுக்காமல் மேடை மீதேறினான். அவனுடைய கீதம் அவனுடைய கண்களிலிருந்து மட்டும் கண்ணீரைக் கொண்டு வரவில்லை. அங்கு கூடியிருந்த அனைவரையும் கண்ணீர் பெருக்கும்படி செய்துவிட்டது. அந்தச் சமயத்தில் அவனுடைய பார்வை, பிரபாவின் அன்பு நிறைந்த கண்களைச் சந்தித்தது.

நாடகம் முடிந்ததும் நாடகத்திலே நடித்த யுவர்களும், யுவதிகளும் அஸ்வகோஷுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். அஸ்வகோஷ், "இந்த சாகேத நகரத்திலே வாழ்ந்து கொண்டிருந்தும், நான் இந்த அற்புதமான கலையைப்பற்றிச் சிறிதும் அறியாமல் இருந்திருக்கிறேன். நான் இதுவரை பார்த்திராத ஒரு 'பிரபாலோக' (ஜோதி உலக)த்தை எனக்குக் காண்பித்தீர்கள். நண்பர்களே! நான் உங்களுக்கு மிகுதும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று மகிழ்ச்சியோடு கூறினான்.

"பிரபாலோகம்" என்று அவன் கூறியபொழுது, யுவதிகளெல்லாம் பிரபாவைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தனர்.

"என்னுடைய மனதிலே ஓர் எண்ணம் உதிக்கிறது. நீங்கள் இன்று பிராகிருத பாஷையிலே கிரேக்க நாடகத்தை நடத்தினீர்கள். அதே தோரணையில் நாடக முறையை அனுசரித்து, நம் நாட்டுக் கதைகளைக் கொண்டு நாடகங்கள் தயாரிக்கலாம் என்று கருதுகிறேன்" என்றான் அஸ்வகோஷ்.

"கவிஞரே! நீங்கள் நினைத்தால் கிரேக்க நாடகங்களை விடச் சிறந்த நாடகங்களைத் தயாரிக்க முடியும் என்று நாங்கள் நிச்சயமாக நம்புகிறோம்."

''அப்படிச் சொல்லாதீர்கள். கிரேக்க நாடகாசிரியர்களின் மாணவன் ஸ்தானத்தை அடையக்கூட எனக்குத் தகுதியிருக்கிறதோ என்னவோ! நல்லது. ஊர்வசி வியோகத்தையே ஒரு நாடகமாக எழுதலாமா?''

''ரொம்ப நல்லது! நாங்கள் அதை நடிக்க மகிழ்ச்சியோடு காத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. புரூரவாவின் வேஷத்தை நீங்கள் தான் தாங்கவேண்டும்.''

''எனக்கு ஆட்சேபணை இல்லை. சிறிது பயிற்சி எடுத்துக் கொண்டால் நானும் பிழையின்றி நடிப்பேன் என்றே கருதுகிறேன்.''

''காட்சிக்கு வேண்டிய திரைகளை எழுத ஏற்பாடு செய்கிறோம்.''

''காட்சித் திரைகளிலே புரூரவாவின் தேசக்காட்சிகள் சரியாய் இருக்கும்படி கவனித்துக் கொள்ள வேண்டும்; எனக்கும் சிறிது சித்திரம் எழுதத் தெரியும். சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் நானும் வந்து உங்களுக்குச் சிறிது உதவி செய்கிறேன்.''

''உங்களுடைய ஆலோசனையின் பிரகாரமே காட்சிகளைத் தயாரிப்பதுதான் நல்லது. மேலும் பாத்திரங்களின் வேஷம், உடை முதலியவற்றையும் நீங்களே நிர்ணயிக்க வேண்டும். மொத்தம் எத்தனைப் பாத்திரங்கள்?''

''யார் யார், மொத்தம் எத்தனை பாத்திரங்கள் என்றெல்லாம் இப்பொழுது நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் பாத்திரங்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பது நல்லது. எத்தனை இருக்கலாம்?''

''பதினாறிலிருந்து இருபது வரை நாங்கள் சுலபமாகத் தயார் செய்துவிட முடியும்.''

''பாத்திரங்களின் எண்ணிக்கை பதினாறுக்குள் இருக்கும்படி பார்த்துக் கொள்கிறேன்.''

''புரூரவாவாக நீங்கள் தான் நடிக்க வேண்டும். ஊர்வசி வேடத்திற்கு எங்கள் பிரபா பொருத்தமாக இருப்பாளல்லவா? நீங்கள் தான் இன்று அவளது நடிப்பைப் பார்த்தீர்களே.''

''அனுபவமற்ற என் கண்களுக்கு, அவளுடைய நடிப்பிலே எவ்விதக் குற்றமும் தென்படவில்லே.''

''பிரபாதான் ஊர்வசியாக நடிக்கவேண்டும். எங்களுடைய சபையிலே யாருக்கு எந்த வேடத்தைக் கொடுத்தாலும், அவர்கள் மறுக்கக் கூடாதென்பது நியமம்.''

பிரபாவின் கண்களிலே சிறிது தயக்கம் காணப்பட்டது. ஆனல் அந்த வாலிபத் தலேவன், ''என்ன பிரபா! சம்மதந்தானே'' என்று கேட்டபொழுது, அவள் சிறிது தயங்கினுலும் ''ஆம்'' என்ற சொல்தான் அவள் வாயிலிருந்து வந்தது.

## 4

அஸ்வகோஷ் அந்தக் கிரேக்க நாடக சபைத் தலேவன் புத்தப் பிரியனேடு அநேக கிரேக்க நாடகங்களின் பிராகிருத மொழிபெயர்ப்பைப் படித்தான். அதிலே காணப்படும் களம், அங்கம் என்ற வார்த்தைகளின் சங்கேதப் பொருள்களேப் பற்றியும், காட்சியமைப்புகளேப் பற்றியும் அவனேடு விவாதித்தான். கிரேக்க நாடகப் பாணியைப் பின்பற்றிய அஸ்வகோஷ், அந்தக் கிரேக்கக் கலேயின் ஞாபகார்த்தமாக, நாடகத்திலே உபயோகிக்கப்படும் சித்திரத் திரைக்கு 'யவனிகா' (யவன்—கிரேக்க) என்று பெயர் வைத்தான். சமஸ்கிருதமும் பிராகிருதமும் கலந்த பாஷையில், இடையிடையே பாட்டுக் கலந்த வசனத்தில் நாடகத்தை எழுதி முடித்தான். அந்தக் காலத்தில், பிராகிருதமும் சமஸ்கிருதமும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. நகரவாசிகள் எல்லோரும் இரண்டு பாஷைகளேயும் சுலபமாகப் புரிந்து கொள்வார்கள். இந்தியாவிலே முதலாவது தோன்றிய நாடகம் 'ஊர்வசி வியோகம்'. இந்தியாவின் முதல் நாடக ஆசிரியன் அஸ்வகோஷ். இது கவிஞனுடைய முதல் முயற்சி என்ருலும், அவனுடைய புகழ்பெற்ற 'ராஷ்டிர பாலன்', 'சாரிபுத்ரன்' முதலிய நாடகங்களே விட எந்த விதத்திலும் குறைந்ததல்ல.

மேடைத் தயாரிப்பிலும், ஒத்திகைகளிலும், முழுக் கவனத்தையும் செலுத்திய இளங்கவி, எத்தனேயோ நாள் உணவு

உறக்கத்தையும் மறந்திருந்தான். அந்த ஓய்வு ஒழிவற்ற நாட்களை, அவன் தன் வாழ்க்கையிலே மிக இனிமையான காலம் என்று கருதினன். நாள்தோறும் பல மணி நேரம் பிரபாவும் அவனும் நாடகத் தயாரிப்புகளிலே ஈடுபட்டிருப் பார்கள். நீச்சுப்போட்டி அன்று அவர்கள் இதயத்திலே ஊன் றப்பட்ட காதல் விதை, இப்பொழுது முளைவிட்டுத் தளிர்க்க ஆரம்பித்தது. கிரேக்க வாலிபர்களும் யுவதிகளும், அஸ்வ கோஷைத் தங்களுள் ஒருவனுக ஆக்கிக் கொள்ள வேண்டு மென்று ஆசைப்பட்டார்கள். ஆகையால், அந்தக் காதலைத் தூண்டி வளர்க்கத் துணை புரிவது தங்கள் பாக்கியம் என்று கருதினுர்கள். ஒரு நாள் நீண்ட நேரம் திரையிலே சித்திரக் கோலை ஓடவிட்டுக் கொண்டிருந்த அஸ்வகோஷ், களைத்துப் போய், நாடக சாலையின் பக்கத்திலே அமைந்துள்ள பூந் தோட்டத்திலே போய் அமர்ந்தான். அந்தச் சமயத்தில் அங்கு வந்த பிரபா, தனக்கே சொந்தமான இனியகுரலிலே,

''கவிஞரே! நீங்கள் எதை வைத்துக் கொண்டு ஊர்வசி வியோகக் கவிதையை இயற்றினீர்கள்?''

''ஊர்வசி—புரூரவாவின் கதையை வைத்துக்கொண்டு தான்.''

''இந்தக் கதை எனக்குத் தெரியும். ஆனுல் ஊர்வசியை 'அப்சரா' என்று அழைத்தாயே?''

''ஊர்வசி உண்மையிலே அப்ஸராதான்.''

''அப்படியானுல் புரூரவா அவளைப் பிரிந்து மலையிலும், காட்டிலும், நீர் ஓடையிலும், குளத்திலும், சோலையிலும் தேடுவதாக வருணித்திருக்கிருயே?''

''அந்த நிலைமையில், புரூரவா அப்படிச் செய்வது இயற் கையே.''

''ஊர்வசி வியோகத்தின் பாடகர் கொடி வீட்டிலிருந்து அதைப் பாடும் பொழுது, தனது கீதத்திற்குத் துணையாக வீணை ஒலியை இணைத்ததைப் போல், கீதத்தின் கருத்தோடு தனது கண்ணீரையும் இணைந்தோடச் செய்யக் காரணம் என்ன?''

''பாடகனும் நடிகனும் தன்னை மறந்து கருத்திலே ஈடுபட்டு விட வேண்டும் பிரபா.''

''இல்லை; நீ என்னிடம் உண்மையைத் தெளிவாகச் சொல்ல விரும்பவில்லை.''

''நீ என்ன நினைக்கிறாய்?''

''நீ பழைய ஊர்வசி வியோகக் கதை பற்றிப் பாடவில்லை என்று நான் கருதுகிறேன்.''

''அப்புறம் மேலே...''

''உன்னுடைய ஊர்வசி (ஊர்வசி—உள்ளே வசிப்பவள்) அப்சரா (அப்-தண்ணீர்; சரா-நீந்துகிறவள்) தண்ணீரில் நீந்துகிறவள் தானே?''

''இன்னும் மேலே...''

''இந்த ஊர்வசியை புரூரவன், இமயம் போன்ற மலைகளிலோ, கானகத்திலோ, அருவியிலோ, குளத்திலோ தேடவில்லை. சாகேதத்தின் சரயூவிலே, உத்தியான வனத்திலே, அதன் குளத்திலே, செயற்கை மலையிலே, எழிற்கொடி வீடுகளிலே தேடி அலைகிறான்.''

''இன்னும் மேலே...''

''அவனுடைய கண்கள் பழைய காலக் கற்பனைப் புரூரவனுக்கு அனுதாபம் காட்டிக் கண்ணீரைச் சொரியவில்லை. தன்னுடைய இதயத்தின் தாபத்தைத் தணிப்பதற்காகவே கண்ணீரைச் சொரிகின்றன.''

''நானும் ஒரு வார்த்தை சொல்லலாமா பிரபா?''

''சொல்; நன்றாகச் சொல். நானே அதிகமாகப் பேசிவிட்டேன்.''

''அன்று தினம் கொடி வீட்டிலிருந்து வெளிவரும் பொழுது உனது இந்த ஆளை விழுங்கும் கண்கள் சிவந்து வாடி இருக்கக் காரணம் என்ன?''

''உன்னுடைய அந்த அற்புதமான கானம் என்னை அழச் செய்து விட்டது.''

''இல்லை; உனது பிரிவால் அந்தக் கீதத்தை இயற்றும் சக்தியை எனக்கு அளித்தாய்.''

''ஆனல், உனது கவிதையில் வரும் ஊர்வசி கல்மனம் படைத்தவள். நீ அப்படித்தானே அவளைச் சித்திரித்திருக்கிருய்?''

''ஏனெனில், நம்பிக்கை இழந்து கவலையில் ஆழ்ந்திருந்தேன்.''

''என்ன காரணம்?''

''அந்த மின்னல் ஒளியை மறுபடியும் பார்க்க முடியாதென்று நினைத்தேன். அவள் என்னை மறந்து விட்டிருக்கலாமல்லவா?''

''நீ அவ்வளவு பலவீனமானவனு? அத்தனை அவநம்பிக்கையா?''

''நம்பிக்கை உண்டாவதற்கு ஒரு காரணம் ஏற்படாத வரை, மனிதன் பலவீனனுகவே இருக்கிறன். அவநம்பிக்கையைத் தவிர அவனுக்கு வேறு என்ன ஏற்படமுடியும்?''

''சாகேதத்தில் மட்டுமல்ல; இந்தப் பார் முழுதும் புகழ் படைத்த கவிஞன் நீ, சாகேத நகரத்தின் நீச்சுப் போட்டியிலே வெற்றி பெற்ற வாலிபன் நீ. உன்னுடைய கல்வியின் பெருமையைப் புகழாத வாய் சாகேதத்தில் உண்டா! இந்த சாகேத நகரத்தின் அழகிகள் ஒவ்வொருத்தியும் உன்னைத் தன் கண்ணின் மணியாக ஆக்கிக் கொள்ளத் துடிக்கிறர்களே!''

''இவைகளாலெல்லாம் எனக்கென்ன பலன்? எனக்கு சர்வமும் என்னுடைய ஊர்வசிதான். அவளைச் சேர்ந்தாற்போல் இரண்டு நாட்கள் பார்க்காவிட்டால், எனக்கு வாழ்க்கையே சாரமற்றதாகி விடுகிறது. உண்மையில் சொல்லுகிறேன் பிரபா! எனது இதயம் இவ்வளவு பலவீனமானதாய் இருக்குமென்று நான் எப்போதும் கருதியதில்லை. உன்னை ஒரு வாரம் பார்க்க முடியாமற் போய்விட்டால், என்ன ஆகிவிடுமோ தெரியாது?''

''கவி! நீ உனது சுயநலத்தை அதிகமாக வளர்த்துக் கொண்டு விடாதே. நீ இந்த தேசத்தின் மகான்; கவிஞன். உன்னிடத்திலே இருந்து இந்த நாடு எவ்வளவோ எதிர் பார்க்கிறது. உன்னுடைய ஊர்வசி நாடகத்தைப் பற்றித் தெருவெல்லாம் என்ன பேச்சாய் இருக்கிறது தெரியுமா?''

''நான் ஒன்றும் கேள்விப்படவில்லை.''

''கடந்த வாரம், பருகச்சத்திலிருந்து எனது உறவின ரான கிரேக்க வியாபாரி ஒருவர் வந்திருந்தார். பருகச்சத்தில் கிரேக்க வியாபாரிகள் அதிகமாக இருக்கிறார்கள். சாகேத வாசிகளாகிய நாங்கள் ஹிந்துக்களாகி விட்டோம். ஆனால் பருகச்சத்தில் வசிப்பவர்களோ, தங்கள் கிரேக்க பாஷையை இன்னும் மறந்துவிடவில்லை. பருகச்சத்திற்கு கிரேக்க நாட்டி லிருந்து வியாபாரிகளும், வித்துவான்களும் அடிக்கடி வருவ துண்டு. இங்கு வந்திருந்த அந்த உறவினர், கிரேக்க இலக் கியத்தில் ஒரு பெரிய பண்டிதர். அவர் உன்னுடைய நாட கத்தை கிரேக்கநாட்டின் தலைசிறந்த நாடகாசிரியர்களான 'ஏம்பிதோகல்'', 'ஈரோபிதஸ்' முதலியவர்களின் சிருஷ்டி யோடு ஒப்பிட்டார். அவர் இதைக் கிரேக்க மொழியில் மொழி பெயர்த்து கிரேக்க அரசன் தாலமியிடம் அனுப்பப் போவதாகச் சொன்னார். பருகச்சத்திலிருந்து கிரேக்க நாட் டிற்கு அடிக்கடி கப்பல்கள் போய் வந்து கொண்டிருக் கின்றன. இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த பொழுது எனது இதயம் கர்வத்தால்மலர்ந்துபொங்கியது.''

''என்னைப் பொறுத்தவரை, உனது இதயத்தின் பாராட்டுதலே சகலமும்.''

''கவி! நீ உனது மதிப்பைச் சரியாக உணரவில்லை.''

''எனது மதிப்பை உணர்த்தும் உரைகல் நீதான் பிரபா! அது எனக்கு நன்றாகத் தெரியும்.''

''இல்லை; நீ இப்படியாகிவிடக் கூடாது. பிரபாவின் காதலன் அஸ்வகோஷையும், இந்த யுகத்தின் மகாகவி அஸ்வகோஷையும், நீ தனித்தனியாகப் பிரித்துவிட வேண் டும். பிரபாவின் காதலன் என்ன வேண்டுமானாலும் பேச லாம், சொல்லலாம். ஆனால் மகாகவி அஸ்வகோஷ் அவளை விட உயர்ந்தவன்; அகில உலகத்திற்கும் சொந்தமானவன்.''

''இந்த விஷயத்தில் நீ என்ன சொல்கிறாயோ, அதன் படி நடக்க நான் தயாராய் இருக்கிறேன்.''

''ஓ! இவ்வளவு பெரிய பாக்கியசாலியாக ஆக முடியு மென்று நான் கற்பனைகூடச் செய்ததில்லை.''

''ஏன்?''

''நீ என்னை மறந்துவிட்டிருப்பாய் என்று நினைத்தேன்.''

''நீ என்ன அவ்வளவு சாதாரணமா, மறந்துவிட?''

"உனக்கு முன்னிலையில் நான் மிகச் சாதாரணந்தான். இன்றும் அப்படியே."

"உன்னால்தான் எனக்குப் புதிய கவிதா சக்தி கிடைத்தது. எனது கவிதைகளிலே புதிய ஜீவனும் புதிய வேகமும் இருப்பதற்கு நீதான் காரணம். ஊர்வசி வியோகக் கவிதையையும், அந்த நாடகத்தையும் எழுதுவதற்கு நீயே தூண்டுகோல். கிரேக்க நாட்டிலிருந்து வந்த நாடகக் கலையை நம் தேசப் பண்பிற்கேற்ப மாற்றி, நம் நாட்டுக்கலையாக்கும் சக்தியை நீதான் எனக்கு அளித்தாய். பிரபா! நான் உன்னை எப்படி மறந்துவிட முடியும்?"

"எந்த வழியாகப் பார்த்தாலும், நான் உன்னை நெருங்குவதற்குத் தகுதியற்றவளாகவே தோன்றிற்று. ஒவ்வொன்றாக உனது மேதையையும், ஒப்பற்ற திறமையையும் நான் உணர உணர, எனது நிராசைதான் அதிகரித்துக்கொண்டே போயிற்று. சாகேதத்தின் அழகுத் தெய்வங்களான யுவதிகளெல்லாம், உன் பெயரைக் கேட்டுத் தன் வயமாகும் பொழுது, எனது நம்பிக்கை முற்றிலும் என்னைக் கைவிட்டு விட்டது. மேலும், நீ உயர்குலப் பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று கேள்விப்பட்டபொழுது, அயர்ந்தே போய்விட்டேன். பிராமண சமூகத்திற்கு அடுத்த ஸ்தானத்தை வகிக்கும் க்ஷத்திரிய கிரேக்க குலத்தில் நான் பிறந்தவள் என்றாலும், பெண்ணினுடைய தாய் தந்தையர்களின் ஏழு தலைமுறைகளையும் தோண்டித் துருவித் தெளிவேற்படுத்திக்கொள்ளாமல், பெண் கொள்ள மறுக்கும் உயர் குலப் பிராமணக் குடும்பம், என் காதலை வரவேற்குமென்று நான் கனவு காண முடியுமா?"

"உன் மனத்தை இவ்வளவு தூரம் துன்பம் அடையச் செய்வதற்குக் காரணமாயிருந்ததை நினைத்து வருந்துகிறேன் பிரபா!"

"ஆனால் நீ..." அதற்குமேல் பேசமுடியாமல் அவள் தொண்டை அடைபட்டுவிட்டது.

பிரபாவின் நீர் நிறைந்த கண்களிலே அஸ்வகோஷ் முத்தமிட்டான். அவளை அப்படியே தழுவிக்கொண்டு,

"பிரபா! அஸ்வகோஷ் எப்பொழுதும் உன்னுடையவனே. உன்னிடமிருந்து அவனைக் காலமும் மரணமுங் கூடப் பிரிக்க முடியாது."

பிரபாவின் கண்கள் நீரைப் பெருக்கிக் கொண்டே இருந்தன. அஸ்வகோஷ் அவளைத் தழுவியவாறே கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

'ஊர்வசி வியோகம்' மிக நன்றாக நடிக்கப்பட்டது. சாகேத நகரத்தின் பிரபலஸ்தர்கள் எல்லோரும் நாடகத்திற்கு வந்திருந்தார்கள். நடிப்புக்கலை, இவ்வளவு பூரணத்துவம் பெற்று உயர்நிலையை அடையமுடியுமென்று அவர்கள் கருதியதே இல்லை. கடைசித் திரை விழப்போகும் சமயத்தில், அஸ்வகோஷ் பன்முறை திரும்பத் திரும்ப, ''நான் கிரேக்க நாடகக் கலையிலிருந்தே இவைகளைக் கடன் வாங்கினேன்'' என்று கூறினன். ஆயினும் யாரும் அதை ஓர் அந்நிய நாட்டுக் கலையென்று நம்பமுடியாதபடி, அதில் முழுதும் பாரதத்தன்மை நிறைந்திருந்தது.

அஸ்வகோஷினுடைய சமஸ்கிருத, பிராகிருதக் கவிதைகள், சாகேத நகரத்தையும் கோசல நாட்டு எல்லையையும் தாண்டிப் பரவியதுபோலவே, அவனுடைய நாடகமும் தேசமெங்கும் பரவத் தொடங்கிற்று. உஜ்ஜைனி, தஷபூர், சுப்பாரக், பருகச்சம், சியால்கோட், தட்சசீலம், பாடலிபுரம் முதலிய பெரிய பெரிய நகரங்களிலே உள்ள நாடக மேடைகளை அவனுடைய நாடகங்கள் வேகமாகக் கைப்பற்றிக் கொண்டன. அரசர்களும், வியாபாரிகளும் அவனுடைய நாடகங்களை ஆவலோடு பார்த்தார்கள்.

## 5

அஸ்வகோஷ் நாடக மேடையிலே நடிப்பதும், ஒரு கிரேக்கப் பெண்ணைக் காதலிப்பதும் அவனுடைய தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் இருக்கமுடியாது. அதைக் கேள்விப்பட்டதும் அவனுடைய தந்தை மிகவும் கவலையடைந்தார். பிராமணன், சுவர்ணுட்சியிடம் மகனுக்கு அறிவுறுத்தும்படி கூறினர். பிராமண குலத்தவர்களாகிய நமக்கு இந்தச் சம்பந்தம் தகாது என்று தாய், மகனிடம் கூறியபொழுது வேதங்களையும், சாஸ்திரங்களையும் கரைகண்ட ஞானி அஸ்வகோஷ் பழங்கால மகரிஷிகளின் சரித்திரங்களிலிருந்தும் சொற்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான உதாரணங்களை தாய்க்கு எடுத்துக் காட்டினன். (அவன்

தாய்க்குச் சொல்லியவற்றுள் பலவற்றைச் சேர்த்து, பிற்காலத்தில் 'வஜ்ரசேதிகா' என்ற நூலாக்கினான். அது இன்றும் 'வஜ்ரசேதி கோபநிஷதம்' என்ற பெயரால் புகழ் பெற்று, உபநிஷத மாலைகளிலே சேர்க்கப்பட்டிருக்கிறது) இதைக் கேட்ட தாய்,

''நீ சொல்வதெல்லாம் சரி மகனே! இன்றையப் பிராமணர்கள் அந்தப் பழங்காலப் பழக்க வழக்கத்தை ஒப்புக் கொள்வதில்லையே?''

''ஆனால், நான் பிராமணர்களுக்கு ஒரு புதிய நற்பழக் கத்தைச் சிருஷ்டிப்பேன்.''

அவன் சொல்லிய சமாதானங்கள் தாயைத் திருப்திப் படுத்தவில்லை. ஆனால் முடிவிலே, ''பிரபாவையும் எனது உயிரையும் பிரிக்க முடியாது'' என்று மகன் சொல்லி யதும் தாய் உடனே மகன் கட்சியைச் சேர்ந்து விட்டாள். ''மகனே! நீதான்எனக்கு சகலமும்'' என்று கண்ணீர்பெருகக் கூறினாள்.

அஸ்வகோஷ், ஒருநாள் பிரபாவைத் தன் தாயிடம் அனுப்பி வைத்தான். அழகைப் போலவே அவளுடைய குணமும், சுபாவமும், உயர்ந்ததாக இருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த தாய், அந்த யுவதியை மனப்பூர்வமாக ஆசீர்வதித்தாள். ஆனால், பிராமணன் இதை ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. ஒரு நாள் தன் மகனை அழைத்து, ''மகனே! நாம் க்ஷத்திரியர்களைவிட உயர்ந்த பிராமண குலத்தவர்கள். ஐம்பது தலைமுறைகளாக, நம் வீட்டிற்கு உயர்குலப் பிராமணக் கன்னிகைகளே நாட்டுப் பெண்க ளாய் வந்திருக்கின்றனர். நீ இன்று இந்தச் சம்பந்தத்தை ஏற்றுக் கொண்டால், நம்முடைய எதிர்கால சந்ததியார்கள் எல்லோரும் ஜாதியிலிருந்துதள்ளப்படுவார்கள். நம்முடைய குலப்பெருமை அழிந்துவிடும்'' என்று கூறினான். ஆனால் அஸ்வகோஷ் பிரபாவைப் பிரிவது என்பதை நினைக்கக்கூட மறுத்துவிட்டான். பிராமணன் பிரபாவின் தாய் தந்தையர் களிடம் போய்க் கெஞ்சினான். பலனில்லை. முடிவிலே பிரபா வின் பாதங்களில் போய் விழுந்தான். ''உங்கள் கருத்தை அஸ்வகோஷுக்குத் தெரிவிக்கிறேன்'' என்று மட்டும் சொன்னாள் பிரபா.

# 6

பிரபாவும், அஸ்வகோஷனும் இப்பொழுது இணை பிரியாத் தோழர்களாகி விட்டனர். சரயூ நதிக்கரையாயிருந்தாலும் சரி, உத்தியான வனமாய் இருந்தாலும் சரி, நாட்டியச் சாலையாயினும் சரி, நாடக மேடையாயினும் சரி, எந்த இடமாயிருந்தாலும் அங்கு ஒருவரைப் பார்த்தால் மற்றொருவரும் இருப்பார்களென்று நிச்சயம் செய்துகொள்ளலாம். பிரபா சூரியனின் ஒளியைப்போல் அஸ்வகோஷின் இதயத் தாமரையை மலரச் செய்துகொண்டிருந்தாள். பால் போன்று பரந்து கிடக்கும் நிலவொளியிலே, சரயூநதிக்கரை மணற் பரப்பில் அவர்களை நாள்தோறும் காணலாம். அந்த எழிற் காட்சியிலே லயித்த அவர்கள் வெறும் காதல் பேச்சிலே நேரத்தைப் போக்குவதில்லை. வாழ்க்கை சம்பந்தப்பட்ட எத்தனையோ கம்பீரமான விஷயங்களைப்பற்றி, அந்த இளம் காதலர்கள் தர்க்கம் செய்வார்கள்.

ஒருநாள், சரயூ நதியின் நீல நீரை வெளுக்கச் செய்ய முயன்று கொண்டிருக்கும் நிலவொளியிலே அமர்ந்திருந்த பிரபாவின் அழகிய உருவத்தைத் தன் மனத்திரையிலே சித்திரமாகத் தீட்ட முயன்று கொண்டிருந்தான் அஸ்வகோஷ். திடீரென்று, அவன் முகத்திலே ஒரு பிரகாசம்தோன்றியது. ''பிரபா! நீதான் எனது கவிதை. உன்னால் தூண்டப்பட்டே நான் ஊர்வசி வியோக நாடகத்தை எழுதினேன். உன்னுடைய அழகும், அன்பும், நான் எத்தனையோ அழகிய காவியங்களை எழுதக் காரணமாயிருந்தன. 'கவிதை என்பது வெறும் மனக் கற்பனையிலே மலர்வதல்ல; சூழ்நிலையின் இயற்கை எழிலால் தூண்டப்பட்டுப் பொங்கிப் பொழிவது' என்ற தத்துவத்தை, உன்னால் நான் இன்று கற்றுக்கொண்டேன்.''

அஸ்வகோஷின் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே பிரபா மல்லாந்து படுத்திருந்தாள். அவளுடைய நீண்ட கூந்தல் மணலிலே கிடந்து புரள்வதைப் பார்த்த அஸ்வகோஷ் அவளுடைய தலையைத் தூக்கி மடியிலே வைத்துக் கொண்டான். அவனுடைய முகத்தையே கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்த பிரபா,

''நான் உன்னுடைய கருத்துரைகளை ஒப்புக்கொள்கிறேன். பரந்து கிடக்கும் இயற்கை அழகால் தூண்டப்பெருமல், உண்மையில் காவியங்கள் பூர்த்தியாவதில்லை. நானும் உன்னை வருணித்து ஒரு காவியம் செய்திருப்பேன்; உன் பெருமையைப் புகழ்ந்து பாடியிருப்பேன். ஆனல் கவிதை எனக்குக் கைவராத பொருளாகிவிட்டது. நான் அன்றே உன்னிடம் கூறினேன். உன்னுள்ளிருக்கும் இரண்டு அஸ்வகோஷ்களையும் தனித்தனியே பிரித்து விடவேண்டும். அதிலும் கவிஞன் அஸ்வகோஷுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். ஏனெனில், அவன் அகில உலகத்திற்கும் சொந்தமான பெருஞ்செல்வம். கால்காராம் மடத்தில் நாம் நேற்றுப் பார்த்தோமே அந்தப் பேரறிஞரான பிக்ஷுவை உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

''ஆம் அவர் ஒரு சிறந்த மேதாவி என்று தோன்றுகிறது.''

''ஆம்; அவர் உலகத்தில் பல பகுதிகளையும் பார்த்திருக்கிருர்; அவர் எகிப்து தேசத்து அலெக்ஸாண்டிரியா நகரில் பிறந்தவர்.''

''நானும் கேள்விப்பட்டேன். ஆனல் கிரேக்கர்கள் எல்லோரும் பௌத்த மதத்தையே அனுசரிக்கிருர்களே, ஏன்?''

''ஏனெனில், அவர்களுடைய மனப் போக்கிற்கும், சுதந்திர விருப்பத்திற்கும், பௌத்த மதம் மிகவும் அனுகூலமாயிருக்கிறது.''

''ஆனல், புத்தர் எல்லோரையும் துறவறத்தையும், தபசையும் மேற்கொண்டு வைராக்கிய வாழ்க்கை நடத்தும்படியல்லவா உபதேசித்திருக்கிருர்.''

''புத்த மதத்தைத் தழுவுபவர்களில், பிக்ஷுக்களை விட குடும்பஸ்தர்களே அதிகம். பௌத்தர்கள், குடும்ப வாழ்க்கையின் சுவையை அனுபவிப்பதில் யாருக்கும் குறைந்தவர்களல்ல.''

''இந்த நாட்டிலே எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. ஆனல், இந்த கிரேக்கர்கள் புத்த மதத்திலே அதிக அபிமானம் காட்டுவதின் காரணம் என்னவென்று என்னல் புரிந்துகொள்ள முடியவில்லை.''

''இங்குள்ள மதங்களிலே தாராளத் தன்மை வாய்ந்தது புத்த மதம் தான். எங்கள் முன்னோர்கள் முதன் முதலாகப் பாரத தேசத்திற்கு வந்தபொழுது, அவர்களை 'மிலேச்சர் கள்' என்று சொல்லி இந்நாட்டு மக்கள் வெறுப்போடு நோக்கினார்கள், இந்த நாட்டின்மீது படையெடுத்து வந்த கிரேக்கர்களைப் பற்றி நான் பேசவில்லை. ஆனால், இந்த நாட்டுக்கு வியாபார நோக்கத்தோடும், நட்புரிமையோடும் வந்த கிரேக்கர்களையும், இந்த நாட்டிலேயே தங்கி, இங்கேயே வசிக்கத் தொடங்கிய கிரேக்கர்களையும்கூட வெறுப்புடனேயே நடத்தினார்கள். ஆனால் பௌத்தர்களில் யாரும் அவர்களை வெறுக்கவில்லை மேலும், கிரேக்கர்கள் தங்கள் நாட்டிலேயே பௌத்த மதத்தைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டிருந்தார்கள்.''

''கிரேக்க நாட்டில் கூடவா?''

''ஆம்; சந்திரகுப்த மௌரியனின் பேரன் அசோகன் காலத்தில், எத்தனையோ பௌத்த பிக்ஷுக்கள் இங்கிருந்து கிரேக்க நாட்டிற்குச் சென்றார்கள். எங்கள் தர்ம ரட்சிதரும் கூட இந்த தேசத்தில் வந்து பிக்ஷுவானவர் அல்ல. அவர் எகிப்து நாட்டின் அலெக்ஸாண்டிரியா நகர மடத்திலே பிக்ஷுவானவர்.''

''நான் அவரை மறுபடியும் சந்திக்க விரும்புகிறேன் பிரபா!''

''அவசியம் சந்திக்க வேண்டும். அவர் உன்னோடு அனேக உயர்ந்த விஷயங்களைப் பற்றி தர்க்கிக்கக் கூடும். பௌத்த தர்ம விஷயங்களைப் பற்றி மட்டுமல்ல; கிரேக்க தத்துவார்த்திகளைப் பற்றியும் விவாதிக்கக் கூடும்.''

''கிரேக்க நாட்டில் தத்துவ ஞானிகளும் இருந்தார் களா?''

''பல மகத்தான தத்துவ ஞானிகள்! அவர்களைப்பற்றியெல்லாம் பிக்ஷு தர்ம ரட்சிதர் உனக்குத் தெரிவிப்பார். ஆனால், அன்ப! பௌத்த தத்துவத்தைப்பற்றிக் கேட்டதும், வைராக்கியம் கொண்டு இந்தப் பிரபாவை விட்டு ஓடிவிடக் கூடாது'' என்று கூறி பிரபா அவனைத் தனது நீண்ட கைகளால் கட்டிப்பிடித்துக் கொண்டாள். யாரும்தன்னிடமிருந்து அவனைப் பறித்துக் கொள்ளாமல் தடுப்பதுபோல் இருந்தது அந்தச் செய்கை.

''கால்காராம் மடத்தில் அநேக விஷயங்கள் என்னையும் கவர்ந்தன. நம் நாடு முழுவதும் இந்தக் கால்காராம் மடத்தைப் போலவே இருந்தால், எவ்வளவு நன்றாயிருக்கும் என்று நான் நினைத்ததுண்டு.''

''இல்லை, இல்லை, நீ என்னை விட்டுவிட்டுக் கால்காராம் மடத்திற்குப் போய்விடாதே.''

''உன்னை விட்டுவிட்டுப் போவதா? இந்த உடம்பிலே உயிர் இருக்கும்வரை முடியாது. அன்பே! அந்த மடத்தில் உள்ள வேற்றுமையற்ற தன்மையைப் பற்றித்தான் நான் பேசினேன். அங்கே கிரேக்க தர்ம ரட்சிதர், பாரசீக சுமன் போன்ற அந்நிய நாட்டுப் பேரறிஞர்களான பிக்ஷுகளும் இருக்கிறார்கள். அவர்களுடன் கூடவே நம் நாட்டிலே பிறந்த பிராமணர்கள் முதல் பறையர்கள்வரை உள்ள பல குலத்தையும் சேர்ந்த பிக்ஷுக்களும் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் ஒன்றாகவே வசிக்கிறார்கள்; ஒன்றாகவே சாப்பிடுகிறார்கள்; ஒன்றாகவே அறிவையும் சேகரிக்கிறார்கள். அங்கு நாம் பார்த்தோமே, அந்தக் கரிய நிறக் கிழட்டுப் பிக்ஷு, அவர் பெயரென்ன?''

''மகாஸ்தவீர் தர்மசேன், சாகேதத்திலுள்ள எல்லா மடங்களுக்கும் அவர்தாம் தலைவர்.''

''அவர் பறையர் குலத்தில் பிறந்தவர் என்று கேள்விப்பட்டேன். அவர் முன்னிலையில், என் சித்தப்பா பிக்ஷு சுபகுப்தர் முழங்கால் படியிட்டு வணங்குகிறார். உயர் குலப் பிராமணக் குடும்பத்திலே பிறந்த அறிவாளியான சுபகுப்தர் எங்கே-பறையர் குலத்திலே பிறந்த தர்மசேனர் எங்கே? இவ்விருவரையும் ஒன்றாகச் சேர்த்துக் கற்பனையாவது செய்ய முடியுமா?''

''மகாஸ்தவீர் தர்மசேனரும் பெரிய அறிஞர்; நிறையப் படித்தவர்.''

''நான் பிராமணர்களின் மத நோக்கோடு பேசுகிறேன் பிரபா! அவர்களுடைய அதிகாரம் செல்லுபடியாகி இருக்குமானால், தர்மசேனர் மதத்தின் தலைவராகி வணங்குதற்குரிய நிலைமையை அடைவது இருக்கட்டும்-சாதாரண மனிதராகவாவது ஆகி இருக்க முடியுமா?''

''பௌத்தர்கள் பிக்ஷு சங்கத்தைக் கடலோடு ஒப்பிடுகிறார்கள். கடலிலே போய்க் கலக்கும் நதிகளெல்லாம்,

தங்களுடைய தன்மையையும் உருவையும் இழந்து அதிலே ஐக்கியமாகி விடுவது போல் பிக்ஷுசங்கத்திலே சேரும் மனிதர்களெல்லாம், தங்கள் குலத்தையும் பெயரையும் விடுத்து அதிலேயே ஐக்கியமாகி விடுகிறார்கள்.''

''ஆனால், பௌத்த குடும்பஸ்தர்களும் ஏன் அப்படியாகி விடுவதில்லை.''

''ஏனெனில் பௌத்த குடும்பஸ்தர்கள் மற்ற குடும்பஸ்தர்களோடு சேராமல் தனித்து நின்று வாழ முடியாது. அவர்களுக்கு குடும்பப் பொறுப்பும் இருக்கிறது.''

''நம் தேசத்தின் கிராமங்கள், நகரங்கள் எங்கும் வசிக்கும் ஜனங்கள் எல்லோரும், கால்காராம் மடத்துப் பிக்ஷுக்களைப் போல வேற்றுமையற்றவர்களாய், குலம், நிறம் முதலிய பிரிவுகளை மறந்து வாழ்ந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?''

''உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல மறந்து விட்டேன் அன்ப! உன் தந்தை ஒருநாள் தனது தலைப்பாகையை எனது பாதங்களிலே வைத்து, பிரபா! அஸ்வகோஷை நீ விடுதலை செய்து விட வேண்டும் என்று கேட்டார்.''

''பயித்தியம். நீ விடுதலை செய்து விட்டால் அவர் தனது புதல்வனை அடைந்துவிட முடியுமா? நீ என்ன சொன்னாய் பிரபா?''

''உங்கள் கருத்தை அஸ்வகோஷுக்குத் தெரிவிக்கிறேன் என்று மட்டும் சொன்னேன்.''

''அந்தப்படியே நீ தெரிவித்து விட்டாய். இந்தப் பிராமணர்களின் சூழ்ச்சிகளைப் பார்த்து என் மனம் மிகுதும் வெறுப்படைகிறது. வெறுப்பினால் என் உடம்பெல்லாம் எரிகிறது. நாங்கள் வேதத்தையும், சாஸ்திரத்தையும் ஏற்று நடக்கிறோம் என்று ஒருபுறம் சொல்கிறார்கள். ஆனால், அந்த வேதரிஷிகளின் வார்த்தைகளிலிருந்து உதாரணம் காட்டினாலோ, அது இன்றைய பழக்கத்திற்கு ஒத்து வராது என்கிறார்கள். இவர்களின் வேதங்களையும், சாஸ்திரங்களையும் நான் மிகுந்த அக்கறையோடும் சிரமப்பட்டும் படித்து முடித்தேன். அவர்களுடைய கலைகள் யாவையும் கற்றுத்தேர்ந்த பிறகு அந்த வேத சாஸ்திரங்களிலே எதை அவர்கள் ஒப்புக்கொண்டு நடக்கிறார்கள் என்பதை என்னால்

கண்டுபிடிக்க முடியவில்லை. உண்மையில் அவர்கள் தங்கள் சுயநலத்தைத்தான் ஒப்புக் கொள்கிறார்கள். வேத ரிஷிகளின் வாக்கியங்களை யாரோ மீறி நடந்ததால்தானே இன்றையப் பழக்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்று, பழக்கங்களைப் பின்பற்றி நடக்க வேண்டும். அல்லது வேத ரிஷிகளின் வாக்கியங்களைப் பின்பற்றி நடக்கவேண்டும். அப்படியின்றிச் சமயம்போல் பேசுவது கோழைத்தனம்—சுயநலம், அயோக்கித்தனம். ஆனால், இவர்களுக்கு வேண்டியது கொழுத்த கன்றுக்குட்டிகளின் மாமிசமும், தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்யும் தட்சணையும் தானே? அதற்காக அன்னதாதாக்களான அரசர்களும் சேனைத் தலைவர்களும் மகிழ்ச்சியடையக் கூடிய எந்தக் காரியங்களையும் இவர்கள் செய்யத் தயார்.''

''கீழ் ஜாதியார்களென்று இவர்களால் ஒதுக்கி வைக்கப் பட்டிருக்கும் ஏழைகளுக்கு இவர்களின் மதத்திலே சிறிது கூட இடம் கிடையாது.''

''ஆம்; அந்நிய நாட்டிலிருந்து வந்துள்ள கிரேக்கர்கள், சகர்கள், அபீர்கள் முதலியவர்கள் க்ஷத்திரியர்கள் என்று சொல்லி ஏற்றுக் கொண்டு விட்டார்கள். ஏனெனில், அவர்களிடம் செல்வாக்கும், பணமும் இருந்தது. அவர்களிடமிருந்து பெரிய பெரிய தட்சணைகளும் கிடைக்கக்கூடும். ஆனால் நம் நாட்டைச் சேர்ந்த சூத்திரர்கள், பறையர்கள், அடிமைகள் முதலியவர்களை நிரந்தரமாகக் கீழேயே அமுக்கி வைத்தார்கள். எந்த மதம் மனிதனுடைய இதயத்தை மலரச் செய்யவில்லையோ, எந்த மதம் மனிதர்களுக்கு அவர்களின் சக்தி பலத்தையும் பணப்பைகளின் பலத்தையும் கொண்டு இடமளிக்கிறதோ, அந்த மதம் மனித சமுதாயத்திற்கு ஒரு களங்கமென்றே நான் கருதுகிறேன். உலகம் மாறிக்கொண்டே இருக்கிறது. நான் ஆதிகாலந் தொட்டு இன்றுவரை தோன்றியுள்ள பிராமணர்களின் நூல்கள் யாவற்றையும் படித்திருக்கிறேன். அவர்களின் பழக்க வழக்கங்கள், வாழ்க்கை வரலாறு. யாவற்றையும் தெரிந்து கொண்டிருக்கிறேன். அவைகளில் ஆதிகாலம் முதல் உலகம் நாள்தோறும் மாறிக்கொண்டே வந்திருக்கிறது என்பதற்குப்போதுமான ஆதாரங்கள் இருக்கின்றன. ஆனால், இன்று இந்தப் பிராமணர்கள் எதையெடுத்தாலும் 'சனாதனம்' அதாவது ஸ்திரமானது—மாற்றமற்றது என்று சொல்லுகிறார்கள். உயிரற்றதற்குத்தான் வளர்ச்சியில்லை.''

''இந்தப் பொங்குதலுக்கு நான்தான் காரணமா கோஷ்?''

''நீ காரணமாயிருப்பது பாராட்டுதற்குரிய விஷயம் பிரபா, நீ என் கவிதையிலே புதிய ஜீவனையும், புதிய, வேகத்தையும் ஊட்டியதோடு மட்டுமல்ல; எனது பார்வையிலே புதிய மகத்தான உதவியைச் செய்திருக்கிறாய். நான் அறிவின் சிகரத்தை எட்டி விட்டதாக ஒரு காலத்தில் நினைத்துக் கொண்டிருந்தேன். அந்தப் போலிக் கர்வத்திற்குப் பிராமணர்கள் சுலபமாக இரையாகி விடுகிறார்கள். பிராமணர்களின் எண்ண வழக்குகளிலும் (ஸ்மிருதி), ஏட்டுச் சுவடிகளிலுமே அறிவு எல்லையிட்டு அடங்கி இருக்க வில்லை. இவற்றிற்கு வெளியே அது அகண்டமாகப் பரந்திருக்கிறது.''

''நான் ஒரு பெண் பிறவி.''

''பெண்ணாகப் பிறந்ததற்காக மனிதரைத் தாழ்வாக மதிப்பவர்களை நான் மனப்பூர்வமாக வெறுக்கிறேன்.''

''மற்றவர்களைக் காட்டிலும் கிரேக்கர்கள் பெண்களுக்கு அதிக மரியாதை செலுத்துகிறார்கள். அவர்கள் குழந்தைகளின்றியே இறந்துவிட நேர்ந்தாலும் சரி, ஒரு மனைவி உயிரோடிருக்க மற்றொருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது.''

''ஆனால், இந்தப் பிராமணர்கள் நூற்றுக்கணக்கானவர்களைக் கலியாணம் செய்து கொள்கிறார்கள்; கேவலம், வரும்படிக்காக. கிரேக்கர்கள் பிராமண மதத்தைத் தழுவ வில்லை என்பதை நினைத்து மகிழ்ச்சியடைகிறேன்.''

''புத்த மதத்தைத் தழுவியிருந்தாலும், பூஜைகளுக்காகவும் புரோகிதத்திற்காகவும் பிராமணர்களை அழைக்கவே செய்கிறோம்.''

''அவர்கள் தங்கள் சுயநலத்திற்காகக் கிரேக்கர்களை க்ஷத்திரியர்கள் என்று ஒப்புக்கொள்ளும்போது, புரோகிதம் செய்ய ஏன் வரமாட்டார்கள்? மேலும் தட்சணையும் கிடைக்கிறது.''

''உன்னுடைய பிராமணத்துவப் பெருமை உணர்ச்சியைப் போக்குவதற்கு நான் காரணமாய் இருக்கிறேனா?''

''அப்படியிருந்தால் ஒன்றும் கெடுதல் இல்லை. எனது பிராமணப் பெருமை உனக்கும் எனக்கும் வேற்றுமையை உண்டாக்கக் கூடுமானால், அதை வெறுக்கத் தக்கதாகவே கருதுவேன்.''

''நீ என்னைக் காதலிக்கிறாய் என்பதை நினைத்து எல்லையற்ற மகிழ்ச்சியடைகிறேன் கோஷ்!''

''இதயத்தின் ஆழத்திலிருந்து அன்பே! உன்னுடைய காதல் கிடைக்காவிடில் அஸ்வகோஷ் உயிரற்ற பிணமாகவே ஆகிவிடுவான்.''

''என்னுடைய காதலுக்குப் பரிசாக ஒருவரம் கொடுப்பாயா?''

''அந்தக் காதலை மறுப்பதைத் தவிர வேறு எது வேண்டுமானாலும்...''

''எனது காதல், அமரன் அஸ்வகோஷ்—மகாகவி அஸ்வகோஷின் புகழுக்குச் சிறிதேனும் தீங்கு விளைவிக்குமானால், அது வெறுக்கத்தக்கது.''

''சிறிது விளக்கிச் சொல்.''

''காதலிலே தடையேற்படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் உன்னுடைய அமரத்துவத்தை நிலை நிறுத்துவதற்கு அக்காதல் துணையாக இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆகவே, நான் இல்லாவிடில்...''

அஸ்வகோஷ் அதற்குமேல் அவளைப் பேச விடவில்லை. அப்படியே அள்ளி அணைத்துக் கொண்டான். அவளுடைய கன்னங்களோடு ஒட்டியிருந்த அவனுடைய கன்னங்கள் கண்ணீரால் நனைந்திருந்தன. அந்த நனைந்த கன்னங்களிலே முத்தமிட்ட பிரபா, ''என்னுடைய கோஷ்!'' என்றாள், அவளுடைய குரல் தழுதழுத்தது. சிறிது உணர்ச்சியும், வேகமும் அடங்கியபின் பிரபா,

''என் அன்பே! எனது காதல் உன்னிடம் மிகப் பெரிய பொருளை யாசிக்கிறது. அதை நீ கொடுத்துத்தான் ஆகவேண்டும்.''

''உனக்குக் கொடுக்கக் கூடாதது எதுவும் என்னிடம் இல்லை.''

''ஆனால் என்னுடைய வார்த்தையை முழுதும் முடிக்க நீ விடவில்லையே?''

''உனது வாய் இடி ஓசையை வெளியிட முயன்றது.''

''ஆனால் அமரன் அஸ்வகோஷின் நன்மைக்காக அந்த இடியோசை வெளிப்பட்டுத்தான் ஆகவேண்டும். மகான் கவி அஸ்வகோஷ், தனது கவிதையின் அமரத்துவத்தைப் போலவே பிரபாவின் காதலும் அமரத்துவம் வாய்ந்தது என்று கருதவேண்டும். தனக்கு முன்னால் அமர்ந்திருக்கும் பிரபாவின் உடலைக் கொண்டு அவளுடைய காதலை அளக்கக் கூடாது. அமரன் அஸ்வகோஷிற்கு, பிரபா என்றும் இளமை யுடையவள். அவளுடைய அழகு என்றும் அழியாதது. இவைகளை நீ மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்—உன்னிடம் யாசிக்கிறேன்.''

''அதாவது உண்மையான பிரபாவிற்குப் பதிலாக, ஒரு கற்பனைப் பிரபாவை என் முன்னால் வைக்க விரும்புகிறாய் அல்லவா!''

''இருவரும் உண்மையானவர்கள் என்றே நான் கருது கிறேன் கோஷ். ஒருத்தி 50 அல்லது 100 வருடங்கள் வாழக் கூடியவள். மற்றொருத்தி நிரந்தரமாக வாழக்கூடியவள். இதுதான் வித்தியாசம். உன்னுடைய பிரபா உன்னுடைய 'ஊர்வசி வியோகத்தில்' சிரஞ்சீவியாக வாழ்ந்துகொண் டிருப்பாள். எனது காதலைச் சிரஞ்சீவியாக்குவதற்காக, நீ அஸ்வகோஷின் அமரத்துவத்திலே கவனம் செலுத்த வேண்டும். சரி இரவு நீண்ட நேரம் ஆகிவிட்டது. சரயூவின் கரையும்கூடத் தூங்கத் தொடங்கிவிட்டது. நாம் வீட்டிற் குச் செல்வோமா?''

''நான், என்றும் இளமை குன்றா என் பிரபாவின் உரு வத்தை என் மனத்திலே தீட்டிக் கொண்டிருக்கிறேன்.''

''காதல! இதைத்தான் நான் விரும்பினேன்—இதைத் தான் நான் எதிர்பார்த்தேன்'' என்று சொல்லி, அஸ்வ கோஷின் கன்னங்களைத் தன்னுடைய பட்டுக் கன்னங்க ளோடு ஒற்றிக்கொண்டு கற்சிலையாய் நின்றாள்.

# 7

ஓர் அகன்ற முற்றம். அதைச் சுற்றி நான்கு புறமும் பத்தி, அதன் பின்னல் இரண்டு மாடிகள் உள்ள வீடுகள். பத்தியில் கொடிக் கயிற்றிலே மஞ்சள் நிற ஆடைகள் காய்ந்து கொண்டிருக்கின்றன. முற்றத்தின் ஒரு மூலையிலே கிணறும் அதை அடுத்துக் குளிக்குமிடமும் இருக்கிறது. முற்றத்தில் பல மரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று அரச மரம். அந்த அரசமரத்தின் நான்கு புறமும் மேடை கட்டப்பட்டிருக்கிறது. அதற்குப் பக்கத்தில் ஆயிரக்கணக் கான விளக்குகள் வைக்கக்கூடிய ஒரு கல்மாடமும் இருக் கிறது. அந்தப் பெரிய விருட்சத்தின் முன்னே முழங்கால் படியிட்டு வணங்கிய பிரபா,

''அன்ப! இதே ஜாதி மரத்தின் கீழ் அமர்ந்துதான் கௌதம சித்தார்த்தர், தமது முயற்சியினல் ஆழ்ந்த சிந்தனையின் மூலமும், மனத்தின் மயக்கத்தை யெல்லாம் போக்கி, அறிவின் பேருண்மையைப் பெற்றார். அன்று முதல் புத்தர் என்றும் அழைக்கப்பட்டார். அந்தத் தூய நினைவின் ஞாபகார்த்தமாகவே இந்த ஜாதி மரங்களுக்கு முன்னல் தலைவணங்குகிறோம்.''

''தன் முயற்சியாலும் தனது சிந்தனையின் மூலமுமே, மனத்தின் மயக்கங்களைப் போக்கி அறிவின் தெளிவைப் பெற்றதின் அடையாளம் இம்மரங்கள். இவ்வித அடையா ளங்களை வணங்கத்தான் வேண்டும். இவ்வித அடையாளங் களை வணங்குவது முயற்சியையும் ஆத்ம வெற்றியையும் வணங்குவதாகும்.''

இருவரும் தலைமைப் பிக்ஷு தர்ம ரட்சிதரிடம் சென் றார்கள். அப்பொழுது அவர் முற்றத்திலே ஒரு மகிழ மரத் தடியிலே உட்கார்ந்திருந்தார். அதன் மலர்கள் நான்கு புறமும் நறுமணத்தை வீசிக்கொண்டிருந்தன. பிரபா பௌத்த முறைப்படி பஞ்சாங்க நமஸ்காரம் செய்தாள். அஸ்வகோஷ் நின்றபடியே கைகூப்பி வணங்கினன். இரு வரும் அங்கு பூமியிலே விரிக்கப்பட்டிருந்த தோல் ஆசனத் தின் மீது அமர்ந்தார்கள். அஸ்வகோஷ் பிக்ஷு சிரேஷ்ட

ரிடம் ஏதோ பேச வந்திருக்கிறார் என்று கருதிய சிஷ்யர்கள் அங்கிருந்து அகன்றனர். சம்பிரதாய மரியாதைப் பேச்சுக் களுக்குப் பிறகு, இருவரிடையேயும் தத்துவத் தர்க்கம் ஆரம்பமாயிற்று.

''பிராமண குமார! பௌத்த மதம் (ஞானிகள் மதம், பௌத்தம்-ஞானம்) தத்துவத்தைக்கூட ஒருதலை—அதாவது பார்வையை ஒரேவழியில் குறுக்குவது என்று சொல்லுகிறது.''

''சிரேஷ்டரே! அப்படியானால் பௌத்த மதத்தில் தத்துவத்திற்கு இடமே இல்லையா?''

''இடம் ஏன் இல்லை? பௌத்த மதமே தத்துவமயமானதுதான். ஆனால் புத்தர் பெருமான் நதியைக் கடப்பதற்குத் தெப்பத்தைப்போல் அதை உபயோகிக்க வேண்டுமே தவிர, தலைமீது தூக்கிக் கொண்டு அலையக் கூடாதென்று தெளிவாக்கி இருக்கிறார்.''

''என்ன சொன்னீர்கள்? தெப்பத்தைப்போலவா?''

''ஆம்; படகில்லாத இடத்தில் நதியைக் கடப்பதற்கு ஜனங்கள் தெப்பத்தைக்கட்டி, அதைக்கொண்டு அக்கரை சேர்கிறார்கள். ஆனால், அக்கரை சேர்ந்ததும் தங்களுக்கு உதவி செய்தது என்பதற்காக அந்தத் தெப்பக் கட்டைகளைத் தலைமீது தூக்கிச் செல்வதில்லை.''

''தான் உபதேசம் செய்யும் மதத்தைப் பற்றியே இவ்விதம் சொல்ல ஒருவனுக்குத் தைரியம் இருக்குமானால், அவன் நிச்சயம் சத்தியத்தையும் அதன் சக்தியையும் தெரிந்தே இருப்பான் சிரேஷ்டரே! புத்த தத்துவத்தைப் பற்றி நான் சரியாகப் புரிந்துகொள்வதற்குரிய விஷயங்களைத் தெரிவியுங்கள்.''

''முதலாவதாக அநாத்ம வாதத்தையே எடுத்துக் கொள்வோம். குழந்தாய்! பிராமணர்கள், ஆத்மா நித்தியமானது—அழிவற்றது என்று கருதுகிறார்கள். புத்தரோ, உலகத்தின் உள்ளும் புறமும் அழிவற்ற நித்யவஸ்து எதுவும் இருப்பதாக ஒப்புக்கொள்ளவில்லை. உலகத்தின் பொருள்கள் யாவும் க்ஷணத்திற்கு க்ஷணம் மாறிக்கொண்டே இருக்கிறது, தோன்றியது அழியும் என்றே கூறுகிறார். அதனால்தான் அவருடையதத்துவத்திற்கு 'அநாத்மவாதம்' என்றுசொல்லுகிறார்கள்.''

''என்னைப் பொறுத்தவரை இது ஒன்றே போதும் சிரேஷ்டரே! தன் உபதேசத்திற்கே தெப்பக்கட்டை உதாரணத்தைக் கொடுத்தவரும், அநாத்ம வாதத்தைப் பிரகடனப் படுத்தியவருமான புத்தர் பெருமானை, அஸ்வகோஷ் தலைகுனிந்து வணங்குகிறான். அஸ்வகோஷ் எதைத் தேடிக் கொண்டிருந்தானோ, அது அவனுக்குக் கிடைத்துவிட்டது. என் மனத்திலே எண்ண அலைகள் பெருக்கெடுக்கின்றன. அவற்றிற்கு ஒரு பெயர் கொடுக்கும் சக்தி எனக்கில்லை. புத்தர் பெருமானின் உபதேசங்களை, ஜனங்கள், சரியாக ஏற்றுக்கொண்டிருந்தால், இன்று உலகம் வேறுவிதமாக இருக்கும்.''

''சரியாகச் சொன்னாய் குழந்தாய்! எங்கள் கிரேக்க நாட்டிலே பெரிய பெரிய தத்துவ ஞானிகள் தோன்றியிருக்கிறார்கள். அவர்களிலே பிதாகோர், ஹெராக்லிட்டோ இருவரும் புத்த பெருமானின் சம காலத்தவர்கள். சாக்ரடீஸ், டொமாக்ரட்டோ, பிளேட்டோ, அரிஸ்டாட்டல் நால்வரும் அவருக்குச் சிறிது பிந்தியவர்கள். இந்தக் கிரேக்க தத்துவாசிரியர்கள் மிகச் சிறந்த விஷயங்களைப் பற்றிக் கம்பீரமாகச் சிந்தித்திருக்கிறார்கள். ஆனால், ஹெராக்லிட்டோவைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் நித்தியத்துவத்தைக் கடந்து அப்பால் செல்ல முடியவில்லை. நிகழ் காலத்திலே அவர்களுக்கு அளவுக்கு மீறிய மோகம் இருந்தது. அதன் காரணமாக, அவர்கள் எதிர்காலத்தையும் நிகழ்காலத்தோடு பிணைத்தே வைக்க விரும்பினார்கள். ஹெராக்லிட்டோ, புத்தரைப் போலவே உலகம் இரண்டு வினாடிகள்கூட மாற்றமின்றி ஒரே மாதிரி இருப்பதில்லை என்று ஒப்புக்கொள்கிறார். ஆனால், அதிலும் ஒரு சுயநலம் மறைந்திருக்கிறது.''

''தத்துவச் சிந்தனையில் தனி மனிதனின் சுயநலமா?''

''வயிறு எல்லோருக்கும் இருக்கிறது குழந்தாய்! அந்தக் காலத்தில் எங்கள் ஏதென்ஸ் நகரத்திலே ஜன ஆட்சி இருந்தது. அதாவது அரசனில்லாத அரசாங்கம் இருந்தது. முதலில் ஹெராக்லிட்டோவின் குடும்பத்தாரைப் போன்ற பெரிய பெரிய சேனா நாயகர்களே, ஜன ஆட்சியின் சூத்திரதாரர்களாய் இருந்தார்கள். பின்னால் வியாபாரிகள், ஆட்சிக் கயிற்றைத் தங்கள் கையிலே எடுத்துக் கொண்டார்கள். இதைப் பார்த்த ஹெராக்லிட்டோ வருத்தமடைந்தார். ஆகவே மாற்றத்தை விரும்பினார். ஆனால் முன்னோக்கிச் செல்வதற்கல்ல; பின்னே திரும்பிச் செல்வதற்கு.''

''நமக்கு மாற்றம்வேண்டும். ஆனால், அது முன்னேக்கிச் செல்வதாய் இருக்கவேண்டும். பின்னேக்கி அல்ல. கடந்த காலம் பிணத்திற்குச் சமானம் என்று நான் கருதுகிறேன்.''

''சரியாகச் சொன்னுய் குழந்தாய்! புத்தர் பெருமானும் மாற்றத்தை விரும்பினர்; ஒரு சிறந்த உலகத்தை ஏற்படுத்து வதற்காக, அந்த எதிர்கால நல் உலகத்திற்கு ஒரு முன் மாதிரியாகவே, புத்த சங்கத்தைத் தோற்றுவித்தார்!''

''ஜாதி சமய வேற்றுமை இல்லாத உலகம் உயர்வு தாழ்வு இல்லாத உலகம்.''

''ஆம். அனுபவிப்பதற்கு அங்கு எல்லோருக்கும் சம உரிமை இருக்கும். அதேபோல் வேலை செய்வதற்கும் சம உரிமை உண்டு. எங்கள் மகாஸ்தவீர் தர்மசேனர் வெளியே பெருக்கிக் கொண்டிருப்பதை நீ பார்த்திருப்பாய்?''

''ஓ! அந்தக் கறுத்தவரா?''

''ஆம்; அவர் எங்கள் எல்லோருக்கும் தலைவர். தினந் தோறும் அவருக்கு நாங்கள் பஞ்சாங்க நமஸ்காரம் செய் கிருேம். கோசல நாட்டின் பிக்ஷு சங்கங்கள் யாவற்றிற்கும் அவரே தலைவர்.''

''அவர் பறையர் குலத்தில் பிறந்தவர் என்று கேள்விப் பட்டேனே!''

''பிக்ஷு சங்கம் குலத்தைக் கவனிப்பதில்லை, குழந்தாய்! அது தகுதியைத்தான் கவனிக்கிறது. அவர் தனது தகுதியினு லும், கல்விப்பெருக்கினுலுமே எங்களுக்குத் தலைவராக இருக் கிருர். நாங்கள் அவரைத் தந்தையாகப் பார்க்கிருேம். அவருடைய பிக்ஷா பாத்திரத்தில் ஒரு கவளம் அன்னம் கிடைத்திருந்தாலும் சரியே. அவர்தோழர்களுக்குப் பகிர்ந்து கொடுக்காமல் சாப்பிடமாட்டார். இதுதான் புத்தர் பெரு மானுடைய உபதேசம். உடுத்துவதற்கு மூன்று துணிகள், மண்ணுல் செய்யப்பட்ட பிக்ஷா பாத்திரம், ஊசி, தண்ணீர் பாத்திரம், க்ஷவரக் கத்தி, இடுப்புக்கச்சை இவைகளைத்தவிர மற்ற எல்லாச் சொத்தும் சங்கத்திற்கே சொந்தம். இந்த வீடு, தோட்டம், கட்டில் முதலிய யாவும் சங்கத்தின் சொத் துக்களே. எங்கள் மடங்களில் சிலவற்றிற்கு நிலங்கூட இருக் கிறது. அதுவும் சங்கத்தின் சொத்தே. சங்கம் தனி மனிதர் களைப் பற்றிய பூரா விவரமும் தெரிந்துகொண்ட பிறகே, அவனைப் பிக்ஷுவாக்குகிறது. ஆனல் ஒரு மனிதன் சங்கத்

திற்குள் நுழைந்துவிட்டால் பிக்ஷுவாக ஆய்விட்டால், அப்புறம் அவன் எல்லோருக்கும் சமமானவனே.''

''இந்த மாதிரி ஒரு சங்கம் அகில உலகத்திற்கும் ஏற்பட முடிந்தால்?''

''அது எப்படி ஏற்படும் குழந்தாய்! அரசர்களும், செல்வந்தர்களும் மற்றவர்களைத் தங்களுக்குச் சமமாக ஆகவிடுவார்களோ? ஓர் அடிமையை, பிக்ஷுக்கள் ஒரு சமயம் தங்கள் சங்கத்திலே சேர்த்துக்கொண்டு விட்டார்கள். சங்கத்தின் விதிகளின்படி, அந்த அடிமை சங்கத்திற்குள் நுழைந்த உடனேயே, அடிமைத் தன்மையிலிருந்து விடுதலை யடைந்து விட்டார். எல்லோருக்கும் சமமாகக் கருதப்பட்டார். ஆனல், அந்த அடிமையின் எஜமானன் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்துவிட்டார். மற்ற அடிமை எஜமானர்களும் அவரோடு சேர்ந்து கொண்டனர். அரசனும் அவர்கள் கட்சியை ஆதரித்தான். ஏனெனில் அவனும் ஆயிரக்கணக்கான அடிமைகளுக்கு எஜமானன் அல்லவா? இந்த நிலையில் புத்தர் என்ன செய்ய முடியும்? எதிர்காலத்தில், அடிமைகளைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ள மாட்டோம் என்று உறுதி கொடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை. எங்கள் சங்கம், கொந்தளிக்கும் பெருங்கடலின் மத்தியிலே ஒரு சிறு தீவு. ஆகவே உலகத்தில் ஏழ்மையும் அடிமைத்தனமும் நிலைத்திருக்கும்வரை, எங்கள் சங்கம் பூரணப் பாதுகாப்போடு இருக்குமென்று சொல்ல முடியாது.''

## 8

அன்று பௌர்ணமி. மாலையிலேயே வட்டத்தாளம் போன்ற சந்திரன் கீழ் வானத்திலே தோன்றிவிட்டான். மேல்வானத்திலே மறைந்து கொண்டிருக்கும் சூரியனின் செந்நிறக் கதிர்கள் தேய்ந்து மறைய மறைய சந்திரனின் வெண்ணிறக் கிரணங்கள் ஆகாயமெங்கும் பரவிக் கொண்டிருந்தன. பிரபாவின் வீட்டு மேல் மாடியிலே. பிரபாவும் அஸ்வகோஷும் உட்கார்ந்திருந்தார்கள். இப்பொழுதெல்லாம் தனது நேரத்தின் பெரும் பகுதியை அஸ்வகோஷ் பிரபாவின் வீட்டிலேயே கழிப்பது வழக்கம். நிலவு வெள்ளத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பிரபா,

''காதல! என்னைச் சரயூ நதியின் அலைகள் கூப்பிடுகின்றன. முதன் முதலாக உன்னையும் என்னையும் ஒன்ருகச் சேர்த்துத் தொட்ட, அந்த அலைகள் காதல் கயிற்ருல் நம்மிருவரையும் சேர்த்துப் பிணைத்த அந்த அலைகள், என்னை அழைப்பதுபோல் தோன்றுகிறது. இன்று இரண்டு வருடங்கள் கழிந்துவிட்டன. ஆயினும், அது இப்பொழுதுதான் நிகழ்ந்ததுபோல் எனக்குத் தோன்றுகிறது. நாம் எத்தனையோ நிலவொளி நிறைந்த இரவுகளைச் சரயூ நதிக் கரையிலே கழித்திருக்கிரேம். அந்த நேரங்கள் எவ்வளவோ இனிமையானவை. இன்று மறுபடியும் இந்த வெறியூட்டும் பூரண நிலவு காய்கிறது. அன்ப! புறப்படு. சரயூவின் கரைக்குச் செல்வோம்.''

இருவரும் கிளம்பினுர்கள். நதி, நகரத்திலிருந்து சிறிது தூரத்தே இருந்தது. நிலவொளியிலே பிரகாசிக்கும் வெள்ளை மணல்மீது அவர்கள் நீண்ட தூரம் நடந்து சென்ருர்கள். பிரபா தனது மிதியடியைக் கையிலே எடுத்துக்கொண்டாள். பாதங்களிலே மிதிபடும் அந்த மெல்லியமணல் ஸ்பரிசம் அவளுக்குச் சுகமாயிருந்தது அவள் அஸ்வகோஷின் இடுப்பைத் தன்னிரு கரங்களாலும் வளைத்துக் கொண்டு,

''அன்ப! இந்தச் சரயூவின் மெல்லிய மணல் ஸ்பரிசம் எவ்வளவு சுகம் நிறைந்ததாய் இருக்கிறது!''

''ஆம்; பாதங்களிலே இன்பக் கூச்சத்தை உண்டுபண்ணுகிறது.''

''அன்புக்குரிய சரயூ! உன்னை நினைத்தால் மகிழ்ச்சியும், மயிர் கூச்சமும் ஏற்படுகிறது.''

''நான் அநேக முறை நினைத்தேன் அன்பே! நாம் இங்கிருந்து எங்காவது ஓடிவிடுவோம். நமது காதலைப் பார்த்துப் பொருமை கொள்பவர்கள் இல்லாத தேசத்திற்குச் சென்றுவிடுவோம். நீ கருத்துக் கொடுக்க, நான் கவிதை செய்து இருவரும் அதை வீணையிலேமீட்டி, இசைபாடி வாழ்வோம். இந்த மென்மையான மணற்பரப்பிலே இன்ப நிலவு பொலியும் இரவிலே, எனது வீணையைக் கொண்டுவர முடியவில்லை. ஏன்? ஜனங்கள் வந்து கூடிவிடுவார்கள். அவர்களில் பலருடைய கண்களிலே பொருமை பொங்கி வழியும்.''

''அன்ப! தவருகக் கருதிக் கொள்ளாதே. நான் அடிக்கடி நினைப்பதுண்டு. நான் இல்லாமலிருந்தால்...?''

அஸ்வகோஷ் அவளைத் தனது தோள்களிலே இறுகத் தழுவிக் கொண்டு,

''இல்லை அன்பே! ஒரு நாளுமில்லை. நாம் இருவரும் இப்படியே நிரந்தரமாய் இருப்போம்.''

''என் அன்ப! நான் சொல்வதின் கருத்து வேறு. உலகத்தில் எத்தனையோ சம்பவங்கள் நடக்கின்றன. இப்பொழுது நீ இல்லாமல் நான் மட்டும் தனியாக இருக்கும் நிலைமை ஏற்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்படியும் ஏற்படலாமல்லவா?''

''ஏற்படலாம்.''

''இப்பொழுது நீ முன் மாதிரித் துடி துடிக்கவில்லையே கோஷ்! ஆம்! நீ இல்லாவிடில் துயரப் பாறை முழுதும் என் தலையில் தானே விழும். அதனால்தானே?''

''நீ என்னிடம் மிகக் கொடுமையாக நடந்து கொள்கிறாய் பிரபா!''

பிரபா அவனுடைய இதழ்களிலே முத்தமிட்டு அவனைத் தழுவிக் கொண்டாள். அந்த மகிழ்ச்சியிலே திளைத்திருந்த அஸ்வகோஷை நோக்கி,

''வாழ்க்கை பல பகுதிகளையுடையது. எப்பொழுதும் பௌர்ணமியாகவே இருப்பதில்லை. அமாவாசையும் வரத்தான் செய்யும். ஆகவே, நாம் ஒருவரைப் பிரிந்து ஒருவர் வாழ நேர்ந்தால், என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றித்தான் சொல்லத் தொடங்கினேன். உன்னைப் பிரிந்து நான் வாழ நேர்ந்தால் என்ன செய்வேன் தெரியுமா?''

அஸ்வகோஷ் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு பெருமூச்சு விட்டவனாய் ''சொல்'' என்றான்.

''நான் எனது உயிரை மாய்த்துக் கொண்டு விடமாட்டேன். தற்கொலை முட்டாள் தனமான— கருணையற்ற செயல் என்று, பகவான் புத்தர் கூறியிருக்கிறார். இப்பொழுது நான் வீணை வாசிப்பதில் திறமை பெற்று விட்டேன் என்பது உனக்குத் தெரியுமல்லவா?''

''ஆம்; நீ நன்கு பயிற்சி பெற்று விட்டாய். இப்பொழுதெல்லாம் உன் கையிலே வீணையைக் கொடுத்துவிட்டு நான் நிச்சிந்தையாகப் பாடுகிறேன்!''

''அந்தச் சமயத்தில் அஸ்வகோஷின் உடல் என்னிடமிருந்து பறித்துக் கொள்ளப்பட்டுவிடும். ஆனுல் அமரன் அஸ்வகோஷ்—யுக யுகாந்தரங்களுக்கும் பரவி நிற்கும் மகான் கவி அஸ்வகோஷை நான் வணங்கிக் கொண்டிருப்பேன். என்னுடைய வீணையிலே உனது கவிதைகளை மீட்டி அகில பாரதத்திலும் மட்டுமல்ல—அதற்கப்பால் உள்ள வெளி நாடுகளிலும் உனது புகழைப் பரப்பிக் கொண்டிருப்பேன். எனது உயிருள்ளவரை—நமது வாழ்க்கைப் பிரவாகம் மற்ருெரு பிரதேசத்தில் மறுபடியும் ஒன்ருகச் சேர்ந்து ஐக்கியப்படும்வரை, உனது கீதங்களைப் பாடிக்கொண்டே இருப்பேன். என்னைப் பிரிந்து வாழ நேர்ந்தால் நீ என்ன செய்வாய் காதல?''

இந்தச் சொற்களைக் கேட்டு, அஸ்வகோஷின் இதய ஆழத்திலிருந்து எழுந்த துக்க அலை, அவனது உடலை நடுங்கச் செய்தது. இதைப் பிரபாவும் உணர்ந்தாள். அஸ்வகோஷ் பேச முயற்சித்தான். ஆனுல் தொண்டை உலர்ந்து விட்டது. கண்கள் நீரைக் கக்கின. சில நிமிஷங்கள் போராடிய பிறகு ஈனஸ்வரத்திலே,

''அந்த நேரம் மிகக் கொடுமை நிறைந்ததாய் இருக்கும் பிரபா! ஆனுல், நானும் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன். உன்னுடைய காதல் தூண்டுகிற வழியிலே கவிதைகள் செய்வேன். அவைகளைப் பாடிக் கொண்டிருப்பேன். வாழ்வின் கடைசி நிமிஷம்வரை உன்னுடைய அஸ்வகோஷ் சிரஞ்சீவியாக இருக்கச் செய்வேன்.''

''சரயூவின் பெருக்கும் தூங்கத் தொடங்கிவிட்டது. நேரமாகிறது. புறப்படு; வீட்டுக்குச் செல்வோம்.''

## 9

வேனிற் காலம். தாய் சுவர்ணுட்சி நோயாகப் படுத்திருந்தாள். அஸ்வகோஷ் இரவும் பகலும் தாய்க்குப் பக்கத்திலேயே இருந்தான். பிரபாவும்கூட, பகல் பொழுது முழுவதையும் அவளுக்குப் பக்கத்திலேயே கழித்தாள். வைத்தியத்தினுல் பலன் ஒன்றும் ஏற்படவில்லை. சுவர்ணுட்சியின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது.

இன்று மறுபடியும் பௌர்ணமி. பால் போன்ற வெண் ணிலவு எங்கும் பரவியிருந்தது. நிலவொளியிலே, தன்னை மேல்மாடிக்கு எடுத்துச் செல்லும்படி சுவர்ணாட்சி கேட்டுக் கொண்டாள். அவளுடைய கட்டிலை மேல் தளத்திலே கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அந்த நிலவொளியிலே, தாயின் எலும்புக்கூடு போன்ற உருவத்தைப் பார்த்த அஸ்வ கோஷின் இதயம், வேல்பட்ட புண்போல் எரிந்தது. தாய் மெதுவாகப் பேசினாள். ஆயினும் வார்த்தைகள் தெளிவாக இருந்தன.

''இந்த நிலவு எவ்வளவு அழகாக இருக்கிறது! பிரபா எங்கே மகனே?''

அந்தச் சமயத்தில் அஸ்வகோஷின் காதுகளிலே, 'என்னைச் சரயூவின் அலைகள் அழைக்கின்றன' என்ற பிரபாவின் சொற்கள் எதிரொலித்தன. அவன் திடுக் குற்றான்.

''அவள் தந்தை வீட்டுக்குச் சென்றுவிட்டாள். மாலை வரை இங்குதானே அம்மா இருந்தாள்.''

''பிரபா என் மகளே! நல்லது மகனே! அவளை எப்பொழுதும் மறந்துவிடாதே...''

அவள் வார்த்தைகளை முற்றிலும் முடிக்க விடவில்லை; இருமல் வந்துவிட்டது. சிறிது நடுக்கம் உடலிலே ஏற் பட்டது. உயிர் உடலை விட்டுப் போய்விட்டது. அவள் புதல்வனின் இதயம் வெடித்து விடும்போல் இருந்தது. இரவெல்லாம் அழுதுகொண்டே இருந்தான்.

மறுநாள், தாயின் தகனக் கிரியைகள் யாவும் முடிவு பெற நடுப்பகலாகிவிட்டது. அதன் பிறகு, பிரபாவைத் தேடிக்கொண்டு தத்தமித்திரரின் வீட்டிற்குச் சென்றான் அஸ்வகோஷ். பிரபா அஸ்வகோஷுடன் இருப்பதாக அவள் தாய் தந்தையர் நினைத்துக்கொண்டிருந்தனர். இரவு விழுந்த அடியே, அஸ்வகோஷின் இதயத்தைச் சிதிலமடையச் செய்துவிட்டது. ஆனால், அதைத் தொடர்ந்து இப்பொழுது விழப்போகும் அடி! அவளுடைய படுக்கையறையில் சென்று பார்த்தான். அங்கு எல்லாச் சாமான்களும் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. கட்டிலின் மீது விரித்திருந்த வெள்ளை விரிப்பு நலுங்காமல் இருந்தது. அதை எடுத்து

விட்டுப் பார்த்தான். அங்கே அவனுடைய படமும் ஒரு ஓலையும் இருந்தன. அந்தப் படம், ஒரு சிறந்த கிரேக்க சைத்திரிகனைக் கொண்டு, பிரபா தனக்காக எழுதச் செய்தது. தனக்கு விருப்பமில்லாவிட்டாலுங்கூட அவளுடைய ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அந்தச் சைத்திரிகனின் முன்னுல் அஸ்வகோஷ் பல மணிநேரம் உட்கார்ந்திருக்கிருன். படத்தோடு இருந்த கடிதத்திலே, முத்திரை வைப்பதற்காக ஒட்டப்பட்டிருந்த கறுப்பு மண் இன்னும் காயவில்லை. முத்திரை உடைந்து விடாமல் அக்கறுப்பு மண்ணை அப்படியே எடுத்து வைத்துக்கொண்டு, ஓலையைப் பிரித்துப் படித்தான்.

''காதல! பிரபா உன்னிடம் விடை பெற்றுக்கொள்கிருள். என்னைச் சரயூவின் அலைகள் அழைக்கின்றன. நான் போகிறேன். நீ எனக்குக் காதல் பரிசாக ஒரு வாக்குக் கொடுத்திருக்கிருய்; அதை மறந்துவிட மாட்டாயே? பிரபா தனது அழிவற்ற இளமையை—என்றும் மாருத அழகை, உன்னிடம் விட்டுச் செல்கிருள். உன்னுடைய கண்கள் தலை நரைத்த—பல்லுப்போன—இடுப்புக் கூனிய பிரபாவைப் பார்க்கும் நிலைமை ஏற்படமாட்டாது. எனது காதல், எனது அழிவற்ற அழகு மாரு இளமை உனது கவிதைக்கு விளைநிலமாயிருக்கும். அதை நீ அலட்சியப் படுத்திவிடாதே அன்ப! குடும்பப் பிரச்னைகளுக்காகவோ, அல்லது உனது தாய் தந்தையர்களின் வருத்தத்திற்கு அஞ்சியோ, நான் தற்கொலை செய்துகொள்வதாக நீ தவருகக் கருதிவிடாதே. உன்னுடைய கவிதைக்கு ஒரு விளைநிலம் தோற்றுவிக்க, உனது கவிதா சக்தி என்றும் இளமையுடன் விளங்க, என்னுடைய அழிவற்ற அழகும்—மாரு இளமையும் தேவையென்று கருதினேன். அதற்காகவே அந்த மாரு இளமை உணர்ச்சியை உன்னிடம் விட்டுச் செல்கிறேன். காதல! பிரபாவின் கடைசி ஆலிங்கனத்தையும், கடைசி முத்தத்தையும் ஏற்றுக்கொள்.''

இந்தக் கடிதத்தைப் படித்து முடிக்க விடாதபடி, கண்ணீர் பலமுறை மறைத்தது. அடிக்கடி கண்ணீரைத் துடைத்துக்கொண்டே ஒருவாறு கடிதத்தைப் படித்து முடித்தான். முடித்ததும் ஓலை நழுவிக் கீழே விழுந்தது. அவன் அப்படியே அயர்ந்து கட்டிலிலே உட்கார்ந்து விட்டான். அவன் மனம் செயலற்று நிலைத்துவிட்டது. இதயத்தின் துடிப்பும் மந்தமடைந்துவிட்டது. கற்சிலை போல் அசைவற்று இருந்தான்.

நீண்ட நேரம் காத்துப் பார்த்த பிறகு, பிரபாவின் தாயும் தந்தையும் அருகே வந்தார்கள். அஸ்வகோஷின் நிலைமையைப் பார்த்ததுமே, அவர்களுக்குப் பலத்த சந்தேகம் உண்டாகி விட்டது. கீழே கிடந்த ஓலையை எடுத்துப் படித்தனர். தாய் கூச்சலிட்டு மூர்ச்சித்து விழுந்தாள். தத்தமித்திரரின் கண்கள் தடையற்ற நீரருவியாய் விட்டன. இவை எதையும் உணராமலே, கற்சிலையாய் இருந்தான் அஸ்வகோஷ். அவன் நிலையைப் பார்த்து, பேசாமலேயே திரும்பிச் சென்றனர் தாயும், தந்தையும். பொழுது கழிந்தது; இரவு வந்தது; அதுவும் போயிற்று; ஆனால் அஸ்வகோஷ், கண்ணீர் உகுக்கும் கற்சிலையாய் அப்படியே அசைவற்று இருந்தான். மறுநாள் காலையில் அவன் சிறிது தன்னுணர்வு பெற்றிருப்பதைக் கண்ட பிரபாவின் தாய், ''மனம் எப்படி இருக்கிறது மகனே!'' என்று கேட்டாள்.

''அம்மா! இப்பொழுது எல்லாம் சரியாகிவிட்டது. பிரபா என்னிடம் ஒப்புவித்துச் சென்றுள்ள வேலையை நான் பூர்த்தி செய்யவேண்டும். என்னுடைய கடமையை நான் உணரவில்லை. அவள் அறிந்திருந்தாள். ஆகவே தனது கடமையை நினைவூட்டிச் சென்றாள். அவள் உயிரை அழித்துக் கொள்ளவில்லை; எனக்குத் தானமாகத் தந்து சென்றாள். அந்த உயிர்த் தானத்தை உயிரழிவாக மாற்றிவிட மாட்டேன்.''

அஸ்வகோஷ் எழுந்து புறப்பட்டான். அதைப் பார்த்த தாய், "எங்கு செல்கிறாய் மகனே!'' என்று கேட்டாள்.

''பிக்ஷு சிரேஷ்டர் தர்மரட்சிதரைச் சந்திக்கவேண்டும். அப்பால் சரயூவையும் போய்ப் பார்க்க விரும்புகிறேன்.''

''பிக்ஷு தர்மரட்சிதர் உனக்காகக் கீழே காத்துக் கொண்டிருக்கிறார். சரயூவைப் போய்ப் பார்க்க நானும் வருகிறேன்.'' இதைச் சொல்லும் பொழுது, தாயின் குரல் தழுதழுத்தது.

அஸ்வகோஷ் கீழே சென்று பிக்ஷு சிரேஷ்டர் தர்மரட்சிதருக்கு பௌத்த முறைப்படி பஞ்சாங்க நமஸ்காரம் செய்தான். ''ஆச்சாரியாரே! என்னைச் சங்கத்திலே சேர்த்துக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினான்.

''மகனே, உனது துக்கம் சிறிது தணியட்டும்.''

''துக்கத்தின் வேகத்தை அறிவேன்! ஆனால், அதன் காரணமாக உங்களை வேண்டவில்லை. துக்கத்தைத் தாங்கிக் கொள்வதற்குப் பிரபா என்னை ஏற்கனவே தயாரித்து விட்டாள். நான் ஒன்றும் அவசரப்படவில்லை.''

''ஆயினும், இன்னும் சில நாட்கள் பொறுக்கவேண்டும் மகனே; சங்கம் உன்னை இவ்வளவு சீக்கிரம் ஏற்றுக்கொண்டு விடமாட்டாது.''

''ஆச்சாரிய! காத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் சங்கத்தின் பாதாரவிந்தங்களிலே...''

''முதலில் நீ உன் தந்தையாரின் அனுமதி பெற வேண்டும். தாய் தந்தையாரிடம் அனுமதியின்றி, சங்கம் யாரையும் பிக்ஷுவாக ஆக்க மாட்டாது.''

''அப்படியானால் அனுமதி பெற்று வருகிறேன்.''

அஸ்வகோஷ் அங்கிருந்து புறப்பட்டான். அவனுடைய வார்த்தைகளிலிருந்து அவன் மனம் தெளிவு பெற்றிருப்பது நன்றாகத் தெரிந்தாலும், தாய்க்குச் சமாதானம் ஏற்பட வில்லை. அவளும் அவனுடனேயே கிளம்பினாள். சரயூவை யடைந்த இருவரும், ஒரு படகை ஏற்பாடு செய்துகொண்டு கீழ்நோக்கி நீண்ட தூரம் சென்று தேடினர். ஒன்றும் கிடைக்கவில்லை.

அஸ்வகோஷ் தன் தந்தையிடம் பிக்ஷுவாவதற்கு அனுமதி கேட்டான். தன் ஒரே மகனை பிக்ஷுவாக்கி மடத்திற்கு அனுப்பிவிடும் தைரியம் எந்தத் தந்தைக்குத்தான் இருக்கும்? அவர் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அஸ்வகோஷ் விடவில்லை. ''தாயையும் பிரபாவையும் இழந்த துக்கத்தைத் தாங்கமுடியாமல் நான் பிக்ஷுவாகப் போக விரும்பவில்லை தந்தையே! என்னுடைய குரல், பேச்சு, செயல் இவைகளிலிருந்து, என்மனம் தெளிவாக இருக்கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். என்னுடைய வாழ்க்கையின் லட்சியமாக எதை நான் தேர்ந்தெடுத்திருக்கிறேனோ அதை நிறைவேற்றுவதற்கு இது ஒன்றுதான் வழி. தந்தையே! நான் உயிரோடு வாழவேண்டுமென்று நீங்கள் விரும்பினால் பிக்ஷு ஆவதற்கு அனுமதி கொடுங்கள்'' என்று உறுதியாகக் கூறிவிட்டான்.

''நல்லது, நாளை மாலை வரை தவணை கொடு மகனே!''

''ஒரு நாளல்ல, ஒரு வாரம் காத்திருக்கிறேன்.''

மறுநாள் மாலை, தந்தை கண்ணீர் வழிய, நடுங்குங் குரலிலே மகனுக்குப் பிக்ஷு ஆக அனுமதி கொடுத்தார். சாகேதநகரத்தின் சர்வாஸ்திவாத சங்கம், அஸ்வகோஷைப் பிக்ஷுவாக்கித் தன்னுள்ளே ஏற்றுக்கொண்டது. பிக்ஷு சிரேஷ்டர்களான தர்மசேனரும் தர்மரட்சிதரும் ஆச்சாரியர்களாயிருந்து, அவனுக்கு உபதேசம் செய்தார்கள். சிறிது நாளிலே, பிக்ஷு சிரேஷ்டர் தர்மரட்சிதருடன் பிக்ஷு அஸ்வகோஷும் மகதத்தின் தலைநகரான பாடலிபுரத்தை அடைந்தான்.

# 10

பாடலிபுரத்தின் அசோகாராம் மடத்திற்கு பிக்ஷு அஸ்வகோஷ் வந்து பத்து வருடங்கள் ஆகிவிட்டன. அவன் புத்த தத்துவங்களோடு கிரேக்க தத்துவங்களையும் மிகச் சிறந்த முறையிலே கற்றுத்தேர்ந்தான். மகத நாட்டின் பௌத்த சங்க மகா வித்வான்களிலே அஸ்வகோஷ் தலை சிறந்தவனாகக் கருதப்பட்டான். அந்தச் சமயத்தில், மேற்கிலிருந்து வெற்றியுடன் கிழக்கே வந்துகொண்டிருந்த சக்கரவர்த்தி கனிஷ்கன், புத்த மதத்திற்கும், புத்த தத்துவத்திற்கும் கேந்திர ஸ்தானமாக விளங்கிய பாடலிபுரத்திற்கு வந்தான். சக்கரவர்த்தி கனிஷ்கனுக்கு, பௌத்த மதத்தில் அதிகமான ஈடுபாடு உண்டு. தனது காந்தார நாட்டிலே பௌத்த மதத்தைப் பரப்புவதற்காக ஒரு சிறந்த அறிஞரை அனுப்ப வேண்டுமென்று சங்கத்தார்களிடம் கேட்டுக் கொண்டபொழுது, அவர்கள் அஸ்வகோஷையே அனுப்பி வைத்தார்கள்.

கனிஷ்கனின் தலைநகரான பெஷாவரை அடைந்ததும், அஸ்வகோஷ் சகர—கிரேக்க—துருக்கிய—பாரசீக—பாரத நாட்டு நாகரிகங்கள் யாவும் ஒன்றாகக் கலக்கும் ஒரு சங்கம ஸ்தானத்திற்கு வந்திருப்பதை உணர்ந்தான். கிரேக்க நாடகக் கலையை பாரத மயமாக்குவதிலே, அவன் ஏற்கெனவே வெற்றி பெற்றிருக்கிறான். கிரேக்க தத்துவங்களை அவன் நன்றாகக் கற்றறிந்த பிறகு, அவற்றிலே உள்ள சிறந்த அம்சங்களை யெல்லாம் பாரதத் தத்துவத்தோடு

இணைத்து ஒரு புது வழியையும் காட்டினுன். குறிப்பாக பௌத்த தத்துவாசிரியர்களுக்கு, கிரேக்க தத்துவத்தி லிருந்து எடுத்தாளும் வழியைத் திறந்துவிட்டான். அவனைப் பின்பற்றி பாரதநாட்டின் சிந்தனையாளர்கள் பலரும், புது முறையை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டது. அவர்களுள் வைஷேஷிக தத்துவாசிரியர்களும் நியாயத்தத்துவாசிரியர்களும் இவ்வழியில் அதிகம்முன்னேறி ஞர்கள். உண்மை, சமநிலே, பொருள், தன்மை, உருவம் ஆகிய தத்துவ அம்சங்களே, அவர்கள் கிரேக்க தத்துவத்தி லிருந்து எடுத்தாண்டிருக்கிறுர்கள்.

பிரபா, அஸ்வகோஷின் இதயத்தை விசாலப்படுத்தி விட்டுச் சென்றுள். ஆகவே, பிக்ஷு அஸ்வகோஷிற்குத் தன்னைப்பற்றிய சிந்தனையே கிடையாது. பிரபாவின் நினை விலே, அவன் அநேக காவியங்களையும் நாடகங்களையும் எழுதினுன். அவற்றில் பல மறைந்தொழிந்துவிட்டன. என்றுலும், இயற்கைதேவி அஸ்வகோஷின் சிருஷ்டிகளிலே அதிக அன்புடையவளாய் இருந்திருக்கிறுள். அதனுல்தான் 1700 வருடங்களுக்குப் பிறகு அவனுடைய சிறந்த சிருஷ்டி களான 'சாரீபுத்திர—பிரகரன்' என்ற நாடகத்தை மத்திய ஆசியாவின் பெருமணற் பிரதேசம் (கோபி) திருப்பித் தந்தது. அவனுடைய 'புத்த சரித'மும் 'சௌந்தரி யானந்த'மும் இணையற்றகாவியங்கள். அவன் பிரபாவிற்குக் கொடுத்த வாக்கைக் கடைசிவரை காப்பாற்றினுன். அவளுடைய காதலும், அழியா இளமையும் அவனுடைய கவிதைகளிலே அழகை நிரப்பிக் கொண்டிருந்தன. அவ னுடைய சிருஷ்டிகளிலெல்லாம், "சாகேதத்தைச் சேர்ந்த ஆர்ய சுவர்ணுட்சியின் புதல்வன் அஸ்வகோஷ் எழுதியது" என்று குறிப்பிட்டுத் தன் பெயரோடு கூட தான் பிறந்த சாகேதத்திற்கும், பெற்றெடுத்த தாய் சுவர்ணுட்சிக்கும் சிரஞ்சீவித் தன்மையை உண்டாக்கி விட்டான்.

# சுபர்ணயௌதேயன்

**காலம் : கி.மு. 420**

என்னுடைய விதிதான் எப்படிப்பட்டது? என்னை ஒரு பொழுதும் ஓர் இடத்தில் நிலைத்திருக்க விடுவதில்லை. அடி பட்ட பந்துபோல், அங்குமிங்கும் அலைந்துகொண்டும், கவலையிலே மூழ்கியிருக்கும்படியும் செய்துவிட்டது. என்னுடைய வாழ்நாளிலே கசப்பான நாட்கள்தான் அதிகம் என்றாலும். ஒரு சில இன்ப நாட்களும் வந்தன. மழை காலத்தின் கடைசி நாட்களிலே ஓர் இடத்தில் மழை பொழியும் பொழுதே அதற்குச் சிறிது தூரத்தில் வெயிலெரிப்பது போல் இத்தேசத்தில் மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இந்த மாற்றச் சக்கரம் ஏன் ஓயாது சுழன்று கொண்டிருக் கிறது என்பதையும் புரிந்துகொள்ள முடியவில்லை. மேற்குப் பிரதேசமான பாஞ்சாலத்திலே, இன்றும்கூட கன்று மாமிசம் உணவாகக் கொள்ளப்படுகிறது. ஆனால், மத்தியப் பிரதேசத்தில் (ஐக்கியமாகாணம், பீஹார்) பசுமாமிசத்தின் பெயரைச் சொல்வது பாபம். அங்கே பசுப் பாதுகாப்பு பிராமணர்களின் சிறந்த தர்மமாகக் கருதப்படுகிறது. இந்த மதக் கருத்திலே வெயிலுக்கும், நிழலுக்கும் உள்ளதைப் போன்ற இவ்வளவு பெரிய வேற்றுமை இருக்கக் காரணம் என்ன? ஓர்இடத்திலே தருமமாகக் கருதப்படுவது, மற்றோர் இடத்திலே ஏன் அதர்மமாகக் கருதப்படுகிறது? இல்லை: ஒரு இடத்திலே மாற்றம் முந்தி வந்துவிட்டது. அடுத்த இடமும் சிறிது காலம் தாழ்த்தி அதைப் பின்பற்றும். இதில் தர்ம-அதர்மம் ஏதும் இல்லை.

நான் அவந்தி (மாளவம்) நாட்டின் க்ஷிப்ரா நதிக்கரையில் உள்ள ஒரு கிராமத்தில் பிறந்தேன். எனது முன்னோர்கள் தங்களை நாடோடிகள் என்று கருதினார்கள் என்றாலும், அவர்களுக்குச் சொந்த நிலமும் சொந்த வீடும் இருந்தன. அவைகளை அவர்கள் தோளிலே தூக்கிக்கொண்டு அலைய முடியாது. எனது முன்னோர்களின் ஆஜானுபாகுவான தோற்றமும் நிறமும் கிராமத்தின் மற்ற ஜனங்களிலிருந்து அவர்களைப் பிரித்துக் காட்டியது. கிராமத்தின் மற்ற ஜனங்களைவிட அவர்கள் அதிக வெளுமையாய் இருந்தார்கள். என்

தாய் அந்தக் கிராமத்திலே ஈடு இணையற்ற அழகி. அவளுடைய வெண்மையான முகத்திலே கரிய கூந்தல் வந்து படியும்பொழுது மிக அழகாக இருக்கும். எங்கள் முன்னோர்கள், தங்களைப் பிராமணர்கள் என்றே சொல்லிக் கொண்டார்கள். ஆனால் கிராமத்தின் மற்ற ஜனங்கள் அதை நம்பவில்லையென்றே எனக்குத் தோன்றிற்று. சந்தேகத்திற்குக் காரணமும் இருந்தது. கிராமத்தின் மற்ற பிராமணர்கள், மது அருந்துவதை மகாபாவம் என்று கருதினார்கள். ஆனால் எங்கள் வீட்டிலோ அது தினந்தோறும் தயாரித்துப் பருகப்பட்டது. கிராமத்தின் மற்ற உயர்குலக் குடும்பங்களிலே ஆண்களும் பெண்களும் சேர்ந்து நடனமாடுவதைப் பற்றிக் கேள்விப்பட்டதுகூடக் கிடையாது. ஆனால் எங்கள் வீட்டிலோ, எங்கள் குலத்தைச் சேர்ந்த ஏழு குடும்பத்தாரும், தினந்தோறும் மாலையிலே ஆண்களும் பெண்களும் ஒன்றாகச் சேர்ந்தே நடனமாடுவார்கள். குழந்தைப் பருவத்தில், எங்கள் வீட்டில் நடப்பதைப் போலவே எல்லா வீட்டிலும் நடப்பதாக நான் நினைத்துக் கொண்டிருந்தேன். கொஞ்சம் பெரியவனாகி, கிராமத்தின் மற்றக் குழந்தைகளோடு சேர்ந்து விளையாடவும், அவர்கள் சொல்லும் கேலிப் பேச்சை உணர்ந்து கொள்ளவும் கூடிய நிலைமை ஏற்பட்ட பொழுது, அவர்கள் எங்களை வேற்றுமையாகக் கருதுகிறார்களென்றும் நாங்கள் ஒரு விநோதமான மனிதர்களென்றும் நினைக்கிறார்கள் என்றும் புரிந்து கொண்டேன். கிராமத்து ஜனங்கள் எங்களை உயர் குலத்தவர்கள் என்று ஒப்புக்கொண்டாலும், நாங்கள் பிராமணர்கள் என்பதில் சந்தேகமே கொண்டார்கள். எங்களுடைய கிராமம் ஒரு பெரிய கிராமம். அதில் கடைகளும், வியாபாரிகளான பனியாக்களின் வீடுகளும் இருந்தன. அங்கு சில நாகர்களின் வீடுகளும் இருந்தன. ஜனங்கள் அவர்களையும் பனியா என்றே அழைத்தார்கள். ஆனால் அவர்களோ, எங்களைப் போலவே தாங்களும் பிராமணர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். அநேக நாககுலப் பெண்கள், எங்கள் குடும்பத்திலே கொள்ளப்பட்டிருக்கிறார்கள். எங்களைப் பிராமணர்களல்ல என்று கிராம ஜனங்கள் மறுப்பதற்கு இதுவும் ஒரு காரணம். பிராமணர்களின் உணவு, நியமம், கொள்வினை, கொடுப்பினை முதலிய ஒழுங்குகளை அலட்சியம்செய்யும் நாங்கள் எப்படி பிராமணர்களாய் இருக்க முடியும் என்பது அவர்கள் கருத்து. என்னோடு விளையாடும் சிறுவர்கள் கோபம் அடையும் பொழுது என்னை 'க்ஷத்திரியன்' என்று சொல்லிக் கேலி செய்வார்கள்.

இதைப்பற்றி நான் என் தாயிடம் அடிக்கடி கேட்பேன். அவள் தட்டிக் கழித்து விடுவாள்.

நான் இன்னும் கொஞ்சம் பெரியவனுகிவிட்டேன். பத்து வயதிருக்கும். கிராமத்தின் ஒரு பிராமணக் குழுவினுடைய பாடசாலையிலே படித்துக் கொண்டிருந்தேன். எனது தோழ மாணவர்களில், என்னையும் இரண்டு நாகர் குலப் பையன்களையும் தவிர, மற்ற எல்லோரும் பிராமணர்கள்; ஜனங்கள் சொல்கிறபடி பக்கா பிராமணர்கள். எங்கள் மூவரையும் போலிப் பிராமணர்கள் என்று அவர்கள் அழைப்பார்கள். குருஜியின் மாணவர்களிலே, நான் மிகுந்த அறிவுக் கூர்மையுடையவன். அதனுல், அவர் என்னிடத்திலே அதிக அன்புடையவராக இருந்தார். எனது முன்ஞேர்களின் சுபாவம் எனக்கும் இருந்தது. மற்றவர்கள் சொல்வதைச் சகித்துக் கொண்டு போகாமல், எதற்கெடுத்தாலும் சண்டைக்கு நிற்பேன். என்னுடைய தோழ மாணவர்களிலே ஒருவன் ஒருநாள் ''எங்கோ கிடந்த க்ஷத்திரியன் வந்து, இங்கு பிராமணன் ஆகிவிட்டான்'' என்று என்னைக் கேலி செய்தான். எனது சிறிய தந்தையாரின் மைத்துனன் மகன் என்னேடு சேர்ந்து பேசவே, அவனையும் ''கிரேக்கப் பயல் பிராமணனுகப் பார்க்கிருன்'' என்று குத்திக் காட்டிஞன். இந்தக் கேலியை என்னுல் தாங்க முடியவில்லை. குழந்தைப் பருவத்திலும் இந்த மாதிரிக் கேலிகளை நான் கேட்டிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் அவை இவ்வளவு தூரம் மனத்திலே தைத்ததில்லை. பாடசாலையில் எங்கள் மூவரையும் எதிர்த்து, முப்பது பிராமண மாணவர்களும், நாலு மாணவிகளும் இருந்தார்கள். அவர்களில் யாருடைய நிறமும் எங்களைப் போல வெளுமையாக இல்லை. யாரும் எங்களளவு வளர்ந்தவர்கள் இல்லை. அப்படி இருந்துங்கூட, எங்களை அவர்கள் குறைவாக மதிக்கிருர்கள். அன்று பாடசாலையிலிருந்து வீட்டிற்கு வந்தபொழுது, என் முகம் கவலையால் வாடி இருந்தது. அதைப் பார்த்த என் தாய் எனது கன்னங்களிலே முத்தமிட்டு,

''மகனே! ஏன் உன் முகம் இன்று வாட்டமடைந்திருக்கிறது'' என்று கேட்டாள். நான் தட்டிக் கழித்துவிட முயன்றேன். ஆனுல் அவள் ரொம்பவும் வற்புறுத்திய பிறகு,

''அம்மா! நம்முடைய குடும்பத்தைப்பற்றி என்னமோ ஒரு விஷயம் இருக்கிறது. கிராமத்தின் மற்ற ஜனங்கள்

நம்மைப் பிராமணர்கள் என்று ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள்!"

"நாம் வெளிநாட்டிலிருந்து வந்த பிராமணர்கள் மகனே! அதனால்தான் அவர்கள் அப்படி நினைக்கிறார்கள்."

"பிராமணர்கள் மட்டுமல்ல அம்மா! பிராமணர் அல்லாதாருங்கூட நம்மைப் பிராமணர்கள் என்று ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள்."

"அவர்களும் இந்தப் பிராமணர்களின் பேச்சைக் கேட்டுக் கொண்டுதான்."

"நாம் வேள்விகளும் செய்வதில்லை. மற்றப் பிராமணர்கள் புரோகிதம் செய்கிறார்கள். பிராமண போஜனத்திற்குச் செல்கிறார்கள். நாம் அவைகளை யெல்லாம் செய்வதில்லை. மேலும், பிராமணர்கள் தங்கள் பந்தியிலே உட்கார்ந்து சாப்பிட நம்மை அனுமதிப்பதில்லை. இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன? அம்மா! உனக்கேதாவது தெரியுமானால் சொல்லேன்."

என்னைச் சமாதானப்படுத்தத் தாயார் ஏதேதோ சொன்னாள். அவை எதுவும் என்னைத் திருப்திப்படுத்தவில்லை. நான் இந்த நினைவுகளிலே உழன்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது, எனது தோழ மாணவர்களான நாகர்கள் என்னிடத்திலே அதிக அனுதாபம் காட்டினார்கள். தாக்கப்பட்டவர்கள் ஒருவருக்கொருவர் அனுதாபம் காட்டிக் கொள்வது இயற்கைதானே?

## 2

காலம் ஓடிற்று. எனக்குப் பதின்மூன்று வயது ஆகிவிட்டது; எனது பள்ளிக்கூடப் படிப்பு, முடியும் நிலையை அடைந்துவிட்டது. எங்களது வேதமான ருக்வேதம் ஏதரேய பிராமணம், இலக்கணம், நிருக்தம் இவைகளோடு இன்னும் சில காவியங்களையும் படித்து முடித்தேன். குருஜியின் அன்பு அதிகரித்துக் கொண்டே போயிற்று. அவர் மகள் வித்யா

என்னைவிட நான்கு வருடம் இளையவள். அவளுக்கு அடிக்கடி நான் பாடம் சொல்லிக் கொடுப்பதுண்டு. குருதேவரும் அவர் மனைவியும் என்னிடம் நடந்து கொள்வதைப் பார்த்து அவளும் எனக்கு அதிக மரியாதை செலுத்துவாள். குருதேவரின் குடும்பத்தினர்,எப்பொழுதும் என்னைக் குறைவாய் நடத்தியதே இல்லை. குருதேவரின் மனைவி, என்னிடம் ஒரு தாயைப்போலவே நடந்து கொண்டாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒருநாள், எனது தோழ மாணவன் ஒருவன் என்னை 'க்ஷத்திரியன்' என்று சொல்லிக் கேலி செய்தான். இப்பொழுதெல்லாம்,நான் மற்ற மாணவர்களிடமிருந்து ஒதுங்கியே இருப்பது வழக்கம். அப்படியிருந்தும், அன்று அவன் காரணமின்றியே என்னை வம்புக்கிழுத்தான். நான் படிப்பிலே மிகச் சூடிகையாய் இருப்பதைப் பார்த்து ஏற்பட்ட பொறுமையைத் தவிர, வேறு என்ன காரணம் இருக்க முடியும்? நான் இப்பொழுது சுலபமாக உணர்ச்சி வசப்பட்டு விடுவதில்லை. இந்த மாதிரிக் குத்தல் பேச்சுகளைக் கேட்டு, என் மனம் கோபம் அடைவதென்னவோ உண்மைதான். ஆனாலும் என்னை நான் அடக்கிக்கொள்ளப்பயின்று விட்டேன். என் பாட்டனுருக்கு வயது எழுபதுக்கு மேல் இருக்கும். எத்தனையோ தேசங்களைப் பற்றியும் யுத்தம், கலகம் முதலியவைகளைப் பற்றியும் நான் அவரிடம் அதிகம் கேட்டிருக்கிறேன். அவர்தான் தனது சகோதரர்களோடு முதன் முதலாக இந்தக் கிராமத்திற்கு வந்தவர் என்பதும் எனக்குத் தெரியும். இன்று எப்படியாவது அவரிடமிருந்து எங்கள் குலத்தைப் பற்றிய முழு விவரத்தையும் தெரிந்து கொண்டு விடுவது என்று நிச்சயம் செய்து கொண்டேன். கிராமத்தின் கிழக்கெல்லையில் எங்களுக்கு ஒரு மாந்தோட்டம் இருந்தது. இவ்வருடம் நிறைய மாங்காய்கள் காய்த்திருந்தன. அவைகள் பழுப்பதற்கு இன்னும் கொஞ்ச காலம் இருக்கிறது. என்றாலும், காவலுக்காக அடிமை சோனு இப்பொழுதிருந்தே அங்கு குடிசை போட்டுவிட்டாள். என் பாட்டனர் இந்தக் கிராமத்திற்கு வந்த புதிதில், ஒரு தெற்கு தேச வியாபாரியிடமிருந்து இந்த அடிமை சோனுவை நாற்பது வெள்ளிக் காசுகளுக்கு வாங்கினாராம். அப்பொழுதெல்லாம் அடிமைகளை விற்பதற்கும் வாங்குவதற்கும், தெற்கிலிருந்து அடிக்கடி வியாபாரிகள் வருவதுண்டாம். அப்பொழுது யுவதியாய் இருந்த சோனு, அழகாயும்இருந்திருக்கவேண்டும். இல்லாவிடில், அடிமைப் பெண்களுக்கு இவ்வளவு அதிக விலை

கிடையாது. கறுப்புக்கிழவி சோனுவின் தோல் இப்பொழுது சுருங்கி, அவள் மூஞ்சியெல்லாம் கோடுகள் விழுந்து, தலையும் நரைத்துப் போய்விட்டது. ஆயினும், என் பாட்டனாரை அவள் எப்பொழுதும் கேலி செய்து கொண்டே இருப்பாள். அதுவும் அவர்கள் இருவரும் தனியே இருக்கும் சமயங்களில் மிக அதிகம். அவர்களைப்பற்றி, ஜனங்கள் ஏதேதோ சொல்லிக் கொள்கிறார்கள், மனைவியை இழந்த—ஆரோக்கியமுள்ள ஒரு கிழவனாரைப் பற்றி இப்படியெல்லாம் சந்தேகப்படுவது இயற்கைதானே?

தினந்தோறும் என் பாட்டனார் மாலையில் மாந்தோட்டத்திற்குச் செல்வது வழக்கம். ஒரு நாள் மாலை, நானும் அவருடன் கிளம்பினேன். புத்திசாலியான தன் பேரனிடம் தாத்தாவிற்கு மிகுந்த அன்பு. பேசிக்கொண்டே போகும் பொழுது மெதுவாக பிரச்னையைக் கிளப்பினேன்.

''தாத்தா! நம்முடைய குலத்தைப்பற்றிய உண்மையான விஷயங்களைத் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். ஜனங்கள் நம்மைப் பிராமணர்கள் என்று ஒப்புக் கொள்ளாமல் க்ஷத்திரியர் என்று சொல்லிக் கேலி செய்கிறார்கள். தாயாரிடம் இதைப் பற்றிப் பல முறை கேட்டேன், அவள் சரியான பதில் சொல்லாமல் தட்டிக் கழித்துவிட்டாள்.''

''இதைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் என்ன குழந்தாய்?''

''அவசியம் இருக்கிறது தாத்தா! உண்மை விஷயத்தை நான் சரியானபடி தெரிந்துகொண்டிருந்தால், நமது குலத்தைப்பற்றிக் குறை சொல்லுகிறவர்களுக்குச் சரியான பதில் கொடுக்க முடியும். நான் பிராமணர்களின் கல்வியைப் போதிய அளவு கற்றுத் தெரிந்துகொண்டேன். நமது குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றக்கூடிய அளவு எனது அறிவும் திறமையும் இருக்கிறது.''

''அந்த நம்பிக்கை எனக்குண்டு, குழந்தாய்! உன் தாய்—பாவம் அவளுக்கே நமது குலத்தைப் பற்றிப் பூரா விபரமும் தெரியாது. நமது முன்னோர்கள் எப்படியோ இந்த நாகர்களோடு கொள்வினை—கொடுப்பினைகளை ஏற்படுத்திக்கொண்டு விட்டார்கள். இப்பொழுது நம்முடைய சம்பந்தம் பெரும்பாலும் அவர்களோடேயே இருக்கிறது.

உன்னுடைய தலைமுறையை எடுத்துக்கொண்டால், அதில் யௌதேய ரத்தத்தைவிட நாகரத்தமே அதிகம் என்று சொல்லவேண்டும். ஆகவே அவந்தியிலும் குஜராத்திலும் அதிக எண்ணிக்கையிலே இருக்கும் இந்த நாகர்களோடு தான் நமது வாழ்வும் தாழ்வும் பின்னிக் கிடக்கிறது.''

''யௌதேயர்* என்றால் என்ன தாத்தா?''

''அதுதான் நமது குலத்தின் பெயர். இந்தப்பெயரைக் கொண்டுதான், நம்மை 'க்ஷத்திரியர்' என்று இந்தஜனங்கள் சொல்லுகிறார்கள்.''

''யௌதேயர்கள் பிராமணர்களா தாத்தா?''

''இந்தப் பிராமணர்களை விட அதிகமான சுத்த ஆரியர்கள்.''

''அப்படியானால் பிராமணர்கள் இல்லையா!''

''இந்தக் கேள்விக்கு, ஆம் அல்லது இல்லையென்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட முடியாது. யௌதேயர்களைப் பற்றிய பூரா விபரங்களையும் உனக்குச் சொல்லுகிறேன். சத்லஜிற்கும் யமுனைக்கும் மத்தியிலே, ஹிமாலயத்திலிருந்து பாலைவனப் பிரதேசம்வரை பரவிக்கிடந்த பிரதேசத்திலே, யௌதேயர்கள் வாழ்ந்தார்கள். அந்தப் பூமிக்கு, அவர்களே எஜமானர்கள். ஆம்; ஒவ்வொரு யௌதேயனும்.''

''ஒவ்வொரு யௌதேயனுமா?''

''ஆம்; அவர்களில் யாரும் அரசன் இல்லை. அவர்களுடைய ஆட்சிக்கு ஜன ஆட்சி என்று பெயர். ஜனசபை அல்லது பஞ்சாயத்து ராஜ்யத்தின் எல்லாக் காரியங்களையும் நடத்தி வந்தது. அவர்கள், ஒரு தனி மனிதனுடைய அதாவது அரசனுடைய ஆட்சியை மிகவும் வெறுத்தார்கள்.''

''அப்படி ஓர் ஆட்சி இருந்ததாக நான் கேள்விப்படவே இல்லையே தாத்தா!''

''ஆனால், அவ்வித அரசாட்சி இருந்தது உண்மைதான் குழந்தாய்! என்னிடம் யௌதேய ஜன ஆட்சியின் மூன்று வெள்ளிக் காசுகள் இருக்கின்றன. என் தந்தையார்

---

*யௌதேயர்—யுத்தம் செய்கிறவர்கள்.

தேசத்தைவிட்டு ஓடிவரும் பொழுது கொண்டுவந்த காசு களில் என் பங்குக்குக் கிடைத்தவைகள்.''

''அப்படியானால், நீ யௌதேயர்களின் தேசத்திலே பிறக்கவில்லையா தாத்தா?''

''நான் அங்குதான் பிறந்தேன். ஆனால், நான் பத்து வயதுச் சிறுவனாய் இருந்தபொழுது, என் தாய் தந்தையர் தேசத்தை விட்டு ஓடவேண்டி நேர்ந்தது. எனக்கு இரண்டு தமையன்மார்கள் இருந்தார்கள். அவர்களின் வமிசத்தி னரைத்தான் இப்பொழுது நீ இங்கே பார்க்கிறாய்.''

''தேசத்தை விட்டு ஓட வேண்டிய நிலைமை ஏன் ஏற்பட்டது தாத்தா?''

''ஆதிகாலம் முதல் யௌதேயர்கள் தங்கள் சொந்த தேசத்திலே சுதந்திரமாக வாழ்ந்து வந்தார்கள். பாரத நாட்டிலே தோன்றிய பெரிய பெரிய புகழ்பெற்ற அரசர்கள் மௌரிய, கிரேக்க, சகர சக்கரவர்த்திகள் யாவரும் எங்கள் ஜன ஆட்சியிடமிருந்து ஒரு சிறு தொகையைக் கப்பமாகப் பெற்றுக் கொண்டதைத் தவிர, எங்கள் நாட்டின் ஆட்சி யிலே தலையிட்டு, எவ்விதத் தொல்லையையும் விளைவிக்க வில்லை. ஆனால், இந்த குப்த வம்சம்...தன்னை விக்கிரமாதித் தியன் என்று அழைத்துக்கொண்டு, உஜ்ஜைனியையும் பாதி நாள் தலைநகரமாக ஆக்கியிருக்கிறானே இந்தச் சந்திர குப்தன்—இவனுடைய குப்த வம்சம் சக்கரவர்த்தி பதவியை அடைந்ததும், யௌதேயர்களின் ஜன ஆட்சியை ஒழித்து விட்டது. வெற்றி பெற்ற சக்கரவர்த்திக்குச் சிறிது காணிக்கை செலுத்த, யௌதேயர்கள் தயாராய் இருந்தார் கள். ஆனால், குப்த அரசன் அதை ஒப்புக்கொள்ளவில்லை. மற்றப் பிரதேசத்தில் எனது ஆட்சி நடைபெறுவதைப் போலவே, இந்தப் பிரதேசத்திலும் நடப்பதற்கு ஒரு உபரி கனை (கவர்னர்) யும், சில குமாரமாத்யர் (கமிஷனர்)களையும் நியமிப்போம் என்று கூறிவிட்டான். எங்கள் ஜனத்தலைவர் கள் அவனுக்கு எவ்வளவோ எடுத்துச்சொன்னார்கள். ஆதிகாலம் தொட்டு, ஜன ஆட்சியைத் தவிர வேறுவித ஆட்சிக்கு யௌதேயர்கள் பழக்கப்படவில்லை யென்றும் எடுத்துக் காட்டினார்கள். ஆனால் வெற்றி வெறியிலே மூழ்கிக் கிடக்கும் அரசன், அதை ஏன் ஒப்புக்கொள்ளப் போகிறான்? முடிவில் வேறு வழியின்றி தங்கள் குல தெய் வத்தை வணங்கிக் கத்தி எடுத்தார்கள் யௌதேயர்கள்.

பலமுறை அவர்கள் குப்த சேனையைப் பின்னுல் தள்ளினுர்கள். எங்களைவிட இரண்டு அல்லது மூன்று மடங்கு சேனையாய் இருப்பினும், யௌதேயர்கள் போராடி வெற்றி பெற்றிருக்கக்கூடும். ஆனுல் பிர்ம புத்ராவிலிருந்து பாலைவனப் பிரதேசம்வரை பரவிக் கிடக்கும் சாம்ராஜ்யத்தின் பெரிய சேனையை எதிர்த்து நின்று எத்தனை காலத்திற்குத் தங்களை காப்பாற்றிக்கொள்ள முடியும். ஏராளமான ஜன அழிவும் தோல்வியுந்தான் யௌதேயர்களுக்குக் கிடைத்தது. குப்தர்கள் எங்கள் நகரங்களையும் கிராமங்களையும் நாசமாக்கினர். ஆண்களையும் பெண்களையும் கொன்று குவித்தனர். முப்பது வருடப் பேராட்டத்திற்குப் பிறகு, யௌதேயர்கள் தங்கள் தேசத்தையே விட்டு ஒட நேர்ந்தது. அவர்களுடைய ஜன ஆட்சி, கொல்லப்படாமல் வாழ அனுமதித்திருந்தால், அவர்கள் எவ்வளவு அதிகமான கப்பமும் கட்டி இருப்பார்கள்.''

''அந்த ஜன ஆட்சி எப்படி இருக்கும் தாத்தா?''

''அதில் ஒவ்வொரு யௌதேயனும் தலைநிமிர்ந்து நடப்பான். யார் முன்னிலையிலும் தலைவணங்கிக் கெஞ்சிக் கேட்பது என்பது அவனுக்குத் தெரியவே தெரியாது. யுத்தம் அவனுக்கு ஒரு விளையாட்டு. இதனுல்தான் அந்தக் குலத்திற்கே யௌதேயர்கள் என்று பெயர் ஏற்பட்டது.''

''நம்மைப்போல் இன்னும் அநேக யௌதேயர்கள் இருப்பார்களல்லவா தாத்தா?''

''இருக்கலாம் குழந்தாய்! ஆனுல், சூரைக் காற்றினுல் அள்ளி எறியப்பட்ட உலர்ந்த சருகுகளைப் போல் அவர்கள் நாலாபுறமும் சிதறிக் கிடக்கிருர்கள். நம்மைப்போலவே அவர்களும் நாகர் வம்சத்திலோ அல்லது வேறு ஏதாவது வம்சங்களிலோ கலந்து, தங்கள் தனித்துவத்தை இழந்து விட்டிருப்பார்கள்.''

''நம்மைப் பிராமணர்கள் என்று நாம் ஏன் சொல்லிக் கொள்ளவேண்டும் தாத்தா?''

''அதுவும் ஒரு பழைய கதை குழந்தாய்! ஒரு காலத்தில் எல்லாப் பிரதேசத்திலும் ஜன ஆட்சிதான் இருந்தது. அரசர்களே இல்லை. அந்தக் காலத்தில் பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் என்ற வேற்றுமையும் கிடையாது.''

''என்ன! பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் ஒரே குலத்தவர்களா ?''

''ஆம்; எல்லோரும் ஒரே குலத்தவர்தான். அவசியம் ஏற்படும்பொழுது பூஜையும், புரோகிதமும் செய்வார்கள். தேவை ஏற்படும்பொழுது கையிலே கத்தியும் ஏந்துவார்கள். இந்த வசிட்டரும், விசுவாமித்ரரும் வந்துதான் ஜாதி வேற்றுமையை ஆரம்பித்து வைத்தார்கள்.''

''அதனுல்தான், ஒரே தந்தையின் இரண்டு புதல்வர்களில் ஒருவர் ரந்திதேவரைப்போல் க்ஷத்திரிய அரசனுகவும் மற்றவர் கௌரிவிதியைப்போல் பிராமண மகரிஷியாகவும் ஆக முடிந்திருக்கிறது''

''அப்படி எழுதப்பட்டிருக்கிறதா குழந்தாய்?''

''ஆம் தாத்தா! வேதத்திலும், இதிகாசங்களிலும் காணப்படுகிறது. இவர்கள் இருவரும் சங்கிருதி மகரிஷியின் புத்திரர்கள். இது மட்டுமா? இன்னும் எத்தனேயோ விநோதமான விஷயங்கள் நமது பழைய நூல்களிலே காணப்படுகின்றன. அவைகளே, இந்தக் காலத்து ஜனங்கள் நம்பக்கூட மாட்டார்கள். சர்மண்வதி (சம்பல்) நதிக்கரையிலே இருக்கும் தஷாபூரை நீ பார்த்திருக்கிருயல்லவா தாத்தா?''

''ஆம் குழந்தாய்! அநேகம் தடவை. அது அவந்தியில் தானே இருக்கிறது. அங்கு கல்யாணங்களுக்காகப் பலமுறை போயிருக்கிறேன். அந்த நகரிலே பெரிய பெரிய பணக்காரர்களும் வியாபாரிகளுமான நாகர்கள் பலர் வசிக்கின்றனர்.''

''அதே தஷாபூர்தான் ரந்திதேவரின் தலே நகரமாய் இருந்தது. அந்த நதிக்குச் சர்மண்வதி என்று ஏன் பெயர் ஏற்பட்டது தெரியுமா? அது ஓர் ஆச்சரியமான கதை.''

''அது என்ன குழந்தாய்?''

''பிராமண சங்கிருதியின் புத்திரனுன க்ஷத்திரிய அரசன் ரந்திதேவனுடைய விருந்தினர் சாலே, ரொம்பப் புகழ்பெற்றது. அந்த சத்திய யுகத்தின் புகழ் பெற்ற பதினுறு அரசர்களில் ரந்திதேவனும் ஒருவன். அவனுடைய விருந்து மாளிகையில், நாள்தோறும் இரண்டாயிரம் பசுக்கள் கொல்லப்பட்டன. அவற்றின் ஈரத்தோல்கள் சமையல் கட்டிற்குப் பக்கத்திலே குவிக்கப்பட்டிருக்கும். அவற்றிலிருந்து கசியும் நீர் ஒரு நதியாகப் பெருகி ஓடிற்று. தோலிலிருந்து வெளிப்

பட்டு ஓடுவதால் அதற்குச் சர்மண்வதி (சர்ம—தோல்; ணவதி-வெளிப்பட்டு ஓடுதல்) என்று பெயர் ஏற்பட்டது.''

''என்ன! இவை உண்மையிலேயே நமது பழைய நூல் களிலே எழுதப்பட்டிருக்கிறதா குழந்தாய்?''

''ஆம் தாத்தா! மகாபாரதத்தில்* தெளிவாக எழுதப் பட்டிருக்கிறது.''

''மகாபாரதத்திலா? ஐந்தாவது வேதமான மகா பாரதத்தில், பசு மாமிசம் சாப்பிடுவதைப்பற்றி எழுதி யிருக்கிறதா!''

''ரந்தி தேவனுடைய மாளிகையில் விருந்தினர்களுக்காக இந்தப் பசு மாமிசங்களைச் சமைப்பதற்கு, இரண்டாயிரம் சமையற்காரர்கள் இருந்தார்கள். ஆயினும் பிராமண விருந்தினர்களின் கூட்டம் அளவுக்கு மீறி இருந்த காரணத் தால், 'மாமிசம் குறைவாக இருக்கிறபடியால் தயவு செய்து சூப்பை அதிகமாக ஏற்றுக் கொள்ளவேண்டும்' என்று விருந் தினர்களைச் சமையல்காரர்கள் கேட்டுக் கொள்ளும் நிலைமை ஏற்பட்டது.''

''பிராமணர்கள் பசு மாமிசம் சாப்பிட்டார்களா? என்ன சொல்லுகிறாய் குழந்தாய்?''

---

*''ராக்நோ மஹா நஸே பூர்வ ரந்தி தேவஸ்ய வைத்வேஜ!

அஹந்ய ஹநி பந்யேதே த்வே ஹைஸ்த்ரே கவாம் ததா ஸமாம்ஸ தததோஹ் மந்நங் ரந்தி தேவஸ்ய நித்தியஸஹ

அதுலா கீர்த்திர் பவந் ந்ருபஸ்ய த்விஜ ஸத்தம்''

வனபர்வம் 208: 8—10

''மஹா நதி சர்மராஷே ருத்க்லேதாத் ஸங்ஸ்ருஜே யதஹ ததஸ் சர்மண்வதி த்யேவம் விக்யாதா ஸுமஹாநதி''

சாந்தி பர்வம் 29—23

''ஐந்தாவது வேதமான மகாபாரதம்* பொய் சொல்லுமா தாத்தா?''

''என்ன! உலகம் இவ்வளவு தூரம் உருண்டு, புரண்டு, மாறிப்போய் விட்டதா?''

''ஆம் தாத்தா! உலகம் உருண்டு புரண்டு கொண்டு தான் இருக்கிறது. அப்படியிருந்தும், தங்களைப் பக்காப் பிராமணர்கள் என்று சொல்லிக்கொள்ளும் இந்த அரைக் குருடர்கள், மற்றவர்களின் கண்களையும் மூடிவிட விரும்புகிறார்கள். நமது முன்னோர்களான யௌதேயர்கள், இந்தப் பிராமணர்களின் சூழ்ச்சிகள் பரவுவதற்கு முந்தி உள்ள முறைகளையும், நீதிகளையும் பின்பற்றி நடந்து வந்திருக்கிறார் களென்று நான் கருதுகிறேன்.''

''ஆம், அவர்கள் பிராமணர்களைவிடத் தங்களை உயர்ந்தவர்களாகவே கருதினார்கள்.''

''தாத்தா! நீ இங்கே வந்த பிறகு, உனது குழந்தைகளுக்கு அவந்த பிராமணர் வீடுகளிலே கலியாணம் செய்யாமல், நாகர்கள் வீடுகளிலே கலியாணம் செய்த காரணம் என்ன?''

''இரண்டு காரணங்களிருந்தன குழந்தாய்! ஒன்று அவர்கள் நம்முடைய குலத்தைப் பற்றிச் சந்தேகம் கொண்டார்கள். என்றாலும், அதனால் ஒன்றும் ஆகிவிடமாட்டாது. நான் விரும்பியிருந்தால், இந்தப் பிராமணர்களின் பெண்களையே கலியாணம் செய்திருக்கலாம். இரண்டாவது கார

---

*''ஸாங்க்ருதி ரந்திதேவம் சம்ருதம் ஸஞ்ஜய! ஸுஸ்ரும
ஆஸன் த்விஸத் ஸாஹஸ்த்ரா தஸ்ய ஸுதாமஹாத்மநஹ
க்ருஹாநப்யா கதாந் விப்ராந் அதி தீந் பரிவேஷாஹா

துரோணப்ருவம் 67, 1—2

''தத்ர ஸ்ம ஸுதாஹ க்ரோ ஸாந்தி ஸும்ருஷ்ட மணி
குண்டலாஹ
ஸுபம் பூயிஷ்ட மஸ் நீத்வம் நாத்ய மாம்ஸம் யதா புரா''

துரோணபருவம் 67, 17—18

சாந்திபருவம் 27—38

ணம், அதுதான் முக்கியமான காரணமும்கூட. இந்தப் பிரா மணர்களைவிட, நாகர்கள் நம்மைப்போலவே அதிக வெளுப் பாயும் உயரமாயும் இருந்தார்கள். மேலும் இந்தப் பிரா மணர்கள் ஏற்றுக்கொள்ளாத போதும் கூடத் தங்களைப் பிராமணர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள்.''

''நாகர்கள் யார் தாத்தா?''

''பிராமணர்கள் என்று சொல்லிக் கொள்ளுவதால் மட் டும் ஒருவர் பிராமணராகிவிட முடியாது. எந்தத் தேசத் தைச் சேர்ந்த பிராமணன், எந்தக் கோத்திரம் என்றெல் லாம் கேட்பார்கள். நம்முடைய சம்பந்திகளான இந்த நாகர்கள் நகரத்திலே வசிப்பவர்கள். ஆகையால், தங்களை நாகர் கோத்திர பிராமணர்கள் என்று சொல்லிக் கொள்ளத் தொடங்கினார்கள், நாம் நம்மை யௌதேயர்கள் என்று சொல்லிக் கொள்வதைப் போல.''

''ஆனால், அவர்கள் உண்மையில் யார் தாத்தா?''

''சமுத்திரக் கரைகளிலே வசிக்கும் கிரேக்கர்கள் குழந் தாய்! அவர்களில் பெரும்பாலோர் பிராமண மதத்தைச் சேர்ந்தவர்களல்ல; பௌத்த மதத்தைச் சேர்ந்தவர்கள். நீ உஜ்ஜைனிக்குப் போனால் அங்கே தங்களைக் கிரேக்கர்கள் என்றே வெள்ளையாகச் சொல்லிக்கொள்ளும் அநேக நாகர் களைக் காணலாம். அவர்களை எல்லாம் க்ஷத்திரியர்கள் என்று ஒப்புக் கொள்ளும்படியாக, பிராமணர்கள் ரொம்ப வும் கேட்டுக் கொள்கிறார்கள்.''

''ஒப்புக் கொள்வதின் மூலமும், ஒப்புக்கொள்ளச் செய் வதின் மூலமுமா ஜாதிகளும், பிரிவுகளும் ஏற்பட்டு வரு கின்றன?''

''பார்த்தால் அப்படித்தான் தெரிகிறது குழந்தாய்!''

## 3

இப்பொழுது நான் இருபது வயது நிரம்பிய, பலசாலி யான அழகிய வாலிபன். எனது கிராமத்தின் படிப்பை யெல்லாம் முடித்துக்கொண்டு, உஜ்ஜைனி நகரத்திலே பெரிய பெரிய வித்வான்களிடம் கல்வி பயின்று கொண்டிருக் கிறேன். என் தாயாரின் பிறந்த வீடு உஜ்ஜைனியில்தான்.

உஜ்ஜைனியின் பெரிய பணக்காரர்களுள், என் பாட்டி வீட்டாரும் ஒருவர். அவர்கள் என்னைக் கட்டாயப்படுத்தி அங்கே வைத்துக் கொண்டார்கள்! என்னைப் போன்ற ஒரு கிராம மாணவனுக்கு உஜ்ஜைனி, உலகத்தின் பரப்பை எடுத்துக் காட்டும் ஓர் அத்தாட்சி. முன்னமேயே மகாகவி காளிதாஸரின் பெயரைக் கேள்விப்பட்டிருப்பதோடு, அவருடைய கவிதைகளில் சிலவற்றைப் படித்தும் இருக்கிறேன். இப்பொழுது அந்த மகான் கவியின் மாணவனுகும் பாக்கியமும் கிடைத்திருக்கிறது. கவிஞருக்கு, சந்திரகுப்த விக்கிரமாதித்தியனின் ஆஸ்தானத்திலே மிகுந்த மரியாதை உண்டு. இதனல், அவர் அடிக்கடி உஜ்ஜைனியை விட்டு வெளியே செல்ல நேரும். என்னுடைய குருதேவரான கவிஞரைப் பற்றி, எனக்கு அதிகக் கர்வம் உண்டு. ஆனல், காளிதாஸருக்கும் அரசருக்கும் இடையேயுள்ள தொடர்பிலே காணப்படும் அடிமை மனேபாவத்தை நான் மிகுதும் வெறுத்தேன். அப்பொழுது கவிஞர் குமார சம்பவத்தை எழுதிக் கொண்டிருந்தார். சந்திரகுப்த விக்கிரமாதித்தியனின் புதல்வன் குமார குப்தனையே, இந்தக் காவியத்தில் சங்கர புத்திரன் குமார கார்த்திகேயனுக வருணித்து அவனுக்கு அமரத்துவத்தை அளித்திருப்பதாக, கவியரசர் என்னிடம் சொன்னர். என்னுடைய ஒளிவு மறைவற்ற கூர்மையான பேச்சுக்கள் அவருக்குக் கசப்பைக் கொடுத்தாலும் கவியரசர் என்மீது ஒரு நாளும் கோபம் அடைந்ததில்லை. ஒரு நாள் பேச்சு எங்கெல்லாமோ சுற்றிக்கொண்டு இந்த விஷயத்திற்கு வந்து சேர்ந்தது.

''ஆச்சாரிய! உங்களுடைய காவிய—அறிவு சாம்ராஜ்யம், காலத்தைக் கடந்தது. இந்தச்சந்திரகுப்த குமாரகுப்தர்களின் ராஜ்யமோ, கேவலம் அவர்கள் உயிரோடிருக்கும் வரைதான். அப்படியிருந்தும், தாங்கள் ஏன் இந்த அரசர்களுக்கு முன்னல் இவ்வளவு தூரம் தாழ்ந்து போகிறீர்கள்?''

''விக்கிரமாதித்தன் உண்மையிலே தர்மஸ்தாபகன் சுபர்ண! அவன் நம்முடைய பாரத தேசத்தை மங்கோலியர்களிடமிருந்து காப்பாற்றியிருக்கிருன்.''

''ஆனல் பஞ்சாபிலும் காஷ்மீரத்திலும் இன்றும் மங்கோலியர்கள் இருக்கிருர்களே?''

''அவர்கள் இருப்பது மிகச் சிறிய பாகம். பெரும் பகுதியிலிருந்து அவர்களை வெளியேற்றி விட்டான்.''

''அரசர்கள் இந்த மாதிரி ஒருவரை யொருவர் வெளி யேற்றிக் கொண்டேதான் இருப்பார்கள். வெளியேற்ருவிடில் தங்கள் ராஜ்யங்களை எப்படி ஸ்தாபிக்க முடியும்?''

''ஆனுல், குப்த வம்சத்தினர் பசுவையும், பிராமணர்களையும் காப்பாற்றுகிருர்கள்.''

''ஆச்சாரிய! முட்டாள்களுக்குச் சொல்வது போன்ற உபதேசத்தை, நான் உங்களிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. நம் முன்னேர்கள் பசுக்களைக் காப்பாற்றினுர்கள்; அன்பிற்காகவல்ல—சாப்பிடுவதற்காகத்தான் என்பது உங்களுக்குத் தெரிந்ததுதான்; உங்கள் மேக தூதத்திலே, *பசுக்களைக் கொன்றதின் மூலம் சர்மண்வதி நதியைத் தோற்றுவித்த ரந்திதேவனை, நீங்கள் தானே புகழ்ந்து எழுதியிருக்கிறீர்கள்?''

''நீ நேர்மையானவன் சுபர்ண! எனது அன்பிற்கு உரிய மாணவன்.''

''இதைத் தங்கள் வாயால் கேட்க மகிழ்ச்சியடைகிறேன். ஆனுல், காலத்தை வென்றுவிட்ட கவிச்சக்கரவர்த்தி, என் குருநாதர் இந்த தர்ம நாசகர்களான குப்த அரசர்களின் முன்னுல் முழந்தாள் படியிடுவதை என்னுல் சகித்துக்கொண்டிருக்க முடியாது.''

''நீ அவர்கள் தர்மத்தை நாசம் செய்கிறவர்கள் என்ரு சொல்கிருய்?''

''ஆம்; நிச்சயமாக நந்தர்கள், மௌரியர்கள், கிரேக்கர்கள், சகரர்கள், மங்கோலியர்கள் யாரும் செய்யத் துணியாத பாவத்தை, இந்தக் குப்தர்கள் செய்திருக்கிருர்கள். ஜன ஆட்சியின் பெயர்கூட, பாரத தேசத்திலே இல்லாமல் நசுக்கி விட்டார்கள்.''

''ஜன ஆட்சி இந்தக் காலத்திற்கு ஏற்றதல்ல சுபர்ண! ஜன ஆட்சிகளை அப்படியே வைத்திருந்தரல், சந்திரகுப்தனுல் மங்கோலியர்களையும் மற்ற வெளி எதிரிகளையும் தோற்கடித்து வெற்றி பெற்றிருக்க முடியாது.''

---

*வ்யாலம்பேதா ஹஸுரபித நயாலம்பஜாம் மாணியிஷ் யந் ஸரோதோ மூர்த்தியா புவி பரிணதாம் ரந்தி தேவஸ்ய கீர்த்திம்—மேகதூதம் 1. 45.

''வெற்றி யாருக்கு? தன்னுடைய சாம்ராஜ்யத்தை ஏற்படுத்துவதற்கு—மற்ருெரு சந்திரகுப்த மௌரியனுக ஆவதற்குத்தானே? ஆனுல், சாணக்கியனின் ஒப்புயர்வற்ற அறிவின் பலத்திலே ஸ்தாபித்து வளர்க்கப்பட்ட அந்த மௌரிய சாம்ராஜ்யம்கூட, நீண்ட நாள் நிலேத்திருக்க முடியவில்லே. இந்த விக்கிரமாதித்தியனுடைய வம்சமும் எத்தனே நாளேக்குச் சக்கரவர்த்தியாக இருக்கப் போகிறதோ யார் கண்டார்கள்? அப்படியிருக்க, இவன் ஜன ஆட்சியின் சின்னமே இல்லாமல் அழித்துவிட்டான். இது என்ன தர்ம காரியத்திற்காகவோ! ஆதிகாலந் தொட்டு நடந்து வரும் ஜன ஆட்சியின் நிழல்கூட இல்லாமல் செய்வது மகா பாவ மில்லேயா?''

''ஆனுல், அரசன் திருமாலின் அம்சம்.''

''ஆம்; நாளே குமாரகுப்தனும் தன்னுடைய படத்தோடு சேர்த்து ஒரு மயிலின் படத்தையும் தீட்டச் செய் வான். வருங்கால சந்ததியார் அவனேக் குமரக் கடவுள் என்று வணங்குவார்கள். இந்த ஏமாற்றம்—இந்தச் சூழ்ச்சி இதெல்லாம் எதற்காக? சுவை நிறைந்த உணவு, மது, மாமி சம் இவைகளுக்காகத்தானே? தேசத்தின் அழகிய யுவதிகளே யெல்லாம் அந்தப்புரத்தில் கொண்டுபோய் நிரப்புவதற்குத் தானே? உடல் வருந்த உழைக்கும் விவசாயி தொழிலாளர் களின் உழைப்பின் பயனே, சுக போகத்திலே தண்ணீரைப் போல் வீணுக்குவதற்குத்தானே? இவைகளேச் செய்வதற் காக இந்தக் குப்த அரசர்களே நீங்கள் தர்ம ரட்சகர்கள் என்று பாராட்டுகிறீர்கள். குப்தர்களும் தங்களே வைஷ்ண வர்கள் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிருர்கள். பிராமணர்களெல்லாம், அவர்களே விஷ்ணுவின் அம்சம் என்று கருதுகிருர்கள். குப்தர்களுடைய நாணயங்களிலே லெட்சுமியின் உருவம் பொறிக்கப்படுகிறது. பிரஜைகளேப் பட்டினி போட்டுக் கொள்ளேயடித்த பணத்தைக் கொண்டு, தேவாலயங்களே ஏற்படுத்தி, விஷ்ணுவின் உருவச் சிலேகளேச் செய்து வைக்கிருர்கள். இவற்றின் மூலம் குப்த வம்சத்தின் ஆட்சியை நிரந்தரமாக்கிவிட முயல்கிருர்கள்.''

''ஆனுல், சுபர்ண! நீ என்ன செய்கிருய்? அரசனுக்கு விரோதமாகக் கசப்பான பிரசாரம் அல்லவா இது?''

''ஆச்சாரிய! இன்று உங்கள் முன்னிலேயில் மட்டும் இப் படிப் பேசுகிறேன். பின்னுல் ஒரு சமயம் வரும், அப்போது

பரம பட்டாரகன், மகா ராஜாதிராஜன் குமார குப்தனின் முன்னிலையிலும் சொல்லுவேன். இந்தச் சூழ்ச்சியையும் அக்கிரமத்தையும் சகித்துக் கொண்டிருப்பது, என் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம். ஆனால் அந்தக் காலம் ரொம்ப தூரத்தில் இருக்கிறது. ஆச்சாரியரே! நீங்கள் அஸ்வ கோஷைப் பின்பற்றி, அவர் சென்ற பாதையிலே செல்ல வேண்டும் என்பது எனது ஆசை.''

''ஆனால் குழந்தாய்! நான் ஒரு வெறும் கவிஞன். அஸ்வ கோஷ் மகாத்மா. அவருக்கு இந்த உலகத்தில் சுகங்களெல் லாம் துச்சம். எனக்கோ விக்கிரமாதித்தியனின் அந்தப்புர வாசிகளைப்போல அழகிகள் வேண்டும்; செந்நிறத் திராட்சை மது வேண்டும்! பெரிய மாளிகை வேண்டும்; எண்ணற்ற ஏவ லாளர்கள் வேண்டும். இத்தனை ஆசைகளையும் வைத் துக்கொண்டு- நான் எப்படி அஸ்வகோஷாக முடியும்? 'ரகுவம்ச'த்திலே குப்தர்களை ரகு வம்சத்தினர் என்று புகழ்ந்து பாடினேன். அதிலே மகிழ்ந்துபோன விக்கிர மாதித்தியன், இந்தப் பெரிய மாளிகையையும், காஞ்சன மாலாவையும் எனக்கு அளித்தான். பதினைந்து வருடங்கள் என்னோடு வாழ்ந்த பிறகும்கூட தன்னுடைய கூந்தலிலே என்னையும் மறைத்துக் கொள்ளும் ஆற்றல் படைத்திருக் கிறாள் அந்தக் கிரேக்க அழகி. இப்போது, 'குமார சம்பவ'த்தைத் தொடங்கி இருக்கிறேன். இது என்னென்ன பரிசுகளை எனக்குக் கொண்டு வந்து சேர்க்கிறது பார்!''

''என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை ஆச்சாரியரே! நீங்கள்ரகுவம்சத்தையும் குமாரசம்பவத்தையும் எழுதாமல், 'புத்த சரித'த்தையும் 'சௌந்தரியானந்த'த்தையும் எழுதி யிருந்தால், பட்டினியால் மடிந்து போயிருப்பீர்களா? உலக சுகங்களிலிருந்து ஒதுக்கப்பட்டிருப்பீர்களா? அரசர்களை முகஸ்துதி செய்யாவிட்டால், உங்கள் வாழ்க்கை சுகமற்ற தாய் இருக்குமென்று நீங்கள் கருதுவது வெறும் மயக்கம். நீங்கள் வருங்காலக் கவிஞர்களுக்கு ஒரு தவறான பாதை யைக் காட்டிச் செல்கிறீர்கள். எல்லோரும் மகாகவி காளி தாஸரின் மறைவிலே தங்கள் குற்றங்களை மறைத்துக் கொள்ள முயற்சிப்பார்கள்.''

''அந்த மாதிரிக் காவியங்களையும் எழுத முயற்சிப் பேன் சுபர்ண!''

''ஆனால், இந்தக் குப்தர்களின் பாவச் செயல்களின் மீது சவுக்கடி விழும்படி ஒன்றுகூட எழுத மாட்டீர்களா?''

''அது என்ஞல் முடியாது குழந்தாய்! நான் அதிக சுகவாசியாக ஆகிவிட்டேன்.''

''ஆனுல், அரசர்களின் ஒவ்வொரு பாபச் செயலுக்கும் தர்மத் திரை போட்டு மூடுவீர்கள்?''

''அப்படிச்செய்தாகவேண்டும். இல்லாவிட்டால்ஆட்சி, சக்தி பலப்படமாட்டாது. வசிட்டர், விஸ்வாமித்திரர் போன்ற மகரிஷிகளும் அந்த மாதிரி செய்வது அவசியம் என்று கருதிஞர்கள்.''

''வசிட்டரும் விஸ்வாமித்திரரும் மகாகவி காளிதாஸரைப் போலவே, சுகவாழ்விற்கும் சுந்தர யுவதிகளுக்கும் ஆசைப்பட்டே, இந்தப் பாப காரியங்களை யெல்லாம் செய்திருக்கிருர்கள்.''

''அது போகட்டும் சுபர்ண! நீ ஏட்டுப் படிப்போடுகூட யுத்தக் கல்வியையும் பயின்றிருக்கிருயல்லவா! நீ விரும்பிஞல், உன்னை ஒரு குமார மாதயனுகவோ அல்லது சேஞநாயகனுகவோ நியமிக்கும்படி பரம பட்டாரகரிடம் சொல்லுகிறேன். மகாராஜாவும் மகிழ்ச்சியோடு சம்மதிப்பார்.''

''நான் என்னுடைய சரீரத்தை யாருக்கும் விற்கவிரும்பவில்லை ஆச்சாரியரே!''

''நல்லது, ராஜப் புரோகிதர்களிலே ஒருவனுக ஆக விருப்பமா?''

''பிராமணர்களின் சுயநலமும் சூழ்ச்சியும் எனக்கு வெறுப்பை அளிக்கிறது.''

''அப்படியாஞல், நீ என்ன செய்யப் போகிருய்?''

''இன்னும் படிக்க வேண்டியது அதிகம் இருக்கிறது.''

## 4

உஜ்ஜைனியில் வசித்தபொழுது, எனது அறிவுத் தாகத்தைத் தணித்துக் கொள்வதற்கு மட்டும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை; நான் ஏற்கனவே தெரிவித்தபடி பரந்து கிடக்கும் உலகத்தைப் புரிந்து கொள்ளவும் சந்தர்ப்பம் கிடைத்தது. பிராமணர்கள், தங்களை அரசர்களின் கையிலே

முற்றிலும் விற்று விட்டார்கள் என்பதை நெருங்கிப் பார்க்கவும் முடிந்தது. ஒரு காலத்தில் மற்றவர்கள் ஒப்புக் கொள்ளா விட்டாலும்கூட நான் என்னைப் பிராமணன் என்று நினைத்துக்கொள்வதிலும், சொல்லிக் கொள்வதிலும் பெருமைப்பட்டேன். கிராமத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்னாலேயே, எனது பிராமணப் பெருமை சிறிது சிறிதாகக் குறைய ஆரம்பித்து விட்டது. நகரத்திற்கு வந்ததும் அது முற்றிலும் போய்விட்டது. இங்கு வந்த பிறகு பருகச்சத்தி லிருந்து உஜ்ஜைனிக்கு வரும் அசல் கிரேக்கர்களைப் பார்த் தேன். அவர்களுடைய பெரிய பெரிய வியாபாரச்சாலை களையும் பார்த்தேன். சகரர்கள், அபீர்கள் முதலிய பல குடும்பங்களோடும் பழக முடிந்தது. நூற்றுக்கணக்கான வருஷங்களாக உஜ்ஜைனியிலும், குஜராத்திலும், கத்திய வாரிலும் தங்கிப் போய்விட்ட அன்னிய நாட்டினர்கள் பலரையும் பார்க்க முடிந்தது. ஆரஞ்சு நிறமும், ரோம மில்லாத கன்னங்களும் உருண்டைக் கண்களுமுடைய மங்கோலியர்களையும் பார்த்தேன். அவர்கள் யுத்தத்திலே கெட்டிக்காரர்களாய் இருக்கலாம். ஆனால் அறிவுப் பிர காசமோ புத்திசாலித்தனமோ அவர்களிடம் நிறைந் திருப்பதாய்த் தெரியவில்லை. இவ்விதம், விதம் விதமான மனிதர்களைப் பார்ப்பதற்குரிய இடம் பௌத்த மடங்கள். உஜ்ஜைனிக்கு வெளியே பௌத்த மடங்கள் பல இருந்தன. என் மாமா வீட்டினரும், பௌத்த மதத்தைத் தழுவியவர் களே. மேலும் எத்தனையோ நாகர் குலத்தினர் பிக்ஷுக் களாகி, அந்த மடங்களிலே தங்கி இருந்தனர். ஆகையால், அடிக்கடி அங்கே செல்வதற்கு எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஒருமுறை பருகச்சத்திற்கும் போய் வந்திருக் கிறேன்.

ஏட்டுப் படிப்பை முடித்துக் கொண்டதும், நான் நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதன் மூலம் எனது அறிவைப் பெருக்கிக் கொள்ள விரும்பினேன். அந்தச் சமயத்தில் விதர்ப்ப தேசத்திலே அஜந்தா மடம் என்ற பெயரால் ஒரு பிரசித்திபெற்ற மடம் இருப்பதாயும், அங்கே உலகத்தி லுள்ள எல்லா நாடுகளையும்சேர்ந்த பிக்ஷுக்களும் வசிப்பதா கவும் கேள்விப்பட்டேன். உடனே அங்கு சென்றேன்.

வீட்டை விட்டு வெளியேறி இதுவரை நான் சென்ற பொழுதெல்லாம், நண்பர்களின் துணையுடனும், வழிப் பயணத்திற்கு வேண்டிய உணவுடனுமே சென்றேன். சென்ற

இடங்களிலெல்லாம் என்னை ஆதரிப்பவர்கள் இருந்தார்கள். வழித்துணையோ, கையில் உணவுப் பொருளோ இல்லாமல், முன்பின் தெரியாத பிரதேசத்திற்கு நான் புறப்பட்டது இதுதான் முதல் தடவை. வழியிலே திருடர் பயமில்லை. குப்தர்களின் இந்த ஏற்பாட்டிற்காக, அவர்களைப் புகழத் தான் வேண்டும். ஆனால் குப்தர்களின் ஆட்சியில், நாட்டிலுள்ள ஒவ்வொரு குடும்பமும் சுகவாழ்வும் செழிப்பும் பெற்று விளங்குவதால், வழிப்பறியும் கொள்ளையும் ஏற்பட அவசியமில்லாமல் போய்விட்டது என்று தவருகக் கருதிக் கொள்ளக்கூடாது. வரி விதித்து வசூல் பண்ணுவதிலே, முன்னைய எல்லா அரசர்களையும் இந்த குப்தர்கள் மிஞ்சி விட்டார்கள். அரச மாளிகைகள் கட்டுவதில், இவர்களுக்கு முன்னால் எப்பொழுதும் இவ்வளவு பணம் செலவிடப்பட்டதில்லை. அதை அலங்கரிப்பதற்கு இவர்கள் செய்த செலவோ, எல்லை கடந்தது. மலைகளையும் நதிகளையும், குளங்களையும், ஏன் கடலையும்கூட அப்படியே முழு உருவத்தில் கொண்டுவந்து, தங்கள் மாளிகைக்குப் பக்கத்திலே வைக்க முயற்சித்தார்கள். இவர்கள் தயாரித்த போலி வனம், உண்மையிலேயே வனமாகக் காட்சியளித்தது. அங்கே கூண்டுகளில் பயங்கர மிருகங்கள் அடைத்துவைக்கப்பட்டிருந்தன. மான், மரை போன்ற சாது மிருகங்கள், வெளியிலே சுற்றித் திரிந்தன. அவர்கள் உண்டாக்கிய செயற்கை மலையோ, நதி ஊற்றுக்களுக்கும், அருவிகளுக்கும் பிறப்பிடமான இயற்கை மலையாகவே காட்சியளித்தது. குளங்களெல்லாம் சிறிய சிறிய கால்வாய்களால் இணைக்கப்பட்டிருந்ததோடு மட்டுமல்ல, அவற்றிலே அழகிய பாலங்களும் அமைக்கப் பட்டிருந்தன. அந்தக் குளங்களில் எங்கும் உல்லாசப் படகுகளும் காணப்பட்டன. மாளிகையின் உள்ளே இருந்த சாமான்கள் யாவும் யானைத் தந்தத்தாலும், தங்கத்தினுலும் வெள்ளியினுலும் செய்யப்பட்டு இரத்தினங்கள் இழைக்கப் பட்டிருந்தன. பட்டுடையும், மெல்லிய பஞ்சாடைகளும், அங்கு அளவற்றுக் குவிந்து கிடந்தன. மாளிகையை அலங்கரிப்பதிலே, சைத்ரிகர்கள் தங்கள் கைத்திறமையை யெல்லாம் காட்டியிருந்தார்கள். சிற்பிகளோ, கல்லையும் மண்ணையும் கலையாக்கி இருந்தார்கள். வெளிநாட்டு யாத்ரிகர்களும், அரச தூதர்களும், இந்தச் சித்திரங்களையும் சிலைகளையும் பார்த்து வாயாரப் புகழ்ந்ததை நான் கேட்டிருக்கிறேன். அப்பொழுதெல்லாம், என் தலை கர்வத்தால் நிமிரும். ஆனால் இந்த அரச மாளிகைகள் எழுந்ததின்

காரணமாக, நாள்தோறும் தரித்திரத்திலே மூழ்கிக் கொண்டிருக்கும் கிராமங்களைப் பார்க்கும் போதெல்லாம் என் நெஞ்சம் பற்றி எரியும். நகரங்களில் மட்டுமல்ல, கிராமங்களிலும் சிற்பிகள் சிறந்த சிற்பங்களைச் செய்கிறார்கள். சேணியர்கள் அற்புதமான மெல்லிய ஆடைகளை நெய்கிறார்கள். தட்டார், கொல்லர், தச்சர் முதலிய எல்லாத் தொழிலாளர்களும் தங்கள் தொழில் திறமையைக் காட்டத்தான் செய்கிறார்கள். அரச மாளிகையைக் கலையுணர்ச்சியோடு அலங்காரம் செய்த கைகள், இந்தக் கிராமத் தொழிலாளரின் கைகளோடு தொடர்புடையவையே. ஆனால், அவர்களின் உடம்பையும் வீடுகளையும் பார்த்தால், இவர்களின் தொழில் திறமையும் சிருஷ்டிகளும், வெறும் கனவு தானோ என்ற சந்தேகம் எழும். கிராமங்களிலிருந்து சிறிது சிறிதாக ஒன்று சேர்ந்து, அந்தப் பொருள்கள் நகர மாளிகைகளுக்கும், வியாபாரச் சாலைகளுக்கும் போய்ச் சேருகின்றன. அதன் பெரும் பகுதி, அங்கிருந்து மேற்குச் சமுத்திரக் கரையிலுள்ள பருகச்சத்தின் வழியாக ஈரான், ஆப்பிரிக்கா முதலிய தேசங்களுக்கும், கிழக்குக் கரையிலுள்ள தமலூக் வழியாக ஜாவா சுமத்ரா முதலிய தேசங்களுக்கும் சென்றன. பாரத தேசத்தின் கடல் வியாபாரம், இதற்கு முன்னால் இவ்வளவு பிரபலமடைந்ததில்லை. குப்தர்கள் ஆட்சிக்கு முன்னால், பாரதத்தின் பொருள்களுக்காக வெளி நாட்டுச் செல்வம் இவ்வளவு வந்து குவிந்ததும் கிடையாது. ஆனால், இந்தப் பெரும் செல்வத்தால் லாபம் யாருக்கு? இந்தப் பொருள்களின்மீது பெரிய பெரிய வரிகளை விதித்து வசூல் செய்யும் குப்த அரசர்களுக்கு—அவர்களை அண்டி வாழும் குறுநில மன்னர்களுக்கு, கடைசி வரிசையில் வந்தாலும் கடல் வியாபாரிகளும் நகர வியாபாரிகளும், இந்த லாபத்திலே குறைவான பங்கைப் பெறுகிறவர்களல்ல. இவைகளையெல்லாம் பார்த்த பிறகு, கிராமத்தின் தொழிலாளிகளும் விவசாயிகளும் ஏழையாய் இருப்பதின் காரணத்தைத் தெரிந்துகொண்டதோடு மட்டுமல்ல, அந்த ஏழ்மைச் சூழ்நிலையிலும், போக்குவரத்துப் பாதைகள் யாவும் திருடர் பயமின்றிப் பூரணப் பாதுகாப்போடு இருப்பதற்கு, குப்த அரசர்கள் செய்துள்ள ஏற்பாடுகளின் காரணத்தையும் தெரிந்துகொண்டேன்.

கிராமங்களில் ஏழ்மை நிறைந்திருக்கிறது என்றாலும், இந்த நெஞ்சிலே நெருப்பைக் கொட்டும் காட்சியை அங்கு காணமுடியாது. மிருகங்களைப்போல் விற்பனை செய்

வதற்காக, அடிமைப் பெண்களும் ஆண்களும் வரிசை வரிசையாக நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதையும், அவர்களின் திறந்த முதுகுகளிலே சவுக்கடிகள் விழுவதையும் நகரங்களிலே தான் காணமுடியும். ஒரு நாள் என் குரு காளிதாஸர், முன் ஜென்ம வினையின் பயனாகத்தான் மனிதர்கள் அடிமைகளாகப் பிறக்கிறார்கள் என்று சொன்னார். அதைக் கேட்டது முதல், முன் ஜென்ம நம்பிக்கை எனக்கு அடியோடு போய் விட்டது. குப்தர்கள் தங்கள் ஆட்சியின் வேரை ஆழமாக ஊன்றுவதற்காக, மத நம்பிக்கையை எப்படி நூற்றுக் கணக்கான வழிகளிலே உபயோகித்துக் கொள்கிறார்கள் என்பதை ஒவ்வொரு அறிவுள்ளமனமும் உணரவேசெய்யும். ஆனால், சாதாரண ஜனங்களோ இதை முற்றிலும் உணராதவர்களாகவே இருந்தார்கள். ஒரு கால் அது அவர்களின் அறிவுக்கு அப்பாற்பட்டதாய் இருக்கலாம். கிராமவாசிகளோ, தங்கள் கிராமத்திற்கு வெளியேயுள்ள செய்திகளைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. ஆனால், கிராமத்திற் குள்ளே ஓர் அங்குல நிலத்திற்காகவும் உயிரை விடுவார்கள். அவர்கள் சிறிய நிலங்களுக்காகச் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்த்தால், குமார குப்தன்கூட, தன் நாட்டின் ஒரு மாகாணத்திற்காக இவ்வளவு பெரிய சண்டை போடுவானா என்பது சந்தேகமே. இதையெல்லாம் நினைக்கும்போது, எனக்கொரு சம்பவம் ஞாபகத்திற்கு வந்தது. எனது பிரயாணப் பாதையிலே ஒரு சிறிய கிராமம். அதிலே நாற்பது வீடுகள் இருந்தன. ஒரு வீட்டிலே திடீரென்று நெருப்புப் பிடித்துக் கொண்டது. உடனே மற்ற வீட்டுக் காரர்களெல்லாம் பெரிய பெரிய பாத்திரங்களிலே தண்ணீரை நிரப்பினார்கள். ஆனால் அந்த நெருப்பை அணைப்பதற்கல்ல; தாங்கள் வீடுகளைக் காப்பதற்கு என்று கருதி, தண்ணீர்ப் பாத்திரங்களோடு தங்கள் தங்கள் வீடுகளின் முன்னால் உட்கார்ந்து கொண்டார்கள். அதிர்ஷ்டவசமாகக் காற்று வேறு பக்கம் திரும்பிவிட்டது. இல்லாவிடில், அந்தக் கிராமத்தில் ஒரு வீடுகூடத் தப்பியிருக்க முடியாது. இதைப் பார்த்தபொழுது கிராமத்திலுள்ள எல்லா வீடுகளும் தங்கள் வீடுகளே என்றும், எல்லோருடைய சுகதுக்கங்களும் தங்களுடையதே என்றும் கருதி, ஐக்கியத்தோடு வாழ்ந்த ஜன ஆட்சிகள் ஞாபகத்திற்கு வந்தன. இன்றும் கூட சமுத்திரகுப்தன், சந்திரகுப்தன், குமாரகுப்தன், இவர்களுடைய வெற்றிப் பெருக்கிற்காக, ஆயிரக்கணக்கான மக்கள் உயிரைக் கொடுக்கிறார்கள். அடிமைகளைப்போல

எஜமானர்களுக்குக் கீழ்ப்படிந்து, ஆனால் சுதந்திரம் உள்ள மனிதர்களைப்போல, மனித உணர்ச்சியில் ஒன்று பட்டுத் தங்கள் நலனைத் தேடிக்கொள்ள அவர்களால் முடியவில்லை. நூறு வருட காலத்திற்குள் மனிதர்களுடைய மனப் பான்மையில்தான் எத்தனை பெரிய மாற்றம்? இந்தக் குப்த ஆட்சி, இன்னும் நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு நடந்து கொண்டிருக்குமானால், இந்த நாடு தங்கள் அரசர்களுக் காகப் போராடி மடியும் சுய உணர்ச்சியற்ற அடிமைகள் நிறைந்த தேசமாகஆகிவிடும். மனிதர்களுக்குச் சில உரிமை களும் இருக்கிறது; மனிதத்தன்மை என்ற ஒரு பண்பும் உண்டு என்பதையே இந்த ஜனங்கள் மறந்து விடுவார்கள்.

அஜந்தா மடம் மிகப் பெரியதாயும் அழகாயும் இருந்தது. ஒரு பெரிய மலையை, அர்த்த சந்திர வடிவமாக ஒரு நதி அறுத்து ஓடிக் கொண்டிருந்தது. அந்த வளைவிலே, சிற்பிகள் பல இடங்களில் மலையைத் துளைத்து வசிக்கவும், சாப்பிடவும், சபைகள் நடத்தவும் கூடிய மாதிரி பெரிய பெரிய குகைகளை உற்பத்தி செய்திருந்தார்கள்; இந்தக் குகைகளையும், அரச மாளிகையைப்போல் சித்திரங்களின லும், சிலைகளினாலும் அலங்கரித்திருந்தார்கள். பல தலை முறைகள் உழைத்து, இந்த அற்புதமான கலைக் கோவிலைச் சிருஷ்டித்தார்கள். ஆனால் நூற்றுக்கணக்கான தலைமுறை களுக்கு விட்டுச் சென்றார்கள். அஜந்தா மடத்தின் சுவர்ச் சித்திரங்களும், கற்சிலைகளும் மிக அழகானவைதான். ஆயி னும், குப்தர்களின் அரச மாளிகையோடு போட்டியிட்டு ஜெயிக்க அவைகளால் முடியாது. ஆகவே, அது என்னை அதிகமாகக் கவரவில்லை. அங்கு என்னை அதிகமாகக் கவர்ந் தது, பிக்ஷுக்களின் கூட்டம். பல நாட்டையும் சேர்ந்த அவர்கள், ஒரே நோக்கத்தினாலும், அன்பு உணர்ச்சியாலும் இணைக்கப்பட்டு, ஒரே இடத்தில் ஒரே குடும்பத்தினரைப் போல் வாழ்ந்து வருகிறார்கள். அங்கே வெகு தூரத்திற் கப்பாலுள்ள சீனப் பிக்ஷுவைப் பார்த்தேன். பாரசீக, கிரேக்கப் பிக்ஷுக்களையும் கண்டேன். சிங்களம், ஜாவா, சுமத்ரா முதலிய தீவுவாசிகளும் அங்கே இருந்தனர். சம்பா தீவு, கம்போஜம் முதலிய பிரதேச வாசிகளும் அங்கே நிறைந்திருந்தனர்; பல ஜாதியினரும், பல பாஷையினரும் அந்தப் பிக்ஷுக் கூட்டத்திலே காணக்கிடைத்தனர்.

எனக்கு வெளிநாடுகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை அதிகம் உண்டு. இந்த வெளிநாட்டுப்

பிக்ஷுக்களை நான் தனித் தனியாக சந்தித்திருந்தால், ஒவ்வொருவருடனும், ஒவ்வொரு வருடத்தைக் கழித்திருப்பேன். இங்கு அதிகமான எண்ணிக்கையில் இவர்களை ஒன்றாகச் சந்தித்ததும், திடீரென்று பெருநிதி கிடைத்த தரித்திரனின் நிலையைப்போல், என்னையே நான் சமாளித்துக்கொள்ள முடியாமல் போய்விட்டது.

நான் ஏற்கனவே காளிதாஸரின் மூலம் திங்க நாகரின் பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறேன். மகாகவி காளிதாஸர், முடியாட்சியையும் அதன் சின்னமான குப்த சாம்ராஜ்யத்தையும், அதற்கு ஆதாரமாய் இருக்கும் பிராமண மதத்தையும் பலமாக ஆதரிப்பவர். அப்படி ஆதரிப்பதன் நோக்கம் என்னவென்பதை, நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். காளிதாஸர், இந்த வேலைக்குத் திங்கநாகர் ஒரு பெரும் தடை என்று கருதினார். இந்தத் திராவிட நாஸ்திகன், ''ஒரு விஷ்ணுவை என்ன, முப்பத்தைந்து கோடிக் கடவுள்களின் சிம்மாசனத்தையும் அசைத்து விடுவான்போலிருக்கிறதே'' என்று சொல்லுவார். ''மதத்தின் பெயரால் அரசர்களுடையவும், பிராமணர்களுடையவும் நலனுக்காக, நாங்கள் என்னென்ன தந்திரங்களைக் கையாளுகிறோமோ, அவற்றின் ஆழத்திலே புதைந்து கிடக்கும் சுயநல ரகசியம், இந்த நாஸ்திகனின் பார்வையிலிருந்து தப்ப முடிவதில்லை'' என்று வருத்தப்படுவார். 'ஞானக் கடலான வசுபந்துவை அவன் குருவாகப் பெற்றிருக்கிறான். அந்த அறிவுப் பெருக்கமும், அவனுடைய தீட்சண்யமும் ஒன்று சேர்ந்திருப்பது பெரிய ஆபத்து' என்று சொல்லுவார். பிக்ஷு சிரேஷ்டர் வசுபந்து இரண்டாவது சந்திரகுப்த விக்கிரமாதித்தியனின் காலத்தில், தலைநகரான அயோத்யாவிற்கு வந்திருக்கிறாராம். மற்ற தர்பாரிகளைப் போலல்லாமல், மரியாதைக்குரிய சுதந்திரமுள்ள குருவாகவே அவர் வரவேற்கப்பட்டார். ஆயினும், குப்தர்களின் கீழான சுபாவத்தையும் சுயநல நடவடிக்கைகளையும் கண்டு வெறுப்புற்று, தமது ஜென்ம பூமியான பெஷாவருக்குத் திரும்பிவிட்டாராம். திங்கநாகர் இரும்பு வாளையோ, வில் அம்பையோ எடுத்துப் பயிற்சிபெற விரும்பவில்லை. அதைவிடத் தீட்சண்யம் பொருந்தியதான அறிவையும் தர்க்க சாஸ்திரத்தையும் கற்றுத் தேர்ந்து மகா சக்திமானாகிவிட்டார். அவரோடு அரைமணி நேரம் பேசிக்கொண்டிருந்தாலும் போதும்; பிராமணர்களின் சூழ்ச்சிகள் யாவற்றையும் சல்லடையில் சலிப்பது போன்று சலித்தெடுத்துவிடலாம். நான் அஜந்தா மடத்திலே ஆறுமாத

காலம் தங்கினேன். நாள்தோறும் நான்கு புறமும் அறிவொளியைப் பரப்பும் உபதேசங்களைத் திங்கநாகரிடமிருந்து கேட்பேன். திங்கநாகரைப் போன்ற ஒரு மகான்—குரு எனக்குக் கிடைத்தார் என்பதை எண்ணி, நான் கர்வப்படுகிறேன். அவருடைய அறிவு எந்தப் பந்தங்களுக்கும் உட்படாதது; ஈடு இணையற்ற கம்பீரமான போக்குடையது. அவருடைய வார்த்தைகள், ஜொலிக்கும் நெருப்புக் கங்குகள். என்னைப் போலவே, உலகத்தின் ஏமாற்றத்தையும், சூழ்ச்சிகளையும் கண்டு அவர் வெறுப்படைந்தார். ஒருநாள் அவர்,

"சுபர்ண! ஜனங்களின் பலத்தைக் கொண்டுதான் நாம் ஏதாவது செய்ய முடியும். ஆனால், ஜனங்கள் ஏமாற்றத்திலே ஆழ்ந்து கிடக்கிறார்கள். புத்தர்பெருமான், ஜாதி நிற பேதங்களை ஒழித்துவிடப் பெரும் பிரயாசைப்பட்டார். அதில் ஓரளவு வெற்றியும் பெற்றார். வெளிநாட்டார்களான கிரேக்கர்கள், சகரர்கள், கூர்ஜரர்கள், அபீர்கள் இவர்களையெல்லாம் மிலேச்சர்கள் என்று சொல்லி, பிராமணர்கள் வெறுத்து ஒதுக்கினார்கள். ஆனால், புத்த சங்கம் அவர்களை மனிதத் தன்மையோடு சம உரிமை கொடுத்து வரவேற்றது. கொஞ்ச நாளிலே, பாரத தேசத்தில் இந்த வேற்றுமை உணர்ச்சியே அற்றுப் போய்விடும் என்று தோன்றிற்று. ஆனால், துரதிருஷ்டவசமாகப் பிராமணர்களுக்கு, இந்தக் குப்த சாம்ராஜ்யம் கிடைத்திருக்கிறது. முதலில் குப்தர்கள் இங்கு வந்தபொழுது, அவர்களையும் மிலேச்சர்கள் என்று கூறி பிராமணர்கள் ஒதுக்கித் தள்ளினார்கள். ஆனால் இந்தக் காளிதாஸன், அவர்களின் புகழைப் பெருக்குவதற்காக, 'ரகு வம்சத்' தையும், 'குமார சம்பவத்'தையும் எழுதி வைத்தான். குப்தர்கள், தங்கள் வம்சத்தின் ஆட்சி நிரந்தரமாக இந்த நாட்டிலே நிலைத்துவிடச் செய்யவேண்டுமென்று பயித்தியம் கொண்டலைகிறார்கள், பிராணர்களும் அவர்களுக்கு நம்பிக்கை ஊட்டுகிறார்கள். நமது பிக்ஷுசிரேஷ்டர் வசுபந்து, இந்த மாதிரி நம்பிக்கைகளை ஊட்டமாட்டார். அவர், ஜன ஆட்சியின் அஸ்திவாரத்தில் எழுப்பப்பட்ட பிக்ஷு சங்கத்தின் உண்மையான அங்கத்தினர். பிராமணர்கள், பௌத்தர்களைத் தங்களது பலமான விரோதிகள் என்று கருதுகிறார்கள். எல்லா நாட்டிலும் உள்ள பௌத்தர்கள், பசு மாமிசம் சாப்பிடுகிறார்கள் என்ற காரணத்திற்காகவே, பசு மாமிசம் தடை செய்யப்பட்டதென்றும், பசுவையும், பிராமணர்களையும் காப்பாற்றுவது தர்மம் என்றும், பிரா

மணர்கள் பிரசாரம் செய்யத் தொடங்கி இருக்கிறார்கள். பௌத்தர்கள் ஜாதி நிற வேற்றுமைகளை ஒழிக்க விரும்பு கிறார்கள். பிராமணர்களோ, ஜாதி உணர்ச்சியே இல்லா திருந்த கிரேக்கர்கள், சகரர்களையும்கூட உயர்ந்த ஜாதியில் சேர்ப்பதாக ஆசை காட்டுகிறார்கள். இந்த ஆசை வலை மிகச் சக்தி வாய்ந்தது. பௌத்த குடும்பஸ்தர்கள் பலரை யும்கூட இழுத்துப் பிடித்து விடுகிறது. இவ்விதம் பிளவு களின் மூலம் ஜனங்களின் சக்தியைச் சின்னாபின்னப்படுத்தி அரசின் சக்தியையும் பிராமணர்களின் சக்தியையும் உறுதிப் படுத்த விரும்புகிறார்கள். ஆனால், இதன் விளைவு மிக அபாய கரமானதாய் இருக்கும். அடிமைகளின் பலத்தைக்கொண்டு ஒரு தேசம் சக்திசாலியாய் இருக்க முடியாது'' என்று கூறினார்.

நான் யௌத்தேயர்களின் ஆத்ம தியாகத்தைப் பற்றிக் கூறிய பொழுது, அவர் மனம் மிகுதும் இளகிவிட்டது. மறு படியும் யௌத்தேயர்களின் ஜன ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற எனது ஆசையை வெளியிட்டதும், ''என் னுடைய நல்லெண்ணமும், ஆசீர்வாதமும் உனக்கு எப் பொழுதும் துணையிருக்கும் குழந்தாய்! காரியங்கள் செய்யும் பொழுது ஏற்படும் தடைகளைக் கண்டு, ஓர் ஆண் மகன் பயப்படக்கூடாது'' என்று கூறினார். அவருடைய ஆசீர் வாதத்தை ஏற்றுக்கொண்டு, யௌதேயர்களின் பூமியை நோக்கிச் செல்கிறேன். மாண்டு கிடக்கும் அந்தப் பூமிக்கு புத்துயிர் அளிப்பேனோ, அல்லது மணலிலே பட்ட கால் சுவடுபோல் மறைந்தொழிவேனோ!

# துர்முகன்

**காலம்: கி. பி. 630**

**என்** பெயர் ஹர்ஷவர்த்தனன். நல்லொழுக்க சூரியன் என்று பொருள்படும் சீலாதித்தியன் என்ற பட்டத்தை நான் சூடிக்கொண்டேன். இரண்டாவது சந்திர குப்தன் பராக்கிரம சூரியன் என்று பொருள்படும் விக்கிரமாதித்தியன் என்ற பட்டத்தைத் தேர்ந்தெடுத்தான். நானோ, இந்த மிருதுவான இனிய பட்டத்தையே விரும்பினேன். விக்கிரமம் (பராக்கிரமம்) என்ற சொல்லிலே பிறரை அழுத்துவது மற்றவரைத் துன்புறுத்துவது என்ற பாவங்கள் மறைந்து நிற்கின்றன. ஆனால், சீலம் (நல்லொழுக்கம்) என்ற சொல்லிலே, அழுத்தல்—துன்புறுத்தல் என்ற உணர்ச்சியே கிடையாது. குப்தர்கள் தங்களைப் பரம வைஷ்ணவர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். என் தமையன் ராஜ்யவர்த்தனன் பௌத்த மதத்தைப் பின்பற்றினான்; சாக்ஷாத் புத்த பகவானைப் போன்ற கருணாமூர்த்தியாகிய அவனை, கௌடசசாங்கன், இளமையிலேயே ஏமாற்றிக் கொலை செய்துவிட்டான். அந்தச் சம்பவத்தை இன்று நினைத்தாலும் என் இதயம் நடுங்குகிறது. என் தமையனின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடக்கும் மாணாக்கனாயினும், நான் சைவ சமயத்தையே தேர்ந்தெடுத்தேன். நான் மகேஸ்வரனை வணங்கும் சைவனாக இருந்தாலும், என் இதயத்திலே நிரம்பியிருக்கும் பௌத்த பக்தியை பாரத தேசம் மட்டுமல்ல, அதற்கு வெளியில் உள்ள உலகமும் நன்கறியும். நான், எனது ராஜ்யத்திலுள்ள எல்லா மதங்களையும் பாராட்டவே செய்கிறேன். கேவலம், பிரஜைகளைத் திருப்திப்படுத்துவதற்காக மட்டுமல்ல; என்னுடைய நல்லொழுக்கத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும் ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை எனது அரச பொக்கிஷத்திலேயே மிஞ்சியிருக்கும் பணத்தையெல்லாம் பிரயாகையில் உள்ள திருவேணிக் கரையில் பிராமணர்களுக்கும் பௌத்த பிக்ஷுக்களுக்கும் நான் பங்கிட்டுக் கொடுப்பது வழக்கம். நான் எல்லா மதத்தையும் சமமாகவே பாவிக்

கிறேனென்பது இதிலிருந்து தெளிவாகத் தெரியும். சந்திர குப்த விக்கிரமாதித்தியனைப் போலவே, நானும் வெற்றி யாத்திரைகள் செய்திருக்கிறேன். ஆனால், அவையெல்லாம் சீலாதித்தியன் என்ற பட்டத்தை ஏற்றுக்கொள்வதற்கு முன்னால். தென் திசையின் அரசன் புலிகேசியிடம் நான் தோல்வியடைந்திருக்கா விட்டால், நான் இந்த சீலாதித் தியன் என்ற பட்டத்தை ஏற்றுக்கொள்ளாமல் சந்திரகுப்த விக்கிரமாதித்தியனைப் போலவே ஒரு வீரபட்டத்தை ஏற்றுக் கொண்டிருப்பேன் என்று நீங்கள் தவறாகக் கருத வேண்டாம். நான் அகில பாரதத்திற்கும் சக்கரவர்த்தி யாயிருந்தாலும், சந்திரகுப்தன் இல்லை. அசோகன் கலிங் கத்தின் வெற்றிக்குப் பிறகும் பச்சாதாபத்தினால் போரை நிறுத்தி நல்லொழுக்கத்தின் மூலம் மனிதர்களை வெற்றி கொள்ள முயன்றதைப் போலவே நானும் முயலுகிறேன். என்னுடைய சுபாவமும் அவ்வளவு மென்மையானது.

அரச பதவியை ஏற்றுக் கொள்ள நான் மறுத்தேன். ஏனெனில், ஸ்தானவீஷ்வரத்து அரசன் பிரபாகரவர்த்தனின் புத்திரன், கன்னியகுப்ஜாதிபதி, பரம பட்டாரகன்; ராஜாதி ராஜன், ராஜ்யவர்த்தனின் தம்பியாகிய நான், அரச போகத்தைப் பார்த்து மட்டுமல்ல, அனுபவித்தும், அது பயனற்றது என்று கருதினேன். தமையன் கொல்லப்பட்ட பிறகு, எவ்வளவோ காலம் நான் சிம்மாசனத்தை ஏற்றுக் கொள்ள மறுத்தேன். தமையனின் கொலைக்குப் பழிவாங்க வேண்டுமென்ற க்ஷத்திரிய உணர்ச்சி, என் இதயத்திலே தீவிரமாக இடம் பெறாவிட்டால், நான் இந்தக் கன்னிய குப்ஜ சிம்மாஸனத்திலேஅமர்ந்திருக்கவே மாட்டேன். இந்த ராஜ்யம், என் சகோதரி ராஜ்யஸ்ரீயின் கணவன் வீட்டா ருக்கு—மௌக்கரி குலத்தினருக்குக் கிடைத்திருக்கும். என் தமையனுக்கு முன்னால், குப்தர்களின் அந்த நாட்டை ஆண்டு வந்தவர்கள் மௌக்கரி குலத்தினரே. எனது பிற் காலத்தவர்கள் ஹர்ஷவர்த்தனன் சுயநல நோக்கத்தோடு தன் தலையில் கிரீடத்தை வைத்துக் கொள்ளவில்லையே என்ப தைப் புரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகவே இவை களையெல்லாம். சொல்கிறேன். எனது தர்பாரிலே நிறைந் திருந்த முகஸ்துதிக்காரர்களின் செயலை நினைத்து, நான் வருந்துகிறேன். அரசர்கள் இந்த முகஸ்துதிக்காரர்களின் பிடியிலிருந்து எப்பொழுதும் தப்பித்துக் கொள்ள முடிவ தில்லை. அவர்கள், என்னைச் சமுத்திர குப்தனாகவும் சந்திர குப்த விக்கிரமாதித்தியனைப் போலும், உலகம் கருதும்படி

செய்துவிட்டார்கள். அவர்களின் இந்தச் செயல், எனக்கு நன்மையைச் செய்யவில்லை; தீமையையே உண்டாக்கியது.

நல்லொழுக்கத்தைக் காப்பாற்றுவதற்காகவும் எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்வதற்காகவுமே நான் இந்த ராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொண்டேன். தானங்களிலெல்லாம் மிகப் பெரிய தானம் கல்விதானம் என்றே நான் கருதினேன். ஆகவே குப்தர்கள் காலத்திலே வளர்ந்து வந்த 'நாளந்தா' சர்வ கலாசாலையை இன்னும் வளர்த்து, எல்லா வசதிகளையும் உடையதாகச் செய்தேன். என் காலத்தில், அங்கே வெளிநாடுகளிலிருந்தும், நம் நாட்டிலிருந்தும் வந்துள்ள பத்தாயிரம் மாணவர்களும், ஆசிரியர்களும் வசதியுடன் தங்கிப் படிப்பதற்கு வேண்டிய எல்லாச் சௌகரியங்களும் இருந்தன. அறிஞர்களுக்கு மரியாதை செலுத்துவது, எனக்கு மிகுதும் பிரியமான செயல். சீனாவிலிருந்து வந்த அறிஞர் பிக்ஷு வான்-சிங்கை, மனமுவந்து வரவேற்றுக் கௌரவித்தேன். பாணகவியின் அற்புதமான கவிதா சக்தியைப் பார்த்து, நான் அவனைக் காமுகப் பாதையிலிருந்து திருப்பி, நல் வழியிலே கொண்டுவர முயற்சி செய்தேன். ஆனால் அதில் முழு வெற்றியும் பெற முடியவில்லை. அவன் காளிதாஸனின் வழிகளையே பின்பற்றி, வெறும் முகஸ்துதிக் கவிஞனாகவே ஆகிவிட்டான். ஆனால், மகத நாட்டின் எங்கோ ஒரு சிறு கிராமத்தில் மங்கிக் கிடந்த அவனைக் கொண்டு வந்து உலகத்தின் முன்னிலையில் நிறுத்திய பெரு முயற்சிக்கு எனது கல்வி ஆசையே காரணம்.

ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் தருமங்களைப்பின்பற்ற வேண்டுமென்று நான் விரும்பினேன். அவரவர் கடமையை அவரவர் செய்வதுதான் சரி. அதன் மூலம்தான் உலகத்தின் அமைதியும் வளர்ச்சியும் ஏற்படுகிறது. மேலும் மோட்சமும் கிடைக்கும். எல்லா வருணத்திற்கும் தங்கள் தங்கள் கடமைகளைச் சரியாகச் செய்ய வேண்டும். எல்லாப் பருவத்தினரும், *தங்கள் தங்கள் பருவத்திற்கேற்ற கடமைகளை ஒழுங்காகச் செய்து வரவேண்டும். எல்லா மதத்தினரும் தங்கள் தங்கள் பூஜை, நியமங்களை சிரத்தையோடும, நம்பிக்கையோடும் செய்து வரவேண்டும். இந்த ஒழுங்குகள் கெடாமலிருப்பதற்கு, நான் எப்பொழுதும் முயற்சி செய்து வந்திருக்கிறேன்.

---

*மனித வாழ்க்கையை நான்கு பருவங்களாகப் பிரிப்பது ஆரிய மரபு:— 1. பிரம்மச்சரியம், 2. கிருஹஸ்தம், 3. வானப்பிரஸ்தம். 4. சந்யாசம்.

காமரூபத் (அஸ்ஸாம்) திலிருந்து சௌராஷ்டிரம் (கத்தியவார்) வரை, ஹிமாலயத்திலிருந்து விந்திய மலைத் தொடர்வரை பரந்துகிடக்கும் பெரிய பூப்பிரதேசத்திலே நான் நியாயத்தின் ஆட்சியை ஸ்தாபித்தேன். எனது நிர்வாக அதிகாரிகள், ஜனங்களைத் துன்புறுத்தாமலும் கொடுமை செய்யாமலும் இருக்க வேண்டுமென்பதற்காக, நானே அடிக்கடி சுற்றுப் பிரயாணங்கள் செய்து மேற்பார்வை செய்தேன். இப்படி ஒரு பிரயாணத்தில்தான் ஒரு கிராமத்திலே பாணபட்டனைச் சந்தித்து என்னுடன் அழைத்து வந்தேன். அவன் என் புகழைப் பெருக்கவேண்டுமென்று விரும்பி எனது யாத்திரைகளைப் பெரிய ராஜ படாடோபத்தோடு வருணித்திருக்கிறன். உண்மையில் அந்தப் படாடோபங்கள் என்னுடையவை அல்ல, யாரோ ஒரு விக்கிரமாதித்தியனுடையவையாய் இருக்கலாம். என்னுடைய வாழ்க்கை வரலாற்றை (ஹர்ஷசரிதம்) அவன் எனக்குத் தெரியாமல் மறைவாகவே எழுதிக் கொண்டிருந்தான். அந்த விஷயம் தெரிந்து ஒருநாள் கேட்டபொழுது அவன் எழுதியிருந்த பகுதியை எனக்குக் கொண்டு வந்து காட்டினன். நான் அதை விரும்பவில்லை. இந்த முயற்சிக்காக அவனைக் கண்டிக்கவும் செய்தேன். எனது கண்டிப்புக்காக அவன் அந்த வேலையை முற்றிலும் நிறுத்திவிடா விட்டாலும், மேலே அத்தனை உற்சாகத்தோடு அவனல் எழுதமுடியவில்லை. அவனுடைய 'காதம்பரி' எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனல், அதில் அரச தர்பாரையும், அந்தப்புரத்தையும், மாளிகையையும், வேலைக்காரர்களின் நிலைமையையும் சுக சௌக்கியத்தையும் அவன் வருணித்திருப்பதைப் பார்த்து ஜனங்கள் அவை யாவும் என்னுடைய அரண்மனையையும் என்னுடைய வாழ்க்கையையும் பற்றியவை என்று தவருகக் கருதுவார்கள். நான் என்னுடைய பாரசீக ராணியை மிகுதும் விரும்பினேன். அவள் நௌஷேர்வானின் பேத்தி என்பது மட்டுமல்ல, அவளுடைய அழகினுலும், தகுதியினுலும் எந்த ஆடவனையும் மயக்கும் சக்தி வாய்ந்தவள். பாணகவி, அவளை 'மகாஸ்வேதா' என்ற பெயரால் வருணித்திருக்கிருன். என்னுடைய சௌராஷ்டிர ராணி, எனக்குக் கொஞ்சம் வயதான பிறகு வந்தாள். ஆகவே, அவள் மனமகிழ்ச்சியடைவதற்காக அவளுடைய வாசஸ்தலத்தை அலங்கரிப்பதிலே சிறிது அதிகமாகக் கவனம் செலுத்த வேண்டி ஏற்பட்டது. அவளைத்தான் பாணகவி 'காதம்பரி' என்றும் அவளுடைய வாசஸ்தலத்தை அழகு

மாளிகையாகவும் வருணித்திருக்கிறன். அவனுடையசிருஷ்டி யிலே, இந்த இரண்டு விஷயங்களைத் தவிர மற்றவையெல் லாம் என்னுடையதல்லவென்றே, அல்லது உயர்வு நவிற்சி யென்றே கொள்ளவேண்டும்.

நான் எனது இந்தக் கடைசி நாட்களிலே, பாணகவி எனது நன்மையை நாடவில்லை என்று உணர்கிறேன். அவன் 'ஹர்ஷசரித'த்தில் மட்டுமல்ல, 'காதம்பரி' யிலும்கூட அர சனையும் அவனது செல்வப் பெருக்கையும் பற்றி வருணித் திருப்பதையெல்லாம் பார்த்த ஜனங்கள் அவைகளில் அவன் என்னைப்பற்றியே வருணித்திருப்பதாகக் கருதுவார்கள். அதுமட்டுமா! 'நாகாநந்தம்', 'ரத்னுவளி', 'பிரியதரிஸிகா' ஆகிய நாடகங்களை எழுதி என் பெயரால் வெளியிட்டு மேலும் அனர்த்தத்தை விளைவித்திருக்கிறன். புகழுக்கு ஆசைப்பட்டு, ஹர்ஷவர்த்தனன் மற்றவனின் சிருஷ்டியைப் பணம் கொடுத்து வாங்கித் தன் பெயரால் வெளியிட்டிருக் கிறன் என்று ஜனங்கள் சொல்வார்கள். உண்மையில் இந்த விஷயம் எனக்கு ரொம்பப் பின்னுல்தான் தெரியும். எனக்கு விஷயம் தெரிந்தபொழுது, ஆயிரக்கணக்கான மாணவர்கள் இந்த நாடகங்களை என் பெயராலேயே படித் திருந்தார்கள். பல மேடைகளிலே அவைகள் நடிக்கப் பட்டும் இருந்தன.

எனது பிரஜைகளின் வாழ்வு, சுகம் நிறைந்ததாய் இருக்கவேண்டும் என்று விரும்பினேன். அவ்விதமே,செய்து முடித்தேன். எனது ராஜ்யத்திலே அமைதியும் பசியின்மை யும் நிலவ வேண்டுமென்று கருதினேன். எனது இந்த ஆவலும் பூர்த்தி ஆயிற்று. எனது நாட்டிலே. தங்கத்தைக் கையிலே கொட்டிக் கொழித்துக்கொண்டு ஜனங்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பயமின்றித் தாராள மாகப் போய்வர முடியும்.

எனது குலத்தைப்பற்றி இப்பொழுதே என் முதுகுக் குப் பின்னுல் பேசத் தொடங்கி விட்டார்கள். எங்கள் குலம் பனியா (வியாபாரி) குலம் என்று சொல்வது முற்றி லும் தவறு. நாங்கள் வைசியப் பனியாக்கள் அல்ல; வைசிய க்ஷத்திரியர்கள் ஒரு காலத்தில் எங்கள் சாதவாஹன் குலம் அகில பாரதத்தையும் ஆண்டது. சாதவாஹன் ராஜ்யம் அழிந்த பிறகு எங்கள் முன்னோர்கள் கோதாவரி நதிக்கரை யிலுள்ள பிரதிஷ்டான புரத் (பேட்டன்) திலிருந்து ஸ்தான

வீஷ்வ (தானேசுவரம்)ருக்குப் போய்விட்டார்கள். சாத வாஹன் (சாலிவாகன்) வம்சம் எப்பொழுதும் பணியாவாக இருந்ததில்லை. இதை அகில உலகமும் அறியும். சகர க்ஷத்திரியர்களோடு அவர்களுக்குக் கொள்வினை கொடுப் பினை உண்டு; பாரதத்தின் அரசர்களுக்கு இந்தச் சம்பந்தம் நியாயம் என்றே கருதப்பட்டு வந்திருக்கிறது. என்னுடைய அன்பிற்குமுழுதும் பாத்திரமான மகாஸ்வேதா கூட பாரசீக ராஜ வம்சத்தைச் சேர்ந்தவள்தான்.

## 2

என் பெயர் பாணன். நான் எத்தனையோ காவிய நாடகங்களை எழுதியிருக்கிறேன். அந்த உரை கல்லிலேயே ஜனங்கள் என்னை உரைத்துப் பார்ப்பார்கள் என்று கருதியே நான் இந்த எழுத்தையும் எழுதி வைத்துவிட்டுப் போகி றேன். தற்போதைய ராஜவம்சம் ஆட்சியிலிருக்கும் வரை, இந்த எழுத்து வெளிப்பட முடியாதென்பது எனக்குத் தெரி யும். ஆகவே, இதை ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறேன். வருங்கால மக்கள் எனது புகழ் பெற்ற நூல்களைப் படிப்பதற்கு முன்னால் இந்த எழுத்தைப் படித்து விட்டார்களாயின், என்னைப் பற்றித் தவறான கருத்துக் கொள்ளமாட்டார்கள்.

அரசன் ஹர்ஷவர்த்தனன் நிறைந்த சபையிலே என்னைக் காமுகன் என்று கூறினான். அதைக்கொண்டு ஜனங்கள் தவறான முடிவுக்கு வரக்கூடும். நான் ஒரு பணக்காரத் தந்தையின் செல்வப் புதல்வன். மேலும், காளிதாஸனின் நூல்களைப் படித்துப் படித்து, என்னுடைய மனம் அதிலேயே மூழ்கிவிட்டது என்பதில் சந்தேகமே இல்லை. என்னிடம் அழகும் இளமையும் இருந்தது. அதோடு, தேசங்களைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று ஆசையும் இருந்தது. நான் இளமையின் இன்பத்தை முழு தும் அனுபவிக்க விரும்பினேன். நான் விரும்பியிருந்தால், என் தந்தையைப்போல வீட்டில் இருந்துகொண்டே அதை முழுதும் அனுபவித்திருக்க முடியும்; ஆனால் அப்படிச் செய்வது அயோக்கியத்தனம் என்று நான் கருதினேன். மனத்திற்குள் காம இச்சையையும் விபசார ஆசையையும் வைத்துக்கொண்டு, வெளியிலே புலன்களை அடக்கி ஆள்வ

தாகவும், ஒழுக்க சீலராகவும், மகாத்மாவாகவும் காட்டிக் கொள்வது, வெறுக்கத்தக்கது என்று கருதினேன். என்னுடைய ஆயுளில் எப்பொழுதும் நான் இந்த வெளிவேஷத்தை விரும்பியதே இல்லை. எதைச் செய்தாலும் அதைப் பகிரங்கமாகவே செய்தேன். என் தந்தை, தமது ஆயுளிலே ஒரே ஒரு முறைதான் துணிவோடு தமக்குப் பிற ஜாதிப் பெண்ணிடம் பிறந்த குழந்தையைத் தன் குழந்தை என்று ஏற்றுக் கொண்டார்; ஆனால், அதை இளமையின் விறுவிறுப்பு என்று ஒதுக்கிவிட வேண்டியதுதான். வாழ்க்கையின் ஆனந்தத்தை நான் விரும்பியபடி முழுதும் அனுபவிக்க வேண்டுமானால், நான் பிறந்த கிராமத்திலிருந்துகொண்டே முடியாது என்று கருதினேன். அங்கே எல்லா ஜாதியினரும் சண்டைக்கு வந்துவிடுவார்கள். அதனால் என்னுடைய செல்வம்—சொத்துக்களையும் இழக்க வேண்டி நேரலாம். ஆகவே, நான் இதற்கொரு நல்ல வழி கண்டு பிடித்தேன். ஒரு நாடக சபையைத் தோற்றுவித்தேன்; ஆம் மகதத்திற்கு வெளியே போய்த்தான். திறமைசாலிகளையும், கலைப்பயிற்சி உடையவர்களுடைய நண்பர்களைப் பொறுக்கிச் சேர்த்துக் கொண்டேன். முட்டாள்களையும், முகஸ்துதியில் மயங்குபவர்களையும் நான் எப்பொழுதும் விரும்புவதில்லை. எங்கள் நாடக சபையிலே, அநேக அழகிய யுவதிகள் இருந்தார்கள். அவர்கள் எல்லோருமே வேசியர்களல்ல—இந்த நாடக சபை சுற்றி வந்து நடிப்பதற்காகவே, 'ரத்னாவளி', 'பிரியதரிஸிகா' முதலிய நாடகங்களை எழுதினேன். நான் இளமையின் ஆனந்தத்தோடு கலையையும் சேர்த்து இணைத்துவிட்டேன். இதனால் ஏற்பட்ட கலை வளர்ச்சியைக் கண்டு, நல்லொழுக்க சீலர்களும் என்னைப் புகழ்ந்தார்கள். நான் வாழ்க்கையின் இன்பத்தை அனுபவித்தேன். ஆனால் உங்களுக்கு 'ரத்னாவளி', 'பிரியதரிஸிகா' முதலிய நாடகங்களைத் தந்தேன். மற்ற சுகபோகிகளைப்போல், நான் ஆனந்தம் அடைவதோடு நின்று விடவில்லை. அரசன் ஹர்ஷவர்த்தனனைத் திருப்திப்படுத்துவதற்காக, நான் எனது நாடகங்களை அவன் பெயரால் வெளியிட்டேன் என்று ஜனங்கள் தவறாகக் கருதக்கூடும். எனது நாடக சபைக்காக இந்த நாடகங்களை நான் எழுதிய காலத்தில், ஹர்ஷவர்த்தனின் பெயரை மட்டுமே கேள்விப்பட்டிருந்தேன். பின்னால் ஹர்ஷன் என்னை அழைத்துச் சென்று, ஆஸ்தான கவியாக்கப் போகிறானென்பதும் எனக்கு அப்பொழுது தெரியாது. கேவலம், என் பெயரை மறைத்துக் கொள்வதற்காகவே, நான் அந்த

நூல்களை ஹர்ஷனின் பெயரால் வெளியிட்டேன். அந்த நாடகங்களைப் படிப்பவர்கள், அதன் மதிப்பை உணர முடியும். அவை முற்றிலும் புதியவை. எனது நாடகங்களைப் பார்ப்பவர்களில், நற்குண சீலர்களும் நிறைந்திருந்தார்கள். பண்டிதர்கள், அரசர்கள், கலா நிபுணர்கள் முதலியோர் ஆவலோடு அந்த நாடகங்களைப் பார்த்தார்கள். அவர்களுக்கு விஷயம் தெரிந்துவிட்டால், நான் நாடக சபையின் சூத்ரதாரனாக இருக்க முடியாது. ஜனங்கள் மகாகவி பாணனை மொய்த்துக்கொண்டு விடுவார்கள். நான் ஹர்ஷனுடைய நாட்டில் மட்டுமல்ல, அஸ்ஸாமிலிருந்து சிந்துவரை, ஹிமாலயத்திலிருந்துசிங்கள நாட்டின் அனுராத புரம்வரை, பரந்து கிடக்கும் பல நாடுகளின் அரசர்கள் முன்னிலையிலும் நாடகங்களை நடத்தியிருக்கிறேன். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்! இந்த அரசர்களில் யாருக்காவது, இந்த நாடகங்களை எழுதிய மகாகவி, இதே பாணபட்டன்தான் என்று தெரிந்துவிட்டால், என்னுடைய சுற்றுப் பிரயாணமும், இன்ப வாழ்வும் என்ன கதியாகும்? நான் எந்த அரசனிடமும் ஆஸ்தான கவியாக இருக்க விரும்பவில்லை. என் தந்தையின் சொத்து போதுமான அளவு இருந்தது. ஹர்ஷனுடைய ராஜ்யத்தைச் சேர்ந்த பிரஜையாக இல்லாவிடில், அவனுடைய ஆஸ்தான கவியாகவும் ஆகியிருக்கமாட்டேன்.

ஹர்ஷன் சொல்வதுபோல, நான் ஒரு காமலோலன் என்று நீங்கள் கருதக்கூடும். என்னுடைய நாடக சபையிலே வேசையர்கள் மிகக் குறைவு. நாட்டியம், சங்கீதம், நடிப்பு முதலிய கலைகளைக் கருதியே, ஒரு சில வேசையர்களைச் சேர்த்துக் கொண்டேன். எங்கள் நாடக வானத்திற்கு, நட்சத்திரங்கள் வேறொரு வழியிலிருந்து வந்தன. எதிர்காலத்தில் என்ன ஆகுமோ தெரியாது. ஆனால், இப்பொழுது தேசத்திலுள்ள அழகிய யுவதிகள் யாவரும்—அவள் க்ஷத்திரியப் பெண்ணாக இருந்தாலும் சரி, பிராமணப் பெண்ணாக இருந்தாலும் சரி,—அரசர்களுடையவும் குறுநில மன்னர்களுடையவும் சொத்தாகவே கருதப்படுகிறார்கள். என்னுடைய அத்தை ஒருத்தியை மகத நாட்டின் மௌக்கரி குல குறுநில மன்னன் ஒருவன், பலவந்தமாகக் கொண்டு போய் வைத்துக்கொண்டான். அவன் இறந்தபொழுது அவளும் கிழவியாகிவிடவே எங்கள் வீட்டில் வந்து வசித்து வந்தாள். என்மீது அவளுக்கு அதிக அன்பு. நானும் அவளுடைய அந்தக் குறுநில மன்னனின் தொடர்பைப் பற்றிப் பொருட்படுத்துவதே இல்லை. பாவம், அதில் அவளுடைய

குற்றமென்ன? தேசத்திலே அழகிய யுவதிகளுக்குக் குறைவா? ஆனால், எல்லா அழகிகளுக்கும் முதலாவது உரிமையாளர் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில அரசர்களும், குறுநில மன்னர்களுமே என்று ஏற்பட்டால், அவர்கள் ஒவ்வொருவருக்கும் பெண்களின் எண்ணிக்கை எவ்வளவு அதிகப்படுமென்று நீங்களே யோசித்துப் பாருங்கள். அரசர்களும் குறுநில மன்னர்களும், இந்த அழகிகளை அடைவதற்கு விதவிதமான வழிகளை ஏற்படுத்தியிருந்தார்கள். கல்யாணமான பெண், கணவன் வீட்டிற்குச் செல்வதற்கு முன்னால், முதல் இரவை அரசன் அல்லது குறுநில மன்னனோடு கழிக்க வேண்டுமென்பது ஒருவழி. இதை ஜனங்கள் மதக் கடமையாகக் கருதிச் செய்தார்கள். தங்கள் மகள், மருமகள், சகோதரிகளைப் பல்லக்குகளிலே வைத்து அந்தப்புரங்களுக்கு அனுப்பினார்கள். ஆனால், அப்படிப் பல்லக்குகளில் அனுப்பாவிட்டால், அரசனுடைய கோபம் முழுமைக்கும் ஆளாகவேண்டும் அல்லவா? அவ்விதம் அனுப்பப்படும் பெண்களில் தனக்குப் பிடித்தமானவர்களை, அரசன் அந்தப்புரத்திலேயே நிறுத்திக்கொண்டு விடுவான். ராணி என்ற ஹோதாவில் அல்ல, கேவலம் வேலைக்காரியாக. ராணியாகும் பாக்கியம், ராஜகுமாரிகளுக்கும் குறுநில மன்னர்களின் புத்திரிகளுக்கும்தான் உண்டு. அந்தப்புரத்திலே இருக்கும் ஆயிரக்கணக்கான யுவதிகளில் பெரும்பாலோர், ஒரு இரவிற்கதிகமாக அரசனையோ அல்லது குறுநில மன்னனையோ அணையும் பாக்கியத்தைப் பெறாதவர்கள். அவர்களின் இளமை எதை விரும்பும் என்பதை யோசித்துப் பாருங்கள். எனது நாடகத்திற்கு, நடிகைகள் இந்த அந்தப்புரங்களிலிருந்துதான் வருகிறார்கள். ஆனால் திருட்டுத்தனமாகத் தப்பியோடியல்ல. அரசர்களையும் குறுநில மன்னர்களையும் என் பக்கம் இழுப்பதிலே நான் சுலபமாக வெற்றி பெற்றேன். அரசியல் விஷயத்திலல்ல. ஏனெனில் அதில் என்றும் எனக்கு அக்கறை கிடையாது. அரசர்களும் குறுநில மன்னர்களும் என்னைப் புகழ்ந்து எழுதிய நூற்றுக்கணக்கான கடிதங்கள் என்னிடம் இருக்கின்றன. அவர்கள் எனது கலைகளையும் என்னையும் புகழத் தொடங்கியதும், நான் எனது குறைகளை அவர்களிடம் அழத் தொடங்கினேன்.

''என்ன செய்யலாம் பிரபோ! கலைத்திறமை நிறைந்துள்ள யுவதிகள் பலர் இருந்தும், எனக்குக் கிடைப்பதில்லை.''

''இருந்தும்கூடக் கிடைப்பதில்லையா?''

''ஆம். ஒரே ஒரு முத்தம், ஒரு ஆலிங்கனம், அல்லது ஒரு நாள் இரவு சுகம், இதற்கப்பால் ஒன்றையும் பெற முடியாமல், ஆயிரக்கணக்கான யுவதிகள் அந்தப்புரங்களிலே அடைபட்டுக் கிடக்கும்பொழுது, கலைத்திறமையுள்ள பெண்கள் எங்கிருந்து கிடைப்பார்கள்?''

''நீங்கள் சொல்வது சரிதான் ஆச்சாரியரே! நானும் அதை உணருகிறேன். ஆனால் ஒரு முறை அந்தப்புரங்களிலே ஏற்றுக் கொண்ட பெண்களை, நாங்கள் எப்படி வெளியே அனுப்புவது?''

இதன் மேல் நானே ஒரு புது வழி கண்டுபிடித்தேன். சங்கீதமும், நாட்டியமும் நமது அரச குமாரிகளுக்கும் குறுநில மன்னரின் புத்திரிகளுக்கும் அந்தப்புரப் பெண்களுக்கும் அவசியமானது என்று ஏற்படுத்தினேன். நான் சில திறமையான பெண்களை, நாட்டியம் கற்றுக் கொடுப்பதற்காக அந்தப்புரத்திற்கு அனுப்புவேன். அவர்களிடம் அந்தப்புரப் பெண்களெல்லாம் கலை பயில வேண்டுமென்று அரசனும் உத்தரவிடுவான். அவர்களில் எந்தப் பெண்ணை நாங்கள் எடுத்துக்கொள்ள விரும்புகிறோமோ, அவளுக்கு அந்தப்புர வாழ்க்கையின் கஷ்டத்தையும் நாடக வாழ்க்கையின் சுகத்தையும் எடுத்துச் சொல்லி, அவளை இணங்க வைப்பார்கள்.

விதவையர் உடன்கட்டை ஏறுவதை நான் எதிர்த்த பொழுது, இந்தச் சூழ்ச்சிக்காரரர்களான பிராமணர்களும், அரசர்களும் பெரிய கூச்சல் போடத் தொடங்கினார்கள். கர்ப்பச் சிதைவையும் விதவா விவாகத்தையும் இவன் பரப்ப விரும்புகிறான் என்று என்னைத் திட்டினார்கள். கரு அழித்தலை நான் எப்பொழுதும் விரும்பியதில்லை. ஆனால், விதவா விவாகத்தை நான் விரும்பினேன் என்று இப்பொழுது ஒப்புக் கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. குப்தர்களின் ஆட்சி நம்முடைய பழைய தர்மங்களை எங்கிருந்து எங்கோ கொண்டு போய்விட்டது. நமது மரியாதைக்குரிய மகரிஷிகள், பசுங்கன்றின் மாமிசம் இல்லாத விருந்தை ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் இப்பொழுதோ பசு மாமிசம் சாப்பிடுவது தர்மவிரோதம் என்று கருதப்படுகிறது. நம் மகரிஷிகள், விதவைகளின் மறுமணம் முற்றிலும் நியாயமானது என்று கருதினார்கள். அவர்கள் வாக்குப்படி இளம் பிராமண அல்லது க்ஷத்திரிய விதவை, ஆறுமாதம் அல்லது ஒரு வருட காலத்திற்குமேல் மறு கணவனைத் தேடிக்கொள்ளாமல்

இருக்க முடியாதென்பது எங்கே?—இப்பொழுது, விதவா விவாகமே தர்ம விரோதமானது என்று சொல்வது எங்கே? இந்த எல்லாச் சூழ்ச்சிகளுக்கும்—புதிய ஹிந்து தர்மத்திற்கும் ஆணிவேரான குப்த அரச வம்சத்திலேயே, ராம குப்தனின் விதவையல்ல, மனைவியை சந்திரகுப்த விக்ரமாதித்தியன் தன் பட்டமகிஷியாக்கிக் கொண்டான். இளம் பெண்களை விதவைகளாகவே வைத்திருப்பதைத் தடுக்க பிர்மா, விஷ்ணு, மகேஸ்வரன் ஆகிய மூன்று கடவுள்களாலுமே முடியாது. தங்கள் தங்கள் மனைவியர் இருக்க பிற பெண்களுக்குப் பின்னால் அலைந்து திரியும் அந்தத் தெய்வங்கள், எந்த முகத்தைக்கொண்டு தடுக்க முடியும்? இளம் பெண்களை விதவையாக வைத்திருப்பதின் தவிர்க்க முடியாத விளைவு கர்ப்பச் சிதைவு. ஏனெனில் மறுமணம் செய்து கொண்டு குழந்தைகளைப் பெற்று வளர்க்கத்தான் இவர்கள் அனுமதிக்கப் படுவதில்லையே! இந்த பயத்தினால், பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் சேர்ந்து, தங்கள் உயர்வுத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் புதுவழி கண்டு பிடித்தார்கள். அதுதான் கணவனை இழந்த பெண்களை உயிரோடு கொளுத்துவது. இவ்விதம் பெண்களை உயிரோடு கொளுத்துவதை, அவர்கள் மகாபாவம் என்று கருதவில்லை; பெரிய புண்ணியம் என்று கருதினார்கள். வருடந்தோறும் ஆயிரக்கணக்கான யுவதிகளை நெருப்பிலே போட்டுப் பொசுக்குவதைப் பார்த்தும் மனமிளகாத தெய்வங்கள், அவற்றின் உருவத்தைப்போல் உண்மையிலேயே கற்கள் தானா? அல்லது இல்லவே இல்லையா? பெண்கள் தாங்கள் மனப்பூர்வமாகவே சதியாகிறார்கள் என்று இந்தப் பிராமணர்கள் சொல்கிறார்கள். அயோக்கியர்கள்! சூழ்ச்சிக்கார நராதமர்கள்! ஏன் இவ்வளவு பெரிய பொய்யைச் சொல்லவேண்டும்? அரசர்களின் அந்தப்புரங்களிலே, ஒரே ஒரு முறை தவிர அவன் முகத்தையும் பார்த்து அறியாத ஆயிரக்கணக்கான பெண்கள் தங்கள் ஆயுள் முழுவதும் கைதி போல் வைத்திருக்கும் அந்த நரபிசாசிடம் அன்பு வைத்திருக்கிறார்களா? அவனிடத்திலே காதல் கொண்டு, அவன் பிரிவைத் தாங்க முடியாமல் நெருப்பிலே குதிக்கிறார்களா? சூழ்ச்சிக்காரப் புரோகிதர்களே! நீங்கள் நாசமாய்ப் போக! தற்கொலை, தர்மமா? பிரயாகையிலே ஆலமரத்திலிருந்து யமுனையில் குதித்து இறந்தால், சுவர்க்கத்திற்குப் போகலாம் என்று உபதேசம் செய்திருக்கிறீர்களே, அதைக் கேட்டு வருடந்தோறும் ஆயிரக்கணக்கான பயித்தியங்கள்

ஆற்றிலே விழுந்து சாகின்றனவே; கேதாரநாத்தின் உச்சியிலிருந்து பனிப் படலத்திலே வீழ்ந்து மடிவதும் மோட்சத்திற்கு வழியென்று உபதேசித்து, வருடந்தோறும் நூற்றுக் கணக்கானவர்களைக் கொல்லுகிறீர்களே, இதெல்லாம் தர்மமா? உங்களுடைய இந்தக் கொலை முயற்சிகளுக்கும் விரோதமாக நான் வாய் திறக்க முடியவில்லை. ஏன்? நான் அரசனின் ஆதரவிலே வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

அரசனுடைய ஆதரவை நான் வேண்டுமென்றே தேடிக் கொள்ளவில்லை. என்னுடைய சொத்து எனக்கு ஏராளமாக இருந்தது. அதைக்கொண்டு நான் என் ஆயுள் முழுவதும் உயர்ந்த சுகபோக வாழ்க்கையை நடத்த முடியும். என் காலத்து அரசர்கள், பிராமணர்களின் நிலையைப்போல உயர்ந்த வாழ்க்கையை நான் நடத்த முடியும். ஹர்ஷனைப் போலவும், அவனைப் போன்ற ராஜ ரிஷிகளைப் போலவும், நான் ஆயிரக்கணக்கான் யுவதிகளின் முத்தங்களைப் பெற்றவன் அல்ல. ரொம்ப அதிகமாகப் போனால், என்னுடைய காதலுக்குப் பாத்திரமானவர்கள் நூறு பேர் இருக்கலாம். இதற்கு என்னுடைய சொத்துத் தாராளமாகப் போதுமானது. ஆனால், அந்தச் சொத்து, வீடு எல்லாம் ஹர்ஷனுடைய ராஜ்யத்திலே இருந்தன. அவன் ஆள்மேல் ஆள் அனுப்பி என்னை அழைத்தபோது, நான் எப்படிப் போகாமல் இருக்க முடியும்? நானும் அஸ்வகோஷாயிருந்தால், வீடு, வாசல், சொத்துக்களைப் பற்றிப் பொருட்படுத்தாத மனப்பான்மை எனக்கிருந்தால், ஹர்ஷனை அலட்சியப் படுத்தியிருக்க முடியும்.

ஹர்ஷனைப் பற்றி என்னுடைய உண்மையான அபிப்பிராயத்தைக் கேட்டீர்களானால், அந்தக் காலத்தில் அவன் ஒரு கெட்ட மனிதனோ அல்லது கெட்ட அரசனோ அல்ல. அவன் தனது தமையன் ராஜ்யவர்த்தனனிடம் எல்லையற்ற அன்பு வைத்திருந்தான். சகோதரனுக்காகச் சதியாகும் பழக்கத்தை மதம் ஏற்படுத்தியிருந்தால், அல்லது அதற்காகச் சூசனை காட்டியிருந்தாலும்கூட, ஹர்ஷன் தன் தமையனோடு நெருப்பிலே குதித்திருப்பான். அவனிடத்தில் குறைகளும் இருந்தன. அவற்றிலே மிக முக்கியமானது போலி நடிப்பு. முகஸ்துதியிலே ஆசையிருந்தும், தான் உண்மையையே கேட்க விரும்புவதாக நடிப்பது; யுவதிகளின் அழகிலே மயங்கினாலும், தன்னை நேர்மையுள்ளவனாகக் காட்டிக் கொள்வது; புகழிலே ஆசையிருந்தும் புக

ழைக் கண்டு ஓடுவதாகப் பறை சாற்றுவது; இவையெல்லாம் அவனது போலி நடிப்பிற்கு உதாரணங்கள். எனது நாடகங்களை ஏன் ஹர்ஷனுடைய பெயரால் வெளியிட்டேன் என்பதை ஏற்கனவே விளக்கியிருக்கிறேன். நாங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகி நெருங்கிப் பழகிய பிறகுங்கூட, ''உன்னுடைய இந்த நாடகங்களை இனிமேல் உன் பெயராலேயே பிரபலமடையச் செய்'' என்று ஒரு முறையேனும் அவன் சொல்லியதே இல்லை. அவன் சொல்லியிருந்தால் அதைச் சுலபமாகச் செய்திருக்கலாம். அவனுடைய தர்பாரிலேயே இந்த நாடகங்களை இயற்றியவர் ஹர்ஷனல்ல; பாண கவிதான் என்று விளம்பரப்படுத்தி, ஒரு முறை நடிக்கச் செய்திருந்தாலே போதும்.

எனக்கு உலகத்தை உள்ளது உள்ளபடி வருணிக்க வேண்டுமென்பது ஆசை. பனிரெண்டு வருட காலம் சுற்றுப் பிரயாணத்திலேயே நான் கழித்திருக்காவிட்டால், இந்த ஆசை ஏற்பட்டிருக்கவே மாட்டாது. அப்படி ஏற்பட்டிருந்தாலும் அதை நிறைவேற்றும் சக்தி இருந்திருக்காது. ஹிமாலயச் சரிவின் ஒரு அழகிய பூமியிலே நின்றுகொண்டு, நான் அந்தத் தாமரையால் மூடப்பட்ட தடாகத்தை வருணித்தேன். காதம்பரி மாளிகையை நான் வருணிக்கும்போது ஹிமாலயத்தின் மற்றொரு அழகிய காட்சி எனக்குத் துணையாக இருந்தது. விந்திய மலைதொடரிலே என் மனத்தைக் கவர்ந்த ஒரு இடத்தைத்தான், முதியவரான திராவிடத் தார்மீகரின் வாசஸ்தலமாக வருணித்தேன். ஆனால் அந்த வருணனைகளுக்குப் பிறகும் எனது எழுதுகோலுக்கு ஓய்வு கொடுத்துவிட நான் விரும்பவில்லை. ஹர்ஷனுடையவும். மற்றும் எனக்கு அறிமுகமான அரசர்களுடையவும், மாளிகைகளையும், அந்தப்புரங்களையும், அவர்களின் செல்வப் பெருக்கையும், எனது நூல்களிலே வருணித்திருக்கிறேன். ஆனால் இந்தச் செல்வப் பெருக்கிற்கும் சுக வாழ்விற்கும் காரணமான ஏழைகளின் குடிசைகளையும், அவர்களின் துயரம் நிறைந்த வாழ்க்கைகளையும் என்னால் வருணிக்க முடியவில்லை. அதை நான் வருணித்திருந்தால், இந்த ராஜ மாளிகைகள் மீதும், சுகபோகத்தின் மீதும் பலமான அடி விழுந்திருக்கும். ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை அரசாங்கப் பொக்கிஷத்தை—இல்லை, இல்லை, மிஞ்சியிருக்கும் பொக்கிஷத்தை அள்ளி இறைக்கும் இந்த ஹர்ஷன், என்னைக் காமுகன் என்று சொன்னதோடு திருப்தியடைந்திருக்க மாட்டான்.

# 3

என்னை ஜனங்கள் துர்முகன் என்று சொல்லுகிறார்கள்; ஏனெனில், கசப்பான உண்மையைப் பட்டவர்த்தனமாகச் சொல்லும் பழக்கமுடையவன் நான். என் காலத்தில் கசப்பான உண்மைகளை வெளியிடுபவர்கள் இன்னும் பலர் இருந்தார்கள். ஆனால், அவர்கள் பயித்தியம் என்ற போர்வைக்குப் பின்னாலோ, அல்லது ஸ்ரீ பர்வதத்திலிருந்து வந்துள்ள சித்தன் என்ற பெயரிலோ அதை வெளியிட்டார்கள். இந்த ஸ்ரீ பர்வத யுகத்திலே, நானும் ஒரு சிறந்த சித்தனாக* ஆகியிருக்க முடியும். அப்பொழுது என் பெயர் துர்முகன் என்றும் ஏற்பட்டிருக்காது. ஆனால் ஜனங்களை ஏமாற்றுவது எனக்குப் பிடிக்காத வேலை. மக்களை ஏமாற்றக் கூடாது என்ற எண்ணத்தினாலேயே, நான் நாளந்தாவை விட்டு வந்தேன். இல்லாவிடில் இன்று நான் நாளந்தாவின் மகா பண்டிதர்களுள் ஒருவனாக இருப்பேன். அங்கே இருட்குவியலின் மத்தியிலே நெருப்புக் கங்கை வீசியெறிந்த ஒருவரை நான் பார்த்தேன். அதே சமயத்தில் இந்தச் சுய அடிமைகள் அவரை எப்படிச் சூழ்ந்து கொண்டார்கள் என்பதையும் பார்த்தேன். அவர் யாரெனத் தெரிந்து கொள்ள நீங்கள் ஆசைப்படலாம். அவர் ஆயிரக்கணக்கான செம்மறியாடுகளின் மத்தியிலே ஒரு ஆண்சிங்கமாக விளங்கிய தர்க்கப் பேரறிஞர் தர்மகீர்த்தி அவர் நாளந்தாவில் இருந்து கொண்டே, ''அறிவைவிட ஏட்டுச் சுவடிகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பது, உலகத்தைத் தோற்றுவித்தவர் கடவுள் என்று ஒப்புக்கொள்வது, தீர்த்தமாடுவதை மதச் சடங்காக ஆக்குவது, பிறப்பிலே ஜாதி வேற்றுமை காண்பது, பாவத்தைப் போக்குவதற்காக சரீரத்தை வாட்டுவது—இவை ஐந்தும், மனிதர்கள் அறிவற்ற ஜடப்பொருளாகி விட்டார்கள் என்பதற்கு லட்சணங்கள்'' என்று அறைகூவிச் சொன்னார்.

---

*''வேதப்ராமண்யம் கஸ்மசித் கர்த்ருவாதஹ
ஸ்நானே தர்மேச்சா ஜாதி வாதாவலேபஹ
சந்தா பாரம்பஹ பார்ஹநாய சேதி
த்வஸ்த பரகஞானம் பஞ்சலிங்கானி ஜாடயே.
—பிராமண வார்த்திகம்

ஒரு நாள் நான், ''ஆச்சாரியரே! உங்களுடைய ஆயுதங்கள் மிகக் கூர்மையானவை. ஆனால் மக்களின் கண்களிலே படமுடியாதபடி, அத்தனை மெல்லியதாய் இருக்கிறதே'' என்று கேட்டேன்.

''எனது ஆயுதத்தின் அந்தக் குறையை நானும் உணருகிறேன். எந்த விஷயங்களை நான் ஒழித்துக்கட்ட விரும்புகிறேனோ, அதைச் செய்வதற்கு எல்லோர் கண்ணிலும் படக்கூடிய, மூடப்படாத பெரிய ஆயுதங்களைக் கையில் எடுக்க வேண்டும். ஆனால், நாளந்தாவின் தலைவரும், உப தலைவர்களும் இப்பொழுதே என்மீது கோபமாக இருக்கிறார்கள். 'நாளந்தா ஒரு கேலிக்கூத்து. இங்கு வரும் மாணவர்கள் அந்தப் பரந்த உலகத்தை அறிவால் பிரகாசம் அடையச் செய்யமுடியாது. அவர்கள் தங்களின் அறைகுறை அறிவால் முட்டாள்களையும், அறிவீனர்களையும் ஆச்சரியமடையும்படி மட்டுமே செய்யலாம்' என்று நான் சொல்வேனாகில், என்னிடம் படிப்பதற்கு ஒரு மாணவனாவது கிடைப்பான் என்று நீ கருதுகிறாயா? சீலாதித்தியனால் கொடுக்கப்பட்ட கிராமங்களிலிருந்து வரும் சுவை மிகுந்த அரிசி, நெல், பேரீச்சம்பழம், மற்றும் உணவுப் பொருள்களின் மூலம் ஜீவிக்கும் இவர்கள் சீலாதித்தனுடைய சுக வாழ்விற்கு வேட்டைப் பொருளாக அமைந்த பிரஜைகளிடையே கலகத்தைத் தூண்டும் உபதேசத்தைச் செய்வார்களா?''

''ஆச்சாரியரே! இந்த இருட் குகையிலிருந்து வெளிப்படுவதற்கு ஒன்றும் வழி இல்லையா?''

''வழியா? ஒவ்வொரு நோய்க்கும் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் விடுதலை யடைவதற்கு ஏதாவது வழி ஏற்படவே செய்யும். ஆனால், இந்த இருட்பிழம்பிலிருந்து விடுதலையடையும் வழி—இந்தப் பெரிய அக்கினியாற்றிற்குப் பாலம் ஒரு தலைமுறையிலே உண்டாக்கிவிட முடியாது. ஏனெனில், இதைச் செய்யக்கூடிய கைகள் மிகக் குறைவாய் இருக்கின்றன. அறியாமை இருளின் பலமோ, மிக அதிகமாயிருக்கிறது.''

''அப்படியானால் நம்பிக்கை இழந்து உட்கார்ந்துவிட வேண்டியதுதானா?''

''ஜனங்களை ஏமாற்றுவதைவிட உட்கார்ந்து விடுவதே நல்லது. யார் ஜனங்களுக்கு வழி காட்டிகளாக இருக்க

வேண்டுமோ, அவர்களே ஜனங்களை ஏமாற்றுகிறார்கள். இந்த நிலைமை நமது நாட்டில் மட்டுமல்ல, உலகமெங்கும் இருக்கிறதென்று தோன்றுகிறது. சிங்களம், சுமத்ரா, ஜாவா, கம்போஜம், சம்பா, சீனா, பாரசீகம் ஆகிய இந்த நாடுகள் எதிலிருந்து மாணவர்கள் நமது நாளந்தாவிற்கு வரவில்லை? அவர்களிடம் தெரிந்துகொண்டதிலிருந்து உலகம் இருட்டடிக்கப்பட்டு விட்டது என்றே தெரிய வருகிறது.''

தர்மகீர்த்தி, ஆயிரக்கணக்கான வருடங்களுக்குச் சுடர் விட்டுக் கொண்டிருக்கக் கூடிய சொல் நெருப்புக் கனலை வீசி இந்த இருட்டைப் போக்க முயற்சி செய்தார். ஆனால் அவைகளால் தற்காலத்தில் பலன் ஒன்றும் ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. நான் எரிந்து கொண்டிருக்கும் தீவட்டிகளை வீசவேண்டுமென்று ஏற்பாடு செய்தேன். அதன் பலனாகத் தான் இந்தத் துர்முகன் என்ற பெயரைப் பெற்றேன். இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவாக்கிட விரும்புகிறேன். நான் எனது நாக்கை உபயோகிப்பதிலும், அரசாங்கத்தின் மீது நேரான அடி விழுந்து விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதிருக்கிறது. இல்லாவிடில், இந்தத் துர்முகனுடைய வாய் உடனே அடைக்கப்பட்டுப் போய்விடும். சில சமயங்களில் மற்றவர்கள் கவனிக்காத பொழுது என் நாக்கு நீண்ட தூரம் போய் விடுவதுமுண்டு.

இறந்த பிறகு மோட்சத்தையும் நிர்வாண லோகத்தையும் அளிப்பதாக உபதேசங்கள் செய்பவர்கள், இங்கே லட்சக் கணக்கான அடிமைகள் மிருகங்களைப் போல விற்கப்படுவதையும், வாங்கப்படுவதையும் பார்த்துக்கொண்டு ஏன் சும்மா இருக்கிறார்கள்? இறந்துவிட்ட ஆத்மாவுக்கு விடுதலையளிப்பதாகச் சொல்லும் இவர்கள், இந்த உயிருள்ள ஆத்மாக்களுக்கு ஏன் விடுதலையளிப்பதில்லை? ஒருநாள் பிரயாகையிலே அரசன் சீலாதித்தனிடம், ''மகாராஜா!'' தாங்கள் பெரியபெரிய பணக்காரப் பிராமணர்களுக்கும், புத்தமடங்களுக்கும், ஐந்து வருடங்களுக்கொரு முறை ஏராளமான பணத்தைப் பங்கிட்டுக் கொடுக்கிறீர்கள், இந்தப் பணத்தையெல்லாம் அடிமைகளை விடுதலை செய்வதற்கு உபயோகித்தால், அது குறைவான புண்ணியமா?'' என்று கேட்டேன். மற்றொரு சமயம் இதைப்பற்றி பேசலாம் என்று கூறி, சீலாதித்தியன் தட்டிக் கழிக்க முயன்றான். ஆனால், நான் விடவில்லை. மற்றொரு சமயத்தையும் கண்டு பிடித்தேன். அந்தச் சந்தர்ப்பத்தை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தவள்

அவனுடைய சகோதரி பிக்ஷுணி ராஜ்யஸ்ரீ! அடிமைகளின் நரக வாழ்வை நான் ராஜ்யஸ்ரீக்கு முன்னால் வருணித்த போது அவளுடைய மனம் இளகிவிட்டது. பரம்பரை பரம்பரையாக வரும் இந்த அடிமை மக்களை, பணத்தைக் கொடுத்து விடுதலையடையச் செய்வது பெரிய புண்ணிய காரியமென்று நான் எடுத்துச் சொல்லியதும், அவள் அதைப் பலமாகப் பிடித்துக்கொண்டு விட்டாள், பாவம் இளகிய மனம் படைத்த அந்தப் பெண், இந்த அடிமைப் பழக்கத்திற்குப் பின்னால் மறைந்திருக்கும் பெரியபெரிய சுயநலத்தை எப்படி அறிவாள்? இந்த உலகத்தைச் சுவர்க்கமாக மாற்றி விட்டால், உடனே ஆகாயத்திலிருக்கும் அந்தக் கற்பனைச் சுவர்க்கம் மறைந்து விடுமென்பது அவளுக்கு எப்படித் தெரியும்? ஆகாயத்தில் சுவர்க்கத்தையும் பாதாளத்தில் நரகத்தையும் நிரந்தரமாகச் செய்வதற்கு அதன் பெயரால் வியாபாரங்கள் செய்வதற்கு இந்த உலகத்தையும் சுவர்க்கம்—நரகம் என்றும், எஜமான்—அடிமை என்றும் பிரித்துவைக்க வேண்டியது அவசியம்.

மறுமுறை சமயம் கிடைத்ததும் நான் அரசரோடு பேச்சைத் தொடங்கினேன். அவர் ''நான் ஒருமுறை ஏராளமான பணத்தைச் செலவு செய்து எல்லோரையும் விடுதலை செய்து விடுகிறேனென்று வைத்துக் கொள்வோம். ஆனால் மறுபடியும் ஏழ்மையின் காரணமாக மனிதர்கள் விற்கப்படுவார்களே'' என்றார்.

''எதிர்காலத்தில் மனிதர்களை விற்பதும்—வாங்குவதும் தண்டனைக்குரியது என்று ஏற்படுத்தி விடுங்களேன்.''

அவர் மௌனமாக யோசிக்கத் தொடங்கினார். அவரே, எழுதியதாகச் சொல்லப்படும் 'நாகாநந்தம்' என்ற நாடகத்தில் வரும் நாகனை உதாரணமாகக் காட்டினேன். அவன் மற்றவர்களின் உயிரைக் காப்பதற்காகத் தன் உயிரையே பலி கொடுத்தான் என்று கதை சொல்கிறது. இதற்கு அவர் என்ன பதில் சொல்வார்? பிராமணர்களுடைய பையை நிரப்புவதிலும், மடங்களையும், கோயில்களையும் கட்டுவதிலும் கிடைக்கிற பெரும் புகழ், அடிமைகளை விடுதலை செய்வதிலே கிடைக்காதென அவர் கருதுகிறார் என்று நான் புரிந்து கொண்டேன். அன்றுதான், அவர் நல்லொழுக்க சூரியன் அல்ல, நல்லொழுக்க இருள் என்பது வெளியாயிற்று.

பாவம், சீலாதித்தியனை மட்டும் ஏன் நான் குறை சொல்ல வேண்டும். இப்பொழுது உயர்ந்தவர்கள், நகர

வாசிகள் ஆவதற்குரிய லட்சணம் பிறரை ஏமாற்றுவது தான். பழைய பௌத்த நூல்களைப் படித்து, புத்தர் காலத்து பழக்க வழக்கங்களைத் தெரிந்துகொண்டிருக் கிறேன். அந்தக் காலத்தில், மதுவருந்துவது தண்ணீர் குடிப் பதைப் போலவே கருதப்பட்டது. ஆனால் இன்றோ பிராம ணர்கள் மதுவருந்துவதைத் தடை செய்திருக்கிறார்கள். ஆகவே, பகிரங்கமாகக் குடிப்பது ஆபத்தை விலைக்கு வாங்கு வதாகும். இதன் விளைவென்ன? தேவதைகளின் பெயரால் சித்தி சாதனையின் பெயரால் இதை மறைப்பதற்காகப் பைரவிச் சக்கரம்* அல்லது வாம மார்க்கம் என்ற புது மதம் தோன்றியிருக்கிறது. பிரம்மச்சரியம் என்று கூச்சல் போடுகிறார்கள். அதன் விளைவென்ன? பைரவிச் சக்கரத் திலே தன் மனைவி பிறர் மனைவி என்ற வேற்றுமையின்றி, எல்லாப் பெண்களையும் ஒன்றாகவே கருதுகிறார்கள். அது மட்டுமா? தேவதைகளின் வரம் என்ற பெயரால், தாய், சகோதரி, மகளையும்கூடத் தள்ளுபடி இல்லையென்று செய்து விட்டார்கள். இது தொலையட்டும். சந்நியாசிகளின் மட மும், பிக்ஷுக்களின் மடமும் இயற்கைக்கு விரோதமான விபசாரத்தின் விடுதியாக ஆகிவிட்டது. உண்மையிலே இந்த உலகத்தைக் கண்காணிப்பவன் ஒருவன் இருப்பா னாகில், அந்த ஏமாற்றத்தையும்-அயோக்கியத்தனத்தை யும் ஒரு விநாடிகூடச் சகித்துக் கொண்டிருக்கமாட்டான்.

ஒருமுறை நான் காமரூப (அஸ்ஸாம்)த்திற்குப் போய் வந்தேன். அந்த நாட்டரசன் நாளந்தா கலாசாலையிடம் அதிக அன்பும், புத்தமதத்திலே சிரத்தையும் உடையவன். நான் அவனோடு பேசத் தொடங்கினேன்:—

''மஹாயானியர்கள்* போதி சத்துவரின் கொள்கை களை ஒப்புக்கொள்கிறவர்கள். அவருடைய கொள்கைகளிலே ஒரு உயிராவது அடிமைப்பட்டிருக்கும் வரை எனக்கு நிர் வாணம் (மோட்சம்) வேண்டியதில்லையென்று சொல்லப்பட்

---

*பைரவிச் சக்கரம்-மந்திர தந்திரங்களை நம்பும் ஒரு கூட்டம். துர்த் தேவதைகள் பூஜையும், மது மாமிச பட்சண மும் இவர்களிடையே உண்டு. ஜாதி மதம் எவ்வித வேற் றுமையின்றி, உலகை ஆண், பெண் என்று இரண்டாகப் பிரித்தவர்கள்.

*மஹாயான்-பௌத்த மதத்தின் மூன்று கிளைகளுள் ஒன்று.

டிருக்கிறது. ஆனால், அரசே! நகரத்திற்குள் வரும்பொழுது தங்களைத் தொடுவதால் மற்றவர்களின் புனிதத்தன்மை கெட்டுவிடாமல் எச்சரிக்கும் பொருட்டு, தங்கள் கையிலிருக்கும் தடியினால் பூமியைத் தட்டிச் சத்தமுண்டாக்கிக் கொண்டுவரும் சண்டாளர்கள் உங்கள் ராஜ்யத்தில் ஏராளமா யிருக்கிறார்களே! அவர்களின் எச்சில் விழுவதால், நகரத்தின் புண்ணிய பூமி கெட்டு விடாமல் இருக்கும் பொருட்டு எச்சிற் பாத்திரங்களைக் கைகளிலே ஏந்திக் கொண்டு போகும்படி செய்யப்பட்டிருக்கிறார்களே! நாயைத் தொடுவதால் மனிதனின் புனிதத்தன்மை கெட்டு விடுவதில்லை. நாய் மலங்கழிப்பதால் நகரத்தின் பரிசுத்தம் போய் விடுவதில்லை, நாயைவிடக் கேவலமானவர்களா இந்தச் சண்டாளர்கள்?''

''இல்லை; நாயைவிடக் கேவலமானவர்களல்ல, உயிர்ப் பிரவாகத்தின் சிறு விதை அவர்களுள்ளும் இருக்கிறது. என்றாே ஒரு நாள் அது மலர்ந்து, புத்தருடைய நிலையையும் அடையக்கூடும்.''

''அப்படியானால், நாளை முதல் சண்டாளர்கள் நகருக்குள் வரும்பொழுது, கைத்தடியோ, எச்சிற் பாத்திரமோ கொண்டு வரவேண்டிய அவசியமில்லையென்று நீங்கள் ஏன் பறையறைவிக்கக்கூடாது?''

''அது என்னுடைய சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம்!''

''உங்கள் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயமா?''

''ஆம்; மத அமைப்புக்கள்—ஏற்பாடுகள் அப்படியிருக்கின்றன.''

''போதி சத்துவரின் மதம்-மஹாயான் இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறதா?''

''ஆனால், இங்குள்ள பிரஜைகள் எல்லோரும் மஹாயானைப் பின்பற்றுபவர்கள் அல்லவே.''

''கிராமங்களிலும், நகரங்களிலும் எங்கு பார்த்தாலும் திரிரத்ன*த்தின் ஜெயத்தொனியைக் கேட்டேனே.''

---

*திரிரத்னம்...1. புத்தம், 2. சங்கம், 3. தர்மம், மூன்றையும் பௌத்தர்கள் திரிரத்னம்—மும்மணிகள் என்று கருதுவார்கள்.

''ஆம்; பேச்சளவிலே, நீங்கள் கூறியபடி முரசறை வித்தால், உடனே அதை எதிர்ப்பவர்கள் ஆதிகாலந் தொட்டு நடந்துவரும் பழக்கத்தை அரசன் உடைக்கிறன் என்று ஜனங்களைத் தூண்டி, ஒரு பெரும் புயலையே கிளப்பி விடுவார்கள்.''

''போதிசத்துவரின் வாழ்க்கையின் உயர்வும், அவருடைய நல்லுபதேசங்களும் ஒரு சிலருடைய மனத்தையாவது கவர்ந்திருக்காதா? ஒரு சிலருடைய இதயத்திலாவது அதன் செல்வாக்கு இருக்கத்தான் செய்கிறது என்று நான் கருதுகிறேன், போதி சத்துவரைப் போலவே நீங்களும் சகலத்தையும் துறந்துவிடத் தயாராகிவிட்டால், உங்களைப் பின்பற்றுபவர்களும் ஏராளமாகக் கிடைப்பார்கள்.

''இது எனது உள்நாட்டு விஷயம் மட்டுமல்ல, பரம பட்டாரகரும் இதனுல் கோபமடையக்கூடும்.''

''சீலாதித்ய ஹர்ஷனு, தனது 'நாகாநந்தம்' நாடகத்திலே, போதி சத்துவரின் திவ்ய சரித்திரத்தை வருணித்திருக்கும் அந்தப் பரம பட்டாரகனு?''

''ஆம். நடந்து வரும் பழக்கங்களை உடைப்பது யாராலும் முடியாத காரியம்.''

''இதே மாதிரித் ததாகதர் நினைத்திருந்தால், இவ்விதமே ஆரிய அஸ்வகோஷும், ஆரிய நாகார்ச்சுனனும் கருதியிருந்தால்...!''

''அவர்களுக்குத் தைரியமிருந்தது. அப்படியிருந்தும் கூட, அவர்கள் பழைய பழக்கங்களை உடைப்பதிலே அவ்வளவு தூரம் வெற்றியடைய முடியவில்லையே''

''அதிக தூரம் முடியாமல் இருக்கலாம். நீங்கள்கொஞ்ச தூரந்தான் முன்னேறுங்களேன். நீங்கள் கொஞ்ச தூரம் முன்னேறிஞல் வருங்கால சந்ததியர்கள் இன்னும் கொஞ்சம் முன்னேறுவார்கள்.''

''என்னை, உங்கள் வாயால் பயங்கொள்ளி என்று சொல்லித்தான் விடுவீர்களோ?''

''அப்படியல்ல. ஆனுல், மதம் ஒரு பெரிய சூழ்ச்சி யென்று நிச்சயம் சொல்வேன்.''

"என் மனத்திடம் கேட்டீர்களானல், அது உங்களுக்கு 'ஆம்' என்று பதில் சொல்லும். என் நாக்கிடம் கேட்டீர்களானல், 'இல்லை' என்று பதில் சொல்லும்; அல்லது மௌனமாகி விடும்."

பிராமணர்களின் மதத்தை நான் மனப்பூர்வமாக வெறுக்கிறேன். உண்மையில் காமரூபாதிபதி போன்ற எத்தனையோ நன்மனம் படைத்த மனிதர்களை பயங்கொள்ளிகளாக ஆக்கி வைத்திருப்பது இந்தப் பிராமண மதம்தான். இந்தப் பூமியிலிருந்து அந்த மதம் மறைந்த அன்றே, இந்தப் பூமியைப் பிடித்த ஒரு களங்கமும் நீங்கிவிடும். வெளிநாடுகளிலிருந்து நாளந்தாவிற்கு வந்துள்ள பிக்ஷுக்களின் மூலம், அவர்கள் நாட்டிலே இந்தப் பிராமணர்களைப் போலச் சக்திவாய்ந்த மதத் தலைமை வகிக்கும் ஜாதியில்லையென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதைக் கேள்விப் பட்டதும் அந்த நாட்டிலே ஒரு கையில் தடியும், மற்ருெரு கையில் எச்சிற் பாத்திரத்தையும் தூக்கிக்கொண்டு திரியும் சண்டாளர்கள் இல்லையென்பதற்குக் காரணத்தையும் தெரிந்து கொண்டேன். பிராமணர்கள், நமது நாட்டிலே ஒன்ருேடொன்று ஒட்ட முடியாதபடி பல சிறிய பெரிய ஜாதிகளைப் பிரித்து வைத்துவிட்டார்கள். இவர்களுடைய மதமும் அறிவும், ராகுகேதுக்களின் நிழலைப்போன்றவையே.

நாளந்தாவில் பலதேசங்களைப் பற்றியும் புதிய புதிய செய்திகள் ரொம்பக் கிடைக்கும். ஆக ஒன்றிரண்டு வருடங்கள் சுற்றுப் பிரயாணத்திற்குப் பிறகு, சிலகாலம் நாளந்தாவில் சென்று தங்குவதுண்டு. ஒருமுறை, ஒரு பாரசீகப் பிக்ஷு அவர்கள் நாட்டிலே மஜ்தக்* என்ற பெயருடைய வித்வான் தோன்றியிருப்பதாகவும், அவர் ஒருவித சங்கக் கொள்கையைப் பிரச்சாரம் செய்து வருவதாகவும் கூறினர். புத்தர் பெருமானும், பிக்ஷுக்களுக்கும் பிக்ஷுணிகளுக்கும் சங்கத்தை ஏற்படுத்தி, சொத்துக்களைப் பொறுத்தவரை சங்கக் கொள்கையையே பரப்பினர். அந்தச் சங்கக் கொள்கை இன்று ஏட்டளவிலேயே இருக்கிறது. இன்று, பெரிய பெரிய தனிச் சொத்துடைய பௌத்த பிக்ஷுக்கள் இருக்கிருர்கள். அறிஞர் மஜ்தக் பிரம்மச்சாரியத்தையும் பிக்ஷுவாவதையும் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் மனிதர்கள் இயற்கை வாழ்வு-காதல் வாழ்வு வாழ்ந்து, குழந்தை

---

*மஜ்தக்-பாரசீகத்தில் பிறந்த ஓர் அறிஞர். சௌராஷ்டிர மத ஸ்தாபகர்களில் ஒருவர்.

குட்டிகளை வளர்க்க வேண்டுமென்றே கூறினர். தீமைகளுக்கெல்லாம் ஆணிவேர் ''நான்'', ''என்னுடையது'' என்பது தான் என்று அவர் உபதேசித்தார். சொத்துக்கள் தனித் தனியாக இருக்கக் கூடாதென்றும், எல்லோரும் ஒன்ருகச் சேர்ந்து சம்பாதித்து, ஒன்ருகச் சேர்ந்தே சாப்பிடவேண்டுமென்றும் கூறினர். கணவனும் மனைவியும் தனித்திருக்கக் கூடாதென்பதும், காதல் சுதந்திரமுள்ளதாக இருக்கவேண்டுமென்பதும், குழந்தைகள் இருவருக்குமே பொதுவாகக் கருதப்படவேண்டுமென்பதும் அவருடைய கொள்கைகள். எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டுமென்று அவர் உபதேசித்தார். அறிஞர் மஜ்தக்கையும் அவரைப் பின்பற்றும் ஆயிரக் கணக்கானவர்களையும் கொன்று குவித்து, பாரசீக மன்னன் நௌஷேர்வான் நியாயமூர்த்தி என்ற பட்டத்தைப் பெற்ருன் என்பதைக் கேள்விப் பட்டதும், இந்த உலகில் அரசர்கள் இருக்கும்வரை அவர்களது தான—தயவிலே வாழும் பிராமணர்களும் இருப்பார்களென்பதும், அவர்கள் இருவரும் இருக்கும்வரை, இந்த உலகத்தைச் சுவர்க்கமாக ஆக்கமுடியாதென்பதும் எனக்குத் தெளிவாகி விட்டது.

# சக்கரபாணி

**காலம் கி, பி. 1200**

அந்தக் காலத்தில் கனோஜ் பாரத நாட்டிலேயே மிகப் பெரிய நாகரிகம் வாய்ந்த நகரமாயிருந்தது. அதனுடைய பரப்பும், அகண்ட வீதிகளும், நாற்சந்தி அமைப்பும் மிகப் பிரபலமானது. இனிப்புப் பதார்த்தங்கள், வாசனைத் திரவியங்கள், எண்ணெய், நகைகள், வெற்றிலை இன்னும் எத்தனையோ பொருட்கள் கனோஜிலிருந்து சென்று, அகில பாரதத்திலும் பெருமையைப் பரப்பிக் கொண்டிருந்தன. 600 வருட காலமாக மௌக்கரி, பைஸ், பிரதிஹார், ககடுவார் முதலிய பல அரச வம்சத்தினரின் தலைநகராக இருந்த காரணத்தால் அந்த நகரத்தினிடம் ஜனங்களுக்கு மரியாதையும் மதிப்பும் ஏற்பட்டுவிட்டது. அது மட்டுமல்ல; பல ஜாதியினரும், தங்கள் ஜாதிக் கிளைகளுக்கு அந்த நகரத்தின் பெயரையே இணைத்துச் சொல்லத் தொடங்கி விட்டனர். இன்றும்கூட, கன்னிய குப்ஜ பிராமணர், கன்னிய குப்ஜ அஹிர் முதலிய ஜாதிப் பெயர்களைக் கேட்கலாம். ஹிந்து தர்மத்தின் பெயரை ஜனங்கள் எவ்வளவு சிரத்தையோடு உச்சரித்தார்களோ, அதைப் போலவே கன்னிய குப்ஜம் (கனோஜ்) நகரின் பெயரையும் ஜனங்கள் கருதத் தொடங்கினர்கள். ஹர்ஷவர்த்தனன் காலத்திலிருந்து இதுவரை, உலகத்தில் எத்தனையோ பெரிய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன ஆனால், அப்பொழுதிலிருந்தே இந்தியாவின் மூளையில் பெரிய மூடத்தனம் புகுந்துகொண்டு விட்டது.

ஹர்ஷவர்த்தனனுடைய காலத்திலே அரேபியாவில் ஒரு புதிய மதம் (இஸ்லாம்] தோன்றிற்று. அப்பொழுது, அதைத் தோற்றுவித்தவர் இறந்து நூறு வருடங்கள் ஆவதற்குள், சிந்துவிலிருந்து ஸ்பெயின் வரை அந்த மதம் பரவி விடும் என்று யார் சொல்ல முடியும்? ஜாதிகளின் பெயராலும், அரசர்களின் பெயராலும், நாடுகள் ஜெயிக்கப் படுவதைத்தான் நாம் இதுவரை கேட்டு வந்திருக்கிறோம். மதத்தின் பெயரால் நாடுகள் வெற்றி கொள்ளப்படுவதை

இப்பொழுதுதான் முதன் முதலாகக் கேள்விப்படுகிறோம். எதிரிகள் ஜாக்கிரதையடைவதற்குச் சந்தர்ப்பம் கொடுக்காமலேயே, இந்த மத வெறியாளர்கள் திடீர்திடீரென்று தாக்கி, எதிரிகளை அழித்து விட்டார்கள். ஈரானியர்களின் பலம் பொருந்திய சாம்ராஜ்யம், அரேபியர்கள் கைபட்ட உடனேயே காகிதப் படகைப்போல் நசுங்கிவிட்டது. இஸ்லாத்தின் சிருஷ்டிகர்த்தா இறந்து இருநூறு வருடங்கள் ஆவதற்குள்ளாகவே, இஸ்லாமிய ராஜ்யத்தின் கொடி பாமீரின் மீது பறந்தது.

இஸ்லாம், உலகமெங்கும் தனது அரேபியக் கூட்டுக் குடும்ப வாழ்க்கையைப் புகுத்த விரும்பிற்று. அதோடு தனது கூட்டுக் குடும்ப எளிய வாழ்வையும், சமத்துவத்தையும் சகோதர பாவத்தையும் தன்னைப் பின்பற்றுபவர்களின் இதயத்திலே நிரப்ப முயற்சி செய்தது. வைதீக ஆரியர்களின் முன்னோர்கள், மூவாயிர வருடங்களுக்கு முன்னாலேயே இந்தக் கூட்டுக் குடும்ப வாழ்க்கை நிலையைக் கடந்து விட்டார்கள். கடந்து போன யுகம் திரும்பவருவது முடியாத காரியம். கூட்டுக் குடும்ப வாழ்க்கை நிலையைக் கடந்து அரச ஆட்சி நிலையை அடைந்துள்ள நாடுகளை இஸ்லாம் சந்தித்த பொழுது இஸ்லாமின் கத்திபலத்திற்கு முன்னால் அந்த நாடுகளின் சுதந்திரம் மறைந்துவிட்டதைப்போலவே, அந்த நாடுகளின் தொடர்பால் இஸ்லாமிய சமுதாய அமைப்பான கூட்டுக் குடும்ப வாழ்வின் உருவமும் மறைந்துவிட்டது. இஸ்லாத்தின் தலைமை அதிகாரிகள், நீண்ட காலம் வரை தங்களைக் 'கலிபா' அதாவது இஸ்லாத்தைத் தோற்றுவித்தவரின் வாரிசுதார்கள் என்று சொல்லிக் கொண்டார்களாயினும், உண்மையில் அவர்கள் 'சுல்தான்' (அரசன்)களாகவே இருந்தார்கள். பிற்காலத்தில் அவர்கள் பகிரங்கமாகவே தங்களைச் சுல்தான்கள் என்று அழைத்துக்கொள்ளத் தொடங்கினார்கள். அவர்களுக்கு இஸ்லாத்தின் புனிதமான கூட்டுக் குடும்ப வாழ்வு பற்றியோ அதன் எளிமை, சமத்துவம் சகோதரத்துவம் பற்றியோ எவ்விதக் கவலையும் கிடையாது. ஆனால், புதிய தேசங்களை ஜெயிப்பதற்குக் கத்தி யெடுத்துப் போராடும் சிப்பாய்கள் தேவை. அந்தச் சிப்பாய்களில் இப்பொழுது அரேபியர் மட்டுமல்ல. அரேபியர் அல்லாதாரும் இருந்தனர். இந்தச் சிப்பாய்களைச் சுல்தானுக்காகச் சண்டையிடச் செய்வது அத்தனை சுலபமல்ல. ஆகவே, சுவர்க்கத்தில் கிடைக்கப் போகும் பலனைப்பற்றி ஆசை ஊட்டியதோடு, இந்த உலகத்

தில் கிடைக்கும் பலனிலும் அவர்களைப் பங்குதாரர்களாக் கிறார்கள். ஜெயித்த நாட்டிலே கிடைக்கும் கொள்ளையி லும், பிடிபடும் கைதிகளிலும், சிப்பாய்களுக்கும் பங்குண்டு. வெற்றிபெற்ற பூமியிலே சுதந்திரமாகக் குடியேறும் உரிமை அவர்களுக்குண்டு. ஒரு புதிய பிரதேசத்தை வென்றதும், தனது பழைய பிடிப்புகளிலிருந்தும், பழைய எஜமான்களி டத்திலிருந்தும் அவர்களுக்குப் பூரண விடுதலையுண்டு. இந்த மாதிரி ஏற்பாடுகளால், தோல்வியடைந்த நாட்டிலிருந்து ஏராளமான மக்களை, ஜெயித்தவர்கள் தங்கள் ராணுவத் திலே சேர்த்துக்கொண்டு முன்னேற முடிந்தது. தோற்றவர் களிடை இருந்தே, ஜெயித்தவர்கள் தங்களுக்காகப் போரா டும் சேனையை தயாரிக்க முடியுமானால் அவர்களை எதிர்த்து நின்று வெற்றி கொள்ள யாரால் முடியும்?

ஹர்ஷன் இறந்து நூறு வருடங்களுக்குள்ளேயே சிந்து பிரதேசம் இஸ்லாமிய ஆட்சியில் வந்துவிட்டது. காசி, சோமனாதம்(குஜரத்) வரையுள்ள இந்திய மக்கள், இஸ்லா மிய வாளின் பலத்தை உணரச் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்தப் புதிய ஆபத்திலிருந்து தப்புவதற்காக, புதிய வழி களைப் பின்பற்ற வேண்டியது அவசியம். ஆனால் ஹிந்துக்கள் தங்கள் பழைய பாதைகளிலிருந்து விலகத் தயாராயில்லை. தேசம் முழுவதும் ஒன்று சேர்ந்து எதிரியைத் தடுக்க முயற்சி செய்யாமல், கைப்பிடியில் அடங்கக்கூடிய ரஜபுத்ரர் களின் (பழைய க்ஷத்திரியர்கள், அவர்களோடு கொள் வினை கொடுப்பினையால் கலந்துவிட்ட சகரர்கள், கிரேக்கர் கள், கூர்ஜரர்கள், முதலியவர்கள் சேர்ந்த பாரத நாட்டின் போராடும் ஜாதி) பொறுப்பிலேயே எதிரிகளைத் தடை செய்வது விடப்பட்டிருந்தது. அவர்களுக்கோ, தங்கள் உள் விரோதங்களிலிருந்து தப்பவே சாவகாசமில்லை. மேலும், அரச வம்சங்களுக்குள்ளேயே இருந்த பழைய-புதிய விரோ தங்களின் காரணமாகவும், ஐக்கியம் ஏற்பட முடியாமல் போய்விட்டது.

# 1

'மகாராஜா! உங்களுக்குக் கவலை வேண்டாம். நமது சித்தகுருதேவர், ஒருபுதிய சாதனையை ஆரம்பித்திருக்கிறார். அதன் மூலம், சூறைக்காற்றிலே பறக்கும் உலர்ந்த சருகு களைப்போல, துருக்க சேனை பறந்து போய்விடும்.''

''குருதேவர் மித்ரபாதர் (ஜகன்மித்ரானந்தர்) என்மீது மிகுந்த கருணை உடையவர். எனக்கோ என் குடும்பத்தின ருக்கோ கஷ்டங்கள் ஏற்படும் பொழுதெல்லாம், நமது குரு மகராஜ் தமது திவ்யபலத்தால் காப்பாற்றி வருகிறார்.''

''மகராஜ்! குருதேவர் ஹிமாலயத்திற்கு, அந்தப்பக்கத் தில் பூட்டான் தேசத்தில் இருந்துகொண்டே, கன்னிய குப்ஜத்திற்கு வந்துள்ள ஆபத்தை உணர்ந்து கொண்டார். அதற்காகவே என்னைத் தங்களிடம் அனுப்பி வைத்தார்.''

''அவருக்கு எவ்வளவு கிருபை என் மீது.''

''தாரிணி (தாராதேவி) மகாராஜாவிற்கு உதவி செய் வாள். துருக்கர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று சொல்லச் சொன்னார்.''

''தாரா மாதாவிடம் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. தாரிணி! அபயரக்ஷணு! தாயே! மிலேச்சர்களிட மிருந்து எங்களைக் காத்தருள்.''

கிழ அரசன் ஜெயசந்திரன் இந்திரபவனம் போன்ற தனது ராஜமாளிகையிலே, பளிங்கு போன்ற ஒரு வெள்ளை மெத்தையின் மேலே உட்கார்ந்து கொண்டிருந்தான். அவ னுக்குப் பக்கத்திலே, அழகே வடிவெடுத்த இளமை ததும்பும் ராணிமார் நால்வர் உட்கார்ந்திருந்தனர். அவர்களின் கரிய கூந்தல், பின்புறத்தில் மற்றொரு தலையிருப்பதுபோல் சுருட்டி முடியப்பட்டிருந்தது. சூடாமணி, காதுக் குண் டலம், கங்கணம், முத்தாரம், மணியாரம், இடுப்பு ஒட்டி யாணம், நூபுரம் முதலாய விதவிதமான அவர்கள் அணிந் திருந்த தங்க—ரத்தின ஆபரணங்கள், அவர்களைவிட அதிக எடையுள்ளதாய் இருந்தன. மிக மெல்லிய சேலையையும், ரவிக்கையையும் அணிந்திருந்தார்கள். ஆனால், அவைகள் அவர்களின் அவயவங்களை மறைப்பதற்காக அல்ல; அதிக மாக எடுத்துக் காட்டுவதற்காகவே என்று தோன்றிற்று. ஸ்தனங்களின் பருமனையும் பளபளப்பையும் அழகிய முறை யிலே எடுத்துக் காட்டுவதற்கேற்ப அமைந்திருந்தது ரவிக்கை. அதற்குக் கீழே வயிறுவரை உள்ள சரீரம் மறைக் கப்படாமலேயே இருந்தது. சேலை, உடலின் உருவ அமைப் பையும், நிறத்தையும் விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தது. அவர்களின் கூந்தலிலே பூசப்பட்டிருந்த வாசனைத் தைலமும் சூடியிருந்த புது மலர்களும், அந்த மாளிகையை நறுமணத் தால் நிரப்பிக்கொண்டிருந்தன. அந்த ராணிகளைத்தவிர்த்து

ஐம்பதுக்கதிகமான இளம் வேலைக்காரப் பெண்களும் அங்கிருந்தனர். இவர்களில் சிலர் விசிறி வீசிக்கொண்டிருந்தனர். சிலர் வெற்றிலைத் தட்டுக்களை ஏந்திக் கொண்டிருந்தனர். சிலர் கண்ணாடி சீப்புகளைக் கையிலேந்தி நின்றனர். சிலர் நறுமண மூட்டிய நீர் ஜாடியை ஏந்தி நின்றனர். மற்றும் சிலர், மதுப் பாண்டங்களையும் தங்கக் கிண்ணங்களையும் ஏந்தி நின்றனர், கொஞ்ச தூரத்தில் சில யுவதிகள் மிருதங்கம், வீணை, குழல் முதலியவாத்தியங்களை வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தார்கள். சில பெண்கள் கையிலே சுவர்ண தண்டம் ஏந்திக் காவல் காத்து நின்றனர். அங்கு அரசனையும், மித்ரபாதரின் சிஷ்யன் சுபாகர் பிக்ஷுவையும் தவிர, மற்ற எல்லோரும் பெண்கள்—அழகிய யுவதிகள். பிக்ஷு மகாராஜாவிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டான். அரசனும் ராணிகளும் எழுந்து நின்று வணங்கி அனுப்பினர். இப்பொழுது பெண்களால் சூழப்பட்ட அரசன் தனித்திருந்தான். ஜெயசந்திரன் கிழவனாகி விட்டானாயினும், அவனுடைய பாதி நரைத்த நீண்ட தலைமயிரை அவன் வகுப்பெடுத்து வாரி முடித்திருப்பதையும், அவனுடைய பெரிய பெரிய மீசைகளை எண்ணெயிட்டு முறுக்கிவிட்டிருப்பதையும், அவனுடைய ஆடையாபரண அலங்காரங்களையும் பார்த்தால், அவன் தனது இளமை என்றும் முடிவுபெறாதது என்று கருதுவதாகத் தோன்றும். அவனுடைய குறிப்புணர்ந்து ஒரு வேலைக்காரி மதுக் கிண்ணத்தைக் தலை வணங்கி அரசனுக்கு முன்னால் நீட்டினாள். மது நிறைந்த அந்தக் கிண்ணத்தை ஒரு ராணி வாங்கி, அரசனுடைய வாயருகே கொண்டு சென்றாள். அரசன், ''ராஜ்யலெட்சுமி! என் நட்சத்திரமே! உன் எச்சில் படாமல் நான் எப்படி அதைப் பருக முடியும்?'' என்றான்.

ராணி தனது உதடுகளையும், நாக்கையும் நனைத்து விட்டுக் கொடுத்தாள். அரசனும் அந்தப் பிரசாதத்தை ஆவலோடு பருகினான். பிறகு அவனுடைய ஒவ்வொரு நட்சத்திரமும் அவ்விதமே பிரசாதம் அளித்தார்கள். அவனுடைய கண்கள் சிவந்துவிட்டன. துருக்கர்களைப் பற்றிய சிந்தனை மறைந்துவிட்டது. முகத்திலே புன்முறுவலும், மகிழ்ச்சியும் பொங்கின. அரசனின் பெரிய சரீரம் தலையணையிலே சாய்ந்தது. அவனது இரண்டு கரங்களும் இரு ராணிகளை அணைத்துக்கொண்டன. மற்றொருத்தியின் மடியிலே அவன் தலை இருந்தது. இன்னொருத்தியின் மார்பு, அவனது தோளைத் தழுவிக்கொண்டது. கள்ளும், காமமும் அரசாட்சி

செலுத்தின. நாட்டியம் தொடங்கும்படி அரசன் உத்தர விட்டான். வாத்தியம் முழங்கிற்று. வரிந்து கட்டிய விநோத ஆடைகளுடன், அழகிய யுவதியர் நடனமாடத் தொடங்கினர். கள் வெறியிலே மூழ்கிய அரசன், யுவதியரை நிர்வாணமாக நடனமாடும்படி உத்திரவிட்டான். நாட்டி யக்காரிகளின் ஆடையாபரணங்கள் யாவும் கழற்றப் பட்டன. நிர்வாண நடனம் நடந்தது. அரசனைச் சுற்றி காமத்தின் ஆட்சி; எதிரே நிர்வாண நாட்டியம்; நாட்டியப் பெண்களில் யாருடைய நிர்வாண உருவம் அரசனைக் கவர்ந்ததோ, அவளைத் தன்னிடம் வரும்படி உத்தரவிட் டான். அந்த ஸ்தானத்தில் மற்றொருத்தி நிர்வாணமாக வந்து நின்றாள். மதுவெறி அரசனை முழுதும் நிலைகுலையச் செய்துவிட்டது. மதியிழந்து உளரத் தொடங்கினான்: ''து...ரு...க்...க...நா...ய்...க...ள்...எ...ன்...இ ... ந் ... தி ... ர...பு...ரி...யி...லே...எ...ந்...த ரா...ஸ்...க...ல்...வ ... ரு ... கி...ரு...ன்...பா...ர்...ப்...போ...ம்...எ...ல்...லோ...ரு...ம்... நி...ர்...வா...ண...மா...க...ஆ...டு...ங்...க...ள்''என்று உள றிக் கொட்டினான். உளறினாலும் அரசனின் ஆணையல்லவா? ராணியரும், மற்ற பெண்களும் தங்கள் ஆடையாபரணங் களை யெல்லாம் கழற்றிவிட்டனர். அவர்கள் கூந்தலை அள்ளி முடித்திருப்பதும் அரசனுக்குப் பிடிக்கவில்லை. அதை யும் அவிழ்த்து விடும்படி சொன்னான். பரந்த கரிய கூந்தல் இடுப்பின் கீழே விழுந்து உடம்பின் பெரும் பகுதியையும் மறைத்துக் கொண்டது. வெறி கொண்ட அரசன் தானும் ஆடையாபரணங்களைக் களைந்துவிட்டு அவர்களுடன் ஆடத் தொடங்கினான். தொப்பை வயிறும், துருத்திய சதைகளும், கங்கையும் யமுனையும் கலந்தது போன்ற மீசையும், சதை தொங்கும் முகமும், மடிந்து தொங்கும் மார்புகளும் கொண்ட அவனுடைய விகார உருவத்தைப் பார்த்த எந்த யுவதியும் வெறுக்கவே செய்வாள். ஆனால் இங்கு கூடியுள்ள அழகிகளின் உடலும், உயிரும் இந்தக் கிழவனின் கையி லல்லவா இருக்கிறது. காமத்தைத் தூண்டும் கீதங்களோடு நாட்டியம் நடந்து கொண்டிருந்தது. ராணியர்களுக்கும், வேலைக்கார யுவதிகளுக்கும் இடையிலே, தனித்தாடும் தனது தொந்தியோடு அரசனும் ஆடிக்கொண்டிருந்தான்.

# 2

"வரவேண்டும் கவிச்சக்கரவர்த்தி" என்று கூறி ஒரு நடு வயது மனிதனை அரசன் வரவேற்றான். அவன் வந்து அமர்ந்ததும், மரியாதையோடு வெற்றிலைத் தட்டை அவன் பக்கம் தள்ளினான். இந்தக் கவிச்சக்கரவர்த்திக்கு வயது ஐம்பதிருக்கலாம். அவனுடைய சிவந்த கம்பீரமான முகத்திலே இன்னும் வசந்தத்தின் நிழல் இருந்தது. அவனுடைய மீசை இன்னும் கறுப்பு மாறவில்லை. அவனுடைய உடம்பிலே ஒரு வெள்ளை வேட்டியும், வெள்ளைப் போர்வையும் தரித்திருந்தான். கழுத்திலே அழகிய ருத்திராட்சை மாலை; சிரசிலே விபூதியின் முப்பட்டை. கவி, வாசனையூட்டிய வெற்றிலைச் சுருள்களை வாயிலே வைத்துக்கொண்டு,

"தேவ! யாத்திரை சுகமாக முடிந்ததல்லவா? உடல் நலந்தானே? இரவிலே நிம்மதியாகத் தூக்கம் வருகிறதா?" என்று கேட்டான்.

"இப்பொழுது ஆண்மை குறைந்து கொண்டே போகிறது கவிபுங்கவா!"

"மகாராஜா! தாங்கள் கவி ஸ்ரீஹர்ஷனை நன்றாக அவமானப்படுத்துகிறீர்கள்."

"புங்கவ என்ற சொல் அவமானதல்ல; புகழ்ச்சிகரமானது."

"புங்கவ என்று காளைமாட்டைச் சொல்வது அரசே!"

"எனக்குத் தெரியும். அதோடுகூட, உயர்ந்தவர்களையும் சொல்வது."

"நான் இதை காளை மாடு என்ற கருத்திலேயே உபயோகித்தேன்."

"ஆனால், நான் உயர்ந்தவர் என்ற கருத்திலே கவி நண்ப; உன்னைப்போன்ற கோவணதாரிகளைக் கேலி செய்யாமல், வேறு யாரோடு கேலி செய்வது?"

"தர்பாரிலே கூடாது அரசே!"

ஜெயசந்திரன் கவியினுடைய கையைப் பிடித்துக் கொண்டு தர்பார் மண்டபத்தைவிட்டு வெளியேறி, உத்தியாவனத்துக்குச் சென்றான். மழைக் காலத்தின் ஆரம்பம். பசிய மரங்களை மெதுவாக அசைத்துக் கொண்டிருக்கும் காற்று, வெகு சுகமாக இருந்தது. அரசன் தடாகத்தின் கரையிலே அமைக்கப்பட்டிருந்த பளிங்காசனத்தின் மீது அமர்ந்தான். கவிஞனும் அவனுக்குப் பக்கத்திலே உட்கார்ந்தான்.

''நீ எனது சுக நித்திரையைப் பற்றி விசாரிக்கிறாய் கவி! உண்மையிலேயே இப்பொழுது நான் கிழவனாகி விட்டேன் என்று உணரத் தொடங்குகிறேன்.''

''அது எப்படி?''

''நிர்வாண சுந்தரிகளும் எனது காம உணர்ச்சியைத் தூண்ட முடியவில்லை?''

''அப்படியானால், அரசே! தாங்கள் ஒரு மகா யோகி!''

''யோகியிடம் பதினாயிரம் அழகிய யுவதிகள் என்ன செய்வார்கள்!''

''பங்கிட்டுக் கொடுத்து விடுங்கள் அரசே! ஏற்றுக் கொள்பவர்கள் ரொம்பப் பேர் இருப்பார்கள்? கங்கைக் கரையிலே தண்ணீரை விட்டுப் பிராமணர்களுக்குத் தானம் செய்து விடுங்கள். 'சர்வேஷாமேவ தானானும் பார்யாதானம் விஷேசியதே.''

''அதைத்தான் செய்ய வேண்டும். வைத்திய ராஜ சக்கரபாணியின் 'ஜீவரஸம்' ஒன்றும் பலனளிக்கவில்லை. இப்பொழுது உன்னுடைய கவிதை ரஸம் ஒன்றைத்தான் நம்பிக் கொண்டிருக்கிறேன்.''

''நிர்வாண சுந்தரிகளும், ஜீவரஸமும் பலனளிக்க முடியாதபோது, எனது காவிய ரஸம் என்ன செய்ய முடியும்? மேலும், அரசே! நீங்கள் அறுபது வயதையும் கடந்து விட்டீர்கள்.''

''அறுபது வயது நடு வயதுதானே கவி.''

''யாருக்கு, பதினாறாயிரம் பாலிகைகளோடு உறவு கொள்ளும் காளைக்கா?''

''உன்னைக் காசியில் காணவே முடியவில்லை. நான் கனோஜிலிருந்து வந்து இரண்டு மாதமாகிறது.''

''மகராஜ்! நான் சித்திரை நவராத்திரியில் பகவதி வித்யாவதியை தரிசிக்கப் போயிருந்தேன்.''

''என்னுடையபடகும் அதே பாதையில்தானே வந்தது. தெரிந்திருந்தால் உன்னையும் அழைத்து வந்திருப்பேன்.''

''அழைத்து வந்திருப்பீர்களா அல்லது அங்கேயே இறங்கிக் குமாரி பூஜையில் மூழ்கியிருப்பீர்களா?''

''ஆனால், கவிஞ! நீ குமாரி பூஜைக்காக அங்கே செல்லவில்லையே!''

''நாங்கள் பகவதியை வணங்கும் சாக்தர்கள் மகராஜ்!''

''ஆனால், நீ சீதாராமனையும் வணங்குகிறாயே? உன்னைப் பார்த்தால் பக்கா வைஷ்ணவனாகவல்லவா தோன்றுகிறது.''

''முடிவில், சாக்தா வஹி சைவஹ சபாமத்யேச வைஷ்ணவஹ.''

''சபாமத்யர்கள் வைஷ்ணவர்களா?''

''அப்படித்தான் ஆகவேண்டியதிருக்கிறது மகராஜ்! நாங்கள் உங்களைப்போல மற்றவர்களின் வாயை மூட முடியுமா?''

''சமயம் போல் வேஷமிடும் நீங்கள் பலே—ஆட்கள் தான்!''

''மகராஜ் இது மட்டுமல்ல; பகவான் புத்தரையும் வணங்குகிறேன்.''

''புத்த பகவானையா?''

''ஆம்.''

''சே! இந்த இடத்திலே அந்தப் புனிதனின் பெயரை எடுக்காதே.''

''மகராஜ்! வஜ்ரயான்,* சாக்தர்களாகிய எங்களுக்கும் புத்தரை வணங்க வழி திறந்துவிட்டிருக்கிறது.''

---

*வஜ்ரயான்—பௌத்த மதத்தின் மூன்று கிளைகளுள் ஒன்று. காலத்தால் பிற்பட்டது. மது மாமிச பட்சணத்தையும், பணப் புழக்கம், குடும்ப வாழ்க்கை இவைகளையும் அனுமதிப்பது.

''சரியாகச் சொன்னாய் நண்ப! இதனால்தான் அதைச் சுலபமான வாகனம் என்று சொல்லுகிறார்கள்.''

''இந்த வஜ்ரயானி சித்தர்களின் பாடல்கள், கீதங்களில் கவிதா நயம் ஏதும் எனக்குத் தென்படவில்லை. ஆனால் அவர்கள் ஐந்து பொருள்களை(மது, மாமிசம், மீன், பணம், உடல் உறவு) அனுமதிப்பதின் மூலம் ஜனங்களுக்குச் செய்துள்ள நன்மைக்கு, நான் அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.''

''ஆனால் என்னைப் பொறுத்தவரை இந்த ஐந்து பொருள்களையும் போற்றுவது முடியாத காரியமாய் இருக்கிறது.''

''இந்த வஜ்ரயானேடுகூட, நாகார்ச்சுனனின் தத்துவமும் சேர்ந்தால் பொன் மலர் மணம் பெற்றது போலாம்.''

''உன்னுடைய காவியத்தின் சுவையை எப்படியோ ரசித்து விடுகிறேன், அதிலும்கூட, சில இடங்களில் என் தலை சுற்ற ஆரம்பித்து விடுகிறது. ஆனால் இந்தத் தத்துவமிருக்கிறதே, அது தலைமீது பாராங்கல்லை வைத்ததுபோல் அழுத்தவே செய்கிறது.''

''ஆனாலும் மகராஜ்! நாகார்ச்சுனனுடைய தத்துவம் மிகவும் உபயோகமுள்ளது. அது அநேக போலிக் கருத்துக்களைப் போக்கடித்து விடுகிறது.''

''ஆனால், நீ பெரிய வேதாந்தியாயிற்றே?''

''நான் எனது நூல்களை வேதாந்தம் என்று சொல்லியே வெளியிட்டேன். ஆனால், ''கண்டன கண்ட காத்தியம்'' என்ற நூலை நாகார்ச்சுனனுடைய பாத தூளியைச் சிரமேற் கொண்டே எழுதி முடித்தேன்.''

''இவைகளையெல்லாம் ஞாபகம் வைத்துக்கொள்வதென்பது முடியாது. ஆனாலும், நாகார்ச்சுனனுடைய தத்துவத்தில் என்னென்ன முக்கிய விஷயமிருக்கிறது? சொல், கேட்போம்.''

''சித்தராஜ மித்ரபாதர்கூட, நாகார்ச்சுனனுடைய தத்துவத்தை ஒப்புக் கொள்கிறார்.''

''எனது தீட்சா குரு மித்ரபாதரா?''

''ஆம். பாவம்—புண்ணியம், நல்லொழுக்கம்—தீயொழுக்கம் எல்லாம் கற்பனைகள். உலகம் அழிவற்றது அல்லது

அழியக்கூடியது என்று நிச்சயம் செய்வது முடியாத காரியம்; சுவர்க்கம்—நரகம், கட்டு—விடுதலை இவைகள் குழந்தையறிவின் புரியாத மயக்கம். பூஜை, வணக்கம் இவைகளெல்லாம் பாமரரை ஏமாற்றும் குழ்ச்சி. தெய்வங்கள் தேவதைகள் யாவும் ஜனங்களின் பொய்யான கற்பனையென்பது, நாகார்ச்சுனனின் தத்துவம்.''

''நான் இதே தத்துவத்தோடுதான் வாழ்க்கையைக் கழித்திருக்கிறேன்.''

''எல்லோரும் அப்படித்தான் கழிப்பார்கள். அரசே! கையில் கிடைப்பதை விட்டுவிட்டு, கடனுக்குப் பின்னே அலைவாருண்டோ?''

''ஆனல், இப்பொழுது கையில் கிடைப்பதை வைத்துக் கொண்டு, உறுத்து உறுத்துப் பார்ப்பதைத் தவிர வேறென்றும் செய்ய முடியாது போலிக்ருகிறதே, நீயோ இன்னும் கட்டு விடவில்லையே!''

''நான் தங்களைவிட எட்டு வருடம் இளையவன். மேலும், ஒருத்தியைத் தவிர வேறு கல்யாணமும் செய்யவில்லை.''

''கல்யாணம் செய்வதால் என்ன ஆகிறது? அதிகக் கல்யாணங்கள் செய்வதால், அந்தச் சூழலிலே மனிதன் களைத்து இறந்துவிடுகிறன்.''

''என் வீட்டில் ஒரு பிராமணத்திதான் இருக்கிறள், மகராஜ்!''

''ஆம்; கவிஞர் ஸ்ரீ ஹர்ஷன் அந்தப் பல்லுப்போன கிழவியோடு சதியாகப் போகிறர் என்று உலகமும் நம்பி விடும்!''

''நம்பிவிடும்; நம்பிக்கொண்டு இருக்கிறது மகராஜ்! நான் எனது நூல்களிலே, சாமாதி நிலையிலிருந்து பிர்மத்தை நேரே தரிசிப்பதைப்பற்றி எழுதியிருக்கிறேன்.''

''அந்தப் புதிய தத்துவத்திலே பிர்மத்தைப் பற்றியும், அதை நேரே தரிசிப்பதைப் பற்றியும் பேசுவதற்கு அடிப்படைகள் இருக்கின்றனவா?''

''மகராஜ்! அதில் எதைப்பற்றிப் பேசுவதற்கும் அடிப்படை இருக்கிறது.''

''பிரஜைகளை எப்பொழுதும் கண்மூடிகளாகவே வைத்திருக்க வேண்டும். அவர்களுக்கு இந்த நேர்தரிசனம் கிடைக்கச் செய்ய முடியுமா?''

''என்ன அரசே! உங்களுக்கு மதத்தின் மீதிருந்த நம்பிக்கை போய்விட்டதா?''

''அது எனக்குத் தெரியாது கவிஞ! அந்த நம்பிக்கை எப்பொழுது வருகிறது, எப்பொழுது போய்விடுகிறது என்று, என்னுல் தெரிந்து கொள்ள முடியவில்லை. தர்மாத்மாக்களாகிய பிராமணர்களின் உபதேசத்தைக் கேட்டும், நடவடிக்கைகளைப் பார்த்தும் எதையும் நிச்சயிப்பது எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. தான புண்ணியங்கள் எவ்வளவு வேண்டுமானுலும் செய்யலாம். கோவில் — மடங்கள் எத்தனை வேண்டுமானுலும் கட்டலாம். மதம் சொல்வதையெல்லாம் செய்யலாம். ஆனுல், கையிலுள்ள வாழ்க்கையை இழந்துவிடக் கூடாது என்பதுதான் எனது கொள்கை.''

காதலையும், மதத்தையும்பற்றி நடந்து கொண்டிருந்த சர்ச்சை திடீரென்று அரசியலிலே திரும்பியது. ஸ்ரீ ஹர்ஷன், ''மகாராஜா! உண்மையிலேயே பிருதிவிராஜனுக்கு உதவி செய்ய மறுத்துவிட்டீர்களா?''

''எனக்கென்ன அவசியம் வந்தது அவனுக்கு உதவி செய்ய? பெரும்புயலோடு, போரை அவனே விலைக்கு வாங்கினுன். அதன் பலனை அவனே அனுபவிக்கட்டும்.''

''என்னுடைய கருத்தும் இதுதான் மகாராஜா! இந்தச் சக்கரபாணி அனுவசியமாகத் தொல்லை கொடுக்கிருன்.''

''அவனுடைய வேலை வைத்தியம் செய்வது. அதில் ஒன்றும் திறமையைக் காணேம். மூன்று முறை ஜீவரஸப் பிரயோகம் செய்தான். ஒன்றும் பயனில்லை. இப்பொழுது வந்துவிட்டான் அரசியலில் யோசனை சொல்ல.''

''இல்லை, மகராஜ்; அவன் ஒரு முட்டாள். இளவரசர் அனுவசியமாக அவனைத் தலைமேல் வைத்துக் கொண்டு ஆடுகிருர்.''

# 3

''சரியாகச் சொன்னீர்கள் வைத்திய ராஜரே! ஸ்ரீஹர்ஷன், ககடுவார் வம்சத்தின் வேருக்கு நாகப்புழுவாக வந்திருக்கிருன். தந்தையாரை அவன் வெறும் காமக் குருடனுக ஆக்கிவிட்டான்.''

''குமார்! நான் இருபது வருட காலங்களாக, கன்னிய குப்ஜ மன்னனின் ராஜ வைத்தியன். என்னுடைய மருந்துகளும் பலன் அளித்திருக்கின்றன.''

''மருந்துகளின் பலனை உலகம் அறியும் வைத்திய ராஜரே!''

''ஆனுல், ஜீவரஸப் பிரயோகம் சம்பந்தமாக அரசர் என்மீது கோபமாக இருக்கிருர்.காமவெறி பிடித்த ஓர் ஆடவனின் இளமையை எவ்வளவு நாளைக்கு அதிகப்படுத்த முடியும்? இளமையைக் காப்பாற்றுவதற்கு உணவிலும் ஒழுக்கத்திலும் கட்டுப்பாடுகள் வேண்டுமென்று எழுதப்பட்டிருக்கிறது. நான் மல்லக் கிராமத்திலே தங்கிவிட அனுமதி கேட்கிறேன். அதற்கும் ஒத்துக் கொள்கிருரில்லை.''

''தந்தையாரின் இந்தக் குற்றங்கள் நம்மைப் பாதிக்காது விடுமா? ககடுவார் வம்சம் இப்பொழுது உங்களையே நம்பியிருக்கிறது வைத்தியராஜ்!''

''என்னை இல்லை; குமார ஹரிச்சந்திரனை. ககடுவார் வம்சத்தில், ஜெயசந்திரனின் ஸ்தானத்தில் ஹரிச்சந்திரன் இருந்திருந்தால் எவ்வளவு நன்ருயிருக்கும்? சந்திர தேவரின் சிம்மாசனத்திற்கு ஒரு ஹரிச்சந்திரன் தேவை.''

''ஸ்ரீ ஹர்ஷனின் ஸ்தானத்தில் வைத்திய ராஜர் சக்கரபாணி, ஜெயச்சந்திரனின் தோழராக அமைந்திருந்தால்! நல்லது வைத்திய ராஜரே! ககடுவார் சூரியன் அஸ்தமிக்கும் வரை நீங்கள் எங்களோடு கூடவே இருக்க வேண்டும்.''

''அந்தச் சூரியன் அஸ்தமித்தால், அதோடு கூட நானும் அஸ்தமித்துவிடத் தயாராயிருக்கிறேன். ஆனுல், ககடு

வாரின் சூரியன் மட்டும் அஸ்தமிக்கப் போவதில்லை; ஹிந்துக்களின் வாழ்வே அஸ்தமித்துவிடும். மல்லகாமிப் பிராமணனாகிய நான் தர்ப்பையையும், தண்ணீரையும்மட்டும் கையில் எடுக்கத் தெரிந்தவனல்ல. வாளேந்திப் போரிடவும் தெரிந்தவன். ஆகவே துருக்கர்களோடு ஏற்படும் போரில்நானும் கலந்துகொள்ள விரும்புகிறேன் குமார்!''

''என் தந்தை, தனது சொந்த மருமகனுக்கே உதவி செய்ய மறுக்கிறார். பிருதிவிராஜ் என் சொந்த அத்தான். சம்யுக்தை அவனைக் காதலித்தாள். தன் விருப்பப்படியே, மகிழ்ச்சியுடன் அவனுடன் சென்றாள். இதில் தந்தையார் கோபப்பட என்ன இருக்கிறது?''

''பிருதிவிராஜன் மாரத வீரன் குமார்!''

''அதில் சந்தேகமில்லை வைத்தியராஜ்; தன்னுடைய ஒப்பற்ற வீரத்தின் காரணமாகவே, துருக்க சுல்தானோடு எதிர்த்து நிற்கிறான். இல்லாவிடில், கன்னிய குப்ஜ சாம்ராஜ்யத்திற்கு முன்னால் அவனுடைய நாடு எத்தனை சிறியது. சுல்தானுக்கு அவன் வழி மட்டும் விட்டுவிட்டால் போதும், சுல்தான் அவனுக்கு மரியாதை செலுத்துவதோடு, ஏராளமான இனாமும் கொடுப்பான். சுல்தானுடைய கண், டில்லியின் மீதில்லை வைத்தியராஜ்! 600வருட காலமாக, பாரதத்தின் பெரும் பகுதியை ஆண்டுவரும் கன்னிய குப்ஜ ராஜ்யத்தின் மீதிருக்கிறது. ஆனால், இதைத் தந்தைக்கு உணர்த்துவது யார்? அவரோ உணரும் சக்தியையே இழந்துவிட்டிருக்கிறார்.''

''இந்தச் சமயத்தில் அரசர், ஆட்சிப் பொறுப்பை இளவரசரிடம் ஒப்படைத்துவிட்டால்?''

''தந்தையைச் சிம்மாசனத்திலிருந்து அகற்றிவிட்டால் என்ன என்று நான் ஒரு முறை நினைத்ததுண்டு. ஆனால், இருபது வருட காலமாக நீங்கள் அளித்த கல்வி, என்னை அவ்விதம் செய்யவிடாமல் தடுத்துவிட்டது.''

''கன்னியகுப்ஜ சிம்மாசனம், நொறுங்கிப் போயிருக்கிறது குமார்! ஓர் அடி தவறாக எடுத்து வைத்தாலும் உடனே பொடிப் பொடியாக உதிர்ந்துவிடும். தந்தையும், மகனும் கலகம் செய்யும் சமயமல்ல இது.''

''என்ன செய்யலாம் வைத்தியராஜரே! நம்முடைய சேனாதிபதியும், சேனா நாயகர்களும் பயங்கொள்ளிகளாக

வும், தகுதியற்றவர்களாகவும் இருக்கிறுர்கள். சில வாலிப சேனுநாயகர்கள், தகுதியும் வீரமும் உடையவர்கள். ஆனுல் அவர்களின் பாதையிலே இந்தக் கிழங்கள் குறுக்கே நிற் கின்றன. மந்திரிகளின் நிலைமையும் இதுதான். வெறும் முகஸ்துதி செய்வதையே தங்கள் கடமையாகக் கொண்டிருக் கிறுர்கள்.''

''அந்தப்புரத்திற்குத் தங்கள் சகோதரிகளேயும், புதல்வி களேயும் அனுப்பிப் பதவி பெற்றவர்கள் வேறு எப்படி இருக்க முடியும்? நாம் கடந்த காலத்தைப்பற்றிக் கவலேப் படக்கூடாது. எதிர்காலத்தைப்பற்றிச் சிந்திக்க வேண்டும்.''

''அதிகாரம் என்னிடமிருந்தால், ஒவ்வொரு ஹிந்து வாலிபனும் கத்தியெடுக்கும்படி உத்தரவிடுவேன்.''

''இது பல தலேமுறைகளாக வந்த குற்றம் குமார்! யுத்தத்திற்கு ராஜபுத்திரர்களே மட்டுமே பொறுப்பாக்கி விட்டது. துரோணன், கிருபன் போன்ற பிராமணர்களும் யுத்தம் செய்தார்களென்று மகாபாரதம் சொல்கிறது. ஆனுல் இன்று யுத்தம் ஒரு ஜாதிக்கு மட்டும் சொந்தமாக ஆகிவிட்டது.

''ஜாதிப் பிரிவினேகளும் நமது பாதையிலே பெரிய முட்டுக்கட்டை என்று நான் கருதுறேன்.''

''மிகப்பெரிய முட்டுக்கட்டை குமார்! நம் முன்னேர் கள் செய்த பல நல்ல காரியங்களுக்காக, அவர்களே வணக்கு கிறேம், கவலேப்படுகிறேம். ஆனுல் ஹிந்துக்களே ஆயிரக் கணக்கான ஜாதிகளாகப் பிரித்து வைத்தது இருக்கிறதே, அது மகா பாவம்.''

''அதன் பலனே இன்றும் நாம் அனுபவிக்கிறேம். இப் பொழுது காபூல் ஹிந்துக்களின் தேசமல்ல; லாகூரும் போய் விட்டது. டெல்லியின் முறை வந்திருக்கிறது.''

''இன்றுங்கூட நாம் பிருதிவிராஜனுடன் சேர்ந்து போராட முடிந்தால்!''

''ஓ! எத்தனே தீமைகள் வைத்தியராஜரே!''

''ஆம்; நம்முடைய படகு தீமைகளின் பாரத்தாலேயே முழுகிவிடும் நிலேமையை அடைந்திருக்கிறது. ஆயினும் அவைகளிடம் கொண்ட மோகத்தால், அவற்றில் சிலவற்றை

எறிந்து விட்டுப் படகின் கனத்தைக் குறைக்கக்கூட முயற்சி செய்யாமல் இருக்கிறோம்.''

''மதத்தின் அஜீரணமான நிலை இது!''

''இல்லை; மதத்தின் க்ஷயரோகம். நாம் எவ்வளவு கொடுமைகளைச் செய்திருக்கிறோம்? வருடந்தோறும், லட்சக் கணக்கான விதவைகளை நெருப்பிலே போட்டுப் பொசுக்கினோம்! ஆண்களையும் பெண்களையும் மிருகங்களைப் போல விலை கூறி விற்றோம்! தேவாலயங்களிலும், மடங்களிலும் தங்கம், வெள்ளி, வைரம், முத்து இவைகளைக் குவியல் குவியலாகக் கொண்டுபோய்ச் சேர்த்து, அன்னிய நாட்டுக் கொள்ளைக்காரர்களுக்கு அழைப்பனுப்பினோம்! ஒன்று சேர்ந்து எதிரியை எதிர்க்கவேண்டிய சமயத்தில் நமக்குள்ளேயே பிளவை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். நமது புலன்களின் ஆசையைத் தீர்ப்பதற்காக பிரஜைகளின் உழைப்பை அலட்சியமாக வீணுக்குகிறோம்.''

''ஆசையல்ல, வைத்திய ராஜரே! பயித்தியக்காரத் தனம். ஒரு மனிதனின் விருப்பத்திற்கு—காம சுகத்திற்கு, மனமொத்த ஒரு பெண்ணே போதும். ஆனால், புலன்களின் பயித்திக்கார வெறிக்கு, ஐம்பதாயிரம் பெண்களும் பொருட்டில்லை. அங்கே காதல் என்பதைக் காணவே முடியாது. கடந்த சங்கராந்தி தினத்தன்று, என் தந்தை அந்தப்புரத்திலிருந்த ஆயிரக்கணக்கான பெண்களைப் பிராமணர்களுக்குத் தானம் கொடுத்தபோது, அவர்கள் வருத்தப்படவில்லையென்றும் மனதிற்குள் சந்தோஷமே அடைந்தார்களென்றும், என்னுடைய பாமா எனக்குச் சொன்னாள்.''

''தானம் வாங்கிச் செல்லும் பிராமணர்கள் வீட்டிலே ஒன்று அல்லது இரண்டு சக்களத்திகள்தான் இருப்பார்கள். பதினாயிரம் பெண்களின் கூட்டமிருக்காதல்லவா? இதையும்கூட நான் அடிமைத்தனம் என்றே கருதுகிறேன். பெண்கள் என்ன சொத்தா, தானம் கொடுப்பதற்கும்—பூட்டி வைப்பதற்கும்?''

''நாமும் ஒன்று சேர்ந்து துருக்கர்களை எதிர்ப்பதற்கு முயற்சி செய்யவேண்டும்.''

''அது மகாராஜாவின் கையிலிருக்கிறது. சூழ்ச்சிக்கார ஸ்ரீஹர்ஷன் அவரை ஒட்டிக் கொண்டிருக்கிறான்.''

# 4

அஷ்டமி இரவு. கிழக்குத் திசையிலே இப்பொழுது தான் சந்திரன் தலைகாட்ட ஆரம்பித்திருக்கிறுன். அவனுடைய ஒளி பூமியெங்கும் பரவ இன்னும் கொஞ்சம் நேரம் ஆகும். எங்கோ தூரத்தில் கேட்கும் ஓர் ஆந்தையின் அலறலைத் தவிர எங்கும் நிசப்தம் பரவியிருக்கிறது. இந்த இருட்டு அமைதியிலே, இரண்டு மனிதர்கள் வேகமாக வந்து யமுனையின் தண்ணீரிலே இறங்குகிறுர்கள். முழங்கால் தண்ணீரிலே நின்று கொண்டு விரல்களை வாயில் வைத்து மூன்று முறை சீட்டியடித்தார்கள். உடனே யமுனையின் எதிர்க் கரையிலிருந்து ஒரு படகு வருவது தெரிந்தது. சப்தமின்றி மிக மெதுவாக வந்த அந்தப் பெரிய படகு கரையை அடைந்ததும், இருவரும் படகிலே ஏறினுர்கள். உள்ளே இருந்த ஒருவர், ''சேனுநாயகன் மாதவனு?'' என்று கேட்டார்.

''ஆம்; ஆச்சாரியரே! ஆல்ஹணனும்கூட என்னுடன் வந்திருக்கிறுன். குமார் எப்படி இருக்கிறுர்?''

''இன்னும் நினைவு வரவில்லை. நான் அதற்காகவும் கொஞ்சம் மருந்து கொடுத்திருக்கிறேன். மறுபடியும் அவர் யுத்தகளத்திற்குக் கிளம்பிவிடக் கூடாதல்லவா?

''ஆனுல் ஆச்சாரியரே! அவர் உங்கள் உத்தரவை எப்பொழுதும் மீறமாட்டாரே.''

''அது எனக்குத் தெரியும். ஆயினும், அயர்ந்து தூங்குவதால் காயத்தின் வலியும் தெரியாமலிருக்கும்.''

''காயம் ரொம்ப அபாயகரமானதா ஆச்சாரியரே?''

''இல்லை. சேனுநாயக! காயத்தைத் தைத்து, ரத்தப் பெருக்கையும் நிறுத்திவிட்டேன். பலவீனம் அதிகமாயிருக்கிறது. ஆயினும், பயம் ஒன்றுமில்லை. நல்லது; இப்பொழுது நீங்கள் என்ன செய்து வந்திருக்கிறீர்கள்? மகாராஜாவின் பிரேதத்தை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டீர்களா?''

"ஆம்."

"அவரோடுகூட அந்தப்புரப் பெண்களெல்லாம் சதியாகப் போகிறார்களோ?"

"யாருக்கு விருப்பமோ, அவர்கள் சதியாவார்கள்."

"சேனாதிபதி என்ன ஆனார்?"

"கிழட்டுச் சேனாதிபதிக்கு, சாகும் பொழுதுதான், விழிப்பு ஏற்பட்டது. நிலைமை மாறுவதைப் பார்த்த சேனாநாயகர்களில் பலர், பின்வாங்கி ஓடினார்கள். பின் வாங்கி ஓடுவதற்குக்கூட அவர்களுக்குத் திறமை இல்லை. இவர்களில் யாரும் தப்பிப் பிழைத்திருப்பார்களென்று நான் நம்பவில்லை."

"அவர்கள் மூன்று வருடங்களுக்கு முன்னால் இறந்திருந்தால், குமார ஹரிச்சந்திரர் நமது அரசராகவும், மாதவன் கன்னியகுப்ஜத்தின் சேனாதிபதியாகவும் இருந்திருந்தால்?"

"ஆச்சாரிய! உங்களின் ஒவ்வொரு வார்த்தையும், கண்ணாடியில் பிரதிபிம்பம்போல் தெளிவாகத் தெரிகிறது. நீங்கள் அரசருக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னீர்கள். ராய் பித்தௌராவுடன் சேர்ந்து துருக்கர்களை எதிர்க்க வேண்டுமென்று சொன்னீர்கள். யாவும் செவிடன் காதில் ஊதிய சங்காகி விட்டது."

"இப்பொழுது வருத்தப்படுவதில் பலன் ஒன்றுமில்லை. சரி, நீ என்னென்ன ஏற்பாடுகள் செய்து வந்திருக்கிறாய். அதைச் சொல்."

"ஐம்பது ஐம்பது வீரர்களை ஏற்றிக்கொண்டு ஐநூறு படகுகள் வந்து கொண்டிருக்கின்றன. காகா, மோகே, சலக்கூ இவர்களின் தலைமையிலே அந்த சேனைகளைப் பிரித்து உத்தரவுகள் கொடுத்துவந்திருக்கிறேன். சந்தாவரி (டாவா) லிருந்து கொஞ்ச தூரம் கிழக்கே ஒதுங்கித் துருக்கர்களைத் தாக்கும்படியும் நேரடித் தாக்குதல்களில் அதிகமாக ஈடுபடாமல் மறைந்து மறைந்து தாக்கும்படியும், நிலைமையைக் கவனித்துக்கொண்டு அவசியம் நேர்ந்தால் கிழக்கே பின்வாங்கும்படியும் அவர்களுக்கு உத்தரவிட்டிருக்கிறேன்."

"கனோஜின் அரண்மனை என்ன ஆயிற்று?"

"நான் அங்கிருந்து முடிந்த அளவு அதிகமான சாமான்களை வெளியேற்றி விட்டேன். அவைகளை ஏற்றிச் செல்லும்

படகுகள், கங்கை வழியாகக் கிளம்பி இரண்டு நாட்கள் ஆகிவிட்டன.''

''இதற்காகத்தான் மாதவ! உன்னைச் சேனாதிபதியின் பார்வையிலிருந்து நான் காப்பாற்றினேன். அவன், தான் இறப்பதற்கு முன்னால் உன்னையும் கொல்லுவித்திருந்தானாகில்! உன்னையும் குமாரரையும் காப்பாற்றிவிட்டேன். இப்பொழுது ஹிந்துக்களுக்குக் கொஞ்சம் நம்பிக்கை இருக்கிறது. என்ன ஆனாலும் சரி; நாம் கடைசிவரை நமது சக்தியின் ஒவ்வொரு அணுவையும் யோசித்து உணர்ந்து செலவிட வேண்டும்.''

''மற்றொரு படகு வருகிறது ஆச்சாரியரே!''

''ஆல்ஹன்! அது வந்ததுமே, எல்லாப் படகும் இங்கிருந்து புறப்படும்படி உத்தரவு கொடு.''

''நல்லது, ஆச்சாரியரே!'' ஆல்ஹணன் விநயத்தோடு சொன்னான்.

''நல்லது மாதவ! வா, கீழ்த்தட்டுக்குப் போவோம். ஆனால், அங்கே இருட்டாக இருக்கும். நான் வேண்டுமென்றே விளக்குகளையெல்லாம் அணைத்து விடும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

இருவரும் கீழே இறங்கினார்கள். ஆச்சாரியர், 'ராதே' என்று கூப்பிட்டார்.

''ஏன் அப்பா!'' ஓர் இளம் பெண்ணின் குரல் வந்தது.

''சக்கிமுக்கியைத் தட்டி விளக்கை ஏற்று.''

''நல்லது.''

அவர் மாதவன் பக்கம் திரும்பி, ''தம்பி! சிலர் வைத்திய ராஜா என்கிறார்கள். சிலர் ஆச்சாரியர் என்கிறார்கள். சிலர் அப்பா என்கிறார்கள். இவைகளையெல்லாம் ஞாபகம் வைத்துக்கொள்வது எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. நீங்கள் எல்லோரும், எனது குழந்தைப் பருவத்தின் பெயரான சக்குவென்றே அழையுங்கள்.''

''இல்லை: பெண்களின் பழக்கத்தை மாற்றுவது சுலபமல்ல. ஆகவே, நாங்கள் எல்லோரும் உங்களை பாபா சக்ரபாணி பாண்டே என்பதற்குப் பதிலாக, அப்பா என்றே அழைக்கிறோம்.''

''நல்லது, விளக்கேற்றி விட்டார்கள். வா, போவோம்.''

இருவரும் கீழே வந்தார்கள். படகின் மூன்றில் இரண்டு பாகம் கீழ்த்தளமாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஒன்றின்பின் ஒன்ருக இரண்டு அறைகள் தடுக்கப்பட்டிருந்தன. கொஞ்சம் காலி இடமும் இருந்தது. இருவரும் ஓர் அறைக்குள் நுழைந்தனர். அங்கு, விளக்கின் மங்கலான ஒளியிலே ஒரு கட்டிலிருப்பதும், அதன்மீது கழுத்துவரை வெள்ளைப் போர்வையால் போர்த்தப்பட்டு ஒருவர் படுத்திருப்பதும் தெரிந்தது. கட்டிலுக்குப் பக்கத்திலே ஒரு சிறிய நாற்காலியிலிருந்து, ஓர் அழகிய யுவதி எழுந்திருந்தாள்.

''பாமா! குமார் அசையவில்லையே?'' என்றுசக்கரபாணி கேட்டார்.

''இல்லை, அப்பா! அவருடைய சுவாசம் முன்போலவே ஒரே மாதிரி வந்து கொண்டிருக்கிறது.''

''பயந்து போய்விட்டாயா மகளே!''

''சக்கரபாணியின் குரு நிழலிலே பயப்படுவதா? ககடுவார் வம்சம், தங்கள் குரு துரோணரை முன்னமேயே கண்டு பிடித்திருந்தால்...''

''இதோ நமது சேனுதிபதி பரமசகாயன், மகாராஜாதி ராஜன், ஹரிச்சந்திரனின் சேனுதிபதி மாதவன் வந்திருக்கிருர்.''

''மகாதேவி பாமா! உங்கள் ஊழியன் மாதவன், உங்கள் சேவைக்காகக் காத்திருக்கிருன்'' என்று கூறி, மாதவன் வணங்கினுன்.

''எனக்கு மாதவன் புதியவரல்ல. குமாரரோடு சிலம்பம் விளையாடிய அவரை நான் எப்பொழுதும் மறக்கமுடியுமா?''

''புழுதியிலே விழுந்துவிட்ட ககடுவார் வம்சத்தின் லெட்சுமியை, மறுபடியும் தூக்கி வந்து நிறுத்தும் சக்தி படைத்த தோள்களை உடைய மாதவன் பாமா!''

''அப்பா! உங்கள் வாயால் பாமா என்று கூப்பிடுவதைக் கேட்க எவ்வளவு ஆசையாய் இருக்கிறது.''

''உன் தந்தையின் ஞாபகம் வருகிறதா மகளே?''

''ராஜ மாளிகையில் அடிக்கும் காற்றே வேறுமாதிரியிருக்கிறது அப்பா! எதை எடுத்தாலும் போலி வேஷமும்,

போலி ஆடம்பரங்களுந்தான். நாம் சாதாரண மனிதர்களைப்போல அன்பு முறையிலே பழக முடிவதில்லை. பழைய ராஜ முறையோடு, தந்தையைப் பட்டாரகர் என்று அழைக்கும் பழக்கம் போய்விட வேண்டும்.''

''அவைகள் போய்விட்டன மகளே! குமாரரின் அந்தப்புரத்தைப் பார்த்தாயல்லவா!''

கண்ணிலே பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பாமா, ''அப்பா! நீங்கள் எங்களை மறுபடியும் மனிதர்களாக்கி விட்டீர்கள்'' என்றாள்.

''இல்லை, மகளே! குமார ஹரிச்சந்திரரில்லாமல் வேறொருவராயிருந்தால், நான் கேவலம் தண்ணீர் தெளிக்கும் பிராமணனாய்த்தான் இருப்பேன். இவையெல்லாம் குமார ஹரிச்சந்திரருடைய...''

''அப்பா!''

குமாரரின் கண்கள் திறந்தன, பாமா அவரிடம் ஓடிச் சென்று, ''என்னுடைய சந்திர! ராகுவின் வாயிலிருந்து மீண்டு வந்த சந்திர!''

''ஆம்; பாமா! இப்பொழுது அப்பாவின் குரலொலி கேட்டதே?''

''அப்பாவா?''

''ககடுவார் வம்ச சூரியனை அஸ்தமிக்கச் செய்த அந்த அப்பாவையல்ல; நீ யாரை அப்பாவென்று அழைக்கிறாயோ இந்த அப்பாவையே நானும் அப்பாவென்று அழைக்கிறேன்.''

குமாரரின் கன்னங்களை மெதுவாகத் தடவிக்கொடுத்துக் கொண்டே சக்ரபாணி, ''குமார்! உடம்பு எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''உடம்பு சௌகரியமாகவே இருக்கிறது. யுத்தகளத்திலிருந்து காயப்பட்டு வந்ததாகவே தோன்றவில்லை.''

''காயம் மிக அபாயகரமானது குமார்!''

''இருக்கலாம். ஆனால், எங்கள் அமிர்தமளிக்கும் தந்தையும் கூடவே இருந்தாரே.''

''மெதுவாகப் பேசு குமார்!''

''அப்பா சக்ரபாணியின் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையும், ஹரிச்சந்திரனுக்குப் பிரம வாக்கியம்.''

''ஆனல், அந்த மாதிரி ஹரிச்சந்திரன், சக்ரபாணிக்கு ஒரு காரியத்திற்கும் உபயோகப்பட மாட்டான்.''

''அப்பா! இது ஹரிச்சந்திரனின் இதய மரியாதைக்குரிய விஷயம். அறிவு சம்பந்தப்பட்ட விஷயத்தில், பிர்மாவின் வாக்கியத்தைக்கூட ஹரிச்சந்திரன் உரைகல்லில் உரைத்துப் பார்க்காமல் ஏற்றுக்கொள்ள மாட்டான்.''

''குமார்! உன்னைப் பெற்றதால் ககடுவார் வம்சம்மட்டுமல்ல, ஹிந்து சமுதாயமே பெருமையடைகிறது.''

''அப்பா, சக்ரபாணியைப் பெற்றதால்...கொஞ்சம் தண்ணீர்!''

பாமா உடனே தண்ணீரைக் கொண்டு வந்து கொடுத்தாள். படகு புறப்பட்டுவிட்டது.

''நாம் காசிக்குப் போய்க் கொண்டிருக்கிறோம் குமார்! இரண்டாவது தலைநகரத்திற்கு! சேனாதிபதி மாதவன், சேனைகளுக்கு உத்தரவுகள் கொடுத்து விட்டான். அவைகள் இங்கேயே துருக்கர்களைத் தடுத்து நிறுத்தும். நாம் காசிக்குப் போய், ககடுவார் வம்சத்தின் ராஜ்யலெட்சுமியைக் காப்பாற்றுவதற்காகச் சேனை தயார் செய்வோம்.''

''இல்லை. அப்பா! நீங்கள் முன்பெல்லாம் சொல்வது போல ஹிந்து ராஜ்யலெட்சுமியைக் காப்பாற்றுவதற்காகச் சேனைகள் தயாரிப்போம். இப்பொழுது மீட்கப்பட வேண்டியது ஹிந்து ராஜலெட்சுமிதான். அதற்காக எல்லா, ஹிந்துக்களின் தோள்பலத்தையும் உபயோகிக்கவேண்டும்.'

''ஆம்; பறையன்—பிராமணன் என்ற பேதத்தையும் ஒழித்து.''

''ஆம்: என்னுடைய துரோண குருவே!''

# பாபா நூர்தீன்

**காலம் : கி. பி. 1300**

"நாம் பாரத தேசத்தை ஒரு கறவைப் பசுவாகக் கருதி, அதன் விவசாயி, தொழிலாளி, வியாபாரி, அரசர்கள் முதலியவர்களிடமிருந்து முடிந்த அளவு அதிகமாகக் கறந்து, கோர் தேசத்திற்கு அனுப்பவோ, அல்லது நம்மிஷ்டம்போல் செலவழிக்கவோ செய்த அந்தக் காலம் மலையேறிவிட்டது. இப்பொழுது, நாம் கோரின் அடிமைகளல்ல. பாரத நாட்டின் சுதந்திர அரசர்கள்." ஓர் ஒல்லியான வாலிபன் தனது கரிய தாடிக்கு மேலே உள்ள மெல்லிய ரேகை போன்ற மீசையை விரல்களால் தடவிக்கொண்டே சொன்னான்.

அவன் எதிரே பெரிய தலைப்பாகையையும், நீண்ட வெள்ளை அங்கியும் தரித்த ஒரு வயோதிகர் அமர்ந்திருந்தார். அவருடைய வெண்மையான தாடி நீண்டு வளர்ந்து, வயிறுவரை தொங்கிக்கொண்டிருந்தது. அவரது முகத்திலே, சாந்தமும் அறிவும் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

"ஆனால், அரசே! கிராமத் தலைவர்கள், பட்டேல்கள், தாசில்தார்கள் இவர்களை எடுத்துவிட்டால் இவர்கள் கலகம் செய்யத் தொடங்கிவிடுவார்கள். நாம் ஒவ்வொரு கிராமத்திற்கும், வரி வசூல் செய்வதற்காக நமது ராணுவத்தை அனுப்ப முடியாது" என்றார் பெரியவர்.

"முதலில் நீங்கள் பாரத வாசியாகி, பாரதத்தின் அரசனாக இருக்கவேண்டுமா? அல்லது ரத்தினங்களையும், முத்துக்களையும் ஒட்டகங்களின்மீதும், கழுதைகளின்மீதும் ஏற்றிக்கொண்டு செல்லும் கோர் தேசத்துக் கஜினிக் கொள்ளைக்காரனாகவே இருக்கவேண்டுமா என்பதை நிச்சயித்துவிட வேண்டும்."

"இப்பொழுது நாம் பாரதவாசிகளாகவேதான் ஆகிவிட வேண்டும் ஜஹாம்பனாக்!"

"ஆம்; அடிமை அரசர்களைப்போல நமது அஸ்திவாரம் கோரிலே இல்லை; டெல்லியில்தான் இருக்கிறது. ஏதாவது

கலகமோ குழப்பமோ ஏற்பட்டால், நமக்கு அரேபியாவி லிருந்தோ, ஆப்கானிஸ்தானத்திலிருந்தோ உதவிப்படை வராது. நாம் இங்கிருந்து தப்பியோடி, அங்கே போய்த் தங்கவும் முடியாது."

"இதை நான் ஒப்புக் கொள்கிறேன் ஜஹாம்பனுக்!"

"நான் இந்த வீட்டிலேயே இருக்கவேண்டுமானுல் இந்த வீட்டைச் சரியாக வைத்துக்கொள்ள வேண்டும். இங்குள்ள ஜனங்கள் சுகமாகவும், அமைதியாகவும் இருக்கும் படி பார்த்துக் கொள்ளவேண்டும். இந்த நாட்டுப் பிரஜை களில் இப்போது எத்தனை பேர் முஸ்லீம்கள்? நூறு வருட முயற்சிக்குப் பிறகும், டெல்லியின் சுற்றுப் புறங்களைக்கூட நாம் முஸ்லீம்களாக ஆக்க முடியவில்லை. சொல்லுங்கள் முல்லா அபூ முகம்மது, டெல்லியையும், அதன் சுற்றுப் பிரதேசத்தையும் முஸ்லீம்களாக ஆக்குவதற்கு, இன்னும் எவ்வளவு காலம் பிடிக்கும் உங்களுக்கு."

எதிரே உட்கார்ந்திருந்த மற்ருெரு கிழவர், தனது வெண்ணிறத் தாடியைக் கோதிக்கொண்டே,

"நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. அரசர்க்கு அரசே! இந்த எண்பது வயதுக் கிழவன், தனது அனுபவத் தின் மூலம் நாம் பலவந்தமாக இந்த நாட்டு மக்களை முஸ்லீம்களாக்க முயற்சி செய்தால், அதில் வெற்றியடைய முடியாது என்பதை நிச்சயமாகத் தெரிந்திருக்கிறேன்."

"ஆகவே நாம்—பாரத நாட்டிலே தங்கி பாரதவாசி களாக ஆகிவிட விரும்பும் முஸல்மான்கள்—பாரததேச முழு வதையும் முஸ்லீம் மயமாக்கும்வரை காத்திருக்க முடியாது. நாம் ஒரு நூற்றுண்டை வீணுகக் கழித்துவிட்டோம். நமது பிரஜைகளின் நன்மைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல், நிலவரி, சுங்கம் முதலிய வரிகளை அதிகமாக வசூல் செய் வதிலேயே கவனமாக இருந்தோம். அதன் விளைவென்ன? அரச பொக்கிஷத்திற்கு ஒரு ரூபாய் வந்து சேருவதற்கு முன்னுல், கிராமத் தலைவர்கள், தாசில்தார்கள் வயிற்றிலே, ஐந்து ரூபாய்கள் போய்ச் சேருகின்றன. ஒரு சிறு கிராம மத்தின் தலைவன், பட்டுடை உடுத்திக் குதிரையில் சவாரி செய்வதையும், ஈரானில் செய்துவந்த அழகிய வில்லினுல் அம்பெய்வதையும், வேறு எந்தத் தேசத்திலாவது பார்க்க முடியுமா? இல்லை, மந்திரியாரே! எனது ஆட்சியில் இனி இந்த மாதிரிக் கொள்ளைகளை அனுமதிக்க முடியாது."

"ஆனால், அரசே! எத்தனையோ ஹிந்துக்கள், இந்த ஆசையிலேமுஸல்மான்கள் ஆகிறார்கள். இப்பொழுது அந்தப் பாதையும் அடைப்பட்டுப் போய்விடும்'' என்று முல்லா சொன்னார்.

"இந்தமாதிரிக் கொள்ளையையும், லஞ்சத்தையும் இஸ்லாம் ஏற்றுக்கொள்ளுமானால் அரசாங்கப் பொக்கிஷத்திற்கும் அரசாங்கச் சொத்துக்களுக்கும் பாதுகாப்பு ஏது? அந்த மாதிரி ஊழியர்களைக்கொண்ட அரசாங்கம் எதை நம்பி நிற்க முடியும்?''

"இப்படிப்பட்டவர்களால் அரசாங்கத்தின் கால்கள் பலமடைய முடியாது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால், என் கவனமெல்லாம் கலகம் எழாமல் அமைதியை நிலைநாட்டுவதிலிருந்தது'' என்றார் பிரதம மந்திரி.

"கிராமத் தலைவர்கள், முடிந்தால் அவர்கள் விரும்புகிற படி செய்யட்டும். ஆனால், கிராமத்தில் விவசாயிகள் அதிகமா? தலைவர்கள் அதிகமா?''

"விவசாயிகள்தான். நூற்றில் ஒருவர்கூட நிர்வாகிகளாயிருக்கமாட்டார்கள்!''

"அந்த நூறு விவசாயியின் ரத்தத்தை உறிஞ்சி ஒருவன் குதிரைச்சவாரி செய்யவும், பட்டுடை உடுத்தவும் செய்கிறான். இதை நாம் தடுத்து விவசாயிகளின் வாழ்க்கையை உயர்வுடையதாகச் செய்வதின் மூலம் நூற்றுக்கணக்கான விவசாயிகளை அரசாங்கத்திற்கு நம்பிக்கை உள்ளவர்களாகச் செய்கிறோம். ஒருவனைக் கோபம் அடையச் செய்வதின் மூலம், நூற்றுக் கணக்கானவர்களை மகிழ்ச்சியடையச் செய்யமுடியுமானால்—நூற்றுக்கணக்கானவர்களின் வாழ்க்கையை உயர்த்த முடியுமானால், அது எவ்வளவோ நல்லதல்லவா?''

"நிச்சயமாக ஜஹாம்பனாக்! இப்பொழுது எனக்குச் சிறிதுகூடச் சந்தேகமில்லை. பாரதத்தின் முஸ்லீம் அரசர்களுள் தாங்கள் முதன்முதலாக ஒரு புதிய காரியத்தைச் செய்யப்போகிறீர்கள். ஆயினும், அதில் வெற்றியடைவீர்கள். இதன்மூலம் நாம் கிராமத்தின் மேல் வகுப்பாராகிய ஒரு சிலருடைய பகையைத்தான் பெறுவோம்.''

"கிராமங்களிலும் நகரங்களிலும் இருக்கும் ஒரு சில மேல் வகுப்பாரின் பகைமையைப் பற்றிப் பரவாயில்லை.

இப்பொழுது சில நாள் தங்கும் தற்காலிகக் குடிசையல்ல; ஆட்சியின் உறுதியான மாளிகை கட்டுவதற்கு நாம் அஸ்திவாரம் போடவேண்டும்.''

ஏதோ சிந்தனை செய்து கொண்டிருந்த முல்லா, தனது தாடியைத் தடவிக்கொண்டே, ''அரசர்க்கு அரசே! கிராமத்தின் நிர்வாகிகளின் நலனைவிட, ஏழை விவசாயி மக்களின் நலனிலே கவனம் செலுத்துவதுதான், அரசாங்கத்திற்கு அதிக நன்மை பயக்கக் கூடியது என்று நானும் கருதுகிறேன். நாம் சிறு நகரங்களில் வசிக்கும் நெசவாளர்களைக் கொஞ்சம் கவனித்தோம். அவர்களின் பஞ்சாயத்துப் பலப்படுவதற்கும், அவர்கள் வியாபாரிகள், லேவா தேவிக்காரர்களின் பிடியிலிருந்து தப்புவதற்கும் உதவி செய்தோம். கிராமத் தலைவர்கள், அவர்களை ஊழியத்திற்குவேலை செய்யும்படி செய்து வந்ததைத் தடுத்தோம். இவைகளின் பலனாக, துணி நெசவாளர்களில் பெரும்பாலோர் இஸ்லாத்தின் நிழலிலே சரண் புகுந்துவிட்டார்கள்.''

''இப்பொழுது எது அரசாங்கத்திற்கு நல்லதாக இருக்கிறதோ, அதுவே இஸ்லாத்திற்கும் நன்மை பயப்பதாக இருக்கிறதென்பதைத் தாங்கள் தெரிந்து கொண்டீர்களல்லவா, முல்லா?''

''ஆனால், ஒரு வேண்டுகோள் அரசே! தாங்கள் அமீர் உல்மோமினீன் (இஸ்லாத்தின் தலைவர்)...''

''அதோடு நான் இந்தியாவின் அரசன். இந்தியாவில் ஆயிரத்தில் ஒருவர்கூட முஸ்லீம் அல்ல.''

''ஹிந்துக்கள் இஸ்லாத்தை அவமானப்படுத்துகிறார்கள். எதிர்காலத்தில் அவர்களுடைய தைரியம் இன்னும் அதிகப்படக் கூடும். இந்த அவமரியாதைகள் நடக்காதபடி தாங்கள் தடுக்க வேண்டும்.''

''அவமானமா! என்ன, பரிசுத்த குரானைக் காலிலா போட்டு மிதிக்கிறார்கள்?''

''இல்லை; அவ்வளவு தைரியம் எங்கிருந்து வரும்.''

''மசூதிகளின் புனிதத் தன்மையைக் கெடுக்கிறார்களா?''

''அது நடக்க முடியாது.''

''கருணை நிறைந்த கடவுளைப் பகிரங்கமாகத் திட்டுகிறார்களா?''

"இல்லை; ஜஹாம்பனாக்! நமது ஸுபியா*க்களோடு பழகியவர்கள் நபிகள் நாயகத்தையும் ஒரு மகரிஷியாக ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் நமது கண் முன்னாலேயே பல தெய்வங்களை வணங்கி, விக்கிரஹ ஆராதனை செய்கிறார்கள்."

"அவர்களைக் 'காபிர்' (நாஸ்திகன்) என்று நீங்கள் கருதும் பொழுது, அவர்கள் இஸ்லாத்தின் கொள்கைகளுக்கு விரோதமாக விக்கிரஹ ஆராதனை செய்வதைப்பற்றி நீங்கள் எப்படிக் குறை சொல்ல முடியும்? என் சிறிய தந்தை ஜலால் உதீன், என்னைப்போல இந்த நாட்டின் நிரந்தர வாசியாக ஆகிவிட வேண்டுமா? அல்லது இந்த நாட்டு மக்கள் எல்லோரும் முஸ்லீம்களாக ஆகும்வரை, இந்த நாட்டிலே தற்காலிகமாகத் தங்கி இருந்து ஆட்சி செய்யும் அரசனாகவே இருக்க வேண்டுமா என்பதைப் பற்றி முடிவு செய்யவில்லை. ஆயினும், உங்களைப் போலக் கேள்வி கேட்ட ஒருவருக்கு, அவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா?"

"தெரியாது அரசே!"

"அவர், 'முட்டாளே நாள்தோறும் ஹிந்துக்கள் சங்கை முழக்கிக் கொண்டும் மேளம் கொட்டிக் கொண்டும் என் மாளிகைக்கு முன்னாலேயே விக்கிரஹ ஆராதனைகள் செய்வதற்காக யமுனைக் கரைக்குச் செல்வதை நீ பார்க்கவில்லையா? அவர்கள், என் கண் முன்னாலேயே தங்கள் பூஜைகளைச் செய்கிறார்கள். என்னுடைய ஆட்சி சக்தியை அலட்சியப் படுத்துகிறார்கள்; எனது இஸ்லாத்தின் விரோதிகள் என்னுடைய தலைநகரிலேயே—என் கண் முன்னாலேயே சுகபோகத்தோடும் செல்வச் செழிப்போடும் வாழ்கிறார்கள். சுக வாழ்வு—செல்வப் பெருக்கின் காரணமாக, முஸல்மான்களோடு சம அந்தஸ்த்தில் தலைநிமிர்ந்து நிற்கிறார்கள். அவர்களின் இந்தப் போகச் செருக்கையும், தர்ம கர்வத்தையும் சகித்துக்கொண்டிருப்பது எனக்கு அவமானகரமானதுதான். ஆனால், அவர்கள் தங்களின் செயல்கள் மூலம் புண்ணியத்தை எனக்கு அளிக்கிறார்கள் என்ற சிறு நம்பிக்கையால் தான் இவற்றைச் சகித்துக்கொள்கிறேன்' என்று கூறி

---

*ஸுபி—முஸ்லீம் மதத்தின் ஒரு கிளை, தாராளத் தன்மை உடையது. பிற மதத்தினரையும் சகித்துச் சமமாகக் கருதும் கொள்கை உடையது.

ஞர். இதைவிடச் சிறந்த பதில் என்னுலும் சொல்ல முடியாதென்று நான் கருதுகிறேன்.''

''ஆனுல், அரசே! அரசருக்கு இஸ்லாமியக் கடமையும் இருக்கிறதல்லவா?''

''மரண தண்டனே அடையக்கூடிய குற்றத்தைச் செய்து விட்ட ஒருவன், இஸ்லாத்தின் சரணத்தைப் பற்றிக் கொண்டு விட்டால், நான் அவனே விடுதலே செய்துவிட முடியுமா? ஒரு அடிமை இஸ்லாத்தைத் தழுவினுல், அவனே அடிமைத்தனத்திலிருந்து விடுதலே செய்துவிட முடியும்; அதுவும் அரச பொக்கிஷத்திலிருந்து அவனுக்குள்ள விலே யைக் கொடுத்து. இந்த நாட்டிலே, அடிமைகளின் மீது கோடிக்கணக்கான ரூபாய்கள் ஈடுகட்டப்பட்டிருக்கின்றன. எல்லா அடிமைகளேயும் விடுதலே செய்துவிடவேண்டுமென்று நீங்கள்கூடச் சொல்லமாட்டீர்கள்.''

''இல்லே; ஜஹாம்பனுக்! அடிமைகளேவைத்துக்கொள்ள கடவுளின் திருவாக்கும் அனுமதித்திருக்கிறதே.''

''இல்லே; தாங்கள் சொன்னுல் எனது ஆட்சிக்கே ஆபத்து ஏற்படுவதாயிருந்தாலும் சரி, முஸ்லீம்கள்—முஸ் லீம் அல்லாதார் எல்லா அடிமைகளேயும் விடுதலே செய்து விடும்படி பிரகடனப் படுத்துகிறேன்.''

''இல்லே; இது இஸ்லாம் தர்ம சாஸ்திரத்திற்கு விரோதம்.''

''தர்ம சாஸ்திரத்திற்குவிரோதம் என்பது இருக்கட்டும் முல்லா சாஹிப்! இப்பொழுது நீங்கள் யாராவது ஓர் இளம் அடிமைப் பெண்ணேப்பற்றி நினேத்துக்கொண்டிருப்பீர்கள். முஸ்லீம்கள் வீடுகளில்தான் அதிகமான அடிமைகள் இருக் கிருர்கள்.''

''முஸ்லீம்களுக்கு இது அனுமதிக்கப்பட்டதாகவே இறைவன் கூறியிருக்கிருன்.''

''ஆனுல், அடிமைகளும் மோமின் (முஸ்லீம்) களாகவே இருந்தால்? ஆயினும், அவர்களே இந்த உலகத்தின்சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கக்கூட நீங்கள் அனுமதிக்கத்தயாரா யில்லே. அவர்களே சுவர்க்கத்தின் நம்பிக்கையிலேயே வைத் திருக்க விரும்புகிறீர்கள்.''

''நான் வேருென்றும் சொல்ல விரும்பவில்லே. இஸ்லா மிய ஆட்சியிலே, இஸ்லாமிய தர்ம சாஸ்திரத்தின்படி அர

சாட்சி நடக்கவேண்டும். இதுதான் நான் சொல்ல விரும்புவது.''

''இந்த விருப்பம் மறுக்கப்படவில்லை. இஸ்லாமிய ஆட்சி ஏற்படுவதற்கு, நாட்டிலுள்ள ஜனங்களில் பெரும்பாலோர் முஸ்லீம்களாக இருக்கவேண்டும். உங்கள் முன்னிலையில், எனது கருத்துக்களைத் தெளிவாக்கிவிட விரும்புகிறேன். பிரதமரே! நீங்களும் கேட்டுக்கொள்ளுங்கள். சுல்தான் முகமதுவைப் போன்ற ஓர் அன்னிய அரசன் தனது சக்தி வாய்ந்த சேனையின் பலத்தால், அமைதி நிறைந்த இந்த நாட்டின் நகரங்களைக் கொள்ளையடித்து, கோவேறு கழுதைகளின் மீதும் ஒட்டகங்களின் மீதும் ஏராளமான பொருள்களை ஏற்றிக்கொண்டு செல்லமுடியும். ஆனால், குழந்தை குட்டிகளோடு டெல்லியிலே தங்கி வாழ விரும்பும் என் போன்ற மனிதனுக்கு, அவ்விதம் செய்வது முடியாத காரியம். நம்முடைய ஆட்சி ஹிந்து பிரஜைகள் கொடுக்கும் வரியின் மீது நிலைத்திருக்கிறது. ஹிந்து சிப்பாய்கள்—சேனு நாயகர்களின் பலத்தை நம்பியிருக்கிறது. எனது சேனுதிபதி மல்லிக் ஒரு ஹிந்து. சித்தூர் அரசர்; எனது ஐயாயிரம் சேனைகளுக்குத் தலைவர்.''

''ஆனால், ஜஹாம்பனுக்! அடிமை அரசர்களும் டெல்லியில்தானே வசித்தார்கள்?''

''நீங்கள் தயங்கவேண்டாம்; என்னை முன் கோபியென்றும், நிதானமற்றவனென்றும் சொல்லப்படுகிறது. ஆனால், இத்தன்மைகளெல்லாம் மாறுபட்ட கருத்துக்களைக் கேட்பதிலிருந்து என்னைத் தடுத்துவிட மாட்டாது. அடிமை அரசர்களுக்கு, டெல்லி, பறவைகளின் நிலையற்ற கூடாகவே இருந்தது. மங்கோலியப் பெரும் புயலிலிருந்து, இந்தியாவில் முஸ்லீம்ஆட்சிமயிரிழையில்தப்பிப்பிழைத்தது. மங்கோலியர்களைப் போன்ற பலம் பொருந்திய எதிரிகளை முஸ்லீம்கள் சந்தித்ததில்லை என்பது ஹிந்துக்களுக்குத் தெரியாது. தெரிந்து அவர்கள் மறைமுகமாகவேனும் மங்கோலியர்களைத் தூண்டியிருந்தால், பாரத நற்பூமியிலே புதிதாக ஊன்றப்பட்டிருந்த இஸ்லாமியச் செடி அந்தப் பெரும் புயலிலே பறந்து போயிருக்கும். செங்கிஸ்கானின் வம்சம் உலகத்தின் பெரிய நாடான சீனுவை ஆண்டு கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?''

''தெரியும் அரசே!''

''அந்த வம்சம் ஸமனியா* மதத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறது.''

''ஸமனியா! அதனுடைய எத்தனையோ மடங்களும் தேவலாயங்களும் கொளுத்தப்பட்ட பின்பும்—நாசமாக்கப்பட்ட பிறகும், இந்த மதம்—இஸ்லாமியக் கொள்கைகளின் விரோதக் கடல், இன்னும் பாரதப் புண்ணிய பூமியிலிருந்து ஒழிந்து விடவில்லை.''

''இஸ்லாமியக் கொள்கைகளின் விரோதக் கடலாக அதை மட்டும் ஏன் சொல்கிறீர்கள்?''

''ஜஹாம்பனுக்! ஹிந்துக்கள்—பிராமணர்களின் மதத்திலும் நிரந்தரமான கடவுள்களுக்கு இடமிருக்கிறது. ஆனால், இந்த ஸமனியர்கள் கடவுளை முற்றிலும் மறுக்கிறார்களே.''

''செங்கிஸ்கான் வம்சத்தினர் இன்று மட்டுமல்ல, செங்கிஸ்கானின் பேரன் குப்லேக்கானின் காலத்திலேயே, அவர்கள் தங்களை ஸமானியர்களின் சிஷ்யர்கள் என்று கூறி வந்தார்கள். இதுமட்டுமல்ல; செங்கிஸ்கானின் காலத்திலேயே அவனுடைய சேனையில் அநேக ஸமனியச் சேனைத்தலைவர்கள் இருந்தார்கள். புகாரா, சமர்கந்த், பலக் முதலியஇஸ்லாமிய நகரங்களையும், இஸ்லாமிய நாகரிகங்களின்கேந்திரஸ்தானங்களையும், அவர்கள் தேடித் தேடி அழித்தார்கள். நம்முடைய பெண்களை, அவர்கள் உயர் குடும்பத்தினர்—சாதாரணக் குடும்பத்தினர் என்ற வேற்றுமைகூடப் பார்க்காமல் அடிமைகளாக ஆக்கிக் கொண்டார்கள். குழந்தைகளைக் கருணையின்றிக் கொன்று குவித்தார்கள். இந்தக் கொடுமைகளையெல்லாம் தூண்டிவிட்டவர்கள், அந்த ஸமனிய மங்கோலியர்கள்தான். அரேபியர்கள் எங்கள் மடங்களை இடித்தார்கள்; எங்கள் நகரங்களை அழித்தார்கள். குழந்தைகளைக் கொன்றார்கள்; அதற்குப் பழி வாங்க வேண்டும் என்று தூண்டிவிட்டார்கள் இந்த ஸமனியர்கள். கொஞ்சம்யோசித்துப் பாருங்கள்; மங்கோலியர்கள் இந்திய ஸமனியர்களோடு (பௌத்தர்களோடு) சேர்ந்துகொண்டு, ஹிந்துக்களைத் தங்கள் பக்கம் இழுத்துக் கொண்டிருந்தால், இஸ்லாத்தின் கதி என்ன ஆகியிருக்கும்?''

''சர்வ நாசமாகியிருக்கும் ஜஹாம்பனுக்!''

---

*ஸமனியா—புத்த மதத்தை மங்கோலியர்கள் அழைத்த பெயர்.

''ஆகவே, நாம் மணற் பரப்பின்மீது நமது ராஜ்யத்தின் அஸ்திவாரத்தை அமைக்கக்கூடாது. அடிமை அரசர்களை நாம் காப்பியடிக்கக் கூடாது.''

இதுவரை மௌனமாக இருந்த பிரதம மந்திரி இப்பொழுது வாய் திறந்தார்.

''ஆனால் அரசர்க்கு அரசே! கிராமத் தலைவர்களின் பலத்தை நாம் குறைத்துவிட்டால், ஆட்சியின் கரங்கள் அந்தக் கிராமம் வரை எப்படி நீளும்?''

''பட்டுடை உடுத்தி, குதிரைச் சவாரி செய்யும் இந்தக் கிராமத் தலைவர்கள் இல்லாத காலத்தில், வேலைகள் எப்படி நடந்தன?''

''நான் அதை ஆராயவில்லை.''

''நான் ஆராய்ந்திருக்கிறேன். அரசர்கள் தங்களைக் கொள்ளைக்காரர்களாகக் கருதிய காலத்தில்தான் கொள்ளைக் காரர்களை நிர்வாகிகளாக நியமித்தார்கள். இந்த மாதிரி நடப்பது இயற்கையே. அதற்கு முன்னால், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பஞ்சாயத்து இருந்தது. அந்தக் கிராமங்களிலே ஏற்படும் சண்டைத் தகராறு, அரசாங்கத்திற்கு வரி செலுத்துவது முதலிய எல்லாக் காரியங்களையும் அந்தப் பஞ்சாயத்தே நிர்வகித்து வந்தது. அரசனுக்கு, கிராமத்தின் தனிப்பட்ட நபரோடு எவ்விதத் தொடர்பும் கிடையாது. அவன் பஞ்சாயத்துக்களோடுதான் தொடர்பு கொண்டிருந்தான். தனக்கும், வரி செலுத்தும் விவசாயிக்கும் இடையே இணைப்பு ஸ்தாபனமாக இந்தப் பஞ்சாயத்து இருந்து வருவதாகக் கருதினான்.''

''அப்படியானால் ஜஹாம்பனாக்! நூறு வருடங்களுக்கு முன்னால் இறந்துவிட்ட பஞ்சாயத்துக்களை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும்.''

''ஆம்; வேறு வழியில்லை, இஸ்லாமிய ஆட்சியை இந்த நாட்டிலே உறுதிப்படுத்த வேண்டுமானால் இந்த நாட்டு மக்கள் சுலபமாகவும்,சந்தோஷமாகவும் வாழ்வதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்யவேண்டும். அதற்காக ஹிந்துப் பிரஜைகளின் பழக்க வழக்கங்கள், சட்ட ஒழுங்குகளையும் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். டெல்லியின் ஆட்சியிலே, இஸ்லாமிய தர்ம ஆட்சி அல்ல—அரச தர்ம ஆட்சி

நடக்கவேண்டும். இஸ்லாம் மதத்தைப் பிரசாரம் செய்வது முல்லாக்குகளுடைய வேலே. அவர்களுக்கு நாம் மானியம் வழங்குவோம். ஸூபியர்கள் அந்த வேலேயை நன்ருகச் செய்கிருர்கள். அவர்களின் மடங்களுக்கு ரொக்க மானியம் அளிப்பதோடு வரி வஜாவும் செய்வோம்.''

## 2

மழைகாலம் கழிந்துவிட்டது. ஆயினும், அங்கங்கே பள்ளம் படுகுழிகளில் தண்ணீர் நிரம்பியிருந்தது. பெரிய பெரிய வரப்புக்களால்சூழப்பட்ட வயல்களெங்கும்வெள்ளக் காடு. அவற்றின் மத்தியிலே, பசுமையான நெற்பயிர்கள் தலேவிரித்து ஆடிக்கொண்டிருந்தன. பரந்து கிடந்த மகத நாட்டின் மத்தியிலே பசுமை நிறைந்த வயல்கள், வாய்க் கால்கள் புடைசூழ நின்றது ஹில்ஸா (பாட்ஞு) என்ற பெரிய கிராமம். அதில் வியாபாரிகளுடைய சில வீடுகள் மட்டும் செங்கற்களால் ஆனவை. மற்ற விவசாயிகள், தொழிலாளர்களுடைய வீடுகள் ஓலே வேய்ந்த குடிசைகள். இவைகளேத் தவிர, சில பிராமணர்களின் வீடுகளும் இருந் தன. அவைகள் மற்ற வீடுகளேவிடச் சிறிது நல்ல நிலேமை யில் இருந்தன. ஹில்ஸாவின் கோவிலே நூறு வருடங் களுக்கு முன்ஞல், பக்தியார் கில்ஜியின் சேனேகள் நாச மாக்கிவிட்டன. அதற்குப் பிறகு, மிஞ்சியுள்ள குட்டிச்சுவர் களேயும் ஹிந்துக்கள் பூசை செய்து கொண்டிருக்கிருர்கள். கிராமத்தின் மேற்குக் கோடியிலே, பௌத்த மடம் இருக் கிறது. அதன் வெளிக் கட்டிடங்களெல்லாம் உடைந்து போயிருந்தாலும், வீடு இப்பொழுதும் மனிதர் குடியிருக்கத் தகுதியாக இருக்கிறது. அதற்குள் நுழைந்து அங்கு வசிப் பவர்களேப் பார்ப்பவர்கள், பௌத்த பிக்ஷுக்கள் அந்த மடத்தைவிட்டுப் போய்விட்டார்கள் என்று சொல்ல முடியாது.

ஒருநாள் மாலே. அந்த மடத்தின் வெளியே ஒரு கல் மேடைமீது, நடு வயதுள்ள ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவருடைய உடம்பிலே காஷாய உடை இருந்தது. அவரு டைய தலேயும் நெற்றியும் மழுங்கச் சிரைக்கப்பட்டிருந்தன. ஒரு வாரமாக க்ஷவரம் செய்யாததால், தாடியும் மீசையும்

கொஞ்சம் நீட்டிக்கொண்டிருந்தன. அவரது கையிலே மரக் கட்டையால் செய்த மாலை இருந்தது. அன்று பௌர்ணமி தினம். கிராமத்தின் ஆண்களும் பெண்களும் துணி முதலிய பொருள்களைக் கொண்டு வந்து, அந்தக் காஷாயதாரிக்கு முன்னால் வைத்து வணங்குகிறார்கள். அவர் மலர்ந்த முகத்தோடு கையைத் தூக்கி ஆசீர்வதிக்கிறார்.

இது என்ன? ஹில்ஸாவின் பழைய பௌத்த மடங்கள் தான் அழிந்துவிட்டனவே? ஆம், ஆனால், மடங்கள் இல்லாவிட்டாலும் பக்தர்களின் மனத்திலே சிரத்தை இருக்கிறது. இன்று இந்தக் காஷாயதாரி பாபாவைப் பார்த்துப்பௌத்த பிக்ஷு என்று சொல்லாமல் வேறு என்ன சொல்ல முடியும்? இவரும் கல்யாணம் செய்து கொள்ளாதவரே. அதுமட்டுமல்ல! இவருக்கு முன்னால் இருந்த இவருடைய குருமார்களும் பிரமச்சாரி—காஷாயதாரிகளே. ஹிந்து அல்லது பௌத்தர்களாயிருந்து முஸல்மான்களான பத்துப் பதினைந்து தொழிலாளர் குடும்பத்திலே. இந்த இடத்தை 'கான்காஹ்' (முஸ்லீம் சந்நியாசிகள் தங்குமிடம்) என்று சொல்லுகிறார்கள். பிராமணர்கள் இதை மடம் என்று ஒத்துக்கொள்ளாவிட்டாலும், மற்றக் கிராமவாசிகள் இதை மடம் என்றே அழைக்கிறார்கள். இந்த பாபாக்களுக்கு முன்னாலும், இந்த மடங்களிலே ஜாதிப் பிரிவினைகள் இல்லை. இந்த பாபாக்கள் காலத்திலும் அங்கு ஜாதிப்பிரிவினை கிடையாது. இவர்களைப் போலவே முன்னாலிருந்தவர்களும் காஷாயம் தரித்துப் பிரமச்சாரிகளாய் இருந்தார்கள். முன்னாலிருந்த பிக்ஷுக்களைப் போலவே, இவர்களும் நோய்வாய்ப்பட்ட ஜனங்களுக்கு மருந்தும், மந்திரமும் செய்கிறார்கள். துயரப்படும் ஜனங்களுக்கு நல்லுபதேசத்தைச் சொல்லிச் சாந்தி யளிக்கிறார்கள். ஆகவே, முற்காலத்தைப் போலவே பௌர்ணமி தினத்தன்று கிராமவாசிகள் இந்த முஸ்லீம் சந்நியாசிகளுக்குக் காணிக்கை செலுத்தி வணங்குகிறார்கள். முற்காலத்தில் பௌத்த பிக்ஷுக்களைத் தங்கள் தெய்வ குருவாக வணங்கியதைப் போலவே, இப்பொழுது இந்தப் பாபாவையும் அவரது சிஷ்யர்களையும் வணங்குகிறார்கள்.

மடத்தின் பழைய தலைவர்களின் சமாதிகளை வணங்கிவிட்டுக் கிராமவாசிகள் திரும்பிச் சென்றனர். இரவிலே பால் போன்ற வெண்ணிலாவின் ஒளி எங்கும் பரவியிருக்கிறது. இஸ்லாமியத் தொழிலாளர்களின் வீட்டுப் பக்கத்திலிருந்து இரண்டு நபர்களோடு ஒரு பெரியவர் மடத்தை

நோக்கி வந்துகொண்டிருந்தார். அவர் நெருங்கி வந்ததும் மௌல்வி அபுல் அலாயி என்பதை பாபா தெரிந்துகொண் டார். மௌல்வி தன் தலையிலே ஒரு வெள்ளைத் தலைப் பாகையும், உடம்பிலே நீண்ட அங்கியும், வெள்ளைப் பைஜா மாவும் தரித்திருந்தார். அவருடைய நீண்ட கரிய தாடி, காற்றிலே அசைந்து கொண்டிருந்தது. பாபா எழுந்து நின்று தன்னிரு கரங்களையும் நீட்டிக்கொண்டு,

''வாருங்கள் மௌலானு சாஹிப்! அஸ்லாம்—அலேக்'' என்ருர்.

''வாலேகும்—சலாம்'' என்று கூறி பாபாவைத் தழுவிக் கொண்டார் மௌலானு.

''எங்கள் சிம்மாசனம் இந்த வெறுங்கல்தான். அமர்ந் தருளுங்கள்.''

''பிரபோ! நாஸ்திகர் (காபிர்கள்)களின் கூட்டம் இங்கு கூடியிருந்ததை, நான் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.''

''வேடிக்கை என்று வேண்டுமாளுல் நீங்கள் சொல்லிக் கொள்ளுங்கள். ஆனல், அவர்களை நாஸ்திகர்கள் என்று சொல்லாதீர்கள். அது நூருவின் இதயத்தில் முள்போலத் தைக்கிறது.''

''இந்த ஹிந்துக்கள் நாஸ்திகர்கள் இல்லாவிட்டால் வேறு யார்?''

''அந்த ஜோதி எல்லா உயிர்களிலும் நிறைந்திருக்கிறது. ஒளி உள்ள இடத்தில் இருள் இருக்க முடியாததைப்போல ஆத்ம ஜோதி இருக்குமிடத்தில் நாஸ்திகத் தன்மையிருக்க முடியாது.''

''உங்களுடைய இந்த வேதாந்தம் இஸ்லாம் காட்டிய பாதையை விட்டு விலகிச் செல்வதாகும்.''

''நாங்கள் உங்கள் கருத்துக்களை வழி தவறியதென்று சொல்வதில்லையே. எல்லா நதிகளும் ஒரு சமுத்திரத்திலேயே கலக்கின்றன என்ற கொள்கையையுடையவர்கள் நாங்கள். நல்லது; நீங்கள், மக்கள் எல்லோரும் கடவுளின் குழந்தை கள் என்பதை ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?''

''ஆம் ஒப்புக் கொள்கிறேன்.''

''அந்த நாயகன் சர்வ சக்திமான் என்பதையும் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?''

''ஆம்.''

''மௌலானு சாஹிப்! அந்தச் சர்வ சக்திமானுன நாயக னின் உத்தரவின்றி ஒரு சிறு இலையுங்கூட அசையாதென்ருல் இந்தக் கடவுளின் குழந்தைகளை நாஸ்திகர்கள் என்று சொல்வதற்கு நாம் யார்? ஆண்டவன் விரும்பினுல், அவர் கள் எல்லோரையும் ஒரே வழியில் நடத்துவான். அவன் விரும்பவில்லை என்ருல் எல்லா வழிகளும் அவனுக்குச் சம்மதம் என்றுதானே அர்த்தம்?''

''ஷாஹ் சாஹிப் உங்களுடைய வேதாந்தப் பொய்களை யெல்லாம் என்னிடம் சொல்லாதீர்கள்.''

''ஆனுல், மௌலானு! நான் இஸ்லாமிய நோக்கத்தில் இவைகளைச் சொன்னேன். ஸூபியர்களாகிய நாங்கள் 'அல்லாஹ்' 'பகவன்' இரண்டையும் வெவ்வேருகக் கருதுவ தில்லை. சத்தியமாகிய நானே தெய்வம் என்பது தான் எங் கள் தாரக மந்திரம். எங்கும் அந்தப் பேரொளி நிறைந் திருக்கிறதென்பதே எங்கள் கொள்கை.''

''இது நாஸ்திகத் தன்மை.''

''தாங்கள் அந்த மாதிரிக் கருதலாம்; இதற்கு முன்னு லும் பலர் அப்படித்தான் கருதினுர்கள். ஆனுல், ஸூபியர் கள் தங்கள் புனிதமான ரத்தத்தால் இந்த உண்மையை நிலை நாட்டி யிருக்கிருர்கள். எதிர் காலத்திலும் அவசியம் ஏற்பட்டால் எங்கள் ரத்தத்தைக் கொடுத்தும் அதைக் காப்போம்.''

''உங்களால் தான் இங்கு இஸ்லாம் மதம் பரவுவது தடைப்படுகிறது.''

''உங்களுடைய கத்தியையும், நெருப்பையும் நாங்கள் மனப்பூர்வமாக வெறுக்கிருேம். ஆயினும் எங்கள் செயல் மூலம் உங்களுக்குத் தடை எதுவும் ஏற்படுத்தியதில்லையே? அப்படியிருந்தும், நீங்கள் எவ்வளவு வெற்றி பெற்றிருக் கிறீர்கள்?''

''நீங்கள் அவர்களின் மதம் உண்மையானதென்று உபதேசிக்கிறீர்கள்.''

''ஆம்; ஏனெனில் மகத்தான உண்மையைச் சிறு குடுக்கைகளிலே அடைத்து வைக்கும் சக்தி எங்களுக்கு இல்லையென்று நாங்கள் நினைக்கிறோம். இஸ்லாம், தனது பக்தர்களின் தியாகத்தால் எப்படி உண்மையை நிலைநாட்டியதோ, வேதாந்திகள் தங்களின் தியாக ரத்தத்தால் எவ்விதம் தங்கள் கொள்கைகளை உறுதிப் படுத்தினார்களோ, அதே போலவே ஹிந்துக்களும், உங்கள் வாள்களுக்குக் கீழே சிரித்துக்கொண்டே கழுத்தைக் கொடுப்பதன்மூலம், ஹிந்து தர்மத்தின் உண்மையை நிலைநாட்டியிருக்கிறார்கள்.''

''ஹிந்து தர்மத்திற்கும் உண்மைக்கும்என்ன சம்பந்தம்? அவர்கள் கிழக்கு; நாம் மேற்கு. முற்றிலும் நேர் விரோதம்.''

''அவ்வளவு நேர் விரோதமிருந்தால், இன்று மாலையில் நடந்ததைப்போல் இந்த ஏழை விவசாயிகள் முஸ்லீம் மடத்திற்கு ஏன் மரியாதை செலுத்துகிறார்கள்? முஸல்மான்களிடத்திலே ஹிந்துத் தன்மையின் வாசனைகூட வீசக்கூடாதென்று நினைக்கிறீர்களா?''

''ஆம்; எதுவும் இருக்கக்கூடாது.''

''அப்படியானால், முதலில் நமது சுமங்கலி முஸ்லிம் பெண்களின் சிந்தூரப் பொட்டை அழித்துவிடச் செய்யுங்கள்.''

''அழித்துவிடச் செய்வோம்.''

''சிந்தூரத்தை அழித்துவிடச் செய்வீர்களா, அவர்கள் உடம்பிலே உயிர் இருக்கும் வரை? ஜும்மன்! நீ சொல். உன்னுடைய சலீமா இதை ஒப்புக் கொள்வாளா?''

''இல்லை, பாபா! மௌல்வி சாஹிப்பிற்கு விஷயம் தெரியாது. விதவைகள்தான் சிந்தூரத்தை அழிப்பார்கள்'' என்று பக்கத்திலே நின்ற ஜும்மன் சொன்னான்.

''மன்னிக்கவேண்டும் மௌல்வி சாஹிப்! ஸூபியர்களாகிய நாங்கள் சுல்தான்கள் கொடுத்த நிலத் துண்டிலோ, பணக்காரர்களின் தானத்திலோ வாழவில்லை. நாங்கள் கோவணமும், சிறு துண்டும் கட்டிக் கொண்டுதான் இங்கு வந்தோம். எங்களைக் கண்டு எந்த ஹிந்துவும் தங்கள் வாளை

உருவவில்லை. இந்த மடத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இது முதலிலே பௌத்த மடமாக இருந்தது. எங்கள் ஐந்து தலைமுறைகளுக்கு முந்திய குரு, ஒரு பௌத்த பிக்ஷுவின் சீடராயிருந்தார். போலி வேஷமல்ல. இந்த வேதாந்தக் கருத்துக்களே அவரைப் புகாராவிலிருந்து இழுத்து வந்தன. வேதாந்தக் கருத்துக்கள் எல்லா இடத்திலும் ஒரேமாதிரியே இருக்கின்றன. வெளியிலிருந்து வரும் சீடர்களை அவை வெறுப்பதில்லை. அவர்கள் பௌத்தர்களாயினும் சரி, ஹிந்துக்களாயினும் சரி, முஸல்மான்களாயினும் சரி, அந்தக் குருவிற்குப் பிறகு, இந்த மடம் முஸல்மான் என்று பெயர் வைத்துக்கொள்ளும் பக்கீர்களுக்குச் சொந்தமாயிற்று. நாங்கள் வேஷத்தை மாற்றுவதற்குத் தூண்டவில்லை. அன்பையே போதித்தோம். அதன் விளைவாக எந்தக் கிராமத்திலும் எங்களை வெறுப்பவர்கள் இல்லையென்பதை நீங்கள் அறிவீர்கள். பண்டிதர்களும்நிர்ப்பந்தமே செய்தார்கள். அதன் விளைவாகத்தான் ஜும்மனுடைய தந்தையும் பாட்டனும், 'ஹிந்து' என்ற பெயரை மாற்றி 'முஸ்லீம்' என்று பெயர் வைத்துக் கொள்ளவேண்டியது ஏற்பட்டது. அன்பின் பிணைப்புச் சக்தியை அவர்களும் உணரவில்லை. இன்று நீங்களும் உணரவில்லை. உணர்ந்திருந்தால், அவர்கள் வீட்டில் உங்களுக்கும் மரியாதை கிடைத்திருக்கும்.''

## 3

சித்திரை மாதம் முடிந்துவிட்டது. மரங்களிலெல்லாம் புதிய இலைகள் நிறைந்திருந்தன. இவ்வருடம் மாமரங்கள் நிறையக் காய்த்திருந்தமையால், அவற்றின் பழைய இலைகள் கூட உதிரவில்லை. மத்தியானத்தின் கடுமையான வெயிலிலே, அந்த மாமரத்தின் நிழலில் விவசாயிகள் கூடியிருந்தார்கள். நெல்லடிக்கும் களம் அங்கு செதுக்கிச் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. அப்பொழுது, அங்கு களைத்துப்போய் வந்த ஒரு வழிப் போக்கன் அந்தக் களத்திலே ஒரு மரத்தடியில் உட்கார்ந்தான். அவன் தோற்றத்திலிருந்து வெளியூர்க்காரன் என்று தெரிந்து கொண்ட மங்கள சௌதரி பக்கத்திலே வந்து,

''ராம்ராம், பாயி! இந்த வெயிலிலே நடந்து வருவது ரொம்பக் கஷ்டமான காரியம்.''

"ஆம்; ஆனால் நடக்க வேண்டியவர்கள், வெயிலையும் நிழலையும் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?"

"நாக்கு உலர்ந்துபோய் இருப்பதுபோல் தெரிகிறது. கொஞ்சம் தண்ணீர் குடியுங்கள், இந்தப் பானையில் குளிர்ந்த தண்ணீர் இருக்கிறது."

"நீங்கள் எந்தக் குலம்?"

"அஹிர் குலம். என் பெயர் மங்கள செளதரி."

"செளதரி! என்னிடம் லோட்டவும் கயிறும் இருக்கின்றன. நான் பிராமணன். கிணறு இருக்கும் இடத்தைத் தெரிவித்தால் போதும்."

"நீங்கள் சொன்னால் என் மகனை அனுப்பித் தண்ணீர் கொண்டுவரச் செய்கிறேன் பண்டிட்ஜீ!"

"நல்லது; கொண்டுவரச் செய்யுங்கள். நானும் களைத்திருக்கிறேன்."

மங்கள செளதரி தன் மகன் கீசாவைக் கூப்பிட்டு கிணற்றிலிருந்து புதிய நீரும், ஒரு துண்டு வெல்லமும் கொண்டு வரும்படி கூறினான். வழிப்போக்கன் டெல்லி அங்கிருந்து இருபது கோச தூரத்தில் இருக்கிறதென்றும், இன்றே அங்கு போய்ச் சேர முடியாதென்றும், அவர்களிடம் கேட்டு தெரிந்துக்கொண்டான். மங்கள செளதரி எப்பொழுதும் வேடிக்கையாகப் பேசும் சுபாவமுடையவன். அவனுக்கு மிகக் கஷ்டமான காரியம் வாய்மூடி மௌனியாயிருப்பதுதான். மறுபடியும் பேச்சைத் தொடங்கினான்.

"கடவுளின் கிருபையினால், எங்களுக்கு இவ்வருடம் நல்ல விளைவு. வைகாசி மாதத்தில் இந்தக் களங்களைக் காலி செய்வது சிரமமான வேலையாயிருக்கும். பண்டிட்ஜீ! உங்கள் கிராமங்களிலே விளைவு எப்படி?"

"விளைவு பாதகமில்லை."

"அரசன் நல்லவனாயிருந்தால், தேவதைகளுக்கும் சந்தோஷம் ஏற்படுகிறது பண்டிட்ஜீ! நமது புதிய சுல்தான் சிம்மாசனம் ஏறியது முதல், பிரஜைகளும் சந்தோஷமாயிருக்கிறார்கள்."

''அப்படி என்ன விஷயம் சௌதரி?''

''இந்தக் களத்தையே பாரேன்! எவ்வளவு நிறைந்திருக்கிறதென்று. இரண்டு வருடங்களுக்கு முன்னல் வந்திருந்தால், இதில் நான்கிலொரு பங்குகூடப் பார்த்திருக்க முடியாது.''

''நிலம் செழிப்படைந்து விட்டது சௌதரி.''

''ஆம்; செழுமையடைந்துவிட்டது. ஆனல், சுல்தானுடைய நல்லெண்ணத்தின் தயவு பண்டிட்ஜீ! முன்னுள் விவசாயிகளாகிய நாங்கள் பட்டினியாயும், பசியுடனும் உழைத்தோம்—உணவும் உடையுமின்றித் தவித்தோம். நிர்வாகிகள் பட்டாடைகள் உடுத்திக் குதிரைச் சவாரி செய்தார்கள். கோதுமைப் பயிர்கள் சரியாகத் தலைகூட நிமிர்ந்திருக்காது. அதற்குள் அவர்களுடைய குதிரைகள் வந்து மேயத் தொடங்கிவிடும். யார் கேட்பது? இந்தப் பட்டிக்காட்டிற்கு அவர்களேதானே சுல்தான்கள்.''

இந்தச் சமயத்தில், மங்கள சௌதரியைப்போல முழங்கால்வரை வேட்டியும், உடம்பிலே அழுக்குச் சட்டையும் தலையில் ஒரு வெள்ளைத் தொப்பியும் தரித்த மற்றெரு சௌதரி வந்து பேச்சிலே கலந்து கொண்டான்.

''அதுமட்டுமா? இப்பொழுது அவர்களுடைய தடபுடல்களெல்லாம் எங்கே போய்விட்டன? உழக்குத் தானியத்திற்கும் நம்முடைய முகத்தைப் பார்க்கிருர்கள். அந்தப் பிராமணனுடைய பெயரென்ன சௌதரி?''

''சிப்பா?''

''இப்பொழுது தானே சிப்பா என்று சொல்கிருய். அந்தக் காலத்தில் பண்டிட் சிவராம் என்றல்லவா சொல்ல வேண்டும். அவன் என்னிடம் வந்து, ''சௌதரி சேதாராம்! இரண்டு மணங்கு கோதுமைகொடு. கையில் பணம் கிடைத்ததும் விலையைத் தந்துவிடுகிறேன்'' என்று கேட்பான். முகத்திற்கு முன்னல் இல்லையென்று சொல்வது கஷ்டம். ஆனல், அந்தப் பிராமணனுடைய பழைய நடவடிக்கைகள் யாவும் எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. மரியாதையாகக்கூடப் பேசமாட்டான். அடாபுடா என்ற அதிகாரத் தொனியைத் தவிர வேறு ஒன்றும் அவன் வாயிலிருந்து வராது.''

''ஆனல் இப்போது, நீ சௌதரி சேதாராம்; நான் சௌதரி மங்கள்ராம். 'மங்கே', 'சித்தே' என்பதெல்லாம் போய்விட்டது. இரண்டரை வருடத்திற்குள் எவ்வளவு பெரிய மாற்றம்!''

''இவையெல்லாம் சுல்தானின் தயவு. இல்லையெனில் சித்தேயாகவும், மங்கேயாகவுமே இருப்போம்.''

''இதைத்தான் இந்தப் பண்டிட்ஜீக்கு நான் சொல்லிக் கொண்டிருந்தேன்.''

''நம்முடைய இந்தப் பஞ்சாயத்தும் திரும்பி வந்திருக்காது. நமக்கு நல்ல நாளும் ஏற்பட்டிருக்காது.''

''சௌதரி மங்கள்ராம்! உனக்குப் பேனவைப் பிடிக்கக் கூடத் தெரியாது. அப்படியிருந்தும் நீ பஞ்சாயத்து அங்கத்தினனுக ஆகிவிட்டாய். காரியங்களை எப்படி நடத்திச் செல்கிருய்? நிர்வாகிகள் நிர்வாகிகள்தான். அந்தப் பனியாக்கள் இருந்தார்களே, அவர்கள் ஒரு ரூபாய்க்கு இரண்டு ரூபாய் உறிஞ்சிக்கொண்டு போய்விடுவார்கள். ஆடி மாதம் முடிவதற்குள்ளேயே, வீட்டில் பானைகளை எலி உருட்டத் தொடங்கிவிடும்—அடுப்பும் புகையாது.''

''அதனல்தான், நம் சுல்தான் ஆயிரம் வருடம் வாழ வேண்டுமென்று நாம் விரும்புகிறேம்.''

வழிப் போக்கனுன பிராமணன், இந்த முட்டாள் விவசாயிகளின் புகழுரைகளைக் கேட்டுக் கேட்டுப் புழுங்கிக் கொண்டிருந்தான். சிறிது வெல்லத்தைத் தின்று தண்ணீரைக் குடித்த பிறகு தான் ஏதாவது பேசுவதற்குச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். இந்தச் சௌதரிகளின் பேச்சு முடிவடையாது என்று தோன்றவே, மத்தியிலேயே பேசத் தொடங்கினன்.

''சுல்தான் அல்லாஉதீன் உங்களுக்குப் பஞ்சாயத்தைக் கொடுத்தார்...''

''ஆம் பண்டிட்ஜீ! உங்கள் வாயிலே சர்க்கரை போட வேண்டும். ஆனல் பண்டிட்ஜீ! யாரோ நம்முடைய சுல்தானுக்கு ''அலாபதீன்'' (லாபமில்லாதவன்) என்று பெயர் வைத்து விட்டார்கள். ஆனல் நாங்கள் எங்கள் கிராமத்தில் அவரை 'லாபதீன்' (லாபகரமானவன்) என்று தான் அழைக்கிறேம்.''

''சௌதரி! நீ எந்தப் பெயர் வேண்டுமானாலும் வைத்துக் கொள். ஆனால், சுல்தான் ஹிந்துக்களுக்கு எவ்வளவு கொடுமைகள் செய்கிறான் என்பது உனக்குத் தெரியுமா?''

''எங்கள் அஹிர் பெண்கள் மேல்போர்வை கூடப் போர்த்தாமல்தான் திரிகிறார்கள். இரவும், பகலும் வயல்களிலேதான் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களை யாரும் தூக்கிக்கொண்டு போகவில்லையே?''

''மரியாதை உள்ள குடும்பங்களில் மரியாதையை அழிக்கிறார்கள்.''

''அப்படியானால் பண்டிட்ஜீ! நாங்கள் மரியாதை இல்லாதவர்களா? அப்படி எங்களைவிடப் பெரிய மரியாதை உள்ளவர்கள் யார்?''

''நீ சண்டைக்குக் கிளம்பிவிட்டாய், சௌதரி மங்கள்ராம்!''

''ஆனால், பண்டிட்ஜீ! எங்கள் பஞ்சாயத்துத் திரும்பி வந்த உடனேயே எங்கள் கௌரவமும் திரும்பி வந்துவிட்டது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும், நிர்வாகிகளும், கிராமத் தலைவர்களும் எப்படி மரியாதை உள்ளவர்கள் ஆனார்கள் என்பதும் எங்களுக்குத் தெரியும். ஹிந்து என்றும் முஸ்லீம் என்றும் வேற்றுமை பேசுகிறீர்கள். முஸ்லீமாயிருந்தாலும், ஹிந்துவாக இருந்தாலும் அவர்கள் நிர்வாகப் பதவிக்கு வந்தவுடன், அவர்கள் ஒரே இனத்தவர்களாகவே ஆகிவிடுகிறார்கள். அதிலும் பெரும்பாலோர் ஹிந்துக்களே.''

அதிலே விட்டுப் போன ஏதோ குறையை நிரப்புவது போல் சேதாராம் தலையிட்டான்.

''ஹிந்து—முஸ்லீம் இருவரும் தனித்தனிதான் என்று நமக்குச் சொல்கிறார்கள். ஆனால், மங்கள்ராம்! தங்களை ஹிந்துப் பிராமணர்கள் என்று சொல்லிக்கொள்ளும் இவர்கள், தங்கள் வீட்டுப் பெண்களுக்கு ஏழு படுதாக்களைப் போட்டு மூடி, பேகங்களாக ஆக்கிக் கொண்டிருக்கிறார்கள்.''

''ஆம்; சௌதரி! கானோஜிலும், டெல்லியிலும், மகாராணிகள் திறந்த முகத்தோடு குதிரைகளில் ஏறிச் சவாரி

செய்வதைப் பார்த்திருப்பதாக என் தாத்தா சொல்லுவார்.''

''அந்தக் காலத்தில், நம்முடைய மரியாதையைக் கொள்ளையடிக்கும் முஸல்மான்கள் யாரும் இல்லை'' என்றார் பிராமணன்.

''இன்றுகூட நம்முடைய மரியாதை வயலிலும், வரப்பிலும் பகிரங்கமாகச் சுற்றித் திரிகிறது. அதை யாரும் தூக்கிச் செல்லவில்லையே?''

''இந்தப் பிராமணன் சிப்பாவினுடைய அதிகாரம் செல்லுபடியாகி இருந்தால், திருடிச் செல்வதும் நடக்கும் சௌதரி மங்கள்ராம்!''

''உழைக்காமல் சாப்பிடுபவர்கள் பிறருடைய மரியாதையைத் திருடுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? இது ஹிந்து—முஸ்லீம் பிரச்னையல்ல பண்டிட்ஜு! உழைப்பைத் திருடுபவர்களின் வேலை. நாங்கள் பக்கா ஹிந்துக்கள்; எங்கள் பெண்கள் ஏழு படுதாக்களைப் போட்டு மூடிக் கொண்டிருக்கவில்லை.''

இந்தத் தாக்குதல்களுக்கு மத்தியில் மறுபடியும் ஒரு முறை துணிந்து பிராமணன் பேசத் தொடங்கினான்.

''சௌதரி! சுல்தானின் சேனாதிபதி மல்லிக்கபூர் தெற்கே போய் நம்முடைய கோவில்களை உடைத்தான், தெய்வச் சிலைகளைக் காலிலே போட்டு மிதித்தான் என்பதெல்லாம் உனக்குத் தெரியுமா?''

''இந்தக் கதை எல்லாம் நான் நிறையக் கேட்டிருக்கிறேன். பண்டிட்ஜீ! ஒருமுறையல்ல; ஆயிரம்முறை முஸ்லீம்களுடைய ஆட்சியிலே ஹிந்து தர்மம் போய்விட்டதென்று கூச்சல். ஆனால், நாங்கள் டெல்லிக்கு மிகச் சமீபத்திலே இருக்கிறோம். இல்லாவிடில், நாங்களும் இந்தக் கதைகளை நம்பிவிடுவோம். இந்த இருபது கோச தூரத்திற்குள் ஒரு கோவிலும் உடைக்கப்படவில்லை—எந்தத் தெய்வச் சிலையும் அவமானப்படுத்தப்படவில்லை.''

''ஆம், இது முற்றிலும் பொய் சௌதரி மங்கள்ராம்! நீதான் என்னைவிட அதிகமாக டெல்லிக்குப் போய் வருகிறாயே; நான் தசரா பார்ப்பதற்காக டெல்லிக்குப் போயிருந்தேன். அது எவ்வளவு பெரிய கூட்டம். அதிலே

பாதிக்கு மேல் பெண்கள். ஹிந்துக்களின் திருவிழா, ஹிந்துக்களின் கூட்டம், ஹிந்து தெய்வங்களை அலங்கரித்து, சுல்தானின் மாளிகை வாசலின் முன்னே சங்கும் மேளமும் முழங்க எடுத்துச் சென்றார்கள்.''

''ஆம்; சேதாராம்! சேட் நிகாமலின் மாளிகைக்குப் பக்கத்திலேயே ஒரு பெரிய கோவில் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். எத்தனை லட்ச ரூபாய் செலவாகுமோ தெரியாது. சுல்தான் கோவில்களை இடிப்பதாயிருந்தால் தன் கண் முன்னாலேயே இவ்வளவு பெரிய கோவில் எழும்புவதை ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறார்?''

''ஆம் மங்கள்ராம்! ராஜாவுக்கும் ராஜாவுக்கும் சண்டை ஏற்படுகிறது. சண்டையிலே யார் சாகிறார்கள்? யார் பிழைக்கிறார்கள்? என்றெல்லாம் யார் கவனிக்கிறார்கள்? முன்பெல்லாம், நமக்கு அக்கம் பக்கத்திலேகூட இந்த மாதிரிச் சண்டையும் கொலையும் நடந்து கொண்டிருந்தன. இப்பொழுது அந்த மாதிரி வார்த்தைகள்கூடக் காதில் விழுவதில்லையே?''

''அன்று நாம் அரசாங்க உத்தியோகஸ்தரைப் பார்க்கப் போயிருந்தோமே, அவர் சொன்னது உனக்கு நினைவிருக்கிறதா? முந்திய சுல்தான்களெல்லாம் இந்த நாட்டைப் பறவைக்கூடாகவே கருதினார்கள். இப்பொழுதைய நமது சுல்தான் 'லாபதீன்' இதைத் தன் வீடாகவே கருதி, சுக துக்கங்களிலும் நம்முடன் கலந்து கொண்டு வாழ விரும்புகிறார்: ஆகையால், பிரஜைகளைச் சுரண்ட மாட்டார்; அவர்களுடைய சுகவாழ்வையே கவனிப்பார் என்று சொன்னாரல்லவா!''

''ஆம்; அவர் சொல்லியபடியே இப்பொழுது எல்லாப் பக்கத்திலும் ஜனங்கள் சுகமாக இருக்கிறார்கள்.''

## 4

டெல்லிக்கு வெளியே அமைதி நிறைந்த கபர்ஸ்தான் (சமாதி). அதன் பக்கத்திலே சில புளிய மரங்களும் வேப்ப மரங்களும் நிற்கின்றன. மார்கழி மாத இரவு குளிர் நிறைந்திருக்கிறது. எரிந்து கொண்டிருக்கும் நெருப்புக்குப் பக்கத்

திலே, இரண்டு பக்கிரிகள் உட்கார்ந்து கொண்டிருக்கிருர்கள்; அவர்களில் ஒருவர் நமக்கு அறிமுகமான பாபா நூர்தின்; மற்ருெரு பக்கிரி தனது வெள்ளைத்தாடியையும் மீசையையும் தடவித் கோண்டே,

''பாபா! இந்த ஐந்து வருடங்களுக்குள் எவ்வளவு பெரிய மாற்றம்? பசுமை நிலங்களிலே பால் நதி ஓடத் தொடங்கிவிட்டது.''

''சரியாகச் சொன்னீர்கள் பாபா ஞானதீன்! இப்பொழுது விவசாயிகளின் முகங்கள் பசுமையும், செழுமையும் பெற்றுத் திகழ்கின்றன.''

''ஆம்; நிலங்கள் செழிக்கும்போது விவசாயிகளின் முகங்களும் செழிப்படைகின்றன.''

''நிர்வாகிகளும், கிராமத் தலைவர்களும் போய்விட்டார்கள். இந்த வியாரிகளும், லேவாதேவிக்காரர்களும் ஒழிந்துவிட்டால் மகிழ்ச்சி சங்கு எங்கும் ஒலிக்கும்.''

''அதிகமாகக் கொள்ளையடிக்கிருர்கள். அந்தக்கொள்ளையிலிருந்துதான் பெரிய பெரிய கோவில்களும், சத்திரங்களும் மடங்களும் நடைபெறுகின்றன.''

''பணக்காரர்கள் இல்லாவிட்டால் தான தருமங்களும் நடை பெருது என்று சொல்கிருர்கள். உண்மையில் பணக்காரர்கள் இருக்கும்வரை அதர்மத்தின் தட்டு நிறைந்து கொண்டே போகும்.''

''ஞானி பைகம்பர் (முஸ்லீம் கடவுள் தூதர்), மகரிஷி முனிவர்கள், இவர்களைவிடச் சிறந்த தர்மவான்கள் யார் இருக்க முடியும்? இவர்களில் யாரும் பணக்காரர்கள் இல்லையே? ஒரு துண்டு உடுத்தி மறுநாள் உணவுக்கின்றித் தானே வாழ்கிருர்கள்?''

''ஏழைகளின் வருமானத்தைச் சுரண்டி வாழும் பணக்காரர்களும், அரசர்களும் இருக்கும்வரை, மனிதரிடையே சகோதரத்துவம் ஏற்பட முடியாது. மனிதனுக்கும்—மனிதனுக்கும் வேற்றுமை உண்டாக்குவது இந்த ஒன்று சேரும் பணம்தான். ஆனல் தொழிலாளர்களைச் சுரண்டாவிட்டால் அவர்களுடைய ஆடம்பரமும் சுகவாழ்வும் எப்படி நடைபெறும்?''

''இந்த விஷப் பற்களெல்லாம் பிடுங்கப்பட்டு, பூமியிலே அன்பின் ராஜ்யம் ஏற்படும் அந்த நாளைப்பற்றி நம்பிக்கை வைப்போம் நண்ப!''

# சுரையா

**காலம்: கி. பி. 1600**

மண் கலந்த மழை நீர் நாலா பக்கமும் பரவி ஓடிக் கொண்டிருந்தது. சம பூமியிலே ஓடிய நீர், பள்ளங்களிலே விழுந்து சிறிய சிறிய கால்வாய்களின், உருப்பெற்று, அவைகள் ஒன்று சேரும்போது, அகண்ட மலைநதிகள்போல் காட்சியளித்தன. மரங்கள் தன்னுள்ளே கவர்ந்து வைத்திருந்த மழை நீரை, பெரிய பெரிய துளிகளாக உதிர்த்துக் கொண்டிருந்தன; மழை நின்று விட்டாலும், தூவானம் தூறிக்கொண்டே இருந்தது. ஒரு வன்னிமரத்தின் கீழே வெண்ணிற யுவதி ஒருத்தி நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய தலைமீது கிடந்த வெள்ளைப்போர்வை நன்றாக நனைந்துவிட்டது. அதன்கீழே, இரண்டாகப் பிரிக்கப்பட்டிருந்த கருங்கூந்தலின் மத்திய ரேகையில் ஹிமாலயத்தைக் கிழித்துக் கொண்டோடும் கங்கையைப் போல் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. காதிலே வந்து படிந்திருந்த மயிர்க் கற்றையிலிருந்து, நீர்த்துளிகள் சொட்டிக் கொண்டிருந்தன. பனியைப் போன்ற வெளுமையான முகத்திலே இரண்டு பெரிய கறுப்புக் கண்கள் ஏதோ ஒரு பொருளைத் தேடி அலைந்துகொண்டிருந்தன. அவளுடைய முழங்கால் வரை தொங்கும் பட்டுச் சட்டை நனைந்து நெஞ்சோடு ஒட்டிப்போய்விட்டது. அதற்குள்ளே சிவப்புப் பட்டினால் கட்டப்பட்டிருந்த இளங் குரும்பை போன்ற ஸ்தனங்கள், நனைந்த சட்டைக்குமேல் அழகாகக் காட்சியளித்துக்கொண்டிருந்தன. அவளுடைய நீண்ட பைஜாமாவும் காலோடு காலாய் ஒட்டியிருந்தது. செம்மண் நீரிலே நனைந்து, அவளுடையவெள்ளைச் செருப்புக்கள் நிறம்மாறிப்போயிருந்தன. தண்ணீரிலே ஊறிப்போன அந்தச் செருப்புகள், நடப்பதற்கும் உபயோகமற்றதாய் இருந்தன.

அந்த யுவதியை நோக்கி ஒரு வாலிபன் வந்துகொண்டிருந்தான். அவனுடைய குஞ்சம் வைத்த தலைப்பாகையும் சட்டையும், பைஜாமாவும்கூட வெண்ணிறமானவையே. அவனும் மழையிலே நன்றாக நனைந்து போயிருந்தான். அவன்

நெருங்கி வருமளவும், அவனை யுவதி கவனிக்கவில்லை. அவனும் ஓசையின்றி மெதுவாக நடந்துவந்து அவளுக்குப் பக்கத்திலே நின்றுகொண்டான். அவள் திரும்பிப் பார்ப்பாள் என்று கருதி யுகங்களைப் போன்ற எத்தனையோ விநாடிகளைக் கழித்துவிட்டான். அவள் தலைமயிரிலிருந்து புருவங்களில் சொட்டும் நீர்த்துளிகளைக்கூடத் துடைக்காமல், எங்கோ கவனமாய் நின்றுள். இனியும் காத்திருக்கச் சக்தியற்றவனுய், வாலிபன் அவள் தோள்மீது மெதுவாக கையை வைத்தான். எங்கோ தூரத்திலே போயிருந்த அவளுடைய கவனம் உடனே திரும்பிற்று. அந்த இரண்டு பெரிய கண்களிலும் பிரகாசம் தோன்றியது. இயற்கையிலேயே சிவந்திருந்த அவளுடைய உதடுகளிலே புன்முறுவல் தவழ்ந்தது. மெதுவாக விரிந்த உதடுகளுக்கு மத்தியில் வெண் பற்களின் பிரகாசமயமான ரேகை தோன்றிற்று. அவள் வாலிபனின் கையைப் பிடித்துக்கொண்டு,

''கமல்! நீ நீண்ட நேரமாக நின்றுகொண்டிருக்கிருயா?''

''யுகக் கணக்காக என்று தோன்றுகிறது; பிர்மா சிருஷ்டித் தொழிலைத் தொடங்கியது முதல், இந்தப் பூமி இத்தனை இறுகிப் போயிருக்காமல் 'கொள கொளப்பா'யிருந்ததே—தாவரங்களையும், உயிர்ப் பிராணிகளையும் தாங்கிக் கொண்டிருப்பதாய் எனக்குத் தோன்றுகிறது.''

''போகட்டும் கமல்! எப்பொழுது பார்த்தாலும் நீ கவிதை செய்துகொணடேயிருக்கிருய்.''

''சுரையா! உன் வாக்கு உண்மையானல் எவ்வளவோ நல்லது. ஆனுல், என் அதிர்ஷ்டத்திலேயே கவிதாதேவி குடியேறவில்லை.''

''சுரையா மற்ற எந்தப் பெண்ணையும் தன்னேடு வைத்துக்கொள்ள விரும்பமாட்டாள்.''

''என் மனமும் அப்படித்தான் சொல்கிறது. ஆனுல், மனம் லயித்து நீ எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தாய் சுரையா?''

''ரொம்ப தூரத்தைப்பற்றி யோசித்துக்கொண்டிருந்தேன்—ரொம்ப தூரம்!—சமுத்திரம் எவ்வளவு தூரம் இருக்கும் கமல்?''

''நமக்கு மிகச் சமீபத்திலிருப்பது சூரத். அதுவும் ஒரு மாதப் பயணம்.''

''இந்தத் தண்ணீர் எல்லாம் எங்கே போகின்றன?''

''வங்காளத்தை நோக்கி. அது இன்னும் அதிகத்தூரம்; இரண்டு மாதப் பயணம் இருக்கலாம்.''

''பாவம், இந்த மண் கலந்த தண்ணீர் அவ்வளவு தூரம் பிரயாணம செய்யவேண்டுமா? நீ சமுத்திரத்தைப் பார்த் திருக்கிருயா கமல்?''

''தந்தையாரோடு கூட ஒரிஸாவிற்குப் போயிருந்தேன். அப்பொழுது பார்த்தேன்.''

''எப்படியிருக்கும் கமல்?''

''எதிரே ஆகாயம்வரை பரந்திருக்கும் கரிய நிறம். கரையிலே அலேமோதும், பெரிய பள்ளமாகக் காட்சி யளிக்கும்.''

''இந்தத் தண்ணீரின் விதி, அந்தச் சமுத்திரத்திலே போய் விழும்படி இருக்கிறது. அங்கும் இதனுடைய இந்த மண்நிறம் அப்படியே இருக்குமா?''

''இல்லே அன்பே! அங்கே ஒரே ஒரு நிறந்தான் உண்டு. அது இருண்ட நீலம் அல்லது கறுப்பு.''

''நீ காட்ட விரும்பினல், நான் என்ருவது ஒருநாள் சமுத்திரம் போய்ப் பார்ப்பேன்.''

''இந்தத் தண்ணீரோடு கூடவே புறப்படத் தயாராக யிருக்கிறேன். உன் உத்திரவுதான் வேண்டும் அன்பே?''

சுரையா, கமலனின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். ஈரம் படிந்த இருவரது முகமும் ஒன்ருேடொன்று உர சிற்று. கமலனின் ஆவல் நிறைந்த கண்களேப் பார்த்துக் கொண்டே சுரையா,

''நாம் சமுத்திரத்தைப் போய்ப் பார்க்க வேண்டும்; ஆனல் இந்தத் தண்ணீரோடல்ல.''

''இந்த மண் நிறத் தண்ணீரோடில்லேயா அன்பே?''

''மண் நிறம் என்று சொல்லாதே கமல்! இது ஆகா யத்திலிருந்து விழுந்தபோது, இப்படி மண் கலந்த அழுக் காகவா இருந்தது?''

''இல்லை. அந்தச் சமயத்தில் இதனுடைய பரிசுத்தம், சூரியனையும் சந்திரனையும்விட அதிகமாயிருந்தது. உன்னுடைய சுருட்டை மயிர் கற்றைகளை, இவைகள் எவ்வளவு பிரகாசிக்கச் செய்கின்றன? பால் நிலவு போன்ற உனது வெண்ணிறக் கன்னங்களை, இந்த நீர்த்துளிகள் எவ்வளவு கவர்ச்சியுடையதாய் ஆக்கிவிட்டன! ஆகாயத்திலிருந்து நேராக எங்கெல்லாம் விழுந்ததோ, அங்கெல்லாம் உனது அழகை அதிகரிக்கச் செய்கின்றன.''

''ஆம், இந்த மண் நிறம் இதற்கு இயற்கையானதல்ல, அது கூட்டுறவால் ஏற்பட்டது. அந்தக் கூட்டுறவுதான், இந்த நீர் கடலில் கலப்பதையும் பல சமயங்களில் தடுக்கிறது. நேராகக் கடலிலே விழும் மழைத் துளிகளுக்கு இந்த மண் நிறம் உண்டா, கமல்?''

''இல்லை அன்பே.''

''ஆகையால், நான் இந்த மண் நிறத்தைக் குறை சொல்ல விரும்பவில்லை; அதற்குக் கிடைத்த ஒரு பாக்கியம் என்றே கருதுகிறேன். உன்னுடைய கருத்தென்ன கமல்?''

''சுரையா! எனது மனத்திலுள்ள கருத்துக்களைத்தான் உனது உதடுகள் சொல்லிக் கொண்டிருக்கின்றன.''

## 2

ஆகாயத்தின் நீல நிறம், ஆழமான தாமரைக் குளத்தின் நீரை இன்னும் அதிக நீலம் ஆக்கிக் கொண்டிருந்தது. அந்த நீல நிறத் தண்ணீரின் பகைப்புலனிலே குளத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த பளிங்குக் கல் படிக்கட்டுகளின் வெண்மை நிறம் அதிகரித்துத் தோன்றிற்று .அதைச் சுற்றிப் பச்சைக் கம்பளம் விரித்திருந்தது போன்ற பசும் புற்றரையின் மத்தியிலே கோபுரம் போன்று உயர்ந்த மரங்கள் வரிசை வரிசையாக நிற்கும் காட்சி-மிக அழகாயிருந்தது. முக்கியமாக இந்த வசந்த காலத்தின் மத்தியான வேளையிலே, மனதிற்கு மகிழ்ச்சியளித்துக் கொண்டிருந்தது. கொடி வீடுகளும் செயற்கை நீர் ஊற்றுக்களும் எங்கும் நிறைந்திருந்தன. இன்று வசந்தோற்சவத்திற்காக, இந்த அரச உத்யானவனம் யுவர்களுக்கும்—யுவதிகளுக்கும் தடையின்றித் திறந்துவிடப்பட்டிருக்கிறது. அந்த மகிழ்ச்சி

நிறைந்த கும்பல், சுவர்க்க வாசிகளைப்போல் எங்கும் உலாவிக்கொண்டிருக்கிறார்கள்.

அந்தத் தோட்டத்தின் ஒரு மூலையிலே, குளத்திற்கு அதிக தூரத்தில் சிவப்புக் கற்களால் கட்டப்பட்டிருந்த காவல் வீட்டிற்கு வெளியே, நான்கு மனிதர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள்; நால்வரும் ஒரே மாதிரி சிறிது முன்னால் நீண்ட தலைப்பாகையும், முழங்கால்வரை தொங் கும் அழகிய வேலைப்பாடுகள் செய்த அங்கியும், வெள்ளைநிற இடைக் கச்சையும் அணிந்திருக்கிறார்கள். நால்வருடைய மீசையும் பெரும்பகுதி நரைத்துவிட்டது. அவர்கள் சிறிது நேரம் அங்கே நின்று, தோட்டத்தில் நிகழ்வதைப் பார்த் துக் கொண்டிருந்தனர். அப்பால், காவல் கூடத்திலே விவரிக்கப்பட்டிருந்த மெத்தைகளிலே போய் உட்கார்ந்தார் கள். எங்கும் நிசப்தம் நிலவியது. இந்த நான்கு கிழவர் களையும் தவிர, அங்கு வேறு யாரும் இல்லை. மௌனத்தைக் கலைத்து ஒருவர் பேசத் தொடங்கினார்:

''பாதுஷா ஸலாமத்......''

''என்ன பஜல்! இப்பொழுதும் நாம் தர்பாரிலா உட் கார்ந்து கொண்டிருக்கிறோம்? மனிதர்கள், எந்த இடத்தி லும் சாதாரண மனிதர்களாக நடந்துகொள்ள முடியாதா?''

''மறந்து போய்விடுகிறது...''

''ஜலால் அல்லது அக்பர் என்று கூப்பிடு, இல்லாவிட் டால் நண்ப என்று சொல்.''

''எவ்வளவ கஷ்டமான காரியம் நண்ப ஜலால். நாம் இரண்டுவித வாழ்க்கையை நடத்தவேண்டிய நிர்ப்பந்தத் தில் இருக்கிறோம்.''

''இரண்டுவிதமல்ல! நான்குவித வாழ்க்கை என்று சொல்லு பஜல்!''

''பீரு! நான் உன்னைப் பாராட்டாமல் இருக்கமுடியாது. நீ எந்த நேரத்திலும், எந்த வாழ்க்கைக்கும் தயாராய் இருக் கிறாய். நாங்கள் ஓர் உலகத்திலிருந்து மற்றோர் உலகத் திற்கு வந்தால், எங்கள் ஞாபக சக்தியைச் சரிப்படுத்துவ தற்கே நீண்ட நேரம் ஆகிவிடுகிறது. என்ன தோடு! நான் சொல்வது சரிதானே?''

''ஆம்; எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது பஜலு! இந்தப் பீருவுக்கு இவ்வளவு பெரிய மூளை எங்கிருந்து கிடைத்தது? அதற்காக இவன் என்ன செய்தான்?''

''பாரதத்தின் நிலப்பரப்பெங்கும் பலத்தின் சக்தியை உணர்த்தியவனென்று, வீரபல்லைத்தானே உலகம் சொல்லு கிறது!''

''ஆனால், பீரு; தோடர்மல்லும்கூட எல்லா இடத் திலும் தடியைச் சுழற்றவில்லையே?''

''சுழற்றினரோ இல்லையோ! உலகம் அப்படித்தான் சொல்லுகிறது. மூளையின் பலத்தைப்பற்றி, நமது ஜலால் தீர்ப்புச் சொல்லுவார்.''

அக்பர்—''நிச்சயமாக. பாதுஷா ஜலால் உதீன் அக்பர், மாறுவேஷமிட்டுக் கிராமம் கிராமமாகச் சுற்றி வருவதைப் பற்றிப் பிரபலமடைந்துள்ள கதைகளில் இதுவும் இருக் கிறதா?''

வீரபல்—''நல்ல சமயத்தில் ஞாபகப்படுத்தினய் ஜலால். இந்தக் கதைகள் என்னையும் பிராணனை வாங்குகின்றன. வீரபல்லையும் அக்பரையும் இணைத்துக் கதை கட்டுவது இப்பொழுது எங்கும் நிகழும் சம்பவமாகிவிட்டது. இந்த மாதிரிக் கதைகள் பலவற்றை நான் சேகரித்து வருகிறேன். ஒரு கதைக்கு ஒரு பவுன்வீதம் கொடுத்துச் சேகரிக்கிறேன்.''

அக்பர்—''உன்னுடைய ஒரு பவுனுக்கு ஆசைப்பட்டு கதைகள் நேராக மூளையிலிருந்து உன்னிடமே வந்து சேர்ந்து விடாமலிருக்கட்டும்!''

வீரபல்—''இருக்கலாம். அதனல் நமக்கொன்றும் வித்தி யாசமில்லை. நம் இருவர் பெயராலும் என்னென்ன வேடிக்கைகள் கற்பனை செய்யப்படுகின்றன என்பதை அப் பொழுதும் தெரிந்து கொள்ளலாமல்லவா?''

அபுல்பஜல்—''நீ பவுன்களைக் கொடுத்து வாங்குவாய் என்பது எங்களுக்குத் தெரியும்.''

வீரபல்—''பஜலு! அந்தப் பேச்சை விடு, நான் சேட் சதாமிமல்லைப் போலக் கருமியல்ல.''

அபுல்பஜல்—''இல்லை பீரு! காரணமின்றி என் மீது கோபப்படாதே. உன்னுடைய கதைகளைக் கண்டு நான் ரொம்பப் பயப்படுகிறேன்.''

வீரபல்—''ஆம்; நான்தானே 'ஆயினே அக்பரி' (அக்பரின் வாழ்க்கை வரலாறு) போன்ற பெரிய ஏட்டுச் சுவடியை எழுதி வைத்திருக்கிறேன்.''

அபுல்பஜல்—''உன்னுடைய ஆயினே அக்பரை எத்தனை பேர் படிக்கிருர்கள்? வீரபலின் கதைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லுபவர் எத்தனை பேர்? நீயே நியாயமாகச் சொல் தோடர்மல்!''

தோடர்மல்—''அது வீரபலுக்கே தெரியும்.''

அபுல்பஜல்—''நல்லது பீரு! உன்னுடைய பவுன் கதைகளில் ஒன்றைச் சொல், கேட்போம்.''

வீரபல்—''நீங்கள் எல்லோரும் கூடி, இந்தக் கதைகள் பவுன் கொடுத்து வாங்கியதல்ல; என்மூளையிலிருந்து தோன்றியவை என்று முடிவு செய்து விட்டீர்களே!''

அக்பர்—''அது அசல் நாணயமா அல்லது போலி நாணயமா என்பதை, நீ காண்பிக்கு முன்னுல் நாங்கள் எப்படி முடிவு செய்யமுடியும்?''

வீரபல்—''என்னுடைய ஒவ்வொரு கதையிலும் முத்திரை இருக்கவே செய்கிறது. நல்லது, உங்கள் விருப்பப்படி இப்பொழுது ஒரு கதையைச் சொல்லுகிறேன். விஷயத்தை மட்டும் சுருக்கிச் சொல்லுகிறேன்.''

''அக்பருக்கு ஹிந்துவாக வேண்டுமென்று ஆசை ஏற்பட்டது. அவர் வீரபல்லிடம், அந்த ஆவலைச் சொன்னுர். வீரபலுக்கு ரொம்பச் சங்கடமாய்ப் போய்விட்டது. பாதுஷாவை மறுத்துச் சொல்லவும் முடியாது. ஹிந்துவாக்குவதும் நடக்கக்கூடிய காரியமல்ல. ஆறு, ஏழு, நாட்கள் ஒளிந்துகொண்டு இருந்தார். ஒரு நாள் அந்தி நேரத்தில், பாதுஷாவின் மாளிகையின் ஜன்னலுக்குப் பக்கத்தில் 'ஹிச்சோ, ஹி—ச்—சோ' என்ற சப்பதம் கேட்டது. ராஜ மாளிகைக்குப் பக்கத்தில், அதுவும் இந்த நேரத்திலே யாரும் துணி துவைக்கத் துணிய மாட்டார்கள். அது யாரென்று அறிய வேண்டுமென்ற ஆவல் பாதுஷாவிற்கு ஏற்பட்டது. உடனே ஒரு வேலைக்காரனின் உடையைத்தரித்துக்கொண்டு அவர் யமுனையின் கரையை அடைந்தார். என்ன மாறு வேடம் போட்டிருந்தாலும், வீரபலைக் கண்டுபிடிப்பது பாதுஷாவிற்குச் சிரமமான காரியமல்ல. வீரபல் அங்கே

கல்லின்மீது துணியைத் துவைத்துக் கொண்டிருக்கவில்லை. ஒரு முரட்டுக் கழுதையைப் பிடித்து, உவர் மண்ணையும் செங்கல்லையும் போட்டுத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந் தார். பாதுஷா தனது சிரிப்பை அடக்கிக் கொண்டு குரலை மாற்றி, ''என்னப்பா என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

''நீ உன் வேலையைப் பார். உனக்கென்ன வந்தது இதெல்லாம்.''

''நேரங்கெட்ட நேரத்தில், நடுங்கும் குளிரிலே நின்று கொண்டு என்னப்பா செய்கிறாய்.''

''சாகத்தான் வேண்டும்; வேறு என்னசெய்வது? நாளையே இதைக் குதிரையாக்கிப் பாதுஷாவிற்குக் கொடுக்க வேண்டும்.''

''கழுதையைக் குதிரையாக்கவா?''

''என்ன செய்வது? இதுதான் பாதுஷாவின் உத்தரவு.''

உடனே பாதுஷா சிரித்துவிட்டார். ''நல்லது வீரபல்! எனக்குப் புரிந்து விட்டது. முஸல்மானை ஹிந்துவாக்குவதும் கழுதையைக் குதிரையாக்குவதும் ஒன்றுதான்'' என்று கூறினார் என்று ஒரு கதை கேள்விப் பட்டேன்.''

''பஜலு! இந்தக் கதையைக்கேட்டதும் என் உடம்பிலே சர்ப்பம் தீண்டியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.''

அக்பர்—''நாம் வாழ்க்கையின் மாலைப் பொழுதிலே இந்தக் கதையைக் கேட்கிறோம். நமது வாழ்நாள் முழுவதும் செய்த முயற்சியின் பலன் இதுதானா?''

அபுல்பஜல்—''ஜலால்! நம்முடையதலைமுறைக்குத்தான் நாம் பொறுப்பேற்றுக் கொள்ள முடியும். நம்முடைய முயற்சியை வெற்றியாக்குவதும், தோல்வியாக்குவதும், இதோ தோட்டத்தில் வசந்தோற்சவம் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்களே, அவர்களுடைய இளம் கைகளிலே இருக்கிறது.''

தோடர்மல்—''ஆனால், நண்ப! நாம் முஸல்மான்களை ஹிந்துவாக்கவோ, ஹிந்துக்களை முஸல்மான்களாக்கவோ விரும்பவில்லையே.''

அபுல்பஜல்—''ஆம்; நாம் இருவரையும் ஒன்ருக்க விரும்பினேம். ஒரே ஜாதி, ஒரே சமுதாயத்தைச் சிருஷ்டிக்க ஆசைப்பட்டோம்.''

வீரபல்—''ஆனுல், முல்லாக்களும், பண்டிதர்களும் நம்மைப்போல் கருதுவதில்லை. நாம் பாரத நாட்டைப் பலமுடையதாகச் செய்ய விரும்புகிருேம். பாரத தேசத்திலே கத்தியின் பலமிருக்கிறது; அறிவின் பிரகாசமிருக்கிறது; வாலிபத்தின் தைரியம் இருக்கிறது; ஆனுல், ஒரு பெரிய குற்றம்—மிகப் பெரிய பலவீனமும் இருக்கிறது. அதுதான் துண்டு துண்டாகப் பிரிந்து கிடப்பது. பாரதத்தின் கத்திகள் தங்களுக்குள் ஒன்ருேடொன்று மோதிக்கொள்ளாமல் ஒன்று சேர்ந்துவிட்டால்!''

அக்பர்—''எனக்கு இந்த ஒரே ஓர் ஆசைதான் எனது அன்புள்ள தோழர்களே! இதற்காக நாம் எவ்வளவோ காலம் போராடி இருக்கிருேம். நாம் இந்த வேலையைத் தொடங்கிய காலத்தில், எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. ஆனுல், இப்பொழுது அந்த நிலைமை இல்லை. ஒரு தலைமுறையில் எவ்வளவு சாதிக்க முடியுமோ, அவ்வளவையும் செய்திருக்கிருேம். ஆயினும், உன்னுடைய இந்தக் கழுதை—குதிரை உபமானம் கல்லைப்போல் என்மனத்தில் உட்கார்ந்து விட்டது.''

அபுல்பஜல்—''ஜலால்! நாம் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது. உன் தந்தையாரின் காலத்தோடு இப்பொழுதைய நிலையை ஒப்பிட்டுப்பார். அந்தக் காலத்தில் ஜோதிபாய் உன் மனைவியாகி அரச மாளிகையிலே விஷ்ணுவின் சிலையைப் பூஜை செய்ய முடியுமா?''

அக்பர்—''வேற்றுமை இருக்கிறது பஜல்! ஆனுல், நாம் இன்னும் போக வேண்டிய தூரம் ரொம்ப இருக்கிறது. நான் ஒரு முறை, ஒரு பிரெஞ்சுப் பாதிரி மூலம், அவர்கள் நாட்டிலே சக்கரவர்த்திகூட ஒன்றிற்கு அதிகமான கல்யாணம் செய்து கொள்ளமுடியாது என்றுகேள்விப்பட்டேன். இந்தப் பழக்கம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. தோடர்? நீ என்னுடைய இளம் வயதிலே, இந்தக் கருத்தை என் வாயாலேயே கேள்விப்பட்டிருப்பாய். நான் அப்படி நடக்க முடிந்ததா? சக்கரவர்த்தி, தீமைகளைச் செய்வதற்கு எவ்வளவு உரிமை உடையவனுய் இருக்கிருனே, அவ்வளவு நன்மையைச் செய்வதற்கில்லை. இது எவ்வளவு வேடிக்கை?

என்னால் முடிந்திருந்தால், சலீமின் தாயாரைத் தவிர வேறு யாரையும் அந்தப்புரத்திற்குள் அனுமதித்திருக்க மாட்டேன். இன்று சலீமிற்காவது இந்த ஏற்பாட்டைச் செய்ய முடிந்தால்!''

வீரபல்—''ஜலால்! காதல் ஒருவரிடந்தான் ஏற்பட முடியும். அன்னப் பறவைகளின் அன்பு ஜோடியைக்காணும் பொழுதெல்லாம், அவைகளின் வாழ்க்கை, அழகும் அன்பும் பொருந்தியிருப்பதாக நான் கருதுவதுண்டு. மகிழ்ச்சியில் எப்படிச் சேர்ந்திருக்கின்றனவோ, அப்படியே ஆபத்திலும் பிரியாதிருக்கின்றன.''

அக்பர்—''நண்ப! என் ஆயுளில் ஒரே ஒரு முறைதான், என் கண்களிலே கண்ணீர் வந்தது. அன்று குஜராத்திலே சிங்க வேட்டையாடுவதற்காகப் போயிருந்தேன். யானையின் மீது ஏறிக்கொண்டு, துப்பாக்கிக் குண்டினால் சிங்கத்தைக் கொல்வது பெரிய வீரச்செயலல்ல என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். சிங்கத்தைப்போல நமக்கு நகங்களும், கோரப்பற்களும் கிடையாது. அதற்காக நாம் கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு போராடினால் சம பலமாயிருக்கலாம். அதற்கு மேல் வைத்துக் கொள்வது அதிகந்தான். ஆயினும், நான் துப்பாக்கியால் சிங்கத்தைச் சுட்டேன். குண்டு அதன் தலையிலே பட்டது; சிங்கம் அங்கேயே விழுந்துவிட்டது. அதே சமயத்தில் புதருக்குள்ளிருந்து ஒரு பெண் சிங்கம் பாய்ந்துவந்தது அது வெறுப்போடு என்னைப் பார்த்துவிட்டு, திரும்பி விழுந்து கிடந்த ஆண் சிங்கத்தின் கழுத்தை நக்கத் தொடங்கிற்று. நான் உடனே சுடுவதை நிறுத்தும்படி வேட்டைக்காரர்களுக்கு உத்தரவிட்டேன். அப்பொழுது என் மனத்தில் ஏற்பட்ட காயம் ஆறவேயில்லை. அந்தப் பெண் சிங்கம் என்மீது பாய்ந்து என்னைக் கொல்ல முயன்றிருந்தாலும், நான் தடுத்திருக்கவே மாட்டேன். அந்தச் சிங்கத்திற்கும் நம்மைப்போல் பல மனைவியர்கள் இருந்திருந்தால், இந்தப் பெண் சிங்கம் இந்த மாதிரி அன்போடு கழுத்தை நக்கிக் கொண்டிருக்குமா என்ற எண்ணம் தான், என் மனத்திலே தோன்றிற்று.''

அபுல்பஜல்—''நம் தேசம் முன்னேற வேண்டிய தூரம் அதிகமிருக்கிறது. ஆனால் நமது நடையோ மிக மெதுவாக இருக்கிறது. நமது கால்கள் நடக்கும் சக்தியை இழந்துவிட்டபிறகு, இந்தப்பாரத்தைத் தூக்கிச்சென்று சேர்ப்பவர்கள் யாரும் இருப்பார்களா என்பதும் நமக்குத் தெரியாது.''

அக்பர்—"வாளேந்தும் இந்த இரண்டு கைகளும் ஹிந்து—முஸ்லீம் இரண்டு ஜாதிகளின் ரத்தமும் ஒன்றாகக் கலக்க வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். இந்த இணைப்பைக் கருத்தில் கொண்டே, பிரயாகை—திரிவேணி சங்கமத்தில் கோட்டை கட்டினேன். அந்தக் கங்கையும் யமுனையும் கலக்கும் காட்சி, மனத்திலே ஹிந்து—முஸ்லீம் என்ற இரண்டு ஜாதிகளின் இணைப்பு எண்ணத்தைத் தோற்றுவித்தது. ஆனால் என்னுடைய ஆசை எவ்வளவு குறைவாக நிறைவேறியிருக்கிறது. உண்மையில் ஏழு தலைமுறையில் செய்ய-நடக்கக்கூடிய காரியத்தை, ஒரு தலைமுறையில் செய்ய—முடியாதுதான். ஆயினும், எனக்குக் கிடைத்துள்ள தோழர்களைப் பற்றி நான் கர்வப்படுகிறேன். இந்தமாதிரித் தோழர்களைப் பெறும் பாக்கியம் எல்லோருக்கும் சுலபமாகக் கிடைப்பதில்லை. ஒவ்வொரு வீட்டிலும் அக்பரும் ஜோதிபாயும் போன்ற ஜோடிகளைக் காண விரும்பினேன். மேஹருன்னிஸாவும்...அவளுக்கு ஜோடி என்றால் அடைய முடியவில்லை."

தோடர்மல்—"ஹிந்துக்கள் தகுதியற்றவர்கள் என்று நிரூபணமாகி விட்டது."

வீரபல்—"இப்பொழுது கழுதையைக் குதிரையாக்கும் கதை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஹிந்துவுக்கும்—முஸல்மானுக்கும் இவ்வளவு வேற்றுமை இருக்குமானால் குதிரை எப்படிக் கழுதை ஆகிறது? ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் முஸ்லீமாய் இருக்கிறார்களே!"

அக்பர்—"ஹிந்து வாலிபர்கள் தங்கள் மதத்தையும் பெயரை மாற்றாமலேயே, முஸ்லீம் யுவதிகளையும் மணந்து கொள்வதைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை நிறைவேறாமலேயே இருக்கிறது."

அபுல்பஜல்—"இப்பொழுது நான் ஒரு சந்தோஷ சமாச்சாரம் சொல்லப்போகிறேன் நண்ப ஜலால்! நம்மால் செய்து முடிக்கமுடியாத காரியத்தை, என் மகள் சுரையா செய்து முடித்திருக்கிறாள்."

எல்லோரும் ஆவலோடு அபுல்பஜலைப் பார்த்தார்கள். "மேலே விவரம் தெரிந்துகொள்ள ஆவலாயிருக்கிறீர்களா? கொஞ்சம் பொறுங்கள்" என்று கூறிவிட்டு, அபுல்பஜல் வெளியே போய் சிறிது நின்று பார்த்துவிட்டுத் திரும்பி

வந்து ''கேட்பதைவிடப் பார்ப்பதே நல்லது. என்னோடு வாருங்கள்'' என்று கூறி, எல்லோரையும் வெளியே அழைத்துச் சென்றார். காவல் கூடத்திற்கு வெளியே வந்ததும் தூரத்திலே அசோக மரத்தடியில் நின்ற இரண்டு வாலிப உருவங்களைச் சுட்டிக் காட்டி, ''அதோ பாருங்கள் எனது சுரையா'' என்றார். எல்லோரும் அத் திசையிலே நோக்கினார்கள். உடனே தோடர்மல், ''ஓ! என்னுடைய கமல்! நமது உலகம் இருட்டடைந்து விடவில்லை பஜல்!'' என்று கூறி, அபுல் பஜலை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டார். இரண்டு நண்பர்களும் விலகிய பொழுது அவர்களின் கண்கள் நனைந்திருந்தன.

அக்பர்—''எத்தனையோ வருட காலமாக இந்த வசந்தோற்சவம் நடைபெற்று வருகிறது. ஆனால், உண்மையான வசந்தோற்சவம் இன்றுதான் நடைபெறுகிறது. அவர்கள் இருவரையும் அழைத்து, அவர்களுடைய உச்சியிலே முத்தமிடவேண்டுமென்ற ஆசை எனக்குண்டாகிறது. அவர்களின் அந்தக் கங்கை—யமுனை—கலப்பை, நாம் மனப்பூர்வமாக வரவேற்கிறோம் என்று தெரிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள்.''

அபுல்பஜல்—''அவளுடைய இந்தக் காதலை, அவள் தாயும் தந்தையும் பெரிய மகிழ்ச்சிக்குரிய விஷயமென்று கருதுகிறார்களென்பது எனது சுரையாவுக்குத் தெரிந்திருக்க மாட்டாது.''

தோடர்மல்—''கமலுக்கும் தெரிந்திருக்க மாட்டாது. ஆனால் நீ ரொம்ப அதிருஷ்டக்காரன் பஜல்! சுரையாவின் தாயும் உன்னோடு ஒத்துழைப்பாள். கமலனின் தாயும், சுரையாவின் தாயும் நெருங்கிய தோழிகள். ஆயினும், கமலனின் தாய் கொஞ்சம் பழங்காலத்து ஆசாமி. அதைப் பற்றிப் பரவாயில்லை கமலனையும், சுரையாவையும் ஆசீர்வதிக்க நான் துடித்துக் கொண்டிருக்கிறேன்.''

அக்பர்—''அவர்களை முதலில் ஆசீர்வதிக்கும் உரிமை என்னைத்தான் சேர்ந்தது.

வீரபல்—''ஜலால்! என்னையும் உன்னோடு சேர்த்துக் கொள்ளமாட்டாயா?''

அக்பர்—''நிச்சயமாக, இப்படிப்பட்ட வண்ணான் வேறு எங்கிருந்து கிடைப்பான்.''

வீரபல்—"இந்த மாதிரிக் குதிரையாகக்கூடிய கழுதையும் வேறு எங்கே கிடைக்கும்?"

அக்பர்—"இன்று தினம் நமக்கு மிக மகிழ்ச்சியோடு கழிந்தது. இந்த மாதிரி, மாதத்தில் ஒரு நாளாவது கழிக்க முடியுமானல்...!"

# 3

மாடியிலே நான்கு புறங்களிலும் ஜன்னல்கள் அமைக்கப்பட்டு, அலங்கரிக்கப்பட்ட ஓர் அறை. ஜன்னல்களிலே வர்ணத்திரைகளும், பச்சைக்கொடிகளும் தொங்கிக்கொண்டிருக்கின்றன. அறையின் வாசலிலே இரட்டைப் படுதாக்கள் தொங்குகின்றன. அதில் உள்படுதா பட்டுத்துணியிலே பூ வேலே செய்யப்பட்டிருந்தது. தளத்திலே அழகிய பாரசீகக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. அறையின் மத்தியிலே வெள்ளே மெத்தைகளின் மீது பல தலையணைகள் கிடந்தன. மெத்தையின்மீது உட்கார்ந்துகொண்டு, இரண்டு யுவதிகள் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருத்தி நமக்குப் பரிச்சயமான சுரையா. சிவப்புப் பாவாடையும், பச்சைச் சட்டையும் அணிந்து நீலத்தாவணி போர்த்திருக்கும் மற்றெருத்தி, வீரபலின் பதின்மூன்று வயதுப் பெண் பூலமதி. அவர்கள் இருவரும் ஆட்டத்தைப் பற்றி யோசிப்பதிலே மூழ்கியிருந்தார்கள். ஆகவே ஆள் வந்த காலடி யோசைகூட, அவர்களுக்குக் கேட்கவில்லே. 'சுரையா' என்று கூப்பிட்ட சப்தம் கேட்டுத்தான், இருவரும் நிமிர்ந்து பார்த்தார்கள். உடனே சுரையா மகிழ்ச்சியோடு மாமி என்று கூறிக்கொண்டு எழுந்தாள். கமலனின் தாய் அவளேத் தழுவிக்கொண்டு கன்னங்களில் முத்தமிட்டாள், சுரையாவின் தாய்.

"மகளே! போய்ப் பார். கமலன் உனக்காகச் சிவப்பு மீன்கள் கொண்டு வந்திருக்கிருன். அவைகளே ஜாடிகளிலே விட்டுவை நான் அதுவரை இவளோடு சதுரங்கம் ஆடுகிறேன்."

"இவள் ரொம்பக் கெட்டிக்காரி அம்மா! சின்னப்பெண் என்று நினேக்காதே, என்னே இரண்டு முறை தோற்கடித்து

விட்டாள்'' என்று கூறிவிட்டு, சுரையா வேகமாக வெளியே போய்விட்டாள்.

மாளிகைக்குப் பின்புறத்தில் உள்ள தோட்டத்தில் ஒரு சிறு குட்டையின் அருகே, புது மண் கலயம் ஒன்று வைக்கப் பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் கமல் நின்று கொண் டிருந்தான். அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு சுரையா,

''சிவப்பு, நீலநிற மீன்களெல்லாம் கொண்டு வந்திருக் கிருயா கமல்?''

''ஆம்; பொன்னிறமும்கூட.''

''எங்கே பார்க்கலாம்!''

''நான் இவைகளை இந்தக் குட்டையிலே போடுகிறேன் அதில் பார்த்தால் இன்னும் அதிக அழகாக இருக்கும்.''

சுரையா, கண்களிலும் உதடுகளிலும் சிரிப்புப் பொங்கி வழிய, குட்டைக்குப் பக்கத்திலே போய் நின்ருள். கமலன் பானையிலிருந்த மீன்களை ஒவ்வொன்ருகக் குட்டையிலே விட்டான். ஸ்படிகம் போன்ற அந்த நீரிலே சிவப்பு—பொன்னிற மீன்கள் வெகு அழகாகக் காட்சியளித்தன.

''இப்பொழுது சிறியதாயிருக்கின்றன சுரையா! எவ்வளவு பெருத்தாலும் அது ஆறு அங்குலத்திற்கு மேல் நீளாது'' என்ருன் கமல்.

''இப்பொழுது அழகாகவே இருக்கின்றன கமல்.''

''இதோ பார் சுரையா! இது என்ன நிறம்?''

''ரோஸ்.''

''உன்னுடைய கன்னங்களைப் போல்.''

''குழந்தைப் பருவத்திலிருந்து நீ அப்படித்தான் சொல் லிக் கொண்டிருக்கிருய் கமல்!''

''அப்பொழுதும் அவைகள் அப்படியேதான் இருந் தன.''

''குழந்தைப் பருவத்தில் நீ எனக்கு இனியவனுய் இருந்தாய்.''

"ஆனால், இப்பொழுது?"

"இப்பொழுது ரொம்ப இனியவனாய் இருக்கிறாய்."

"ரொம்பவும் கொஞ்சமும் ஏன்?"

"ஏனோ தெரியாது. உன்னுடைய குரலிலே ஒரு மாற்றம் ஏற்பட்டபொழுது, உன்னுடைய உதடுகளுக்கு மேல் ரோமத்தின் மெல்லிய ரேகை தோன்றியபொழுது, எனது அன்பும் இன்னும்கொஞ்சம் ஆழத்தில் போய்ப்பதிந்து விட்டதாகத் தோன்றுகிறது."

"ஆனால், அப்பொழுது முதல் நீ கமலனைத் தூரத்திலேயே தள்ளி வைக்க ஆரம்பித்தாய்."

"தள்ளி வைக்கவா?"

"ஏனில்லை! முன்னைப்போல் நீ குதித்துக்கொண்டு வந்து என் கழுத்தைக் கட்டிக் கொள்கிறாயா? எனது கரங்களைப் பிடித்து ஒடிக்கிறாயா?"

"எல்லாக் குறைகளையும் என்மீதே சுமத்திக் கொண்டிராதே. வேறு ஏதாவது புதிய சமாச்சாரம் உண்டா?"

"புதிய சமாசாரம் இருக்கிறது சுரையா! நம்முடைய காதல் வெளிப்பட்டு விட்டது."

"எங்கே?"

"நம் இருவருடைய வீட்டிலும். அதுமட்டுமல்ல; மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி அவர்களுக்குங்கூட."

"சக்கரவர்த்தி அவர்களுக்குமா?"

"ஆம்; ஏன் பயந்து விட்டாயா?"

"இல்லை. நம் காதல், இன்றில்லாவிட்டால் நாளை வெளிப்பட்டுத்தானே ஆகவேண்டும். ஆனால், இப்பொழுது எப்படி வெளிப்பட்டது?"

"அவ்வளவு விவரம் எனக்குத் தெரியாது. ஆனால், முதலிலே மாமாவும் மாமியும் இதை வரவேற்றார்களாம். பிறகு தந்தையும், பாதுஷா ஸலாமத்தும் வரவேற்றார்கள். முடிவிலே தாயாருங்கூட."

''தாயாருங் கூடவா?''

''அம்மாவைப்பற்றி எல்லோரும் பயந்து கொண்டிருந்தார்கள். அவள் பழங்காலக் கருத்துக்களை உடையவள் என்பது உனக்குத் தெரியுமே?''

''ஆனால், எனது கன்னங்களிலே அவள் முத்தமிட்ட ஈரம் இன்னும் காயவில்லை.''

''மற்றவர்களின் கருத்துத் தவறென்று ஆகிவிட்டது. அம்மாவிடம், தந்தையார் இந்த விஷயத்தைச் சொல்லியபொழுது, அவள் மகிழ்ச்சியோடு வரவேற்றுளாம்.''

''ஆம்; அப்படியானால், நம் காதல் பூரணமாக வரவேற்கப் படுகிறது.''

''ஆம்; நம்மைச் சேர்ந்த எல்லா வீடுகளிலும். ஆனால், வெளி உலகம் இதை ஏற்கத் தயாராய் இல்லை.''

''அந்த வெளி உலகத்தைப் பற்றி நீ கவலைப்படுகிறாயா கமல்?''

''முற்றிலும் இல்லை. ஆனால், வருங்கால உலகத்தைப் பற்றிச் சிந்திக்கிறேன். அவர்களுக்கு நாம் சரியான வழியையும் காட்டிச் செல்கிறோம்.''

''மன்னிக்குங்கூடத் தெரியும் போலிருக்கிறது கமல்! நேற்றிரவு நான் வீட்டிற்குப் போனபொழுது அவள் வேடிக்கை செய்துகொண்டே, 'ஏ நாத்தி, நாத்தி, புருஷனை எங்கு தேடுவதென்று நான் தடுமாறிக் கொண்டு திரிந்தேன். இப்பொழுது ஒரே கல்லில் இரண்டு பறவை அடித்ததுபோல் என் ஆசை எல்லா வழியிலும் பூர்த்தியாகிவிட்டது' என்று கூறினாள். அவள் உன் பெயரை உச்சரிக்காவிட்டாலும், விஷயம் தெரிந்துதான் சொல்லியிருக்கிறாள் என்று தெரிகிறது.''

''அப்படியானால், உன் அண்ணாவிற்கும் விஷயம் தெரிந்து, அவர் மன்னிக்குச் சொல்லியிருக்க வேண்டும். அவர்கள் இருவரும் நமது காதலை ஆதரிக்கிறார்களென்று தோன்றுகிறது.''

''உன்னுடைய மாமியார் வீடு முழுவதும் உன்னுடைய காலடியிலே இருக்கிறது கமல்!''

''நீ என்ன லேசா? அம்மாவையே உன்பக்கம் இழுத்துக் கொண்டு விட்டாயே!''

''மாமியின் பூஜை—புனஸ்காரத்தைப் பார்த்து, நீங்கள் எல்லோரும் அப்படிக் கருதி யிருக்கிறீர்கள். என்மீது அவளுக்கு எவ்வளவு பிரியம் இருக்கிறதென்பதைத் தெரிந்திருந்தால், இதில் நீங்கள் அவளைச் சந்தேகப்பட்டிருக்க மாட்டீர்கள்.''

''அது தெரிந்துதான், அவள்மீது உபயோகிப்பதற்கு உன்னைக் கடைசி ஆயுதமாகத் தகப்பனார் தேர்ந்தெடுத்திருந்தாராம். ஆனால், கடைசி ஆயுதத்தை உபயோகிக்காமலேயே கோட்டை சுலபமாக விழுந்துவிட்டது. நம்முடைய கல்யாணம் விரைவில் நடைபெறப் போகிறது.''

''எங்கே?''

''பண்டிதர்கள் முன்னிலையிலோ, முல்லாக்கள் முன்னிலையிலோ அல்ல. இங்கே பாரதத்திலே, ஒரு புதிய திரிவேணியைத் தோற்றுவித்து, அதன் மூலம் பலமான கோட்டையை எழுப்ப விரும்பும் நமது தேவ தூதர் முன்னிலையில்.''

''ஓ! குளம் குட்டைகள், நதி கால்வாய்கள் யாவற்றையும் இணைத்து, ஒரு மகா சமுத்திரத்தைத் தோற்றுவிக்க முயலும் நமது பாதுஷா முன்னிலையிலா?''

''ஆம்; நாளை மறுநாள் ஞாயிற்றுக்கிழமை.''

''ஞாயிற்றுக் கிழமை!'' என்று சொல்லிய சுரையாவின் கண்கள் நீரைக் கக்கின. கமலின் கண்களும் நீரால் நிறைந்து விட்டன. அப்படியே அவளைத் தழுவிக்கொண்டு, அவளது கண்களிலே முத்தமிட்டான். மறைந்திருந்து, பார்க்கும் வேறு நான்கு கண்களும், இந்தக் காட்சியைக் கண்டு, இவர்களைப் போலவே ஆனந்தக் கண்ணீர் பெருக்குகின்றன என்பது அவர்களுக்குத் தெரியாது.

# 4

வசந்த காலத்தின் சுகமான குளிர். மாலை நேரம். கடலிலே மூழ்கும் சூரியனின் செங்கிரணங்களால், கடல் அலைகள் நெருப்புப்பற்றி எரிவதுபோல் காட்சியளிக்கின்றன. சமுத்திரக் கரையிலே மணல்மீது அமர்ந்திருக்கும் இரண்டு இளம் இதயங்கள், இந்த அழகுக் காட்சியிலே லயித்திருக்கின்றன. கடலிலே மூழ்கும் செங்கோளம் கடைசி எல்லையை அடைந்தபோது, அவர்கள் மௌனத்தைக் கலைத்துப் பேசத் தொடங்கினுர்கள்.

''கமல்! நமது இஷ்ட தெய்வமான கடல் எவ்வளவு அழகாயிருக்கிறது?''

''நாம் இந்தக் கடலின் குழந்தைகள் என்பதில் இப்போது உனக்குச் சந்தேகம் இருக்கிறதா அன்பே!''

''இல்லை; தாமரை போன்ற என்னுடைய கமல்! கடல், தனது வயிற்றிலே இப்படியொரு சுவர்க்க லோகத்தை மறைத்து வைத்திருக்கிறதென்று, நாம் எப்பொழுதாவது நினைத்ததுண்டா!''

''இது பூரணமான சுவர்க்கமல்ல. ஆயினும், இந்த வெனிஸ்நகரத்தை, மனிதர்கள் சுவர்க்கமாகவே ஆக்கியிருக்கிறுர்கள் என்பதில் சந்தேகமில்லை.''

''எங்கள் நாட்டிலே குலப்பெண்கள்—மணமானவர்களும் மணமாகாதவர்களும்கூட, ஆண்களைப் போலவே சுதந்திரமாக எவ்வித முகமூடியும், தடையுமின்றிச் சஞ்சரிப்பார்கள் என்று பாதிரிப் பெண் (கன்னிகா ஸ்திரி) கூறியபொழுது, நான் நம்பவே இல்லை. நாம் இந்தச் சுவர்க்க லோகத்திற்கு வந்து இரண்டு வருடங்கள் ஆகிவிட்டன. நமது டெல்லியோடு இந்த வெனிஸை ஒப்பிட்டுப் பார் கமல்!''

''அரசனில்லாமலேயே பிளாரன்ஸைப் போன்ற ஒரு நாகரிக அரசாங்கம் நடைபெறுகிறதென்று, அந்தக் காலத்தில் யாராவது சொன்னுல் நாம் நம்புவோமா சுரையா?''

''அது மட்டுமா? இந்த வெனிஸைப் போன்ற நகரங்களின் அரசியைப் பற்றியதும்தான்.''

''சுரையா! டெல்லியிலே இப்படி நாம் சுதந்திரமாக உலாவ முடியுமா?''

''படுதாஇல்லாமலா? பல்லக்கிற்கு உள்ளே உட்கார்ந்து கொண்டு குருட்டுத்தனமாகப் போகவேண்டும் கமல்! இங்கே நாம் கையோடு கைகோத்து நடப்பதைக் கண்டு, யாரும் நம்மை நிமிர்ந்துகூடப் பார்த்ததில்லையே.''

''குஜராத்திலே, குலப்பெண்கள் முகமூடியின்றி நடப்பதைப் பார்த்தோமல்லவா? தென்னிந்தியாவிலே எந்தப் படுதாவும் இல்லையென்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.''

''அப்படியானால், ஒரு காலத்தில் பாரத யுவதிகள் படுதாவிலிருந்து விடுதலை பெற்றிருந்தார்களென்று தெரிய வருகிறது. நம் நாடு மறுபடியும் அந்த நிலையை அடைய முடியுமா கமல்?''

''நம் தந்தையர்கள்! அவர்கள் ஆயுள் முழுவதும் முயற்சி செய்தார்கள். இந்தச் சிறிய பிளாரன்ஸ் தேசத்தைப் பார்! மூன்றே நாளில் இதன் நான்கு புறத்தையும் சுற்றிப்பார்த்து விடலாம். இவ்வளவு சிறிய தேசமாயினும், கர்வத்தோடு தலை நிமிர்ந்து நிற்கிறது. அது யாருக்கு முன்னாலும் உயிரோடு தலைவணங்க மாட்டாது. ராஜாவின் பெயரைக் கேட்டே அந்த மக்கள் காறித் துப்பத் தொடங்குகிறார்கள். இவர்களுக்கு ராஜா என்பது ஒரு சைத்தானாகவும் தோன்றுகிறது.''

''கமல்! கொஞ்சம் யோசித்துப்பார். இந்தப் பிளாரன்ஸின் விவசாயிகளோடு, நம் பாரதத்தின் விவசாயிகளை ஒப்பிட்டுப் பார்த்தால்! அந்த எலும்பும் தோலுமான உருவத்தை இங்கு காண முடிகிறதா?''

''முடியாது. ஏனெனில் அரச ஆடம்பரத்திலே கோடிக் கணக்கான ரூபாய்கள் இங்கு செலவழிக்கப்படுவதில்லை.''

''இந்த வெனிஸிலும் பணக்காரப் பிரபுக்கள் இருக்கிறார்கள். அவர்களில் பலர் நமது பெரிய பெரிய சேட்டுக்களை அலட்சியமாக ஜெயித்துவிடக் கூடியவர்கள்.''

''நம்முடைய பெரிய சேட்டுக்கள், தங்கள் பணப் பெருமையைக் கொடி நாட்டிக் காட்டுகிறார்கள். அவர்கள் பூமிக்

கடியிலே புதைத்து வைத்திருக்கும் வெள்ளி நாணயங்களும் தங்க நாணயங்களும் அந்த இருட்டிலே கிடந்து புழுங்கிக் கொண்டிருக்கும். அவைகளைக் காற்ருட விடவேண்டும். கைக்குக் கை மாறும்படி செய்ய வேண்டும். அவைகள் புழுங்காமல், உணவுப்பொருள்கள் அங்கங்கே கிடந்து உலர்கின்றன. கனிகள் கைமாருமல் அழுகிப்போகின்றன. துணிகள் தேங்கிக்கிடந்து மக்கிப் போகின்றன. நமது சேட்டுக்கள், பணத்தைப் புதைத்து வைத்து லட்சத்திற்கு ஒரு கொடி, கோடிக்கு ஒரு கொடி என்று கொடிகட்டு கிருர்கள்.''

சூரியனின் செவ்வொளி மறைந்து நீண்ட நேரமாகி விட்டது. இப்பொழுது நான்குபுறமும் இருள் கவ்விக் கொண்டிருந்தது. சமுத்திர அலைகள் கரையிலே வந்து கல்லிலே மோதும் சப்தம் தொடர்ந்து கேட்டுக் கொண்டி ருந்தது. யுவனும் யுவதியும் அந்த மணலைவிட்டு எழுந்திருக்க விரும்பவில்லை. கடலோடு உண்மையிலே அவர்கள் நெருங்கிய அன்புத் தொடர்புடையவர்களாகக்கருதினுர்கள். அவர்கள் தரைமார்க்கமாகவே இங்கு வந்து சேர்ந்திருக் கிருர்களாயினும், இந்தக் கடலின் மற்ருெரு முனை பாரத தேசத்தோடு ஒட்டிக்கொண்டிருக்கிற தென்பது அவர் களுக்குத் தெரியும். ஆகவே, இந்தப் பகுதியையும் அந்தப் பகுதியையும் ஒன்ருக இணைக்க முடியாதா என்று அவர்கள் பலமுறை சிந்தித்ததுண்டு. இரவு நீண்ட நேரத்திற்குப்பின் இருவரும் புறப்பட்டார்கள். வழியிலே சுரையா,

''நமது பாதுஷா, தனது ராஜ்யத்தில் அமைதியை நிலை நாட்டப் பெரும் பிரயாசைப்பட்டார். அதில் ஓரளவு வெற்றியும் பெற்ருர். ஆயினும் இப்படி நள்ளிரவிலே கவலையின்றி நாம் அங்கு சுற்ற முடியுமா? இந்த நிலைமையின் காரணமென்ன?''

''இங்கு எல்லோரும் சுகமாக இருக்கிருர்கள். இந்த நாட்டு நிலங்களிலே திராக்ஷை, ஆப்பிள், கோதுமை யாவும் விளைகின்றன.''

''நம் நாட்டு நிலங்களிலும் செல்வம் கொழிக்கத்தானே செய்கிறது.''

''அந்தச் செல்வத்தைக் கொள்ளையடிப்பவர்கள், நம் நாட்டில் அதிகமிருக்கிருர்கள் சுரையா?''

‘‘கமல்! இங்கே யார் வீட்டிற்குப் போனாலும் சிறிதும் தயக்கமின்றி கிளாஸும் போத்தலும் கொண்டுவந்து வைத்து விடுகிறார்கள்!’’

‘‘பாரத நாட்டிலே பாதுஷாவோடு ஒன்றாகத் தண்ணீர் குடிக்கிறார் என்பதற்காகத்தான் என் தந்தையைத் தூற்றுகிறார்கள்!’’

‘‘என்னுடைய தாதியர்கள், ராஜபுத்ரப் பெண்கள் நாற்றம் பிடித்தவர்கள் என்றும், அவர்கள் வீட்டிலே பன்றிக் கறி சமைக்கப்படுவதாகவும் எனக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். அந்தக் குருடர்கள் இங்கு வந்து பார்த்தார்களானால், இந்த உலகத்தில் கீழ் ஜாதி—மேல் ஜாதி என்பது கிடையாது என்று தெரிந்து கொள்வார்கள்.’’

‘‘உண்பதிலும், குடிப்பதிலும் வேற்றுமை காட்டாத உலகம் இது!’’

‘‘பிளாரன்ஸ் முழுவதும் ஒரே ஐக்கியமாயிருக்கிறது; பாரதமும் இந்த மாதிரி ஐக்கியப்படுமா கமல்?’’

‘‘நாம் கடலைக் கடந்தால் - சமுத்திரத்தை வெற்றி கண்டால், அது நடைபெறக்கூடும்.’’

‘‘சமுத்திர வெற்றி!’’

‘‘வெனிஸ் நகரம். வெற்றி கண்ட நகரம் சுரையா! வெனிஸ் நகரத்தின் இந்தத் தெருக்கள், இந்த உயர்ந்த மாளிகைகள் யாவும் சமுத்திர வெற்றியின் பலன். இன்று கடல் வெற்றியிலே வெனிஸ் நகரம் தனித்து நிற்கவில்லை. அதனோடு போட்டியிடும் தேசங்கள் பல இருக்கின்றன. ஆனால், இனிக் கடலை ஜெயிப்பவர்கள்தான் உலகத்தை ஆள்வார்களென்று எனக்குத் தெளிவாகத் தெரிகிறது; இதைப் பற்றி என் இதயத்திலே சிந்தனை முளைத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன்.’’

‘‘நீ ஏதேதோ புத்தகங்களை இரவெல்லாம் படித்துக் கொண்டிருக்கிறாயே! இங்கு புத்தகங்கள் எவ்வளவு சுலபமாகக் கிடைக்கின்றன!’’

‘‘நம் நாட்டிலும் கண்ணாடி இருக்கிறது; காகிதம் இருக்கிறது. இரும்புத் தொழிலிலே நிபுணர்களிருக்கிறார்கள். ஆயினும், இதுவரை புத்தகம் அச்சிட நமக்குத் தெரியாது. அச்சு யந்திரங்கள் நம் நாட்டிலும் ஏற்பட்டுவிட்டால்,

அறிவு எவ்வளவு சுலபமாகப் பரவத் தொடங்கிவிடும்! நான் படித்துக் கொண்டிருக்கும் இந்தப் புத்தகங்களும், மாலுமிக ளோடு ஏற்பட்டுள்ள பழக்கமும், கடலை ஜெயிப்பவர்கள் தான் இந்த உலகத்தை ஜெயிக்கப் போகிறார்களென்பதை எனக்கு நிச்சயப்படுத்தி விட்டன. இந்தப் 'பரங்கியர்'கள் குளிப்பது—துவைப்பதில் அலட்சியமா யிருப்பதைக் கருதி, நம்நாட்டினர் அவர்களை அழுக்குப் பிடித்த காட்டுமிராண்டி கள் என்று கூறுகிறார்கள். ஆனால், இவர்களுடைய அறிவுத் தாகத்தையும், ஆர்வத்தையும் கண்டு, இவர்களைப் பாராட் டாமலிருக்க முடியாது. இவர்கள் பூகோளத்தைப் பற்றிக் கதை கட்டவில்லை. உலக முழுவதையும் சுற்றிப் பார்த்து, அதைப் பற்றிய அறிவை வளர்த்துக் கொள்கிறார்கள். இவர் கள் தயாரித்த தேசப் படத்தை (Map) உனக்குக் காட்டி னேனல்லவா சுரையா?''

''கடல் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது கமல்!''

''அது பிடித்தமானது மட்டுமல்ல, அதன் கையில்தான் தேசங்களின் எதிர்கால வாழ்வு இருக்கிறது. இந்த மரக் கட்டைகளால் செய்யப்பட்ட கப்பல்களிலே, இணைக்கப் பட்டிருக்கும் பீரங்கியைப் பார்த்தாயல்லவா? இவைகள் நடமாடும் கோட்டைகள். மங்கோலியர்களுக்கு அவர் களுடைய குதிரைகளும், வெடி மருந்தும்தான் வெற்றியை அளித்தன. இப்பொழுது யாரிடம் இந்த யுத்தக் கப்பல்கள் இருக்கின்றனவோ, அவர்களே வெற்றிபெற முடியும். ஆகவே, நானும் இந்த வித்தையைக் கற்றுக்கொள்ள நிச்ச யித்திருக்கிறேன்.''

கமலனுக்கும் சுரையாவிற்கும் அவர்கள் ஆசை பூர்த்தி யாகவில்லை. அவர்கள் கடல் மார்க்கமாகப் பாரத நாட்டிற் குப் புறப்பட்டார்கள். அது கடற்கொள்ளைக்காரர்களின் காலம். சூரத்தை யடைவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னால், கடல் கொள்ளைக்காரர்கள் அவர்களை வளைத்துக் கொண்டார்கள். தனது மற்ற தோழர்களோடு சேர்ந்து கமலனும் பீரங்கியையும், துப்பாக்கியையும் கடல்கொள்ளைக் காரர்கள்மீது பிரயோகித்தான். ஆனால் கொள்ளைக்காரர் களின் எண்ணிக்கை அதிகமாய் இருந்தது. கமலனுடைய கப்பல் பீரங்கிக் குண்டுகளால் தாக்கப்பட்டுத் தண்ணீரிலே மூழ்கத் தொடங்கிற்று. சுரையா அவனுக்குப் பக்கத்திலே இருந்தாள். புன்முறுவல் பூத்த அவளது உதடுகளிலிருந்து வந்த கடைசிச் சப்தம், 'சமுத்திர வெற்றி'.

# ரேக்கா பகத்

**காலம் கி. பி. 1800**

**கா**ர்த்திகை மாதத்துப்பௌர்ணமி. நாராயணி ஸ்நானத்திற்காகவும், ஹரிஹரநாதர் தரிசனத்திற்காகவும், கூட்டம் ஏராளமாகக் கூடிக்கொண்டிருந்தது. தொலை தூரங்களிலிருந்து, கிராமத்து ஜனங்கள்—ஆண்களும் பெண்களும், தாங்கள் பிரயாசையோடு சேர்த்து வைத்திருந்த காசுகளையும், அரிசி—மாவுகளையும் எடுத்துக்கொண்டு ஹரிஹரநாதரைத் தரிசிக்க வந்து சேர்ந்தனர். அங்கு தோட்டத்தில் கட்டப்பட்டிருந்த காளைகள், குதிரைகள், சில யானைகளைப் பார்த்து, எதிர்காலத்திலே இது உலகத்தின் பெரிய திருவிழாவாக ஆகக்கூடும் என்று அப்பொழுது யார் கற்பனை செய்திருக்க முடியும்?

ரேக்கா பகத்தும், அவனது நான்கு தோழர்களும் அங்கொரு மாமரத்தின் நிழலிலே கம்பளியை விரித்து உட்கார்ந்துகொண்டு, மேல் துண்டிலே முடிந்து வந்திருந்த உப்புக்கலந்த மாவை, பச்சை மிளகாயையும், முள்ளங்கியையும் கடித்துக்கொண்டு சுவாரஸ்யமாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். ரேக்காவின் எருமை இன்று விற்றுப்போய் விட்டது. அவன் வேட்டியின் மூலையிலே முடிந்து வைத்திருந்த அந்த இருபது ரூபாய்களையும், இப்பொழுதும்கூட ஒருமுறை பார்த்துக்கொண்டான். திருவிழாக் காலங்களிலே, மந்திர சக்தியின் மூலம் பணத்தை எடுத்துக்கொண்டு ஓடும் திருடர்களைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருந்தான். ரேக்காவின் கைகள் மறுபடியும் ஒருமுறை முடிச்சைத் தடவிப் பார்த்தன. நம்பிக்கையோடு பேசத் தொடங்கினான்:

''என்னுடைய எருமை விற்றுப்போய் விட்டது. ஏ மௌலு! மூன்று மாதங்களாகத் தீவனம், தண்ணீர் வைத்துத் தயார் செய்தேன். இருபது ரூபாய்கள் இந்த எருமைக்குக் குறைவான விலையல்ல. ஆயினும், இப்பொழுதெல்லாம் லெட்சுமி பார்த்துக் கொண்டிருக்கும்போதே பறந்து போய் விடுகிறாள்.''

மௌலா—''பறந்து போய்விடுகிருள்! இப்பொழுது பணங் காசுக்கும் அதிக மதிப்பில்லாமல் போய்விட்டது. இந்தக் கும்பினியின் ராஜ்யத்தில், எந்தப் பொருளும் மலிவாயில்லை. நாம் மண்ணைத் தோண்டித் தோண்டி மடிந்து போகிறோம். ஒருநாள்கூடக் குழந்தை குட்டிகளுக்கு வயிறு நிறையச் சாப்பிடக் கிடைக்கவில்லை.''

ரேக்கா—''இதுவரை நாம் எஜமானர்களின் காணிக்கைகளாலும், நிர்வாகிகளின் லஞ்சத்தாலும் நசுக்கப்பட்டு வந்தோம் என்றாலும் நிலமாவது நமக்குச் சொந்தமாக யிருந்தது.''

மௌலா—''ஏழு தலைமுறைகளாக, காடுகளை வெட்டி நாம் நிலத்தைப் பண்படுத்தினோம்.''

சோபரன்—''மௌலு! புலி வயல் இருக்கிறதல்லவா? அந்த இடம் ஒரு பெரிய காடாயிருந்தது. அந்த இடத்தில் தான் என்னுடைய முப்பாட்டனாரை ஒரு புலி தூக்கிக் கொண்டு போய்விட்டதாம். அதுமுதல் அந்த இடத்திற்குச் புலி வயல் என்று பெயர் ஏற்பட்டதாம். இப்படி நாம் உயிரைக்கொடுத்து, நிலத்தையும் வளம்செய்திருக்கிறோம்.''

ரேக்கா—''ஓ போலா பண்டித்! உனக்குச் சத்திய யுகத்தின் சமாச்சாரம் கூடத் தெரியுமே? இந்தமாதிரிப் பிரஜைகளின்மீது கொடுமை எப்பொழுதாவது செய்யப்பட்டிருக்கிறதா?''

மௌலா—''நிலத்தை வளப்படுத்துகிறவர்கள் நாம்—உழுது விதைப்பவர்கள் நாம். ஆனால், பண்டித்! கிராமத்திற்குச் சொந்தக்காரரர் ராம்பூரிலிருக்கும் முன்ஷிஜி.''

போலா—''அதர்மம் அப்பா அதர்மம். இந்தக் கும்பினி, கொடுமை செய்வதில் இராவணனையும் கம்ஸனையுங்கூட ஜெயித்துவிட்டது. அரசன் விவசாயிகளிடமிருந்து பத்திலொரு பங்கு வரி வாங்க வேண்டுமென்று நமது தர்மசாஸ்திரங்களிலே எழுதப்பட்டிருக்கிறது.''

மௌலா—''பண்டித் இந்த ராம்பூர் முன்ஷியை நமது எஜமானனாக—நமது கிராமத்தின் ஜமீன்தாராக ஏன் ஆக்கினார்களென்று எனக்குப் புரியவில்லை.''

போலா—''எல்லாம் தலைகீழ்ப் பாடம்தான் மௌலு. முன்னால் ஜனங்களுக்கு மேலே ஓர் அரசன் இருந்தான்.

விவசாயிகளுக்கு, அந்த ஒரு அரசனைப் பற்றித்தான் தெரியும். அவனும் வெகு தூரத்திலிருக்கும் அவனுடைய தலைநகரிலே வசிப்பான். பத்திலொரு பங்கு வரி வாங்கும் அளவுக்குத்தான், அவனுக்கும் விவசாயிக்கும் தொடர்பு. ஆனால் இப்பொழுது, நிலம் விளையுமோ விளையாதோ நமது சதையை விற்றுவது—குழந்தை குட்டிகளை விற்றுவது, ஜமீன்தாருக்கு வாரம் செலுத்தியாக வேண்டும்.''

ரேக்கா—''அந்த வாரத்திற்கும் அளவு தெரியவில்லை. பண்டித்! வருடா வருடம் அதிகரித்துக் கொண்டே போகிறது. இந்த மாதிரிப் பயங்கர ஆட்சி ஏனென்று கேட்பார் யாருமில்லை.''

முன்ஷி சதாசுக்லால் பட்டுவாரி (பட்டுவாரி— கிராமக் கணக்கன்) ஹரிஹர க்ஷேத்திரத்தில் ஸ்நானம் செய்துவிட்டு மலிவாய்க் கிடைத்தால் ஒரு பசுவும் வாங்கவேண்டுமென்று வந்திருந்தான். ஆனால் இந்த வருடக் கிராக்கியைப் பார்த்து, அவன் தொடை நடுக்க மெடுத்துவிட்டது. அவனுடைய உடம்பிலே அழுக்குப் படிந்த சட்டை, தலையிலே ஒரு சிறு தொப்பி, காதிலே ஒரு மரக் கட்டைப் பேனா, இந்தக் கோலத்தோடு அவன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால், இப்பொழுதும் ஏதோ கணக்கெழுதப் போகிறவன் போல் தோன்றியது. அவன் ஜமீன்தாருடைய கணக்கப் பிள்ளையானதால், அந்தச் சம்பாஷணையில் கலந்து கொள்ளலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தான். ஆனால், கிராமத்தின் அரசியல் விவகாரம் தூண்டப்பட்டு விட்டால் வாயும் காதும் உடைய எந்த மனிதனும் சும்மாயிருப்பது கஷ்டமான காரியம். மேலும், தயாள்பூர் அவனுடைய எஜமானின் கிராமமுமல்ல. ஆகவே, தயாள்பூர் விவசாயிகளின் சம்பாஷணையில் பங்கெடுத்துக் கொள்வது அவனுக்குத் தவருகத் தோன்றவில்லை. முன்ஷி, தன்னுடைய கட்டைப் பேனவை உள்ளங்கையிலே வைத்து உருட்டிக்கொண்டே பேசத் தொடங்கினன்.

''பண்டித்! ஏனென்று கேட்பார் யாருமில்லை என்று சொல்கிறுய். யார் கேட்பார்கள்? இங்கு எல்லோருமே கொள்ளைக்காரர்கள். ராஜா யாருமே இல்லை. அன்னியன் சொத்து கொள்ளையடிக்கப் படுகிறது. கொள்ளையடிக்க முடிந்தவர்கள் கொள்ளையடித்துக் கொள்ளுங்கள் என்பதுதான் இப்பொழுது நடைபெறுகிறது. சுபேதார் (கலெக்டர்) சாஹிப்பின் ஆபீசிலே, எனது மாமன் மகளுடைய மாப்

பிள்ளை வேலை பார்க்கிறன். அவனுக்கு அநேக ரகசியங்கள் தெரியும். இங்கே யாரும் ராஜா இல்லையாம். நூறு இரு நூறு பரங்கிக் கொள்ளைக்காரர்கள் ஒன்ருகச் சேர்ந்திருக் கிருர்களாம். அப்படி ஒன்று சேர்ந்திருப்பதற்குத்தான் கும்பினி என்று பெயராம்.''

ரேக்கா—''முன்ஷி சரியாகச் சொல்கிருர். இதுவரை நாம் கும்பினிப் பகதூர், கும்பினிப் பகதூர் என்று கேட்டுக் கேட்டு, கும்பினி என்று யாரோ ஒரு ராஜா இருப்பதாகக் கருதிக் கொண்டோம். இப்பொழுதுதான் உண்மை புலப் படுகிறது.''

மௌலா—''அதனுல்தான், எங்கு பார்த்தாலும் கொள்ளையோ கொள்ளையாய் இருக்கிறது. நியாய அநியா யத்தைக் கேட்பாரே இல்லை. இந்த ராம்பூரின் முன்ஷிக்கு முந்திய தலைமுறைகளிலே, நமது தயாள்பூர் கிராமத்தோடு ஏதாவது தொடர்பிருந்ததா?''

சோபரன்—''ராம்பூர் முன்ஷி நமது கிராமத்திற்கு எப் படி எஜமானன் ஆனுன் என்பதை புரிந்து கொள்ளவே முடியவில்லை. டெல்லி பாதுஷாவோடு, கும்பனி சண்டை தொடுத்தது...''

முன்ஷி—''டெல்லியோடல்ல, சோபரன்! மூர்ஷிதா பாத் நவாப்போடு சண்டை போட்டது. டெல்லி சிம்மா சனத்திடமிருந்து, மூர்ஷிதாபாத் ஏற்கெனவே நம்முடைய தேசத்தைப் பிடுங்கிக் கொண்டிருந்தது.''

சோபரன்—''எங்களுக்கு இதெல்லாம் ஞாபகமிருப்ப தில்லை முன்ஷிஜி! எங்களுக்கு டெல்லிதான் தெரியும். நல் லது. மூர்ஷிதாபாத்திடம் ஆட்சி வந்தபொழுதும் ஒரு அரசர் தானே இருந்தார். நமக்கு யார் வந்தாலும் போனுலும் வரி செலுத்துவதோடு தீர்ந்தது. ஆனுல் இப்பொழுது, எத் தனை ராஜாக்கள்? இரண்டா அதற்கும் மேலா?''

ரேக்கா—''சோபரன்! நமக்குத் தெரிய இரண்டு ராஜாக்கள் இருக்கிருர்கள். ஒன்று கும்பினி ராஜா! மற் றென்று ராம்பூரின் முன்ஷி. திரிகை வழக்கம்போல் மேல் பாகம் மட்டும் சுழன்று அறைத்தால், ஒன்றிரண்டு மணிக ளாவது தப்பித்துக் கொள்ளலாம். ஆனுல் அடிப்பாகமும் சுற்றத் தொடங்கிவிட்டால் தப்புவது ஏது? முன்ஷிஜி நீயே சொல், நாங்கள் படிக்காத பட்டிக்காட்டு ஆசாமிகள்.''

முன்ஷி—''ரேக்கா! நீ சரியாகச் சொல்கிருய். ஜமீன் தார் திரிகையின் அடிப்பாகம்தான் அவர், ராஜாவைவிட எந்த விஷயத்திலும் குறைந்தவரல்ல.''

ரேக்கா — ''குறைவென்ன, அதிகமென்று சொல் முன்ஷிஜி! கிராமப் பஞ்சாயத்தை இப்பொழுது சீந்து வாரே இல்லே. வழக்கம்போல் நாம் ஐந்து பஞ்சாயத்தார் களைத் தேர்ந்தெடுத்து விடுகிறேம். ஆனல் அவர்கள், எந்த வேலேயிலாவது தலேயிட முடிகிறதா? எல்லாக் காரியங்களே யும் ஜமீன்தாரும், அவரது நிர்வாகிகளுமே செய்து வருகி ருர்கள். எங்காவது தகராறு ஏற்பட்டால், வாதி—பிரதி வாதி இருவருக்குமே அபராதம் விதித்து விடுகிருர்கள். இந்த ஜமீன்தாரி வந்து பதினைந்து வருடங்கள்கூட ஆகவில்லே. இதற்கு முன்னல், எப்பொழுதாவது புருஷனும் மனேவியும் சண்டையிட்டுக் கொண்டதற்காக எருமையை ஏலம் போட்ட கதையைக் கேள்விப்பட்டிருக்கிருயா?''

சோபரன்—''அந்தக் காலத்தில், எல்லாம் கிராமப் பஞ் சாயத்தின் கையிலே இருந்தது. எந்த வீடும் பாழடைந்து விடாமல், பஞ்சாயத்துக் கவனித்துக்கொண்டது. கொலே—பழியைக்கூட, அந்தக் காலத்தில் பஞ்சாயத்து சமாதான மான முறையில் தீர்த்து வைத்துவிடும் ரேக்கா! நம்முடைய கண்மாய்க் கரைகளே நீ பார்க்க வில்லேயா! பஞ்சாயத்து இருந்தால், அது இந்த நிலேமையில் இருக்குமா?''

ரேக்கா—''இந்த மாதிரி இருக்காது சோபரன்! தங்கள் குழந்தை குட்டிகள் வாயிலே யார் மண்ணேப் போடுவார் கள்? மழை அதிகமாகப் பெய்யும் பொழுது, கரை உடைத் துக் கொள்ளாமல் மழைத் தண்ணீர் வெளியேறுவதற்கு மடைகள் சுத்தம்செய்து வைக்கப்படவுமில்லே; மழை குறை வாகப் பெய்யும்பொழுது அதைத் தடுத்து நிறுத்தி உப யோகப் படும்படி செய்வதற்குச் சரியான கரைகளும் இல்லே.''

முன்ஷி—''நமது பஞ்சாயத்துக்களே அழித்துவிட்டு, இந்த வேலேயை ஜமீன்தாரிடம் ஒப்படைத்திருக்கிறது கும்பினி.''

ரேக்கா—''ஜமீன்தார்கள் செய்வதைத்தான் இப் பொழுது நாம் பார்த்துக் கொண்டிருக்கிறேம்.''

முன்ஷி—''நானும் ஜமீன்தாரின் உப்பைத் தின்பவன் தான் ரேக்கா! மஸரக் ஜமீன்தாருடைய கணக்கப்பிள்ளே

நான். ஆயினும், இது அக்ரமமாக வந்த சொத்துத்தான்; அநியாயச் சொத்தைச் சாப்பிடுபவர்கள் உருப்படுவதில்லை. என்னையே பாருங்கள்; எனக்கு ஏழு குழந்தைகள் இருந்தன. எல்லோரும் காளைப் பருவத்திலே மாண்டு போனார்கள். இப்பொழுது, எள்ளும் தண்ணீரும் இறைக்கக் கூட வீட்டிலே யாருமில்லை. எஜமானனுடைய கதை தெரியுமா? அந்தச் சப்ரா தாசியைச் சுற்றிக்கொண்டு அலைந்து அவருக்கு ஏற்பட்ட கதி! அவருடைய ஆண்குறியே அழுகி விழுந்துவிட்டது. இப்பொழுது இருக்கிறார்களே இந்த இரண்டு யுவ ஜமீன்தார்களும் திவானுக்குப் பிறந்தவர்கள்.''

ரேக்கா—''எஜமானர்களிடையே இப்பொழுது இது ரொம்ப சர்வ சாதாரணமாகி விட்டது.''

சோபரன்—''நிலம் போய்விட்டது; கிராமம் போய் விட்டது; கடலுக்கு அப்பாலிருந்து வந்த கொள்ளைக்காரர் கள், நம் தலைமீது உள்ளூர்க் கொள்ளைக்காரர்களை உட் கார்த்தி வைத்திருக்கிறார்கள். பஞ்சாயத்தும் போய்விட்டது. நாலு அரிசி விளைந்தால் அதுவும் ஜீரணித்து விடுகிறது. தப்பித் தவறி நல்ல மழை பெய்து நாலு தானியம் வீட் டிற்கு வந்தால், ஜமீன்தார், சௌகிதார், கணக்கன், குமாஸ்தா இத்தனை பேரையும் தப்பியல்லவா நமக்குக் கிடைக்க வேண்டும்?''

முன்ஷி—''கணக்கனும் கொள்ளையடிக்கிறான் என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், கணக்கனுக்கு மாதம் எட்டணாத்தான் ஜமீன்தார் சம்பளம் கொடுக்கிறார் என்பது உனக்குத் தெரியுமல்லவா? இந்த எட்டணாவில் தங்களின் நாக்கு நுனியையாவது ஈரமாக்கிக் கொள்ள முடியுமா? ஜமீன்தாருக்கு எல்லா விஷயங்களும் தெரியத் தானே செய்கிறது?''

ரேக்கா—''நன்றாகத் தெரியும். பொட்டையனாகவா இருக்கிறார்? கும்பினி ராஜா ஒரு பெரிய கொள்ளைக்காரன். அவன் கொள்ளையடிப்பதற்காகவே இந்த ஜமீன்தாரை எங்கள் தலையிலே உட்கார்த்தி வைத்தான். ஜமீன்தார் சும்மா இருப்பாரா? அவர் சின்னச் சின்னத் திருடர்களையும் எங்கள் மீது சுமத்துகிறார். இதற்கப்பாலும் நாங்கள் எப்படி உயிரோடிருக்கிறோம் என்பதுதான் ஆச்சரியமாக இருக் கிறது.''

''சோபரன்—ஆம்? உயிரோடிருக்கிறோம். ஆனால் ரேக்கா, வயிறு நிறையச் சோறும், உடம்பை முழுவதும் மூடிக் கொள்ளக்கூடிய துணியும் உடையவன் ஒருவனாவது இந்தத் தயாள்பூரில் இருக்கிறானா?''

முன்ஷி—''கும்பினிக்கு என்ன கவலை சோபரன்? அவர்கள் வாரத்தை நிச்சயித்து விட்டார்கள். தவணை நாளன்று ஜமீன்தார் சப்ராவுக்குப் போய்ப் பணத்தைச் செலுத்தி விட்டு வருகிறார். கும்பினிக்குப் பைசாக்கூடக் குறைவில்லாமல் வசூலாகும்போது, தயாள்பூர் விவசாயிகள் செத்தாலென்ன—வாழ்ந்தாலென்ன? வாரத்தைப் பாக்கியின்றி நீங்கள் செலுத்தாவிட்டால், ஜமீன்தார் உங்கள் எலும்புகளை முறித்துவிடுவார். உங்களிடம் ஐந்து ரூபாய்கள் வசூல் பண்ணி, ஒரு ரூபாயைக் கும்பினிக்குக் கொடுத்துவிட்டு, நான்கு ரூபாய்களைத் தான் விழுங்கி விடுகிறார். இதையெல்லாம் பற்றிக் கும்பினிக்கு என்ன கவலை?''

ரேக்கா—''கடவுளே! நீ தூங்குகிறாயா, அல்லது மாண்டு தான் போய்விட்டாயா? நாங்கள் அசந்து போய் விட்டோம். நீ நியாயம் செலுத்த மாட்டாயா?''

சோபரன்—''ஆம்; நாம் தோற்றுப்போய் விட்டோம். பன்னிரு பர்கானாவைச் சேர்ந்த விவசாயிகள் ஒற்றுமையாகச் சேர்ந்துகொண்டு, ஜமீன்தாரை எஜமானனாக ஒப்புக் கொள்ள மறுத்தார்களாம். சப்ராவுக்குப் போய் கும்பினி சாகிப்பிடம் 'எங்கள் பஞ்சாயத்து உங்களுக்கு வாரத்தைச் செலுத்திவிடும். நாங்கள் ஜமீன்தாரை ஏற்றுக்கொள்ள மாட்டோம்' என்று சொன்னார்களாம். அதற்கு அந்த சாகிப் சொன்ன பதில் தெரியுமா? பஞ்சம், வெள்ளப் பெருக்கு எந்தக் காலத்திலும் குறைவில்லாமல் வாரம் செலுத்த வேண்டும் என்று கேட்டாராம். பஞ்ச காலத்தில், தங்கள் குழந்தை குட்டிகளின் உயிரையே காப்பாற்ற முடியாதே; இந்தப் பரங்கிக்கு எங்கே இருந்து கொடுப்பது; கடவுளுக்குக் கூடப் பயப்படாத அந்தப் பரங்கி, இதைக்கூட மனப்பூர்வமாகச் சொல்லவில்லை. மேலும் அவர் 'நீங்கள் எல்லோரும் பிச்சைக்காரர்கள். நீங்கள் வாரம் செலுத்தாவிட்டால் கம்பெனி உங்களிடமிருந்த எப்படி வசூல் செய்யும்? மரியாதை உள்ள பணக்காரர்களை நாங்கள் ஜமீன்தார்களாக ஆக்குகிறோம். அவர்கள் தங்கள் வீடு வாசல் சொத்துக்கள் ஏலம் போய்விடுமென்றும், தங்களுடைய மரியாதை

கெட்டுவிடுமென்றும் பயந்து, எங்கள் வாரத்தைச் சரியாகச் செலுத்துவார்கள் என்று கூறிவிட்டாராம்.''

ரேக்கா—''அதனுல்தான் இந்தப் பரங்கிகளுக்கு உடம் பெல்லாம் குஷ்டம் பரவுகிறது. இவர்கள் கொஞ்சங்கூடக் கருணை இல்லாதவர்கள்.''

சோபரன்—''அயோக்கியர்களுக்கு வேறு வழியில்லாத போது எதையும் செய்யத் துணிந்து விடுகிருர்கள். இந்தக் கும்பினி வீரனுயிருந்தால், வீரனைப்போல் சண்டை போட வேண்டும். யுத்த வீரர்களோடு யுத்தம் செய்யவேண்டும். முஸ்லிம் அரசர்களிடம் கற்கோட்டைகளும், துப்பாக்கிகளும் தான் இருந்தன. இந்தக் கும்பினியிடமோ பீரங்கி இருக் கிறது. மேலும் எங்கிருந்தோ கறுப்புப் பட்டாளமும் வெள்ளைப் பட்டாளமும் வந்து குவிந்தன. கிராமம் கிராம மாகக் கொளுத்தினுர்கள். குழந்தைகளையும், பெண்களையும் கொன்று குவித்தார்கள். பாவம், பழைய அரசர்கள் என்ன செய்ய முடியும்?''

மௌலா—''விவசாயம் இந்த விதமாக நசுக்கப்பட்டு விட்டது. இப்பொழுது சேணியர்கள் வாயிலும் மண்ண விழத் தொடங்கி விட்டது. இந்த கும்பினிப் பஹதூர், சீமையிலிருந்து துணிகளைக் கொண்டு வந்து விற்கத் தொடங்கி விட்டானும்.''

முன்ஷி—''யந்திரங்களே நூற்று நெய்கிறதாம். இந்த என்னுடைய சட்டையைப் பார். இது அந்தத் துணிதான். சர்க்காவில் நூற்று கைத்தறியில் நெய்த துணி, இவ்வளவு நல்லதாயும் மலிவாயும் இருக்காது. எஜமானர்களுடைய தர் பாருக்குப் போவதற்கும், மரியாதைக்காகவும்தான் இந்தத் துணியை உடுத்த வேண்டியிருக்கிறது. ஏன் சிரிக்கிருய் ரேக்கா? தர்பாருக்குப் போகவேண்டியது நேர்ந்தால், உனக் கும் அப்பொழுது தெரியும்.''

ரேக்கா—''உன்னுடைய மரியாதைக்காகச் சிரிக்கவில்லை முன்ஷிஜி? கும்பினிப் பஹதூரின் ஆட்சியை நினைத்துச் சிரிக் கிறேன். அவர் ராஜ்யமும் செய்கிருர்; வியாபாரமும் செய் கிருர். இது வேடிக்கை இல்லையா?''

போலா பண்டித்—''சத்திய யுகம், திரேதா யுகம், துவா பரயுகம் எல்லாம் கழிந்துவிட்டன. கலியுகத்திலும் 5000-ம்

வருடங்கள் கழிந்துவிட்டன. இத்தனை காலத்தில் இந்த மாதிரி ராஜாவைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை.''

முன்ஷி—''கலெக்டர் சாஹிப் ஆபீசில் வேலை பார்க்கும் ஒரு குமாஸ்தா, இந்த பரங்கிகளெல்லாம் கொள்ளைக்காரர்கள்தான் என்று சொல்கிறார். மற்றொருவர்; இந்தக் கும்பினி பரங்கி வியாபாரிகளின் கூட்டுக் கடையென்றும், அவர்கள் இந்தத் தேசத்திற்கு வியாபாரம் செய்வதற்காகத்தான் வந்தார்களென்றும் சொல்கிறார். முதலில் இங்கிருந்துதான் சாமான்களை வாங்கி அனுப்பிக் கொண்டிருந்தார்களாம். இப்பொழுது அவர்கள் சீமையிலே பெரியபெரிய தொழிற்சாலைகளை ஆரம்பித்து விட்டார்களாம். அவைகளில், அவர்களே சாமான்களைத் தயார் செய்து, அவர்களே இங்கு கொண்டு வந்து விற்கிறார்களாம்.''

மௌலா—''அப்படியானால் இனித் தொழிலாளர்களின் நிலைமையும் ஆபத்துத்தான்.''

## 2

குளிர் காலத்தில் கங்கை மிகுதும் பசுமையாகக் காட்சியளிக்கும். அதன் இயற்கையான கம்பீரப் போக்கு, இன்னும் அதிகக் கம்பீரம் அடைந்துவிடும். இந்தக் காலத்தில் படகுகள் கவிழ்ந்து விடக்கூடிய பயம் கிடையாது. ஆகவே, வியாபாரத்திற்கு இது ரொம்ப நல்லகாலமென்று வியாபாரிகள் கருதுகிறார்கள். இந்தச் சமயத்தில் நாம் கங்கைக் கரையிலே போய் உட்கார்ந்தால் நான்கு மணி நேரத்திற்குள் நூற்றுக்கணக்கான படகுகள் நம்மைத் தாண்டிச் செல்வதைப் பார்க்கலாம். அவைகளில் பெரும்பாலானவை சீமையிலிருந்து வந்துள்ள கம்பெனிச் சாமான்களைச் சுமந்து கொண்டு, மேல் நோக்கிச் செல்கின்றவை, பாட்னா, காஜிபூர், மீர்ஜாபூர் முதலிய வியாபார நகரங்களின் துறைகளைப் பார்த்தால், கங்கைப் பெருக்கின் நீரே கண்ணுக்குத் தெரியாதபடி, பெரிய பெரிய படகுகளால் மூடப்பட்டிருக்கும்.

பாட்னாவிலிருந்து ஒரு பெரிய படகு கீழ் நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. அது சீமையிலிருந்து வந்துள்ள வெடி உப்பு, ஜமக்காளம் முதலிய எத்தனையோ பொருள்களை ஏற்றிச் சென்று கொண்டிருந்தது. பாட்னாவிலிருந்து

கல்கத்தா போய்ச்சேர ஒரு வாரத்திற்கு மேலாகும். ஆகவே தின்கௌடியும், கோல்மேனும் சிறிது சிறிதாக நெருங்கிப் பழகத் தொடங்கினர்கள். ஆரம்பத்தில் ஒருவரோடு ஒருவர் பழகுவதற்கே தயங்கினர்கள் என்பது உண்மைதான். தின் கௌடிக்கு வெட்டிவிடப்பட்ட தலைமயிரும், பாதங்களை முழுதும் மூடிக் கொண்டிருக்கும் கனத்த செருப்பும் ஆணி யின் தலையைப் போன்ற அகலப் பட்டன்கள் தொங்கும் கறுப்புக் கோட்டும், திமிர் நிறைந்த வெள்ளை முகமும், நெருங்கிப் பழக முடியாத பயங்கரப் பொருளாகவே தோன் றியது. ஆனல், முதலில் கோல்மேன்தான் பேசத் துவங் கினன். சிறிது சிறிதாகத் தின்கௌடியின் தைரியமும் வளர்ந்தது. சம்பாஷணையிலிருந்து கம்பெனியின் எஜமானர் கள் மீது கோல்மேனுக்கு வெறுப்பு அதிகமென்று தெரியவந்தது. கவர்னரிலிருந்து கம்பெனியின் சாதாரண ஏஜண்டுவரை எல்லோரையும் தாக்கிப் பேச அவன் தயங்க வில்லை. தின்கௌடியும் கம்பெனியின் அதிகாரிகள்மீது வெறுப்படைந்திருந்தான். இருபது வருட காலமாக, அவன் கம்பெனியின் பெரிய பெரிய ஆபீசுகளிலே குமாஸ்தா வேலை பார்த்திருக்கிறன். அவன் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன் ஆயினும், அளவுக்குட்பட்ட ஆசையும், சுய மரியாதை உணர்ச்சியும் உடையவன். தின்கௌடி, தனது வாழ்க்கைக்குப் போதுமான அளவு சம்பாதித்துக் கொண்டு விட்டான். ஒரு பழைய ஏஜெண்டின் தயவினல், கொள்ளைச் சமயத்தில் இருபத்தினலு பர்கான ஜில்லாவைச் சேர்ந்த நாலு கிராமங்களுக்கு ஜமீன்தாராகிவிட்டான். அவைகளின் வருமானத்தோடு ஒப்பிட்டால், அவன் செலுத்த வேண்டிய வாரம் மிகக் குறைவானது. இது சாகிப்பின் தயவினல கிடைத்தது. ஆனல், அந்தத் தயவைப்பெறுவதற்காக அவன் செய்துள்ள பாவச் செயல், ஏழேழு ஜென்மங்களுக்கும் அவனை விட்டுப் போகாதென்பது அவனுக்குத் தெரியும். அவன் அந்த எஜமானனைக் குஷிப்படுத்துவதற்காக கிராமத்தின் ஓர் அழகிய பிராமண யுவதியை அவ னிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பித்தான். அந்தத் துரைமார் கள் அந்தக் காலத்தில் தங்கள் மனைவியரை, உடன் அழைத்து வருவதில்லை. ஏனெனில், அபாயங்கள் நிறைந்த ஆறுமாதக் கடற் பிரயாணம் அந்தளை சுலபமானதல்ல. தின்கௌடிக்கு வயது நாற்பத்தி ஐந்து. அவனுடைய புஷ்டி யான கறுத்த சரீரம் நல்ல ஆரோக்கியமாய் இருந்தது. ஆயினும், அவன் நாள்தோறும் காலையில் எழுந்ததும் கண்

ணுடியில் தன் முகத்தைப் பார்த்து, கைவிரல்களைச் சரி பார்த்துக் கொள்வான். ஒருநாள் இல்லாவிட்டால் ஒரு நாள், தன் உடம்பிலே குஷ்டம் தோன்றும் என்பது அவன் நம்பிக்கை. ஏனெனில், ஒரு பிராமணப் பெண்ணின் கற்பைக் கெடுத்ததற்குரிய தண்டனை அதுதான் என்பது அவன் கருத்து. துரைகளின் வசவுகளையும், உறுமல்களையும், அடிகளையும் சகித்துச் சகித்து அவன் அயர்ந்து போய்விட்டான். ஆகவே வேலை பார்க்கக்கூடிய சக்தி இருந்தும்கூட, அவன் வேலையை ராஜினுமா செய்துவிட்டுத் தன் கிராமத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்தான். இருபது வருட காலம் மௌனமாகச் சகித்துக்கொண்ட அவமான நெருப்பு, அவன் மனத்திலே புகைவிடத் தொடங்கிற்று. கோல்மேனும் தன்னைப் போலவே கம்பெனி அதிகாரிகளை வெறுக்கிறுன் என்பதைத் தெரிந்ததும் இருவரும் மனம் திறந்து பேசத் தொடங்கிஞர்கள்.

''ஈஸ்ட் இந்தியா கம்பெனி, வியாபாரத்திற்காகவே தோற்றுவிக்கப்பட்டது. ஆனுல் அது ஜனங்களைக் கொள்ளையடிக்க ஆரம்பித்து விட்டது. இங்கு வருகிற துரைமார்கள் எல்லோரும், விரைவிலே லட்சாதிபதிகளாகத் தங்கள் தேசத்திற்குத் திரும்ப வேண்டுமென்று ஆசைப்படுகிருர்கள். பெரியவர்கள், சின்னவர்கள் எல்லோருடைய நிலைமையும் இதுதான். கிளைவ் அதைஆரம்பித்தான், ஆனுல் அவனை யாரும் பிடித்துத் தண்டிக்கவில்லை. வாரன்ஹேஸ்டிங்தன்னுடைய லாப வெறியில், சேத்சிங்கின் ராணிமார்களைப் பட்டினி கிடந்து மடியச் செய்தான். அவதத்தின் பேகங்களைப் பிச்சைக்காரிகளாக்கிஞன். ஆனுல், அவனை எங்கள் தேசத்தவர்கள் சும்மா விட்டுவிடவில்லை. அவன் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டு விட்டாஞயினும் வருடக் கணக்கிலே நடந்த வழக்கில், அவன் சம்பாதித்தவைகள் யாவும் தொலைந்து போய்விட்டன.''

''யார் வழக்கு நடத்திஞர்கள் சாகிப்?''

''பார்லிமெண்ட். எங்கள் நாட்டிலே அரசன் தன்மனம் போனபடி எதையும் செய்யமுடியாது. எதேச்சாதிகாரம் செய்த ஒரு அரசனின் கழுத்தை நாங்கள் கோடாரியால் வெட்டிவிட்டோம். அந்த கோடாரி இன்னும் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. பார்லிமெண்ட் என்பது ஒரு பஞ்சாயத்து. அதில் பெரும்பாலோர் நாட்டிலுள்ள பணக்

காரப் பெரிய மனிதர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சில பெரிய ஜமீன்தார்கள், வார்சு பரம்பரையாக அதற்கு வருகிறார்கள்.''

''ஜமீன்தார்கள் எவ்வளவு காலமாக இருந்து வருகிறார் கள் சாகிப்?''

''எங்கள் நாட்டைப் பார்த்துத்தான், இந்தியாவிலும் ஜமீன்தாரி முறை புகுத்தப்பட்டிருக்கிறது. எங்கள் நாட்டிலே, அது பல நூற்றாண்டுகளாக அமுலில் இருக்கிறது. எங்கள் நாட்டிலும் அந்த முறையால், விவசாயிகளிடமிருந்து நில உரிமை, பலவந்தமாகத்தான் பறிக்கப்பட்டிருக்கிறது. ஜமீன்தாரி முறையை இங்கு புகுத்திய கவர்னரின் பெயர் தெரியுமா?''

''தெரியும், காரன்வாலிஸ்.''

''ஆம்; சீமையிலே அவன் முதல் நம்பர் கொலைகார ஜமீன்தார்; அவன் இங்கு வந்ததும், விவசாயிகள் நிலத்திற்குச் சொந்தக்காரர்களாக இருக்கும்வரை பஞ்சம், வெள்ளம் போன்ற நிலைமை ஏற்படும் பொழுது வாரம் சரியாக வசூலாக மாட்டாது என்பதைத் தெரிந்து கொண்டன். மேலும், கடல்கடந்து வந்துள்ள ஆங்கிலேயர்கள் இந்த அன்னிய நாட்டிலே நண்பர்களைத் தேடிக் கொள்ள வேண்டும் என்றும் கருதினான். அந்த நண்பர்களின் நலனும், தங்களுடைய நலனும் இணைக்கப்பட்டிருக்க வேண்டுமென்று அவன் விரும்பினான். அதற்காகவே இந்த ஜமீன்தாரி முறையைப் புகுத்தினான். ஜமீன்தார்கள் ஆங்கிலேயரின் சிருஷ்டி. விவசாயிகள் கலகம் செய்தால், அது ஆங்கிலேயர்களின் ஆட்சிக்கு ஆபத்து ஏற்படுத்துவது போலவே, ஜமீன்தார்களின் சொத்துக்கும் மரியாதைக்கும் ஆபத்தை உண்டாக்கும். ஆகவே, விவசாயிகளை நிலச் சொந்தக்காரர்களாக ஏற்றுக்கொள்ளாமல் பெரிய பெரிய ஜமீன்தார்களை உற்பத்தி செய்தால் அது ஆங்கிலேயர்களுக்கு ஆபத்துக் காலத்திலும், அமைதிக் காலத்திலும் லாபகரமானது என்று கருதி, அந்தக் கொலைகார ஜமீன்தார் இந்திய விவசாயிகளின் கழுத்தை அறுத்து விட்டான்.''

''ஆம்; கழுத்தை அறுத்து விட்டான்; இதில் சந்தேகமில்லை.'' (தின் கௌடிக்குத் தன் ஜமீனில் உள்ள விவசாயிகளின் நிலைமை அப்பொழுது நினைவிற்கு வந்தது.)

''ஜமீன்தார்களின் கொடுமையால், உலகத்தின் மக்க ளெல்லாம் அழுத்தப்பட்டுக் கிடக்கிறார்கள். ஆனால் இவர் களின் வாழ்வு இன்னும் சில நாளைக்குத்தான்.''

''அது எப்படி சாகிப்!''

''பிரான்ஸின் அரசனையும், ராணியையும் சில வருஷங் களுக்கு முன்னால் ஜனங்கள் கொன்று போட்டார்கள். அந்த ஜனங்களின் கோபாக்கினியிலே எத்தனையோ ஜமீன் தார்களும் ஜாகீர்தார்களும் எரிந்து சாம்பலாகிவிட்டார் கள். ஜமீன்தாரி முறையே அங்கு ஒழிக்கப்பட்டுவிட்டது. ஜனங்கள் எல்லோருக்கும் சுதந்திரம், சமத்துவம், சகோத ரத்துவம் என்ற கொள்கை விளம்பரப்படுத்தப்பட்டது. அந்தச் சமயத்தில் நான் பிரான்ஸிலே இருந்தேன். பிரான் ஸின் ராஜமாளிகையிலே, பிரெஞ்சுக் குடியரசின் மூவர்ணக் கொடி பறப்பதை நான் பார்த்தேன். இங்கிலாந்திலும், அரசனும், ஜமீன்தார்களும், அப்பொழுது 'வெடவெட' வென்று நடுங்கிக் கொண்டிருந்தனர். இங்கிலாந்திலும், பிரான்ஸைப் போலவே காரியங்கள் நடந்திருக்கும். ஆனால், மற்றொரு விஷயம் அவர்களைக் காப்பாற்றிவிட்டது. அதற் காக நான் வருந்துகிறேன்.''

''அது என்ன விஷயம் சாகிப்?''

''சீமைத் தொழிற்சாலைகளிலிருந்து, எத்தனையோ பொருள்கள் இந்தியாவின் சந்தையிலே வந்து குவிவதை நீ பார்க்கிறாயல்லவா? அதனால் எங்கள் நாட்டுச் சேணியர் களும் நூல் நூற்பவர்களும் வேலையை இழந்துவிட்டார்கள். எங்கள் நாட்டிலே முதலாளிகள் புதிய புதிய தொழிற்சாலை களைத் திறந்து அதில் ஜமீன்தாரின் கொடுமையால் பட்டினி கிடந்து வாடும் ஜனங்களுக்கு வேலை கொடுக்கிறார்கள். அவர்கள் செய்து குவிக்கும் சாமான்கள்தான், இங்கு வந்து குவிகின்றன. இதுவரை, எங்கள் நாட்டு இயந்திரங்கள் கையாலேயே ஓட்டப்பட்டு வந்தன. இப்பொழுது நீராவி இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. இனிமேல் துணிகளும் சாமான்களும் மிக மலிவாகப் போய் விடும். உங்கள் நாட்டுத் தொழிலாளர்களின் கதி அதோ கதிதான். எங்கள் நாட்டுத் தொழிலாளர்களின் கதியும் மோசந்தான். ஆயினும், அவர்கள் இந்தத் தொழிற்சாலைகளிலே வேலை செய்து வயிற்றை நிரப்பிவிட முடியும். இந்தத் தொழிற் சாலைகள் தோன்றாவிட்டால் பிரான்ஸின் நிலைமை எங்கள்

நாட்டிலும் ஏற்பட்டிருக்கும், மனிதன், மனிதனைப் போல வாழவேண்டும். மற்றவர்களை மிருகங்களாக நடத்தும் மனிதன், தானும் தனது குழந்தை, குட்டிகளும்கூட மிருகங்களாக ஆக நேரும்.''

''நீங்கள் சொல்வது சரிதான் சாகிப்! நான் என்னுடைய அடிமைகளையும் வேலைக்காரர்களையும் மனிதர்களாகக் கருதுவதில்லை. ஆனால், துரைமார்கள் என்னிடம் அதே மாதிரி நடக்கத் தொடங்கியபோதுதான் மனிதனுக்கு அவமானத்தைச் சகிப்பது எவ்வளவு கசப்பான காரியம் என்பது தெரிய வந்தது.''

''அடிமைப் பழக்கத்தை ஒழிப்பதற்கு, எங்கள் நாட்டிலே பலத்த கிளர்ச்சி நடக்கிறது.''

''சீமையிலும் அடிமைப் பழக்கம் உண்டா?''

''அகில உலகத்திலும், அந்தக் கதியற்ற ஆண்களும் பெண்களும் சந்தையிலே விற்கப்பட்டுத்தான் வருகிறார்கள். சீமையிலே, இதற்கு விரோதமான சட்டம் விரைவிலே நிறைவேறி விடுமென்று நான் நம்புகிறேன்.''

''ஆனால் அடிமைகளின் எஜமானர்களான பணக்காரர்கள் என்ன செய்வார்கள்?''

''பணக்காரர்கள் அதை விரும்பத்தான் மாட்டார்கள். எங்கள் பார்லிமெண்டிலே, பணக்காரர்களின் செல்வாக்குதான் அதிகம். ஆனால், அவர்களிலும் அநேகர் இதை வெறுக்கிறார்கள். மனிதரை மனிதன் விற்பதும்—வாங்குவதும் வெறுக்கத்தக்க செய்கைதானே! ஆனால், பாவம்—புண்ணியத்தைக் கருதி, இந்த அடிமைத்தனத்தை ஒழிக்க அவர்கள் முயற்சிக்கவில்லை. அதற்கு உண்மையான காரணம் வேறு. இன்றையத் தொழிற்சாலைகளிலே, பெரிய பெரிய இரும்பு இயந்திரங்கள் வேலை செய்கின்றன. அவற்றின் விலை மிக அதிகம். அடிமைகள், அதைப் பாழாக்கி விடக்கூடும். இப்பொழுது அடிமைகளுக்குப் பெரிய வேலைகளைக் கொடுப்பதில்லை. அவர்களுடைய வாழ்வும்—சாவும் தங்களுக்கு விளையாட்டாய் இருக்கும்பொழுது, அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தால் தங்களுக்குப் பெரிய நஷ்டத்தை உண்டாக்குவதின் மூலம் பழிவாங்க விரும்புவார்கள் என்று, பணக்காரர்கள் நினைக்கிறார்கள்.''

"தாயையும், குழந்தைகளையும் தனித் தனியாகப் பிரித்து விற்கப்படுவதைப் பார்க்கும்பொழுது என்னுல் சகித்துக்கொள்ள முடியவில்லை."

"எவன் இதைச் சகித்துக்கொள்கிருனே, அவன் மனிதனே அல்ல."

"பிரான்ஸிலே ராஜா இல்லாத ராஜ்யம், அதற்கென்ன பெயர் சொன்னீர்கள் சாகிப்?"

"குடியரசு."

"குடியரசென்ன முடியாட்சியைவிட உயர்ந்ததா?"

"குடியரசு எல்லாவற்றையும்விட உயர்ந்த ஆட்சி. அரசர்கள், மகாராணிகள், இளவரசர்கள், இளவரசிகள் இவர்களுக்காக தேசத்தின் வருமானத்தில் பெரும் பகுதி செலவாகி விடுகிறது. குடியரசிலே இந்தச் செலவு இருக்காது. அரசன் ஆட்சியைவிட அதிக நியாயமும் நேர்மையும், மக்களிடத்திலே அனுதாபமும் இருக்கும்."

"நான் எங்கள் கிராமத்தின் பஞ்சாயத்து நிர்வாகத்தைப் பார்த்திருக்கிறேன். அதில் உண்மையிலேயே அதிகமான நியாயம் இருந்தது. செலவு, மனிதனை அழித்துவிடவில்லை. ஆனுல், இந்தக் காரன்வாலிஸினுடைய ஜமீன்தார்கள் வந்து பஞ்சாயத்தை அழித்து விட்டார்கள். அதிலிருந்து ஜனங்களும் நசுங்கிப் போய்விட்டார்கள்."

"அதுசரி. ஆனுல் பிரான்ஸ் ஜனங்களின் உச்தேசம் குடியரசு மட்டுமல்ல அதைவிட உயர்ந்தது. அவர்கள் மக்கள் எல்லோரும் சமத்துவமும், சகோதரத்துவமும், சுதந்திரமுள்ள ராஜ்யத்தை ஸ்தாபிக்க விரும்பினுர்கள்."

"எங்கள் தேசத்திற்குக் கூடவா?"

"ஏன் நீங்கள் மனிதர்களில்லையா?"

"துரைமார்களின் பார்வையிலே நாங்கள் மனிதர்களாகப் படவில்லை."

"சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் நிறைந்த ஆட்சி, உலகம் முழுவதிலும் கறுப்பர்கள், வெள்ளையர்கள் எல்லா மனிதர்களுக்கும் ஏற்படாதவரை, மனிதர்கள் தங்களை மனிதன் என்று சொல்லிக்கொள்ள முடியாது.

இந்தக் கொலைகாரக் காரன்வாலிஸ், தனது விவசாயிகளைக் கூட மனிதர்களாக மதிப்பதில்லை. பிரான்ஸிலே, அரசனும் ஜமீன்தார்களும் ஒழிந்து விட்டார்கள். ஆயினும் வியாபாரிகள்—ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் உறவினர்களான வியாபாரிகள், ஆட்சிக் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு விட்டார்கள். அதனால் உண்மையான சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரத்தின் மூவர்ணக் கொடி அங்கே பறக்கவில்லை.''

''அப்படியானால் பிரான்ஸிலே அரசர்கள், ஜமீன்தார்களுக்குப் பதிலாக, பணக்காரர்களின் ராஜ்யம் ஏற்பட்டு விட்டதா?''

''ஆம்; இங்கிலாந்திலுங்கூட பணக்காரர்கள் கூச்சல் போடத் தொடங்கி விட்டார்கள். கடலைக் கடந்து இந்தியாவிலே போய் எங்களால் அரசாட்சி செய்ய முடியுமானால், இங்கிலாந்திலே ஏன் முடியாது என்று கேட்கிறார்கள்! அவர்கள் ராஜ்ய அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொள்ள விரும்புகிறார்கள்; ஆனால் அரசனை ஒழித்து விட்டல்ல!''

''இங்கிலாந்தில் அரசனுடைய கையில் ஆட்சி அதிகாரம் இல்லையென்று நீங்கள் சொன்னீர்களே?''

''ஆம்; ஆனால், இந்த வெள்ளை வியாபாரிகளின் கொடுமையை நான் இங்கு வந்துதான் பார்த்தேன். எனக்குத் தேசங்களைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று ஆசை இருந்தது. வசதி கருதி கம்பெனியிலே வேலை ஏற்றுக் கொண்டேன். கம்பெனி வேலையை ஏற்றுக்கொள்ளாவிட்டால், இந்த வியாபாரிகள் என்னைச் சந்தேகப்படத் தொடங்கி விடுவார்கள். என்னுடைய சுற்றுப் பிரயாணம் எந்த விதத்திலாவது தடைப்பட்டுப் போகும். ஆகவே இரண்டு வருட காலம் கம்பெனியின் வேலையென்ற நரகத்திலே கழித்தேன்.''

''நல்ல மனிதர்களுக்கு இது நரகம்தான் சாகிப்! எல்லாப் பாவ காரியங்களையும் செய்து, எல்லாவித அவமானங்களையும் சகித்துக்கொண்டு பணம் சேகரிப்பதிலே குறியாயுள்ளவன்தான் அங்கே காலம் தள்ள முடியும். காரன்வாலிஸினுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றும் ஒருவரின் தயவால், எனது பாவச்செயலின் ஊதியமாக நாலு கிராமத்திற்கு ஜமீன்தாராகி விட்டேன். அதன் பலன் கிடைத்து

விட்டது. மனேவியும் குழந்தைகளும் பேதியிலே போய்விட்டார்கள். அந்த ஜமீனின் பெயரைக் கேட்டாலே என் மனம் நடுங்குகிறது. நானும் உங்கள் கருத்தை ஏற்றுக் கொள்ளுகிறேன். சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவத்தின் ராஜ்யம்தான் உலகத்தில் சுவர்க்கத்தை உண்டாக்க முடியும்—மனிதர்களே அவமானத்திலிருந்து காப்பாற்ற முடியும்.''

''ஆனல், ஒப்புக் கொள்வதினுலும்—விரும்புவதினுலும் இது நடந்துவிடாது தின்கௌடி! இதற்காக பிரான்ஸைப் போல ஆயிரக்கணக்கான பேர்களேப் பலி கொடுக்க வேண்டும். அதுவும் மௌனமாகச் சாவதிலே பலன் இல்லே. இந்தியச் சிப்பாய்கள், ஆங்கிலேயர்களுக்காக இப்பொழுதுங் கூட லட்சக்கணக்கிலே பலியாகிருர்கள், இனி அவர்கள் தங்களுக்காகப் பலியாக வேண்டும். அதுவும் கேட்டுப் புரிந்துகொண்டு.''

''கேட்டுப் புரிந்து கொண்டா?''

''கேட்டுப் புரிந்து கொண்டு என்பதன் கருத்து, இந்தியர்கள் உலகத்தைப் பற்றிய அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்பதுதான். விஞ்ஞானம், இன்று மனிதர்களின் கைகளுக்குப் பலத்த சக்தியைக் கொடுத்திருக்கிறது; இந்த விஞ்ஞான அறிவினுலேயே, மனிதர்கள் துப்பாக்கிகளேயும் குண்டுகளேயும் கண்டு பிடித்துத் தங்களே வெற்றியாளர்களாக ஆக்கிக் கொண்டிருக்கிருர்கள். இந்த விஞ்ஞான அறிவுதான் உங்கள் நகரங்களேப் பாழாக்கி, இங்கிலாந்திலே புதிய புதிய யந்திரத் தொழிற்சாலேகள் நிறைந்த நகரங்களேத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. இந்த விஞ்ஞான அறிவை நீங்களும் வளர்த்துக் கொள்ள வேண்டும்.''

''அப்புறம்?''

''இந்தியாவிலுள்ள தீண்டாமை, ஜாதிப் பிரிவினேகள், ஹிந்து முஸ்லீம் வேற்றுமை யாவும் ஒழிய வேண்டும். நாங்கள் சாப்பிடுவதிலே வேற்றுமையோ, தீண்டாமையோ பாராட்டுகிறேமா?''

''இல்லே.''

''ஆங்கிலேயர்களுக்குள்ளே ஏழை பணக்காரன் என்ற வேற்றுமையைத்தவிர, வேறு எந்த ஜாதி வேற்றுமையாவது இருக்கிறதா?''

''இல்லை.''

''உங்கள் சதி வழக்கத்தை நிறுத்திவிட வேண்டும். வருடந்தோறும் ஆயிரக்கணக்கான பெண்களை நெருப்பி லிட்டுப் பொசுக்குவதை கடவுள் மன்னித்து விடுவாரென்று நீ நம்புகிறாயா?''

கோல்மேனும், தின்கௌடியும் கல்கத்தாவை அடைந்து பிரிந்து செல்ல நேர்ந்தபொழுது, அந்தப்பிரிவு அவர்களுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. பிரியும்பொழுது கோல்மேன் சொன்னான்:

''நண்ப! இப்பொழுது நாம் பத்தொன்பதாவது நூற்றாண்டிலே காலெடுத்து வைக்கிறோம். உலகத்திலே பெரிய பெரிய மாற்றங்கள் நிகழ்கின்றன. அந்த மாற்றங்களிலே நாமும் பங்கு கொள்ளவேண்டும். அதற்கு முக்கியமான ஆரம்பவேலை, அச்சாபீஸை ஏற்படுத்திச் செய்திப்பத்திரிகைகளைத் தோற்றுவிக்க வேண்டும். மக்களுக்கு உலக நிகழ்ச்சிகளைப் பற்றிப் பரந்த அறிவை உண்டாக்க வேண்டும்.''

## 3

இவ்வருடம் மழை நன்றாகப் பெய்யவில்லை. ஆடி மாதத்தில் கருகிப்போன புல் பூண்டுகளெல்லாம் கருகிய படியே இருந்துவிட்டன. நெல், கேப்பை, கோடைப் பயிர் எதுவும் விளையவில்லை. பட்டினியால் மாண்டவர் பலர், பசி தாங்காமல் ஊரைவிட்டு ஓடினர் சிலர்! துர்தேஹத்தின் பெரிய ஏரி வற்றிவிட்ட பொழுது, ஐம்பது மைல் சுற்றுப் புறத்திலே உள்ள ஜனங்கள் எல்லோரும் அதன் வயிற்றிலே வந்து கூடிவிட்டார்கள். தாமரையின் வேர்களையும், அடித் தண்டுகளையும் தோண்டித் தின்பதற்காக அவர்கள் கூடியிருந்தார்கள். அந்த முயற்சியிலே, அவர்களுக்குள் சண்டையும் ஏற்பட்டதுண்டு.

மறுவருடம் மழை பெய்தது. முதலில் விளைந்த கேப்பைப் பயிர்களைச் சேகரிப்பதிலே ஈடுபட்டிருந்த ரேக்காபகத் தன் மனைவி மங்கரியைக் கண்டு ஆச்சரியப்பட்டான். கடந்த ஒரு வருட காலத்திலே, உலகம் எங்கிருந்து எங்கோ போய்விட்டது. கிராமத்தில் ஏராளமான ஜனங்கள் இறந்து

விட்டார்கள். பலர் அங்குமிங்குமாகச் சிதறிப் போய் விட்டார்கள். இந்தச் சூழ்நிலையிலும் தங்கள் இருவருடைய உயிரும் உடலைவிட்டுப் போகாதது மட்டுமல்ல, தாங்கள் இருவரும் பிரியாமல் ஒன்ருக இருப்பதையும் கண்டு ஆச்சரியப் பட்டான். இதற்காக, அவன் துர்தேஹத்தின் ஏரிக்கு நன்றி செலுத்தவேண்டும்.

முன்னுலும் மழையில்லாமல் பஞ்சம் ஏற்பட்டிருக்கக் கூடும். ஆனல், விவசாயிகள் இவ்வளவு பயங்கரமான கஷ்டத்தை இதற்குமுன் அனுபவித்ததே இல்லை. அந்தக் காலத்தில் ஒரே ஓர் அரசாங்கம்தான் இருந்தது. அதற்குச் செலுத்தவேண்டிய வரியும் மிகக் குறைவு. இப்பொழுது கம்பெனியின் அரசாங்கமும், அதற்குக் கீழே பலம் பொருந்திய ஜமீன்தாரின் அரசாங்கமும் இருக்கிறது. அவர்களுடைய சிப்பாய்கள், சேவகர்களுடைய உதையிலிருந்து, எலும்பும் தோலுங்கூடத் தப்புவது கடினம். இப்பொழுது ஒரு வருட உழைப்பின் பலனுகக் கிடைக்கும் வருமானம், ஒன்றரை மாதச் சாப்பாட்டிற்குக் கூடப் போதுமானதாய் இல்லை. பஞ்சத்திற்காக விவசாயிகள் எங்கிருந்து மிச்சம் பிடித்து வைப்பார்கள்?

மார்கழி மாதத்தில் மங்கரி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றபோது, ரேக்காவின் ஆச்சரியம் எல்லையைக் கடந்து விட்டது. தனது ஐம்பதாவது வயதில் குழந்தை பிறந்ததற்காக அல்ல; மங்கரியின் வயது முப்பதுதான். அவள் ஏற்கெனவே சில குழந்தைகளைப் பெற்றுப் பறிகொடுத்திருக்கிருள். ஆனல், எலும்பையும் தோலையும் கூடக் காப்பாற்றி வைத்துக்கொள்ள முடியாத இந்தப் பஞ்ச காலத்திலே அவள் ஒரு புது உயிரை எப்படிக் காப்பாற்றித் தோற்றுவித்தாள் என்று தான் ஆச்சரியப்பட்டான். பஞ்சத்தில் பிறந்த குழந்தை ஆகையால், அவனுக்குப் பஞ்சன் என்ற பெயரும் வைத்தான்.

மாசி மாதம் ராம்பூரின் ஜமீன்தார் தனது யானை, குதிரை, சிப்பாய் சேவகர்களுடன் தயாள்பூருக்கு விஜயம் செய்தார். ஜமீன்தாருடைய வீட்டிலே, யாருக்கும் எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லையென்று ரேக்கா கேள்விப்பட்டிருந்தான். தயாள்பூரில் ஜமீன்தாரின் கச்சேரி ஊரின் ஒரு கடைசியிலே இருக்கிறது. அதைச் சுற்றி இருபத்தைந்து ஏக்கர் மாந்தோட்டம் ஒன்றுண்டு. அதற்குத் தண்ணீர் இறைப்பது, வெட்டுவது, கொத்துவது போன்ற வேலைகளை, தயாள்

பூர் விவசாயிகள் ஊழியத்திற்குச் செய்யவேண்டும். ஒவ்வொரு வீட்டிற்கும் ஐம்பது மரங்கள் வீதம் ஒதுக்கிவிடப்பட்டிருந்தது. அதில் ஒரு மரமாவது உலர்ந்து போய்விட்டால், ஒன்றே கால் ரூபாய் அபராதம் விதிக்கப்படும். ரேக்காவிற்குப் பிந்திய தலைமுறை, ஜமீன்தாரி முறை அநாதி காலந் தொட்டு இருந்துவருவதாக நம்பப்போகிறது. ரேக்காவிற்கும் சோபரனுக்கும் தெரிந்துள்ள ஜமீன்தாரி முறைக்கு முந்திய பஞ்சாயத்து ஆட்சி, அவர்களுக்கு வெறும் கற்பனைக் கதையாகப்படும். ஜமீன்தாரின் சேவகர்கள் இந்தப் பஞ்சத்திற்குப் பிறகு இன்னும் கடுமையாகி விட்டார்கள். இந்தப் பஞ்சம் விவசாயிகளின் மனோதிடத்தை ஒடிக்கவும், எஜமானர்களின் பிடிப்பை அதிகப்படுத்தவுமே வந்திருக்கிறது என்று அவர்கள் கருதினார்கள். மார்கழி மாதத்தில் ரேக்காவின் குடிசை மீது படர்ந்திருந்த சுரைக்கொடிகள் பிஞ்சும் பூவுமாகக் காட்சியளித்தபோது, எஜமானர்களின் சேவகர்கள் அதைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆனால் ரேக்காவின் நடவடிக்கை, பஞ்சத்திற்குப் பிறகும் மிகக் கடுமையாகிவிட்டது என்று ஜனங்கள் சொல்லும்படி இருந்தது. ரேக்கா தன் செயலில் புதுமை எதுவும் இருப்பதாகக் கருதவில்லை. உண்மை என்னவெனில், பஞ்சத்தின் கொடுமையால் தாக்கப்பட்டு கிராமவாசிகள் எல்லோரும் ரொம்ப ஒடுங்கிப் போய்விட்டார்கள். அவர்களோடு ஒப்பிட்டால், ரேக்கா கொஞ்சம் உயரத்தில்தான் இருந்தான். இதைத்தான் கடுமையென்று மற்றவர்கள் கருதினார்கள்; சேவகர்கள் தனது சுரைக்கொடியைச் சுற்றுவதை அவன் வெறுத்தான். என்றாலும், அதை வாய்விட்டுச் சொல்லவில்லை. ஒருநாள் ஒரு சேவகன், சுரைக்காய் பிடுங்குவதற்காக அவனுடைய கூரையில் ஏறினான். அப்பொழுது தன் மகனை மடியில் வைத்துக் கொஞ்சிக்கொண்டிருந்த ரேக்காவிற்கு, கூரையில் ஆள் ஏறும் அரவம் கேட்டது. அவன் வெளியே வந்து பார்த்தான். சேவகன் கூரைமீது உட்கார்ந்துகொண்டு சுரைக்காய் பிடுங்கிக் கொண்டிருந்தான். மூன்று காய்களைப் பிடுங்கிவிட்டான். நான்காவதை ஒடித்துக்கொண்டிருந்தான். இதைப் பார்த்த ரேக்காவிற்கு உடம்பெல்லாம் பற்றி எரிந்தது. அவன் கிராமமெங்கும் கேட்கும்படி கூச்சலிட்டு, ''யாரது?'' என்று கத்தினான்.

''திவான் சாகிப்பிற்காக சுரைக்காய்கள் பிடுங்கிக் கொண்டிருக்கிறேன். பார்க்கவில்லையா?'' சேவகன் அலட்சியமாகப் பதில் சொன்னான்.

‘‘உன் கால், கை தப்பிப் பிழைக்க வேண்டுமானுல் பேசாமல் கீழே இறங்கி வா.’’

‘‘கிராம ஜமீன்தாரின் சேவகன், ஞாபகமிருக்கட்டும்.’’

‘‘எல்லாம் தெரியும். சுரைக்காயை மரியாதையாக அங்கே விட்டுவிட்டு இறங்கிவா.’’

சேவகன் பேசாமல் இறங்கிப் போய்விட்டான். இதைக் கேட்ட திவான், கோபத்தை அப்பொழுது அடக்கிக்கொண் டான். மாசி மாதம் ஜமீன்தார் வரும்போது தீர்த்துக் கட்டவேண்டிய நம்பரில் ஒன்றைச் சேர்த்துக்கொண்டான்.

ஜமீன்தார் வந்த அன்று மாலை பழைய அதே சேவகன் ரேக்காவின் வீட்டிற்கு வந்து அதிகாரத்தோடு,

‘‘நாளையிலிருந்து தினந்தோறும் அதிகாலையில் எஜமான ருக்காக இரண்டு சேர் பால் கொண்டு வந்து கொடுக்க வேண்டும்’’ என்ருன்.

‘‘எங்களிடம் எருமையோ, பசுவோ கிடையாதே. எங் கிருந்து பால் கொண்டு வருவோம்?’’

‘‘எங்கிருந்து கொண்டு வருவாயோ, எஜமானரின் உத்தரவு’’ என்று கூறிப் போய்விட்டான்.

ரேக்காவிடம் பசுவோ, எருமையோ கிடையாதென்பது திவானுக்குத் தெரியும். ஆனுல் ரேக்காவை ஒழுங்கு படுத்த வேண்டுமென்பதுதானே அவன் நோக்கம். மாலையில் ஜமீன் தாரிடம் ரேக்காவைப்பற்றிச் சரியாக வத்தி வைத்தான். அவனுல்தான் கிராமம் முழுவதும் கெட்டுவிடுகிறதென்றும் சொன்ஞன். இரவிலேயே ஜமீன்தாரின் மனதைச் சரிப் படுத்திவிட்டான்.

காலையில் ரேக்காவிடமிருந்து பால் வராமற் போகவே சேவகன் போனுன். ரேக்கா தன்னிடம் எருமை, பசு எதுவும் கிடையாதென்ற கதையையே மறுபடியும் ஒப்புவித் தான். இதைக் கேட்ட ஜமீன்தார், ஐந்து குண்டர்களான சிப்பாய்களை அனுப்பிப் ‘‘போங்கள் அந்த அயோக்கியப் பயலின் மனைவியின் பாலைக் கறந்துகொண்டு வாருங்கள்’’ என்று உத்தரவிட்டான்.

கிராம ஜனங்களில் பலர் அங்கே இருந்தார்கள். சிப் பாய்கள் வருவதைப் பார்த்து அவர்கள் ரேக்காவைப் பிடித்

துப் போகத்தான் வருகிருர்கள் என்று கருதினுர்கள். ஆனுல், சிப்பாய்கள் ரேக்காவிடம் ஒன்றும் பேசாமல் அவனைத் தூணுேடு சேர்த்துக் கட்டிவிட்டார்கள். உடனே ஒருவன் உள்ளே போய் மங்கரியைப் பிடித்து வந்தான். கையாலாகாத ரேக்கா தன் ரத்தம் தெரிக்கும் கண்களால் பார்த்துக் கொண்டிருக்க, அழுது ஓலமிடும் மங்கரியின் மார்பைப் பிடித்து கிளாஸிலே சில துளிப் பாலைக் கறந்துகொண்டு, அவளையும் ரேக்காவையும் அப்படியே விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். வெட்கமும், அவமானமும் தாங்க முடியாமல், தலை கவிழ்ந்து உட்கார்ந்துவிட்டாள் மங்கரி. தன் நினைவு பெற்ற ரேக்கா,

''மங்கரி! வெட்கப்படாதே. நம்முடைய பஞ்சாயத்து அழிந்துபோகாமல் இருக்குமானுல், ஒரு சக்கரவர்த்தி கூட இவ்விதம் செய்திருக்க முடியாது. இந்த அவமானத்திற்கு நான் பழி வாங்குவேன். நான் உண்மையான அஹிர்ஜாதியானுக்குப் பிறந்திருந்தால், இந்தத் திவானையும் ராம்பூரின் ஜமீன்தாரையும் பூண்டோடு ஒழித்துவிடுவேன். மங்கரி! என் கைகளை அவிழ்த்துவிடு. இந்த அவமானத்திற்குப் பதில் என் கைகள் செய்யும்.''

மங்கரி, மழைகால மேகம்போல நீர் பொழியும் கண்களோடு ரேகாவின் கட்டுகளை அவிழ்த்துவிட்டாள். அவன் உள்ளே போய், தன் மகனை முத்தமிட்டுவிட்டு,

''மங்கரி இந்த வீட்டிலிருந்து என்னென்ன எடுத்துக் கொள்ள வேண்டுமோ அவைகளை எடுத்துக் கொள். நான் வீட்டிற்கு நெருப்பு வைக்கப்போகிறேன்.''

அவனுடைய குரலின் வேகத்தைக் கண்ட மங்கரி பேசாமல் உள்ளே சென்று தன் குழந்தையையும், சில துணிகளையும் எடுத்துக்கொண்டு வெளியே வந்து அவன் கால்களிலே விழுந்தாள்.

''மங்கரி! உன்னுடைய கௌவரத்திற்காக மட்டுமல்ல, இந்தக் கிராமத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகவே பழி வாங்க வேண்டும். நீ போ. இந்தப் 'பஞ்ச'னுக்கு, அவன் தகப்பன் எப்படிப்பட்டவன் என்பதை மட்டும் சொல்ல மறந்துவிடாதே. நேரமாகிறது நீ போ. நான் நெருப்புக் கொண்டு வருகிறேன்.''

அவள் கிராமத்தைவிட்டு கொஞ்சதூரம் போவதற்குள்ளேயே, தன் மன நெருப்பைப் போலவே தனது வீடும்

பற்றி யெரிவதைப் பார்த்தாள். கிராமத்தின் எல்லையில் உள்ள ரேக்காவின் வீடு பற்றியெரிவதைப் பார்த்த கிராம வாசிகள், அதை நோக்கி ஓடினார்கள். ரேக்கா ஒரு பெரிய வாளைக் கையிலேந்திக் கொண்டு, ஜமீன்தாரின் கச்சேரியை நோக்கி நடந்தான். காலனைக் கண்ட சேவகர்கள் அலறி ஓடிவிட்டார்கள். திவானையும் ஜமீன்தாரையும் வெட்டும் பொழுது ரேக்கா,

''ஏ பாவிகளே? உங்கள் குலத்தில் ஒருவரையும் விட்டு வைக்கமாட்டேன்'' என்று கர்ஜித்தான்.

ரேக்கா, தான் சொல்லியபடியே செய்து முடித்தான்.

கொலைகாரக் காரன்வாலிஸ், இவ்வித எத்தனையோ ரேக்காக்களை இந்த நாட்டிலே தோற்றுவித்துவிட்டான்.

# மங்களசிங்

காலம் : கி.மு. 1857

அவர்கள் இருவரும் இன்று டோவரைப் (Dover) பார்க்கச் சென்ருர்கள். அருகே, அரசனின் விரோதிகள் ஆயுள்முழுவதும் அடைத்து வைக்கப்பட்ட கொட்டடிகளைப் பார்த்தார்கள். அரசன் உலகத்தில் கடவுளின் குழந்தை; மக்களின் வாழ்வும்—சாவும் அவன் கையில்தான் இருக்கிற தென்பதை ஞாபகப்படுத்தும் சின்னங்களான கோடரி முதலிய ஆயுதங்களைப் பார்த்தார்கள். இவைகள் எல்லா வற்றையும்விட அவர்கள் மனதைக் கவர்ந்தது, இங்கிலாந் தின் அரசர்களுடையவும் ராணிகளுடையவும் தலைகள் துண்டிக்கப்பட்ட இடமும், துண்டித்த ஆயுதமும்தான்.

ஆனி ரஸல் இன்றும் அவனுடைய கையோடு தனது மிருதுவான கையைக் கோர்த்துக் கொண்டிருந்தாள். அந்தக் கரங்களின் மென்மை, இன்று அவன் உடலிலே ஒரு புதிய உணர்ச்சியை உண்டாக்கிக் கொண்டிருந்தது. பதினேரு வரு டங்களுக்கு முன்பே (1846) அந்த மகான் விஞ்ஞானி (மைக்கேல் பாரடே) யால் கண்டுபிடிக்கப்பட்ட மின்சார இயந்திரத்திலிருந்து தோன்றும் மின்சார சக்தியை போன்ற ஒரு சக்தி, அவள் உடம்பிலிருந்து தோன்றி அவன் உடம் பிலே ஓடுவதாக உணர்ந்தான்.

''ஆனி! நீ மின்சாரத்தைச் சேமித்து வைக்கும் பாட்டரியா?''

''ஏன் அப்படிக் கேட்கிருய் மங்கி?''

''எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. பதினறு வரு டங்களுக்கு முன்னல் இங்கிலாந்தின் மண்ணிலே காலெடுத்து வைத்தபோது, இருளிலே இருந்து ஒளி நிறைந்த பிரதேசத் திற்கு வந்ததுபோல் உணர்ந்தேன். நான் இங்கே ஒரு பரந்த உலகத்தை—அகல நீளத்தில் அல்ல, எதிர் காலத்தின் ஆழத்திலே மிகுந்த தூரம் முன்னேறிச் செல்லும் ஒரு பரந்த உலகத்தைப் பார்த்தேன். பீட்ரூட் கிழங்கிலிருந்து சீனி (1808) நீராவிக்கப்பல் (1819) ரயில் (1825) தந்தி (1833)

நெருப்புப்பெட்டி (1838) போட்டோ (1839) மின்சாரஒளி (1844) இவைகளை யெல்லாம் பார்த்து, நான் ஆச்சரியப் பட்டேன். ஆனால், கேம்பிரிட்ஜில் இவைகளைப் பற்றியெல் லாம் படிக்கவும் ரசாயனசாலைகளிலே ஆராய்ந்துபார்க்கவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தபொழுது இந்த உலகத்தின் எதிர்காலம் எப்படியிருக்குமென்று என்னால் ஓரளவு உணர்ந்து கொள்ள முடிந்தது.''

''உண்மையிலேயே நீ இங்கிலாந்திற்கு வந்ததை இருளி லிருந்து ஒளிக்கு வந்ததாகக் கருதுகிறாயா?''

''நான் இப்பொழுது சொல்லிய விஷயங்களைப் பொறுத்த அளவில், இன்றேல் நான் இந்தியாவை விட்டுப் புறப்படும்பொழுது என் மனத்தில் இரண்டே இரண்டு எண் ணங்கள்தான் இருந்தன. ஒன்று எனது இஷ்ட தெய்வமான ஏசுநாதரின் பக்தர்கள் நிறைந்துள்ள தேசத்தைப் பார்க்க வேண்டுமென்பது. மற்றொன்று என் முன்னோர்கள் இழந்து விட்ட ராஜ்யலெட்சுமியைத் திருப்பிப் பெற முயற்சி செய்ய வேண்டுமென்பது.''

''உன்னைப்பற்றிய முழு விபரங்களையும் உன்னிடம் கேட்க வேண்டுமென்று, எத்தனையோ முறை நான் நினைத் தேன். ஆனால், எப்படியோ தள்ளிக்கொண்டு போய்விட்டது முடியுமானால் இன்று சொல்.''

''என்னுடைய வாழ்க்கையின் போக்கையே மாற்றி விட்ட உன்னிடம் சொல்வதற்கு, எனக்கு என்ன ஆட் சேபணை இருக்க முடியும்? அன்பான ஆனீ! நட, தேம்ஸ் நதியின் அந்த அமைதி நிறைந்த கரைக்குச் செல்வோம். எங்கள் கங்கையைப் போன்று அவ்வளவு பெரியதும் அழகு நிறைந்ததுமல்ல இந்தத் தேம்ஸ். ஆயினும் தேம்ஸ் நதி யைப் பார்க்கும்பொழுதெல்லாம், கங்கையின் இனியநினைவு வந்து விடுகிறது. கிருஸ்துவர்கள், பரமபிதா ஏசுவின் தந்தையைத் தவிர, வேறு எதையும் வணங்குவதை அஞ் ஞானம் என்று கருதுகிறார்கள் என்பது உனக்குத் தெரியும். ஆனால் இந்தத் தேம்ஸ் ஒருமுறை என்னைக் கிருஸ்துவத் தன்மையிலிருந்து மறுபடியும் அஞ்ஞானியாக்கிவிட்டது. என்னுடைய ஹிந்து அஞ்ஞானித் தாய் மிகுந்த பக்தியோடு மலர்தூவி, கங்கையை வணங்குவதை நான் பார்த்திருக் கிறேன்.''

இருவரும் தேம்ஸின் கரையை அடைந்து விட்டார்கள்! அங்கிருந்த ஒரு கல் ஆசனத்தின்மீது தேம்ஸ் நதியைப்

பார்த்துக்கொண்டு உட்கார்ந்தனர். வெள்ளைத்தொப்பிக் குள்ளிருந்து வெளி வந்து கன்னங்களிலே தொங்கும் ஆனி யின் பொன்னிறமான கூந்தல், காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தது. மங்களசிங் அவளை முத்தமிட்டுவிட்டுத் தன்னுடைய பேச்சைத் தொடங்கினான்.

''இந்தத் தேம்ஸின் கரையிலே பலமுறை நான் எங்கள் கங்கைக்கு மானஸீகமாக மலர் தூவி இருக்கிறேன்.''

''உன் தாயார் கங்கைக்கு மலரிட்டு வணங்குவாளா?''

''ஆம்; மிகுந்த பக்தியோடு, கிருஸ்துவர்கள் ஏசுநாத ரிடம் எவ்வளவு சிரத்தை காட்டுகிறார்களோ, அவ்வளவு சிரத்தையோடும். நான் கிறிஸ்துவனாக மாறிய ஆரம்பக் காலத்தில் இது வெறுக்கத்தக்க விஷயமென்று கருதினேன். ஆனால் இப்பொழுது எத்தனையோ முறை முன்பு கங்கையைப் பற்றி என் மனத்திலே எழுந்த குறைவான நினைவிற்காகப் பச்சாதாபப் பட்டிருக்கிறேன்.''

''கிருஸ்துவ மதம் எந்த உணர்ச்சியை அழித்துவிட விரும்பிற்றோ அதே உணர்ச்சியை எங்கள் கவிஞர்கள் மறு படியும் உயிர்ப்பித்து விட்டார்கள். இந்தத் தேம்ஸ் நதியை நாங்கள் தந்தை தேம்ஸ் என்று அழைக்கிறோம்.''

''நாங்கள் கங்கையைத் தாய் என்று அழைககிறோம்.''

''உங்கள் கற்பனை மிக இனிமையானது மங்கி! நல்லது உன்னைப் பற்றிய விஷயங்களைச் சொல்.''

''காசியும் ராம்நகரும். கங்கைக்கு இக்கரையிலும் அக் கரையிலும் அமைந்துள்ள நகரங்கள். நான் பதினாறு வயது வரை கங்கைக் கரையிலே வளர்ந்தவன். காசியில் என்னு டைய மாளிகை, கங்கையின் கரை ஓரத்திலேயே அமைந் திருக்கிறது. அதன் அறுபது படிகள் கொண்ட படிக்கட்டு, கங்கையின் நீர்ப்பரப்பு வரை செல்லுகிறது. நான் இந்தப் பூமியில் வந்து முதல் முதல் கண்ணைத் திறந்தபொழுது, கங் கையைத்தான் பார்த்தேன் என்று நினைக்கிறேன். என்னு டைய ரத்தத்திலே, கங்கையும் கலந்திருப்பதாக ஏனோ எனக்குத் தோன்றுகிறது. ராம் நகரில் என் பாட்டனாரின் கோட்டை இருக்கிறது. ஆனால், இரண்டொரு முறை கங்கையிலே படகில் செல்லும்பொழுது, தூர இருந்து மட் டும் பார்த்திருக்கிறேன். உள்ளே சென்று பார்க்கவோ அல்

லது அதை அடிக்கடி பார்க்கவோ எனக்கு ஆசை ஏற்பட்டதில்லை. தாயார் அந்தப் பக்கம் போகவே விரும்பமாட்டாள். அந்தக் கோட்டையின் யுவராணியாய் இருக்க வேண்டியவள், ஆங்கிலேயருக்குப் பயந்து காசியிலே ஒரு வீட்டில் தன் பெயரையும் மாற்றிக் கொண்டு வாழ்ந்து வரும் பொழுது, அந்தக் கோட்டையைத் தலை நிமிர்ந்து பார்க்கத் தைரியம் எப்படி வரும்? என்னுடைய தாத்தா மகாராஜா சேத்சிங்கை, கொள்ளைக்கார வாரன் ஹேஸ்டிங்ஸ் காரணமின்றிப் பதவியிலிருந்து தள்ளினான். இங்கிலாந்தில் ஹேஸ்டிங்ஸ் தன் செயலிற்கு உரிய பலனை அடைந்தான். ஆயினும், என் தாத்தாவிற்கு நியாயம் கிடைக்கவில்லை. பறித்துக்கொண்ட ராஜ்யத்தைத் திரும்பக் கொடுப்பது சுலபமான நியாயமல்ல.''

''உன்னுடைய தாயார் இன்னும் உயிரோடிருக்கிறாளா?''

''எங்கள் பாதிரியார் காசியிலிருந்து அடிக்கடி கடிதம் எழுதுகிறார். அவர் மூலம் என் தாயாருக்கு, நானும் கடிதங்கள் அனுப்பிக் கொண்டிருக்கிறேன். அவர் கடிதப்படி ஐந்து மாதத்திற்கு முன்வரை என் தாயார் உயிரோடுதான் இருக்கிறாள்.''

''நீ ஆரம்பத்திலே கிருஸ்துவன் இல்லையா?''

''இல்லை. என் தாயார் இப்பொழுதுங்கூட ஹிந்துவாகவே இருக்கிறாள். முதலிலே அவளையும் கிருஸ்துவ மதத்தில் சேர்த்துவிட வேண்டுமென்று நான் விரும்பியதுண்டு. ஆனால் இப்பொழுது...''

''இப்பொழுது நீயும் உன் தாயாரைப்போல கங்கை மாதாவுக்கு மலர் தூவி வணங்குவாய்.''

''பாதிரி சாஹிப், நான் கிருஸ்து மதத்தைவிட்டுப் போய்விட்டதாகச் சொல்லுவார்.''

''நீ எப்படிக் கிருஸ்துவனானாய்?''

''அறிவின் ஆழத்திலிருந்து தோன்றிய முக்கியமான தூண்டுதல் எதுவுமில்லை. காசியிலும்கூட ஆங்கிலப் பாதிரிகளும் பாதிரிப் பெண்களும் கிருஸ்துவ மதப் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால், காசி, ஹிந்துக்களின் ரோமாபுரி யாகையால் அவர்களுக்கு வெற்றி கிடைப்பதில்லை. ஒரு பாதிரி

டாக்டர், ஒருமுறை என் தாயாருக்கு வைத்தியம் செய்தார். அதைத் தொடர்ந்து அவருடைய மனைவி எங்கள் வீட்டிற்கு அடிக்கடி வந்து போவாள். அவளுக்கும் என் தாயாருக்கும் நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அப்பொழுது நான் சின்னப் பையன். ஆகையால் அந்தப் பாதரியின் மனைவி என்னைத் தூக்கி வைத்துக் கொண்டே இருப்பாள்...''

''நீ குழந்தைப் பருவத்திலே அதிக அழகாய் இருந்திருப்பாய் மங்கி! உன்னைப் பார்த்தவர்கள் யார்தான் தூக்காமலிருக்க முடியும்?''

''அந்தப் பாதிரிப் பெண்ணின் தூண்டுதலால், ஐந்தாறு வயதிலிருந்தே நான் பாதிரியாரிடம் ஆங்கிலம் படிக்கத் தொடங்கினேன். என் தாயார் குடும்பத்தின் இழந்து போன கௌரவத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாள். தன் மகன் ஆங்கிலம் படிப்பதன் மூலம் முன்னோர்கள் இழந்துவிட்ட ராஜ்ய லெட்சுமியைத் திருப்பிக் கொண்டு வரக்கூடும் என்று நம்பினாள். நான் மூன்று வயதுக் குழந்தையாய் இருக்கும்பொழுதே என் தந்தையார் இறந்துவிட்டார். ஆகையால், எல்லாக் காரியங்களையும் தாயாரே கவனிக்க வேண்டி இருந்தது. ராஜ்யத்தோடு கூடவே எங்கள் சொத்துக்களும் போய் விட்டன. ஆயினும், என் தாயாரிடம் அவள் மாமியார் கொடுத்த நகைகள் ஏராளமாயிருந்தன. மேலும் என் மாமாவும் தன் தங்கை விஷயத்திலே அதிகக் கவனம் செலுத்தினார். நான் எட்டு வயதை அடைந்தபொழுது, அதிக நேரத்தைப் பாதிரி வீட்டிலேயே கழித்தேன். நான் ஹிந்து தர்மத்தைப் பற்றிக் கேள்விப்பட்டது மிகவும் குறைவு. கொஞ்சநஞ்சம் கேள்விப்பட்டதும், அந்தப் பாதிரி மனைவியின் வாயினாலேதான். ''மகனே உன்னுடைய அதிர்ஷ்டத்தினால்தான் உன் தாயார் தப்பித்து விட்டாள். இல்லாவிட்டால் உன் தந்தையார் இறந்த பிறகு, சதியென்று சொல்லி உன் தாயாரையும் உயிரோடு கொளுத்தியிருப்பார்கள்'' என்று அவள் சொல்லுவாள். என் தாயாரை உயிரோடு கொளுத்துவது, சதி, ஹிந்து மதம் இவைகளையெல்லாம் நன்றாக நினைத்துப் பார்த்தால், என் மனத்தில் எவ்வித உணர்ச்சி எழும்? அந்த மதத்தைப்பற்றி என் மனத்திலே வெறுப்பைத் தவிர வேறு என்ன ஏற்பட முடியும்? 'சதி' முறை தடுக்கப்படுவதற்கு (1829) இரண்டு வருஷங்கள் முந்திய காலம் அது. எனது நன்மையைக் கருதி, என் தாயார் என்னைப் படிப்பதற்

காகக் கல்கத்தாவிற்கு அனுப்பி வைத்தாள். நான் கல்கத்தாவில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது, என்னைக் கிருஸ்துவனுக ஆக்குவதற்காகவே இந்தப் பாதிரியின் மனைவி இவ்வளவும் செய்தாளோ என்ற சந்தேகம் என் தாயாருக்கு ஏற்பட்டது. நல்லவேளையாக இந்தச் சந்தேகம் முதலில் ஏற்படவில்லை. அப்படி ஏற்பட்டிருந்தால், எனது அறிவுக் கண் திறக்கச் சந்தர்ப்பமே இல்லாமற் போயிருக்கும்?''

''குழந்தைகள் படிப்பதற்கு, இந்தியாவில் ஒன்றும் ஏற்பாடுகள் கிடையாதா?''

''அவர்கள் படிப்பிக்கப் படுகிறுர்கள். ஆனால், பதின் மூன்று நூற்றுண்டுகளுக்கு முன்னுல் உபயோகப்படக் கூடிய கலைகளை மட்டுமே.''

''அப்படியானுல், இங்கிலாந்திற்கு வருவதற்கு உன் தாயார் எப்படி அனுமதி கொடுத்தாள்!''

''அனுமதி கொடுத்தாளா! நான் சொல்லாமலே வந்து விட்டேன். பாதிரி உதவி செய்தார். கேம்பிரிட்ஜிலே படிப்பதற்கு ஏற்பாடுகள் செய்து தந்தார். நான் இங்கு வந்து எனது சௌக்கியத்தைப்பற்றியும் சந்தோஷத்தைப் பற்றியும் எழுதிய பொழுது என் தாயாரின் ஆசீர்வாதமும் கிடைத்தது. அவளுக்கு வயது ஐம்பத்தைந்திற்குமேல் ஆகி விட்டது. ஒவ்வொரு கடிதத்திலும் என்னைப் புறப்பட்டு வரும்படி எழுதிக்கொண்டிருக்கிறுள்.''

''நீ என்ன பதில் எழுதுகிறுய்?''

''பதிலா? ஏதாவது சால்சாப்புத்தான். தன் மகன் சாம் ராஜ்யத்தின் தலை நகரில் இருக்கிறுன். இங்லாந்தின் மகா ராணியைச் சந்தித்துப் பேசுவான். என்றுலும் ஒரு நாள், சேத்சிங்கின் சிம்மாசனத்திற்கு எஜமானனுகத் திரும்பி வருவான் என்று அவள் நம்பிக்கொண்டிருக்கிறுள்.''

''பாவம், அந்தக் கங்கையை வணங்கும் ஹிந்துத் தாய்க்கு, நீ மகாராணி விக்டோரியாவைச் சந்திப்பதற்குப் பதிலாக, உலகத்திலே முடிதரித்த தலைகளுக்கெல்லாம் பயங்கர விரோதிகளான காரல் மார்க்ஸையும், பெடரிக் ஏங்கெல்ஸையும் சந்தித்துக் கொண்டிருக்கிறுய் என்பது எப்படித் தெரியும்?''

''இப்பொழுதைய இந்தியா, முதலாளித்துவ உலகத்தையும், அதன் சக்தியையுமே புரிந்து கொள்ளாதிருக்கும்போது, மார்க்ஸின் பொது உடைமைக் கொள்கையை அது எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?''

''நீ மார்க்ஸுடன் இந்தியாவைப் பற்றி எப்பொழுதாவது பேசியிருக்கிறாயா?''

''எத்தனையோ தடவை. அவர் இங்கேயே உட்கார்ந்து கொண்டு, இந்தியாவின் வாழ்க்கைப் போக்கைப் பற்றி எவ்வளவு அதிகம் தெரிந்து கொண்டிருக்கிறார் என்பதை நினைக்கும் பொழுது, எனக்கு ஆச்சரியம் ஏற்படுகிறது. ஆனால், இது ஒன்றும் மந்திர சக்தியல்ல. கடந்த முன்னூறு வருடங்களாக தனித்தனி ஆங்கிலேயர்கள் இந்தியாவைப்பற்றி எவ்வளவு அறிவைச் சேகரித்தார்களோ, அவை யாவும் எழுத்து வடிவம் பெற்று இந்த லண்டனிலே இன்றும் இருக்கிறது. அந்தக் குறிப்புக்களையும், சுவடிகளையும் மார்க்ஸ் மிக்க கவனத்துடன் படித்திருக்கிறார். மேலும், அவர் சந்தித்த ஒவ்வொரு இந்தியனையும் கேட்டுக் கேட்டுத் தனது கருத்துக்களை உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.''

''இந்தியாவின் எதிர் காலத்தைப் பற்றி மார்க்ஸின் கருத்தென்ன?''

''இந்திய யுத்த வீரர்களின் வீரத்தை அவர் மிகவும் புகழ்கிறார். எங்கள் மூளையின் சக்தியையும் அவர் பாராட்டுகிறார். ஆனால் எங்கள் பழமைப் பற்றும் பழம் பசலிப் போக்கும்தான் இந்தியாவின் பெரிய விரோதி என்று கருதுகிறார். எங்கள் கிராமங்கள், தனித்தனிச் சுதந்திர ஆட்சியை உடைய சிறிய சிறிய குடியரசுகள்!''

''குடியரசுகளா?''

''தேசம் முழுவதுமல்ல; ஒரு ஜில்லா அல்லது இரண்டு கிராமங்கள் சேர்ந்துகூட இல்லை. சிறிய சிறிய தனித்தனிக் கிராமங்கள். அதுவும் எல்லா இடத்திலுமில்லை. லார்டு காரன்வாலிஸ் ஆங்கில முறையைப் பின்பற்றி, ஜமீன்தாரி முறையைப் புகுத்திய இடங்களிலெல்லாம், அந்தக் கிராமக் குடியரசு செத்துப் போய்விட்டது. இந்தக் கிராமக் குடியரசுகளை, ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற ஒரு பஞ்சாயத்து நிர்வகிக்கிறது. போலீஸ், நீதி, நீர்ப்பாசனம், கல்வி, மதம் எல்லா வேலைகளையும் அந்தப் பஞ்சாயத்தே கவனிக்கிறது.

நேர்மையுடனும், அறிவுடனும், பயமின்றியும் கிராமத்தின் ஒவ்வொரு அங்குல நிலத்தையும் ஒவ்வொரு மனிதனின் மரியாதையையும் காப்பாற்றுவதற்காகப் பஞ்சாயத்தின் உத்திரவுப்படி கிராமத்கின் ஒவ்வோர் ஆண்மகனும் தன் உயிரையும் கொடுக்கத் தயாராய் இருப்பான். முஸ்லீம் அரசர்கள் முதலில் டெல்லியைச் சுற்றிச் சிறிது தூரமே அவர்கள் ஆட்சி பரவியிருந்த காலத்தில், தங்களை அந்நிய நாட்டினராகக் கருதிக்கொண்டு இந்தப் பஞ்சாயத்துக்களை அழித்துவிட விரும்பினுர்கள். ஆனுல் பிற்காலத்தில் அவர்களும் இந்தப் பஞ்சாயத்தின் சுதந்திரத்தையும் சுய ஆட்சியையும் ஏற்றுக் கொண்டு விட்டார்கள். ஆனுல் இந்த ஆங்கிலேயர்கள், முக்கியமாக, இங்கிலாந்தில் ஜமீன்தாரான காரன்வாலிஸ்தான் கிராமக் குடியரசுகளை அழிக்கும் வேலையை ஆரம்பித்திருக்கிறுன். அதில் பெரும் பகுதி வெற்றியும் பெற்றுவிட்டான். இல்லாவிட்டால், இவ்வளவு சீக்கிரம் அது அழிந்து போயிருக்காது. மான்செஸ்டர் லங்காஷயர் துணிகளும், ஷெப்பீல்டு இரும்புப் பொருள்களும் இன்னும் இதுபோன்ற பல பொருள்களும் இங்கிலாந்திலிருந்து அங்கு போய்க் குவிவதுதான் கிராமக் குடியரசுகளின் தலையிலே விழுந்த மகத்தான அடி. 1822-ஆம் வருடம் ஜூலை மாதம் 10ம் தேதி கல்கத்தாவில் முதன் முதலாக ஒரு நீராவிக் கப்பல் துறைமுகத்தில் வந்து நின்றது. அன்றே, இந்தியக் கிராமங்களின் பொருளாதார சுதந்திரத்தின் அடிப்படை அழிந்து போயிற்று. இந்தியாவின் புகழ்பெற்ற மஸ்லின் சுரங்கமான டாக்காவின் மூன்றில் இரண்டு பகுதி இன்று சுடுகாடாய் இருக்கிறது ஆனீ! கிராமச் சேணியர்களின் நிலைமையைக் கேட்கவே வேண்டாம். கொல்லன், தச்சன், சேணியன், கன்னுன் முதலிய எல்லாத் தொழிலாளர்களையும் தன்னகத்தே கொண்டிருந்த காரணத்தால், தனித்து நின்று சுதந்திரமாக வாழ்ந்த இந்தியக் கிராமங்கள் இன்று அந்தத் தொழிலாளர்கள் கையோடு கையைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு பட்டினி கிடந்து சாவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அவர்கள் தேவைக்கான பொருள்களை மான்செஸ்டரும் பர்மிங்ஹாமும் ஷெப்பீல்டும் அனுப்பிக் கொண்டிருக்கின்றன. துணியை மட்டும் எடுத்துக் கொள்வோம்; 1814-ம் வருடம் இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கு 18, 66, 608 தான்கள் துணி வந்தன. 1835-ம் வருடத்தில் 3, 76, 085 தான்கள் வந்தன. ஆனுல் 1814-க்கும் 1835-க்கும் இடையில் இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குப்போகும்

துணி 8, 18, 20, 85, 17, 77, 277, கஜங்களாக அதிகரித்து விட்டது. டக்கா மஸ்லின்களைத் தயாரிக்கும் இந்தியர்கள் தங்கள் பஞ்சுகளைச் சீமைக்கு அனுப்பித் துணி நெய்விக்கச் செய்துகொண்டிருக்கிறார்கள். அதுவும் எவ்வளவு தெரியுமா? சமீப காலத்துக் கணக்கையே எடுத்துக் கொள்வோம்; 1845—ல்10, 75, 309 பவுண்டுகள் பஞ்சு இந்தியாவிலிருந்து இங்கு வந்திருக்கிறது."

"எத்தனை கொடுமை, எத்தனை அநியாயம்!"

"ஆனால் என் குருநாதர், 'அந்நிய நாட்டாரின் இந்தக் கொடுமைக்காக என் மனம் கதறுகிறது; ஆனால், இந்தப் பழம் பசலிப்போக்கின் அழிவைக்கண்டு என் அறிவு சந்தோஷப்படுகிறது' என்று சொல்லுகிறார்."

"அப்படியானால், இரண்டிற்கும் இரண்டு பாதைகள் உண்டா?"

"ஆம்; இரண்டிற்கும் இரண்டு பாதைகள்தான் உண்டு ஆனி! ஒரு தாய் பிரசவிக்கும்போது எவ்வளவு வேதனையை அனுபவிக்கிறாள்! அதே சமயத்தில் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்த மகிழ்ச்சியையும் அனுபவிக்கிறாளல்லவா? அழிவின்றிச் சிருஷ்டி நடக்காது. இந்தச் சிறிய சிறிய குடியரசுகளை உடைத்தெரியாமல், ஒரு பெரிய சக்திவாய்ந்த குடியரசிற்கு அஸ்திவாரம் போடமுடியாது. இந்தியர்களின் பக்தி, தங்கள் கிராமக் குடியரசோடு எல்லையிட்டிருக்கும் வரை, தேச பக்தியை-அகில இந்தியாவிற்காகவும் போராட வேண்டுமென்ற மனப்பான்மையைத் தோற்றுவிக்க முடியாது இப்பொழுது ஆங்கிலேயர்கள் கப்பல், ரயில், தந்தி முதலிய இயந்திரங்களைத் தங்கள் வியாபார சௌகரியத்திற்காகவே இந்தியாவில் பரப்புகிறார்கள். ஆனால் ரயில் வண்டிகளைச் செய்வதற்கும், அவற்றை மராமத்துச் செய்வதற்காகவும், இந்தியாவின் இரும்பையும், நிலக்கரியையும் ஆங்கிலேய முதலாளிகள் உபயோகிக்கவேண்டியநிர்ப்பந்தம் ஏற்படும்பொழுது, அங்கேயே பொருள்கள் தயாரிக்கப்படுவதையும் எததனை நாளைக்குத் தடுத்து வைக்க முடியும்? தங்கள் கண்முன்னால் விஞ்ஞானத்தின் வெற்றிகளைப் பார்த்த பிறகும், இந்திய மூளை எவ்வளவு நாளைக்குத் தூங்கிக்கொண்டிருக்கும் என்று மார்க்ஸ் கேட்பது சரியான நியாயம்தான்."

"அதாவது, இந்தியாவிலே தொழிற் பெருக்கத்தையும், முதலாளித்துவத்தையும் பரப்புவது சுலபம் என்று கருதுகிறாயா?"

''ஆம்; இங்கிலாந்திலே பிரபுத்துவ—ஜமீன்தார்களின் செல்வாக்கு அதிகமில்லையா?''

''ஆம்.''

''1832-ம்வருடத்துச் சீர்திருத்தச் சட்டம், இங்கிலாந்தின் ஆட்சிக் கடிவாளத்தை முதலாளிகள் கையில் கொடுத்துவிட்டதா?''

''முதலாளிகள் ஆட்சியைக் கைப்பற்றிக் கொள்ளப் போகிறார்கள் என்பதற்கு அந்தச் சட்டம் ஓர் அறிகுறி.''

''நீ சொல்வது சரிதான். சார்ட்டிஸ்டு*களுடைய மேடைப்பேச்சுக்கள், பத்திரிகைகளின் செல்வாக்கு உனது கருத்திலே படிந்திருக்கிறதல்லவா?''

''அந்தப் பொதுக் கூட்டங்கள் நடந்த காலத்தில் நான் அவ்வளவு பெரியவளல்ல; அதைப்பற்றிய நினைவு, ஏதோ புகைப்படலம் போல்தான் ஞாபகமிருக்கிறது. ஆனால், இங்கிலாந்தின் மந்திரிசபையிலே சார்ட்டிஸ்டுகளின் பரம விரோதியாயிருந்த என் சித்தப்பா ரஸல், அந்தப் பயங்கர இயக்கத்தைப் பற்றிச் சொல்வதை எத்தனையோ முறை கேட்டிருக்கிறேன்.''

''ஆனீ! பன்னிரெண்டு லட்சம் மக்களின் கையெழுத்தோடு, தொழிலாளர்களின் சாதாரணத் தேவையைக்கோரி வந்த மகஜரைத் தூக்கி யெறியும்பொழுது, அவர் பார்லிமெண்டிலே காட்சியளித்ததைப்போல வீரப் பேச்சாளராகவே இந்த விஷயத்தைப்பற்றிப் பேசும்பொழுதும் காட்சியளித்தாரா?''

''இல்லை அன்ப! இந்த 1856-ம் வருடத்தில் சார்ட்டர் வாதத்தைப் பற்றிப் பேச்சே கிடையாது. என்றாலும் அவர் இப்பொழுதுங்கூட அதைப்பற்றிப் பயப்படுகிறார்.''

''ஏன் பயப்படமாட்டார்? பிரபுக்களுடையவும், ஜமீன்தார்களுடையவும் ஆட்சியை ஒழித்துவிட்டு, முதலாளி

---

*சார்ட்டிஸ்டுகள்—சாஸன இயக்கத்தார் 1832—ம் வருடத்து இங்கிலாந்தின் சீர்திருத்தச் சட்டம் திருப்தியளிக்கவில்லையென்று ஆறு அம்சங்கள் கொண்ட மக்கள் சாஸனம் என்ற ஒரு சாஸனத்தை தயாரித்து, 1839—ல் 800,000 பேர் கையெழுத்திட்டு காமன்ஸ் சபையிலே சமர்ப்பித்தார்கள். அந்தச் சாஸனத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று ஒரு பெரிய இயக்கத்தை நடத்தியவர்கள்.

களான வியாபாரிகள் தங்கள் ஆட்சியை ஆரம்பித்துவிட்டார்கள். அதைப் போலவே தொழிலாளர்களும் இந்தப் பணப்பைகளின் ஆட்சியை ஒழித்துக் கட்டிவிட்டு மனித சமுதாயத்தின் ஆட்சியை ஏற்படுத்தியே தீருவார்கள். அதிலே பணக்காரன்—ஏழை, சின்னவன்—பெரியவன், கறுப்பன்—வெள்ளையன் என்ற வேற்றுமைகள் இருக்காது.''

''ஆண்—பெண் என்ற வேற்றுமையுமா?''

''ஆம்; பெண்களும் ஆண்களின் கொடுமையால் வாடுகிறார்கள். எங்கள் நாட்டிலே பிரபுத்துவ ஆட்சியானது சமீப காலம்வரை சதியென்ற பெயரால் லட்சக்கணக்கான பெண்களை நெருப்பிலிட்டுப் பொசுக்கிற்று. இப்பொழுதுங் கூட, அவர்களைப் படுதாவிற்குள் மூடி வைத்து, சொத்து உரிமையில்லாமல் செய்து, கொடுமைகள் இழைக்கப்படுகின்றன. இது மனித சமுதாயத்திற்கே ஒரு களங்கம்.''

''எங்கள் நாட்டிலே பெண்கள் படுதாவுக்குள் மூடி வைக்கப் படவில்லை என்பதைப் பார்த்து நீ அவர்கள் சுதந்திரமாக இருப்பதாகக் கருதக்கூடும்.''

''இல்லை; அப்படி நான் கருதவில்லை. ஆனால், நீங்கள் இந்தியச் சகோதரிகளைவிட உயர்ந்த நிலையில் இருக்கிறீர்கள் என்றுதான் கூற விரும்புகிறேன்.''

''அடிமைத் தனத்திலே உயர்ந்தது—தாழ்ந்தது என்று வேறு உண்டா? பார்லிமெண்டுக்கு ஓட்டுப்போடும் உரிமை கூட எங்களுக்குக் கிடையாது. பெரிய பெரிய கலாசாலைகளின் வாயிற்படியிலே நாங்கள் கால் வைக்கக்கூட முடியாது. நாங்கள் இடுப்பை இறுக்கி இறுக்கிச் சிறுகச் செய்து பூமியை துடைத்துக்கொண்டு வரும் 60 கஜ பாவாடையைச் சுற்றிக்கொண்டு ஆண்களின் விளையாட்டுப் பொருள்களாகியிருக்கிறோம். நல்லது. இந்தியாவிலே தொழிற் பெருக்கமும் முதலாளித்துவமும் வளருமென்றும் அதன் காரணமாக ஒரு பக்கத்தில் மக்களின் தைரியமும், நம்பிக்கையும் பெருகுவதோடு, மற்றொரு புறத்தில் கிராமங்களிலே வேலையற்றிருக்கும் விவசாயிகளும் தொழிலாளிகளும் தொழில் நகரங்களிலே கூடுவார்களென்றும், பிறகு அவர்கள் தங்கள் தொழிற் சங்கங்களை ஸ்தாபித்துப் போராடக் கற்றுக் கொள்வார்களென்றும், அதன் பின்பு பொது உடமைக் கொடியின் கீழ் இங்கிலாந்தின் தொழிலா

ளர்களோடு தோளோடு தோள் நின்று மனித சுதந்திரத்திற்காகப் போராடி, உலகத்திலிருந்து முதலாளித்துவத்தை ஒழித்துக்கட்டி, சமத்துவம்—சுதந்திரம்—சகோதரத்துவம் நிறைந்த ராஜ்யத்தை ஸ்தாபிப்பார்களென்றும், மார்க்ஸ் நம்பிக்கை ஊட்டுகிருரா? ஆனல், இவையெல்லாம் நூற்றுக் கணக்கான வருடங்களுக்குப் பின்பு நடக்கக் கூடியவை.''

''ஆங்கிலேயர்கள், விஞ்ஞானம் உலகிற்களித்த இயந்திரத் தொழிற்சாலைகளை இந்தியாவிற்கு மறைத்து வைத்திருக்கிருர்கள். ஆனல் விஞ்ஞானத்தின் மற்ருெரு கொடையான யுத்த ஆயுதங்களை, இந்தியச் சிப்பாய்களுக்குக் கற்றுக் கொடுத்திருக்கிருர்கள். இந்த இந்தியச் சிப்பாய்கள் இந்தியாவின் சுதந்திரத்தைத் திரும்பப் பெறுவதற்கு உபயோகமாவார்கள் என்றும் மார்க்ஸ் கருதுகிருர்.''

''இது சமீபத்தில் நடக்கக்கூடியதா மங்கி?''

''சமீபத்தில் இல்லை ஆனீ! அந்த நேரம் வந்துவிட்டது. இந்த (1856) பிப்ரவரி 7-ம் தேதி அவத ராஜ்யத்தை ஆங்கிலேயர்கள் எடுத்துக்கொண்டு விட்டார்கள் என்ற செய்தியைப் பத்திரிகையிலே பார்த்தாய் அல்லவா?''

''ஆம்; அயோக்கியத்தனமான முறையிலே.''

''அயோக்கியத்தனமான முறையிலா அல்லது யோக்கியமான முறையிலா என்பதைப் பற்றி நாம் இப்பொழுது தர்க்கம் செய்ய வேண்டியதில்லை. ஆங்கிலேய வியாபாரிகள் எல்லாவற்றையும் தங்கள் சுய நலத்திற்காகவே செய்தார்கள். ஆனல், தங்களை அறியாமலே எங்களுக்கு நன்மை பயக்கும்படியான காரியங்களையும் செய்திருக்கிருர்கள். அவர்கள் கிராமக் குடியரசுகளை உடைத்து, ஓர் அகண்ட தேசத்தை எங்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்தார்கள். அவர்ளுடைய கப்பல், ரயில், தந்தி முதலியவைகள் எங்கள் கிணற்றுத் தவளைப் போக்கை மாற்றி, அகிலஉலகத்தோடும் எங்களைத் தொடர்பு கொள்ளும்படி செய்தன. இந்த அவதத்தை எடுத்துக் கொண்ட நிகழ்ச்சி ஏதாவது ஓர் எழுச்சியைத் தூண்டிவிடக்கூடும். இந்த மாதிரி ஒருநிலையைத்தான் நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.''

''மார்க்ஸின் சிஷ்யனிடமிருந்து வேறு என்ன எதிர்பார்க்க முடியும்?''

# 2

கங்கையின் அமைதி நிறைந்த கரைகளிலே மறுபடியும் அமைதியற்ற சூழ்நிலை தோன்றிற்று. பிட்டூரின் விசால மான மாளிகையிலே, பேஷ்வாவின் வார்சு உரிமை மட்டு மல்ல, பென்ஷனும் மறுக்கப்பட்ட நான, அவத ராஜ்யம் ஆங்கிலேயர்களால் கவர்ந்து கொள்ளப்பட்ட நாள் முதல், மிகச் சுறு சுறுப்பாக வேலை செய்தார். அவருடைய ஆட்கள், பதவி இழந்துவிட்ட மற்ற அரசர்களிடமும், தலைவர்களிட மும், இரவும் பகலும் ஓடிக் கொண்டிருந்தார்கள். அவரு டைய அதிர்ஷ்டவசமாக ஆங்கிலேயர்களும் ஒரு பெரிய தவறைச் செய்தார்கள். சரியாகப் பார்த்தால் அது ஒரு தவறல்ல; நாள்தோறும் முன்னேறிக் கொண்டிருக்கும் புதிய உலகத்திலே வாழ்வதற்காகச் செய்யவேண்டிய வேலை. அவர்கள், முன்னுல் உபயோகத்திலிருந்த குண்டு போட்டுச் சுடும் துப்பாக்கியை மாற்றிவிட்டு, அதற்குப் பதிலாக சக்திவாய்ந்த தோட்டாக்களை உபயோகிக்கும் துப்பாக்கி களைத் தங்கள் ராணுவத்திற்குக் கொடுத்தார்கள். அந்தத் துப்பாக்கியில் தோட்டாக்களை நிரப்பும்பொழுது, அவை களைப் பல்லினுல் கடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆங்கிலேயர்களின் விரோதிகள் இந்தச் சம்பவத்தை புத்தி சாலித்தனமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். இந்தத் தோட்டாக்களில் பசுவின் கொழுப்பும், பன்றியின் கொழுப்பும் தடவப்பட்டிருப்பதாயும், ஆங்கிலேயர்கள் வேண்டுமென்றே இந்தத் தோட்டாக்களைக் கொடுத்துச் சிப்பாய்களைப் பல்லினுல் கடிக்கச் செய்வதாயும் அதன் மூலம் இந்து முஸ்லீம்களின் மதங்களை ஒழித்துவிட்டு எல் லோரையும் கிறிஸ்தவர்களாக்க முயற்சிப்பதாயும் பெரிய கூச்சலைக் கிளப்பிவிட்டார்கள்.

காசி அரசன் சேத்சிங்கின் பேரன் மங்களசிங்கனுடைய பெயர், சிப்பாய்களிடையே மின்சாரத்தைப் போன்று வேக மாக வேலை செய்து வந்தது. இது மங்களசிங்கிற்கும் தெரி யும். ஆனுல், அவன் இந்த ரகசியத்தை வெளிப்படுத்தவே இல்லை. நானுவுக்கும் மற்ற கலகத் தலைவர்களுக்கும் அவனைப்பற்றித் தெரிந்திருந்தது மிகக் குறைவு. அவன்

ஆங்கில ஆட்சியைப் பலமாக வெறுக்கிறான் என்பதும், அவன் இங்கிலாந்திற்குப் போய் ஆங்கிலேயரின் கல்வியை நன்றாகக் கற்றிருக்கிறானென்பதும், அரசியல் விவகாரங்களிலே ரொம்பக் கெட்டிக்காரனென்பதும். அவன் கிருஸ்துவ மதத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் இங்கிலாந்தில் போய் வசித்ததால் அவனுடைய ஹிந்துத் தன்மை போய்விட்டது என்பதுமே, அவர்கள் அவனைப்பற்றித் தெரிந்து கொண்டிருந்த விஷயம்.

கலகத் தலைவர்களின் உண்மையான நோக்கம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள மங்களசிங்கிற்கு நேரமாகவில்லை. பதவிகளை இழந்துவிட்ட சிற்றரசர்கள், தங்கள் உரிமைகளைத் திரும்பப்பெற விரும்பினார்கள். ஆகவே தங்கள் எல்லோருக்கும் ஒரே விரோதியான ஆங்கிலேயர்களை தேசத்திலிருந்து வெளியேற்றிவிட விரும்புகிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டான். அவர்களுக்காகத் தங்கள் உயிர்களைக் கொடுக்கவிருக்கும் சிப்பாய்களுக்கும், சதுரங்கத்தின் காய்களுக்கும், அவர்களைப் பொறுத்த வரையில் எவ்வித வேற்றுமையும் கிடையாது. சிப்பாய்கள் தங்கள் மதம் போய்விடுமென்ற பயத்திலே கொதித்தெழுந்தார்கள். ஒரு வேளை தோட்டாக்களைப் பல்லினால் கடிக்க வேண்டிய அவசியத்திலிருந்து விடுதலை கிடைத்திருந்தால், அவர்கள் நிரந்தரமாகக் கம்பெனிக்கு ஜே போட்டுக் கொண்டிருக்கக் கூடும். ஆங்கிலேயர்களுக்காக, ஒருவர் கழுத்தை ஒருவர் வெட்டிக் கொண்டிருப்பார்கள். ஆனால், ஹிந்து முஸ்லீம்களுக்கிடையே உள்ள அகழி? அது சிறிதும் குறையவில்லை. இந்தக் கலகம் ஜெயித்திருந்தால், மதத்தின் பெயரால் கொதித்தெழுந்த எழுத்தறிவற்ற இந்தச் சிப்பாய்கள், அல்லாவினுடையவும் பகவானுடையவும் கிருபைக்குப் பாத்திரமாவதற்காக, இன்னும் அதிகக் கடினமான மத நம்பிக்கையை வெளிப்படுத்தியிருப்பார்கள். இந்த மத நம்பிக்கையைத் தவிர, அவர்கள் மனத்திலே வேறு ஏதாவது ஒரு தூண்டுதல் இருந்ததென்றால், அது கிராமங்களையும் நகரங்களையும் கொள்ளையடிக்கலாமென்பதுதான். கலகம் செய்த சிப்பாய்களிலே மிகக்கொஞ்சம் பேர்கள்தான் இந்தக் குற்றத்தைச் செய்தார்கள். அதுவும் ஒரு சில இடங்களில் தான் என்றாலும், இதைப் பற்றி எழுந்த கூச்சல், எல்லாக் கிராமங்களையும் பயத்திலே ஆழ்த்திவிட்டது. தேசத்தை விடுவிப்பதற்காக கிளம்பியுள்ள சேனையைப்பற்றி, இந்த மாதிரியான வதந்தி நன்மை பயக்காது. இதை அறிந்ததும்

மங்களசிங்கின் நம்பிக்கை தளர்ந்துவிட்டது. அவன் சேத் சிங்கின் சிம்மாசனத்தைப் பெறுவதற்காகப் போராட வரவில்லை. சமத்துவம்—சுதந்திரம்—சகோதரத்துவம் நிறைந்த ராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்காகப் போராட வந்திருக்கிறான். ஆங்கில முதலாளிகளின் ஆட்சிக்கு அதில் இடமில்லாதது போலவே, ஹிந்து—முஸ்லீம் வேற்றுமைக்கும், ஜாதிப் பிரிவினைக்கும் அதில் இடமிருக்காது. இந்தக் கிணற்றுத் தவளைத் தன்மையைக் காப்பாற்றுவதற்காக அவன் வரவில்லை. ஜாதிச் சுவர்களை உடைத்து, இந்தியாவை உலகத்தோடு இணைப்பதற்காக வந்திருக்கிறான். ஆங்கில முதலாளிகளின் சுரண்டலை ஒழித்து, இந்தியப் பொது ஜனங்களுக்குச் சுதந்திரத்தைக் கொடுப்பதோடு, அவர்கள் உலகத்தின் மற்ற நாட்டு மக்களோடு, சகோதர பாவத்துடன் இணைந்து நின்று, ஒரு புதிய உலகத்தைத் தோற்றுவிக்க வேண்டுமென்பதற்காக வந்திருக்கிறான்! தோட்டாவிலே கொழுப்புத் தடவியுள்ள பொய்க் கதைப் பிரசாரத்தையும் அதன் மூலம் இந்தியாவிலே மறுபடியும் மதங்கள் வேரூன்றிக் கொள்வதையும் அவன் விரும்பவில்லை. நானாவும், மற்ற கலகத் தலைவர்களும் மேல் நாட்டிலிருந்து வரும் உயர்ந்த மதுக்களைப் பருகுபவர்கள்தான். சந்தர்ப்பம் கிடைக்கும்பொழுது மதுவருந்திப் பன்றி மாமிசம் சாப்பிட்டு வரும் வெள்ளை யுவதிகளின் எச்சில் உதடுகளை முத்தமிட அவர்கள் தயங்கியதில்லை. இப்பொழுது, மதத்தை காப்பதற்காகச் சிப்பாய்களுக்குத் தலைமை வகிக்க விரும்புகிறார்கள்.

ஆனால், இந்த எல்லாக் குறைகளுக்கு மத்தியிலும் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி யோசித்தபொழுது, தான் செய்ய வேண்டியது என்ன என்பதை நிச்சயிக்க மங்களசிங்கிற்கு நேரமாகவில்லை. இந்தியா ஆங்கில முதலாளிகளுடைய ஆட்சியிலும், இந்தியச் சிற்றரசர்களின் ஆட்சியிலும் இரட்டை அடிமைத்தனத்திலே நசுங்கிக் கொண்டிருக்கிறது. இதில் ஆங்கில முதலாளிகளின் ஆட்சி மிகச் சக்தி வாய்ந்ததும் திறமையுள்ளதும் ஆகும். அதை நாட்டிலிருந்து வெளியேற்றிவிட்டால், சுயதேசச் சிற்றரசர்களோடு மோதுவது இந்திய ஜனங்களுக்குச் சுலபமான வேலை.

ஜனவரி மாதம் ஒருநாள் இரவு நன்றாகப் பனி பெய்து கொண்டிருந்தது. லண்டனோடு ஒப்பிட்டால் இந்தப் பனி ஒன்றுமில்லைதான். பிட்டூரிலே, எங்கும் அமைதியும் நிசப்தமும் நிலவியிருந்தது. ஆனால் பேஷ்வாவின் மாளிகையில்,

காவலர்கள் தங்கள் தங்கள் இடத்திலே ஜாக்கிரதையாக நின்று கொண்டிருக்கிறார்கள். தங்கள் எஜமானரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு மனிதரோடு ஒரு புதிய மனிதரும் மாளிகைக்குள் நுழைவதை அவர்கள் பார்த்தார்கள். இப்பொழுதெல்லாம் முன்பின் தெரியாத பலர் இம்மாதிரி இரவிலே மாளிகைக்கு வந்துபோவது வழக்கமாகிவிட்டபடியால் அவர்கள் தடுக்கவில்லை.

மங்களசிங் நானாவைச் சந்திப்பது இது முதலாவது முறையல்ல.ஒருவரையொருவர் ஏற்கெனவே நன்றாய் அறிந்திருந்தார்கள். மங்களசிங் வருவதற்கு முன்னாலேயே, அங்கு டெல்லியில் பென்ஷன் வாங்கிக் கொண்டிருக்கும் பாதுஷா, அவதத்தின் நவாப், ஜகதீஷ்பூரின் கும்வர்சிங் முதலிய அரசர்களின் தூதர்கள் வந்து காத்திருந்தார்கள். கல்கத்தா, தானாபூர், கான்பூர், லக்னௌவ், ஆக்ரா, மீரட் முதலிய இடங்களிலுள்ள ராணுவப் பாசறைகளிலெல்லாம் சிப்பாய்களிடையே கலக உணர்ச்சி எவ்வளவு தூரம் பரப்பப்பட்டிருக்கிறது என்பதை, அவரவர்களும் விளக்கிச் சொன்னார்கள். இதில் ஆச்சரியப்படத்தக்க விஷயம் என்னவென்றால், ஒரு மகத்தான சக்தியோடு மோதி அதை ஒழிக்க விரும்புகிறவர்கள், தங்களுக்கென்று ஒரு சிறிய ராணுவம்கூட இல்லாமல், எதிரியிடமிருந்து கலகம் செய்யும் சிப்பாய்களையே நம்பியிருந்ததுதான். மேலும் ஒரு விநோதம்; ராணுவக் கலையை சிறிதும்பயிலாத சிற்றரசர்களோடும், தலைவர்களும், சேனாதிபதியத்தை ஏற்கத் தயாராய் இருந்தது தான். நானா மிகுந்த நம்பிக்கையோடு பேசத் தொடங்கினார்:

''இந்தியாவில் ஆங்கிலேயர்களின் ஆட்சி, இந்தியப் பட்டாளங்களை நம்பித்தான் இருக்கிறது. இப்பொழுது அந்தப் பட்டாளங்கள் யாவும் நம்மிடம் வந்து கொண்டிருக்கின்றன.''

''ஆனால் இந்தியப் பட்டாளங்கள் முழுவதும் நம்மோடு சேர்ந்துவிடவில்லை நானா சாஹிப்! பஞ்சாபிச் சீக்கியப் பட்டாளங்கள், கலகம் செய்யும் என்று நம்புவதற்குரிய செய்தி எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. மேலும், இந்தியப் பட்டாளங்கள் ஆங்கிலேயர்களோடு சேர்ந்துகொண்டு சண்டையிட்டுப் பஞ்சாபைத் தோற்கடித்ததை அவர்கள் இதற்குள் மறந்திருக்கமாட்டார்கள். ஆங்கிலேயர்கள் மிகப் புத்திசாலிகள் நானா சாகிப்!பேஷ்வாவையும் அவதத்தின் நவாப்

யையும்போல, அவர்கள் தலீப்சிங்கையும் இந்தியாவிலேயே சிறை வைத்திருந்தார்களானுல், இன்று சீக்கியப்பட்டாளங் களே நம் பக்கத்தில் சேர்த்துக்கொள்வதில் நாம் சுலபமாக வெற்றி பெற்றிருக்க முடியும். சரி; சீக்கியச் சிப்பாய்களும் நேப்பாளச் சிப்பாய்களும் இப்போது நம்முடன் சேரவில்லே யென்பதை மறந்துவிடக்கூடாது. மேலும் தேசத்தின் போராட்டத்திலே நம்மோடு சேர்ந்து கொள்ளாதவர்களே, நாம் நண்பர்கள் என்று நம்பக்கூடாது.''

''நீங்கள் சொல்வது சரி டாகூர் சாகிப்; ஆனுல் நாம் தொடக்கத்திலேயே வெற்றி பெற்று விட்டோமானுல் தேசத் துரோகிகள்கூட நமக்கு எதிராக வரத் துணியமாட் டார்கள்.''

''ஒரு முக்கியமான விஷயத்திற்கு நாம் ஏற்பாடு செய்ய வேண்டும். அது யுத்தம் தொடங்கிய பிறகு செய்யவேண் டிய வேலேயானுலும், அதற்கான ஆட்களே இப்பொழு திருந்தே தயார் செய்யவேண்டும். இந்த யுத்தம் தேசத்தை விடுதலேயடையச் செய்யும் யுத்தம்; நாம் சுதந்தரச் சிப்பாய் கள் என்று ஜனங்கள் நம்பும்படி பிரச்சாரம் செய்ய வேண்டும்.''

மத்தியிலே ஒரு பிரதிநிதி குறுக்கிட்டு, ''நாம் ஆங்கிலே யர்களே எதிர்த்து நிற்பதே, இதற்குப் போதுமான சான்றில் லேயா?'' என்று கேட்டார்.

மங்களசிங்—''எல்லா இடத்திலும், இருபத்தி நாலு மணி நேரமும் யுத்தம் நடந்து கொண்டே இருக்காது. ஆங்கிலேயர்களே வெற்றி கொள்ளமுடியாது என்று நம்புகிற பயங்கொள்ளிகளும், சுயநலமிகளும் நம் நாட்டில் ஏராளமா யிருக்கிறுர்கள். அவர்கள் விதவிதமான வதந்திகளேப்பரப்பிக் கொண்டிருப்பார்கள். ஆகவே நாம் கிழக்கு, மேற்கு, மத்தியபாகம் என்று மூன்று பகுதியாகப் பிரித்துக்கொண்டு, ஹிந்தியிலும் உருதுவிலும், மூன்று பத்திரிகைகள் வெளியிட வேண்டும் என்றுநான் கருதுகிறேன்.''

நாஞசாகிப்—''உங்களுக்கு ஆங்கில முறைகள் மிகுதும் பிடித்திருக்கின்றன டாகூர் சாகிப்! எந்தப் பத்திரிகையையும் வெளியிடாமலேயே, தோட்டாவைப் பற்றிய கதையை நாங்கள் எவ்வளவு நன்ருகப் பரப்பியிருக்கிறேம் பார்த் தீர்களா?''

மங்களசிங்—''யுத்தத்தின் மத்தியிலே, ஆங்கிலேயர்களின் வேலைக்காரர்களும் கைக் கூலிகளும், நமக்கு விரோதமான கருத்துக்களைப் பரப்பிக்கொண்டே இருப்பார்கள். அதைத் தடுப்பதற்கு நாம் ஏதாவது ஏற்பாடு செய்துதான் ஆகவேண்டும். ஒரே நாளில் ஆங்கிலேயர்களின் அரசாங்க இயந்திரம் யாவையையும் நாம் கைப்பற்றிக்கொள்வது முடியாத காரியம். கலகக்காரச் சிப்பாய்கள் (நம்மை இந்தப் பெயரால்தான் அழைப்பார்கள் என்பதை நீங்கள் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும்) கிராமங்களையும், நகரங்களையும் கொள்ளையடிக்கிறார்கள்; பெண்களையும், குழந்தைகளையும் வெட்டிக்குவிக்கிறார்கள் என்ற வதந்தியைக் கிளப்பிவிடுகிறார்களென்று வைத்துக்கொள்வோம்.''

நானா சாகிப்—''அந்த வதந்தியை ஜனங்கள் நம்பிவிடுவார்களா என்ன?''

மங்களசிங்—''ஒரு விஷயம் திரும்பத்திரும்பச் சொல்லப்பட்டு, அதை மறுக்கும் குரல் தெளிவாகக் கேட்காத வரை ஜனங்கள் அதை நம்பவே செய்வார்கள்.''

நானா சாகிப்—''இந்தத் தோட்டா விஷயத்தைக் கொண்டு, ஆங்கிலேயர்கள் மதத் துரோகிகள் என்று நாம் நிரூபித்து விட்டோம். ஆகவே, அவர்கள் சொல்வது எதையும் ஜனங்கள் நம்ப மாட்டார்கள்.''

மங்களசிங்—''இது எந்தக் காலத்திற்கும் போதுமானது என்று நாம் நம்ப முடியாது. மற்றொரு முக்கியமான விஷயமும் இருக்கிறது. நம்முடைய இந்த யுத்தத்தை, ஆங்கிலேயர்கள் சிப்பாய்க்கலகம் என்றுதான் உலகத்திற்குப் பிரச்சாரம் செய்வார்கள். உலகிலே ஆங்கிலேயர்களுக்கு விரோதிகளாகவும், நமக்கு நண்பர்களாகவும் பலர் இருக்கின்றார்கள். முக்கியமாக. ஐரோப்பிய ஜாதியிலேயே எத்தனையோ பேர் இருக்கிறார்கள்? அவர்கள் நமது சுதந்திரத்தை விரும்பவே செய்வார்கள். ஆகவே, நாம் இந்த யுத்தத்தில் எல்லா ஐரோப்பியர்களையும் விரோதிகளாகக் கருதக் கூடாது. சண்டை போடாத ஆங்கிலேயர்களையும், ஆங்கிலப் பெண்கள், குழந்தைகள், கிழவர்களையும் நாம் ஒன்றும் செய்யக்கூடாது. அவர்களுக்குத் தீங்கிழைப்பதால் நமக்கொன்றும் லாபம் ஏற்படாது. நேர் விரோதமான பலன்தான் ஏற்படும். உலகத்திலே இந்தியாவின் பெயர் களங்கமடைந்துவிடும்.''

நானுசாகிப்—''இது சேனுதிபதிகள் கவனிக்க வேண்டிய வேலே. எந்தெந்தச் சமயத்தில் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அதை அந்தந்தச் சமயத்தில் நிச்ச யிப்பதுதான் நல்லது.''

மங்களசிங்—''முடிவாக ஒரு விஷயம் நான் சொல்ல விரும்புகிறேன். சிப்பாய்கள் இந்த யுத்தத்திலே தங்கள் உயிரைப் பணயம் வைத்துப் போராட வேண்டும். மேலும், நாம் பொது ஜனங்களின் உதவியையும் பெறவேண்டும். ஆகவே, அதற்கு இந்தத் தோட்டாக்களில் கொழுப்புத் தடவிய கதையையே முற்றிலும் நம்பியிருக்கக் கூடாது. நாம் ஆங்கிலேயர்களே வெளியேற்றி விட்டு, எந்த மாதிரி ராஜ்யத்தை நடத்தப் போகிருேம், அந்த ராஜ்யத்தில் சண்டை போடும் சிப்பாய்களுக்கும், உதவி செய்யும் விவசாயி, தொழிலாளர்களுக்கும், என்ன பலன் கிடைக்கும் என்பதையும் நாம் தெளிவு படுத்த வேண்டும்.''

நானுசாகிப்— ''மத விரோதிகளின் ஆட்சியை ஒழித்துக் கட்டுவதே, அவர்களுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய விஷய மல்லவா?''

மங்களசிங்—''இந்தக் கேள்வியை உங்களிடமே கேட் டால் நீங்கள் என்ன பதில் கொடுப்பீர்கள்? உங்கள் மன திலே பீஷ்வாவின் தலேநகரான பூனுவிற்குத் திரும்பச்செல்ல வேண்டுமென்று ஆசையில்லேயா! நவாப் அவர்களின் மன திலே லக்னெனவின் சிம்மாசனத்தைப் பெறும் ஆவல் இல் லேயா? நீங்கள் எல்லோரும் கொழுப்புத் தடவிய குண் டையும், ஆங்கில ஆட்சியையும் ஒழிப்பதோடு திருப்தி அடையாமல், வேறு சில பெரிய ஆசைகளேயும் உடையவர் களாய் இருக்கும்போது, தங்கள் உயிரையே பணயமாக வைத்துப் போராடும் சிப்பாய்களுக்கும், பொதுஜனங் களுக்கும், வேறு சில பலன்களும் கிடைக்குமென்று தெளிவு படுத்துவதுதான் நல்லது என்று நான் நினேக்கிறேன்.''

நானுசாகிப்—''என்ன பலன்கள்?''

மங்களசிங்—''நாம் மறுபடியும் ஒவ்வொரு கிராமத் திலும் பஞ்சாயத்தை ஏற்படுத்துவோம். அதன் மூலம் ஜனங்களுக்குக் குறைவான செலவில் நியாயம் கிடைக்கச் செய்வோம். தேசம் முழுவதற்கும் சேர்ந்து, ஒவ்வொரு கிராமத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்களேக் கொண்ட

"ஒரு பெரிய பஞ்சாயத்தை ஏற்படுத்துவோம். அதன் அதிகாரம் சக்கரவர்த்தியையும் கட்டுப்படுத்தும். நாம் ஜமீன்தாரி முறையை ஒழித்து விடுவோம். அரசாங்கத்திற்கும் விவசாயிக்கும் நடுவிலே, தரகர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். யாருக்காவது அரசாங்கம் ஜாகிர் கொடுக்குமாஞல், அவர் விவசாயிகளிடமிருந்து சர்க்காருக்குக் கிடைக்க வேண்டிய அளவு வாரத்தை மட்டும்தான் பெற்றுக்கொள்ளலாம். நாம் இயந்திரத்தொழிற்சாலைகளைப் பெருக்கிஇங்குள்ள எல்லாவித தொழிலாளிகளுக்கும் வேலை கிடைக்கும்படி செய்வோம். இங்கு யாரும் வேலையின்றிப் பட்டினி கிடக்க விடமாட்டோம். நீர்ப்பாசனத்திற்கு வேண்டிய கால்வாய்கள், குளங்கள், அணைக்கட்டுகள்எல்லாவற்றையும் சரியாக இருக்கும்படி பார்த்துக் கொள்வோம்; அதன் மூலம் அதிகமான விளைவும் விவசாயிகளின் வாழ்க்கையிலே சுகமும் உண்டாகும்படி செய்வோம்என்றெல்லாம் நாம் தெளிவாகப் பொது ஜனங்களுக்கு விளக்கவேண்டும்.''

மங்களசிங் கூறிய விஷயத்தை யாரும் கவனம் செலுத்தி, ஆலோசிக்கவில்லை. அவையெல்லாம், ஆட்சிகைக்கு வந்தபின் யோசிக்க வேண்டிய விஷயங்கள் என்று தட்டிக் கழித்துவிட்டார்கள்.

எல்லோரும் கலைந்துபோனபிறகு மங்களசிங் கட்டிலிலே போய்ப் படுத்தான். என்ருலும், அவனுக்கு நீண்ட நேரம் வரை தூக்கம் வரவில்லை. அவனுடைய சிந்தனை நீண்ட தூரம் சுற்றிக் கொண்டிருந்தது. இது விஞ்ஞான யுகம்—ரயில், தந்தி, கப்பல் இவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கிருர்கள். நெருப்புப் பெட்டி, போட்டோ, மின்சார வெளிச்சம் இவற்றின் யுகத்திலே நாம் நுழைந்து கொண்டிருக்கிருேம். அப்படியிருந்தும், இவர்கள் பழைய யுகத்திலிருந்து வெளியே வரமாட்டேன் என்கிருர்கள். ஆனல் இந்த இருட்டின் மத்தியிலும் ஒரு ஒளி தெரிகிறது. இந்த யுத்தம் வெற்றி பெற வேண்டுமானல், ஜனங்களின் பலத்தைக் கொண்டுதான் வெற்றி பெற முடியும். அப்பொழுது, குறைந்த பட்சம் ஜனங்கள் தங்களின் சக்தியை யாவது உணர்ந்து கொள்வார்கள். இங்கிலாந்தின் முதலாளிகள் அந்த நாட்டுத் தொழிலாளர்களின் உதவியைக் கொண்டு தங்கள் எதிரிகளைத் தோற்கடித்த பிறகு, அந்தத் தொழிலாளர்களை ஏமாற்றி விட்டார்கள். அதேபோல இந்த இந்தியச் சிற்றரசர்களும், தலைவர்களும், தங்கள்

காரியம் முடிந்ததும் சிப்பாய்களுக்கும், விவசாயிகளுக்கும், இந்திய பொது ஜனங்களுக்கும் துரோகம் இழைக்கக் கூடும். ஆனல், பொது மக்களின் தன்னம்பிக்கையைப் பறித்துக்கொள்ள முடியாது. வெளி எதிரிகளிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக, விஞ்ஞானத்தின் புதிய புதிய சிருஷ்டிகளை ஏற்றுக் கொள்ளாமல் தப்ப முடியாது. இங்கு போடப்பட்டுள்ள நீண்ட ரயில் பாதைகள், தந்தி மரங்கள், கப்பல் துறைகள்யாவும் இந்தியாவிலிருந்து போய் விட மாட்டாது. ஆகவே, இந்தச் சுயநலக்காரச் சிற்றரசர்களைக் கண்டு நான் பயப்பட வேண்டியதில்லை. உலகத்தின் மனித சமுதாய வளர்ச்சிக்குக் காரணமாயுள்ள ஜன சமுதாயத்தின்மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

## 3

1857 மே 10-ம் தேதி மீரட்டின் சிப்பாய்கள் கலகக் கொடியை உயர்த்தியபொழுது, மங்களசிங் அங்குதான் இருந்தான். சக்கரவர்த்தி பகதூர்ஷாவின் பிரதிநிதி என்ற ஹோதாவில், சிப்பாய்களின் ஒரு பகுதியைத் தனது செல்வாக்கின் கீழ்க் கொண்டுவர அவனுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்தியச் சிற்றரசர்கள் மங்களசிங்கின் தகுதியை நன்ருக உணர்ந்திருந்தார்கள். ஆனல் அவனுடைய நோக்கமும் தங்கள் நோக்கமும் முற்றிலும் வேறுபட்டவை என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆகவே, மங்களசிங்கை டெல்லியை நோக்கி அனுப்பாமல் கிழக்கு நோக்கி அனுப்பி வைத்தார்கள். மீரட்டிலிருந்து கிழக்கே செல்லும் பாதையும், மேற்கே செல்லும் பாதையும், அந்த இந்திய சுதந்திர யுத்தத்தின் விளைவை நிர்ணயிப்பதிலே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை கொண்டிருந்தன என்பது யாருக்குத் தெரியும்? டெல்லி நோக்கிச் சென்ற சேனைக்கு மங்களசிங்கைப் போன்ற தலைவன் இருந்திருந்தால், டெல்லி நகர மக்களையும் பிரபலஸ்தர்களையும், தங்கள் வெற்றிக்காக அவன் உபயோகித்துக் கொண்டிருப்பான்.

மங்களசிங்கின் கோஷ்டியிலே ஆயிரத்துக்கு அதிகமான சிப்பாய்கள் இருந்தார்கள். கலகம் தொடங்கிய அன்றே, அவர்கள் ஒவ்வொருவரும் தங்களை ஜெனரல்களாகக் கருதினர்கள். வெறும் ஜெனரல்களே நிறைந்த ஒரு சேனை,

வெற்றிபெற முடியாது என்பதை அவர்களுக்குப் புரிய வைக்க, மங்களசிங்கிற்கு ஒரு வாரமாகிவிட்டது. அந்தச் சேனையில், மங்களசிங்கைத் தவிர யுத்த நிபுணத்துவம் பெற்றவர்கள் வேறு யாரும் இல்லை. இதே நிலைதான், கலகம் செய்யத் தொடங்கிய எல்லாச் சேனைகளிலும் இருந்தது. ஒரு இடத்திலே தங்கி, சிப்பாய்களுக்கு யுத்தப் பயிற்சி கொடுப்பதற்கு மங்களசிங்கிற்கு நேரமில்லை. முடிந்த அளவு வேகமாக, ஜில்லாக்களிலே ஆங்கிலேயர்களின் ஆட்சி சக்தியை ஒழிக்கவேண்டியது அவசியமாயிருந்தது.

கங்கையைக் கடந்து ரஹில்கண்டை அடைந்ததுமே, மங்களசிங் சிப்பாய்களுக்கு ஒவ்வோர் இரவிலும் ஒழுங்காகத் தனது அரசியல் கொள்கையை விளக்கத் தொடங்கினான். சிப்பாய்கள் அதைப் புரிந்து கொள்வதற்குச் சிறிது காலமாயிற்று. அவர்கள் மனதிலே தோன்றிய சந்தேகங்களையெல்லாம் மங்களசிங் தீர்த்துவைத்து, அவர்களுக்கு தெளிவை உண்டாக்கினான். பிரான்ஸின் இரண்டு புரட்சிகளை (1792; 1849)யும் பற்றிய விவரங்களை அவர்களுக்கு எடுத்துச் சொன்னான். வேல்ஸின் ஆங்கிலத் தொழிலாளிகள், இந்தியாவை ஆண்டுகொண்டிருக்கும் இந்த ஆங்கில வியாபாரிகளுக்கு விரோதமாகக் கத்தி எடுத்த கதையையும் விளக்கிச் சொன்னான். இந்த ஆங்கில வியாபாரிகள், தங்கள் ஆள்பலத்தால் அதை அடக்கி விட்டார்கள் என்றாலும், வீரத்தோடு போராடிய அந்தத் தொழிலாளரின் உரிமையைப் பறித்துக்கொள்ள அவர்களால் முடியவில்லை என்பதையும் தெளிவாக்கினான்.

விஷயங்களைச் சரியாகப் புரிந்துகொண்டு போராடிய மங்களசிங்கின் சிப்பாய்களுடைய நடவடிக்கையே முற்றிலும் மாறிவிட்டது. அவர்களில் ஒவ்வொருவனும், தன்னைச் சுதந்திரப் போரின் ஒரு சேவகனாகவே கருதினான். கிராமங்களிலும் நகரங்களிலும், ஜனங்களிடையே தங்கள் பேச்சாலும் செயலாலும் ஒரு நம்பிக்கையைத் தோற்றுவித்ததோடு, அவர்களின் மரியாதைக்கும் பாத்திரரானார்கள். ஆங்கிலேயர்களின் கஜானாவிலிருந்து கிடைத்த பணத்திலே, ஒவ்வொரு பைசாவையும் சரியாகவே செலவிட்டார்கள். அவசியம் நேர்ந்தபொழுது, ஜனங்களுக்கு வரியும் விதித்தார்கள். ஆனால் அங்கங்கே பஞ்சாயத்தை ஏற்படுத்தி, அவர்களுக்கு நிலைமையை விளக்கி, அவர்களின் சம்மதத்தையும் சக்தியையும் பொருத்தே வரி விதிக்கப்பட்டது. எந்தச்

சிப்பாயும், யாரிடமிருந்தும் எந்தப் பொருளேயும் விலே கொடுக்காமல் பெறக்கூடாது என்ற மங்களசிங்கின் உத்தரவு, எல்லா இடத்திலும் மிகுந்த நல்ல பலனே அளித்தது. கூட்டம் கூட்டமாக, வாலிபர்கள் இந்தச் சுதந்திரச் சேனேயிலே வந்து சேர்ந்தார்கள். அவர்கள் எல்லோருக்கும் மங்களசிங் ராணுவக் கவாத்துப் பயிற்சி மட்டுமல்ல, ஒற்றர் வேலேயையும், உணவுப் பொருள்களேச் சேகரித்துத் தயாரிக்கும் வேலேயையும் கற்றுக் கொடுத்தான். தன்னுடைய சேனேயோடு கூட, ஒரு சிறிய வைத்தியக் கோஷ்டியையும் சேர்த்துக் கொண்டான். பிரபுக்கள் ஆட்சியால் ஏற்பட்டுள்ள கொள்ளே, லஞ்சம் முதலிய கெட்ட பழக்கங்களேப் போக்குவதற்கு, படித்தவர்களிடையே தேச பக்தியைப் பெரிய அளவில் புகுத்தவேண்டும். அதற்கு இப்பொழுது சந்தர்ப்பமில்லே என்ருலும், மங்களசிங்கோடு பழகிய ஒரு சிலராவது அந்த நற்குணத்தைப் பெருமல் போகவில்லே. சிப்பாய்களோடு சிரித்துச் சிரித்து வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்த யாரும், அவன் இவ்வளவு பெரிய சேனேயின் தலேவன் என்று கருதமாட்டார்கள். ஆனுல் அவனுடைய சேனேயிலுள்ள ஒவ்வொரு சிப்பாயும், அவனது விரல் அசைப்பிலே தனது உயிரைக் கொடுக்கத் தயாராயிருந்தான். மங்களசிங், சிப்பாய்களுடைய சமையலிலே அவர்களுடைய ரொட்டியையே சாப்பிட்டு வந்தான்; அவர்களேப்போல் ஒரு கம்பளத்திலேயே தூங்கினுன். ஆபத்தை எதிர்க்கும்பொழுது, எல்லோருக்கும் முன்னுல் நின்ருன். கைது செய்யப்பட்ட ஆங்கில ஆண்களேயும் பெண்களேயும் அவன் மரியாதையாக நடத்தினுன். அந்தச் சேனுதிபதியின் பணிவையும், மரியாதையையும் பார்த்து ஆங்கிலேயர்கள் கூட ஆச்சரியப்பட்டார்கள். ஏனெனில் அந்தக் காலத்தில் ஐரோப்பாவில்கூடக் கைதிகளே இவ்வளவு நல்லமுறையில் நடத்துவதில்லே. மங்களசிங், ரஹில்கண்டின் நான்கு ஜில்லாக்களேக் கைப்பற்றினுன். அவற்றில் ஆங்கில ஆட்சியை ஒழித்ததோடு அவன் நின்றுவிடவில்லே; நல்ல ஆட்சிக்கும் ஏற்பாடு செய்தான்.

நாஞ சாகிப் 1857-ம் வருடம் ஜூன் மாதம் 5-ம் தேதி ஆங்கிலேயருக்கு விரோதமாகக் கத்தி எடுத்தார். ஒன்றரை மாதங்கள் கழிவதற்குள், ஜூலேமாதம் பதினெட்டாம் தேதி அவர் ஆங்கிலேயரிடம் தோல்வியடைந்தார். காற்றின் போக்கை மங்களசிங் முன்கூட்டியே புரிந்துகொண்டான்.

என்றாலும், தான் உயிரோடிருக்கும் வரை சுதந்திரக் கொடியைக் கீழே போட அவன் விரும்பவில்லை. ஆங்கிலப் பட்டாளங்கள், அவதத்தின் கதியற்ற ஜனங்களைக் கொன்று குவிக்கத் தொடங்கினார்கள். பெண்களின் உயிரையும், மானத்தையும் பறித்தார்கள். இவைகளையெல்லாம் கேள்விப்பட்டபோதுகூட, மங்களசிங் தன்னிடம் கைதியாயிருந்த ஆங்கிலேயர்களைத் துன்புறுத்தவில்லை.

மழைக்காலம் முடிவடைந்தபொழுது, அநேகமாக எல்லாப் பகுதிகளிலும் கலகக்காரர்கள் நிராயுதபாணிகளாக்கப்பட்டார்கள். ஆனால், ரஹில்கண்டில் மங்களசிங் உறுதியாக நின்றான். ஆங்கிலச் சிப்பாய்களும், கூர்க்க—சீக்கியச் சிப்பாய்களும் அவனை நான்குபுறமும் எதிர்த்தார்கள் சுதந்திரச் சேனையின் எண்ணிக்கை, நாளுக்குநாள் குறைந்து கொண்டே வந்தது. நிலைமையையும், எதிர்காலத்தையும் புரிந்துகொண்டே மங்களசிங், தனது சிப்பாய்களில் அனேகரை வீட்டுக்கு அனுப்பிவிட்டான். ஆனால் மீரட்டிலிருந்து அவனோடு வந்த அந்த ஆயிரம் சிப்பாய்களில் ஒருவன் கூட அவனைவிட்டுச் செல்ல விரும்பவில்லை. கடைசிக் காலத்தில் மீதியிருந்த அந்தச் சிறிய கோஷ்டியிலே, பிராமணன், க்ஷத்திரியன், ஜாட், ஹிந்து, முஸ்லிம் எல்லோரும் தங்கள் வேற்றுமைகளை மறந்து ஒன்றாகச் சமைத்து ஒன்றாய்ச் சாப்பிடும் மனோ பக்குவத்தை அடைந்துவிட்டதைக் கண்ட மங்களசிங், மரணத்தைக் கூட மகிழ்ச்சியோடு வரவேற்கத் தயாராயிருந்தான்.

கடைசியாக, கங்கையின் படகிலே அவனை இருபுறமும் ஆங்கிலச் சிப்பாய்கள் வளைத்துக் கொண்டபொழுது பிந்தாசிங், தேவராம், சதாவல்பாண்டே, ரஹீம்கான், குலாம் ஹுசேன் ஆகிய ஐவரும் அவனோடுகூடவே இருந்தார்கள். கைதியாயிருந்த ஆங்கிலேயர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஆங்கில ஜெனரல், சரணடைந்து விடும்படியும் அவனை நிச்சயமாக மன்னிப்பதாகவும் பலமுறை தெரிவித்தான். ஆனால், மங்களசிங் ஒப்புக்கொள்ளவில்லை. கடைசிமுறையாக ஜெனரல் நேரிலே சத்தம்போட்டுச் சொல்லியபொழுதும், அதற்குப் பதிலாக மங்களசிங்கிடமிருந்து வந்தது துப்பாக்கிக் குண்டுதான். ஆறு பிரேதங்கள் இருந்த அந்தப் படகை ஆங்கிலேயர்கள் கைப்பற்றிய பொழுது, எல்லா ஆங்கிலேயர்களும் இந்தியாவின் இணையற்ற வீரத்திற்குத் தலைகுனிந்து வணக்கம் செலுத்தினார்கள்.

# சபதர்

**காலம்: கி. பி. 1922**

ஒரு சிறிய அழகிய பங்களா. அதன் முன் வராந்தா விலே பூந்தொட்டிகளில் வைக்கப்பட்டிருக்கும் ரோஜாச் செடிகள், தங்களைச் சிவந்த ரோஜா மலர்களால் அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன. பங்களாவின் பக்கத்திலே ஒரு சிறிய 'பாட்மெண்டன்' திடல். அதைச் சுற்றி உள்ள பசும் புல் தரையில் உலாவுவதே மகிழ்ச்சி அளிக்கக்கூடியது. பங்களாவின் மற்றொரு புறத்தில் ஒரு சிறு கொடி வீடு. பின்புறம் ஒரு அழகிய சவுக்கு மேடை. நாள்தோறும் மாலையில், பாரிஸ்டர் சபதரின் நண்பர்கள் கூட்டம் அதே மேடையிலே நடைபெறும்.

பங்களாவின் வெளிச் சுவரிலே, ஒரு புதுமாதிரியான பச்சைக்கொடிகள் படர்ந்து சுவரை மூடிக்கொண்டிருக்கும். சபதர் ஆக்ஸ்போர்டில் இம்மாதிரிக் கொடி படர்ந்த வீடுகளைப் பார்த்திருக்கிறார். அதே மாதிரிச்செய்ய வேண்டுமென்பதற்காகவே, இந்தக் கொடிகளைத் தருவித்துச் சுவர்களிலே படரச் செய்தார். பங்களாவின் முன்புறத்தில், இரண்டு மோட்டார்கள் நிற்கக்கூடிய 'காரேஜ்' இருக்கிறது. சபதருடையநடை, உடை, வாழ்க்கை முறை, பங்களா அமைப்பு, அலங்காரங்கள் யாவிலும் ஆங்கில முறை நிரம்பி இருந்தது. அவருடையஅரை டஜன் வேலைக்காரர்களும் உடை, பேச்சு வேலை பார்க்கும் முறையிலும்கூட, ஒரு ஆங்கில ஆபீசரின் வேலைக்காரர்களைப்போலத் தோற்றமளித்தார்கள். அவர்களுடைய சிவப்பு டவலிலும், தலைப்பாகையிலும், எஜமானரின் பெயர் பின்னல் எழுத்துக்களால் எழுதப்பட்டிருந்தது. சபதர் சாஹிப்பிற்குச் சீமைச் சாப்பாட்டிலே அதிகப் பிரியம். அதற்காக மூன்று சமையற்காரர்கள் எப்பொழுதும் தயாராயிருந்தார்கள்.

சபதர் 'துரை' யாகவே காட்சியளித்தார். ஆகவே, சகீனாவையும் வேலைக்காரர்கள் 'மேம்சாகிப்' என்றே அழைத்தார்கள். அவள் தன்னுடைய வில் போன்ற புருவத்தில் அதிகமாக அடர்ந்திருந்த மயிரைச் சிரைத்துவிட்டு,

மெல்லிய ரேகை போலாக்கி, அதன் கருமையை அதிகப் படுத்துவதற்காக மையும் பூசியிருந்தாள். பதினைந்து நிமிடங் களுக்கு ஒருமுறை, அவளுடைய கை தானே உதடுகளில் 'லிப்ஸ்டிக்' கைத் தடவும். ஆனால் சகீனா, ஆங்கிலப் பெண் களைப் போலக் 'கவுன்' உடுத்திக் கொள்வதை எப்பொழுதும் விரும்பியதில்லை.

1920-ம்வருடத்தில் சபதர்சாகிப்தன்மனைவியைஅழைத் துக்கொண்டு இங்கிலாந்திற்குச் சென்ற பொழுது சகீனா 'ஸ்கர்ட்டும்', 'பெட்டிக் கோட்டும்' அணிந்து கொள்ள வேண்டுமென்று அவர் விரும்பினார். ஆனால் அதை அவள் ஒப்புக்கொள்ளவேயில்லை. இங்கிலாந்தில் அவர்களைச் சந் தித்த ஆங்கிலப் பெண்களும், ஆண்களும், சகீனாவின் சிறந்த அழகைப் புகழ்ந்ததோடு மட்டுமல்ல, அவளுடைய சேலையை யும் புகழ்ந்ததைக் கண்ட சபதர் சாஹிப், அவள் ஆங்கில உடை உடுத்திக்கொள்ள மறுத்ததைப்பற்றி வருத்தப் படவேயில்லை. அவர்கள் இருவருடைய நிறமும் அதிக வெளு மையாயிருந்ததால் ஐரோப்பாவெங்கும் அவர்களைஇத்தாலி யர்கள் என்றே கருதினார்கள்.

1921-ம் வருடம் குளிர்காலம். வடஇந்தியாவின் மற்ற நகரங்களைப் போலவே, லக்னௌவிலும் குளிர்காலம் மிக சௌக்கியமாயிருக்கும். சபதர் சாகிப் இன்று கோர்ட்டி லிருந்து வந்ததுமே, பங்களாவின் பின் வராந்தாவில்பிரம்புக் குறிச்சியில் போய் உட்கார்ந்தார். இன்று அவருடைய முகத் திலே அதிகச் சிந்தனைக் குறியிருந்தது. அவருக்கு முன்னால் சிறிய மேஜையில் ஒரு நோட்டுப் புத்தகமும், இரண்டு மூன்று புத்தகங்களும் இருந்தன. அவருக்குப் பக்கத்திலே கிடந்த மற்ற மூன்று குறிச்சிகளும் காலியாகவே கிடந்தன. அவருடைய உடம்பிலே முதல் தரமான ஆங்கிலேய 'சூட்' அணிந்திருந்தார். தாடிமீசையில்லாத வழுவழுப்பான அவர் முகத்தைப் பார்த்ததுமே, அவர் ஆழ்ந்த சிந்தனையிலிருக் கிறார் என்பது தெரியும். இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில், அவருடைய வேலைக்காரர்கள் எஜமானருக்கு முன்னே அதிக மாகச் செல்ல மாட்டார்கள். அவர் அடிக்கடி கோபப்படுவ தில்லை என்றாலும் இந்த மாதிரிச் சமயங்களில் அவர் தனிமை யிலிருப்பதையே விரும்புகிறார் என்பது வேலைக்காரர்களுக் குத் தெரியும்.

இருள் சூழ்ந்து விட்டது. சபதர் அதே குறிச்சியில் உட் கார்ந்து கொண்டிருந்தார். ஒரு வேலைக்காரன் 'டேபிள்

லாம்'பைக் கொண்டுவந்து வைத்தான். அப்பொழுது பங்களாவின் வாசலில் யாரோ பேசுவது கேட்டு, யார் என்று விசாரித்தார். மாஸ்டர் சங்கரசிங் வந்து விசாரித்துவிட்டுச் செல்வதாக வேலைக்காரன் சொன்னான். உடனே வேலைக்காரனை அனுப்பி அவரை அழைத்து வரும்படி செய்தார்.

மாஸ்டர் சங்கர சிங்கிற்கு வயது முப்பது—முப்பத்திரண்டு இருக்கலாம். ஆனால் இப்பொழுதே அவர் முகத்தில் முதுமை தோன்றத் தொடங்கிவிட்டது. கழுத்தையும் சேர்த்து மூடியுள்ள கறுப்புக் 'கோட்டு', அதே மாதிரி "பைஜாமா', தலையிலே ஒரு வட்டத் தொப்பி, உதட்டுக்கு மேலிருந்து கீழ்நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கும் அடர்ந்த கரிய மீசை. இந்தத் தோற்றத்திலே எங்கும் இளமையின் சாயல் காணப்படவில்லை. ஆயினும், அவர் கண்களிலிருந்து வெளிப்படும் ஒளி, அவருள்ளே நிறைந்து கிடக்கும் மேதைதமையை எடுத்துக் காட்டுகிறது. மாஸ்டர் சங்கரசிங் வந்ததுமே, சபதர் அவரோடு கைகுலுக்கி, அவர் குறிச்சியில் உட்கார்ந்ததும்,

''என்ன சங்கர்! இன்று என்னைப் பார்க்காமலேயே திரும்பிப் போய் விட்டாயே?'' என்று கேட்டார்.

''அண்ணா! மன்னிக்க வேண்டும். நீங்கள் ஏதோ முக்கிய வேலையில் ஈடுபட்டிருப்பதாகக் கருதினேன்.''

''கேஸ் கட்டுகளிலே லயித்திருக்கும்போதுகூட உனக்காகச் சில நிமிஷங்களை என்னால் ஒதுக்க முடியுமே. இன்று என் முன்னால் ஒரு கேஸ் கட்டு கூடக் கிடையாது.''

சங்கரசிங்கிற்கும், சபதருக்குமிடையே நெருங்கியநட்பு உண்டு. சபதர், தனது நண்பர்களுள் சங்கரசிங்கை விட நெருங்கியவர்கள் யாருமில்லை என்று கருதினார். சேத்பூர் பள்ளிக்கூடத்தில் நாலாவது வகுப்பிலிருந்து லக்னௌவில் பி. ஏ. பாஸ் செய்ததுவரை, இருவரும் ஒன்றாகவே படித்தார்கள் கலாசாலையிலேயே, இருவரும் முதல்தர மாணவர்கள். பரீட்சையிலும்கூட, இருவருடைய மார்க்குகளிலும் ஒன்றிரண்டுதான் வித்தியாசம் இருக்கும். இந்தத் திறமையின் காரணமாகவும், மேதைதமையினாலும், இருவருக்குள்ளும் போட்டியோ கசப்போ ஏற்பட்டதில்லை. இருவருடைய நட்பும் வளர்ந்தே வந்திருக்கிறது. இருவரும் கௌதம ராஜபுத்ர குலத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால், இன்று ஒருவர் ஹிந்து,

மற்றவர் முஸ்லீம். பத்துத் தலைமுறைகளுக்கு முன்னால், இருவருடைய குடும்பங்களும் ஹிந்துவாயிருந்தது மட்டும் அல்ல; ஒரே குடும்பத்தில் தோன்றியதும்கூட. இப்பொழுதும், முக்கியமான நாட்களிலே இரண்டு குடும்பத்தார்களும் ஒன்றுசேர்வதுண்டு.

சபதர் அவரது தந்தையாருக்கு ஒரே குழந்தை. அவருக்குச் சகோதரர்கள் இல்லாத குறையை, இளமையிலிருந்தே சங்கர்தான் போக்கி வந்திருக்கிறார். சங்கர், சபதரைவிட ஆறு மாதம் இளையவர். இவையெல்லாம் வெளிப்படையாகத் தோன்றும் விஷயங்கள். இவை தவிர சங்கரிடத்திலே சிறந்தநற்குணங்களும் உயர்ந்த மேதைமையும் நிறைந்திருந்தன. அதன் காரணமாக, பக்காத் 'துரை'யான சபதர், சாதாரணத் தோற்றத்திலிருக்கும் சங்கரிடத்தில் அன்பு செலுத்தினது மட்டுமல்ல, மரியாதையும் செலுத்தினார். சங்கர் மிகுதும் பணிவுள்ளவர். ஆனால், பிறரை முகஸ்துதி செய்வது என்பது அவருக்குத் தெரியவே தெரியாது. இதன் பலனாக, மாகாணத்திலே முதன்மையாக எம். ஏ. பாஸ் செய்திருந்தும் ஒரு சர்க்கார் பள்ளிக்கூடத்தில் சாதாரண உபாத்தியாயராக வேலை பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர் சாதாரணமாக முயற்சி செய்திருந்தால்கூட இன்று ஒரு ஹைஸ்கூலில் ஹெட்மாஸ்டராக ஆகி இருக்க முடியும். அவருடைய ஆயுள் முழுதும் இந்த உபாத்தியாயர் வேலையிலேயே இருந்துவிட விரும்புவதுபோல் தோன்றுகிறது. அவர் ஆயுளிலேயே ஒரே ஒரு முறைதான் நண்பர்களின் உதவியை நாடினார். அதுவும் லக்னெளவிலிருந்து தன்னை வெளியூருக்கு மாற்றாமலிருக்கும் பொருட்டே. சங்கர், பணிவோடுகூடச் சுயமரியாதை உணர்ச்சியும்நிறைந்தவர். அந்த சுயமரியாதை உணர்ச்சிதான், அவரிடத்தில், சபதருக்குப் பெருத்தயை மரியாதையை உண்டாக்கியது.

பன்னிரண்டு வயதிலே தொடங்கிய நட்பு, நாள் தோறும் வளர்ந்து, இருபது வருடங்களுக்குப் பிறகும் மிகுந்த உறுதியோடு இருந்தது.

இருவரும் பேசிக் கொண்டிருந்த இடத்திற்கு லேசான மஞ்சள் நிறச் சேலையும் சிவப்பு நிற 'ப்ளவ்'ஸும் அணிந்துகொண்டு, சகீனா வந்து சேர்ந்தாள். சங்கர் எழுந்து நின்று 'வணக்கம் மன்னி!' என்று கைகூப்பினார். மன்னியின் பதில் வணக்கம், புன்முறுவல் உருவத்திலே வந்தது. ஒரு காலத்தில், ஒரு பணக்கார 'ஸர்'ரின்

''கிராஜுவேட்' மகள் சகீனா, பட்டிக்காட்டானைப் போலத் தோன்றும் இந்தப் பட்டதாரியோடு சபதர் நட்புரிமை கொள்வதை வெறுத்தாள். சகீனா தந்தையாரின் வீட்டிலே படுதாப் பழக்கத்தைக் கைக்கொள்ளவில்லை. ஆகையால், சங்கருக்கு முன்னால் வருவதைப்பற்றி எவ்விதக் கூச்சமும் கிடையாது. ஆயினும் ஆரம்பத்தில் ஆறுமாதகாலம் வரை சங்கர் சபதரோடுவேற்றுமையின்றி நெருங்கிப் பழகுவதைப் பார்க்கும் பொழுதெல்லாம், அவளது புருவம் நெரிந்து உயர்ந்துவிடும். ஆனால் ஆறுமாதப் பழக்கத்திற்கு பிறகு, சங்கர் உண்மையிலேயே நம்முடைய அன்பிற்கு மட்டுமல்ல, மரியாதைக்கும் உரியவர் என்று சபதரிடம் அவள் ஒப்புக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது.

இப்பொழுது, சங்கருக்கும் சகீனாவுக்குமிடையே மன்னி கொழுந்தன் முறை உறுதிப் பட்டுப் பல வருடங்களாகி விட்டன. சகீனா தன் விருப்பப்படியே தனக்குக் குழந்தைகள் பிறக்காதபடி செய்துகொண்டு விட்டாள். ஆனால், அடிக்கடி அவள் சங்கரின் குழந்தைகளை வைத்துக்கொண்டு பொழுது போக்குவாள். ஆறுவருட காலமாக, 'சங்கரனின்' தயவு தன்மீது அதிகமாய் இருப்பதாய் சங்கர் கருதினார். ஏனெனில் அவர் வீட்டில் எப்போதும் இரண்டு வயதிற்குக் குறைவான குழந்தை இருந்து கொண்டேயிருக்கும்.

கடந்த ஒருவார காலமாக சாஹிப் ஆழ்ந்த சிந்தனையிலிருப்பதை, சகீனா கவனித்து வந்தாள். ஆகவே, இன்று சங்கரின் வரவு அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனெனில், சாகிப்பின் மனப்பாரத்தைக் குறைக்கும் சக்தி சங்கர் ஒருவருக்குத்தான் உண்டு என்பது அவளுக்குத் தெரியும். சகீனா சங்கரைப் பார்த்துக்கொண்டே, ''சங்கர்! இன்று உனக்கு வீட்டிலே ஒன்றும் அதிக வேலையில்லையே? மன்னி கையால் செய்யும் 'சாக்லட்புட்டிங்'குக்காகக் காத்திருக்கலாமல்லவா?'' என்று கேட்டாள்.

சபதர்—''இது நல்ல ஒழுங்கு. வேணுமா என்று கேட்பது!''

சகீனா—''நான் முதலிலேயே ஏன் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் என்றால், கொழுந்தனார் சாகிப்பிற்குத்தான் ஒன்றும் நிச்சயம் இல்லையே. நான் தயாரித்த பிறகு அவர் மாயமாய் மறைந்து விட்டால்...?''

சங்கர்—''எனக்கு அநியாயம் செய்யாதே மன்னி! எப்பொழுதாவது உன் உத்தரவை மீறியிருக்கிறேனு? ஒரு உதாரணம் சொல் பார்ப்போம்.''

சகினு—''உத்தரவை மீறுவதைப்பற்றி நான் சொல்லவில்லை மைத்துனரே! உத்திரவைக் கேட்காமலேயே தப்பி ஓடி விடுவதும் குற்றம்தான்.''

சங்கர்—''நான் எனது 'ஜெனரல்' மன்னி சாஹிப்பின் உத்தரவைக் கேட்பதற்கு எப்பொழுதும் காத்துக்கொண்டிருக்கிறேன்.''

சகினு—''நல்லது: நான் போகிறேன். இன்று இரவுச் சாப்பாட்டுடன் 'புட்டிங்கும்' கிடைக்கும்.''

சகினு அங்கிருந்து போய்விட்டாள். சங்கர்—சபதர் சம்பாஷணை, முக்கியமான விஷயங்களிலே திரும்பிற்று.

சபதர்—''சங்கர்! இப்பொழுது நாம் முற்றிலும் ஒரு புதிய புரட்சி யுகத்திலே நுழைந்து கொண்டிருக்கிறேம். 1957-ம் வருடத்திற்குப் பிறகு, இப்பொழுதுதான் முதல் முதலாக இந்தியர்கள் தலைநிமிர்ந்து நடக்கத் தொடங்கியிருக்கிருர்கள் என்று நான் கருதுகிறேன்.''

சங்கர்—''அரசியல் போராட்டத்தைப்பற்றிச்சொல்லுகிருயா சபதர்?''

''அரசியல் பேராட்டம் என்று சொல்வது பொருத்தமற்ற வார்த்தை சங்கர். 1885-ம் வருடம் இந்திய தேசிய காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்டது. அப்பொழுது அது ஆங்கிலேய ஐ.ஸி.எஸ் பென்ஷனர்களின் தயவிலேயே இருந்தது. அதனுடைய கிருஸ்துமஸ் காலத்து அழகிய பொதுக்கூட்டங்களையும், பெருமழை போன்ற சொற்பொழிவுகளையும் பார்த்த ஜனங்கள் அதைப் 'போத்தல் போராட்டம்' என்று குறிப்பிட்டார்கள். அதற்கு நீ 'பேராட்டம்' என்று பெயர் கொடுக்கவிரும்பினுல் அது சரியாயிருக்கலாம். ஆனுல் இப்பொழுது நடப்பது 'பேராட்டம்' என்று சொல்ல முடியாது. நாம் புரட்சி யுகத்திலே கால் எடுத்து வைக்கிறேம்.

''ஏனெனில் காந்திஜி திலகர் சுயராஜ்ய நிதிக்காக ஒரு கோடி ரூபாய் சேகரித்துவிட்டார். எங்கு பார்த்தாலும் சுயராஜ்யக் கூச்சல் பலமாகக் கேட்கிறது என்பதுதானே''

புரட்சி அல்லது புரட்சிகரமான போராட்டம்; ஒரு தனி மனிதனின் பலத்தைக் கொண்டு மட்டும் நடப்பதல்ல. புரட்சியால் ஏற்படும் மகத்தான மாற்றங்கள் ஒருவரல்ல— அரைடஜன் மகாத்மாக்களின் சக்திக்கும் அப்பாற்பட்டது. இப்பொழுது நடக்கும் இந்தப் போராட்டத்தின் அடிப் படையைப்பற்றி நான் யோசிக்கும் பொழுதெல்லாம் இது மகத்தான புரட்சி என்ற முடிவிற்கே வருகிறேன். 1851-ம் வருடம் நடந்த சுதந்திரப் போரில் தலைமை வகித்தவர்கள் பதவியிழந்த சிற்றரசர்கள். ஆனால், தங்கள் உயிரைப் பணயம் வைத்துப் போராடியவர்கள் சாதாரண ஜனங்கள், நம்முடைய அநேக பலவீனங்களால், நாம் அதில் வெற்றி பெற முடியவில்லை. தோல்வி யடைந்த ஜனங்கள் மீது ஆங்கிலேயர்கள் தங்கள் கோபம் முழுவதையும் காட்டிக் கொடுமை செய்தார்கள். அது போகட்டும், 1857-ம்வரு டத்திற்குப் பிறகு, இப்பொழுதான் நாட்டின் விடுதலைப் போரிலே பொது மக்களும் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். இந்தியாவின் சரித்திரத்தை, அதிக சிரத்தை எடுத்துப் படித்த சரித்திர மாணவனாகிய நீயே சொல்; இந்த மாதிரி, இந்தியப் பொது மக்கள் முழுதும் பங்கெடுத்துக் கொண்ட போராட்டம் வேறு எப்பொழுதாவது நடந்தது உண்டா?''

''அண்ணா! நாகப்பூர் காங்கிரஸும் (1920)கல்கத்தா காங்கிரஸும் முடிந்துவிட்டது. ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்பட்டு வரும் பெரிய பெரிய மாற்றங்களையும் நான்பார்க் கிறேன். இவைகள் சாதாரண விஷயங்களல்ல. இவ்வளவு பெரிய வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியபொழுதும், இந்த லக்னௌவிலேயே அன்னியத் துணிகளை மலைமலையாகக்குவித் துக் கொளுத்தப்பட்ட பொழுதும் ஒன்றையும் காதிலே போட்டுக் கொள்ளாமலிருந்த நீ, இப்பொழுது புரட்சிச் சுழலிலே அகப்பட்டவனைப் போல் பேசுகிறாயே?''

''நீ சொன்னது முற்றிலும் சரி தம்பி! இந்தச் சுழல் உண்மையிலேயே என்னுடைய கால்களைத் தடுமாறச்செய் கிறது, ஆனால், இந்தச் சுழல் எங்கோ ஒரு சிறிய பிரதேசத் தின் சுழல் அல்ல. இது ஒரு பெரிய எல்லையற்ற சுழலாகத் தோற்றமளிக்கிறது. இந்தச் சுழல் உருவத்திலே, ஒவ் வொரு யுகத்திலும் தோன்றும் பலம் பொருந்திய புரட்சி சக்தி, மக்களிடையே வெளிப்பட்டிருக்கிறது.''

''நீ 1857-லிருந்து ஆரம்பிக்கிறாயே சபதர்! ஏன் இவ் வளவு சுற்றி வளைத்துக் கொண்டிருக்கிறாய்?''

''ஏனு? அதைப்பற்றி விளக்கமாக சொல்லட்டுமா?''

''நான் கேட்க விரும்புகிறேன். மன்னியின் 'புட்டிங்' தயாராகிக் கொண்டிருக்கிறது. நாளை ஞாயிற்றுக்கிழமை தான். ஒரு ஆளை அனுப்பி, 'சங்கர் இந்த லக்ளௌவிலே உயிரோடுதான் இருக்கிறுன். அவன் மன்னியின் 'புட்டிங்' கைத் தின்றுவிட்டுப் படுத்து நெளிந்து கொண்டிருக்கிறுன், என்று வீட்டிலே தகவல் சொல்லும்படி செய்யப்பா. இரவு முழுதும் நான் கேட்டுக் கொண்டிருக்கத் தயார்.''

''சங்கர்! ஆக்ஸ்போர்டிலே, நீ இல்லாமல் என்னுடை வாழ்க்கை ருசி பாதி குறைந்து விட்டது. அதுபோகட்டும். கடந்தநூற்றுண்டிலும், இங்கிலாந்தின் அரசியலிலே ஏற்பட்டுள்ள மாற்றங்கள் யாவும், தானே ஏற்பட்டதல்ல. உலகத்தின் நிலைமையினுலும், உலகின் மற்ற நாடுகளுடைய போக்கு - செயல்களாலும் பாதிக்கப்பட்டு, நிர்ப்பந்தமாகவே மாற்றமடைந்திருக்கிறது.''

''அந்த மாற்றங்களின் காரணங்களை நாம் அலசி ஆராய்ந்தால், முக்கியமான காரணம் பொருளாதாரமாகவே இருக்கும் என்று நான் மட்டுமல்ல, இந்தியாவிற்கு வெளியேயுள்ள எல்லா நாட்டு அரசியல் மாணவர்களும் ஒப்புக் கொள்கிறுர்கள். 1857-ம் வருடம் விழுந்த அடிக்குப் பிறகு, நம் நாடு தூங்கிப் போய்விட்டது. அல்லது அதன் நடை கண்ணுக்குத் தெரியாத அளவு மந்த கதி அடைந்துவிட்டது. ஆனுல், உலகின் மற்ற தேசங்களிலே மகத்தான மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. 1000-ம் வருடங்களுக்கு முன்னுல் ரோம சாம்ராஜ்ய காலத்தில் துண்டு துண்டாகப் போய்விட்ட இத்தாலி, 1860-ம் வருடம் ஏப்ரல் மாதம் இரண்டாம் தேதி ஒரு ஐக்கிய ராஜ்யமாக இணைவதிலே வெற்றி பெற்றது; நமது வாலிபர்களுக்கு இலட்சியமாக விளங்கும் மாஜினியையும் கரிபாலிட்டியையும் அது உலகிற்கு அளித்தது. ரோம சாம்ராஜ்யத்தை அழிப்பதிலே வெற்றி பெற்றுலும் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ள முடியாதிருந்த ஜெர்மனி, 1866-ம் வருடம் பெரும் பகுதியும் ஐக்கியப்பட்டதோடு பிரான்ஸை ஜெயித்த பிறகு, 1871-வருடம் ஜனவரி மாதம் 18-ம் தேதி, ஏறக்குறைய முற்றிலும் ஐக்கியப்பட்டு, பிரஷியாவின் தலைமையிலே தன்னை ஒரு ஐக்கியநாடாக ஆக்கிக் கொண்டது. 1866-ம் வருடம் ஏற்பட்ட அந்த மாற்றம் உலகத்திலேயே பெரிய மாற்றம் என்று சொல்ல வேண்டும். அதனுல்தான், பிரான்ஸைப்போன்ற மகத்

தான சக்தியை 1870-ம் வருடத்தில் ஜெர்மனி தோற்கடிக்க முடிந்தது. பாரிஸிலும், வார்ஸாவிலும், ஜெர்மனியின் வெற்றிக் கொடி பறப்பதைக் கண்ட இங்கிலாந்தும், ருஷ்யாவும் பயமடைந்து பெர்லினை நோக்கத் தொடங்கின. இந்த வெளிப்பயம் ஒரு புறமிருக்க, 1871-ம் வருடம் ஏப்ரல் 2-ம் தேதியிலிருந்து மே 21-ம் தேதிவரை ஒன்றரை மாதங்களுக்கு அதிகமாக ஆட்சி செலுத்திய பாரிஸ் தொழிலாளர்களின் 'பாரிஸ் கம்யூன்' ராஜ்யத்தைக் கண்டுதான் அதிமாகப் பயப்பட்டார்கள். அந்தச் சில நாள் ஆட்சி உலகில் ராஜ்யம் நடத்தக்கூடியவர்கள் பிரபுக்களும் வியாபாரிகளும் மட்டுமல்ல. தொழிலாளர்களாலும் அதை நடத்த முடியும் என்று நிரூபித்துவிட்டது.''

''இந்த நிகழ்ச்சிகளோடு இந்தியாவின் அரசியல் நிகழ்ச்சிகளுக்கும் தொடர்பு இருக்கிறது என்று கருதுகிறீர்களா?''

''அரசியல் நிகழ்ச்சிகளல்ல. ஆனால், நம்முடைய எஜமானர்களான ஆங்கிலேயர்கள் இந்தியா விஷயமாகக் கொள்கைகளை நிச்சயிப்பதற்கு, இச்சம்பவங்கள் காரணமாக இருந்திருக்கின்றன. ஐரோப்பாவிலே ஜெர்மனியைப் போன்ற ஜெயிக்க முடியாத ஒரு சக்தி தோன்றியதும் பிரான்ஸும் இங்கிலாந்தும் தங்களுக்குள்ளேயிருந்த போட்டியை மறந்துவிட்டன. இப்பொழுது அவர்களுக்கு ஜெர்மனியைப் பற்றின பயம் ஏற்பட்டுவிட்டது. இறந்து போன பாரிஸ் கம்யூனும், 1871-ல் ஆஸ்டிரியாவைத் தவிர்த்த மற்ற எல்லா ஜெர்மானிய நாடுகளும் ஐக்கியப்பட்டுள்ள ஜெர்மன் ஐக்கிய ராஜ்யமும், நம்மை ஆளும் முதலாளிகளின் தூக்கத்தைப் பாழாக்கி விட்டன என்று சொல்ல வேண்டுவதில்லை. இப்பொழுது மேலும் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. 1670-ல் ஆங்கில வியாபாரிகள் முதலாளிகளாக மாறினார்கள், மூலப்பொருள்களை வாங்குவதிலிருந்து, அதைச் செயற்கைப் பொருள்களாகத் தயாரித்து விற்பதுவரை, ஒவ்வொரு கட்டத்திலும் லாபம் சம்பாதிக்கும் முதலாளித்துவக் கொள்கையை அவர்கள் கடைப்பிடித்தார்கள். வியாபாரத்தில், தொழிலாளர்கள் தயார் செய்யும் பொருள்களை இங்கிருந்து வாங்கிப் போய் அங்கே விற்பதில் ஏற்படும் சிறிய லாபம்தான் கிடைக்க முடியும். ஆனால், முதலாளித்துவத்தில் ஒவ்வொரு படியிலும் லாபம் இருக்கிறது. பஞ்சு வாங்குவதிலே லாபம், அதைச் சுத்தம் செய்து பட்டை போடுவதிலே லாபம்; ரயில்

களிலே ஏற்றிச் செல்வதிலே லாபம்; கப்பல்களிலே அன்னிய நாட்டிற்கு அனுப்பும் கப்பல் கூலி லாபம்; மான்செஸ்டர் மில்களிலே நூற்பது, நெய்வதில் கிடைக்கும் லாபம், மறு படியும் கப்பலிலே கொண்டு வந்து ரயில் மூலம் பல இடங் களுக்கும் அனுப்புவதால் கிடைக்கும் ரயில் கூலி, கப்பல் கூலி லாபம்; இவ்விதம் ஒவ்வொரு படியிலும் கிடைக்கும் லாபத்தையும், தொழிலாளிகளிடம் சாமான்களை வாங்கி விற்பதில் கிடைக்கக்கூடிய சாதாரண லாபத்தையும், நீயே ஒப்பிட்டுப் பார்.''

"வியாபாரத்தைவிட முதலாளித்துவத்தின் லாபம் அதிகம் என்பதில் சந்தேகமில்லை.''

''1871—ல் வார்ஸாவிலிருந்து வெற்றிபெற்ற ஜெர்மனி பிரஷ்யாவின் அரசர் முதலாவது வில்லியமை அகில ஜெர்ம னிக்கும் கெய்ஸர் (சக்கரவர்த்தி) என்று பிரகடனப் படுத் தியது. அதற்கடுத்த வருடம் (1872) பிற்போக்காளர் களான ஆங்கில முதலாளிகள் (டோரிகள்) இங்கிலாந்தின் யூதப் பிரதம மந்திரியான டிஸ்ரைலி மூலம் சாம்ராஜ்யக் கொள்கையைப் பிரகடனப் படுத்தினார்கள். அது வெறும் பிரகடனமல்ல; உண்மையை வெளிப்படுத்துவதேயாகும். அப்பொழுது, இங்கிலாந்திலே தொழிற்சாலைகள் ஏராளமா கப் பெருகிவிட்டன. அவற்றிற்காக, பாதுகாக்கப்பட்ட சந்தைகள் அவசியமா யிருந்தன. ஜெர்மனி, பிரான்ஸ் சாமான்களின் போட்டியைப் பற்றிய பயமில்லாத சந்தை கள், அதாவது வியாபாரத்தின் முழுநிர்வாகமும், உரிமையும் தங்கள் கையிலேயே இருக்கும்படியான சந்தைகள் வேண்டு மென்று கருதினார்கள். மேலும், மூலதனம் ஏராளமாகப் பெருகிவிட்டது. அதை லாபகரமாக உபயோகிப்பதற்குப் பாதுகாப்பான இடங்கள் வேண்டும். இவைகளுக்கு மற்ற நாடுகளைப் பூரணமாகத் தங்களின் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தால்தான் முடியும். டிஸ்ரைலியின் 'சாம்ராஜ்யம்' என்ற சொல்லுக்கு, இதுதான் அர்த்தம். இந்த இரண்டு விஷயங்களுக்கும், இந்தியாவிலே போதுமான வசதி யிருந்தது. ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வருவதற்கு மிகச் சமீபமானதும் சுலபமானதுமான வழி 1869-ல் திறக்கப்பட்ட சூயெஸ் கால்வாய்தான். 1875-ல் எகிப்து கதீப்பினுடைய 1,77,000, சூயெஸ் கால்வாய் கம்பெனி ஷேர்களையும் நாற்பது லட்சம் பவுனுக்குத் தந்திமூலம் டிஸ்ரைலி வாங்கினான். சாம்ராஜ்யப் பிரகடனத்திற்கு

அடுத்த அடி முன்னேற்றம் இது. 1877 ஜனவரி முதல் தேதி டெல்லியில் ஒரு தர்பார் நடத்தி, மகாராணி விக்டோரியாவைச் சக்கரவர்த்தினி என்று பிரகடனப் படுத்தியது டிஸ்ரைலியின் சர்க்கார். இதன் மூலம் சாம்ராஜ்யக் கொள்கை பலமாக உறுதிப்படுத்தப்பட்டு விட்டது. இப்பொழுது லிபரல் பார்ட்டியின் கிளாட்ஸ்டன் அல்ல அவன் தாத்தா பிரதமராயிருந்தாலும், டிஸ்ரைலியின் கொள்கையிலிருந்து மாறி நடப்பது சுலபமல்ல.''

''நாங்கள் எங்கள் மாணவர்களுக்கு இன்றுவரை, மகாராணி விக்டோரியா இந்தியாவின் சக்கரவர்த்தினிப் (கெய்ஸர்—ஏ ஹிந்த்) பதவியை ஏற்றுக்கொண்டு இந்நாட்டிற்குப் பெரிய அநுக்கிரகம் செய்திருக்கிறுள் என்றுதான் சொல்லிக் கொடுத்து வந்திருக்கிறோம்.''

''ஆறு வருடங்களுக்கு முன்னுல் பிரஷ்ய அரசனும் கெய்ஸர் (சக்கரவர்த்தி) என்ற பட்டத்தைத்தான் ஏற்றுக்கொண்டான். கெய்சர் என்ற சொல்லுக்கு இப்பொழுது ரொம்பக் கிராக்கி ஏற்பட்டுவிட்டது. ரோம சாம்ராஜ்யக் காலத்தில் ஒதுக்கப்பட்ட இந்தச் சொல்லிற்கு, திடீரென்று சந்தையிலே அதிகக் கிராக்கி ஏற்பட்டு விட்டது.''

''அதோடு கூட, ரோமன் பாஷைச் சொல்லான இந்தக் கெய்ஸர் என்ற சொல்லை இந்தியாவிலே உபயோகிப்பதும், அதன் இடத்திலே ஆங்கிலச் சொல்லான எம்பரர்— எம்பரஸ் என்ற சொற்களை வைப்பதும், ஏதோ முக்கியமான கருத்தோடுதான் என்று கருதுகிறேன்.''

''இருக்கலாம். இந்தக் கெய்ஸர் என்ற சொல்லோடு கூட நாம் 1871-லிருந்து சாம்ராஜ்யக் கொள்கை யுகத்திலே நுழைகிறோம். இங்கிலாந்து முதலில் வருகிறது. தோல்வியடைந்த குடியரசுப் பிரான்ஸ் கொஞ்சம் சமாளித்துக் கொண்ட பிறகு, 1881-ல் டூனிஸில் தன் அதிகாரத்தை ஏற்படுத்துவதின் மூலம், சாம்ராஜ்யக் கொள்கையை ஆரம்பித்தது. புதிய தொழிற்சாலைகளும், முதலாளித்துவமும் வளர்ந்த ஜெர்மனியும், 1884-ல் குடியேற்ற நாடுகள் தேவையென்று கேட்பதன் மூலம் சாம்ராஜ்யக் கொள்கையை ஸ்தாபிக்க முயலுகிறது.''

''ஆனுல், இவைகளுக்கும் இந்தியாவில் ஆங்கிலேயர்களின் கொள்கை மாற்றமடைவதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?''

''நாள்தோறும் வளர்ச்சியடைந்துவரும் இயந்திரங்கள், பெருகிவரும் தொழிற்சாலைகள், குவிந்துகொண்டிருக்கும் மூலதனம், இவை யாவற்றையும் லாபகரமான வழியிலே உபயோகிப்பதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமல்லவா? 1874 முதல் 1880 வரை பதவி வகித்த டிஸ்ரைலி மந்திரி சபை அதைச் செய்து முடித்தது. 1880 முதல் 1 892 வரை பதவி வகித்த தாராளக் கட்சிக் கிளாட்ஸ்டன் சர்க்கார் டிஸ்ரைலி முன்னேறிய பாதையிலிருந்து பின்வாங்க முடியவில்லை. முதலாளித்துவத்தின் பகிரங்கமான சாம்ராஜ்யக் கொள்கையினுடைய ராக்ஷஸத் தன்மையை மறைப்பதற்கு ஏதாவது ஒரு அலங்காரமான வேஷம் தேவையிருந்தது. அதற்காக—சாதாரண ஜனங்களை ஏமாற்றும் பொருட்டு டிஸ்ரைலி, இந்தியச் சக்கரவர்த்தினி என்ற தர்பார் நாடகத்தை நடத்தி முடித்தான். அவருக்குப்பின் வந்த தாராளக் கட்சியினர், தங்கள் தாராளத் தன்மையைக் காட்டுவதற்காக அயர்லாந்தின், 'ஹோம் ரூல்பில்' என்ற நாடகத்தை நடித்தனர். ஆயினும், அயர்லாந்தின் பிரச்னை அன்று போலவே இன்றும் இருக்கிறது. இந்தத் தாராளத் தன்மையை உபயோகித்துக்கொண்டு பலனடைய வேண்டுமென்றுநமது இந்திய சாஹிப்புக்கள், 1885-ல் காங்கு ரஸைத் தோற்றுவித்தார்கள். உண்மையில் காங்கிரஸ் பிரிட்டிஷ் தாராளக் கட்சியின் வளர்ப்புப் பெண்ணுகவே உலகத்தில் தோன்றியது. நீண்ட காலம்வரை அவ்விதமே இருந்தும் வந்தது. ஆனுல், 1895-லிருந்து 1905 வரை பத்துவருட காலம், பிரிட்டனில் மறுபடியும் டோரிகளின் சர்க்கார் ஏற்பட்டது. அது ஆல்கின், கர்ஸார்ன் போன்ற 'நல்ல பிள்ளைகளை' இந்தியாவிற்கு அனுப்பிவைத்தது. அவர்கள், இந்தியாவிலே சாம்ராஜ்யத்தின் வேரைப் பலப்படுத்த முயற்சி செய்தார்கள். ஆனுல், பலன் விபரீதமாகவே ஏற்பட்டது.

''நீங்கள் லஜபதிராய், பாலகங்காதர திலகர், விபின் சந்திரபாலர் இவர்களின்செயல்களைக்குறிப்பிடுகிறீர்களா?''

''திலகர், லஜபதிராய், பால் இவர்களெல்லாம் அந்த வினையின் வெளித் தோற்றங்கள் தான். ஜப்பான், 1904—5 யுத்தத்தில் ருஷ்யாவைத் தோற்கடித்து, வல்லரசுகளின் சமுதாயத்தில் சேர்ந்துகொண்டதன்மூலம், ஆசியாவிலே ஒரு புதிய விழிப்பை ஏற்படுத்தியது. கர்ஸானின் வங்கப் பிரிவினையும் இந்தச் சிறிய ஆசிய நாட்டின் வெற்றியும் சேர்ந்து காங்கிரஸ் மேடைகளிலே சொல்மாரி பொழிவதைவிட்டு

முன்னேறிச் செல்ல இந்திய வாலிபர்களைத் தூண்டிற்று. அரை நூற்றாண்டிற்குப் பிறகு, இந்தியர்கள் தங்கள் நலனுக்காக உயிர்விடக் கற்றுக் கொண்டார்கள். அயர்லாந்திலும் ருஷ்யாவிலும், தாய் நாட்டிற்காகப் பலி பீடத்தில் ஏறிய தியாகிகளின் உதாரணம், இந்திய வாலிபர்களுக்குப் பெரிதும் துணை செய்தது. ஆகவே, இந்தப் போராட்டத்தின் வேரை, நாம் இந்தியாவிற்குள்ளேயே தேடிக் கொண்டிருக்கக் கூடாது.''

''ஆம், உண்மையில் உலகத்தின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒன்றோடொன்று தொடர்பு உடையதாகவே இருக்கும்.''

''சங்கர்! எந்த ஒரு புரட்சிக்கும் சக்தி இரண்டு விஷயங்களின் அடிப்படையிலேயே கிடைக்கிறது. ஒன்று உலகத்தின் நிலைமை—நிகழ்ச்சிகள், அந்தப் புரட்சியைத் தூண்டுவதற்கு எவ்வளவு தூரம் காரணமாயிருக்கிறது என்பது. மற்றொன்று, நாட்டிலுள்ள அதிகப் புரட்சிக்கரமானவர்க்கம் அதில் எவ்வளவு தூரம் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறது என்பது. முதலாவது விஷயத்திற்குச் சில உதாரணங்கள் முன்னே கூறினேன். இரண்டாவது விஷயத்தின் சக்தி தொழிலாளர்கள்—விவசாயிகள், யாரிடம் இழப்பதற்கு மிகக் குறைவான பொருள்கள் இருக்கிறதோ, அவர்கள் தான் புரட்சிப் போரை நடத்த முடியும். சகீனாவின் லிப்ஸ்டிக், இந்தப் பங்களா, தந்தையாரின் இந்த ஜெமீன் கிராமங்கள், இவைகளை எல்லாம் இழந்துவிட நேருமேஎன்ற பயமுள்ளவன், புரட்சிப் போர்வீரனாக ஆகமுடியாது. ஆகையால், சாதாரண ஏழைப் பொது ஜனங்கள்தான் புரட்சியின் சக்தியாக இருக்க முடியும்.''

''இவற்றை நான் ஒப்புக் கொள்கிறேன்.''

''நல்லது, சாதாரணப் பொது ஜனங்களிடம் இன்று ஏற்பட்டுள்ள விழிப்பை நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய். மற்றொருபுரம், உலகத்தின் நிகழ்ச்சிகளும் தூண்டிக் கொண்டிருக்கின்றன. கடந்த மகாயுத்தம் (1914-18) உலகத்திலேயே ஒரு பெரிய நெருப்பைக் கொளுத்திவிட்டது. சாம்ராஜ்யக் கொள்கையினாலும், ஏராளமாகக் குவிந்திருக்கும் முதலுக்கும் உற்பத்திப்பொருளுக்கும் பாதுகாப்பானசந்தையைப் பிடித்து வைத்துக் கொள்ளவேண்டும் அல்லது பறித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவலினாலுமே, அந்த யுத்தம் தோன்றிற்று. ஜெர்மனி புதிய குடியேற்றங்களை

வேண்டிற்று. ஆனல் பூவுலகமோ, ஏற்கெனவே பிரிக்கப் பட்டு முடிந்துவிட்டது. ஆகவே அவைகளைப் போராடித் தான் பறித்துக் கொள்ள வேண்டும். குடியேற்ற நாடுகளின் சொந்தக்காரர்களான இங்கிலாந்தோடும் பிரான்ஸோடும் ஜெர்மனி யுத்தம் தொடங்கிற்று. யுத்தத்திலே ஜெர்மனி தோற்கடிக்கப்பட்டுவிட்ட தென்ருலும்,சாம்ராஜ்யக் கொள் கையின் வேரையே அசைத்தெடுக்கும் ஒரு புதிய விரோத சக்தி உற்பத்தியாகிவிட்டது—பொருள்களை லாபத்திற்காக உற்பத்தி செய்யக் கூடாது. மனித சமுதாயத்தைச் சுகமாக வும், கௌரவமாகவும் வாழ்விக்கச் செய்வதற்காகஉற்பத்தி செய்யப்பட வேண்டும் என்ற, பொது உடமைக் கொள்கை தோன்றிவிட்டது. இயந்திரங்கள் நாள்தோறும் வளர்ச்சி யடையும், தொழிற்சாலைகளும் பெருகும். அதன் மூலம் பொருளுற்பத்தியும் அதிகரிக்கும். அதற்குத் தக்கப்படி அதிக மான சந்தைகளும் வேண்டும். மேலும் பொருளை வாங்கு வதற்குப் போதுமான பணமும் இருக்க வேண்டும். பணம் எவ்வளவு குறைவாய் இருக்கிறதோ, அவ்வளவு குறைவா கவே பொருள்களும் வாங்கப்படும். அதிகப் பொருள்கள் கடையிலோ அல்லது கிடங்குகளிலோ தேங்கிக் கிடக்கும். அதன் விளைவாக மந்தம் ஏற்படும். உற்பத்தியைக் குறைக்க வேண்டும். தொழிற்சாலைகள் மூடப்படும். தொழிலாளர்கள் வேலையற்றவர்களாவார்கள். வாங்கும் சக்தி இன்னும் குறையும். மறுபடியும் இந்த விஷச்சக்கரம்தான். அதற் காகத்தான் இந்தப் புதிய பொது உடைமைக் கொள்கை, லாபத்தின் ஆசையை விட்டுவிடுங்கள்; தங்கள் நாட்டை மட்டுமோ அல்லது அகில உலகத்தையுமோ ஒரே குடும்ப மாகக் கருதி அதன் தேவைக்கேற்ப உற்பத்தி செய்யுங்கள்; ஒவ்வொரு மனிதனிடமும் அவன் சக்திக்கேற்ப வேலை வாங் குங்கள்; அவனுடைய தேவைக்கேற்ப அவசியமானபொருள் களைக் கொடுங்கள்; எல்லோருடைய தேவையையும் பூர்த்தி செய்யக்கூடிய அளவு உற்பத்தி பெருகாதவரை, உழைப் பிற்கேற்பக் கூலி கொடுங்கள் என்று உபதேசிக்கிறது. நிலமும், தொழிற்சாலைகளும் தனி மனிதனுக்குச் சொந்த மாய் இருக்காமல், தேசத்தின் பொதுச் சொத்தாக ஆகும் பொழுதுதான் இது நிறைவேறும்.''

''கற்பனை மிக அழகாகத்தான் இருக்கிறது.''

''இது வெறும் கற்பனையல்ல சங்கர்! உலகத்தின் ஆறி லொரு பாகமான ருஷ்யாவிலே, 1917-ம் வருடம் நவம்பர்

மாதம்7-ம்தேதி பொது உடைமை அரசாங்கம் ஏற்பட்டு விட்டது. இன்றும் கூட, முதலாளித்துவ உலகம் மனிதசமுதாயத்திற்கு ஒரே ஒரு நம்பிக்கையான அந்தப் பொது உடைமை அரசாங்கத்தை அழித்துவிட விரும்புகிறது. ஆனால், முதலில் ஏற்பட்ட பலமான பரீட்சையிலேயே சோவியத் அரசாங்கம் தேறிவிட்டது. ஹங்கேரியில் ஏற்பட்ட பொது உடைமை அரசாங்கத்தை, ஆறு மாத காலத்திற்குள் பிரான்ஸ்—அமெரிக்க முதலாளிகள் கொன்றுவிட்டார்கள். ஆயினும் ருஷ்ய சோவியத் அரசாங்கம், உலகத் தொழிலாளர்கள்—விவசாயிகளுக்குத் தூண்டுதலும் நம்பிக்கையுமாகும். ருஷ்யாவிலே சோவியத் ஆட்சியை ஸ்தாபித்த இந்தச் சக்தி, உலகத்தின் ஒவ்வொரு நாட்டிலும்வேலை செய்து கொண்டிருக்கிறது. யுத்தம் முடிந்ததும், அவசர அவசரமாக ரௌலட் சட்டத்தை ஏன் நமது அரசாங்கம் பாஸ் செய்தது? உலகத்தின் புரட்சிகரமான அந்த சக்தியை ஒடுக்குவதற்காகத்தான். அந்தப் புரட்சிகரமான சக்தி உலகத்தை மாற்றுவதற்காக ஒவ்வொரு நாட்டிலும் பரவ முயலாவிட்டால், ஆங்கிலேயர்கள் இந்த ரௌலட் சட்டத்தைக் கொண்டு வந்திருக்க மாட்டார்கள். காந்திஜியும் அதற்கு விரோதமாகக் கிளர்ந்தெழும்படி ஜனங்களைத் தூண்டியிருக்கமாட்டார். ஜனங்களும் விழுத்தெழுந்திருக்க மாட்டார்கள். 1857-க்குப் பிறகு, சாம்பல் மூடிக்கிடந்த தணல் மறுபடியும் சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கி இருக்காது. ஆகையால்தான், நாம் இப்பொழுது புதிய புரட்சி யுத்தத்திலே நுழைந்து கொண்டிருக்கிறோம் என்று நான் சொன்னேன்.''

''காந்திஜி, புரட்சிகரமான தலைவர் என்று நீங்கள் கருதுகிறீர்களா? கோகலே போன்ற மிதவாதத் தலைவரைத் தனது குருவென்று சொல்லும் காந்திஜி, புரட்சிக்காரராய் இருக்க முடியுமா?''

''காந்திஜியின் எல்லாக் கருத்துக்களும், எல்லாச் செயல்களும் புரட்சிகரமானது என்று நான் ஒப்புக்கொள்ளவில்லை சங்கர்! புரட்சிச் சக்தியின் மூலாதாரமான பொது ஜனங்களை அவர் ஆச்சரியப்படும்படி எழுப்பிவிட்டாரே அதை, அந்த அளவிற்குப் புரட்சிகரமானது என்றுதான் நான் கருதுகிறேன். அவருடைய கிலாபாத் இயக்கத்தையும், மத நம்பிக்கை உணர்ச்சியையும், புரட்சிக்கு விரோதமான போக்கு என்று நான் கருதுகிறேன். இயந்திரங்களையும், இயந்திரத்

தொழில்களையும் விட்டுவிட்டுப் பின்னால் திரும்பிப் போக வேண்டுமென்று அவர் சொல்வதை, மிகவும் பிற்போக்கென்று நான் கருதுகிறேன். பள்ளிக் கூடங்களையும், காலேஜ் களையும் விட்டு வெளியேறும்படி சொல்வுதையும், நான் அந்த வரிசையிலேயே சேர்க்கிறேன்.''

''நீ ஏழேழு தலைமுறைக்கும் நல்லாயிருக்க! நீ காந்திஜியைப் புகழத் தொடங்கியதும், நீயும் கூடப் பள்ளிக்கூடங்களையும், காலேஜ்களையும் சைத்தானின் தொழிற்சாலைகள் என்று சொல்லப்போகிறாயோ எனப் பயந்தே போய்விட்டேன்.''

''கல்வி முறைகளிலே குறைகள் இருக்கலாம். ஆனால் இன்றையப் பள்ளிக்கூட—காலேஜ்களிலிருந்து தான் நாம் விஞ்ஞானத்தைத் தெரிந்துகொள்ளமுடிகிறது. விஞ்ஞான அறிவில்லாத மனிதன், இன்றைய உலகில் மனிதனே அல்ல. நமது சுதந்திரம் என்று கிடைத்தாலும், அதைப் பெறுவதற்குப் பெருந்துணையாயிருந்தது விஞ்ஞானமாகவே இருக்கும். நாள்தோறும் பெருகிக் கொண்டுவரும் மனித ஜாதியின் எதிர்காலமும் சுகவாழ்வும், அந்த விஞ்ஞானத்தையே நம்பி இருக்கிறது. ஆகவே, விஞ்ஞான அறிவை விட்டு விட்டுத் திரும்பிச் செல்வது என்பது தற்கொலைக்கு ஒப்பாகும். பள்ளிக்கூடங்களையும், காலேஜ்களையும் மூடிவிட்டு கைராட்டையையும், கைத்தறியையும் கற்றுக் கொடுக்கும் பாடசாலைகளை ஏற்படுத்துவது, மக்களை முற்றிலும் இருட்டுக்குள் இழுத்துச் செல்வதாகும். ஆனால், புரட்சிச் சேனையை அமைப்பதற்கு மாணவர்களைத் தூண்டுவது கெட்டதல்ல என்பதை, நீயும் ஒப்புக் கொள்வாய்.''

''நிச்சயமாக. ஆனால், மற்ற பகிஷ்காரங்களைப் பற்றி என்ன?''

''கோர்ட்டுகளைப் பகிஷ்கரிப்பது சரி. இதன் மூலம் நாம் நமது அன்னிய ஆளும் வர்க்கத்தினருக்கு, நம்முடைய வெறுப்பையும் ரோஷத்தையும் காட்ட முடிகிறது. அன்னியச் சாமான் பகிஷ்காரமோ, ஆங்கில வியாபாரிகளின் கன்னத்திலே ஒரு பலமான அறை. மேலும் அது, நமது உள் நாட்டுத் தொழில்கள் வளர்வதற்கும் உதவி செய்கிறது.''

''நீ ரொம்பத் தூரம் போய் விட்டாய் என்று தோன்றுகிறது சபதர்!''

''இன்னுமில்லே, ஆனல், இப்பொழுது போக விரும்பு கிறேன்.''

''போக விரும்புகிருயா?''

''முதலில், நாம் இப்பொழுது ஒரு புரட்சி யுகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிருேம் என்பதை ஒப்புக் கொள்ளு கிருயா இல்லேயா?''

''உன்னுடைய கருத்தைப் பூரணமாகத் தெரிந்துகொள் வதற்காகத்தான் நான் அநேகம் கேள்விகள் கேட்டேன். சபதர்! ருஷ்யாவிலே புரட்சி வெற்றிபெற்ற செய்தியை அறிந்தது முதல், நான் பொது உடைமை நூல்களேத்தேடித் தேடிப் படிக்கத் தொடங்கினேன். அதைவிட அதிகமாக நமது நாட்டுப் பிரச்னேகளேப் பற்றிப் பொது உடைமை நோக்கோடு சிந்திக்கத் தொடங்கினேன். இந்தியாவிற்கும் உலகத்திற்கும் நன்மை பயக்கக் கூடியது அந்தப் பொது உடைமைக் கொள்கைதான். காந்திஜியின் இந்த ஒத்துழை யாமை இயக்கம், இந்த மதத்தான லட்சியத்திற்குச் சாதக மாக இருக்குமா அல்லது இல்லேயா என்ற சந்தேகந்தான் எனக்குக் கொஞ்ச நாளாக இருந்தது. ஆனல், புரட்சிச் சக்தியின் மூலாதாரமான பொது ஜனங்களேத் தட்டி எழுப்பு வதைப்பற்றி நீ ஞாபகப்படுத்தியதும், எனது சந்தேகம் தீர்ந்தது. நான் காந்திஜியைப் புரட்சியை நடத்தும் கருவி என்று ஒப்புக்கொள்ளவில்லே, ஆனல், பொதுஜனங்களின் சக்தியை ஒப்புக் கொள்கிறேன். 1857-ல் கொழுப்புத் தடவிய தோட்டாவால் மதத்திற்கு ஆபத்து என்று கதை கட்டி, மக்களேப் புரட்சியிலே இழுத்தார்கள். ஆனல், இன்று உணவுப் பிரச்னே அவர்களேப் புரட்சிக்கு இழுத்துக் கொண்டு வருகிறது. கோஷம் சரியானது; புரட்சியின் குரல் சரியானது. ஆகவே காந்திஜி, பின்னல் தனது சுய உருவத்தில் வெளியே வந்தாலும், புரட்சியின் சக்கரத்தைத் திருப்ப முடியாது என்று நான் கருதுகிறேன்.''

''இப்பொழுது நான் புரட்சிச் சேனேயிலே சேர்வதற்கு —ஒத்துழையாமை இயக்கத்திலே ஈடுபடுவதற்கு விரும்பு கிறேன்.''

''இவ்வளவு சீக்கிரமா?''

''ஆம்; சீக்கிரமாகத்தான். நான் இதற்கு முன்னலேயே மைதானத்தில் இறங்கியிருக்க வேண்டும். ரொம்ப தூரம் யோசித்து, சிந்தித்த பிறகு, இன்று உன்னுடைய

அபிப்பிராயத்தையும் கேட்டுக் கொண்டுதான் எனது முடிவை வெளியிடுகிறேன்.''

சபதரின் கம்பீரமான முகத்திலிருந்து இந்தச் சொற்கள் வெளிவந்த பிறகு, சங்கர் எங்கேயோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான். அவன் மௌனமாயிருப்பதைப் பார்த்த சபதர்,

''என்ன உனது மன்னியின் லிப்ஸ்டிக்கைப் பற்றியும், பட்டுச் சேலையைப் பற்றியும், பஞ்சுமெத்தையைப் பற்றியும், இந்தப் பங்களாவைப் பற்றியும் யோசித்துக் கொண்டிருக் கிருயா? நான் சகீனுவை ஒன்றும் கட்டாயப்படுத்த மாட் டேன். அவள் எவ்வித வாழ்க்கையை வேண்டுமானுலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அவளிடம் அவளுடைய சொந்தச் சொத்தும் இருக்கிறது. மேலும் இந்தப் பங்களா வும், என் தந்தையார் விட்டுச் சென்ற பல கிராமங்களும் கொஞ்சம் ரொக்கமும் இருக்கின்றன. இவை எதுவும் என்னைக் கவரவில்லை. இவைகளைக் கொண்டு அவள் இஷ்டம் போல் தனது வாழ்க்கையை நடத்தலாம்.''

''நான் மன்னியைப்பற்றியோ அல்லது உன்னைப்பற் றியோ யோசித்துக் கொண்டிருக்கவில்லை. என்னைப்பற்றித் தான் யோசித்துக் கொண்டிருந்தேன். என் பாதையிலே இருந்த சில சந்தேகத் தடைகளும் இப்பொழுது நீங்கிவிட் டன, வா! சகோதரர்களாகிய நாம் இருவரும் ஒன்ருகவே புரட்சிப் பாதையில் முன்னேறுவோம்.''

''ஆக்ஸ்போர்ட்டிலே நீ இல்லாமல் துடித்துக் கொண் டிருந்தேன். சங்கர்! நீ கூடயிருக்கும்பொழுது தூக்கு மேடையில்கூட என்ஞல் சிரித்துக்கொண்டே ஏறமுடியும்'' என்று கண்களிலே நீர் ததும்பக் கூறினுர் சபதர்.

சகீனு வந்து சாப்பாட்டிற்கு அழைத்தாள். சபை கலைந்தது.

## 2

அன்று இரவிலிருந்தே, சபதரின் முகம் மிக மலர்ச்சி யடைந்திருப்பதைப் பார்த்த சகீனு, சங்கரோடு மனம் விட்டுப் பேசியதின் விளைவு என்று கருதினுள். தன்னுடைய முடிவைச் சகீனுவிடம் தெரிவிப்பதுதான் சபதருக்கு மிகக்

கஷ்டமான காரியமாயிருந்தது. சபதரும் செல்லமாக வளர்ந்தவர்தான். ஆனால், கிராமத்தில் பிறந்து வளர்ந்த வர். ஆகையால், ஏழை எளியவரின் குழந்தைகளை அனு தாபத்தோடு பார்த்துப் பார்த்துப் பழகிய அவருக்கு, தனக்கு ஏற்படப் போகும் பரீட்சையில் தேறிவிட முடி யும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் சகீனாவின் விஷயம் வேறு. அவள் நகரத்திலே பணக்காரக் குடும்பத்திலே பிறந்து வளர்ந்தவள். அவளைப் பொருத்தவரை, ''கல்லரக் குங் கடுமையவல்ல நின் சில்லரக்குண்ட சேவடி'' என்பது முற்றிலும் பொருந்தும். ஞாயிற்றுக்கிழமை வரை அந்தப் பேச்சை எடுக்கவே சபதருக்குத் தைரியம் வரவில்லை. திங் கட்கிழமையன்று சீப்கோர்ட்டிலே தனது நெருங்கிய நண் பர்கள் சிலரிடம் தன் முடிவைத் தெரிவித்த பிறகும், சகீனா விற்குச் சொல்லாமலிருப்பது தவறு என்று கருதினார்.

அன்று இரவு, அவர் லக்னௌவில் கிடைக்கக்கூடிய மிக உயர்ந்த 'சாம்பைன்' வரவழைத்தார். யாரோ நண்பர்கள் விருந்துக்கு வரப்போகிறார்களென்று சகீனா கருதினாள். ஆனால் சாப்பாட்டிற்குப் பிறகு சாம்பைனைத் திறந்து கொண்டு வரும்படி அவர் வேலைக்காரனுக்கு உத்தரவிட்ட பொழுது, சகீனாவிற்குக் கொஞ்சம் ஆச்சரியம் ஏற்பட்டது. சபதர், சாம்பைன் கிளாஸை சகீனாவின் உதடுகளிலே வைத்து, ''என் அன்பே! சகீனா! எனக்கு நீ கொடுக்கும் கடைசிப் பிரசாதம் இதுதான்'' என்று கூறினார்.

''குடிப்பதை விட்டுவிடப் போகிறீர்களா?''

''அது மட்டுமல்ல, இன்னும் சிலவற்றையும்; ஆனால் உன்னை விட்டுவிட மாட்டேன் சகீனா! இனிமேல் நீதான் எனது மது. எனது கண்கள் உனது அழகைப் பருகிப் பருகி, கள்வெறி கொள்ளும்'' என்று கூறிக்கொண்டு வரும் பொழுதே சகீனாவின் முகம் கோணுவதைக் கண்ட சபதர், ''சகீனா! நாம் பேச வேண்டுவது இன்னும் அதிகம் இருக் கிறது; முதலில் இந்தச் சாம்பைன் போத்தலைத் தீர்த்து விடுவோம்'' என்றார்.

சகீனாவிற்குச் சாம்பைனிலே சுவை ஏற்படவில்லை. சாம் பைன் கிளாஸுகளைத் தீர்ப்பதற்கு, உமர்கயாத்தின் எத் தனையோ ரூபயாத்துக்களைச் சபதர் உபயோகித்தார். என்றா லும், சகீனாவின் மனம் அதிலே முற்றிலும் ஈடுபடவில்லை. வேலைக்காரர்களெல்லாம் போய்விட்டார்கள். சகீனா தனக்கு

விருப்பமில்லாத ஏதோ ஒன்றைப்பற்றிய சந்தேகத்திலே முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு படுத்திருந்தாள். அப்பொழுது சபதர் மெதுவாகப் பேச்சைத் தொடங்கினர்.

"சகீனு! நான் ஒரு பெரிய முடிவிற்கு வந்திருக்கிறேன். இவ்விதம் முடிவு செய்வதற்கு முன்னல் உன்னையும் கலந்து கொண்டிருக்க வேண்டும். அவ்விதம் கலந்து கொள்ளாதது என்னுடைய குற்றம் என்பதை ஒப்புக் கொள்கிறேன். அந்தக் குற்றத்தை ஏன் செய்தேனென்பதை, நான் சொல்லப்போகும் விஷயங்களால் நீயே உணர்ந்து கொள்வாய். முதலில் விஷயத்தைச் சுருக்காகச் சொல்கிறேன். நான், தேசத்தின் சுதந்திரப் போராட்டத்திலே பங்கெடுத்துக்கொள்ள நிச்சயயித்துவிட்டேன்."

சகீனுவின் இதயத்திலே இடியைப்போல் தாக்கின இந்த வார்த்தைகள். அவளால் வாய்திறந்து பேசமுடியவில்லை. அவள் மௌனமாய் இருப்பதைப் பார்த்த சபதர், "ஆனல் அன்பே! குழந்தைப் பருவத்திலிருந்து நீ வளர்ந்து வந்திருக்கும் முறையைத் தெரிந்து கொண்ட நான் உன்னையும் இந்தக் கல்லிலும், முள்ளிலும் இழுத்துச் செல்ல விரும்பவில்லை."

சகீனு தனது இதயத்திலே மற்ருெரு பலமான அடி விழுந்ததாக உணர்ந்தாள். இந்த இரண்டாவது தாக்குதல், முதலாவது விழுந்த அடியை மறந்தே போகும்படி செய்து விட்டது. பொங்கி எழுந்த அவளது சுயமரியாதை உணர்ச்சி அவளுடைய வாய்பூட்டை உடைத்துவிட்டது.

"அன்பே! நீங்கள் முள்ளிலே இழுபடுவதைப் பார்த்துக் கொண்டும் உங்கள் சகீனு கட்டிலிலே தூங்க விரும்பும் அளவிற்குச் சுகவாசியாகி விட்டாளென்று உண்மையிலேயே கருதுகிறீர்களா? நான் உங்களை மனப்பூர்வமாகக் காதலித்திருந்தால். அந்தக் காதல் உங்களோடுகூட எந்த வாழ்க்கைக்கும் தயாராகும் சக்தியை எனக்கு அளிக்கும். நான் ஏராளமான லிப்ஸ்டிக்கைச் செலவழித்திருக்கிறேன். என்னுடைய நேரத்தின் பெரும் பகுதியை அலங்காரத்திலும் சிங்காரிப்பதிலுமே செலவிட்டிருக்கிறேன். நான் கடினமான வாழ்க்கையைப் பற்றி தெரிந்து கொள்ளக்கூட முயன்றதில்லை. ஆனல், எனக்குச் சகலமும் நீங்கள்தான். உங்களுக்குப் பாரமா யிருப்பதற்காக இதைச் சொல்லவில்லை. உங்களுக்குத் துணையாயிருக்கவே விரும்புகிறேன். எனது

வாழ்க்கைக்கு இதுவரை வழிகாட்டியது போலவே, எதிர் காலத்திலும் நீங்கள்தான் வழிகாட்ட வேண்டும்.''

சபதர் இவ்வளவு தூரம் எதிர்பார்க்கவில்லை. சகீனு பிடிவாதக்காரி என்பதும், அவள் முடிவை மாற்ற முடியாதென்பதும் சபதருக்குத் தெரியும். ஆகவே, மேலே மற்ற விஷயங்களைச் சொல்லத் தொடங்கினுர்.

''நான் புதிய கேஸ்கள் எடுத்துக் கொள்வதை நிறுத்தி விட்டேன். பழைய வழக்குகளையும் மற்றவர்களிடம் ஒப்படைத்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் ஒரு வாரத்திற்குள் கோர்ட்டுக்குப் போக வேண்டிய வேலை முடிந்து விடும். இன்னும் ஒரு முக்கியமான விஷயம் சகீனு! சங்கரும் என்னேடு கூடவே இந்த நெருப்பில் குதிக்க விரும்புகிறுன்.''

''சங்கருமா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் சகீனு.

''சங்கர் ஒரு ரத்தினம் சகீனு! ரத்தினம்! அவன் என்னேடுகூட, உலகத்தின் கோடிக்கும் வருவான். ஆக்ஸ்போர்டிலே அவனில்லாமல் நான் தவித்துக்கொண்டிருந்தேன்.''

''ஆனுல், சபதர்! சங்கர் செய்யும் தியாகம் உங்களைவிட அதிகமாகும்.''

''அவன் தியாக வாழ்க்கையை வேண்டுமென்றே வலிய ஏற்றுக்கொண்டான் சகீனு! புரிந்து கொண்டே, செல்வப் பாதையைத் திரும்பிப் பார்க்க மறுத்தான். அவன் விரும்பியிருந்தால், ஒரு பிரபல வக்கீலாகி யிருக்கலாம். அல்லது, அரசாங்கத்தில் பெரிய வேலையை பெற்றிருக்கலாம்.''

''அவருடைய இரண்டு குழந்தைகளும் இறந்தபொழுது நான் மிகவும் கவலைப்பட்டு அழுதேன். ஆனுல் இப்பொழுது அவை இரண்டும் போனது அவருக்குப் பாரக்குறைவென்றே கருதுகிறேன்.''

''சங்கரின் இந்த முடிவைக் கேட்டு சம்பா என்ன சொல்லுவாள் சகீனு?''

''அவள் கண்ணை மூடிக்கொண்டு அவரைப் பின்பற்றுவாள். அவள்தான், எனக்கு உங்களைக் காதலிப்பதற்கும் கற்றுக் கொடுத்தவள் சபதர்!''

''இப்பொழுது, நாம் நமது எதிர்கால வாழ்க்கை முறையைப் பற்றியும் நிச்சயிக்க வேண்டும்.''

''இப்பொழுதுதானே என்னிடம் விஷயத்தைப்பற்றிச் சொல்கிறீர்கள். அவைகளைப் பற்றி யோசிக்க எனக்கு எங்கே நேரமிருக்கிறது? அதை நீங்களே சொல்லுங்கள்.''

''நமது கிராமத்திலிருந்து வந்துள்ள சரீபன், மங்கர் இருவரையும் வைத்துக்கொண்டு, மற்ற எல்லா வேலைக் காரர்களையும் இரண்டு, இரண்டு மாதச் சம்பளத்தை இனு மாகக் கொடுத்து வீட்டிற்கு அனுப்பிவிட வேண்டும்.''

''சரி''

''இரண்டு மோட்டார்களையும் விற்றுவிட வேண்டும்.''

''ரொம்ப சரி.''

''ஒன்றிரண்டு கட்டில்களையும், சில குறிச்சிகளையும் தவிர பற்ற சாமான்கள் யாவற்றையும் ஏலக்கடைக்கு அனுப்பிவிட வேண்டும்.''

''அதுவும் சரி.''

''இந்தப் பங்களாவை வாடகைக்கு விட்டுவிட்டு, லாடஸ் ரோட்டிலுள்ள சின்னம்மாவின் வீட்டில்போய் நாம் வசிக்க வேண்டும்.''

''ரொம்ப நல்லது.''

''வேறு ஒன்றும் இப்பொழுது ஞாபகத்திற்கு வர வில்லை.''

''என்னுடைய சேலைகள், சீமைத் துணிகளை என்ன செய்வது?''

''காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேரு கிறேன் என்பதற்காகச் சொல்கிருயா? நான் துணிகளை எரிப் பதை ஆதரிக்கவில்லை. அதிலும் முக்கியமாக, அன்னியத் துணிகள் மலை மலையாக இந்நகரிலே எரிக்கப்பட்டு முடிந்த பிறகு, அவசியம் என்று கருதவில்லை. எனக்குக் கதர்ச் சட்டைகளும், பைஜாமாக்களும் தைக்க ஏற்பாடு செய்து விட்டேன்.''

''நீங்கள் ரொம்பச் சுயநலம் உள்ளவர் சபதர்!''

''இந்தக் கனத்த முரட்டுக் கதர்ச்சேலையை உடுத்து வாயா சகீனா?''

''உங்களோடுகூட, உலகத்தின் கடைசி எல்லைக்கும் என்னால் போக முடியும்.''

''அப்படியானால், இந்தத் துணிகளை என்ன செய்வது?''

''அதுதான் எனக்கும் புரியவில்லை.''

''சரி இவைகளை ஏலத்தில் விற்று வரும் தொகைக்கு ஏழைகளுக்குத் துணி வாங்கிக் கொடுத்து விடுவோம்.''

## 3

சபதரைப் போன்ற பெரிய பாரிஸ்டரின் இந்த மகத்தான தியாகத்தைப்பற்றி நாலாபக்கமும் சர்ச்சைகள் நடந்தன. ஆனால் சபதர், இந்தப் பெருமைக்கு முற்றிலும் தகுதியானவர் சங்கர்தான் என்று கருதினார். அக்டோபர் நவம்பர் இரண்டு மாதங்களிலும், பல இடங்களுக்கும் சுற்றிப் பிரச்சாரம் செய்ய சபதருக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவரோடுகூட, சங்கரும் சகீனாவும் போயிருக்கிறார்கள். அவருடைய மனம், கிராமத்திலேயே அதிகமாக லயித்தது. ஏனெனில், கிராமத்தின் விவசாயி, உழைப்பாளி மக்களிடம் அவருக்கு ஏற்பட்ட நம்பிக்கை, நகரத்தின் படித்த மக்களிடம் ஏற்படவில்லை. ஒரு வாரத்திற்குள்ளாகவே தனது இலக்கணப் பாஷையின் கால்வாசியைக்கூட ஜனங்கள் புரிந்து கொள்ளவில்லை என்பதை அவர் தெரிந்து கொண்டார். சங்கரோ ஆரம்பத்திலேயே கிராம மக்களுக்குப் புரியும் கிராமியப் பாஷையில் தனது பிரசங்கங்களைத் தொடங்கி விட்டாராகையால் அவருக்கு வெற்றி சுலபமாகக் கிடைத்தது அதைப் பார்த்த சபதரும், கிராமியப் பாஷையிலேயே பேசத் தொடங்கினார். முதலில் அவருக்குக் கஷ்டமாகவே இருந்தது. ஆயினும் தனது உழைப்பாலும், சங்கரின் உதவியாலும், வெகு சீக்கிரமாகவே கிராம ஜனங்களைக் கவரும் பிரசங்கியாகி விட்டார்.

1920-ம்வருடம் டிசம்பர்மாதம் முதலாவது வாரத்தில், நமது நாட்டின் எத்தனையோ தேசசேவகர்களைப் போலவே, சங்கரும், சபதரும் ஒவ்வொரு வருடச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு, பைஜாபாத் சிறைக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்கள் சிறை சென்ற பிறகும் சம்பாவும் சகினாவும் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தார்களென்றாலும் அவர்கள் கைது செய்யப்பட வில்லை.

ஜெயிலிலே சபதர், நாள்தோறும் ஒழுங்காக ஒருமணி நேரம் நூல் நூற்று வந்தார். காந்தீயத்திற்கு எதிரான அவருடைய அரசியல் கொள்கைகளைப் பற்றித் தெரிந்து கொண்டிருப்பவர்கள், அவர் சர்க்கா சுழற்றுவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அவர்களுக்குச் சபதர், ''அன்னியத் துணிப் பகிஷ்காரத்தை, நான் ஓர் அரசியல் ஆயுதம் என்றே கருதுகிறேன். மேலும் நமது நாட்டிலே போதுமான துணிகள் உற்பத்தியாகவில்லை. ஆகவே, நாம் சர்க்கா மூலமாவது துணிகளை உற்பத்தி செய்யத்தான் வேண்டும். ஆனால், தேசத்தில் போதுமான அளவு மில்துணிகள் தயாரிக்கப்படும் பொழுதும், சர்க்காவைச் சுற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்ற கொள்கையுடையவன் அல்ல நான்'' என்று கூறினார்.

ஜெயிலிலே உட்கார்ந்துகொண்டு, அரட்டையடித்துக் கொண்டிருந்தவர்களின் கூட்டம் அதிகமாயிருந்தது. இவர்கள் காந்திஜியின் 'ஒரு வருடத்தில் சுயராஜ்யம்' என்ற வார்த்தையில் நம்பிக்கை வைத்துக் கையைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஜெயிலுக்கு வந்ததோடு, தங்கள் வேலை முடிந்துவிட்டதாகவும் கருதினார்கள். காந்தியும், இது வரை சூழ்ச்சி, ஏமாற்றம், போலி வேஷம் எதையும் ஏற்றுக் கொள்ளாததால், அந்த ஒத்துழையாமை இயக்கக் கைதிகளில் பெரும்பாலோர் நேர்மையான தேச சேவகர்கள் என்றுதான் கூற வேண்டும். ஆனால், அவர்களில் ஒருவராவது தங்கள் அரசியல் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்படாததைக் கண்டு சபதரும் சங்கரும் வருத்தப்பட்டார்கள். அவர்களில் பலர், ராமாயணத்தையும் குரானையும் படித்து உருப்போடுவதில் நேரத்தைச் செலவிட்டனர். சிலர், சீட்டாடுவதில் காலத்தை வீணாக்கினர்.

ஒருநாள், காந்தீயக் கொள்கையின் சிறந்த வித்வானான விநாயக பிரஸாதிற்கும், சபதருக்கும் தர்க்கம் தொடங்கியது. அப்போது சங்கரும் கூடவே இருந்தார்.

''அஹிம்ஸையை அரசியலிலே உபயோகித்தது, காந்தியின் அற்புதமான சிருஷ்டி. அது ஒரு தோல்வியறியாத ஆயுதம்'' என்ருர் விநாயக பிரசாத்.

''நம்முடைய தற்போதைய நிலைமையில், அது ஓர் உபயோககரமான ஆயுதமாக இருக்கலாம். ஆனால், அஹிம்ஸை ஒன்றும் தோல்வியடையாத ஆயுதமில்லை. உலகிலே, அஹிம்ஸையைப் பின்பற்றும் மிருகங்கள்தான் அதிகமாக வேட்டையாடப்படுகின்றன.''

''மிருகங்களிடையே இல்லாமல் இருக்கலாம்! ஆனால் மனிதர்களிடையே அகிம்ஸை ஓர் அற்புதமான சக்தியைப் பிரயோகிக்கிறது.''

''அரசியல் உலகிலே, அதற்கு ஓர் உதாரணம்கூட இல்லை.''

''புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்ட ஆயுதத்திற்குப் பழைய உதாரணங்கள் இருக்க முடியாது.''

''இது ஒன்றும் புதிய ஆயுதமில்லை. புத்தர், மகாவீரர் போன்ற எத்தனையோ மதத் தலைவர்கள் இதைப் பிரச்சாரம் செய்திருக்கிருர்கள்.''

''ஆனால், அரசியல் மேடையிலல்ல.''

''அரசியல் வாழ்விலே, இப்பொழுது அது கொஞ்சம் உபயோகமாயிருப்பதற்குக் காரணம் மனித சமுதாயத்தின் மனோநிலை உயர்ந்துவிட்டதுதான். நிராயுதபாணிகள்மீது துப்பாக்கிக் குண்டுகளைப் பிரயோகிக்கும் செய்திகளைப் பத்திரிகையில் படிக்கும் ஜனங்கள், அதை மிகுதும் வெறுக்கிருர்கள். ஜாலியன் வாலாவிலே துப்பாக்கிப் பிரயோகம் செய்ததன் விளைவாக ஏற்பட்ட உலக அபிப்பிராயத்தை, ஆங்கிலேயர்கள் உணர்ந்திருக்கிருர்கள்.''

''அப்படியானால், நம்முடைய இந்த அஹிம்ஸையும் ஒத்துழையாமை இயக்கமும், சுயராஜ்யத்தைப் பெறுவதற்குப் போதுமானதில்லை என்று நீங்கள் கருதுகிறீர்களா?''

''முதலில், சுயராஜ்யம் என்ருல் என்ன என்று நீங்கள் தெளிவுபடுத்துங்கள்.''

''நீங்களும் சுயராஜ்யப் போரிலே ஈடுபட்டுச் சிறைக்கு வந்தவர்கள்தானே? உங்களுக்குத் தெரியாதா அந்தச் சுயராஜ்யம் என்னவென்று?''

''என்னுடைய கருத்துப்படி, சுயராஜ்யம் என்பது உழைத்துச் சம்பாதிப்பவர்களின் ராஜ்யம். ஆம்; உழைப்பாளர்களுக்கு மட்டும் சொந்தமான ராஜ்யம்.''

''அப்படியானல் உங்கள் சுயராஜ்யத்தில் உடலாலும் பொருளாலும் உதவி செய்பவர்களும் துன்பங்களை ஏற்று இத்தச் சிறையிலே வந்து நிறைபவர்களுமான படித்தவர்கள் படிக்காதவர்கள், ஜெமீன்தார்கள் முதலியவர்களுக்கு ஒன்றும் உரிமை இருக்காதா?''

''பணக்காரர்களும், ஜெமீன்தார்களும் பொதுக் கூட்டங்கள் நடத்துவதற்கு அவகாசமில்லையென்று சொல்லுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களே. அவர்கள் சிறைக்கு எங்கே வரப்போகிருர்கள்? அவர்களில் யாரேனும் ஒரு சிலர் சிறைக்கு வரும் அளவிற்குத் துணிந்தால், அவர்கள் உழைப்பாளர்கள் நலனுக்கும், தங்கள் நலனுக்கும்வேற்றுமை இருப்பதாகக் கருதக்கூடாது.''

சங்கரும் சபதரும், ஜெயிலில் கிடைத்த ஓய்வு நேரத்தையெல்லாம் புத்தகங்களைப் படிப்பதிலும், தேசத்தின் பொருளாதார, சமுதாயப் பிரச்னைகளைச் சிந்திப்பதிலும் செலவிட்டார்கள். ஆரம்ப காலத்தில், அவருடைய கருத்துக்களை மற்ற கைதிகள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனுல், 1921-ம் வருடம் டிசம்பர் 31-ம் தேதி நள்ளிரவிற்குப் பின்னும் சுதந்திரம் வந்து தாங்கள் விடுதலையடையாமற் போகவே, அவர்களில் பெரும்பாலோரின் நம்பிக்கை தளர்ந்துவிட்டது. மேலும், சௌரிசாரவில் வெகுண்டெழுந்த பொது ஜனங்கள் சில போலீஸ்காரர்களைக் கொன்றுவிட்ட செய்தியைக் கேட்டு காந்திஜி சத்யாக்ரஹத்தை நிறுத்திவிட்டதை அறிந்ததும், பலர் ஆழ்ந்த கவலையோடு சிந்திக்கத் தொடங்கினர். அவர்களிலே சிலர், புரட்சிச் சக்தியின் மூலாதாரம் பொது ஜனங்கள்தான்; காந்திஜியின் மூளையல்ல, பொது ஜன சக்தியினிடத்தில் அவநம்பிக்கை வெளியிட்டதின் மூலம், காந்திஜி, தான் புரட்சி விரோதியென்று நிரூபித்துவிட்டார்'' என்ற சபதரின் கருத்தை ஏற்றுக்கொண்டார்கள்.

# சுமேர்

**காலம்: கி. பி. 1942**

**1941**-ம் வருடம் ஆகஸ்டு மாதம். இவ்வருடம் மழை மிக அதிகமாகப் பெய்தது. எத்தனையோ முறை பல நாட்கள் தொடர்ந்து சூரியனையே பார்க்க முடியாமல் இருந்தது. பாட்னாவில், கங்கைப் பெருக்கு மிகுதும் அதிகரித்து விட்டது. எந்த நிமிஷமும் கரையை உடைத்துக்கொண்டு வெள்ளம் நகருக்குள் வந்து விடலாம் என்ற பயமும் இருந்தது. இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களிலே கண்காணிப்பு ரொம்ப அவசியம். பாட்னா நகரின் வாலிபர்களும் ஏராள மான மாணவர்களும் அணையில் காவல் காக்கும் வேலையை ஏற்றுக் கொண்டார்கள். சுமேர், பாட்னா கலாசாலையின் எம்.ஏ. முதலாவது வருட மாணவன். திகா காட்டிற்குப் பக்கத்தில் அவனுக்கு டூட்டி போடப்பட்டிருந்தது. அன்று நள்ளிரவிலிருந்து, வெள்ளப் பெருக்கு இன்னும் அதிகரிக்கத் தொடங்கிற்று. காலைவரை பெருகுவது குறையவில்லை அணையின் உயரம் தண்ணீரைவிட ஓர் இஞ்சுதான் அதிகம் இருந்தது. கரைக்குப் பக்கத்தில் ஜனங்கள் மண்வெட்டியும் கூடையும் வைத்துக்கொண்டு தயாராயிருந்தார்கள். அவர் கள் எவ்வளவு சுறுசுறுப்பாய் வேலை செய்தாலும் அந்தப் பக்கா அணைக்கட்டிற்குமேல் ஓர் இஞ்சாவது உயர்த்த முடி யுமா என்பது சந்தேகமே. காலையிலிருந்து மிக்கக் கவலை யோடு அணைக்கட்டின்மேல் உலாவிக் கொண்டிருந்தான் சுமேர். பகலில் தண்ணீர் வடியத் தொடங்கியதும், அவ னுடைய மனம் சிறிது நிம்மதியடைந்தது. அவனுக்குப் பக்கத்துப் பகுதியில் ஒரு கனவான் டூட்டியிலிருப்பதை அவன் பார்த்தான். அவரோடு பேசவேண்டுமென்று எத்த னையோ முறை அவன் ஆசைப்பட்டும், வெள்ளப் பெருக் கினால் ஏற்பட்ட மனக்கவலை, அவனை வாய்திறக்க முடியா மல் செய்துவிட்டது. இன்று வெள்ளம் வடியத் தொடங்கிய தோடு, ஆகாயமும் வெளிவாங்கிவிட்டதால் சுமேர் மன நிம்மதியோடு தனக்குப் பக்கத்திலே டூட்டியிலிருப்வருடன் பேச விரும்பினான்.

இருவரில் ஒருவர் நிறம் சிவப்பு, மற்றவர் கருப்பு. இருவரும் நடுத்தர உயரம். வயதிலோ சுமேர் இருபத்தொரு வயதுள்ள புஷ்டியான வாலிபன். மற்றவரோ நாற்பது வயது நிறைந்து கொஞ்சம் தடித்த உருவமுள்ளவராகக் காணப்பட்டார். சுமேர் காக்கி அரைக்கால் சட்டையும், மடித்துவிட்ட காலருடைய காக்கி அரைக்கை சட்டையும் பாதங்களிலே ரப்பர் பூட்ஸும் அணிந்து, தோளிலே ஒரு மழைக் கோட்டையும் தொங்கவிட்டுக் கொண்டிருந்தான். மற்றவரோ, ஒரு வெள்ளைக் கதர்ச் சட்டையும் காந்தித் தொப்பியும் அணிந்து, தோளிலே ஒரு போர்வையைப் போட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு முன்னால் போய் சுமேர் புன்முறுவலோடு,

''நல்ல வேளையாக இன்று வெள்ளம் வடிந்துவிட்டது'' என்றான்.

''ஆம் மேகமும் கலைந்துவிட்டது.''

''நாம் எவ்வளவு கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். 2500 வருடங்களுக்கு முன்னால் இந்தப் பாட்னா நகரம் அமைக்கப்பட்டபொழுது, இதைப் பார்த்த புத்த பகவான் இந்த நகரத்தை எல்லாவிதத்திலும் நாகரிகமுள்ள நகரம் என்று பாராட்டியதோடு, இதற்கு நெருப்பு, தண்ணீர், உள் கலகம் என்ற மூன்று ஆபத்துக்களும் உண்டு என்றும் கூறியிருப்பதாக நான் ஒருமுறை படித்தேன்.''

''நீங்கள் சரித்திர மாணவரா?''

''இல்லை. நான் எடுத்துக் கொண்டுள்ள விஷயம் அரசியல் என்றாலும், சரித்திரத்திலும் எனக்கு அதிக ஆசை உண்டு. முக்கியமாகப் பழைய நூல்களின் மொழி பெயர்ப்பைப் படிப்பதில்.''

''ஆம்; தண்ணீரின் ஆபத்தை, இப்பொழுது நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.''

''பாட்னாவின் வீடுகளில் பெரும்பாலான மரங்களால் கட்டப்பட்டிருந்த அந்தக் காலத்தில், நெருப்பைப் பற்றிய பயம் இருந்திருக்கலாம். பக்கத்திலே பெரிய சாலவிருட்சக் காடுகள் இருந்தபொழுது, இந்த மாதிரி பயம் ஏற்பட்டுத் தானே இருக்கும்?''

''உள் கலகந்தான், இந்தியாவின் செல்வம் யாவற்றையும் பாழாக்கியது. நல்லது நான் உங்கள் பெயர் என்ன என்று தெரிந்து கொள்ளலாமா?''

''என் பெயர், சுமேர். பாட்ஞு காலேஜில் ஐந்தாவது வருட மாணவன்.''

''என் பெயர் ராம்பால ஓஜா. நானும் ஒரு காலத்தில் கலாசாலே மாணவனுக இருந்திருக்கிறேன். அது இருபது வருடங்களுக்கு முன்னுல். ஒரு நண்பன் பலமாகத் தூண்டி யிருக்காவிட்டால், நான் எம். ஏ. யை முடிக்காமல் ஒத் துழையாமையில் இறங்கி யிருக்கமாட்டேன். அப்படி வெளியே வந்ததற்காகவும் இப்பொழுது நான் வருத்தப்பட வில்லே. இந்த மழையையும் வெள்ளப் பெருக்கையும் பார்த்தபொழுது, நமது பள்ளிக்கூடக் கலாசாலேப் படிப்பு கள் வீணென்றுதான் எனக்குத் தோன்றுகிறது.''

''அப்படியாஞல் நீங்கள் படித்ததையெல்லாம் மறந்து விட்டீர்களா?''

''ஏறக்குறைய முற்றிலும் மறந்துவிட்டு, 'அ, ஆ' தெரி யாத பட்டிக்காட்டானுக ஆகிவிட்டால் எவ்வளவோ நல்லது. அப்பொழுது நான் உண்மையைச் சரியான முறை யிலே தேடிப்பிடிக்க முடியும்.''

''அதாவது அறிவின் பலத்திஞல் அல்லாமல், நம்பிக்கை யின் பாதையிலே கண்ணே மூடிக்கொண்டு செல்ல விரும்பு கிறீர்களா?''

''நம்பிக்கைப் பாதை கெட்டதென்று கருதுகிறீர்களா சுமேர் பாபு?''

''நான் பாபு இல்லே ஓஜாஜி! ஒரு சாதாரணச் சக்கிலி யனின் மகன். என் வீட்டிலே, ஒரு சிறு துளி நிலம்கூட எனக்குச் சொந்தமில்லே. பலவந்தமாக எங்களே வெளியேற்றி விட்டு, ஜமீன்தார் அங்கே தோட்டம் போட்டு விட்டார். என் தாயார் எங்கோ மாவறைத்துக் கூலி வேலே செய்து தன் வயிற்றை நிரப்பிக் கொள்கிருள். முதலில் ஒரு கனவானின் தயவிஞலும், பின்னுல் உபகாரச் சம்பளத்தைக் கொண்டும் நான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன். இவைகளேக் கொண்டு பாபு என்ற சொல்லுக்கு நான் முற்றிலும் தகுதி யில்லாதவன் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.''

''சொல்லிப் பழக்கப்பட்டு விட்டது சுமேர்ஜி! உங்களு டைய பூரா விபரத்தையும் தெரிந்து கொண்டதும், உங்க ளேச் சந்தித்ததிலே மிகுதும் மகிழ்ச்சியடைகிறேன். ஒரு

ஹரிஜன வாலிபன், வாழ்க்கையிலே போராடி வெற்றியடைவதைக் கண்டு, காந்திஜியின் சிஷ்யன் ஒருவனுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும் என்பது உங்களுக்கே தெரியும்.''

''ஒஜாஜி! உங்களுடன் அநேக விஷயங்களைப் பற்றி நட்புரிமையோடு பேச விரும்புகிறேன். ஆகவே முதலில், எனக்கும் உங்களுக்குமுள்ள அபிப்பிராய பேதத்தை நீங்கள் தெரிந்து கொள்வது நல்லதென்று கருதுகிறேன். நான், ஹரிஜன் என்ற வார்த்தையையே வெறுக்கிறேன். 'ஹரிஜன்' பத்திரிகை முற்றிலும் பழைய பாதையிலே இந்தியாவை இருட்டு யுகத்திற்கு இழுத்துச் செல்லும் பத்திரிகையென்று கருதுகிறேன். காந்திஜியை, எங்கள் குலத்தின் விரோதி என்று நினைக்கிறேன்.''

''உங்கள் ஜாதிக்கு, காந்திஜி ஒரு உதவியும் செய்யவில்லையென்று கருதுகிறீர்களா?''

''மில் முதலாளிகள் மில் கூலிகளுக்கு எவ்வளவு உதவி செய்கிறார்களோ அவ்வளவு உதவிதான் காந்திஜி எங்கள் குலத்திற்குச் செய்கிறார்.''

''காந்திஜி, யாரையும் முதலாளியாகும்படி சொல்லவில்லையே?''

''ஜெமீன்தார்கள், முதலாளிகள், சிற்றரசர்கள், காப்பாளர்கள் (கார்டியன்) என்று சொல்வதற்கு, வேறு என்ன அர்த்தம் இருக்கமுடியும்? நாங்கள் ஹிந்து மதத்திலிருந்து வெளியேறிவிடக்கூடாதென்பதற்காகவே, காந்திஜி எங்களிடம் அன்பு செலுத்துகிறார். நாங்கள் ஹிந்துக்களை விட்டுப் பிரிந்து, தனியாக எங்கள் பலத்தைத் திரட்டிக் கொண்டு விடக் கூடாது என்பதற்காகவே, அவர் பூனாவில் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கி விட்டார். ஹிந்துக்களுக்கு மலிவான அடிமைகள் தேவையிருந்தது. ஆயிரக்கணக்கான வருடங்களாக அத்தேவையை எங்கள் ஜாதி பூர்த்திசெய்து வந்திருக்கிறது. முதலில் எங்களை, அடிமைகள் என்றே அழைத்தார்கள். இப்பொழுது காந்திஜி 'ஹரிஜன்' என்று பெயர் வைத்து எங்களை முன்னேற்ற விரும்புகிறார். ஹிந்துக்களுக்கு அடுத்தபடியாக, எங்கள் ஜாதிக்குப் பெரிய விரோதி 'ஹரி'தான். அந்த ஹரியின் ஜனங்கள் என்று சொல்வதை நாங்கள் எப்படி விரும்புவோம்.''

''நீங்கள் பகவானைக்கூட ஒப்புக் கொள்வதில்லையா?''

''எதற்காக ஒப்புக் கொள்ளவேண்டும்? ஆயிரக்கணக்கான வருடங்களாக எங்கள் ஜாதி, மிருகங்களிலும் கேவலமாக—தீண்டத் தகாததாக அவமானப் படுத்தப்பட்டு வந்திருக்கிறது. உயர்ஜாதி ஹிந்துக்களின் ஒவ்வொரு சாதாரண விஷயங்களுக்கும் கூட, இந்த உலகிலே அவதாரம் எடுத்து அவர்களுக்குத் தேர் ஓட்டித் தொண்டு செய்யும் அந்தக் கடவுளின் பெயராலேயே நாங்கள் அவமானப் படுத்தப்பட்டு வந்திருக்கிறோம். நூற்றுக் கணக்கான தலைமுறைகளாக, எங்கள் பெண்மணிகளின் மானம் பறிக்கப் பட்டு வந்திருக்கிறது. நாங்கள், சந்தைகளிலே மிருகங்களைப் போல் விற்கப்பட்டு வந்திருக்கிறோம். இன்றுகூட வசவு கேட்பதும்—அடிபடுவதும்—பட்டினி கிடந்து சாவதும்தான் எங்களுக்குப் பகவானின் கருணையென்று சொல்லப்படுகிறது. இவ்வளவையும் பார்த்துக்கொண்டு மௌனமாயிருக்கும் அந்தப் பகவானை, நாங்கள் எதற்காக ஏற்றுக் கொள்ளவேண்டும்?''

''அப்படியானால், நீங்கள் டாக்டர் அம்பேத்காரின் வழியைப் பின்பற்றுகிறீர்களா?''

''இல்லை. டாக்டர் அம்பேத்காரும் ஒரு சுகபோகிதான். என்னையும், முதல் இரண்டு வருடங்கள் வரை ஹாஸ்டலிலே தங்க, ஹிந்து வாலிபர்கள் அனுமதிக்கவில்லை. என்றாலும் டாக்டர் அம்பேத்காரின் பாதைக்கும், காங்கிரஸ் தீண்டாமை இயக்கத் தலைவர்களின் பாதைக்கும், ஒன்றும் வேற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. காந்திஜி-பிர்லா-பஜாஜ் பாதையில்தான், அம்பேத்காரின் பாதையும் போய்ச் சேருவதாக நான் கருதுகிறேன். அதாவது தீண்டத் தகாதவர்களிலும் ஒரு சிலர் மாதம் 4,000-ம் 5,000-சம்பளம் வாங்குபவர்களாக ஆகிவிட வேண்டும் என்பதுதான் டாக்டர் அம்பேத்காரின் நோக்கம். பிர்லா-பஜாஜாக ஆக முடியாவிட்டாலும், ஒன்றிரண்டு ஹஜாரிமல்களாவது தீண்டாதவர்களிலே ஏற்பட்டுவிட வேண்டுமென்று அவர் விரும்புகிறார். தீண்டாதவர்களின் சமஸ்தானங்களைத் தோற்றுவிக்க முடியாவிட்டாலும், ஒன்றிரண்டு குட்டி ஜமீன்தார்களையாவது தோற்றுவிக்க ஆசைப்படுகிறார். இவைகளினாலெல்லாம், பத்துக்கோடி தீண்டத் தகாதவர்களின் வேதனை நிறைந்த வாழ்க்கையில் ஒன்றும் மாற்றம் ஏற்பட்டுவிட மாட்டாது.''

''சரண்டப்படுவதைத் தடுத்துவிட வேண்டுமென்பது உங்கள் கருத்தா?''

''ஆம்; ஏழைகளின் உழைப்பின் பலனைத் திருடிக் கொழுப்பவர்கள் இந்தியாவில் அடியோடு இல்லாமல் போகும்வரை, எங்கள் பிரச்னைகளைத் தீர்த்துவிட முடியாது.''

''இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்காகத்தான் கை நெசவுத்துணி, கைக்குத்தல் அரிசி, கையால் பெய்யப்பட்ட வெல்லம் முதலிய குடிசைத் தொழில்களைக் காந்திஜி பிரச்சாரம் செய்கிறார்.''

''ஆம். பிர்லா—பஜாஜின் பணப் பலத்தைக் கொண்டு. சர்க்கா சங்கத்திற்குப் பணத்தேவை வரும்பொழுது சேட்டுக்கள் ஒரு லட்சம், இரண்டு லட்சத்திற்குச் செக் எழுதிக் கொடுத்து விடுகிறார்கள். இந்தக் கைராட்டை கைத் தறியின் மூலம், தங்கள் மில்கள் அடைபட்டுப் போகும் என்று அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டால், லட்சம் லட்சமாகச் செக் எழுதிக் கொடுப்பார்களா? தங்கள் பட்டுச்சேலைகளும், முத்துமாலைகளும் கனவாகப் போய்விடும் என்று தெரிந்தால், பணக்காரப் பெண்கள் காந்திஜிக்கு ஆரத்தி சுற்றுவார்களா?''

''நீங்கள் காந்தீயவாதிகளை, முதலாளிகளின் ஏஜண்டுகள் என்று கருதுகிறீர்களா?''

''எனக்கு இதில் கொஞ்சம்கூடச் சந்தேகமில்லை. 'நாசமாக்கிப் பின்வாங்கும்' கொள்கைக்கு விரோதமாக, இந்திய முதலாளிகள் போட்ட கூச்சலிலே அவர்கள் ஒன்று சேர்ந்ததும், கொஞ்சம் நஞ்சம் இருந்த சந்தேகமும் தீர்ந்துவிட்டது.''

''ஜப்பானியர் காலடி எடுத்துவைக்கும் இடங்களிலெல்லாம், அங்குள்ள தொழிற்சாலைகளையும், கட்டிடங்களையும் கொளுத்திச் சாம்பலாக்கிவிட வேண்டுமென்பது உங்கள் கொள்கையா? இந்தியர்கள் எவ்வளவு கஷ்டப்பட்டு, எத்தனை சிரமத்தோடு இந்தத் தொழிற்சாலைகளை ஏற்படுத்தினார்கள் என்பதை நீங்கள் கவனித்துப் பார்க்க வேண்டும்.''

''இந்தியர்களின் கஷ்டத்தையும், உழைப்பையும் பற்றி நான் நன்றாக யோசித்தேன். காந்தீயவாதிகள், இயந்திரங்

களின் அடிப்படையையே ஒழித்துவிட வேண்டும் என்று பிரச்சாரம் செய்வதைப் பற்றியும் யோசித்திருக்கிறேன். இந்த முதலாளிகள், தங்கள் தொழிற்சாலைகளை அப்படியே ஏன் ஜப்பானியரிடம் ஒப்படைக்க விரும்புகிறார்கள் என்பதைப் பற்றியும் யோசித்தேன். ஜப்பானியர்கள், முதலாளித்துவத்தைப் பலமாகஆதரிப்பவர்கள். ஜப்பானிய ரேடியோவைக் கேட்டுக் கேட்டு, ஜப்பானிய ஆட்சியிலும் தங்கள் தொழிற்சாலைகளுக்குத் தாங்களே எஜமானர்களாய் இருக்க முடியும் என்ற நம்பிக்கை இந்த முதலாளிகளுக்கு ஏற்பட்டுவிட்டது. இதைத் தவிர, அவர்கள் மனதிலே வேறு என்ன உயர்ந்த லட்சியம்—தியாக உணர்ச்சி இருக்கிறது சொல்லுங்கள்?''

''தேசத்தின் சேகரிக்கப்பட்ட மூலதனத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆசை.''

''ஓஜாஜி! வெந்த புண்ணிலே வேலைப் பாய்ச்சாதீர்கள். இந்தச் சேட்டுகளுக்கு, தேசத்தின் சொத்தைப் பற்றிக் கவலையே இல்லை. தங்கள் சொத்தைப் பற்றித்தான் கவலையெல்லாம். தேசம் எப்படிப் பாழாய்ப் போனாலும் சரி. தங்களுக்கு அதிக லாபம் கிடைக்க வேண்டுமென்பது தான் அவர்கள் நோக்கம். தொழிலாளர்களுக்கு நாலு காசு கூலி கூடுதலாகக் கொடுப்பதை விட்டுவிட்டு, வேலை நிறுத்தம் செய்யும் தொழிலாளர்களை மோட்டாரால் நசுக்கத் தயாராயிருக்கும் இவர்களுக்கு, தேசத்தின் சொத்து—தேசீய வருமானம் இவைகளைப் பற்றியெல்லாம் என்ன கவலை?''

''அவர்கள் விஷயத்தில் நீங்கள் சொல்வது சரியென்றே ஒப்புக்கொள்வோம். ஆயினும், காந்திஜியின் நேர்மையைப் பற்றி நீங்கள் சந்தேகம் கொள்ள முடியாதல்லவா?''

''மனிதர்கள் செய்யும் வேலை, அவர்களின் வார்த்தை இவைகளைக் கொண்டுதான், நாம் நேர்மையை அளக்க முடியும். நான் காந்திஜி பால்குடி மாறாத குழந்தையென்று ஒப்புக்கொள்ள முடியாது. ஆன்ட்ரூஸ் நிதிக்காக ஐந்து லட்ச ரூபாய் தேவையென்று அவர் சொன்னார். ஐந்தே நாளில், பம்பாய் முதலாளிகள் அவருடைய பாதங்களிலே ஏழு லட்ச ரூபாயைச் சமர்ப்பித்தார்கள். முதலாளித்துவத்திற்கு அவர் செய்யும் உதவிக்கு, இங்கிலாந்து அமெரிக்க

முதலாளிகளாயிருந்தால், ஏழு கோடியே சமர்ப்பித்திருப்பார்கள். இது கொஞ்சம் தானே?''

''இதை நீங்கள் லஞ்சம் என்று சொல்கிறீர்களா?''

''முதலாளிகள் கடவுளுக்கு எதையாவது படைக்கும் பொழுதே, தங்கள் வீட்டிலே லாபமும் சுபமும் நிறைந்திருக்க வேண்டுமென்று தானே படைக்கிருர்கள்?''

''அப்படியானுல், கைத்தறியையும் ராட்டையையும் சுரண்டலைத் தடுக்கும் கருவிகள் என்று கருதவில்லையா?''

''இல்லை. அவைகள் சுரண்டலை வளர்ப்பவை என்று கருதுகிறேன்.''

''அப்படியானுல், மில்கள் சுரண்டலைத் தடுப்பவையா?''

''அவைகளும் சுரண்டலுக்குச் சாதகமாய்த்தான் இருக்கின்றன. ஆனுல் உலகம் கல் ஆயுதங்களை விட்டு எவ்வளவோ தூரம் முன்னேறி வந்திருப்பது போல், இந்தக் கைராட்டையையும் கைத்தறியையும் விட்டு நீண்ட தூரம் முன்னேறி வந்திருக்கிறது. ஆயிரம் வருடங்களுக்கு முன்ஞல் ஓலைகளில் எழுதி வைக்கப்பட்ட புத்தகங்களை நான் பாட்ஞ மியூசியத்திலே பார்த்திருக்கிறேன். அந்தக் காலத்தில் சேட்டுகளின் கணக்கும் நாளந்தா சர்வகலாசாலை மாணவர்களின் நூல்களும் நோட்டுப் புத்தகங்களும் கூட, இந்த ஓலைகளிலே தான் எழுதப்பட்டு வந்திருக்கிறது. அந்த ஓலை யுகத்திற்குத் திரும்பிச் செல்லும்படி, காந்திஜி ஆயிரமுறை திரும்பத் திரும்பச் சொல்லட்டும். டிட்டாகர் காகிதத்தையும், மோனே டைப்பையும், ரோட்டரி மிஷினையும் விட்டு விட்டு, ஓலைச் சுவடிக்கு உலகம் திரும்புமா? அப்படித் திரும்பாமல் இருப்பதில்தான் உலகத்திற்கு க்ஷேமம் இருக்கிறது. சேவா கிராமத்தின் பஜனை நாமாவளிகளைப் பரப்புவதிலே ஒருவேளை கஷ்டமில்லாமல் இருக்கலாம். ஆனுல், அநேக அறிஞர்கள் தங்கள் ஆயுள் முழுதும் உழைத்து இன்றுவரை சேகரிக்கப்பட்டுள்ள அறிவையும்—விஞ்ஞானத்தையும் பரப்புவதற்கு, எல்லா மனிதர்களையும் கல்வியறிவுள்ளவர்களாகச் செய்வதற்கும் இவற்றின் உதவியில்லாமல் முடியாது. பாசிஸ்டுக் கொள்ளைக்காரர்களின் டாங்குகள், விமானங்கள், நீர் மூழ்கிகள், நெருப்புக்குண்டுகளுக்கு எதிராக, காந்திஜி பழைய கல் ஆயுதங்களை உபயோகிக்கும்படி சொன்ஞல், சிறிதளவு மூளை உள்ளவன்கூட

அதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் இது நேரான தற்கொலைக்கு ஒப்பாகும்.''

''இது அவருடைய கொள்கையின் அடிப்படையையே தாக்குவதாகும்.''

''அவருடைய ஒவ்வொரு அசைவும், சுரண்டப்படுவர்களுக்கு—இந்தியாவிலே மிக அதிகமாகச் சுரண்டப்படுகிற ஜாதியராகிய எங்களுக்கு, ஆபத்தானதாகவே இருக்கிறதென்று நான் கருதுகிறேன். அறிவை அந்தகாரத்திலே மூழ்கடிக்கும் விடுதிகள்—சுரண்டுபவர்களை உறுதியாகக் காப்பாற்றும் புரோகிதர்களின் கடைகளான இந்தக் கோயில்களை மூடிப் பூட்டிவிட வேண்டியதிருக்க, காந்திஜி எங்களை இழுத்துப் பிடிப்பதற்காக அந்தக் கோவில்களைத் திறந்து விடச் செய்கிறார். பழைய ஏடுகளையும், பணக்காரர்களின் தானத்திலே வளர்கின்ற கதைகளையும் நாம் எரித்துவிடச் சம்மதிக்காவிட்டாலும், பூட்டுப் போட்டாவது மூடிவிட வேண்டாமா? ஆனால் காந்திஜி அவைகளை விளம்பரப் படுத்தி, அவைகளுக்குப் புதுஉருவம் கொடுக்க முயலுகிறார். வருணப் பிரிவினைபோன்ற மாண்டுபோன சமுதாய அமைப்பை, இந்தியாவிலிருந்து அடியோடு ஒழிப்பதற்குப் பதிலாக, காந்திஜி அனுசக்தியோகம் என்று அதற்குப் புது வியாக்கியானம் செய்கிறார். இவைகளையெல்லாம் பார்த்த பிறகு, ஹரிஜன முன்னேற்றம் என்பது வெறும் கேலிக் கூத்தைத் தவிர வேறென்ன? ஒரு வேளை சில உயர்ஜாதி ஹிந்துக்களுக்கு, ஹரிஜன முன்னேற்ற இயக்கத்தால் வேலை கிடைக்கலாம். ஹரிஜனங்கள் முன்னேறுவார்கள் என்று குருடன் கூட நம்பமாட்டான்.''

''நீங்கள், தீண்டத்தகாதவர்களும் உயர்ஜாதி ஹிந்துக்களும் ஒன்றாக ஆவதை விரும்பவில்லையா?''

''காலம் ஒன்றாகச் சேர்த்துவிட்டது ஒஜாஜி. ஆனால் காந்திஜிக்குப் பிரியமான மதமும் பகவானும், பழைய போக்கும், அந்த உண்மையை நாம் உணரமுடியாதபடி செய்கிறது. என்னையே பாருங்கள், எனது நிறம் சிவப்பு. என் மூக்கு மெலிந்து உயர்ந்திருக்கிறது. உங்கள் நிறம் கறுப்பு. உங்கள் மூக்கு, தடித்துத் தட்டையாய் இருக்கிறது. இதன் அர்த்தம் என்ன? என் உடம்பிலே, ஆரிய ரத்தம் அதிகமாக இருக்கிறது. உங்கள் உடம்பிலே, எனது

முன்னோர்களின் ரத்தம் அதிகமாக இருக்கிறது. உங்கள் முன்னோர்கள் வருணப் பிரிவினை அமைப்பென்ற இரும்புச் சுவரை எழுப்பி ரத்தக் கலப்பு ஏற்படாதபடி தடுக்க முயன்றார்கள். அவர்கள் விருப்பம் நிறைவேறவில்லை. அதற்குச் சாட்சியாக, நீங்களும் நானுமே இருக்கிறோம். வால்கா நதிக்கரை ரத்தமும், கங்கை நதிக்கரை ரத்தமும் ஒன்றாகக் கலந்து ரொம்ப நாட்கள் ஆகிவிட்டன. இப்பொழுது நிறத்தைப் பற்றிய தகராறு கிடையாது. உங்களைப் பிராமண ஜாதியிலே சேர்த்துக்கொள்ள யாரும் மறுக்கவில்லை. மதம், கடவுள், பழம்போக்கு இவைகள் யாவும் நம்மை விட்டுவிட்டால், எல்லாம் சரியாகிவிடும். ஆனால், சுரண்டுகிறவர்களும், காந்திஜி போன்றவர்கள் சுரண்டுகிறவர்களை ஆதரிக்கும் நிலைமையும் இருக்கும்வரை, இந்த வருணப் பிரச்னை தீராது.''

''உங்களுடைய சொல் அம்புகளைக் கேட்டு எனக்குக் கோபம் ஏற்படவில்லை.''

''புண்பட்ட மனம்; இளமையின் துடிப்பு ஓஜாஜி! என் வார்த்தைகளினால் உங்களுக்கு மனக்கஷ்டம் ஏற்பட்டிருந்தால் மன்னித்து விடுங்கள்.''

''இல்லை! நான் ஒன்றும் வருத்தப்படவில்லை. ஆனால், கைராட்டை கைத்தறி போன்ற இந்தியப் பொருள்களை, மறுபடியும் ஸ்தாபிப்பது முடியாது என்று கருதுகிற நீங்கள் அன்னிய நாட்டுப் பொது உடைமைக் கொள்கை இந்திய மண்ணிலே செழித்து வளரும் என்று எண்ணுகிறீர்களா?''

சுரண்டுகிறவர்களுக்குப் பிடிக்காததெல்லாம், அன்னியம்—நடக்க முடியாதது என்று ஆகிவிடுகிறது. முதலாளிகளைக் கோடீஸ்வரர்களாக ஆக்கிவிட்ட சீனி மில்கள், அன்னிய நாட்டுப் பொருளல்ல! துணிமில், சணல்மில், காகித மில், சிமெண்டுத் தொழிற்சாலை, இரும்புத்தொழிற்சாலை, சைக்கிள், மோட்டார், பேனா, செருப்புவரை செய்யும் அனேக இயந்திரங்கள், இவையெல்லாம் லட்சக் கணக்காக லாபத்தைக் கொடுப்பதால் அன்னிய நாட்டுப் பொருள்களல்ல! ரேடியோ, டெலிவிஷன் பிலிம், டாக்கி போன்றவை முதலாளிகளின் சட்டைப் பையைச் சப்தமில்லாமல் நிரப்பி விடுவதால், அவர்களின் அன்னியத் தன்மை போய் விடுகிறது! சுரண்டுவதற்குச் சாதகமாயுள்ள அன்னிய நாட்டு இயந்திரங்களெல்லாம் சுதேசியாகி விடுகின்றன.

ஆனல் சுரண்டலை அடியோடு ஒழிக்கும் கருவியான பொது உடைமைக் கொள்கை மட்டும், நிரந்தரமாக அன்னிய நாட்டுச் சரக்காகவே இருக்கிறது. இதுதானே நேர்மை ஓஜாஜி.''

''பொது உடைமைக் கொள்கை மதத்தின் விரோதி. இந்த இந்திய தேசமோ எப்பொழுதும் மத நம்பிக்கையிலேயே வளர்ந்து வந்திருக்கிறது. இந்தக் கஷ்டத்தையும் கொஞ்சம் யோசியுங்கள் சுமேர்ஜி!''

''நீங்கள் காலேஜில் படித்த படிப்பையெல்லாம் மறந்து விட்டேன் என்று சொல்கிறீர்கள். நான் என்ன சொல்ல முடியும்? நீங்கள் மதம் என்ற பெயரை எடுத்ததும் உங்களுக்கு ஹிந்து மதம்தான் ஞாபகம் வருகிறது. காந்திஜிகூட, பஜாஜீன் கோ சம்ரக்ஷண இயக்கத்தை ஆசீர்வதிக்கிருர். அதில் பசுமாமிசத்தைத் தவிர பசுவிலிருந்து கிடைக்கக்கூடிய மற்ற எல்லாப் பொருள்களையும் சாப்பிடுவதாகப்பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆம்; கோமயம்—கோஜலம் கூடத்தான். பசு மாமிசம் சாப்பிடுவர்களையும் சாப்பிடாதவர்களையும் பிரித்தால் இந்தியாவிலே சரிபாதிக்குமேல் பசு மாமிசம் சாப்பிடுகிற ஜாதி என்பது உங்களுக்குத் தெரியும். இந்திய ஜனத்தொகையில்நாலில் ஒரு பங்கு முஸல்மான்கள். ஏறக்குறைய ஒரு கோடி கிறிஸ்துவர்கள். சில லட்சம் பௌத்தர்களும் இருக்கிருர்கள். இவர்களுடைய மதங்களையும், மதம் என்ற பெயரில் நீங்கள் ஏற்றுக் கொள்வதானல், உலகிலே உண்மையான மத நம்பிக்கை இல்லாத நாடு எங்கே இருக்கிறது. காந்திஜியின் நண்பரும், முன்னாள் லார்டு இர்வின் என்ற பெயரை யுடையவருமான லார்டு ஹாலிபக்ஸ் ஒரு பக்காக் கிறிஸ்துவ பக்தர். இன்று வரை மதத்தின் பெருமையைப் பிரச்சாரம் செய்து மத நம்பிக்கை உள்ள ஆங்கிலேயர்கள் பொது உடைமைக் கொள்கையிலிருந்து ஒதுங்கி நிற்கவேண்டுமென்றுதான் இந்தக் கிறிஸ்துவப் பக்தர்களும் உபதேசிக்கிருர்கள். அரேபியர்கள், துருக்கியர்கள், ஈரானியர்கள், ஆப்கானிஸ்தானியர்கள் ஆகிய முஸ்லீம்கள்,இந்தியர்களைவிடக் குறைந்த மத நம்பிக்கை உடையவர்களல்ல; லட்சக்கணக்கான யுவதிகள் தாங்களாகவே மகிழ்ச்சியோடு தங்கள் தலைமயிர்களை வெட்டி கயிருகத் திரித்து, கோவில் கட்டுவதற்காக மரங்களைத் தூக்கிச் சென்ற அந்த ஜப்பான் தேசம் உங்களைவிட மத நம்பிக்கையில் குறைந்ததா? சுரண்டுகிறவர்கள் எல்

லோரும் உறுதியான மத நம்பிக்கை உடையவர்கள். அதனால்தான் சுரண்டலை எதிர்ப்பவர்களை மத விரோதிகள் என்று பிரகடனம் செய்கிறார்கள். பொது உடைமைக் கொள்கை அன்னிய நாட்டுச் சரக்கென்றே வைத்துக்கொள்வோம். கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம்போன்ற அன்னிய மதங்களும், ரயில், தந்தி, விமானம், இயந்திரத் தொழிற்சாலைகள் போன்ற அன்னியப் பொருள்களும் இங்கு வந்து, நம் கண்முன்னாலேயே சுதேசியாக மாறிவிட்டிருக்கும் பொழுது, பொது உடைமைக் கொள்கையும் அவ்விதமே சுதேசியாக ஏன் மாறிவிட மாட்டாது?''

## 2

பாட்னாவிலே மாலை நேரத்தில் உலாவுவதற்கு லான் ஹார்டிங் பார்க் இரண்டையும் தவிர வேறு இடம் கிடையாது. அந்த இரண்டிடமும்கூட மிக மோசமான நிலைமையிலே வைக்கப்பட்டிருந்தன. அந்தப் பொது இடங்கள் யாரையும் கவர்ந்திழுக்கும் சக்தியற்றிருந்தாலும் மாலை நேரத்தில் உலாவவோ அல்லது நண்பர்களைச் சந்திக்கவோ விரும்புகிறவர்கள் அங்கு செல்வதைத் தவிர வேறு வழியில்லை. இருள் சூழ்ந்துகொண்டிருந்தது. ஆயினும், பாங்சிப்பூர் வானிலே உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த அந்த மூன்று நண்பர்களின் பேச்சும் முடிவதாகத் தெரியவில்லை; அவர்களில் ஒருவன்,

''தோழர் சுமேர்! மறுபடியும் ஒருமுறை நீ நன்றாக யோசித்துப் பார். நீ ரொம்ப வேகமாகக் காலெடுத்து வைக்க நினைக்கிறாய்'' என்றான்.

''மரணத்தோடு விளையாடுவதைவிட வேகமாக முன்னேறுவது வேறென்ன இருக்க முடியும்? ரூப்! இந்த முடிவு பக்காவானதுதான். நான் ஒன்றும் அவசரப்பட்டுச் செய்யவில்லை. அவசரப்பட்டுச் செய்யக்கூடியதுமல்ல.''

''காற்றிலே பறப்பது தம்பி! மாளிகையின் மாடிக் கைப்பிடிச்சுவரின் ஓரத்தில் நிற்பதுகூட எனக்குப் பயமாக இருக்கிறது.''

''எத்தனையோ பேருக்குச் சைக்கிளில் ஏறுவதுகூடப் பயமாக இருக்கிறது. ஆனால் நீ, இரண்டு கைகளையும் விட்டுவிட்டுச் சைக்கிள் ஓட்டுகிறாயே!''

''அது போகட்டும், கூலிக்காரியின் மகன் சுமேருக்கு இந்த சாம்ராஜ்ய யுத்தத்தில் உயிரைக் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன வந்தது என்று எனக்குத் தெரியவில்லை.''

''ஏனெனில் இந்த யுத்தத்தோடு அந்தக் கூலிக்காரியின் மகனுடைய எதிர்காலமும் இணைக்கப்பட்டிருக்கிறது. இந்த யுத்தம் சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தை மட்டும் நிச்சயிக்கப் போவதில்லை. சுரண்டலின் எதிர்காலத்தைப் பற்றியும் நிச்சயிக்கப் போகிறது.''

''இந்த யுத்தத்தின் முழுக் குற்றவாளிகள் ஆங்கில முதலாளிகள்தான் என்பதை நீ ஒப்புக்கொள்ளவில்லையா?''

''அந்தச் சுயநலத்தின் பிரதிநிதிகளான பால்டுவினும் சேம்பர்லினும்தான் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அவர்கள்தான் முஸோலினியையும், ஹிட்லரையும் தட்டிக் கொடுத்து வளர்த்தார்கள். அதன்மூலம் சாம்ராஜ்யச் சுரண்டல் வர்க்கத்தினருக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ஆனால் பஸ்மாசுரன் வரத்தின் பலத்தைப் பரீட்சிக்க பரமேஸ்வரன் தலையிலேயே கைவைக்க முயன்ற கதையைப்போல் ஆகிவிட்டது. இந்த வேடிக்கை நடந்து கொண்டிருந்தவரை நானும் வேடிக்கை பார்ப்பவனாகவே இருந்தேன். இன்று பஸ்மாசுரன் பரமேஸ்வரனை விட்டுவிட்டு நம் தலையிலே கை வைக்க முயலுகிறான்.''

''நம் தலையிலா? ஆரம்ப நிலைக்கும் தற்போதைய நிலைக்கும் ஒன்றும் வேற்றுமை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.''

''உங்களுக்கு வேற்றுமை தெரியாது. ஏனெனில் உங்கள் வர்க்கம் முதலாளி வர்க்கம். பாசிஸ்டு ஆட்சியிலும் நெய்ப் பூரி கிடைக்குமென்ற நம்பிக்கை உடையவர்கள். இந்த யுத்தம் தோன்றியதால் மிட்ஸூயி* குடும்பம் நெய்யிலே குளிக்கிறது. ஆனால் சோவியத் யூனியன் தோல்வியடைந்தால், சுரண்டப்படும் தொழிலாளி விவசாயிகளுக்கு எவ்வித நம்பிக்கையும் இல்லாமல் போய்விடும். கொலைகார ஹிட்லரும், டோஜோவும் நடத்தும் ராஜ்யத்தில், தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யும் உரிமையைக் கூடப்

---

*மிட்ஸூயி—ஜப்பானின் பொருளாதார வாழ்வு முழுவதையும் தங்கள் கையிலே வைத்திருக்கும் மூன்று பணக்காரக் குடும்பங்களிலே ஒன்று.

பெற்றிருக்க மாட்டார்கள். எவ்வளவு பெரிய கொடுமைக்காகவும்கூட எதிர்த்துப் போராடும் உரிமை அவர்களுக்கு இருக்காது. பாசிஸம். தொழிலாளிகளேயும், விவசாயிகளேயும் உண்மை அர்த்தத்தில் அடிமைகளாகவே ஆக்க விரும்புகிறது. எங்களுக்குச் சோவியத் யூனியன் பல நாடுகளில் ஒன்றல்ல. எங்கள் நம்பிக்கைக்கு ஆதாரமான ஒரே ஒரு தேசம். உலகத்தின் தொழிலாளிகளும், விவசாயிகளும் அதனிடம் தான் நம்பிக்கை வைத்திருக்க முடியும். ஒன்றரை நூற்ருண்டு காலம் போராடி, லட்சக்கணக்கான தியாகங்களேச் செய்த பிறகு, மனித சமுதாயத்திற்கு—அநாதி காலம் தொட்டுச் சுரண்டப்பட்டு வருபவர்களுக்கு பொது உடைமைப் பேரொளி இந்த உலகத்திலே தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பேரொளி ஒருமுறை அணேந்துபோகும்படி விட்டுவிட்டால், இந்த உலகம் மறுபடியும் எத்தனேயோ நூற்ருண்டுகளுக்கு இருளிலே மூழ்கிக் கிடக்கும். நாங்கள் உயிரோடிருக்கும்வரை இந்தப் பயங்கரமான கொடுமை எங்கள் கண் முன்னுலேயே நடக்கவிட மாட்டோம்.''

''சுமேர்! தேசத்தில் இன்னும் பல சமுதாயச் கொள்கைக்காரர்கள் இருக்கிருர்களே, அவர்களும் உலகத்திலிருந்து சுரண்டலேப் போக்கத்தானே விரும்புகிருர்கள்?''

''சேவாக் கிராமத்திலிருந்து பரவிவரும் இருளேப் பிரகாசமாகக் கருதுகிற அந்தச் சமுதாயக் கொள்கைக்காரர்களிடமிருந்து சைத்தான்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும். ஹிட்லரும்கூட, தன்னேச் சமுதாயக் கொள்கைக்காரர் (சோஷலிஸ்ட்) என்றுதான் சொல்லிக் கொள்கிருர். காந்திஜியின் சிஷ்யர்களும், தங்களேச்சமுதாயக்கொள்கைக்காரர்கள் என்றுதான் சொல்லிக்கொள்கிருர்கள். சமுதாயக் கொள்கைக்காரர்கள் என்று சொல்லிக்கொள்வதால், யாரும் சமுதாயக் கொள்கைக்காரர்களாக ஆகிவிட முடியாது. ஹிட்லர், டோஜோவின் வெற்றியால், இந்தியாவில் முதலாளித்துவமும்—முதலாளி வர்க்கமும் அழிந்துவிட மாட்டாது. இன்னும் அதிக உறுதியடையவே செய்யும். ஆனுல் பாசிஸ முறைகளினுல் தொழிலாளர்—விவசாயிகள் மூச்சு விடக்கூட முடியாத நிலேமை ஏற்படும். பொது உடைமைக்காரர்களின் கதி என்ன ஆகும் என்பதற்கு, சமீபத்திய இத்தாலி—ஜெர்மனியின் சரித்திரத்தைப் பார்த்தாலே தெரியும். அவ்வளவு தூரம் ஏன்? இப்பொழுது பிரான்ஸிலே நாள்தோறும் பொது உடைமைக்காரர்கள் சுட்டுக்

கொல்லப்படுவதைக் கேள்விப்படுகிறோமல்லவா? தன்னை மார்க்ஸ்வாதி என்று சொல்லிக் கொள்ளும் ஒருவன், இந்த யுத்தத்திலிருந்து ஒதுங்கி நிற்க விரும்பினால், ஒன்று அவன் தன்னையே ஏமாற்றிக் கொள்கிறான்; அல்லது பிறரை ஏமாற்ற விரும்புகிறான். ஹிட்லர் டோஜோவின் ஆட்சியில் மார்க்ஸ் வாதியினுடைய உயிரின் விலை ஒரு துப்பாக்கிக் குண்டுதான். இது நமக்கு நன்றாகத் தெரியும். சமுதாயக் கொள்கைக்காரன், தான் நடுநிலைமை வகிப்பதாகச் சொன்னால், அது வௌவால் கொள்கையாகத்தான் ஆகும். சோவியத் யூனியன் அழிந்த பிறகும், சமுதாயக் கொள்கைக் கொடியைப் பறக்கவிட முடியும் என்று சொல்கிறவன், ஒன்று பயித்தியக்காரனாக இருக்க வேண்டும்; அல்லது ஏமாற்றும் சூழ்ச்சிக்காரனாக இருக்க வேண்டும்.''

''இந்த யுத்தத்தில், யாரும் நடுநிலைமை வகிக்க முடியாதென்று நீங்கள் கருதுகிறீர்களா?''

''ஆம்; இது என்னுடைய உறுதியான எண்ணம். யாருடைய மூளை சரியாக வேலை செய்கிறதோ, அவன் ஏதாவது, ஒரு பக்கத்தில் சேராமல் இருக்க முடியாது. ஏனெனில், இந்த யுத்தம் ஒன்று சுரண்டல் எதிர்ப்புச் சக்தியை அடியோடு அழித்துவிடும். அல்லது முஸோலினி, ஹிட்லர், டோஜோக்களுக்கும் அவர்களின் வளர்ப்புத் தந்தைகளான பால்டுவின், சேம்பர்லின் ஹாலிபக்ஸ்களுக்கும் இந்த உலகத்தில் இடமிருக்க முடியாதபடி அந்தச் சக்தி வளர்ந்து விடும்.''

''நமது நாட்டிலே, ஆங்கில ஆளும் வர்க்கத்தாரின் மனப்போக்கை நீங்கள் பார்க்கிறீர்களல்லவா?''

''அவர்கள் குருடர்கள். முப்பது வருடத்திற்கு முந்திய உலகத்திலே, அப்படியே அசையாமல் இருக்க விரும்புகிறார்கள். யுத்தத்திற்குப் பிறகும், இந்தப் பழைய போலீஸ் காரர்களின் ஆட்சிக்காகவே உலகம் ஜெயிக்கப்படுவதாக நீங்கள் கருதுகிறீர்களா? இவர்கள் நமது யுத்த முயற்சியிலே ஒவ்வொரு அடியிலும் தடையேற்படுத்திக் கொண்டிருப்பார்கள். ஏனெனில், இவர்கள் ஒவ்வொரு விஷயத்தையும் கடந்த காலக் கண்கொண்டே பார்க்கிறார்கள்.''

''இப்பொழுது பார்க்கவில்லையா? பொது மேடைகளிலே செல்வாக்குப் பெற்ற திருமுகங்களெல்லாம், இப்

பொழுது தேசிய முன்னணியிலே தலைமை தாங்கி, ஜனங்களுக்கு முன்னால் கர்ஜனை செய்கின்றன. நமது கவர்னர்களும், கவர்னர் ஜெனரலும் பொது மக்களைத் தியாகம் செய்யும்படி உபதேசிக்கிறார்கள். நமது நாட்டின் தேசிய வருமானம் ஓர் அணு. அந்தக் கணக்குப்படி பார்த்தால், ஒரு மனிதனுடைய வருட வருமானம் இருபத்தைந்து ரூபாயாகிறது. நமது வைஸிராய் தேசீய வருமானத்தைப்போல் பத்தாயிரம்மடங்கும், கவர்னர்கள் சற்றேறக்குறைய நாலாயிரத்து எண்ணூறு மடங்கும் சம்பளம் வாங்குகிறார்கள். இவை போக, அவர்களின் செலவுகள் வேறு இருக்கிறது. செலவுகளையும் சேர்த்துப் பார்த்தால் வங்காள கவர்னர் மட்டும் ஒரு தொழிலாளியின் சம்பளத்தைப்போல், நாற்பத்தி இரண்டாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்று ஒரு மடங்கு சம்பளம் வாங்குகிறார். இதோடு இங்கிலாந்தின் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்ப்போம். அங்கு ஒரு தொழிலாளியின் வாரச் சம்பளம் என்பத்தைந்து ஷில்லிங்குகள்—அதாவது ஐம்பத்தாறு ரூபாய்கள். விவசாயியின் வார வருமானம், நாற்பத்தைந்து ரூபாய்கள். இந்தக் கணக்குப்படி, இங்கிலாந்தின் தேசீய வருமானம் வருடம் ஒன்றுக்கு ஏறக்குறைய இருநூறு பவுன். இதைப்போல் முப்பத்து ஆறு மடங்குதான் இங்கிலாந்தின் பிரதம மந்திரி சம்பளம் வாங்குகிறார். சோவியத் யூனியனில், பிரதம மந்திரியின் சம்பளம் பன்னீராயிரம் ரூபிள்கள். அதே அளவு சம்பளம் வாங்குகிற தொழிலாளிகள் ஏராளமாயிருக்கிறார்கள். அங்கு பிரதமரின் சம்பளத்தைவிட ஆறில் ஒரு பங்குக்குக் குறைவாகச் சம்பளம் வாங்கும் தொழிலாளரே கிடையாது.''

''நமது முதலாளிகளின் வருவாயோடு, தேசீய வருமானத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் நமது இதயம் வெடித்து விடும்.''

''இது உண்மையிலேயே கொள்ளைதான் சுமேர்!''

''இதனால்தான், இந்தியாவிலே வேலைபார்க்கும் சுயநலமுள்ள—பயங்கொள்ளிகளான இந்த ஆங்கிலேயர்கள் தூர திருஷ்டி யில்லாதவர்கள்; இவர்களிடத்திலே நம்பிக்கை வைக்கக் கூடாது என்று நான் சொல்லுகிறேன். இவர்களுக்காகப் போராடவோ, ஜெயிக்கவோ நான் போகவில்லை. உலகத்தின் ஆறிலொரு பகுதியிலே பரவியிருக்கும் அந்த ஒளியை பாசிஸ்டுகள் அணைத்து விடாமல் இருக்கும்

பொருட்டே நான் போராடி மடிய விரும்புகிறேன். மனிதர்கள் சுதந்திரமாகவும், சௌக்கியமாகவும் வாழக் கூடிய அந்த எதிர்கால உலகத்திற்காக, என்னைப் பலியிட விரும்புகிறேன்.''

இதுவரை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்த சமதன் இப்பொழுது வாய் திறந்தான்:

''தோழ சுமேர்! நீ சொல்லியவற்றில் அநேக விஷயங் களை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனால் சில விஷயங் களை ஒப்புக்கொள்ள முடியாது. உன்னுடைய கருத்துக் களுக்கு நான் எப்பொழுதும் மரியாதை வைத்து வந்திருக் கிறேன் என்பது உனக்குத் தெரியும். இந்த உலகமெங்கும் பரவியுள்ள யுத்தத்தில், யாரும் நடுநிலைமை வகிக்க முடியா தென்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் நண்ப! நீ தேர்ந்தெடுக்கப்பட்டு ராணுவத்திலே சேர்ந்த பிறகு எங்களுக்குத் தகவல் கொடுத்திருக்கிறாய். கொஞ்சம் முன்னா லேயே சொல்லியிருக்க வேண்டும்.''

''முதலிலேயே சொல்லியிருப்பேன். நான் தேர்ந் தெடுக்கப்படாமல் போய்விட்டால் என்ற சந்தேகத்தினால் தான், தேர்ந்தெடுக்கப்பட்டு இருபத்தி நாலுமணி நேரம் கழிந்த பிறகு நண்பர்களுக்குச் சொன்னேன். இப்பொழுது நாளை மறுநாள், அம்பாலா ஆகாய விமானப் பள்ளிக்கூடத் திற்குப் போகப் போகிறேன்.''

''தாயாருக்குத் தகவல்கொடுத்து விட்டாயா?''

''தாயாருக்கு, பாட்னாவும் அம்பாலாவும் ஒன்றுதான். நான் சண்டையில் சேர்ந்து, நமனுடைய வாய்க்குள் நுழை கிறேன் என்று வெளிப்படையாக எழுதாதவரை அவளுக்கு இரண்டும் ஒன்றே. வெளிப்படையாக எழுதினால், அவளை நிரந்தரமான துக்கத்தில் ஆழ்த்துவதாக முடியும். ஆகவே, நான் உயிரோடு இருக்கும்வரை அவளுக்குக் கடிதம் எழுதிக் கொண்டேயிருப்பேன். அதிலேயே அவள் மகிழ்ச்சி யடைவாள்.''

''உன்னுடைய தைரியத்தை நான் எப்பொழுதும் மறக்க முடியாது, சுமேர்!''

''நாம் மனிதனாகப் பிறந்ததின் கடமையைச் செய் வதற்கு எப்பொழுதும் தயாராயிருக்க வேண்டும். மேலும்

ஒரு லட்சியவாதியாக ஆய்விட்டால், நம்முடைய பொறுப்புகள் இன்னும் அதிகரித்து விடுகின்றன.''

''இந்த யுத்தம் உலகத்தில் ஒரு மகத்தான மாற்றத்தைக் கொண்டு வரும் என்று நீ நம்புகிருயா?''

''கடந்த மகாயுத்தமும் குறைவான வேலையைச் செய்ய வில்லையே. ருஷ்யாவிலே சோவியத் ஆட்சியை உண்டாக்கியது—உலகத்தின் ஆறில் ஒரு பாகத்தில் சமத்துவத்தின் ராஜ்யத்தை ஸ்தாபித்தது. சின்னக் காரியமா என்ன? ஆனல் இந்த யுத்தத்தினல் ஏற்படப்போகிற மாற்றம், ஒரு புதிய உலகத்தையே சிருஷ்டித்துவிடும்; சோவியத் அரசாங்கமும், செஞ்சேனையும் பங்கெடுத்துப் போராடும் கட்சி—சீன, ஆங்கில, அமெரிக்கப் பொதுஜனங்கள் தங்கள் உயிரையும் பணயம் வைத்துப் போராடும் கட்சி, நிச்சயமாக வெற்றி பெறும் என்பதில் எனக்குக் கொஞ்சம்கூடச் சந்தேக மில்லை.''

சமதனுக்கும், ரூபகிஷோருக்குமிடையே, பாகிஸ்தானைப் பற்றி பலமுறை விவாதம் நடந்திருக்கிறது. அது மறுபடியும் நினைவு வரவே, ரூபகிஷோர் அதைப்பற்றிப் பேசத் தொடங்கினன்.

''காந்தீய சுயராஜ்யமா, அல்லது பொதுவுடைமைச் சுயராஜ்யமா என்பதிலே, உனக்கும் எனக்கும் அபிப்பிராய பேதம் இருக்கலாம். ஆனல் சுயராஜ்யம் இந்தியாவிற்குத் தான் என்பதில் அபிப்பிராயபேதம் இல்லையல்லவா சுமேர்?''

''இந்தியா என்பது, ஒரு உருவற்ற—தெளிவில்லாத சொல் ரூப்பாபு! அந்தப் பெயரை வைத்துக்கொண்டு, அநேக தவறுகளும் ஏமாற்றங்களும் ஏற்படக்கூடும். சாம்ராஜ்யம், இந்தியர்களுக்கு வேண்டும். அதில் இந்தியர்கள் தங்களின் எதிர்காலத்தைத் தாங்களே நிச்சயித்துக்கொள் வார்கள். ஆகாயத்திலிருந்து குதிக்கும் சில பெரிய மனிதர் களுக்கு மட்டும் உபயோகப்படும் சுயராஜ்யம் நமக்குத் தேவையில்லை.''

''போகட்டும்; அப்படியே வைத்துக் கொள்வோம். சுயராஜ்யம் வாழ்ந்துகொண்டிருக்கும் இந்தியாவைத் துண்டு துண்டாக ஆக்கிவிடக் கூடாதல்லவா?''

''நீங்கள் மறுபடியும் தவருன—தெளிவில்லாத சொல்லை உபயோகிக்கிறீர்கள். இந்தியாவைப் பிரிக்க வேண்டுமா

அல்லது அப்படியே பிரிக்காமல் வைத்திருக்க வேண்டுமா என்பது அதில் வசிப்பவர்களின் விருப்பத்தைப் பொறுத்தது. மௌரியர்கள் காலத்தில், ஹிந்துகுஷ் மலையையும் தாண்டி ஆமு கால்வாய்வரை இந்தியாவின் எல்லை இருந்தது. பாஷை பழக்க வழக்கம். சரித்ரம் இவைகளையெல்லாம் நோக்கினுல், ஆப்கானிய ஜாதி (பட்டான்) இந்தியாவையே சேர்ந்தது. பத்தாவது நூற்ருண்டு வரை காபூல் ஒரு ஹிந்து ராஜ்யமாகவே இருந்தது. அந்தக் காலத்தில், இந்தியாவின் எல்லை ஹிந்துகுஷ் மலைதான். இப்பொழுது அகண்ட ஹிந்துஸ்தான் வேண்டுமென்று சொல்கிறவர்கள், ஹிந்துகுஷ் மலைவரை உரிமை கொண்டாடப் போகிருர்களா? ஆப்கானியர்களின் விருப்பத்திற்கு விரோதமாகப் போக நினைக்கா விட்டாலும், சிந்துவிற்கு மேற்கே வசிக்கும் எல்லைப்புற வாசிகளான பட்டாணியர்களைக்கூட அவர்களின் விருப்பத்திற்கு விரோதமாக இந்தியாவிற்குள்ளேயே வைத்திருக்க முடியாது. அப்படியிருக்க, அதே விஷயம், சிந்து, பஞ்சாப், காஷ்மீர், கிழக்கு வங்காளம் ஆகிய பிரதேசங்களுக்கு ஏன் பொருந்தாது?''

''இந்தியாவிலிருந்து அவர்கள் விலகிப்போக அனுமதிக்க வேண்டும் என்று சொல்கிறீர்களா?''

''ஆம்; அவர்கள் வற்புறுத்தினுல். நாம் ஜனங்களுக்காகப் போராடுகிருேம். ஆகவே எந்த நாட்டு ஜனங்களும் அவர்களின் விருப்பத்திற்கு விரோதமாக அரசியல் அடிமைத் தனத்திலே பிணைத்து வைக்கப்படக் கூடாது. பாகிஸ்தானைப் பற்றி முடிவு செய்ய வேண்டியவர்கள், ஹிந்துக்கள் அல்ல முஸ்லீம்கள். அதிக எண்ணிக்கையில் இருக்கும் மாகாணவாசிகளே முடிவு செய்ய வேண்டும். நாம், இந்தியாவில் ஜனங்களுடைய ஆட்சியை ஏற்படுத்தாமல், சுரண்டுகிறவர்களின் ஆட்சியை ஏற்படுத்த விரும்பினுல், இங்கு பாகிஸ்தான் ஏற்பட்டுத்தான் தீரும். மூளையாலும், உடலாலும் உழைக்கும் ஜனங்களின் ஆட்சி ஏற்பட்டால், அநேக சுதந்திர ஜாதிகள் நிறைந்த ஓர் ஐக்கிய தேசமாக இந்தியா விளங்கும். ஒரு ஜாதி என்பதற்கு ஒரே பாஷை பேசுகிறவர்கள்—உணவு, கொள்வினை, கொடுப்பினைகளில் ஒன்ருக இருப்பவர்கள் என்று அர்த்தம். அப்படி எல்லோரையும் ஒரே ஜாதியாக ஆக்க, பொதுஉடைமைக் கொள்கை ஒன்ருல் தான் முடியும். அதிலும்கூடப் பாஷையைக் கவனித்தால் இந்தியாவிலே எண்பதுக்கதிகமான ஜாதிகள் இருக்கும்.''

''எண்பதுக்கதிகமா? நீ பாகிஸ்தானையும் தாண்டிப் போய்விட்டாயே?''

''பாஷைகளை, நாம் தோற்றுவிக்கவில்லை. ஜனங்களின் ஆட்சியிலே, கல்வி கற்றுக் கொடுப்பதற்கு அவரவர்களின் தாய் பாஷைதான் சாதனமாய் இருக்க வேண்டும். குழந்தைப் பருவத்திலிருந்து பிழையின்றிப் பேசப் பழகிவருவது தான் தாய் பாஷையாகும். சோவியத் யூனியனில் எழுபது சுதந்திர ஜாதிகள் இருக்கின்றன. அதைவிட இரண்டு மடங்கு ஜனத் தொகையுடைய இந்தியாவிலே, எண்பது சுதந்திர ஜாதிகளைக் கொண்ட ஐக்கிய ராஜ்யம் இருக்குமானால், அதைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?''

''அப்படியானால், நீ பாகிஸ்தானை ஆதரிக்கிறாயா?''

''முஸ்லீம் ஜனங்கள் அதற்காக வற்புறுத்தும் பொழுது நாம் என்ன செய்ய முடியும். இன்று ஒவ்வொரு முஸ்லீம் தலைவரும் பாகிஸ்தான் வேண்டுமென்று வற்புறுத்தும் பொழுது நாம் அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். முஸ்லீம் அல்லாதவர்களுக்கு, முஸ்லிம்களின் இந்த நியாயமான கோரிக்கையை அலட்சியப்படுத்த எவ்வித உரிமையும் கிடையாது. முஸ்லீம்கள் பெரும்பான்மையோராயுள்ள மாகாணத்தில் வசிக்கும் ஜனங்கள், இந்திய ஐக்கியத்தை விட்டுப் பிரிந்துபோக விரும்பினால், அப்படிப் பிரிந்துபோகும் உரிமை அவர்களுக்கு இருக்கத்தான் வேண்டும்.''

## 3

கீழே கரிய சமுத்திரம். அதன் அமைதியான நீர்ப்பரப்பின்மீது, உயிர்களின் வாடையே காணப்படவில்லை. எதிரே, கண்ணுக்கெட்டிய தூரம் வெண்மையான மேகத்திரை. தனக்கு முன்னால் அமைக்கப்பட்டிருக்கும் வேகத்தைக் காட்டும் இயந்திரத்தைத் தவிர, தான் செல்லும் வேகத்தை அளப்பதற்கு ஆகாயத்திலே வேறு எவ்வித அடையாளமும் சுமேருக்குக் கிடைக்கவில்லை. மணிக்கு முன்னூறு மைல் வேகத்தில் அவனுடைய விமானம் பறந்து கொண்டிருந்தது. சுமேரின் சிந்தனை, பழங்காலத்தை நாடிச் சென்றது. ஒரு காலத்தில் மனிதன், தான் கண்டுபிடித்த கூர்மையில்லாத

கல் கத்தியை வைத்துக் கொண்டு, இதுதான் உலகத்திலே பெரிய ஆயுதம் என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் இன்று அவன் ஆகாயத்திலே மிதந்து கொண்டிருக்கிறான். மனித அறிவு, எவ்வளவு தூரம் வளர்ந்து விட்டது! அதே சமயத்தில் மனிதத் தன்மையின் விரோதிகளைப் பற்றியும் அவன் மனம் சிந்தித்தது. அறிஞர்களின் மூளைகள் தந்த இந்த அற்புதமான கொடையை, பாசிஸ்டுகள் மக்களின் கால்களிலே அடிமை விலங்கைப்பூட்டுவதற்காக உபயோகிக்கிறார்கள். ஜப்பானிய பாசிஸ்டுகள், பாரதத்தின் எல்லைப் புறமான பர்மாவுக்கு வந்துவிட்டார்கள் என்று நினைத்த பொழுது அவனுடைய உள்ளம் கொதித்தது; அப்பொழுது அவனுடைய மனக்கண் முன்னால், அந்த நடை கிணற்றுக்குப் பக்கத்திலுள்ள வீடும், அதிலே வசிக்கும் பெண்களும் காட்சியளித்தனர். அவர்களில் ஒருத்தி, அவன் அன்பிற்குரியவள். மற்றவர்கள் அந்தத் தீண்டத்தகாத தாயின் அறிவாளியான மகனைத் தங்கள் மகனாகவும், சகோதரனாகவும் ஏற்றுக்கொண்டவர்கள். பாசிஸ வெறுப்பும், பழைய நினைவுகளும் அவன் உள்ளத்தைக் குழப்பிக்கொண்டிருக்கும் பொழுது, எதிரே சூரியன் அடையாளமிட்ட மூன்று விமானங்கள் வருவது தெரிந்தது. உடனே சுமேர், தனது 'மிஷின்கன்ன'ருக்குப் போன் மூலம் எச்சரிக்கை செய்து விட்டு, பாசிஸ்டு விமானங்களின் மத்தியிலே பாய்ந்தான். வாயால் சொல்வதற்கு நேரமாகியது; எழுதுவதற்கு அதை விட நேரமாகிறது; ஆனால் சுமேர், தன்னுடைய விமானத்தை எப்படிச் சரியான இடத்திற்குச் செலுத்தினான், அவனுடைய கன்னர் ஷெரீப் எப்படி, 'மிஷின்கன்'னை உபயோகித்தான் என்பதைத் தெரிந்து கொள்ளு முன்பே, பத்தே நிமிடத்தில் அந்த மூன்று விமானங்களும் சிறகிழந்த பருந்தைப் போல் சமுத்திரத்திலே விழுந்து விட்டன.

சுமேர் தனது திறமையைக் காட்டுவதற்குக் கிடைத்த முதலாவது சந்தர்ப்பம் இதுதான். ஆயினும் தனது வெற்றியிலே அவனுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. அவன் திரும்பும் பொழுது ஷெரீபிடம் சொன்னான்:

''தோழ! நாம் நமது பங்கைச் செய்து விட்டோம். நம்மில் ஒவ்வொருவரும் மும்மூன்று பாசிஸ்டுகளை முடித்து விட்டார்களானல், வெற்றி சீக்கிரம் தான்.''

''எனக்கும், மனப்பாரம் குறைந்தது போலவே இருக்கிறது. இனிச் சாக நேர்ந்தாலும் கவலைப்படமாட்டேன்.''

''நாம் இன்னும் உயிரோடிருக்கும்வரை ஜப்பானியப் பாசிஸ்டுகளைக் கொன்றுகொன்று, லாபத்திற்குமேல் லாபம் சேகரித்துக் கொண்டிருப்போம்.''

அதன் பிறகு சுமேர் இருநூறு தினங்கள்தான் உயிரோடிருந்தான். அந்த இருநூறு நாட்களிலே, அவன் நூறு ஜப்பானிய விமானங்களையாவது நஷ்டப்படுத்தியிருப்பான். கடைசி நாளன்று, அவனுக்கு வங்காளக்குடாவிலே வேலை கிடைத்திருந்தது. அந்தமானுக்கு மேற்கே ஒரு பெரிய ஜப்பானிய யுத்தக் கப்பல் போய்க் கொண்டிருந்தது. நாற்பதாயிரம் டன் எடையுள்ள அந்தப் பெரிய யுத்தக் கப்பலைப் பார்த்ததும், அதை நோக்கி விரைந்தான் சுமேர். அந்தப் பெரிய கப்பலுக்குப் பாதுகாவலாக, நான்கு புறமும் சண்டை விமானங்கள் பறந்து வந்து கொண்டிருந்தன. ஆனால் மேகத்தின் மத்தியிலே மறைந்து வந்த சுமேரின் தனி விமானத்தை அவைகள் கவனிக்கவில்லை.

சுமேர், டார்பிடோவைத் தயாராக வைத்திருக்கும்படி கன்னருக்கு உத்தரவிட்டான். மேகத்திலே மறைந்து கப்பலுக்கு உச்சியில் அவன் வந்து விட்டதை ஜப்பானிய விமானங்கள் பார்க்கவில்லை. அவன் முழு வேகத்தோடு இயந்திரத்தைச் செலுத்தினன். அவனுடைய விமானமும் டார்பிடோவும் அந்தப் பெரிய யுத்தக் கப்பலிலே போய் மோதின. சுமேரும், அவருடைய கன்னர் ஷெரீபும் என்ன கதியானர்கள் என்று தெரியவில்லை. ஆனல் அவர்கள், தங்களோடு அந்தப் பெரிய ஜப்பானிய யுத்தக் கப்பலையும் மறைந்து போகும்படி செய்துவிட்டார்கள்.





